உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, திருவகுப்பு,

# திருப்புகழ்

முதலிய அருள் நூல்கள்

(உரைக் குறிப்பு, அரும்பொருளகராதி முதலியவைகளுடன்)




சைவசித்தாந்த மகா சமாஜம்

திருவருளகம், 22-எ, கல்லுக்காரத் தெரு, மயிலாப்பூர்

சென்னை

1935




ஒரு பிரதி விலை-ரூபா 3

நான்கு பிரதிகள் விலை-ரூபா 10

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

**வேலுமயிலும் துணை**

# பதிப்புரை



*சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்*
*வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி*
*காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்*
*சாந்துணைப் போதும் மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.*

**—கந்தரலங்காரம்**

எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் சென்ற ஐந்து ஆண்டுகளில், சைவ சித்தாந்த மகா சமாஜத்தினர் பன்னிரு திருமுறைகளையும் பதினான்கு சாத்திரங்களையும் அடக்க விலைச் சுத்தப் பதிப்புக்களாக வெளியிட்டுப் பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்களைத் திருவருள் நெறியில் நிறுத்தி, அவர்கள் நல்லொழுக்க வாழ்க்கையில் பிறவிப் பெரும்பயனெய்துமாறு துணை புரிந்தனர். திருமுறைகளுட் சில வெளிவந்த காலத்திலேயே, அன்பர் பலர் அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ் முதலிய அருணூல்களைச் சமாஜம் வெளியிட வேண்டுமென்று விண்ணப்பித்தனர். சமாஜ நிர்வாக சபையினருள் ஒருவராகச் சிலகாலம் தொண்டு புரிந்து சிவபதமடைந்த தமிழறிஞர் சே. சிவஞானம் பிள்ளையவர்கள் சமாஜத்தின் அடக்கவிலைப் பதிப்பாகத் திருப்புகழ் முழுமையும் வெளிவர வேண்டுமென்று சந்தர்ப்பம் வாய்த்தபோதெல்லாம் வற்புறுத்தினார்கள். திருப்புகழ் முழுவதையும் வெளியிடுவதா அல்லது சிற்றின்பக் குறிப்பில்லாத பாடல்களை மட்டும் திரட்டி வெளியிடுவதா என்பதைப்பற்றிச் சமாஜத்தினர் ஆலோசனை செய்து, இவ்வாண்டின் தொடக்கத்தில்

அருணகிரிநாதர் அருணூல்களனைத்தையும் ஒரே புத்தக மாகவும் அடக்கவிலைச் சுத்தப் பதிப்பாகவும் வெளியிட வேண்டுமென்று நிர்மானித்தனர். அத்தீர்மானத்திற்கிணங்க இந்நூல் அருணகிரிநாதரை ஆட்கொண்ட அருணையம்பதி யாகிய இத்தலத்தில் இன்று வெளிவருகின்றது.

திருப்புகழை வெளியிடுங்கால் பல ஏட்டுப் பிரதிகளை ஒப்புநோக்கிப் பாடபேதங்களை யெல்லாம் குறித்துக்கொண்டு சிறந்த பாடங்களை மூலத்தில் தருதல் சபாரும் செய்தற் குரிய அரும் பணியாகுமென்று சைவத் திருவாளர் - எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் தெரிவித்ததோடமையாது, திரு நெல்வேலி முதலிய பல இடங்களிலிருந்து பல ஏட்டுப் பிரதி களைத் தருவித்துக் கொடுத்தும் பிரதிகளை ஒப்புநோக்கிப் பாடபேதங்களைக் குறித்தளித்தும் பேருதவி புரிந்தார்கள். பல ஏட்டுப் பிரதிகளை ஒப்பு நோக்கியதாற் கிடைத்த அருமை யான சிறந்த பாடங்கள் பற்பல இப்பதிப்பில் அச்சிடப் பெற்றுப் புதியனவாக வெளியாகின்றன. இப்போது வழங்கும் அச்சுப் பிரதிகளிலுள்ள பாடங்களையும் இப்பதிப்பிலுள்ள பாடங்களையும் ஒப்பிட்டு நுண்ணறிவு கொண்டு கூர்ந்து நோக்குவார்க்கு இவ்வுண்மை எளிதிற் புலனாகும். எடுத்துக் காட்டாக ஒன்றே கூறுவன். திருப்புகழ் 124-வது பாடலாகிய "ஆசைகூர் பத்தனேன்" என்ற பாடலில், ஏனைய அச்சுப் பிரதிகளில் "மாக்ருதா புஷ்பமாலை" என்ற பாடமே காணப் படுகின்றது. துறவொழுக்கத்தில் தலைசிறந்து விளங்கும் காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீமத் - சங்கராசாரிய சுவாமிகள் சென்னைக்கு விஜயம் செய்திருந்த காலத்தில், சிறந்த ஸ்கந்த பக்த சிகாமணியும் எனது உயிரினுமினிய நண்பருமாகிய பிரஹ்மஸ்ரீ - திருப்புகழ் மணி - டி. எம். கிருஷ்ணசாமி ஐய ரவர்கள் ஒருநாள் பூஜாகாலத்தில் இப்பாடலைப் பாடும்போது "மாக்ருதா புஷ்பமாலை" யென்றே பாடினார்கள். இதைக் கூர்ந்து நோக்கிய சுவாமிகள் "மாக்ருதா புஷ்பமாலை" என்ற பாடம் தவறென்றும் "மாத்ருகா புஷ்பமாலை" என்பதே திருத்தமான பாடம் என்றும் தெரிவித்தார்கள். தமக்கு நேர்ந்த இவ்வநுபவத்தை பிரஹ்மஸ்ரீ - ஐயரவர்கள் அன்பு

கூர்ந்து எனக்குத் தெரிவித்து, வடமொழிச் சொற்களை ஏட்டுப் பிரதிகளின் துணைகொண்டு செப்பஞ்செய்து வெளியிடுதல் நலமென்று அறிவுறுத்தினார்கள். ஏட்டுப் பிரதிகளை ஒப்புநோக்கியதில் ''மாத்ருகா புஷ்பமாலை'' என்ற பாடமே காணப்பட்டது. ஏட்டுப் பிரதிகளிற் கிடைத்த பாடபேதங்கள் எல்லாவற்றையும் வெளியிட வேண்டுமென்ற அவாவிருந்திருப்பினும் அவையனைத்தும் வெளிவரின், இந்நூல் அளவிலும் விலையிலும் மூன்று பங்கு அதிகரித்துவிடும் என்றஞ்சி அவைகளை வெளியிடாது விடுக்க நேரிட்டது; சிறந்த பாடங்கள் மட்டுமே கொள்ளப்பட்டன.

பிரதிகளை ஒப்புநோக்கியபோது பாடல்களின் தலக் குறிப்பில் பலவகையான மாறுபாடுகள் காணப்பட்டன. உதாரணமாக 13-வது பாடலில் மதுரை, ஜம்புகேசுவரம் என்ற இருவேறு தலக்குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றுள் எதைக் கொள்ளுவது எதைத் தள்ளுவது என்பதைத் தீர்மானிக்கப் போதிய ஆதாரமில்லை. இவ்வாறே பல பாடல்களிலும் உள்ளன. எனவே, பல பிரதிகளிற் காணப்பட்ட தலக்குறிப்புக்கள் எல்லாம் பாடபேதங்களாக உரிய இடங்களில் இப்பதிப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன. இக் காரணத்தால் பாடல்களையும் தல வரிசையில் ஒழுங்குபடுத்தி அச்சிட இயலவில்லை. எனவே, இப்பதிப்பில் திருப்புகழ் முழுமையும் அகர வரிசையிலேயே அச்சிடப்பட்டுள்ளது. இதனால் பெரியதொரு நன்மையுமுண்டு. எங்கேனும் ஒரு திருப்புகழ்ப் பாடலை ஒருவர் பாடக் கேட்டால், முதற் குறிப் பகராதியைத் தடவி, இன்ன பக்கத்தில் இன்ன எண்ணுடைய பாடல் என்று முதலில் பார்த்துக்கொண்டு, பிறகு பாடலை எடுக்க வேண்டிய கஷ்டம் பிற பதிப்புக்களி லுள்ளது. இப் பதிப்பில் அக்கஷ்டமில்லை; முதற்குறிப்பகராதி யின்றியே நேரே பாடல்களைச் சுலபமாக எடுத்துவிடலாம்.

பாடல்களின் தலக் குறிப்புக்களைத் தீர்மானிப்பதில் வேறு பலவகையான கஷ்டங்களும் இருந்தன. உதாரணமாக 7-வது பாடலில் ''தெற்குக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே'' என்ற சொற்றொடரிலிருந்து தலக்குறிப்பு

ஒன்றும் துலங்கவில்லை. இதற்கு முன் அடியில் திருநடனக் குறிப்பு வருவதால், இப்பாடல் சிதம்பரத்தில் பாடப்பட்டிருத்தல் வேண்டுமென்று ஏனைய பதிப்பாளர்களால் ஊகிக்கப் படுகின்றது. 122-வது பாடலில் "வயலூரா" என்ற குறிப்பும், "நாகீசநாமத் தகப்பன் மெச்சிய பெருமாளே" என்ற குறிப்பும் உள்ளன. இப்பாடலை வயலூருக்கும் திருநாகேசுவரத்துக்கும் கொள்ளலாம். திருமலை என்ற தலக்குறிப்புடைய பாடல்கள் பாடப்பட்ட இடம் இன்னதென்று உறுதியாகக் கூற இயலவில்லை. திருவேங்கடம் என்று ஒரு பதிப்பாளரும், ஸ்ரீசைலம் என்று மற்றொருவரும், திருக்குற்றாலத்துக் கருகிலுள்ள திருமலையென்று வேறொருவரும் கொண்டுள்ளார்கள். இஃதேபோல் உரகவெற்பு, சர்ப்பகோத்ரி என்ற சொற்கள் திருவேங்கடத்தையும் திருச்செங்கோட்டையும் குறிக்கும். சில தலங்களிலுள்ள பெரியார்களின் ஆர்வமிகுதியாலும் விடாமுயற்சியாலும் சில பிரதிகளில் மாறுபட்ட தலக் குறிப்புக்களும் புதிய பாடல்களும் நுழைந்துள்ளனவென்று சில பேரறிஞர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். திருப்பாதிரிப்புலியூரில் வதியும் ஒரு சைவப் பெரியார் இத்தகைய செய்திகள் சிலவற்றை என்னிடத்திலும் வேறு பல நண்பர்களிடத்திலும் உறுதியான சில விவரங்களோடு கூறியுள்ளது சமாஜத்தினர் பலர் அறிந்ததொன்று. 28-வது பாடலில வேலூர், வேளூர் என்ற தலக்குறிப்புக்களும், திருமலை குருமலை, திருவாரூர் திருவாமூர் என்பன போன்ற ஓரெழுத்துத் திரிபால் ஏற்படும் தலக்குறிப்புக்களும் நுண்ணிய ஆராய்ச்சிக்குரிய பொருள்களாகும். இக்காலத்திலும் இவ்விதமுயற்சி நடைபெற்று வருகிறதென்பதற்கு ஒரு சிறு செய்தியே சான்றாகும். 436-வது பாடலில் திருவாலவாய் என்ற தலக் குறிப்பு இப்பதிப்பிலுள்ளது. மற்றொரு பதிப்பில் திருவாணிகூடல் என்று இத்தலத்தையே குறிக்கும் வேறு பாடமுளது. பவானிகூடல் என்ற திருநணா க்ஷேத்திரவாசியாகிய சைவத் திருவாளர் - குமாரசாமிப் பிள்ளையவர்கள், தமது தலத்துக்கும் ஒரு திருப்புகழ்ப் பாடலிருக்க வேண்டுமென்ற ஆர்வ மிகுதியால் திருவாணிகூடல் என்ற பாடம்

பிழைபட்டதென்றும் அது திருவாணிகூடல் என்றிருத்தல் வேண்டுமென்றும், திருவாணிகூட லென்பது திருநணுவைக் குறிப்ப தென்பதற்கு இலக்கிய வழக்காறுகள் உளவென்றும் ஒழுகிய கட்டுரை மூலம் ஒரு தமிழ்ப் பத்திரிகையில் இவ்வாண்டின் தொடக்கத்தில் தெரிவித்துள்ளார்கள். இக் கட்டுரையிற் கண்ட காரணங்களை ஆதாரமாகக் கொண்டு இனி வரும் பதிப்பாளர் ஒருவர் திருவாணிகூடல் என்ற பாடங் கொண்டு திருநணுவுக்கும் ஒரு திருப்புகழ்ப் பாடலை வழங்குதலுங் கூடும்; ஏடுகளும் தோன்றுதலுங் கூடும்.

பல ஏட்டுப் பிரதிகளை ஒப்பு நோக்கியதாற் கிடைத்த நன்மை வேறொன்றுமுண்டு. இதுவரை அச்சுக்கு வாராத சில பாடல்கள் அப்பிரதிகளிற் காணப்பட்டன. அவை முதன் முதலாக இப்பதிப்பில் வெளியாகின்றன. வேறு சில பதிப்புக்களில் இத்தகைய பாடல்கள், புதிய பாடல்கள் என்று குறிக்கப்பட்டுள்ளன. சிலர் 'புதிய' என்ற சொல்லைக் கொண்டு அருணகிரிநாதர் வாக்கல்லவென்று விபரீதமாகக் கொள்ள நேரிடுமென்றஞ்சி இப்பதிப்பில் இப்பாடல்கள் இவையென்று தனியே குறிக்கப்படவில்லை. இப்பாடல்களுட் சில சென்னை அரசாங்கக் கையெழுத்துப் பிரதி நிலையத்து ஏட்டுப் பிரதிகளிற் கிடைத்தன. அவை இதுவரை அச்சில் வெளிவாராமையால் ஒரு பதிப்பாளரும் அவ்வேட்டுப் பிரதிகளைப் பயன்படுத்தவில்லை யென்பது புலனாகும். இது மிகவும் வருந்தத் தக்கது. அரசாங்கத்தாரால் அரிதிற் சேகரிக்கப் பெற்றும், தமிழ் மக்கள் அனைவரும் பரிசோதித்துப் படியெடுக்கும் உரிமைக்குட்பட்டுமுள்ள இப்பிரதிகள் இனியேனும் நூல்களைத் திருத்தமாகப் பதிப்பிக்க விரும்பும் பெரியார்களால் கையாளப்படுதல் வேண்டும்.

ஏட்டுப்பிரதிகளிலும் முதன் முதலாக வெளிவந்த அச்சுப்பிரதிகளிலும் சந்தக்குழிப்புகள் காணப்படவில்லை. பிற்காலத்திய பதிப்புக்களில் இவை நுழைந்துள்ளன. 678, 680, 981, 983 முதலிய பாடல்களில் வரும் சில அடிகளிலிருந்தே சந்தக்குழிப்பு காணும் முறை ஏற்பட்டிருத்தல் கூடும். ஒரே பாடலுக்கு வெவ்வேறு பதிப்புக்களில் வெவ்

வேறு சந்தக்குழிப்பு குறிக்கப்பட்டிருத்தலாலும், ஒரே பாடலை இசைவாணர்கள் வெவ்வேறு வகையாகப்பாடுதலாலும், சந்தக்குழிப்பும் தாளம் ராகம் முதலிய இசைக்குறிப்பும் பெரும்பயன் தாராவெனக் கருதப்பட்டு இப்பதிப்பில் விடப்பட்டன. பாடல்களனைத்தும் தளை சீர் முதலியன பிரிக்கப்பெற்றுச் செம்மையாக அச்சிடப் பெற்றிருத்தலின், இசைப் பழக்கம் சிறிதுடையோரும் எளிதில் அவற்றைத் திருத்தமாகப் பாடத் துணியலாம்.

இந்நூல் திருத்தமாக வெளிவருதற்குத் துணையாக இருந்த பிரதிகள் கீழ்வருவனவாகும் :—

கந்தரலங்காரம். மூலமும், மு. திருவிளங்கம் அவர்கள் உரையும் (1927 ௵)

கந்தரநுபூதி. சரவணப் பெருமாளையர் அவர்கள் பதிப்பு (1836௵) மூலம். சண்முகசுந்தர முதலியார் அவர்கள் பதிப்பு (1887 ௵) மூலமும் உரையும். R. N. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பதிப்பு (1918 ௵) மூலமும் உரையும்.

வேல்விருத்தம் மயில்விருத்தம். கா. முருகலிங்கையர் அவர்கள் பதிப்பு (1839௵) ஊ. புஷ்பரத செட்டியார் அவர்கள் பதிப்பு (1896௵)

திருவகுப்பு. சரவணப் பெருமாளையர் அவர்கள் பதிப்பு (1838௵)

திருப்புகழ். சென்னை அரசாங்கக் கையெழுத்துப் பிரதி நிலையத்து ஏட்டுப் பிரதிகள் ஏழு, திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் மூலமாகவும், திரு. எம். பி. எஸ். துரைசாமி முதலியாரவர்கள் மூலமாகவும் திருநெல்வேலியிலிருந்து கிடைத்த ஏட்டுப்பிரதிகள் நான்கு, திரு. ஔவை. துரைசாமிப் பிள்ளையவர்கள் மூலமாகத் திருவோத்தூரிலிருந்து கிடைத்த ஏட்டுப் பிரதி ஒன்று, மழவை - மகாலிங்கையர் அவர்கள் அச்சுப் பிரதி (1839௵), திருவூர். சுப்பராய முதலியார் அவர்கள் அச்சுப்பிரதி (1846௵), ஊ. புஷ்பரத செட்டியார் அவர்கள் பதிப்பு (1888—1890), வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பதிப்பு (முதற்

பாகம் 1931, இரண்டாம் பாகம் 1923, மூன்றாம் பாகம் 1926), மதுரை கந்தசாமிக் கவிராயரவர்கள் பதிப்பு (முதற் பாகம் 1933, இரண்டாம் பாகம் 1934), கொழும்பு திரு விளங்கம் அவர்கள் 150 பாடல்கட் கெழுதிய உரைப்பதிப்பு (1926), திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ் ஞான சிவாசாரிய சுவாமிகள் திரட்டிய சிற்றின்பக் குறிப் பில்லாத கசுஅ பாடல்களடங்கிய கையெழுத்துப்பிரதி ஒன்று.

இப்பதிப்பு, செம்மையாகவும் திருத்தமாகவும் வெளிவரு தற்குத் துணைபுரிந்த அன்பர்கள் பலராவர். அவருள், பாம்பன்: ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகளுடைய சீடருள் ஒருவரும், அச் சுவாமிகளியற்றிய நூல்கள் பலவற்றின் அச்சுத்தாள் களைப் பரிசோதித்து அவை திருத்தமாக வெளிவருதற்குத் தொண்டு புரிந்தவரும், இவ்வெளியீட்டின் அச்சுத்தாள்களை மிகுந்த ஊக்கத்தோடு பரிசோதித்தவரும், தமது குருவின் சிறந்த ஆராய்ச்சியிற் கிடைத்த பல அரிய பாடங்களைத் தெரி வித்து இப்பதிப்புக்குதவியவரும், திருப்புகழ்த் தலக்குறிப் பட்டவணையைத் தொகுத்து உபகரித்தவருமாகிய சைவத் திருவாளர் - மா. துரைசாமி முதலியாரவர்கள் அரும்பணி பெரிதும் போற்றற்குரியது. சாது அச்சுக்கூட உரிமையாளர்- திரு. வி. உலகநாத முதலியாரவர்கள் அச்சுத்தாள்களைப் பரி சோதித்தல், பல பிரதிகளை ஒப்புநோக்கிச் சிறந்த பாடங் களைத் தேர்ந்தெடுத்தல் முதலிய பல வழிகளிலும் அரிய உதவி புரிந்தார்கள். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பே ரகராதிப் பதிப்பாசிரியர் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல்., அவர்கள் பல ஏட்டுப்பிரதிகளைச் சேகரித் துதவி, பிரதிகளை ஒப்புநோக்கிப் பாடபேதங்களைக் குறித்து, அச்சிடுங்கால் ஏற்பட்ட பல ஐயப்பாடுகளை நீக்கி, இப்பதிப் பின் செம்மைக்கான பல முறைகளையும் அறிவுறுத்திப் பேருதவி புரிந்தார்கள். இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிர மணிய பக்தஜன சபையின் பொருட்காப்பாளராகிய திரு. வே. தியாகராய முதலியார் சில ஏட்டுப்பிரதிகளிலுள்ள பாடபேதங்களைக் குறித்துத் தந்தது மறக்கற்பாலதன்று. இவ்வன்பர்கட்கும் ஏட்டுப்பிரதிகளை யனுப்பிவைத்த நண்பர்

கட்கும் தமது கையெழுத்துப் பிரதியை யனுப்பி உபகரித்த ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகட்கும் சமாஜத்தின் சார்பாக மனப்பூர்வமான நன்றி செலுத்துகின்றேன்.

நமது சமாஜத்தோடு இணைக்கப்பெற்ற சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை, கூட்டுப் பொறுப்புடன் பெரிதும் ஒத்துழைத்து இந்நூல் செம்மையாக அச்சிடப்படுதற்குத் துணை புரிந்ததும் இந்நூலை விரைவில் பரப்புவதில் இச்சபை பெரிதும் ஒத்துழைக்க வாக்களித்துள்ளதும் மிகவும் பாராட்டத்தக்கன.

இப்பதிப்பு சமாஜத்தின் அடக்கவிலைச் சுத்தப்பதிப்பாகும். இதிலுள்ள பாடங்கள் பல பிரதிகளினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்டன. ஊகத்தையோ அல்லது இன்ன பாடம் இருத்தல் நலம் என்ற விருப்பத்தையோ ஆதாரமாகக் கொண்டு எந்தப் பாடமும் இதிற் கொள்ளப்படவில்லை. இக்காரணத்தால் சில விடங்களில் பொருள் விளங்காத பாடங்களும் உள்ளன. அவ்விடங்களை அன்பர்கள் கூர்ந்து நோக்கிப் பொருள் காணும் முயற்சியிலும், பிரதிகளைச் சேகரித்து உண்மையான பாடங்களைக் காணும் முயற்சியிலும் ஈடுபடுவார்களாக. பிரதிகளின் சிதைவாற் சில விடங்களில் தெளிவாக விளங்காத எழுத்துக்கள் [ ] என்ற குறிகளுட் டரப்பட்டுள்ளன. உதாரணமாக 75-வது திருப்புகழ்ப் பாடலை நோக்குக.

மாறிலா வள்ளியையும் யானை தன்னணங்கையும் வெற்பைக் கூறுசெய் தனிவேலையும் தமது சத்திகளாகக் கொண்ட ஆறிரு தடந்தோளண்ணலார், இப்பதிப்பைப் பயன்படுத்தும் அடியார்கட்குத் தண்ணருள் பாலித்துச் சகல செல்வயோக மிக்க பெருவாழ்வு தகைமை சிவஞானமுத்தி முதலிய எல்லா நலங்களையும் வழங்குவாராக.

இங்ஙனம்

திருவண்ணாமலை
யுவஸு மார்கழிமீ கசஉ
29—12—1935

அடியார்க்கடியேன்
ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
**சைவ சித்தாந்த மகா சமாஜம்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# அருணகிரிநாதர் சரித்திரமும் நூலாராய்ச்சியும்*

அருவமொரு நான்காகி உருவமொரு
நான்காகி அறை யிரண்டும்
மருவியுள உருவருவம் ஒன்ருகி
முத்திறமும் வழுசத வொண்ணுப்
பெருவெளிக்கும் அப்பாலாய் உள்ளபொருள்
ஈதெனவே பெரிதும் சேயோன்
ஒருவனையே புகழ்ந்தவருள் அருணகிரி
சேவடிப்போ தளத்துள் வைப்பாம்.

—தகராலயரகசியம்.

திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருவகுப்பு முதலிய முருகவேள் திருவடிப்புகழ் நூல்களை அருளிச் செய்த அருணகிரிநாதர் என்னும் சிவபக்த சிகாமணியின் சரித்திரம் பலவகையான பழி, பாவம், பொய் முதலியன நிரம்பிய வரலாறுகளோடு பிணைக்கப்பட்டு உண்மைச் சரிதமென நடிப்புற்று இந்நாட்டில் உலவி வருகின்றது. இவ்வாறு உலவிவரும் சரித்திரத்திலுள்ள பல செய்திகள் அருணகிரிநாதர் திருவாக்கிலுள்ள பல அகச்சான்றுகட்கு முரண்பட்டனவாகவும், சில அறிஞர்கள் தங்கள் கனவில்

---

*இச்சரித்திரமும் நூலாராய்ச்சியும் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்., அவர்களால் எழுதப்பட்டன.

முருகவேள் அருள்கூர்ந்து அறிவித்ததாகத் துணிந்து கூறுவதையே ஆதாரமாகக் கொண்டுள்ளனவாகவும் காணப்படுகின்றன. இத்தகைய செய்திகளை யாராய்ந்து, காய்தல் உவத்தலின்றி, அகச்சான்றுகளின் துணைகொண்டு உண்மை தெளிவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். தாம் நம்பும் செய்திகளைப் பொய்யென்று புறக்கணிப்பதைவிட, அவைகட்கு முரண்பட்ட அகச்சான்றுகளை அருணகிரிநாதர் வாக்கல்லவென்றும், அவை சரித்திரச் சான்றுகளாகாவென்றும் புறக்கணித்தல் நலமெனச் சிலர் எண்ணுதல் கூடும். அத்தகைய மனப்பான்மை யுடையார்க்கு இக்கட்டுரை எள்ளளவும் பயன்படாது. இப்பதிப்பிலுள்ளவை யனைத்தும் அருணகிரிநாதர் வாக்கென்றும், அவற்றுள் சரித்திர சம்பந்தமுடையனவாகக் காணப்படுவன அகச்சான்றுகளென்றும் துணியப்பட்டே இக்கட்டுரையில் ஆராய்ச்சி நடைபெறும். உலகோர்க்கு உபதேசிக்கும் பெரியார்கள் தம்மை இழித்துக் கூறுதல் மரபெனக் கூறித் தகுந்த சரிதச் சான்றுகளைப் புறக்கணித்துக் கண்டவாறெல்லாம் கதை கூறுதல் பெரும் பேதமையென்பதை அறிஞர்கள் நன்குணரவேண்டும்.

அருணகிரிநாதர் முற்பிறவியைப்பற்றிச் சில விபரீதமான செய்திகள் கூறப்படுகின்றன. அகத்திய முனிவர் வளர்த்த நாய் ஒன்று தேவேந்திரனாகிப் பிறகு அருச்சுனன், கண்ணப்பநாயனார், நக்கீரர், பொய்யாமொழிப் புலவர் ஆகிய பிறவிகளெடுத்துக் கடைசியாக அருணகிரிநாதராக அவதரித்ததென்று வண்ணச்சரபம் - ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகளியற்றிய அருணகிரிநாதர் புராணத்தில் கூறப்பட்டுள்ளது. இச் சுவாமிகட்கு இச் செய்தி முருகவேளால் உணர்த்தப்பட்டதாகவே இப்புராணம் கூறுகின்றது. சேக்கிழார்பெருமான் அருளிச்செய்த பெரியபுராணத்துள் கண்ணப்ப நாயனார் முற்பிறவிச் செய்தி கூறப்படாமையாலும், சமயகுரவர் நால்வராலும் ஆதிசங்கராசாரியார் முதலிய பல சிவபக்தர்களாலும் புகழப்படும் கண்ணப்ப நாயனார் சிவசாயுச்சிய பதவி பெற்று மீண்டும் பிறந்தாரென்பது சைவ சித்தாந்தத்துக்கு முற்றிலும் முரண்பட்ட கொள்கையாதலா

னும் சைவ சித்தாந்திகள் இவ்வரலாற்றை உண்மையெனக் கொள்ளத் துணியார். பாரதம் பாகவதம் முதலிய நூல்களில் அருச்சுனன் முற்பிறவி பிற்பிறவிகள் இவ்வாறு கூறப்படாமையும் இம்முடிபை வலியுறுத்தும்.

இனி, அருணகிரிநாதருடைய பிறப்பு குலம் தாய் தந்தையர்பற்றிய செய்திகளும் விபரீதமாகவே கூறப்படுகின்றன. முற்றுந் துறந்த பட்டினத்தடிகள் தலயாத்திரை செய்து திருவண்ணுமலை சென்றபோது, முத்தம்மை யென்ற உருத்திரகணிகையைத் திருக்கோயிலிற் கண்டு மயங்கி அவள்மீது அடங்காக் காதல்கொண்டு, அவளைக் கலவிக்கழைப்ப, அவள் மறுத்து ஓட, தமக்கு வெளிப்பட்ட சுக்கிலத்தை அடிகள் ஓரிலைக்கலத்திற் பெய்து வைக்க, முத்தம்மையின் தாய் தன் மகளைக் கடிந்து அழைத்துவந்து அடிகளிடம்விட, அடிகள் இலைக்கலத்தைச் சுட்டிக் காட்ட, முத்தம்மை அதிலிருந்த சுக்கிலத்தை விழுங்கி, கருக் தரித்து சூல் முதிர்ந்து அருணகிரிநாதரை யீன்ருளென்ற வரலாறும் மேற்கூறிய அருணகிரிநாதர் புராணத்திலேயே கூறப்படுகின்றது. இவ்வரலாறு, உண்மை ஒருசிறிதும் கலவாத முழுப் பொய் யென்பதில் யாதொரு ஐயமுமில்லை. அருணகிரிநாதர் உருத்திரகணிகையொருத்தியின் புதல்வர்என்று பொதுவாகப் பலராலும்கூறப்படும் செய்தியும் பொய்யேயாம். பட்டினத்தடிகள் வரலாற்றில் இச்செய்தி யாண்டும் கூறப்படாமை, அவ்வடிகள் துறவொழுக்கத்துக்கு இச்செய்தி சிறிதும் பொருந்தாமை, அவ்வடிகள் அருணகிரிநாதர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் முன்பிருந்தமை முதலிய காரணங்களும் அருணகிரிநாதர் வாக்கிலுள்ள அகச்சான்றுகள் பலவும் இவ்வரலாறு முற்றும் பொய்யென்பதை நிலைநாட்டும். இனி இப்பொருள்பற்றிய அகச்சான்றுகள் சிலவற்றை ஆராய்வாம்.

உருத்திரகணிகையர் வகுப்பைச்சார்ந்த ஓர் அம்மையாரையும், காமவிடாய் மிகுந்து தூய்மை மிக்க சிவாலயத்தில் ஒரு கணிகையைக் கலவிக்கழைத்து வெளிப்பட்ட சுக்கிலத்தை இலைக்கலத்திற் பெய்து வைத்த ஒரு துறவியையும் சீலமுள்ளவரென எவரும் கருதார். அருணகிரிநாதர் திருப்புகழ்

690-வது பாடலிற் றமது தாய் தந்தையரைச் சீலமுள்ள தாயர் தந்தை எனக் கூறுதலால் அவரது தாய் தந்தையர் மேற்கூறியபடியன்றி, உண்மையிலேயே நல்லொழுக்கம் வாய்ந்த இல்லறம் நடாத்திய சீலர்களாகவே இருந்திருத்தல் வேண்டும். 1131, 1228 முதலிய பாடல்களிற் றமது தந்தையாரைக் குறித்துள்ள சந்தர்ப்பங்களை நோக்கும்போது அருணகிரிநாதருடைய தந்தையார் கணிகையர் உறவுகொண்ட காமுகரைப் போலல்லாது மனைவி மக்கள் முதலியவரோடு சீரிய இல்லறம் நடாத்திய ஒருவராகவே காணப்படுகிறார். பதியிலார் மரபில் உதித்த ஒருவர் குலநலம் பாராட்டுதல் எஞ்ஞான்றுமில்லை. அருணகிரிநாதரோ 524-வது பாட்டில், 'குடிவாழ்க்கை யன்னை....குலம்வாய்த்த நல்லதனம்...' என்றும், 1128-வது பாட்டில், 'மனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர் வலிமைகுல நின்ற நிலையூர் பேர்' என்றும் தமது குலநலங் குடிநலங்களைப் பாராட்டுகிறார். எனவே, அவர் கணிகையர் குலத்துதித்தவராக இருந்திருக்க முடியாது. இவைபோன்ற வேறு பல குறிப்புக்களும் உள்ளன. அருணகிரிநாதர் வடசொற்களை மிகுதியாக உபயோகித்தல், இராமர் கிருஷ்ணர் வரலாறுகளை மிகுதியாகத் திருப்புகழிற் கூறுதல் முதலிய சில காரணங்களைக்கொண்டு, சில ஆரிய அன்பர்கள், அருணகிரிநாதர் ஓர் ஆரிய அந்தணரென்று சில ஆண்டுகளாகக் கூறி வருவதாகத் தெரிகிறது. இக்கொள்கைக்கும் போதிய ஆதாரமில்லை. அருணகிரிநாதரே 578-வது பாடலில் தாம் பல பாஷை திக்கித் திக்கிக் குளறிச் செப்புவதாகக் கூறுவதால் வடமொழியோடு வேறு சில மொழிகளையும் இவர் பயின்றவர் என்பதும், இப்பயிற்சி மிகச் சிறந்ததல்லவென்பதும் புலனாகும். இவர் வடமொழியில் நூல்களியற்றியதாகக் கூறப்படவில்லை. சாளுவாப்யுதயம், அச்சுதராயாப்யுதயம், பாகவதசம்பு முதலியவற்றை இயற்றிய ராஜநாத கவியின் தந்தையாகிய சோணாத்ரிநாதர் வேறு, நமது அருணகிரிநாதர் வேறென்பதும், நமது அருணகிரியார் இச்சோணாத்ரி நாதருக்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்கு முந்தியவரென்பதும் திரு. கோபிநாதராயர் முதலியோர் செய்துள்ள

ஆராய்ச்சியாற் றுலங்கும். இராமர் கிருஷ்ணர் வரலாறுகளைத் திருப்புகழ் மிகுதியாகக் கூறுவது அருணகிரிநாதரது பரந்த சமரசக் கொள்கையைக் குறிக்குமே தவிர, அவரது குலத்தைக் குறிக்காது. மேலும் 1146-வது பாடலில், 'நாலான வேத நூலாக மாதி நானோதி னேனுமிலை' என்று இவர் ஒப்புக்கொள்வதாலும், வேதம் ஓதும் அதிகாரமுடைய வருணத்தவராக இவர் இருந்திருப்பின், இவரது சீலமுள தாய் தந்தையர் இவருக்கு வேதத்தை ஓதி வைத்திருப்பார்களாதலாலும், ஆரிய அந்தணர்களைப் போலல்லாது ஆகமங்களின் உண்மையை 87, 140, 151, 254, 260, 685, 879, 1146 முதலிய பல பாடல்களில் இவர் ஒப்புக்கொள்வதாலும் இவர் ஆரிய வகுப்பைச் சார்ந்தவரல்ல ரென்பது ஊகிக்கக் கிடக்கின்றது. மேலும் 586-வது பாடலில் வரும் 'தந்திலன்' என்ற சொல்லுக்குச் சில பதிப்பாளர்கள் 'நூலில்லாதவன்' என்று கூறும் உரைக் குறிப்பு பொருந்துமாயின், இவர் உபவீதம் தரியாத வருணத்தினர் என்பதும் கொள்ளக் கிடக்கும். எனவே, தமது குலத்தை உயர்ந்ததாக 524, 1128 முதலிய பாடல்களிற் கூறும் இவர், தமிழ் மக்களுள் உயர்ந்த குலமாகக் கருதப்படும் சைவ வேளாள மரபினராக இருந்திருத்தல் கூடும். அருணகிரிநாதரைப் போன்ற முத்தான்மாக்களும் பரம புருஷர்களும் காலம் குலம் முதலிய ஜடதத்துவாராய்ச்சிக்கு மேம்பட்டவர்களே. அவர்களுடைய குலத்தை யாராய்வது பெரும் பேதமையே. என்றாலும், சரித்திரக் கண்கொண்டு நோக்கும்போது, ஒரு கொள்கை நுவலப்படின், அதன் உண்மையைச் சான்றுகளின் துணைகொண்டு ஆராய்தல் அறிஞர் கடன். "மெய்யுடை யொருவன் சொலமாட்டாமையால் பொய்போலும்மே பொய்போலும்மே, பொய்யுடை யொருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே" என்ற வெற்றிவேற்கை நீதி மொழிகள் ஈண்டு நினைவு கூர்தற்குரியன. மேலே விவரிக்கப்பட்ட ஆராய்ச்சியின் முடிபாக அருணகிரிநாதர் உருத்திர கணிகையர் வகுப்பில் உதித்தவரல்ல ரென்பதும், சைவ

வேளாள வகுப்பினராக இருந்திருத்தல் கூடுமென்பதும் புலனாகும்.

இனி, அருணகிரிநாதர் காலத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வாம். திருப்புகழில் 26-வது பாடலில் பிரபுடதேவ மகாராஜனும், 525, 793-ம் பாடல்களில் கந்தபுராண அரங்கேற்றத்தில் முருகவேள் தோன்றி இலக்கணங் கூறிய செய்தியும் 611, 770-ம் பாடல்களில் காளப்புலவனும் கூறப்படுதலால் இவர் காலத்தைத் தீர்மானிக்கத் தகுந்த சான்றுகள் சில கிடைத்துள்ளன. காளப்புலவன் என்பது, ஆசுகவி பாடும் புலவனுக்குப் பொதுவாக வழங்கும் பெயரென்றும் கி. பி. 15-ம் நூற்றாண்டிலிருந்த காளமேகப் புலவரைக் குறிக்கவேண்டிய அவசியமில்லை யென்றும் சில ஆராய்ச்சியாளர் கூறுகின்றார். கச்சியப்ப சிவாசாரியர் காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டுமுதல் 15-ம் நூற்றாண்டுவரை பலவகையாகப் பலரால் கூறப்படுகிறது. பிரபுட தேவராஜன் காலம் கி. பி. 15-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி யென்பது கல்வெட்டாராய்ச்சியாளர் அனைவரும் ஒருங்கே கூறும் முடிபு. எனவே, அருணகிரிநாதர் கி. பி. 15-ம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்தவ ரென்று ஒருவாறு துணியலாம்.

இனி, அருணகிரிநாதர் அவதரித்த திருநாள் புரட்டாசிமீ உத்திர நக்ஷத்திரமும் செவ்வாய்க்கிழமையும் தனுர் லக்கினமும் கூடிய நன்னாள் என்றும், அவர், கிளி யுருவம் பெற்று முருகவேள் தோள் மீதமர்ந்து சாமீபபத முத்தி பெற்ற நாளும் அஃதேயென்றும் அருணகிரிநாதர் புராணம் கூறுகின்றது. வேறு சிலர் ஆனிமீ பௌர்ணிமையே அவர் திருநாளென்று கொண்டாடி வருகின்றனர். உண்மை காண்பதற்குப் போதிய ஆதாரங்களில்லை. திருநாளைக் கொண்டாடுவதில் வேறுபாடிருத்தல் உசிதமன்று.

இனி, அருணகிரிநாதர் சரித்திரத்தின் முற்பகுதியை யாராய்வாம். இப் பகுதியில் பொய்ச் செய்திகள் பல நிறைந்துள்ளன. அருணகிரிநாதர் தமது ஏழாம் வயதில் தாயாரை இழந்தனரென்றும், தாய் இறந்தபின் தமக்கையார் ஒரு

வரே தம்மைக் காப்பாற்றி வந்தாரென்றும், தமது பதினாரும் வயது முதல் அருணகிரியார் விதிவசத்தால் விலைமாதர் உறவுகொண்டு பொருளையெல்லாம் இழந்து, புணர்ச்சி மிகுதியால் குட்டம் முதலிய கொடிய நோய்களாற் பீடிக்கப்பட்டு வருந்தினரென்றும், மீண்டும் புணர்ச்சியையே விரும்பித் தமக்கையிடம் சென்று அவளணிந்திருந்த ஒரு புடவையைத் தரும்படி கேட்க, அவள் மிகவும் மனம் நொந்து தானும் ஒரு விலை மாதாகையால் தன்னிடமே புணர்ந்து இன்புறலாமென்று கூறக்கேட்டு, மனம் பொறாது தற்கொலை புரிய எண்ணி அருணைக் கோபுரத்தின் மேலேறிக் குதிக்கும்போது முருகவேள் கோவணதாரியான ஒரு துறவிபோற் றோன்றி அருணகிரியாரைத் தாங்கி அவரைத் தேற்றித் திருநீறிட்டு ஆறெழுத்தை உபதேசித்துக் கோபுரத்தின் வடபாலுள்ள முருகவேள் திருவுருவத்தைச் சுட்டிக்காட்டி அதனை வழிபடுமாறு பணித்துச் சென்றாரென்றும், அன்று முதல் அருணகிரியார் செம்மையான வாழ்க்கையை நடத்தினாரென்றும், தமக்கையாரும் சிலகாலங் கழிந்த பிறகு இறந்தனரென்றும், அருணைக் கோபுரத்தில் வசித்துக் கொண்டே முப்பத்தாறாயிரம் திருப்புகழ்ப் பாடல்களையும் வகுப்புக்களையும் பாடியபின் முருகவேள் மயில்மீது வந்து தரிசனமளித்து மறைந்தாரென்றும், பிறகு அருணகிரியார் மயில் விருத்தம் வேல் விருத்தம் பாடித் திருச்செந்தூர் சென்று ஆங்கு 36,000 திருப்புகழையும் பாடச் செந்திலாண்டவன் தலையசைத்து உவப்பாகக் கேட்க, அருணகிரியார் அப்பாடல்களைப் பாடுவோர் தம்மைப்போல் நல்வாழ்வு பெற வேண்டுமென்று விண்ணப்பிக்க, முருகவேள் வரந்தாராதுவாளாவிருந்ததால், அவ்வேடுகளனைத்தையும் ஆங்குள்ள கடலில் விடுத்தனரென்றும், அவற்றுள் கடல் கொண்டவை போக எஞ்சியுள்ளவையே இப்போது கிடைப்பனவென்றும், அருணகிரியார் திருச்செந்தூரிலிருந்து இலஞ்சிக்குச் சென்று அங்கிருந்து பல குன்றங்களைத் தரிசித்து மீண்டும் அருணைக் கோபுரத்தை யடைந்தனரென்றும், அக்காலத்தில் அருணையை யாண்ட பிரபுடதேவராஜன் அருணகிரியாரை

அழைக்க, அவர் மறுத்துவிட்டுக் கோபுரத்திலேயே வாசம் செய்து வந்தாரென்றும் அருணகிரிநாதர் புராணம் கூறுகின்றது.

இனி, மேற்கூறிய செய்திகளை அகச்சான்றுகளோடு ஒப்பிட்டு ஆராய்வாம். 1131-வது பாடலில் "தாதை தமரோடும் மனமது சலிப்ப....அடியனு நினைத்து நாளுமுடலுயிர் விடுத்தபோது" என்ற குறிப்பிலிருந்து அருணகிரிநாதர் தற்கொலை செய்ய முயற்சித்த காலத்தில் தமது தந்தையார் உயிருடனிருந்ததாகத் தெரிகிறது. 690, 1228 முதலிய பாடல்களைக் கொண்டும் இவர் தந்தையார் மனைவி மக்களோடு இல்லறம் நடாத்தியவரென்பதை ஊகிக்கலாமென்று மேலே கூறினோம். 1345-வது பாடலில் "முடக்கு மேல்பிணி யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர் குலத்தர் யாவரு நகைக்கவே யுடல் மங்குவேனை" என்ற குறிப்பிலிருந்து இவரது தாயார், இவர் சிற்றின்ப மிகுதியால் பிணிவாய்ப்பட்ட காலத்தில் உயிருடனிருந்தாரென்பது பெறப்படும். 524, 538, 690, 740, 754, 1140 முதலிய பல பாடல்களில் இவர் தாயாரைப் பற்றி வரும் குறிப்புக்களும் இவரது ஏழாம் வயதில் இவர் தாயார் இறக்கவில்லை யென்பதையும், இவர் திருப்புகழ்ப் பாடல்கள் பலவற்றைப் பாடுங் காலம்வரை உயிருடனிருந்தா ரென்பதையும் வலியுறுத்தும். மேலும் 754-ம் பாடலில் தம்பியென்ற குறிப்பும் 538-ம் பாடலில் அநுசர்கள் என்ற குறிப்பும் உண்மையால் இவருக்குத் தம்பிகள் இருந்தனரென்றும், 754-ம் பாடலில் தங்கையென்ற குறிப்புண்மையால் இவருக்குத் தங்கையும் இருந்தனரென்றும், 524, 538, 690, 740, 754, 1026, 1228 முதலிய பல பாடல்களில் மனைவி மக்கள் என்ற குறிப்பிருத்தலால் அருணகிரிநாதரும் தமது தந்தையைப்போல் மனைவி மக்களோடு இல்லறம் நடத்தியவரே என்றும், 1140, 1227 முதலிய பாடல்களில் மைத்துனர் என்ற குறிப்பு வருதலால் இவரேனும் இவர் தங்கையேனும் இல்லறம் நடத்தியிருத்தல் வேண்டுமென்றும், 754-வது பாடலில் மருகர் என்ற குறிப்பும், 1244-ம் பாடலில் மாமன் பாட்டி என்ற

குறிப்பும் உண்மையால் இவ்வுறவினரும் இவருக்குண்டென் றும் ஊகிக்க இடமுண்டு. தமக்கை அண்ணன் என்ற குறிப் புக்கள் யாமறிந்தமட்டில் யாண்டும் காணப்படவில்லை. இச் சான்றுகளைக்கொண்டு நோக்கின் இல்லறம் நடாத்திய ஒரு குடும்பத்தில் அருணகிரிநாதர் மூத்த பிள்ளையாக அவதரித் துத் தமது தாய் தந்தையர் தங்கை தம்பிகளோடு வாழ்ந்து, திருமணம்புரிந்து மனைவி மக்களோடு இல்லறம் நடாத்திய ஒரு பெரியாரென்பதும், இவ்வுறவினரெல்லோரும் இவர் பல திருப்புகழ்ப் பாடல்களைப் பாடுங்காலம் வரை உயிரோ டிருந்தனர் என்பதும் அறியக்கிடக்கும் பொருள்களாகும். மேலும் 1141-வது பாடலில்"மாத்திரையாகிலு நாத்தவறுளு டன் வாழ்க்கையை நீடென மதியாமல்" என்று இவர் கூறு வதிலிருந்து இவருடைய மனைவி 'கற்பெனப்படுவது சொற்றி றம்பாமை' யெனும் முதுமொழிக்கோர் எடுத்துக் காட்டாகத் திகழ்ந்த ஒரு கற்பரசி யென்பதும் புலனாகும்.

அருணகிரிநாதர் மனைவிமக்களோடும் தாய்தந்தைய ரோடும் இல்லறம் நடாத்தியவராயினும், கன்மவசத்தால் விலை மாதர் உறவுகொண்டு சிற்றின்பத்துறையில் எளியராகிக் கைப்பொருளை யிழந்து வறுமையுற்றுப் பிணிவாய்ப்பட்ட னர் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. சில அறிஞர்கள் இவர் கூடா வொழுக்கமுடையராகச் சில காலமிருந்தாரென்று கூற மனமிலராய், இவர் பாடல்களிற் காணக் கிடக்கும் சிற்றின் பக் குறிப்புக்களெல்லாம் வண்ண இலக்கணவிதிகட்கிசைய வைக்கப் பெற்றனவேயன்றி இவரது சரித்திரச் சான்று களாகாவென்று கூறுகின்றனர். வண்ண இலக்கணத்துக்கு விலைமாதர் கலவி விவரங்கள் தேவையில்லை; இல்லறத்தில் மனைவியோடு நுகரும் சிற்றின்பவர்ணனையே சாலும். இவரை யன்றி வேறு வண்ணம் பாடிய புலவரெவரும் விலைமாதர் கலவியை விரித்துக் கூறினரில்லை. விலைமாதர் கலவி விவரங் கள் வண்ண இலக்கணத்துக்குத் தேவையென்று வைத்துக் கொண்டாலும், அக்கலவியால் வரும் பிணி, வறுமை முதலிய வற்றின் விவரங்கள் தேவையாகமாட்டா. எனவே, இவ்விவ

ரங்கள் பல நிறைந்துள்ள பாடல்களைச் சரித்திரச் சான்று களாகக் கொள்வதே தகுதியாகும்.

இனி, இச்சான்றுகள் சிலவற்றை ஆராய்வாம். இவருக்கு வேசியர் கூட்டுறவேற்பட்டது விதிவசத்தாலென்றும், உலகாயதக் கொள்கையாலென்றும் இவரே இருவகையாகக் கூறுகின்றார். 740-வது பாடலில் "தகரநறுமலர் பொதுளிய குழலியர் கலக கெருவித விழிவலை படவிதி தலையிலெழுதியும்" என்பதிலிருந்தும், 1334-வது பாடலில் "விருதாவினிலே உலகாயத மேலிடவே மடவார் மயலாலே" என்பதிலிருந்தும் இவ்வுண்மை புலனாகும். விதிவசத்தால் சில காலம் உலகாயதக் கொள்கையை மெய்யென்று நம்பி இவர் தமது மனைவியோடு சிற்றின்பம் நுகர்வதோடமையாது, இளமகளிரோடு இன்பந் துய்த்தலே முத்தியெனக் கூறும் அக் கொள்கைக்கேற்ப முத்திநாட்டமுடையராய்ப் பல விலைமாதரோடும் இன்பம் துய்க்கத் துணிந்திருத்தல் கூடும். 783, 788, 843-ம் பாடல்களில் தாம் திருநீறிடாதிருந்ததாக இவர் கூறுவதும், சில காலம் இவர் உலகாயதத்தை நம்பி மோசம் போனதை வலியுறுத்தும். 114-வது பாடலில் "நீணிதிதனைக்கண் டாணவமான நிர்மூடனை விடக் கன்பாய் நுகர் பாழனை" எனத் தாம் செல்வச் செருக்குற்று மாமிசமருந்தியதாகக் கூறுவதும், 1288-வது பாடலில் "மதுபானமுண்டு வெறிமூடி" என்பதும் இக்காலத்திலேயே நிகழ்ந்திருத்தல் கூடும். பொருட்பறிமாதர், விலைபேசி நம்பவிடு மாதர், அத்தமாதர், பொதுமாதர், பல கணிகையர் என்று 395, 474, 881, 1036, 1241-ம் பாடல்களிலும் இவை போன்ற பல குறிப்புக்கள் நூற்றுக்கணக்கான வேறு பாடல்களிலும் வருதலால் இவர் விலைமாதர் உறவு கொண்ட செய்தியை எவரும் மறுக்க வியலாது. 470-வது பாடலில் "மானார் கனிவா யுகந்து சிக்கெனவே அணைந்து கைப்பொருளே யிழந்துவிட் டயர்வாயே" என்றும், 600-வது பாடலில் "ப்ரிய மோகக்கலவியில்...சிலநாளிற் கையிலுள பொருள் கெட் டருள்கெட்டனைவரும் விடுசிச்சியென" என்றும், இவை போன்ற பல குறிப்புக்கள் வேறு பல பாடல்களிலும் உள்ள

படியால் இவர் விலைமாதர் கூட்டுறவின் மிகுதியால் கைப் பொருளையெல்லாம் இழந்தனரென்பது புலப்படும். இது இற்றைக்கும் நாம் உலகத்திற் காணும் அநுபவமேயாகும். 752-வது பாடலில் "மயல் மூழ்கியபின் ஆபரணம் வைத் தடகு தேடுபொருள் சூறைகொளுவார்" என்பதுபோன்ற குறிப்புக்களிலிருந்தும் இவர் பொருளை யிழந்தவகை முதலி யன ஊகிக்கற்பாலன. 105-வது பாடலில் "வறுமையாகிய தீயின்மேற்கிடந்து நெளியுநீள்புழு வாயினேற்கிரங்கி" என் றும், 1276-வது பாடலில் "புலிவேட்டைக் குளேவரு பசு வைப்போல் மிடியாற் பட்டபாடொரு கதையைப் பாரினில் ஆர்க்குச் சொல்வேன் இனி" என்று கூறுவதிலிருந்தும் இதுபோன்ற வேறு பல குறிப்புகளிலிருந்தும் இவர் வறுமை யுற்றது நன்கு விளங்கும். 525-வது பாடலில் "முலையை விலைசெய்வார் தமக்குமாமயல் கொடிதுகொடிததால் வருத் தமாயுறு துயராலே, குறுகிகுறுகியே மிகுத்தவாவொடு பெரியபிரபுமா ரிடத்திலேபதி குலையஅடிமையா யிருத்த லாகிய ஒருபாவி" என்று இவர் கூறுதலால் வறுமையுற்ற ஞான்று இவர் ஒரு செல்வரிடத்தில் வேலைக்கமர்ந்து தாம் பெற்ற ஊதியத்தைக் கொண்டு விலைமாதர் கூட்டுறவை நடத்திவந்தாரென்பதும் ஒருவாறு புலனாகும். 769-வது பாடலை ஊன்றிப்பார்த்தால் இவர் சிலகாலம் போலித் துறவி வேடம் பூண்டு பொருளீட்டி விலைமாதருக் கீந்தாரெனக் கூறுதற்கிடமுண்டு. 105, 1062-ம் பாடல்களிலிருந்து இவர் செல்வர்களைப் புகழ்ந்து பாடிப்பெற்ற பொருளை விலைமாதருக் கீந்தாரெனக் கூறுதற் கிடமுண்டு. பொருளில்லாதபோதும் விலைமாதரையே இவர் புகழ்ந்து பாடிப் புணர்ந்திருத்தல் கூடு மென்று 179, 1265-ம் பாடல்களிலிருந்து ஊகிக்க இட முண்டு. 349-வது பாடலில் "ஒருநாட் பிரிவது மரிதாய்ச் சுழல்படும் ஒழியாத் துயரது தவிரேனோ" என்றிவர் வருந்து வதிலிருந்து இவரது சிற்றின்ப வேட்கையின் மிகுதி வெளிப் படும். இவ்வாறெல்லாம் புணர்ச்சியை மிக விரும்பி நிகழ்த் திய அருணகிரிநாதர் பிணிவாய்ப்பட்டு மிக வருந்தினரென்ப தும் இவருடைய வாக்கிலிருந்தே துலங்கும் உண்மையாகும்.

குஷ்டரோகம் முதலிய கொடிய வியாதிகளால் இவர் பீடிக்கப் பட்டு வருந்தியது, 296, 1272, 1288 முதலிய பல பாடல் களால் விளங்கும். இவ்வியாதிகளை "மாதர்தரு பூஷணங் கள் எனவாகும் பாதகவியாதி புண்கள்" என்று 1288-ம் பாடலில் இவர் கூறியுள்ளது நோக்கத்தக்கது. இவ்வியாதி களால் இவர் மேனி குலைந்து கருமேகம் மூண்டு அருவருக்கத் தக்க தோற்றத்தை யடைந்தாரென்பது, "வேழமுண்ட விளாங்கனி அதுபோல மேனிகொண்டு" என்று இவர் கூறும் 1360-வது பாடலினாற் கிடைக்கும். "தாய்தமர் குலத்தர் யாவரும் நகைக்கவேயுடல் மங்குவேனை" என்று 1345-ம் பாடலிலும் "மிகுத்தகாமிய னெனப்பாருளோர் எதிர்நகைக் கவே" என்று 1331-ம் பாடலிலும் இவர் கூறுவதால் ஈன் றெடுத்த தாயாரும் உறவினரும் உலகுளோரும் அருவருக் கத்தக்க நிலையை இவரடைந்தா ரென்பது பெறப்படும்.

இத்தகைய பரிதாப நிலையை யடைந்த இவர், நோய் மிகுதி, வறுமை மிகுதி, உற்றார் உறவினர் உலகோர் வசைச் சொல் மிகுதி முதலியவற்றைப் பொறுக்கமாட்டாத மனப் பான்மை யெய்தியதும், தற்கொலை செய்யத் துணிந்ததும் இயல்பேயாம். 1131-வது பாடல் இதற்கோர் அருமையான அகச்சான்றாக விளங்குகின்றது. "மனையவள் நகைக்க ஊரி னனைவரு நகைக்க லோக மகளிரு நகைக்க தாதை தமரோடும், மனமது சலிப்ப நாய னுளமது சலிப்ப யாரும் வசைமொழி பிதற்றி நாளும் அடியேனை, அனைவருமிழிப்ப நாடு மனவி ருள் மிகுத்துநாடி அகமதை எடுத்த சேமம் இதுவோவென், றடியனு நினைத்து நாளுமுடலுயிர் விடுத்தபோதும் அணுகி முனளித்த பாதம் அருள்வாயே" என்று இப்பாடலில் வரும் திருவாக்கு ஆழ்ந்து ஆராயற்பாலது. விடமருந்தல், நீர்நிலை யில் வீழ்தல், கழுத்திற் சுருக்கிடுதல் முதலிய தற்கொலை முறைகள் பலவற்றில் இவர் எம்முறையைக் கொண்டா ரென் பதற்குச் சான்றில்லை; அருணைக் கோபுரத்தின் மீதேறிக் கீழே குதித்தாரென்று அனைவரும் ஒருங்கே கூறும் செய் தியை மெய்யென்றே கொள்ளலாம். தற்கொலை செய்ய முயற் சித்த காலத்து முருகவேள் இவரைக் காத்துத் தமது திரு

வடியைத் தந்தருளினு ரென்பதற்கு மேற்கூறிய பாடலே சான்ருகும். இந்நிகழ்ச்சியோடு அருணகிரி நாதருடைய சரித்திரத்தின் முற்பகுதி முடிகின்றது. மேற் கூறிய சான்றுகளாற் றுலங்கும் வரலாற்றை அருணகிரிநாதர் புராணம் கூறும் வரலாற்ருேடு ஒப்பிட்டால் இரண்டற்குமுள்ள வேற்றுமை எளிதில் விளங்கும். விரிவஞ்சி இதை விளக்காது விடுத்தாம்.

சிறந்த அநுபூதிமாஞக விளங்கிய பாம்பன் - ஸ்ரீமத் குமரகுருதாசசுவாமிகள் அருணகிரியார் சரித்திரத்தை விளக்கிய காலத்து அருணகிரியார் முத்தம்மையென்ற உருத்திர கணிகையிடம் ஆண்மகன் புணர்ச்சியின்றியே இறைவன் அருளினுல் (ஏசுகிறிஸ்துவைப்போல்) பிறந்தாரென்றும், அவர் விலைமாதர் உறவு கொண்டிலரென்றும், ஊழ்வலியால் அவருக்குப் பெருநோய் வந்ததென்றும் அதைப் போக்க அவர் அருணைக்கோபுரத் தறுமுகன் சந்நிதியில் ஆறு நாள் நோன்பிருக்க, முருகவேள் தோன்றி, ''முத்தைத்தரு பத்தித்திருநகை....எனவோது'' என்று அடியெடுத்துதவி தம்மைப் பாடும்படி அநுக்கிரகஞ் செய்தலும், இவர் பாடினுரென்றும், பாடிவரும்போதே இவர் நோய் விலகிற்றென்றும், பிறகு பல தலங்கள் சென்று பாடியும் முருகவேளை மீண்டும் தரிசிக்க முடியாமல் வருந்தி அருணைக் கோபுரத்தின் மீதேறி நின்று தாம் பாடியவை யனைத்தையும் மீண்டும் பாடியபின்னும் முருகன் வாராதது கண்டு ஏடுகளை உருவிக் கீழே விடுத்துத் தாமும் கீழேகுதித்தாரென்றும், உடனேமுருகவேள் மானுடவுருவோடு தோன்றித் தடுத்து, அவருக்கு ஆறெழுத்துபதேசஞ் செய்து தவஞ்செய்யுமாறு பணித்து மறைந்தாரென்றும், பின்பு அருணகிரியார் தவஞ்செய்ய, முருகவேள் தேவியாரோடு மயில்மீது தரிசனந் தந்தாரென்றும், பிறகு அடியர் குழாத்துடன் தோன்றி ஓங்காரத்தை உபதேசித்து மோன நிட்டையிலிருத்தி மறைந்தாரென்றும், அருணகிரியார் பல அற்புதங்களைச் செய்து வயலூர், விராலிமலை, கொடுங்குன்றம், சிதம்பரம் முதலிய தலங்களில் விசேட தரிசனங்கண்டு வில்லிபுத்தூராரோடு வாது செய்து வென்று, சம்பந்

தாண்டானோடு வாது செய்து முருகவேளை அரசன் காண வரவழைத்துக், கிளியுருவோடு விண்ணுலகெய்திக் கற்பக மலர் கொணர்ந்து, மீண்டும் தமதுடலிற் புகுந்து கந்தாலங் காரம், திருவகுப்பு முதலியன பாடி இறுதியாகக் கந்தரநு பூதி பாடிப் பரமுத்தி யடைந்தாரென்றும் ஒரு பிரசங்கத்திற் கூறியதாக அப்பெரியாரதுசீடர்கள் வெளியிட்ட நூல் வாயி லாக அறியக்கிடக்கும். இவ்வரலாற்றின் முற்பகுதியை மேற் கூறிய அகச்சான்றுகளோடு ஒப்பிட்டு உண்மை காண்பது அறிஞர் கடன்.

இனி, அருணகிரிநாதர் சரித்திரத்தின் பிற்பகுதியை ஆராயப் புகுவாம். வில்லிபுத்தூரரோடு வாதுசெய்து அருண கிரிநாதர் கந்தரந்தாதியைப் பாடி வர, வில்லிபுத்தூரார் ஒவ் வொரு பாடலுக்கும் பொருள் கூறிவர "திதத்தத்த" எனத் தொடங்கும் ருச-வது பாடலுக்குப் பொருள் கூற வறியாது விழித்தலும், அருணகிரியாரே அதற்குப் பொருள் கூறி வெற்றி பெற்று வில்லிபுத்தூரருக்குக் கர்ண தானம் செய்து தமது கருணைத்திறத்தை விளக்கினரென்றும், பிறகு சம்பந் தாண்டானோடு வாது செய்து முருகவேளைப் பிரபுடதேவ ராஜன் சபைக்கு வரவழைத்து வெற்றி பெற்றுக் கிளியுரு வோடு வானுலகம் போந்து பாரிசாதமலர் கொணர்ந்தபோது, தமதுடலைக்காணாது கிளியுருவோடே கந்தரநுபூதி, கந்தரலங் காரம் முதலியவற்றைப் பாடி முருகவேள் திருத்தோளில் நித்தியமாகக் கிளி ரூபத்தோடு அருணகிரிநாதர் வீற்றிருக் கிறார் என்றும் அருணகிரிநாதர் புராணம் கூறுகின்றது.

அருணகிரிநாதருக்கு "முத்தைத்தரு....எனவோது" என்று முருகவேள் அடியெடுத்துக் கொடுத்ததாகவும், அவர் நாவினில் வேல்கொண்டு எழுதியதாகவும் வரகவிமார்க்கசகாய தேவரியற்றிய 'திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்' கூறு கின்றது.(இப்பதிப்பில் கூருகூ-ம் பக்கம் பார்க்க). வில்லிபுத்தூ ரார் வாது, சம்பந்தாண்டான் வாது, கிளியாகப் பாரிசாதங் கொணர்ந்து அநுபூதி, அலங்காரம் பாடியது முதலியன கந் தப்பதேசிகரியற்றிய தணிகைச் சந்நிதிமுறையிற் கூறப்படு கின்றன. (இந்நூல் கூருகூ,கூகூ0-ம்பக்கம் பார்க்க). இச்செய்தி

கள் இக்காலத்து வெளிவந்துள்ள திருப்புகழ் பதிப்புக்களி லும் முகவுரையிற் கூறப்பட்டுள்ளன. இவை மெய்யென்றே பலராலும் கொள்ளப்பட்டு வருகின்றன.

இனி, இவ்வரலாற்று விவரங்களைச் சரித்திரக் கண் கொண்டு சான்றுகளின் துணையை நாடி ஆராய்வாம். முற் பகுதிக்குக் கிடைத்துள்ள சான்றுகளைப் போல இப்பகுதிக் குரிய சான்றுகள் தெளிவாகவும் மிகுதியாகவும் இல்லை. அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்ப் பாடல்களை யாராய்ந்து வகைப்படுத்தினால் அவை கீழ்வரும் ஐந்து தலைப் புக்களுள்ளடங்கும் :—(1) சிற்றின்பக் குறிப்பு ஒரு சிறிது மில்லாத பாடல்கள் ; (2) சிற்றின்பத்தில் ஆழ்ந்திருக்கும் தமக்கு அருள்புரிய வேண்டுமென்று விண்ணப்பிக்கும் பாடல் கள் ; (3) சிற்றின்பத்தில் ஆழ்ந்திருப்பினும் முருகவேளை மறக்கவில்லை யெனக் கூறும் பாடல்கள் ; (4) தமக்குப தேசம் செய்தருள வேண்டுமென்று விண்ணப்பிக்கும் பாடல் கள் ; (5) தமக்குபதேசம் செய்த வகையையும் பொருளையும் கூறி மகிழும் பாடல்கள். அலங்காரம், அநுபூதி, திருவகுப்பு முதலிய திருவாக்குக்களிற் கிடைக்கும் குறிப்புக்களும் இத்தலைப்புக்களிலே யடங்கும். இப் பாகுபாட்டைக் கூர்ந்து நோக்குங்கால் அருணகிரிநாதர் விலைமாதர் உறவைப்பற்றி யிருந்த காலத்திலேயே பல தலங்கள் சென்று பல் பாடல் களைப் பாடியிருத்தல் வேண்டுமென்பதும், தாம் உபதேசம் பெறுது உபதேசத்தை நாடி விண்ணப்பித்தற்கு முன்னரே பல பாடல்களைப் பாடினரென்பதும், தமக்கு உபதேசம் கிடைத்த பிறகும் பல பாடல்களைப் பாடினரென்பதும் புல னாகும். சிற்றின்பக் குறிப்பேனும் சரித்திரச் சான்றேனும் அமையாத பாடல்களைத் தமது வாழ்க்கையில் எப்போது இவர் பாடினரென்று துணிந்து கூறவியலாது. உதாரணமாக "அகரமுமாகி", "அகலநீளம்" எனத் தொடங்கும் 3-வது 4-வது பாடல்களைப் பார்க்க. இதைத் துணிந்து கூற இயலாவிடினும், உபதேசம் பெற்றுச் சிவஞானம் முதிர்ந்து சிறந்த அநுபூதிமானாக அருணகிரியார் திகழ்ந்த காலத்தும் சிற்றின்ப நினைவு இவருக்கிருந்ததெனக் கூறுதல் பொருந்தா

தாகையால், இத்தகைய சிறந்த பாடல்கள் இவருடைய ஞானுநுபவம் முதிர்ந்த காலத்திலேயே பெரும்பாலும் பாடப்பட்டிருத்தல் வேண்டுமென்று ஊகித்தல் இழுக்காகாது. இத்தகைய பாடல்களின் பொருட்செறிவு, கம்பீர வாக்கு முதலிய அடையாளங்களும் இதனை வலியுறுத்தும்.

இனி, உபதேசத்தையவாவி விண்ணப்பிக்கும் பாடல்களையும் உபதேசம் பெற்றதைக் கூறும் பாடல்களையும் உற்று நோக்குவாம். இவை பலவாக இருத்தலின், உதாரணங்களாகச் சிலவற்றையே ஆராய்வாம். 56-வது பாடலில் "அறியாவேழை காணுன் பதிபசு பாசோபதேசம் பெறவேணும்" என்றும், 322-வது பாடலில் "மோன உரையி லுபதேசவாளை எனது பகைதீர நீயும் அருள்வாயே" என்றும், 324-வது பாடலில் "ஓம்பெரும் பிரணவாதி யுரைத்தென்றனை யாள்வாய்" என்றும், 385-வது பாடலில் "மவுனபஞ்சர மனோலயசுகந் தருவாயே" என்றும், 745-வது பாடலில் "இருமை ஒருமையில் பெருமையை வெளிபட மொழிவாயே" என்றும், 812-வது பாடலில், "ஊராட்சிய தான ஓர்வாக் கருள்வாயே" என்றும், 989-வது பாடலில் "சுகோதய ஞானவார்த்தை யருள்வாயே" என்றும், 1083-வது பாடலில் "ஒரு போதகத்தை யருள்வாயே" என்றும், 1174-வது பாடலில் "நியமித கற்பனை பக்ஷமுடனளித் தருளாயோ" என்றும் அருணகிரியார் விண்ணப்பிக்கிறுர். இவ்வாறே வேறு பல பாடல்களிலும் பல குறிப்புக்கள் உள்ளன.

இனி, இவர் பெற்ற உபதேசத்தைக் கூறும் பாடல்களுட் சிலவற்றை நோக்குவாம். 11-வது பாடலில் "எட்டாம் எழுத்து ஏழையேற்குப் பகர்ந்த முத்தா" என்றும், 27-வது பாடலில் "உணர்வில் உணரும் அநுபவம் மனம் பெற்றிடும்படியை வந்து நீமுன் உதவ" என்றும், 361-வது பாடலில் "எட்டிரண்டு மறியாத என் செவியில் எட்டிரண்டு மிதுவாமிலிங்கமென எட்டிரண்டும் வெளியா மொழிந்த குருமுருகோனே" என்றும், 536-வது பாடலில் "தழைந்த சிவசுடர் தனையென மனதினில் அழுந்த வுரைசெய வருமுக....

மறவேனே'' என்றும், 595-வது பாடலில் "தந்த்ர வாதிகள் பெற வரியது பிறர் சந்தியாதது தனதென வருமொரு சம்ப்ர தாயமு மிதுவென உரை செய்து....தந்த பொருள் கனவிலு நனவிலு மறவேனே'' யென்றும், 701-வது பாடலில் "சுருதி யாய்இயலாய்...யாவரும்அறியொணுதனைநீ குருவாயிதுபகரு மாறு செய்தாய்'' என்றும், 767-வது பாடலில் "உபதேசப் பொருளூட்டி மந்திர தவ ஞானக்கடலாட்டி....முண்டகதளிர் வேதத்துறை காட்டி...தோகைப் பரிமேற் கொளுஞ் செயல் மறவேனே'' என்றும், 1070-வது பாடலில் "அருணை நகர் மிசை கருணையொ டருளிய பரம ஒரு வசனமு மிருசரணமு மறவேனே'' என்றும், 1194-வது பாடலில் "அருணை நகர் மிசை கருணையொ டருளிய மவுன வசனமும் இருபெரு சர ணமுமறவேனே''என்றும் அருணகிரிநாதர் கூறுகிறார். திருப் புகழில் இவை போன்ற குறிப்புக்கள் வேறு சிலவுமுண்டு. கந்தரநுபூதியில் 12-வது பாட்டில் " முருகன்...சும்மா யிரு சொல்லற என்றலுமே அம்மா பொருளொன்று மறிந் திலனே'' என்றும், 8-வது பாட்டில் "அமரும் பதிகேள் அக மாமெனுமிப் பிமரங்கெட மெய்ப் பொருள் பேசியவா'' என் றும், 11-வது பாட்டில் " கூகாஎன என்கிளை கூடி அழப் போகா வகை மெய்ப்பொருள் பேசியவா'' என்றும், 20-வது பாட்டில் "அரிதாகிய மெய்ப்பொருளுக் கடியேன் உரிதா உப தேசம் உணர்த்தியவா'' என்றும், கந்தரலங்காரத்துள் 8-வது பாட்டில் "அநாதியிலே வெளியில் விளைந்த வெறும் பாழைப் பெற்ற வெறுந் தனியைத் தெளிய விளம்பியவா'' என்றும், 9-வது பாட்டில் "வள்ளிகோன் அன்றெனக் குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றோ வானன்று காலன்று தீ யன்று நீரன்று மண்ணுமன்று தானன்று நானன்று அசரீ ரியன்று சரீரியன்றே'' என்றும், 10-வது பாட்டில் " எல்லா மிழந்து சும்மா இருக்கும் எல்லையுட் செல்ல எனைவிட்டவா'' என்றும் இவர் கூறுகிறார். மேற்கூறிய பல சான்றுகளிலிருந்து அருணகிரியார் மோனநிலை, பிரணவப் பொருள், அத்துவித வுண்மை, மஹா வாக்கியம், ஞானபோதம் முதலிய பல பொருள்களைப் பற்றி உபதேசம் பெற விண்ணப்பித்தார்

என்றும், பிரணவப் பொருள், கடவுளிலக்கணம், மூண்ட கோபநிடதப் பொருள், மோனநிலை, இறவாமை, முப்பாழ் விசாரம் முதலிய பல பொருள்களைப் பற்றி உபதேசம் பெற்றாரென்றும் நாம் அறியக்கிடக்கின்றது. இனி, இவர் திருப்புகழ் 36-வது பாடலில் "செபமாலைதந்த சற்குரு நாதா" என்றும், 62-வது பாடலில் "வேற்கொடு மயிலினில் வந்தெனை யாட்கொளல் சகமறியும்படி காட்டிய குருநாதா" என்றும், 154-வது பாடலில் "ஆனாத ஞான புத்தியைக் கொடுத்ததும் ஆராயு நூல்களிற் கருத்தளித்ததும்...வாசாமகோசரத் திருத்து வித்ததும் ஆபாதனேன் மிகப்ரசித்தி பெற்றினி தலகேழும் யானைக நாம அற்புதத் திருப்புகழ் தேனூற வோதி எத்திசைப் புறத்தினும் ஏடேவு ராஜதத்தினைப் பணித்ததும்...பிறப்பற...அநுக்ரகித்ததும் மறவேனே" என்றும், 528-வது பாடலில் "கலவி அளறிடை துவளுறும் வெளிறனை இனிதாளக் கருணை யடியரொ டருணையி லொரு விசை சுருதி புடைதர வருமிரு பரிபுர கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே" என்றும், 595-வது பாடலில் "அருணையில் முனிவோர்வாழ் கொங்கில் ஏரக பழநியில் அலைசெறி செந்தில் மாநகர்தனி லுயர்தணியல் செய்குன்றில் மேவியு மொழிதரு மறுசமய விரோத தந்த்ரவாதிகள் பெறவரியது பிறர் சந்தியாதது தனதென வருமொரு சம்பிரதாயமு மிது வென உரைசெய்து விரைநீபச் சஞ்சரீகரி காமுரல் தமனிய கிண்கிணீமுக விதபத யுகமலர் தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே" என்றும், 629-வது பாடலில் "சரணக்கழல் காட்டி என்ஆணவ மலமற்றிட வாட்டிய ஆறிரு சயிலக்குல மீட்டிய தோளொடு முகமாறும் கதிர்சுற்றுற நோக்கிய பாதமும் மயிலிற்புற நோக்கிய ஞமெனை கருணைக்கடல் காட்டிய கோலமும் அடியேனைக் கனகத்தினு நோக்கினிதா யடியவர் முத்தமிழாற் புகவே பரகதி பெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே" என்றும், 767-வது பாடலில் "தலைநாளிற் பதமேத்தி யன்புற உபதேசப் பொருளூட்டி மந்திர தவ ஞானக் கடலாட்டி யென்றனை அருளாலுன் சதுராகத் தொடு கூட்டி யண்டர்க ளறியா முத்தமி ழூட்டி மூண்டக தளிர்

வேதத்துறை காட்டி...அன்பொடு கதிர்தோகைப் பரிமேற் கொளுஞ் செயல் மறவேனே" என்றும், 805-வது பாடலில் "அனுசார வினையேனைக் கருவிழாது சீரோதி அடிமை பூணலாமாறு கனவிலாள் சுவாமீ நின்மயில் வாழ்வும் கருணை வாரிகூர் ஏகமுகமும் வீரமாறுத கழலு நீப வேல்வாகு மறவேனே" என்றும், கந்தரலங்காரத்து 24-ம் பாட்டில் "கின்னங் குறித்தடியேன் செவிநீயன்று கேட்கச் சொன்ன குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது" என்றும், திருவகுப்புள் 12-வது (வேடிச்சி காவலன்) வகுப்பில் "அருணையில் இடைக்கழியில் உரககிரியிற் புவியிலழகிய செருத்தணியில் வாழ்கற்பகா டவியில் அறிவும் அறிதத்துவமும் அபரிமித வித்தைகளும் அறியென இமைப்பொழுதில் வாழ்வித்த வேதியன்" என்றும் கூறுகிறார். இச் சான்றுகளை யெல்லாம் ஆழ்ந்து நோக்கி ஒப்பிட்டால், அருணை, இடைக்கழி, பழநி, செந்தில், திருத்தணிகை முதலிய பல தலங்களில் முருகவேள் ஆறு முகத்தோடும் ஒரு முகத்தோடும் வேலு மயிலோடும் சுருதி புடைசூழவும் தனியாகவும் அருணகிரிநாதருக்குக் கனவிலும் நனவிலும் பகிரங்கமாகவும் இரகசியமாகவும் திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால் அநுக்கிரகம் செய்து பல பொருள்களைப் பலமுறை உபதேசித்த செய்திகள் புலனாகும். இவற்றுள் எந்தத் தலத்தில் எப்பொருளை எம்முறையில் எவ்வுருவோடு முருகவேள் உபதேசித்தன ரென்பதைத் தெளிந்து கூறச் சான்றுகள் இடந்தரவில்லை. அருணையில் பகிரங்கமாக மௌனோபதேசம் செய்ததைமட்டும் துணிந்து கூறலாம். இதையே அருணகிரிநாதரும் பலமுறை விதந்து கூறியுள்ளார். இவ்வுபதேசம் இவருக்குக் கிடைத்த காலத்தைத் துணிந்து கூற இயலாதாயினும், வேறுபல உபதேசங்களாற் சாந்தி பெறாத இவர், 322-வது திருப்புகழ்ப் பாடலில் "மோன உரையிலுபதேசவாளை எனது பகைதீர நீயும் அருள்வாயே" என்றும், வேறு இவை போன்ற சொற்களாலும் விண்ணப்பித்து இரங்கிவேண்ட, முருகவேள் அருள்கூர்ந்து

இவருக்கு மௌனோபதேசம் செய்வித்தாரெனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

ஈண்டு ஞாபகத்துள் வைக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. 373-வது பாடலில் "கமரில் விழுகிடு கெடுவிகள் திருடிகள் தமைநாடி அமுத மொழிகொடு தவநிலை யருளிய பெரிய குணதா ருரைசெய்த மொழிவகை அடைவு நடைபடி பயிலவும் முயலவும் அறியாத அசடன் அறிவிலி இழிகுலன் இவ்வென இனமும் மனிதருள் அனைவரும் உரைசெய அடியனிதுபட அரிதினி ஒருபொருள் அருள்வாயே", என்று இவர் கூறுகிறார். இப்பாடலிற் கூறப்படும் பெரிய குணதரர் முருகவேளல்ல ரென்பது அவர் படர்க்கையிலும் முருகவேள் முன்னிலையிலும் கூறப்பட்டுள்ளமை, முருகவேள் உபதேசித்த பிறகும் பாவையரை நாடுதல் அவ்வுபதேசத்துக்குப் பங்கம் கூறுவதாக முடிதல் முதலிய காரணங்களாலறியப்படும். எனவே, இப்பெரிய குணதரர் அருணகிரியாரது குலத்தில் தீக்கை முதலிய சடங்குகள் செய்விக்கும் குருவாகவோ, அருணகிரியார் உறவினரால் அவரைத் தீயவழியிலிருந்து மீட்பிக்க அனுப்பப்பட்ட ஒரு குணசீலராகவோ இருத்தல் வேண்டும். 524-வது பாட்டில் "குருவார்த்தை தன்னை உணராதே" என்பதும் இவ்வாறே அறியப்படுதல் வேண்டும்.

இனி முருகவேள் அருணகிரியார் நாவில் எழுதி "முத்தைத்தரு" என்று முதலடியையும் எடுத்துக் கொடுத்தாரென்றசெய்தியை நோக்குவாம். 767-வது பாடலில் "தலைநாளிற் பதமேத்தி யன்புற உபதேசப் பொருளூட்டி....முத்தமிழூட்டி" எனவரும் சொற்களை இதற்குச்சான்றாக ஊகித்துக் கொள்ளலாம். 'தலைநாளில்' என்பதால் தொடக்கத்தில் என்றும், 'ஊட்டி' என்பதால் நாவிலெழுதி அடியெடுத்துதவி என்றும் ஊகித்தல் இழுக்காகாது. திருவகுப்பில் (12) "எனைத்தனது கழல்பரவு பத்தனென இனிதுகவி அப்படிப்ரசாதித்த பாவலன்" என்றும், கந்தரநுபூதியில் (11) "நாலுகவித்தியாகா" என்றும் வருவனவும் இதனை ஒருவாறு வலியுறுத்தும்.

அருணகிரிநாதர் வரலாற்றைக் கூறுவோர் எவரும் அவர் இல்லறம் நடத்தியவரெனக் கூருது வாளாவிருப்பது பெரும் வியப்பா யிருக்கிறது. அவர் அருணைக் கோபுரத்தில் துறவியாக வசித்து வந்தாரென்ற செய்தி சிறிதும் பொருந் தாது. அவர் தமது முதிர்ந்த அநுபவத்தில் அரிய உண்மை களைக் கூறும் கந்தரநுபூதியிலும் பல பாடல்களில் (4, 5, 8, 11, 29, 33, 39, 40) தமது இல்லறத்தலை எப்போது ஒழியு மென் றேங்குகிருர். முதலாவது திருவகுப்பிலும் "உறவு முறை மனைவி மகவெனும் அலையில் எனதிதய உருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும் உறுபுணை" என்ற குறிப்பு இதனை வலியுறுத்தும். 451-வது திருப்புகழில் "கறுத்த குஞ்சியும் வெளிறி....வெண்பலுமடைய விழுந்து....மனைவியு நிந்தித் தடுத்த மைந்தரும் வசைகள் விளம்பச் சடமாகி... திருவடிதனை யென்றுற் றிடுவேனோ" எனக் கூறுவதிலிருந் தும் இவர் தமதாயுள் முழுவதையும் இல்லறத்திலேயே கழித்தனரென்பது புலனுகும். அறுபத்துமூன்று நாயன் மார்களுட் பலர் இல்லறம் நடத்தியே முத்தி பெற்றதுபோல் இவரும் இல்லறத்திருந்தே முத்தியெய்தினரெனக் கூறுவ தில் தவறென்றுமில்லை. இவர் பல அற்புதங்களை யியற்றின ரெனக் கூறப்படுவதற்குத் திருவகுப்பு (12)-ல் "அபரிமித வித்தைகளும் அறியென இமைப்பொழுதில் வாழ்வித்த வேதியன்" எனவரும் வாக்கு போதிய சான்றுகும்.

அருணைக் கோபுரத்தின் மீதிருந்தோ அன்றி திருச் செந்தூர்க் கடற்கரையிலிருந்தோ இவர் திருப்புக ழேடுக ளனைத்தையும் உருவி விட்டாரென்று கூறுவதற்கு எவ்வித சான்றுமில்லை. இச்செய்தி இவரது பெருமைக்குப் பொருந் தாததொன்றும். திருப்புகழின் தொகை கசு,000, ருசு,000 என்று கற்பனை செய்துகொண்டு அந்தத் தொகை இப்போ தில்லாமைக்குக் கூறப்படும் காரணமாகவே இச்செய்தியைக் கொள்ளவேண்டும். பல்லாயிரக் கணக்கிற் பாடினரென்பது ஆசிரியர்க்குப் பெருமை தருவதென்றெண்ணி இவ்வாறு பெருந்தொகை கற்பனை செய்யப்பட்டிருத்தல் கூடும்.

தேவாரத் திருமுறைகளின் கதையை யொட்டித் திருப்புகழுக்கும் இத்தகைய கதை ஏற்பட்டிருத்தல் கூடும்.

அருணகிரியார் பல பாடல்களிற் கூறும் தலங்கள் பழநி, செந்தில், வயலூர், தணிகை, செங்கோடு, இடைக்கழி, அருணை முதலியனவாம். எல்லாவற்றிலும் மிகுதியான பாடல்கள் பழநிக்கே காணப்படுதலால், இவர் இத்தலத்தில் நெடுங்காலம் வசித்தோ அல்லது பலமுறை யாத்திரையாக வந்து தங்கியோ இப்பாடல்களைப் பாடியிருத்தல் கூடும். இவர் இத்தலத்திலிருக்கும்போது கலிசைச் சேவகனார் என்ற ஒரு பக்த சிகாமணி இவருடைய நண்பராகும் பேறு பெற்றார். இவ்வன்பர் வீரை என்ற தலத்தில் பழநியாண்டவர் திருவுருவத்தை யெழுந்தருளுவித்துத் திருக்கோயிலமைத்து வணங்கி வந்தனர். இக்கலிசைச் சேவகனாரை அருணகிரியார் 843-வது திருப்புகழில் "மேகநிகரான கொடைமானய காதிபதி வாரிகலிமாருத கரோபாரி மாமதனவேள் கலிசை வாழவரு காவேரி சேவகன துளமேவும்....வீரைநகர் வாழ் பழநி வேலாயுதா அமரர் பெருமாளே" என்று விரிவாகவும், 614, 686, 691, 995-ம் பாடல்களிற் குறிப்பாகவும் புகழ்ந்துள்ளார். இவ் வைந்து பாடல்களும் வீரைநகரிலுள்ள ஆண்டவன் திருமுன்பு பாடப்பட்டனவாகக் காணப்படுகின்றன. இவைகளைப் பதிப்பாளர்கள் பழநித்தலப் பாடல்களாகக் கொண்டு வீரைநகர்க்கென ஒரு பாடலும் குறியாத காரணம் எளிதிற் புலப்படவில்லை.

வயலூர் என்ற அருமையான தலம் அருணகிரிநாதராற் பல திருப்புகழ்ப் பாடல்களுட் குறிக்கப்பட்டுள்ளது. இத்தலத்தில் இவருக்கு முருகவேள் விசேடமான அநுக்கிரகம் புரிந்தனரென்பதைச் சில பாடல்கள் மூலமாக நாம் அறியலாம். 171-வது பாடலில் " திருவயலியில்.......திருப்புகழ் விளம்பு மென்முன் அற்புத மெழுந்தருள்குக " என்றும், 558-வது பாடலில் " செய்ப்பதிக்குள் எனைத்தடுத் தடிமைப் படுத்த அருட்...பெருமாளே" என்றும், 612-வது பாடலில் "ஓதுகின்ற திருப்புகழ் நித்தம் பாடுமன்பது செய்ப்பதியிற் றந்தவனீயே " என்றும், 785-வது பாடலில் " விராலிமா

மலையினிற்ப நீகருதி யுற்றுவாவென அழைத்தென் மன தாசை மாசினையறுத்து ஞானமுதளித்த வரமினிநித்த மறவேனே....வயலூரா" என்றும், 805-வது பாடலில் "கனவிலாள் சுவாமீநின் மயில்வாழ்வும் கருணைவாரி கூரேகமுகமும் வீரமாறுத கழலுநீப வேல்வாகு மறவேனே....வயலிமீது வாழ்தேவர் பெருமாளே" என்றும், 929-வது பாடலில் "பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப் பக்குவ மலர்த்தொடையும் அக்குவடு புக்கொர்தொளை பட்டுருவ விட்டருள்கை வடிவேலும் திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு சிற்றடியு முற்றிய பனிருதோளும் செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே" என்றும், 1087-வது பாடலில் "வெளிப்பட் டெனையாள்வயலூரிலிருந்த வாழ்வே" என்றும், 1109-வது பாடலில் "வயலிநகரியி லருள்பெற மயில்மிசை உதவு பரிமள மதுகர வெகுவித வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே" என்றும் உள்ள குறிப்புக்களால் அருணகிரிநாதருக்கு இத் தலத்தில் முருகவேள் அருள்புரிந்த விவரங்கள் புலனாகும்.

சில தலங்களில் முருகவேள் அருணகிரிநாதருக்கு நிர்த்த தரிசனம் காட்டியருளியதாகச் சிலர் ஆராய்ச்சி கூறுகின்றது. 279-ம் பாடலில் "கொடுங்கிரியில் நிர்த்தச் சரணகளை மறந்திடேனே" என்றும், 748-ம் பாடலில் "செந்திலிலுமென்றன்முன் கொஞ்சி நடனங் கொளுங் கந்தவேளே" என்றும், 974-ம் பாடலில் "திருவெணெய் நற்பதி புகழ்பெற அற்புதமயிலின் மிசைக்கொடு திருநட மிட்டுறை பெருமாளே" என்றும், 1229-ம் பாடலில் "தணிகை மலைதனில் மயிலினில் நிர்த்தத்தில் நிற்கவல பெருமாளே" என்றும் உள்ள குறிப்புக்கள் இதனை வலியுறுத்தும். இத்தலங்களிலுள்ள சிலா விக்கிரகங்களையே அருணகிரிநாதர் அகக்கண்கொண்டு நிர்த்தன கோலத்திற்கண்டு பாடினரென்று இக்குறிப்புக்களைச் சிலர் கொள்ளுதலுங்கூடும். 1087-வது பாடலில் "வெளிப்பட் டெனையாள் வயலூரிலிருந்த வாழ்வே" என்பதைப் போன்ற தெளிவு இச்சான்றுகளிலில்லை. இஃதே போல் 1071-வது பாடலைக்கொண்டு தில்லையிலும் முருக

வேள் நிர்த்த தரிசனம் காட்டினரென்று கூறப்படுகிறது. இது திருத்தமான கொள்கையல்லவென்பது, 85-வது பாடலை ஊன்றி நோக்குவதால் விளங்கும். அப்பாடலில் "புலியூர்வாழு நாயகர் மடமயில் மகிழ்வுற வானுடர்கோ வென மலைமக ளுமைதரு வாழ்வே மனோகர மன்றுளாடும் சிவசிவ ஹரஹர தேவா நமோநம....தினைபுன வனிதை மணாளா நமோநம திரிபுர மெரிசெய்த கோவே நமோநம செயசெய ஹரஹர தேவா சுராதிபர் தம்பிரானே" என வரும் குறிப்பைப் பார்த்தால் அருணகிரிநாதர் சிவபெருமானைத் தனக்குத் தானே மகனாகிய தத்துவனாகக்கொண்டு தில்லையம்பலவன் திருநடனத்தையே முருகவேள் திருநடனமாகக் கண்டு துதிக்கிறார் என்பது விளங்கும். இவ்வாறே 1071-வது பாடலையும் கொள்ளுவது பொருந்தும். இதுபோன்ற வேறு சிற்சில நிகழ்ச்சிகளும் தெளிவில்லாத சான்றுகளின் துணைகொண்டு சிலர் ஆராய்ச்சியிற் கூறப்படுகின்றன. விரிவஞ்சி அவற்றையெல்லாம் கூறாது விடுத்தாம்.

இனி வில்லிபுத்தூரரோடு வாது செய்த வரலாற்றை யாராய்வாம். சரித்திர நிபுணர்கள் வில்லிபுத்தூரர் காலம் அருணகிரியார் காலத்துக்கு ஒரு நூற்றாண்டுக்கு முந்திய தென்கிறார்கள். ஆனால் இவர்கள் கூறும் முடிபுகள் சில, கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்படுதல் வேறு சிலஅறிஞர்கள் தங்கள் கொள்கைகளை மாற்றிக்கொள்ளுதல் முதலிய காரணங்களால் முடிந்த முடிபுகளாக எண்ணப்படுவதில்லை. இவ்வந்தாதியில் இவ்வாதம்பற்றிய குறிப்பு யாண்டும் காணப்படவில்லை. இருபத்தாறு பாடல்களில் திருச்செந்தூரும், பதினொரு பாடல்களில் திருச்செங்கோடும், வேறு சில பாடல்களில் வேறு சில தலங்களும் கூறப்படுகின்றன. திருவண்ணாமலை முதலினுள்ள இரண்டு காப்புச் செய்யுட்களில் மட்டும் கூறப்படுகின்றது. இருபத்தைந்து செய்யுட்கள் அகத்துறையில் அமைந்துள்ளன. பல பாடல்களிற் றிருச்செந்தூர் மிகவும் சிலாக்கியமாகக் கூறப்படுகிறது. உதாரணமாக 33-வது பாடல் சேதுவினும் திருச்செந்தூர் சிறந்ததென்கிறது. இந்நூலிலுள்ள பாடல்களனைத்தும் சிசீ

செசே திதீ தெதே என்ற எட்டெழுத்துக்களுள் ஒன்றையே கொண்டு தொடங்குகின்றன. இயமகம் திரிபு முதலிய நயங்களும் இவ்வந்தாதியி லுள்ளன. இத்தகைய உயர்வுடைய அந்தாதி அருணகிரிநாதர் திருச்செந்தூரி லிருந்த காலத்தில் செய்யப்பட்டிருத்தல் கூடும் என்ற ஐயம் இயல்பாக எழுகின்றது. தாம் தற்கொலை செய்வதைத் தடுத்து முருகவேள் ஆட்கொண்ட பின்னர் அருணகிரிநாதர் பெரும்புகழ் வாய்ந்த புலவராகத் திகழ்ந்தாரென் பதில் ஐயமில்லை. இது 154-வது பாடலில் "மிகப்ர சித்தி பெற்றினி துலகேழும் யானுக....எத்திசைப் புறத்தினும் ஏடேவு ராஜதத்தினைப் பணித்ததும்" என்றும், 224-வது பாடலில் "ப்ரபுத்துவக் கவித்துவக் குருத்துவத்தெனைப் பணித்தருள்வோனே" என்றும், 940-வது பாடலில் "மதுர கவிராசனுமெனன் வெண்குடை விருதுகொடி தாளமேள தண்டிகை வரிசையொ டுலாவு மாலகந்தை தவிர்ந்திடாதோ" என்றுமுள்ள குறிப்புக்களா லறியப்படும். இவர் இவ்வந்தாதியை ஆசுகவியாகப் பாடியிருத்தல் கூடுமென்பதில் ஐயமில்லை. "காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி" என்ற தனிப்பாடலும், தணிகைச் சந்நிதி முறையில் கந்தப்பதேசிகர் கூறுவதுமே (கூகூ0-ம் பக்கம் பார்க்க) இவ்வாதத்துக் காதரவான சான்றுகளாகக் கூறப்படுகின்றன. வேறு சான்றுகளின்மையால் இவ்வாதத்தினுண்மையைப் பற்றித் துணிவாக ஒன்றுங் கூற வியலவில்லை.

இனிப் பிரபுடதேவராஜன் காண முருகவேளை வரவழைத்ததற்குத் தகுந்த சான்றுகள் உள்ளன. 26-வது திருப்புகழில்"மயிலுமாடி நீயாடி வாவேணும்....பிரபுடதேவ மாராஜன் உளமுமாட வாழ்தேவர் பெருமாளே" என்றும், 283-ம் பாடலில் "திருநட மிடுசரண் அழகுற சந்தச் சபைதனி லெனதுள முருகவும் வருவாயே...அரசியொ டருணையில் கந்தப்பதமென மயில்மிசை பரவிய பெருமாளே" என்றும், 804-வது பாடலில் "உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில் ஒருநொடி தனில் வருமயில்வீரா" என்றுமுள்ள சான்றுகள் சிறந்தனவாகும். சம்பந்தாண்டானோடு ஓட்டி

யது, அவன் தேவியாரை வரவழைக்கத் தவறியது, அவன் முருகவேளை வரவொட்டாமல் தடுத்தது, அருணகிரியார் மயில் விருத்தம் பாடி மயிலை ஏவியது முதலிய செய்திகட்குச் சான்றில்லை. மயில்விருத்தத்தில் ஒவ்வொரு பாட்டிலும் திருத்தணிகை கூறப்படுதலாலும், ஒரு பாட்டிலேனும் முருகனைச் சபைக்கழைத்துவாவென்று மயிலை விண்ணப்பித்த குறிப்பு காணப்படாமையாலும், மயில் விருத்தம் அருணகிரி நாதர் வாக்கல்லவென்று சிலர் கூறுதலாலும் இச்செய்தி களைத் துணிந்து கொள்ள இயலவில்லை.

இனிக் கிளியுருக்கொண்டு விண்ணுலகெய்திப் பாரி சாதம் கொணர்ந்த செய்தியை யாராய்வாம். இதற்கு எவ்வித அகச்சான்றுமில்லை. அருணகிரியார் ஒரு கிளியுடலிற் பர காயப் பிரவேசத்தினல் புகுந்தாரெனப்படுகின்றது. கிளி நெடுந்தூரம் புறுவைப்போல் பறந்து செல்லும் ஆற்றல் வாய்ந்த பறவையன்று. மேலும் விண்ணுலகம் செல்வது கிளியின் ஆற்றலுக்கு மிஞ்சியது. அருணகிரியார் தமது ஆற் றல்கொண்டே சென்றிருக்கவேண்டும். அவ்வாறு செய்தற்குக் கிளியுருவம் தேவையில்லை. சேரமான்பெருமாள் நாயனர் தாம் கயிலை சென்றதோடு தமது குதிரையையும் கயிலைக்குச் செலுத்தியது போலச் சிறந்த அநுபூதிமானகவும் அபரிமித வித்தைகள் (வகு. 12) கைவரப் பெற்றவராகவும் திகழ்ந்த அருணகிரியார் தம்முருவத்தோடேயே விண்ணுலகம் சென் றிருத்தல் கூடும். பாரிசாதங் கொணர விண்ணுலகம் செல்ல வேண்டியதுமில்லை; முருகவேளை அருணையில் வர வழைத்தவர் அக் கடவுளை வேண்டியிருப்பின் பாரிசாத மலரேயன்றிப் பாரிசாத மரமும் அருணைக்கு எளிதில் வந் திருக்கும். இக் கதையின் ஒரு பகுதியை ஒப்புக்கொண்டு அருணகிரியார் கிளியுருவோடு மீண்டும் அருணைக்கு வந்து தமது உடலிற் புகுந்தாரென்று கூறவேண்டிய அவசியமு மில்லை. தாயுமானவர், சிதம்பர சுவாமிகள், வரகவி மார்க்க சகாய தேவர் முதலிய பெரியார்கள் அருணகிரிநாதரைப் புகழ்ந்து கூறுமிடத்து இக் கிளியுருவக் கதையைக் கூறாது விடுத்தது நோக்கத் தக்கது. இக் கதை அவர்கள் காலத்

தில்லாமலோ அல்லது அவர்கட்கு உடம்பாடில்லாமலோ இருந்திருத்தல் வேண்டும். 355-வது திருப்புகழில் "மவுன பஞ்சரம் பயில்தரும் சுகபத மடைந்திருந் தருள்பொருந்தும தொருநாளே" என்றும், 650-வது பாடலில் "சாயுச்சிய கதியை ஈறற்ற சொற்சுக சொரூபத்தை யுற்றடைவேனே" என்றும் வரும் குறிப்புக்கள் இக் கதைக்குச் சான்றுகளாகக் கூறப்படுகின்றன. இப்பாடல்களை ஊன்றி நோக்கினால் இவற்றில் வரும் சுகம் என்ற சொல்லுக்குக் கிளியென்று பொருள் கூறுபவன் நிரக்ஷரகுக்ஷியாகவே யிருத்தல் வேண்டுமென்பது புலனாகும். இக் கிளி கந்தரநுபூதி, கந்தரலங்காரம், திருவகுப்பு ஆகிய மூன்று நூல்களையும் பாடியதாகக் கூறப்படுகின்றது. இவற்றை யாராய்ந்தால் இவை கிளியால் பாடப்பட்டிருத்தல் முடியாதென்பது நன்கு அறியப்படும்.

கந்தரநுபூதியில் 35-வது பாடலில் "விதிகாணும் உடம்பை விடா வினையேன்" என்பது அருணகிரியார் தாம் அநுபூதி பாடியது பிரமன் தந்த மானுட யாக்கையி லிருக்கும்போ தென்பதைப் புலப்படுத்தும். கூடுவிட்டுக் கூடு பாய்ந்த கிளிக்கு, வளைபட்ட கைம்மாதொடு மக்களெனுந் தளையும் (4), மட்டூர் குழல் மங்கையர் மையல் வலையும் (9), மங்கையர் கொங்கையிலே சேர்தலும் (24), இவை போன்ற பிறவுமில்லை. வளைபட்ட கை, மட்டூர் குழல், கொங்கை முதலியன கூறப்படுதலால் இவைகளில்லாத பெண் கிளியோடு இன்பம் துய்த்தலைக் குறிப்பனவாக இவற்றைக் கொண்டு சமாதானங் கூறவுமியலாது; கிளியுருவோடேயே அருணகிரியார் மானுட யாக்கையுடைய தமது மனைவி மக்களோடு வாழ்ந்தாரென்று கூறவுமியலாது; இவ் வரலாறு அவ்வாறு கூறப்படவுமில்லை. கந்தரலங்காரத்திலும் 'என்கைக் கெட்டவே, என்கை யதுவே, தொழாத கையும்' என்று 25, 64, 76-ம் பாடல்களில் வருதலால் கை யென்ற உறுப்பே யில்லாத பறவையினத்தைச் சேர்ந்த கிளி இப்பாடல்களைப் பாடியிருத்தல் கூடாமையாகும். பெறு தற்கரிய பிறவியென்று 67-வது பாடலில் வருவதும், மனித

ருடன் இணங்கிக் குணங்கெட்ட துட்டன் என்று 88-வது பாடலில் வருவதும் இதனை வலியுறுத்தும். திருவகுப்பில் "உறவுமுறை மனைவிமக வெனும் அலையில் எனதிதய உருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும் உறுபுணை" (வகு. 1) என வருவதும் இதை ஆதரிக்கும் சான்றாகும். "ஏழையின் இரட்டை வினையாய தொருடற் சிறையிராமல் விடுவித்தருள் நியாயக் காரன்" (வகு. 4) என்ற குறிப்பு அருணகிரியார் மானுட யாக்கையை நீத்த பிறகு திருவகுப்பு பாடினாரென்பதற்குச் சான்றாகக் கூறப்படுகிறது. இக் குறிப்பை இவ்வாறு கொள்வது பெருந்தவறு. ஏனைய பல சான்றுகட்கு இது முரண்பட்டிருத்தல் ஒருபாலிருக்க, இக் குறிப்புக்கு இவ்வாறு பொருள் கொள்ளவேண்டிய அவசியமில்லை. கந்தரலங்காரத்து 19-ம் பாடலில் "நிர்க்குணம் பூண்டென்னை மறந்திருந்தேன் இறந்தேவிட்ட திவ்வுடம்பே" என்றவிடத்து ஓதப்படும் அநுபவமே ஈண்டும் குறிக்கப்பட்டது எனக் கோடலே பொருந்தும். 1331-வது திருப்புகழில் "திருக்கொணாமலை தலத்தாரு கோபுர நிலைக்குள் வாயினில் கிளிப்பாடுபூதியில் வருவோனே" என்ற குறிப்பைப் பார்த்த ஒருவர் இக்கிளிக்கதையைத் தொடங்கியிருத்தல் கூடுமென்று தோன்றுகிறது.

கந்தரலங்காரத்துள் அதிகமான பாடல்களில் திருச்செங்கோடு கூறப்படுதலால், அருணகிரிநாதர் அத்தலத்திற் சென்ற காலத்து இந்நூல் முழுவதேனும் இதனுட் பல பாடல்களேனும் பாடப்பட்டிருத்தல் கூடும். பல பாடல்களுட் சிறந்த அநுபவங்களும் உபதேச மொழிகளும் ஈகையின் சிறப்பும் கூற்றனுக்கஞ்சாமை முதலிய செம்பொருள்களும் கூறப்படுதலால் இந்நூல் அருணகிரியாரது முதிர்ந்த வயதில் இயற்றப்பட்டிருத்தல் கூடும். கந்தரநுபூதியின் பாடற்றொகை ஐம்பத்தொன்றெனப் பலராலும், நாற்பத்து மூன்றெனச் சிலராலும் கூறப்படுகின்றது. உண்மையறிதற்குத் தகுந்த சான்றுகளில்லை. ஐம்பத்தொன்றாகவே வைத்துக்கொண்டு ஆராய்ந்தால் 40 பாடல்களில் அருணகிரியார் முருகவேளை முன்னிலையில் விளித்து விண்ணப்பம் செய்

கிறார். பொதுவாகப் பாசக்ஷயமும் சிறப்பாக இல்லறத்தனை நீக்கமும் இவரால் கோரப்படுகின்றன. பொருட்போக்கு நடை முதலியவற்றைக் கவனித்தால் தாம் நாடோறும் பாராயணம் செய்வதற்கென்றே இவ்வநுபூதியை இயற்றி இவர் பயன்படுத்தி வந்தாரோ என்றையுறுதல் இயல்பாகின்றது. இவ்வநுபூதியில் நாகாசலம் என்ற ஒரு தலமே குறிக்கப்பட்டுள்ளது. திருவகுப்புகள் பலவற்றுள் திருத்தணிகை கூறப்படுதலால் அருணகிரியார் திருத்தணிகையில் திருவகுப்பை இயற்றியிருத்தல் கூடும். திருவகுப்பில் சிற்றின்பக் குறிப்பில்லாமையும் இல்லறக் குறிப்பு மிகவும் அருகியிருத்தலும் நோக்கத்தக்கன. இந்நூலும் அருணகிரியாரது கடைசிக் காலத்தில் இயற்றப்பட்டதா யிருத்தல்கூடும். திருவகுப்பின் தொகை 18, 25, 32 என்று பலவாறாகக் கூறப்படுகிறது. உண்மை காணப் போதிய சான்றில்லை. மயில் விருத்தம் வேல் விருத்தம் என்பன அருணகிரியார் வாக்கல்லவென்று பலர் கூறுகின்றனர். உண்மை காண்பதற்குப் போதிய சான்றில்லை. இவ்விரண்டனுள் வேல் விருத்தத்தின் நடை முதலியன உயர்வாகக் காணப்படுகின்றன. மயில் விருத்தத்துள் ஒவ்வொரு பாடலிலும் திருத்தணிகை கூறப்படுகின்றது. "இறப்பும் வரும் எழுபிறப்பும் அற இனிதிருத்தும் என மயில்விருத்தம் மொழிவன" என்று (வகு. 7-ல்) வரும் குறிப்பு எந்த மயில் விருத்தத்தைக் கூறுகிறதென்பதைத் தெளியக் கூடவில்லை. ஏட்டுப்பிரதியிலுள்ளதாகத் திருவெழுகூற்றிருக்கை யொன்று வடக்குப்பட்டு சுப்பிரமணியப்பிள்ளையவர்கள் பதிப்பில் காணப்படுகின்றது. இதைப்பற்றியும் எவ்வித சான்றும் கிடைத்திலது. திருப்புகழுள் விநாயகர் வணக்கச் செய்யுள் ஐந்தும், பஞ்சாத்தினைப் பாடல்களைந்தும் (60, 431, 832, 1114, 1276), 'ஏறுமயிலேறி' என்ற (308) பாடலும் அருணகிரியார் வாக்கல்லவென்று கூறப்படுகின்றன. இவை பல ஏட்டுப் பிரதிகளிற் காணப்படுகின்றன. இவ்வாறே பெரிதும் ஒத்துவருகின்ற சில பாடல்களும் உள்ளன. (97, 98, 790, 797, 576, 1190.) இவைகளும் ஏடுகளிலுள்ளன. உண்மை தெளியப் போதிய சான்றுகளில்லை.

இனி, அருணகிரிநாதருடைய சமயக் கொள்கைகளை அவருடைய திருவாக்குகளிற் காணப்படும் சில குறிப்புக்களைக் கொண்டு ஆராய்வாம். 56-வது திருப்புகழில் "ஏழை நானும் பதிபசு பாசோபதேசம் பெறவேணும்" என்றும், 192-வது பாடலில் "தமியேனும் கதிபெற ஈடறுதன பதி பசு பாசமானவை கசடற வேறுவேறு செய்தருள்வாயே" என்றும் இவர் கூறுவதால் முப்பொருளுண்மையையும் அவற்றின் சேர்க்கை வகையையும் இவர் ஒப்புக்கொள்வது புலப்படும். மேலும், இவர் 10-வது திருப்புகழில் "மங்கு லின்புறு வானாய்....காலாய்....தீயாய்...நீராய்....பாராய்....... நீயாய் நானாய் மலரோனாய்...சங்கரர் தாமாய்...ஒன்றினுங் கடைதோயா...பெருமாளே" என்றும், 3-வது பாடலில் "அகரமுமாகி அதிபனுமாகி...அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி அவர்மேலாய் இகரமுமாகி எவைகளுமாகி இனிமையுமாகி வருவோனே" என்றும், 241-வது பாடலில் "நான்முகனும்....நாரணனும்....சந்த்ரசேகரனும்.... நின்றுதாழும் முதல்வ" என்றும், 1013-வது பாடலில் "நமசிவயப் பொருளானே ரசதகிரிப் பெருமாளே" என்றும், 85-வது பாடலில் "மலைமகளுமைதரு வாழ்வே மனோகர மன்றுளாடும் சிவசிவ ஹரஹர தேவா நமோநம...தினைபுன வனிதை மணாளா நமோநம திரிபுர மெரிசெய்த கோவே நமோநம" என்றும், கந்தரநுபூதியுள் 15-ம் பாட்டில் "எண்குண பஞ்சரனே" என்றும், கந்தரலங்காரத்துள் 55-வது பாட்டில் "ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு" என்றும், வேடிச்சிகாவலன் வகுப்பில் (12) "அமலனும் எனக்கரசும் அதிகுணனும் நிர்க்குணனும்....யோகப்புராதனனும்....மலமிலியும் நிஷ்களனும்....வேடிச்சி காவலனே" என்றும் கூறுவதால் முருகவேள் உலகெலாமாகி வேறாய் உடனுமாய் நிற்கும் முழுமுதற் கடவுளேயென்றும், அவனே மும்மூர்த்திகளாகவும் அவர்கட்கு மேம்பட்ட சதுர்த்தப் பொருளாகவும் நிற்பவன் என்றும், பிரணவப் பொருளும் பஞ்சாக்கரப் பொருளும் அவனே யென்றும், அவனுக்கு யோகமூர்த்தம் போகமூர்த்தம் உண்டென்றும், சகளமாகவும் நிஷ்கள

மாகவும் அவன் விளங்குபவனென்றும், மலைமகள் மணாள னாகவும் மைந்தனாகவும் வள்ளிமணாளனாகவும் தில்லையம்பலவ னாகவும் விளங்குபவன் அவனேயென்றும் இவர் ஒப்புக் கொண்டு சிவஞானசித்தியாரிற்கூறப்படும் பதிலக்கணத்தை யும், " தனக்குத்தானே மகனாகிய தத்துவன்" எனத் தணி கைப் புராணமும் (வீராட்டகாசப் படலம் 118) " ஆதலின் நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும் பேதக மன்று" எனக் கந்தபுராணமும் கூறும் உண்மையையும் தெளிவாக விளக்குகிறாரென்பதை நன்குணரலாம். சிவசத்தியை ஆல முண்டவளென்று 216, 1216-ம் பாடல்களிலும், திரிபுரதகனி யென்று 400-வது பாடலிலும் இவர் கூறுவதால் சிவமும் சத்தியும் பிரிப்பின்றி நிற்கும் தன்மையை இவர் விளக்குவ தாயிற்று. மேலும் 310-வது பாடலில் " ஆணவ மாயை கரும மலங்கள் போயுபதேச குருபர சம்ப்ரதாய மொடேயு நெறியது பெறுவேனோ" என்பதால் மும்மலங்களையும், 89-வது பாடலில் திரோதமலத்தையும், "ஆறுஆறையும் நீத்த தன்மேல் நிலையைப் பேசா அடியேன் பெறுமாறுளதோ" என்று கந்தரநுபூதி 47-ம் பாடலிற் கூறுவதால் தத்துவங் கள் முப்பத்தாறு என்பதையும் அவற்றைக் கடந்த நிலையே அடைய வேண்டிய பேறென்பதையும், 31, 151, 315, 955 முதலிய பல பாடல்களிலுள்ள குறிப்புக்களால் தத்துவ தாத்துவிகத் தொகை தொண்ணூற்றாறென்பதையும் இவர் ஒப்புக் கொள்வது நன்கு அறியப்படும். 271-வது பாடலில் " நானுமொடுங்க நானாவணங்க நானாமகிழ்ந்து உனையோத நானாரிரங்க நானுருணங்க நானா நடந்து விழநானா தானே புணர்ந்து தானே அறிந்து தானே மகிழ்ந்து அருளூறி.... தானே இருந்த....பெருமாளே " என்றிவர் கூறுவதிலிருந்து உயிரின் சுதந்தரமின்மை, எல்லாம் இறைவன் செயல் என் பவை அறியப்படும். சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு பாதங்களின் உண்மையை இவர் 650, 651 முதலிய பல பாடல்களில் ஒப்புக்கொள்கிறார். 89, 510, 709, 739, 972, 991, 1013 முதலிய பல பாடல்களிலுள்ள குறிப்புக் களால் இவருக்கு ஐந்தெழுத்திலுள்ள பெரும்பற்று இனிது

விளங்கும். 324, 488 முதலிய பாடல்கள் இவருக்குப் பிரணவத்திலுள்ள பற்றை விளக்குகின்றன. 745-வது பாடலில் "இருமை ஒருமையில் பெருமையை வெளிபட மொழிவாயே" என்று இவர் கூறுவது அத்வைதம் என்ற சொல்லுக்குத் 'தாடலை' எனுமொழியை உவமித்துப் பொருள் கூறும் சுத்தாத்துவித சைவசித்தாந்தக்கொள்கையே இவருக் குடன்பாடென்பதை விளக்கும். 699-வது பாடலில் "அடியேனும் அறிவுளறியும் அறிவூற அருள்வாயே" என்றும், 706-வது பாடலில் "அறிவை அறிவாலறிந்து நிறைவாகி" என்றும், 528-வது பாடலில் "அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே" என்றும் கூறி, சிவஞான சித்தியாரில் எட்டாவது சூத்திரத்து "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே அறிவுதனை யருளினா லறியாதே யறிந்து" என்ற 30-வது பாட்டின் கருத்தை இவர் விளக்கியுள்ளது பெரிதும் மகிழற்பாலது. "பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர் விருத்தப்பாதி போதும்" என்று புகழப்படும் இச்சித்தியார் விருத்தக் கருத்தை இவர் கூறுவதைத் தாயுமானவரும் போற்றியுள்ளார் (கூடுஅ-ம் பக்கம் பார்க்க). பன்னிரண்டாம் சூத்திரத்துட் கூறப்படும் அடியாரிணக்கத்தை இவர் 364, 419, 453, 651, 691, 1289 முதலிய பல பாடல்களிற் கூறியுள்ளார். கந்தரலங்காரத்து 31-வது பாடலில் "பொக்கக்குடிலிற் புகுதாவகைப் புண்டரீகத்தினுஞ் செக்கச் சிவந்த கழல் வீடு தந்தருள்" என்று இவர் சைவ சித்தாந்த முத்தியாகிய திருவடிப் பேற்றை வேண்டுவது நோக்கத்தக்கது.

மேற்கூறிய குறிப்புக்களெல்லாம் சைவசித்தாந்தத்துட் கூறப்படும் முக்கியமான கொள்கைகளாகும். இவை போன்ற வேறு பற்பல குறிப்புக்களும் அருணகிரியார் திருவாக்கிற் காணப்படுகின்றன. இவைகளை யெல்லாம் காய்தல் உவத்தலின்றிக் கருதினால் அருணகிரிநாதர் முருகவேளாகிய அறுமுகச் சிவத்தையே முழுமுதற் கடவுளாகக் கொண்ட அழுத்தந்திருத்தமான சைவசித்தாந்தி யென்பதை எவரும் மறுக்க இயலாது. வைணவம் முதலிய புறச்சமயங்களிடத்தில்

விரோதபாவனையில்லாத பரந்த சமரச நோக்கம் இவருக்குண்டென்பது இவர் நூற்றுக்கணக்கான பாடல்களில் இராமாயண பாகவத பாரதச் செய்திகளை மிக விரிவாகக் கூறுவதாலும் வேறு பல சான்றுகளாலும் இனிது விளங்கும்.

இவருடைய கவித்திறமை, பதசாதுர்யம், சந்தப்பா வன்மை முதலியவற்றைப் புகழாதவர்களில்லை. பல வரலாறுகளை விரிவாகக் கூறிச், சாதாரண வழக்கிலுள்ள பல சொற்களை மிகுதியாக ஆண்டு, மனதைக் கவரும் நயமான சந்தங்களை யமைத்துப் பாடியுள்ளதால், இவர் பாடல்கள் குறைந்த கல்வியுடைய மக்களாலும் விரும்பிப் பாடப்படுகின்றன. தமது குறைகளை அடிக்கடி இவர் கூறுவதும் இவர் பாடல்களில் சிறந்த ஆர்வத்தை யுண்டாக்குகிறது. உயர்ந்த சாத்திரக் கருத்துக்களை யெல்லாம் எளியமுறையில் இனிய சந்தத்திலமைத்து இவர் கூறுவது சிறந்த கல்வி கேள்வியுடைய பெரியார்க்கு எல்லையில்லதோர் மகிழ்ச்சியை விளைவிக்கிறது. "காட்டிகாட்டி, காரகார, நமோநம, பெருமாள்காண்", என்று அடுக்கடுக்காக வரும் பாடல்கள், பாட்டுக்குள் பாட்டு செருகப் பெற்றுள்ள (334, 409, 750, 860) பாடல்கள், வழியெதுகை யமைந்துள்ள பாடல்கள் முதலியனவும் பிறவும் இவருடைய பேராற்றலை விளக்கும். விரிவஞ்சி இவற்றை யெல்லாம் விளக்காது விடுத்தாம்.

"வாக்கிற் கருணகிரி வாதவூ ரர்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனுர்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்"

என்ற பாடலில் இவர் வாக்கின் பெருமை புகழப்படுவது நோக்கத்தக்கது.

இவ்வாராய்ச்சியிற்கண்டமுடிபைத் திருவண்ணமலையில் உயர்ந்த குலத்தில் உதித்த அருணகிரிநாதர் இல்லறம் நடாத்திக் கன்ம வசத்தால் விலைமாதர் உறவுகொண்டு பிணியெய்தி

வறுமையுற்றுத் தற்கொலைபுரிய முயற்சித்து முருகவேளால் தடுத்தாட்கொள்ளப் பெற்றுப் பல வகையான உபதேசங்களையும் அநுக்கிரகங்களையும் அக்கடவுள் வாயிலாகவே பெற்றுத் திருப்புகழ் முதலிய அருள்வாக்குக்களால் துதித்துப் பல தலங்கள் சென்று சுத்தாத்துவித சைவ சித்தாந்தத்திற் கூறப்படும் பதிப்பொருளாகவே அக்கடவுளைக்கண்டு வணங்கிப் பல அற்புதங்களியற்றி இல்லறத்திலிருந்தே சிவசாயுச்சிய பதவி யடைந்தனர் என்று சுருக்கமாகக் கூறலாம்.

"சும்மா இருவெனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த—எம்மான்
அருணகிரி நாதன் அநுபவநா யேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு"

—திருப்போரூர்ச் சந்நிதிமுறை

அருணகிரிநாதர் அழகிய திருவடி போற்றி



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# உள்ளுறை

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# தலக்குறிப்பட்டவணை

[இது, பாம்பன் : ஸ்ரீமத் - குமாரகுருதாச சுவாமிகள் சீடருள் ஒருவராகிய சைவத்திருவாளர் - மா. துரைசாமி முதலியார் அவர்களால் தொகுக்கப் பெற்றது.]

## கந்தரலங்காரம்



## கந்தரந்தாதி

## கந்தரநுபூதி



## திருவகுப்பு



## திருப்புகழ்

E

---

[குறிப்பு :—ஏனைய பதிப்பாளர்கள் கொண்டுள்ள முறையையொட்டித், தெளிவான சான்றுகளில்லாவிடினும்,இவ்வட்டவணையில் கீழ்வருமாறு தலங்கள் கொள்ளப்பட்டுள்ளன. அறிஞர்கள் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்து இவைகளுள் பொருந்தாதனவற்றைத் தெரிவித்தல் உலகோபகாரமாகும். ஆனைப்புரம், கயப்பதி, கரிவனம், காவை என்பன திருவானைக்காவைக் குறிக்கும். இந்தம்பலம் என்பது விளங்காத தலம் என்று ஏனைய பதிப்புகள் கூறுகின்றன. இந்த அம்பலம்

என்று தில்லை மன்றினை முன்னிலைப்படுத்திக் கூறுவதாகவே இக் குறிப்பைக் கொள்ளுதல் நலமெனத் தோன்றுகிறது. உயர்கரை என்பது செந்தில் எனக் கூறப்படுகிறது. உரகசிகரி, உரக வெற்பு, கட்செவி வெற்பு, காளக்கிரி, சர்ப்பகிரி, சர்ப்ப கோத்ரம், நாககிரி, நாகமலை, பணிமலை என்ற சொற்கள் திருச்செங்கோட்டைக் குறிப் பனவாகக் கொள்ளப்படுகின்றன. இவை சேஷாசலம் என்று வழங்கப் படும் திருவேங்கடத்தையும் குறித்தல்கூடும். உற்பலசயிலம், குவளைச் சிகரி, குவளைபூக்கிற கிரி, நீலவெற்பு என்பன திருத்தணிகையைக் குறிக்கும். கனகபத்மபுரி என்பது பொற்றாமரையூர் என்றாகி மதுரை யைக் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. காஞ்சிரங்குடி என்பது எட்டிகுடி (காஞ்சிரங்காய்=எட்டிக்காய்) என்று கருதப்படுகிறது. குன்றநகர், குன்றை என்பன குன்றக்குடியைக் குறிப்பதாகக் கூறப் படுகின்றன. திருப்பரங்குன்றத்தையேனும் தொண்டை நாட்டுக் குன்றத்தூரிலுள்ள முருகர் மலைக்கோயிலையேனும் இவை குறித்தலும் கூடும். குருகிரி, குருமலை, குருவெற்பு, வியாழகோத்ரம் என்பன முருகன் குருவாய் நின்ற திருவேரகத்தைக் குறிப்பனவாகக் கொள் ளப்படுகின்றன. திருநெல்வேலி ஜில்லாவில் குருமலை என்றொரு தல மிருப்பதாகக் கூறப்படுகின்றது. குலகிரி, குலமலை என்பன பழமுதிர் சோலைக்குக் கொள்ளப்பட்டுள்ளன. கெர்ப்பபுரம், வஞ்சி என்ற சொற்கள் திரிசிராப்பள்ளி ஜில்லாவிலுள்ள கருவூரைக் குறிப்பன வாகக் கொள்ளப்படுகின்றன. வஞ்சி என்பது சேரநாட்டில் மேல் சமுத்திரக் கரையிலுள்ள ஒரூர் என்ற ஆராய்ச்சி நினைவு கூர்தற்குரி யது. கோவை என்பது திருக்கோவலூர் எனப்படுகின்றது. கோவல் என்றே இது வழங்கப்படுவது. கோவன்புத்தூர் (கோயமுத்தூர்) என் பது கோவையென்று இன்றும் வழங்கப்படுகின்றது. சிவகிரி, சிவ மலை, சிவவெற்பு என்பன பழநியைக் குறிக்கும் சொற்களென்பது 420, 1008-ம் திருப்புகழ்ப் பாடல்களால் நன்கு புலப்படும். ஞான மலை யென்பது இடம் விளங்காத மலையென்று ஒரு பதிப்பு கூறுகின்றது. சிவகிரியைப் பழநி யென்று மேற்கூறிய சான்றுகள் கொண்டு தீர்மானித்தல் போல 614 - வது திருப்புகழில் "பழநி

ஞான மலையில் வளர் பெருமாளே" என்று வருவதைக்கொண்டு 710, 1131-ம் பாடல்களில் வரும் ஞானமலை பழநியேயெனக் கொள்ளுதல் பொருந்தும். பொதியமலை தாமிரபருணி நதியையுடைய தால் செப்பு வெற்பு எனப்பட்டது போலும் (தாமிரம்=செப்பு). செய்ப்பதி (செய்=வயல்) வயலூர் என்று கொள்ளப்படுகின்றது. திருமலை யென்பது ஸ்ரீ சைலம் (ஸ்ரீ=திரு, சைலம்=மலை) என் றும், திருப்பதித்திருமலை யென்றும், திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள திருமலை யென்றும் கூறப்படுகிறது. மாயை என்று 663-வது பாடலி லுள்ளதைத் தலக்குறிப்பாகக் கொள்வது பொருந்தாது என்று தோன்றுகிறது. மாசிலாமணியீசர் என்று 736-வது பாடலில் வருவ தால் அப்பெயருடைய ஈசர் வதியும் ஆவடுதுறை, வடதிருமுல்லை வாயில் ஆகிய இரண்டு தலங்கட்கும் அப்பாடலைக் கொள்ளலாம். யாழ்ப்பாணயன் பட்டினம் என்பது எருக்கத்தம்புலியூ ரென்று கூறப்படுகிறது. இது ஈழ நாட்டு யாழ்ப்பாணமாகவும் இருத்தல் கூடும். வீராபுரி, வீரை என்ற தலத்தைத் தனியே ஏனைய பதிப்பாளர்கள் கொள்ளாதது வருந்தத்தக்கது. வெளாறு தராளாறு திகழ்நாடு என் பதை இரண்டாறும் கூடுகின்ற கூடலை யாற்றூரெனக் கொள்வது பொருத்தமே. வாயுவினால் பெயர்க்கப்பட்ட மேருமலைச் சிகரங்கள் மூன்றிடங்களில் விழுந்த செய்தியைச் செவ்வந்திப் புராணம்,

"முன்னர் வீழ்ந்திடு சிகரிகா ளத்தியா மொழிவர்
பின்னர் வீழ்ந்தது திரிசிரா மலையெனும் பிறங்கல்
அன்ன தின்பிற கமைந்தது கோணமா அசலம்
இன்ன மூன்றையும் தக்ஷின கயிலையென் றிசைப்பார்."

எனக் கூறுதலால் 932-ம் பாடலில் "தென்கயிலாயம்" என்று வரு வதைக் காளத்திக்கே யன்றித் திரிசிராப்பள்ளிக்கும் திருக்கோண மலைக்கும் கொள்ளுதல் பொருந்தும்.

இவ்வட்டவணையிலுள்ள தலங்களின் தற்காலப் பெயர், இவை களுக் கருகிலுள்ள ரெயில்வே ஸ்டேஷன்களின் பெயர், ஸ்டேஷன் களிலிருந்து இத்தலங்கட்குச் செல்லும் வசதிகள் முதலியவற்றை

யெல்லாம் சைவசித்தாந்த மகா சமாஜம் வெளியிட்டுள்ள தலயாத்திரைப் பட விளக்கம் என்ற பிரசுரத்திற் காணலாம். வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பதிப்பிலும் இவை தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. கந்தசாமிக் கவிராயரவர்கள் பதிப்பில் சில விடங்களில் பெரிதும் பிழைபட்ட விவரங்கள் தரப்பட்டுள்ளன. உதாரணமாகத் திருப்போரூர் என்ற தலம் ஐயன்பேட்டைக்கு வடகிழக்கு ஐந்து மைல் தொலைவிலிருப்பதாகக் குறிக்கப்பட்டுளது. இத்தலம் வண்டலூர் ஸ்டேஷனிலிருந்து 17 மைல் தொலைவிலிருக்கிறது. ஐயன்பேட்டைக்கும் இத்தலத்துக்கும் ஏறக்குறைய இருநூறு மைல்களிருக்கும்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# விஷய ஆராய்ச்சி அட்டவணை



[திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்.,
அவர்களால் தொகுக்கப்பெற்றது]

[குறிப்பு :—இவ்வட்டவணையில் முக்கியமான சில பொருள்களே தொகுக்கப்பெற்றுள்ளன. அருணகிரிநாதர் சரித்திரத்திலும் நூலாராய்ச்சியிலும் மேற்கோள்களாகக் காட்டப்பெற்றவைகள் மீண்டும் இவ்வட்டவணையில் கொடுக்கப்படவில்லை. அருணகிரிநாதர் அருணூல்களிற் காணப்படும் வாலாறுகள் தனியட்டவணை யொன்றில் கோவை செய்யப்பட்டுள்ளன. அறிஞர்கள் இவ்வட்டவணையோடு தங்கள் ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் சேர்த்துப் பெருக்கிக்கொள்ள வேண்டும். இவ்வட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் இப் பதிப்பிலுள்ளவை. அநு - கந்தரநுபூதி. அந் - கந்தாந்தாதி. அல - கந்தரலங்காரம். ம. வி - மயில் விருத்தம். வகு - திருவகுப்பு. வே. வி - வேல் விருத்தம். இவையன்றி வெறும் எண்கள் மட்டுமுள்ளவை திருப்புகழிலுள்ள குறிப்புகள்.]

## அடியவர்க்கு எமபய மில்லை

தண்டாயுதமும் திரிசூலமும் விழத்தாக்கி உன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன்...அந்தகா வந்து
பார் சற்றென் கைக்கெட்டவே ...அல. 25

பட்டிக்கடாவில் வரும்அந்தகா உனைப்பாரறிய வெட்டிப்
புறங்கண் டலாது விடேன்...சத்திவாள் என்றன்
கையதுவே ...அல. 64

*தன்னந்தனி நின்றதுதான் அறியஇன்னம் ஒருவர்க்*
*கிசைவிப் பதுவோ* ...அநு. 49

பேரானந்த நிலையில் உலக வுணர்ச்சியில்லை

*பரமானந்தம் தித்தித் தறிந்த அன்றே கரும்பும் துவர்த்*
*துச் செந்தேனும் புளித்து அறக் கைத்ததுவே* ...அல. 6

மயிலின் பெருமை

*வாகனப் பீலியின் கொத்தசைபடு கால்பட்டசைந்தது*
*மேரு அடியிட எண்திசைவரை தூள்பட்ட அத்து*
*ளின்வாரி திடர்பட்டதே* ...அல. 11

*செழுங்கலபி ஆலித்தநந்தன் பணாமுடிதாக்க அதிர்ந்*
*ததிர்ந்து, காலிற் கிடப்பன...மாயனும் சக்ராயுதமும்*
*பணிலமுமே* ...அல. 97

மயில் ஓங்கார ஸ்வரூபம்

*ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட தாடுமயி லென்ப*
*தறியேனே* ... 1290

மவுனத்தின் பயன்

*அகிலமும் அவிழ்ச்சிபெற இனிதிருக்கும் மவுனம்* ...வகு. 5

முத்தமிழ் வேதம்

*தெளிதரு முத்தமிழ் வேதத்தில் தெய்வப் பலகை*
*யின்கீழ்* ...அங். 25

முருகனது கவி கற்க; வேறு கவி கல்லற்க

*குன்றெறிந்தோன் கவிகேட்டுருகி இழியுங்கவி கற்றிடா*
*திருப்பீர்* ...அல. 56

முருகனை அருளின்றிக் காணமுடியாது

*அருள்கொண்டறியார் அறியுந்தரமோ* ...அநு. 13

முருகன் அடியார்க்கருளல்

*பண்சார நைந்து நின்றோது மன்பர் பங்காகி நின்ற*
*குமரேசா* ... 1249

## வேல் ஞான சத்தி



## ஜபமும் சக்ர பூஜையும்





சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

## திருப்புகழிற் காணப்படும்

# வரலாறுகளின் அட்டவணை



[கந்தரலங்காரம் முதலிய ஏனைய நூல்களிற் காணப் பெறும் வரலாறுக ளனைத்தும் திருப்புகழிலேயே காணப்படுவதால் ஏனைய இந் நூல்களுக்குத் தனி அட்டவணை தேவையில்லை. விரிவஞ்சி சில வரலாறுகள் விடப்பட்டுள்ளன. எண்கள் இப்பதிப்பிலுள்ள திருப்புகழ்ப் பாடல்களின் எண்களாகும். சில வரலாறுகள் பல பாடல்களிற் கூறப் பட்டிருப்பினும் சில குறிப்புக்களே தரப்பட்டுள்ளன.]

அகத்தியர் முருகரிடம் தமிழ் பெற்றது 1099. அர்ச்சுனன் கர்ணனைக் கொன்றது 535. ஆதிசேஷன் உலகங்களைச் சுமப்பது 958. இந்திரன் மலைகளின் சிறகரிந்தது 725. இந்திரன் மூங்கிலாகித் தவஞ் செய்தது 889.

**இராமாயணக் கதைகள் :—** அகலிகை சாபவிமோசனம் 549, 601. அநுமார் தோள்மீதேறி இராமர் போர் புரிந்தது 855. அநுமார் முதலியவர்கள் வரலாற்றை இராமர் அறிந்தது 415. இராமஇராவண யுத்த வர்ணனை 1237. இராமர் இராவணனுடன் ஏழு நாள் போர் புரிந்தது 712. இராவணனிடம் சூர்ப்பநகை கலகம் செய்தது 783. இராவணனை சம்ஹரித்தது 1156. இராவண னெதிரில் அநுமார் இலங்கையை எரித்தது 766. இராவணன் ஆளுகையில் சூரியன் இலங்கையில் புகாதிருந்தது 883, 994, 1090. இராவணன் கயிலைமலையைப் பெயர்த்தது 896. இராவணன் சீதையை அசோகவனத்தி லிருத்தியது 1152. இராவணன் வீணைக்கொடி கொண்டது 948. இலங்கையை இராமர் விபீஷணருக்கு அளித்தது 693, 706. எழுபது வெள்ளம் வானரசேனை பெற்றது 1066. கரதூஷணர்கள் சம்ஹாரம் 561, 1015. காகத்துக்கு ஒருகண் ஆக்கியது 992.

கிஷ்கிந்தையில் நடந்த செய்திகள் 897. குசலவர்களோடு போர்செய்தது 1005. கும்பகர்ணன் வதம் 1015. சிவதனுசை முறித்தது 128, 1198. சீதையைச் சிறை மீட்டது 78, 820. சீதையைத் தேடினது 239, 1040. சீதையை மணந்தது 128. சுக்கிரீவனுடைய உதவியைப் பெற்றது 624. சுக்கிரீவனுக்குத் தாரையைத் தந்தது 1151, 1152. சுவாகுவைக் கொன்றது 1302. சேதுபந்தனம் செய்தது 333. தாடகையைக் கொன்றது 1302. திரிசிரனைக் கொன்றது 1015. நீலியைக் கொன்றது 1302. பகனைக் கொன்றது 1302. மராமரம் ஏழையும் தொளைத்தது 561, 1312. மாரீசன் பொன் மானாக வந்தது 561. மாரீசனைக் கொன்றது 561. மாலியவானைக் கொன்றது 909. வருணன்மீது பாணம் விட்டது 453. வாலியைக் கொன்றது 561, 1152. விசுவாமித்திரர் யாகம் காத்தது 128, 839. விபீஷணர் சரணாகதி 92. விராதனைக் கொன்றது 1302.

இலக்குமி அமிர்தத்தோடு பாற்கடலிற் பிறந்தது 1200. உமாதேவி முப்பத்திரண்டு அறம் வளர்த்தது 472, 770. உமாதேவி விநாயகருக்கு மாதுளம்பழம் தந்தது 672. உருத்திரசன்மர் சங்கத்தார் கலகந் தீர்த்தது 344. கச்சியில் உமைபூசித்தது 106. கதிர்காமத்தில் வேடனுக்கும் அநுமாருக்கும் அருளியது 3, 239.

**கிருஷ்ணன் கதைகள்:**—கிருஷ்ணன் அருச்சுனனுக்குச் சாரதியானது 411, 627, 969, 1232. இடையரிடம் வளர்ந்தது 1191. உரலில் கட்டுப்பட்டு உருண்டது 958. உலக்கையை ராவிக் கடலில் விட்டது 287. உறிகளை உடைத்தது 1048. கம்ஸன் விடுத்த பசாசைக் கொன்றது 703. காளிங்கமர்த்தனம் செய்தது 927, 1196. கோபிகாஸ்திரீகளோடு லீலைகள் புரிந்தது 1240. கோபியர் புடவைகளைக் கவர்ந்தது 274. கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்தது 186, 740. சூரியனைச் சக்கிரத்தால் மறைத்தது 687, 1307. நெய் பால்தயிர் வெண்ணெய் திருடியுண்டது 1144. பாண்டவர்க்குத் தூது சென்றது 1232. பாரிஜாதத்தைப் பூமிக்குக் கொண்டு வந்தது 370. புல்லாங்குழல் ஊதிப் பசுக்களைக் கூட்டியது 1144. யசோதையிடம் அடிபட்டது 1144. விதுரனுக்கு விருந்தாளியானது 740. சகுனி கௌரவர்கட்கு உதவியது 627.

சிவகோசரியார் மறைந்து கண்ணப்பர் பூசையைக்கண்டது 1081.

**சிவபெருமான் வரலாறுகள்:—** அருச்சுனனிடம் வில்லால் அடிபட்டது 1078. ஆமை ஓடணிந்தது 1132 இராவணனுக்கு வாள் தந்தது 465. இராவணனைக் கால்விரலாலடர்த்தது 286. உமைதழுவக் குழைந்தது 385, 1245. எல்லாம் வல்ல சித்தராய்த் திருவிளையாடல் புரிந்தது 254. கங்கையைச் சடையில் தாங்கியது 81, 90. கண்ணப்பர் எச்சிலுண்டது 1081, 1253. காமனை எரித்தது 1007, 1016, 1078. கால்மாறி ஆடியது 687. காளியோடு நடனம் புரிந்தது 471, 736. சரபமாக வந்து நரசிங்கமூர்த்தியை அடக்கியது 717. சலந்தராசுரனைக் கொன்றது 940. சூரபன்மனுக்கு வரமளித்தது 479. தாருகாவனத்தில் பலியேற்றது 566. திரிபுரதகனத்தில் மூவருக்கருளியது 72, 154. திரிபுரம் எரித்தது 72, 154, 460, 655. திருமாலுக்குச் சக்கரம் தந்தது 940. திருமாலை வாகனமாகக் கொண்டது 408. நரிபரியாக்கினது 389, 684. பரவையிடம்தூது சென்றது 418, 963. பழியஞ்சிய திருவிளையாடல் புரிந்தது 806. பன்றியின் கொம்பணிந்தது 1132. பாண்டியன் கையில் அடிபெற்றது 684. பிட்டுக்கு மண் சுமந்தது 684. பிரமன் சிரம் அறுத்தது 1038. மதுரையிற் குதிரை விற்றது 126. மேருவை வில்லாக வளைத்தது 1078, 1090. யமனை உதைத்தது 726, 999. யானையை உரித்தது 386, 548. வளையல் விற்றது 361. விழியிலிருந்து முருகரைத் தோற்றுவித்தது 32, 305, 522. விஷமுண்டது 12, 765. விஷ்ணுவைப் பாகத்திற் கொண்டது 622.

சிவமுனிவர் லக்ஷ்மியாகிய மானைப் புணர்ந்தது 1273. சிறுத்தொண்டர் பிள்ளைக்கறி சமைத்துத் தந்தது 1234. சீகாழியில் இந்திரன் பூசித்தது 653.

**சுந்தரமூர்த்தி சுவாமி**கட்காகச் சிவபெருமான் பரவைநாச்சியாரிடம் தூது சென்றது 418, 963. சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு நெல் தந்தது 919. பொதிசோறு தந்தது 1087. சுந்தரமூர்த்திசுவாமிகளைச் சிவபெருமான் தடுத்தாட்கொண்டது 755, 1136. சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆவண ஓலையைக் கிழித்தது 211. சிவபெருமானைப் பித்தாவென்றது 1136. சேரமான்பெருமாளோடு கயிலைக்குச் சென்றது 871. சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலை வாயிலிருந்து பிள்ளையை வரவழைத்தது 1087.

சுவாமிமலையில் சிவபெருமானுக்கு முருகர் உபதேசித்தது 1067. சேரமான்பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளோடு கயிலை சென்று உலா பாடியது 871. திருக்கழுக்குன்றத்தில் கழுகு பூசித்தது 289.

**திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்** ஆண் பனையைப் பெண் பனையாக்கியது 775. ஆற்றிலிட்ட ஏடு எதிர்சென்றது 558, 562. எண்ணாயிரம் சமணரைக் கழுவேறச் செய்தது 502. எலும்பைப் பெண்ணாக்கியது 442. சமணரோடு வாதம்புரிந்தது 95. ஞானப்பாலுண்டது 429, 922. திருநீற்றினால் வென்றது 775. திருநீற்றைப் பரப்பியது 502. நெருப்பிலிட்ட ஏடு பச்சென்றிருந்தது 558. பாண்டியன் சுரந்தீர்த்தது 881, 1163. பாண்டியன் கூனை நிமிர்த்தியது 502, 1163. முத்துச்சிவிகை பெற்றது 455. யாழ்த்தொண்டு புரியும்படி திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கு அருளியது 46.

**திருமால்** கஜேந்திரனுக்கு மோக்ஷமளித்தது 20, 438, 1068, 1135. சிவபெருமானை அருச்சிக்கும்போது ஒரு தாமரைப்பூ குறைவாயிருக்கத் தமது கண்ணைப் பிடுங்கி அருச்சனை செய்தது 622, 940. திருமழிசையாழ்வார் பின் சென்றது 654. நரசிங்காவதாரம் எடுத்து இரணியனைக் கொன்று பிரகலாதனுக்கருள்புரிந்தது 193, 390, 721. பாற்கடல் கடைந்து அமிர்தத்தைச் சிவபத்தருக்களித்தது 646. பிரமனை உந்திக்கமலத்திருந்து தோற்றுவித்தது 562. பூவுலகத்தை உண்டது 68. மத்ஸ்யாவதாரமெடுத்து வேதங்களை மீட்டது 453. வராகாவதாரமெடுத்து பூமியை மீட்டது 1294. வாமனாவதாரமெடுத்து உலகத்தை யளந்தது 1173.

திருவானைக்காவில் சிலந்தி பந்தரிட்டது 255. திலகவதியார் புகழை வளர்த்தது 682. பஞ்சபாண்டவர் உருமாறி வாசம் செய்தது 303. பஞ்சபாண்டவர் வனவாசம் 627. பாற்கடலில் இலக்குமிமுதலியோர் உதித்தது பாற்கடல் கடைந்தது 235. பேரூரில் சிவபெருமான் பட்டிமுனிவர்க்கருளியது 1226. மனுநீதிகண்ட சோழன் தன்மகன் மீது தேர் செலுத்தியது 384. மாணிக்கவாசகர் குருந்தடியில் உபதேசம் பெற்றது 67, 684.

**முருகவேள் வரலாறுகள் :—** அகத்திய முனிவருக்குத் தமிழ் உபதேசித்தது 1084. அரி அயன் இந்திரர் முதலியோரைக் காத்

தது 827. ஆட்டுக்கடா மீதேறியது 86, 562. ஆறுதனி உருவங்கள் ஒன்றாகி ஆறுமுகம் கொண்டது 537. இரண்டு கூறாகிய சூரபன்மன் சேவலும் மயிலுமானது 11, 1123. உமையின் பாலுண்டது 59, 241. உருத்திரசன்மராகிப் பொருளிலக்கணம் ஆராய்ந்தது 344. கங்கையில் குழந்தையாக மிதந்தது 522, 824, 915. கடலில் மாமரமாகி ஒளித்த சூரனைக் கொன்றது 291, 434, 895. கடல்சுவற வேல் எறிந்தது 360. கந்தபுராணக் காப்புச் செய்யுளுக்கு இலக்கணம் கூறியது 525, 793. கார்த்திகைப் பெண்கள் அறுவர் முலைப்பால் உண்டது 365, 915. கிரௌவுஞ்சகிரியைப் பிளந்தது 465, 1269, 1272. கிழவேடம் பூண்டு வள்ளியிடம் சென்றது 106, 470. சரவணப்பாயலில் தோன்றியது 143, 365, 1091. சிங்கமுகனைக் கொன்றது 1272. சிருஷ்டித் தொழில் புரிந்தது 415. சிவபெருமானுக்கு உபதேசித்தது 528, 1170, 1242. சூரசம்ஹாரம் முடிந்ததும் உலகத்தைச் சுற்றிவந்தது 835, 1312. சூரபன்மனோடு போர்புரிந்த வர்ணனை 360, 951. சூரனைக் கொன்றவுடன் திடிக்கூத்தாடியது 748. செட்டி வேடத்தோடு வள்ளியிடம் சென்றது 361, 753. தாருகாசுரனைக் கொன்றது 601, 990, 1344. திரத்திவந்த வேடரை வென்றது 116. தெய்வயானையம்மையை மணந்தது 601, 977. தேவர்சிறை மீட்டது 737, 860. தேவலோகத்தைக் காத்தது 523, 709. நக்கீரரைப் பூதத்தினின்றும் காத்தது 1201. நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாட 'உலகமுவப்ப' என்று அடியெடுத் ததவியது 352. நாரதர் சொல்லக்கேட்டு வள்ளியை நாடிச் சென்றது 306. பஞ்சாக்கரப் பிரயோகம்செய்து சூரனோடு போர்புரிந்தது 972. பழம் பெறுதற்கு உலகை வலம் வந்தது 1008. பார்வதிதேவியாரிடம் வேல்பெற்றது 596. பிரமனிடம் பிரணவப் பொருளை வினவியது 73. பிரமனுக்குப் பிரணவப் பொருள் உரைத்தது 73, 1333. பிரமன் தலையிற் குட்டித் தண்டித்தது 1302. முட்டைப் பெயர் செப்பிப் பொய்யாமொழிப் புலவரிடம் கவி பெற்றது 953. வள்ளிக்காக மடலேறியது 1120, 1253. வள்ளி மலையில் திரிந்தது 14, 404. வள்ளியம்மை தந்த தினைமாவை யுண்டது 550. வள்ளியம்மை முன்பு அழகனாய்த் தோன்றியது 999. வள்ளியின் காலைப் பிடித்தது 992. வள்ளி

யின் கையைப் பிடித்தது 1338. வள்ளி யெதிரில் துறவியாய்த் தோன்றியது 604. வள்ளியைக் கன்னமிட்டுத் திருடியது 119. வள்ளியைத் தோளிலேற்றி ஓடியது 63. வள்ளியை வணங்கி யது 404. வள்ளியோடு சரசம் செய்தது 976. வேங்கை மரமாய் நின்றது 604, 808. வேடவுருவுடன் வள்ளியிடம் சென்றது 473, 769. வேடருக்கு அருளியது 848, 1236. வேடரை வேலாற் கொன்றது 421, 912. வேலினுல் சூரனை இரு கூறாக்கியது 1244.

**வள்ளியம்மை :—** கவண்கொண்டு கல்லெறிந்து கிளியோட்டி யது 984. சிவ முனிவர் மகளாக மான் வயிற்றிலுதித்தது 447. சுனை நீராடியது 214. தினைப்புனம் காத்தது 1125.

**விநாயகர் :—** கஜமுகாசுரனைக் கொன்றது 152, 389. சிவ பெருமான் தேரச்சினை முறித்தது 576. தந்தையை வலஞ்செய்து பழம் பெற்றது 1008. மேருவில் பாரதம் எழுதியது 511. வள்ளி முன் யானையாகத் தோன்றி அச்சுறுத்தி மணத்தை முடித்தது 576, 705, 972, 1244.

விரிஞ்சிபுரத்தில் பிரமன் பூசித்தது 882. வீரபத்திரர் தக்கன் வேள்வியில் தேவதைகட்குத் தண்டனை விதித்தது 29, 1133. வீர வாகுதேவர் சூரபன்மனிடம் தூது சென்றது 581.



சிவமயம்

# திருப்புகழிற் காணப்பெறும்
# சாதாரண வழக்கிலுள்ள
# சில சொற்கள்

அசட்டு, 1177
அத்தான், 11
அருவருப்பு, 833
இடைஞ்சல், 560
இலச்சை, 295
ஐயோஐயோ, 330
ஒருவிசை, 528
கசடன், 1195
கசுத்தி, 366
கசுமாலம், 1302
கட்டணம், 360
கண்சிமிட்டு, 670
கந்தல், 656
கப்பிய, 576
கலீர்கலீர், 330
களரி, 1194
களவாணி, 788
கறேல்கறேல், 330
கிளை (=கிளைப்பு), 1322
கிடுகிடு, 450
கிட்ட (கிடைக்க), 946
கிண்கிண், 840
கிள், 471
குபீர்குபீர், 330
குலுக்கு, 698
கெத்து, 729
கெந்துபாய், 580
கொழுகொழு, 107
கொளகொள, 519
கோமாளி, 77
சதா, 351
சபாஷ், 935
சலாம், 89
சிக்கு, 31
சிலுசிலு, 61
சீட்டு, 35
சுறீல்சுறீல், 330
செவேல்செவேல், 330
சொச்ச, 7
சோலி, 736
தத்து, 750
தலைமூச்சினை, 777
திடல்திடல், 330
துரை, 1238
தென்படாதே, 1041
தென்பு, 666
நத்திடுவேன், 304
நெறுநெறு, 450
பகீர்பகீர், 689
பசேல்பசேல், 689
பட்டிமாடு, 631
பரபரப்பு, 318
பராக்கு, 1257
பளபள, 1220
பளீர்பளீர், 330
பிரபுமார், 525
புரட்டன், 1177
புளுகு, 48
பேடி, 1095
பொலிப்பு, 548
மகராசி, 1085
மக்காத, 11
மருட்டி, 1346
மழுப்பு, 1160
மார்தட்டு, 907
மினுக்கு, 698
முண்டை, 896
முதுகைவிரிக்கும் 682
முழித்து, 1161
மூடன், 881
மூதேவி, 1052
மூளி, 95
மெச்சி, 973
மெத்த, 64
மெத்தை, 610
மொக்குதல், 800
லச்சை, 1181
லண்டி, 1240
வம்பன், 1037
வம்பி, 1240
வருத்தி (=வருவித்து) [1241
வழவழ, 107
வாறவர், 1094
விருதா, 674
வெளேல்வெளே, 330
வேணும், 296
ஜேஜெய, 889

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# இலக்கண விசேடங்கள்

அக்க அயனார் - அக்கயனார், 295
அக்னி - அக்கி, 1044
அங்கம் - அக்கம், 1044
அபராதம் விதித்தவன் - அபராத னன், 855
அமர்தலை - அமரிணை, 555
அமுதுஉததி - அமுதுததி, 43
அம்மலை - அமலை, 677
அம்மா அம்மாவென - அமாமா வென, 94
அருவருப்பு - அருவருவு, 777
அர்த்தத்துக்கு - அர்த்தக்கு,1074
அலமரும் - அலமாரும், 855
அறத்தி - அறவி, 472
அன்னத்தோடு- அனத்தோடு,112
அன்னை - அனை, 740
ஆங்காரம் - அங்காரம், 909
ஆதப அயில் - ஆதபயில், 733
ஆதாரம் - அதாரம், 1302
ஆயிரத்தெட்டு-ஆயிரவெட்டு, 174
ஆவல் - அவல், 937
இணக்கை - இணங்கை, 1204
இருஎன்று - இரொன்று, 636
இரைச்சல் - இரை, 422
ஈடேற - ஈடெற, 496
ஈடேறிட - இடேறிட, 114
உதித்தீ யென - உதித்தி யென,
உபநிடத - உபநிட, 487 [1182
உன்னைப்பற்றற்கு - உற்பற்றற்கு,
ஊசலாம் - உசலாம், 758 [729
எனஅழைத்து - எனழைத்து,666
என்றன்றலை - என்றற்றலை, 581
என்றும் - எனும், 1049

என்றும்போல் - என்றும்படி, 284
ஏத்திடார் - எத்திடார், 833
ஏத்தினார் - எத்தினார், 833
ஏற்றிடு - எற்றிடு, 1210
ஓவஇரு - ஒவிரு, 1344
கடப்பாடாம் - கடப்படாம், 826
கடிவாளம் - கடிவளம், 389
கபோதி - காபோதி, 1020
கலாபி - கலவி, 664
கன்னன்என - கனனென, 1169
காத்தஅன்னை - காத்தனை, 537
கும்பத்துக்கே - கும்பக்கே, 946
குழகஎன - குழகென, 443
குறத்தி - குறவி, 47, 1006
குறப்பாவை - குறம்பாவை, 937
குறப்பெண் - குறம்பெண், 580
கூறாய் - குறாய், 1319
கேசபாரம் - கேசபரம், 1312
கொடியவர்கள் - கொடியவாள், [525
கோணல் - கோண், 585
கோலாகல - கோலகால, 687
கோலாகலம் - கோலாலம், 871
சகோதர - சகோத்ர, 575
சதமெனநாடி - சதமெனாடி, 317
சந்தோஷம் - சந்தொடம், 748
சமரில் மாய்க்கும் - சமரை மாயும், 1189
சம்ப்ரமமுறு - சம்ப்ராமுறு, 674
சரோருக அரன் - சரோருகரன், [223
சாலம் - சலம், 856
சித்தம் . சிதம், 1319
சிநேகிதர் - சிநெகிதர், 740
சிவகாமி - சிவக்காமி, 1331

சிக்ஷாக்ஷியம் - ஷிஷாக்ஷியம், 1235
சீயும் (சீழும்) - ஷியும், 184
சீராடவெ - ஷிராடவெ, 1063
சுற்றிய - சுத்திய, 698
செங்கரன் - செக்கரன், 919
செங்கை - செக்கை, 1223 [789
சொர்க்கமீதே - சொர்க்கமுமீதே,
தன்ஷிவன் - தட்ஷிவன், 366
தண்மை - தண்பு, 274
தாளம்ஒத்த - தரளொப்பிய, 376
தவிர்க்காயோ - தவிராயோ, 774
தாய் - தாவி, 622
திதித்திடு - தித்திடு, 717
திரு - திருவை, 867
தினக்தினம் - தினத்தினம், 266
தீர்த்துஇனி - தித்தியினி, 1181
துயின்றஆதி - துயின்றுதி, 500
தூக்கம் - தூங்கம், 608
தொடை - தோடை, 55
தோத்திர - தொத்திர, 899
தோப்பண - தொப்பண, 899
தோலா - தோரா, 328
தோழமை - தோழ்மை, 666
நம்பில் - நம்பினல் - விரும்பினல்,
நயனத்தால் - நயனல், 858 [855
நாடியே - நாடிவெ, 306
நிவந்த - நிவத்த, 450
நீபம்ஆர் - நீபார், 425 [625
பங்கஜானனன் - பங்க ஜானனன்,
பதபங்கயம் - பதம்பங்கயம், 1049
பத்திமை - பதிமை, 927
பயல் - பயம், 754
பரவி - பராவி, 69
பலஅரை பலரை, 619
பதிப்பவர் - பதிபவர், 376
பனம்பழம் - பனைபழம், 1079

பின்சுற்றி - பிற்சுற்றி, 1181
புகவிட்ட - புகட்ட, 558
புரிகதார் - புரித்தார், 515
புருவத்தார் - புருவார், 1168
பூரண, புராண - புரண, 186
பெற - பெறுக, 317
பெறஅண்டர் - பெறண்டர், 636
பேரிகை - பெரிகை, 1017
பொருப்பூ - பொர்ப்பு, 342
பொற்பூ - பொற்பு, 619
போகவிட்டு - பொகட்டு, 408
போராடிவெ - பொராடிவெ, 1063
போல் - பொல், 1291
மாடகூடம் - மடகூடம், 1302
மிடறு - மிடர், 180
மீளஅழைப்ப - மீளழைப்ப, 442
முகடியும் - முகடிக்கும், 195
முகத்தார் - முகவார், 1168
மூகம் - ரூகம், 1093
முல்லை - முலை, 384
மேற்பூளி - மெற்புளி, 493
வடுப்படுத்தும் - வடுப்படும், 1269
வத்தனன் - வத்து, 654
வல்லபை - வலபை, 425
வள்ளி - வளி, 114
வணம்குயில்கள் - வணக்குயில்கள். [580
வாரும் - வரும், 1241
வாழை - வழ்ழை, 1205
விண்ணூடு - விணூடு, 246
வில்லை - விலை, 598
விழைவுமேவி - விழைமேவி, 550
விளம்பென - விளப்பென, 295
விளைப்பான் - விளைவான், 6
வீரவில் - விரவில், 554
வீழ்க்து - விழ்க்து, 754
வீருலே - விருலே, 1063

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# கந்தர் அலங்காரம்

அடல்அருணைத் திருக்கோபுரத் தேஅந்த வாயிலுக்கு
வடவருகிற்சென்று கண்டுகொண் டேன்வரு வார்தலையில்
தடபடெனப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

---

பேற்றைத் தவம்சற்றும் இல்லாத என்னைப்ர பஞ்சம்என்னும்
சேற்றைக் கழிய வழிவிட்ட வாசெஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை இதழியைத் தும்பையை அம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்க்ரு பாகரனே. க

அழித்துப் பிறக்கவொட் டாஅயில் வேலன் கவியைஅன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீர்எரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன் விடுங்கயிற்றால்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் றோகவி கற்கின்றதே. உ

தேரணி யிட்டுப் புரம்எரித் தான்மகன் செங்கையில்வேல்
கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடக நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே. ௩

ஓரவொட் டார்ஒன்றை உன்னவொட் டார்மலர் இட்டுனதாள்
சேரவொட் டார்ஐவர் செய்வதென் யான்சென்று தேவர்உய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோர்இமைப் போதினில் கொன்றவனே. ௪

திருந்தப் புவனங்கள் ஈன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி அறுவர்கொங்கை
விரும்பிக் கடல்அழக் குன்றழச் சூரழ விம்மிஅழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன்என் றோதும் குவலயமே. ரு

பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை மெய்யன் பினால்மெல்ல மெல்லவுள்ள
அரும்பும் தனிப்பர மானந்தம் தித்தித் தறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.

சளத்திற் பிணிபட்ட சட்டுக் ரியைக்குள் தவிக்கும்என் றன்
உளத்தில் ப்ரமத்தைத் தவிர்ப்பாய் அவுணர் உரத்துதிரக்
குளத்தில் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்
களத்தில் செருக்கிக் கழுதாட வேல்தொட்ட காவலனே. எ

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொர் ஆனந்தத் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுகம் ஆறுடைத் தேசிகனே. அ

தேன்என்று பாகென் றுவமிக்கொ ணாமொழித் தெய்வவள்ளி
கோன்அன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றோ
வான்அன்று கால்அன்று தீஅன்று நீர்அன்று மண்ணும்அன்று
தான்அன்று நானன் றசரீரி அன்று சரீரிஅன்றே. கூ

சொல்லுகைக் கில்லைஎன் றெல்லாம் இழந்துசும்மா இருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்ட வாஇகல் வேலன்நல்ல
கொல்லியைச்சேர்க்கின்றசொல்லியைக்கல்வரைகொவ்வைச்செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோள்அண்ணல் வல்லபமே.கo

குசைநெகி ழாவெற்றி வேலோன் அவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடஎண்
திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே. கக

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகைஎன்னும்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்

துடைபட்ட தண்ட கடாகம் உதிர்ந்த துடிபடலம்
இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே. ௧௨

ஒருவரைப் பங்கில் உடையாள் குமாரன் உடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி ஓசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் பும்கனகப்
பருவரைக் குன்றும் அதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே. ௧௩

குப்பாச வாழ்க்கையுள் கூத்தாடும் ஐவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை ஈடேற்று வாய்இரு நான்குவெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங் குலுங்கவிண் ணாரும்உய்யச்
சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே. ௧௪

தாவடி ஓட்டு மயிலிலும் தேவர் தலையிலும்என்
பாவடி ஏட்டிலும் பட்டதன் றோபடி மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்றன் சிற்றடியே. ௧௫

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோள் இருந்த படிஇருங் கோள்எழு பாரும்உய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றம் திறக்கத் துளைக்கவைவேல்
விடுங்கோன் அருள்வந்து தானே உமக்கு வெளிப்படுமே. ௧௬

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்தம் அரணாக அல்லும் பகலும்இல்லாச்
சூதான தற்ற வெளிக்கே ஒளித்துச்சும் மாஇருக்கப்
போதாய் இனிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே. ௧௭

வையில் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யில் பிளவள வேனும் பகிர்மின்கள் நுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க உதவா உடம்பின் வெறுநிழல்போல்
கையில் பொருளும் உதவாது காணும் கடைவழிக்கே. ௧௮

சொன்ன கிரௌஞ்ச கிரியூ டுருவத் துளைத்தவைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை உணர்ந்துணர்ந் தெல்லாம் ஒருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேன்இறந் தேவிட்ட திவ்வுடம்பே. ௧௯

கோழிக் கொடியன் அடிபணி யாமல் குவலயத்தே
வாழக் கருதும் மதியிலி காள்உங்கள் வல்வினைநோய்
ஊழிற் பெருவலி உண்ணவொட் டாதுங்கள் அத்தம்எல்லாம்
ஆழப் புதைத்துவைத் தால்வரு மோநும் அடிப்பிறகே. உ0

மரணப்ர மாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலும்உண் டேகிங் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர ஞானா கரசுர பாஸ்கரனே. உக

மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போல்
கைதான் இருப துடையான் தலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே. உஉ

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவ னேமற வேன்உனைநான்
ஐவர்க் கிடம்பெறக் கால்இரண் டோட்டி அதில்இரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே. உங

இன்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியில் சென்றுகல் யாண முயன்றவனே. உச

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கிஉன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாஅந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே. உசு

ஓலையுந் தூதருங் கண்டுதிண் டாடல் ஒழித்தெனக்குக்
காலையும் மாலையும் முன்னிற்கு மேகந்த வேள்மருங்கில்

சேலையுங் கட்டிய சீராவுங் கையில் சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவல் பதாகையுந் தோகையும் வாகையுமே. ௨௭

வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளஇங்ஙன் காண்பதல் லால்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதாய் அருவுரு வாகிஒன்று
போலே இருக்கும் பொருளைஎவ் வாறு புகல்வதுவே. ௨௮

கடத்தில் குறத்தி பிரான்அரு ளாற்கலங் காதசித்தத்
திடத்தில் புணையென யான்கடந் தேன்சித்ர மாதர்அல்குல்
படத்தில் கழுத்தில் பழுத்தசெவ் வாயில் பணையில்உந்தித்
தடத்தில் தனத்தில் கிடக்கும்வெங் காம சமுத்திரமே. ௨௯

பால்என் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேல்என்ப தாகத் திரிகின்ற நீசெந்தி லோன்திருக்கை
வேல்என் கிலைகொற் றமயூரம் என்கிலை வெட்சித்தண்டைக்
கால்என் கிலைமன மேஎங்ங னேமுத்தி காண்பதுவே. ௩0

பொக்கக் குடிலில் புகுதா வகைப்புண்ட ரீகத்தினுஞ்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட் டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர் வேல்தொட்ட காவலனே. ௩௧

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
துளைத்துப் புறப்பட்ட வேற்கந்த னேதுறந் தோர்உளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங்கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற என்னைஎந் நாள்வந் திரட்சிப்பையே.

முடியாப் பிறவிக் கடலில் புகார்முழு துங்கெடுக்கும்
மிடியால் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே. ௩௩

பொட்டாக வெற்பைப் பொருதகந் தாதப்பிப் போனதொன்றற்
கெட்டாத ஞான கலைதரு வாயிருங் காமவிடாய்ப்
பட்டார் உயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனங் கட்டுண்டதே. ௩௪

பத்தித் துறைஇழிந் தானந்த வாரி படிவதனால்
புத்தித் தரங்கம் தெளிவதென் றேபொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா வதிகொண்ட கொற்றவனே.

சுழித்தோடும் ஆற்றிற் பெருக்கா னதுசெல்வந் துன்பம்இன்பம்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேசுரிக் கோட்டுமுத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோடன் என்கிலை குன்றம்எட்டுங்
கிழித்தோடு வேல்என் கிலைஎங்ங னேமுத்தி கிட்டுவதே. ௯சு

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேல்மற வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டூடூ டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்ற ராவுத்தனே.

நாள்என் செயும்வினை தான்என் செயும்எனை நாடிவந்த
கோள்என் செயும்கொடுங் கூற்றென் செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

உதித்தாங் குழல்வதும் சாவதும் தீர்த்தெனை உன்னில்ஒன்றா
விதித்தாண் டருள்தருங் காலம்உண் டோவெற்பு நட்டுரக
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம் பம்பரம் பட்டுழல
மதித்தான் திருமரு காமயில் ஏறிய மாணிக்கமே. ௱௯

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்அவன்
கால்பட் டழிந்ததிங் கென்தலை மேல்அயன் கைஎழுத்தே.

பாலே அனைய மொழியார்தம் இன்பத்தைப் பற்றிஎன்றும்
மாலேகொண் டுய்யும் வகையறி யேன்மலர்த் தாள்தருவாய்
காலே மிகவுண்டு காலே இலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளும் மாலோன் மருகசெவ் வேலவனே.

நிணங்காட்டும் கொட்டிலை விட்டொரு வீடெய்தி நிற்கநிற்கும்
குணங்காட்டி ஆண்ட குருதே சிகன்நம் குறச்சிறுமான்

பணங்காட்டும் அல்குற் குருகும் குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந் திதெங்கே எனக்கிங்ஙன் வாய்த்ததுவே.

கவியால் கடல்அடைத் தோன்மரு கோனைக் கணபணக்கட்
செவியால் பணியணி கோமான் மகனைத் திறல்அரக்கர்
புவியார்ப் பெழத்தொட்ட போர்வேல் முருகனைப் போற்றிஅன்பால்
குவியாக் கரங்கள்வந் தெங்கே எனக்கிங்ஙன் கூடியவே. சரு

தோலால் சுவர்வைத்து நாலாறு காலில் சுமத்திஇரு
காலால் எழுப்பி வளைமுது கோட்டிக்கை நாற்றிநரம்
பாலார்க்கை யிட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம்பிரிந்தால்
வேலால் கிரிதொளைத் தோன்இரு தாள்அன்றி வேறில்லையே.

ஒருபூ தரும்அறி யாத்தனி வீட்டில் உரையுணர்வற்
றிருபூத வீட்டில் இராமல்என் றூன்இரு கோட்டொருகைப்
பொருபூ தரம்உரித் தேகாசம் இட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவன் நிட்டூர சூர குலாந்தகனே. சரு

நீயான ஞான விநோதந் தனைஎன்று நீஅருள்வாய்
சேயான வேல்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதர்அல்குல்
தோயா உருகிப் பருகிப் பெருகித் துவளும்இந்த
மாயா விநோத மனோதுக்க மானது மாய்வதற்கே. சசு

பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண் டேன்செயல் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனம்எற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மானந்த சாகரத்தே. சஎ

புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்தில் புகட்டிஅன்பாய்
முத்தியை வாங்க அறிகின்றி லேன்முது சூர்நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்
குத்திய காங்கேய னேவினை யேற்கென் குறித்தனையே. சஅ

சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
சாரில் கதியன்றி வேறிலை காண்தண்டு தாவடிபோய்த்
தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வம்எல்லாம்
நீரில் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே. சகூ

படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினல்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ் சூரன் நடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயில் ஏறும் இராவுத்தனே. ருo

மலைஆறு கூறெழ வேல்வாங்கி ஞனை வணங்கிஅன்பின்
நிலையான மாதவஞ் செய்குமி னோநும்மை நேடிவரும்
தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையுங்கண்டீர்
இலையா யினும்வெந்த தேதாயி னும்பகிர்ந் தேற்றவர்க்கே.

சிகராத்ரி கூறிட்ட வேலும்செஞ் சேவலும் செந்தமிழால்
பகர்ஆர்வம் ஈபணி பாசசங் க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப தீர குணதுங்கனே. ருஉ

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினல்
பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தால்
தேடிப் புதைத்துத் திருட்டில் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே. ருங

சாகைக்கும் மீண்டு பிறக்கைக்கும் அன்றித் தளர்ந்தவர்க்கொன்
றீகைக் கெனைவிதித் தாயிலை யேஇலங் காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே. ருச

ஆங்கா ரமும்அடங் கார்ஒடுங் கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பும் மறப்பும் அறார்தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ஒளிக் குள்ளே முருகன் உருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே.

கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி
இழியும் கவிகற் றிடாதிருப் பீர்எரி வாய்நரகக்
குழியும் துயரும் விடாய்ப்படக் கூற்றுவன் ஊர்க்குச்செல்லும்
வழியும் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே. ருசா

பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல சண்முக வாஎனச் சாற்றிநித்தம்

இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோம்இறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணாது மாய உடம்பிதுவே. ருஎ

நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி
முற்றாத் தனத்திற் கினிய பிரான்இக்கு முல்லையுடன்
பற்றாக் கையும்வெந்து சங்க்ராம வேளும் படவிழியால்
செற்றார்க் கினியவன் தேவேந்த்ர லோக சிகாமணியே. ருஅ

பொங்கார வேலையில் வேலைவிட் டோன்அருள் போல்உதவ
எங்கா யினும்வரும் ஏற்பவர்க் கிட்ட திடாமல்வைத்த
வங்கா ரமும்உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும்
சங்காத மோகெடு வீர்உயிர் போம்அத் தனிவழிக்கே. ருகூ

சிந்திக்கி லேன்நின்று சேவிக்கி லேன்தண்டைச் சிற்றடியை
வந்திக்கி லேன்ஒன்றும் வாழ்த்து கிலேன்மயில் வாகனனைச்
சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கி லேன்உண்மை சாதிக்கிலேன்
புந்திக்கி லேசமும் காயக்கி லேசமும் போக்குதற்கே. கூ0

வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித் தவாபஞ்ச பூதமும்அற்
றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயம்அற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்கும்அக் காட்சியதே. கூக

ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை அகிலம்உண்ட
மாலுக் கணிகலம் தண்ணந் துழாய்மயில் ஏறும்ஐயன்
காலுக் கணிகலம் வானோர் முடியும் கடம்பும்கையில்
வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே. கூஉ

பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வேல னைச்சென்று போற்றிஉய்யச்
சோதித்த மெய்அன்பு பொய்யோ அழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே எனக்கிங்ஙன் சந்தித்ததே. கூரு

பட்டிக் கடாவில் வரும்அந்த காஉனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாது விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாள்என்றன் கையதுவே. கூச

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்வெங் கூற்றன் விடுங்கயிற்றால்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டும் கராசலங்கள்
எட்டும் குலகிரி எட்டும்விட் டோடஎட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்கும் கலாப மயூரத்தனே. ௬௫

நீர்க்கு மிழிக்கு நிகர்என்பர் யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கும் இடத்தந்த மின்போலும் என்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட என்னினெங் கேனும் எழுந்திருப்பார்
வேற்கும ரற்கன் பிலாதவர் ஞானம் மிகவுநன்றே. ௬௬

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற் றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகா சலபன் னிருபுயனே. ௬௭

சாடுஞ் சமரத் தனிவேல் முருகன் சரணத்திலே
ஓடுங் கருத்தை இருத்தவல் லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்
பாடுங் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்
றாடும் பொழுது பரமாய் இருக்கும் அதீதத்திலே. ௬௮

தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி எனைத்தேற் றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை என்செய்ய லாம்சத்தி வாள்ஒன் றினால்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்ரி சூலத்தையே. ௬௯

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன் மயூரமுமே.

துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி உடம்பை ஒறுக்கில்என் னாம்சிவ யோகமெனுங்
குருத்தை அறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தில் இருத்தும்கண் டீர்முத்தி கைகண்டதே.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி

காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே. ௭௨

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும்உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும்இல் லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயந் தானே தரும்எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுக வாசொல் லொணாதிந்த ஆனந்தமே. ௭௩

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும் அவிழ்ந்தஅன்பால்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டுங் கொடியஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல் வேண்டும்என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே. ௭௪

படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காஎன் கிலைமுசி யாமல்இட்டு
மிடிக்கின் றிலைபர மானந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்சம் ஏது நமக்கினியே. ௭௫

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றம்என் குன்றெறிந்த
தாடாள னேதென் தணிகைக் குமரநின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாதகையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே. ௭௬

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் பயோதரம் சேரஎண்ணி
மால்வாங்கி ஏங்கி மயங்காமல் வெள்ளி மலைஎனவே
கால்வாங்கி நிற்கும் களிற்றான் கிழத்தி கழுத்திற்கட்டு
நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி பூங்கழல் நோக்குநெஞ்சே.

கூர்கொண்ட வேலனைப் போற்றாமல் ஏற்றங்கொண் டாடுவீர்காள்
போர்கொண்ட காலன் உமைக்கொண்டு போம்அன்று பூண்பனவும்
தார்கொண்ட மாதரும் மாளிகை யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவர் ஐயோ கெடுவீர்நும் அறிவின்மையே.

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையில் பட்டுழலும்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள் வாய்செய்ய வேல்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றில்நிற்கும்
கந்தா இளங்கும ராஅம ராவதி காவலனே. ௭௯

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தால்என்முன்னே
தோகைப் புரவியில் தோன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே. அ0

தாரா கணம்எனுந் தாய்மார் அறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பால்உண்ட பாலன் அரையில்கட்டும்
சீராவும் கையில் சிறுவாளும் வேலும்என் சிந்தையவே
வாரா தகல்அந்த காவந்த போதுயிர் வாங்குவனே. அக

தகட்டிற் சிவந்த கடம்பையும் நெஞ்சையும் தாள்இணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு ளாய்புண்ட ரீகன்அண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்டவெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டூர சூர பயங்கரனே. அஉ

தேங்கிய அண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது சூரன் தளம்தனிவேல்
வாங்கி அனுப்பிடக் குன்றங்கள் எட்டும் வழிவிட்டவே. அங

மைவருங் கண்டத்தர் மைந்தகந் தாவென்று வாழ்த்தும்இந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற கல்வியும்போய்ப்
பைவருங் கேளும் பதியும் கதறப் பழகிநிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே. அச

காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதல் மிகஎளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேர்அண்ட மூச்சைஉள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே.

வேலா யுதன்சங்கு சக்ரா யுதன்விரிஞ் சன்அறியாச்
சூலா யுதன்தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோன்அரு ளாய கவசம்உண்டென்
பாலா யுதம்வரு மோயம னோடு பகைக்கினுமே. அசு

குமரா சரணம் சரணம்என் றண்டர் குழாம்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுகம் ஆறுங்கண்ட

தமராகி வைகும் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி என்செயுமே. அஎ

வணங்கித் துதிக்க அறியா மனித ருடன் இணங்கிக்
குணங்கெட்ட துட்டனை ஈடேற்று வாய்கொடி யும்கழுகும்
பிணங்கத் துணங்கை அலகைகொண் டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலாயு தம்தொட்ட நிர்மலனே. அஅ

பங்கே ருகன்எனைப் பட்டோலை யிலிடப் பண்டுதலை
தங்காலில் இட்ட தறிந்தில னோதனி வேல்எடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரும்
எங்கோன் அறியின் இனிநான் முகனுக் கிருவிலங்கே. அகூ

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயல்பொழில் செங்கோ டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரம்கண் படைத்தில னேஅந்த நான்முகனே. கூ0

கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானம்உய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வேல னைக்கன்னிப் பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே. கூக

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக் கும்சுத்த ஞானம்எனும்
தண்டையம் புண்டரி கந்தரு வாய்சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலம் கொண்டுபண் டண்டர்அண் டங்கொண்டு மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேல்தொட்ட காவலனே.

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி ஓசைஅந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேல்எடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருஅரையில்
கிண்கிணி ஓசை பதினா லுலகமும் கேட்டதுவே. கூங

தெள்ளிய ஏனலில் கிள்ளையைக் கள்ளச் சிறுமிஎனும்
வள்ளியை வேட்டவன் தாள்வேட் டிலைசிறு வள்ளைதள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச் சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்டநெஞ்சே. கூச

யான்தான் எனும்சொல் இரண்டுங்கெட் டால்அன்றி யாவருக்கும்
தோன்றாது சத்தியம் தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன் க்ருபாகரன் கேள்வியினால்
சான்றாரு மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே. ௯௫

தடக்கொற்ற வேள்மயி லேஇடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கில் கிரிக்கப் புறத்துநின் தோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்தும் கதிர்க்கப் புறத்தும் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்தும் திசைக்கப் புறத்தும் திரிகுவையே. ௯௬

சேலில் திகழ்வயல் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தனந்தன் பணாமுடி தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலில் கிடப்பன மாணிக்க ராசியும் காசினியைப்
பாலிக்கு மாயனும் சக்ரா யுதமும் பணிலமுமே. ௯௭

கதிதனை ஒன்றையுங் காண்கின்றி லேன்கந்த வேல்முருகா
நதிதனை அன்னபொய் வாழ்வில்அன் பாய்நரம் பால்பொதிந்த
பொதிதனை யும்கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேஎன் றன்மனம் வேகின்றதே.

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன னேதுணை ஏதும்இன்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே. ௯௯

இடுதலைச் சற்றும் கருதேனைப் போதமி லேனைஅன்பால்
கெடுதல் இலாத்தொண் டரிற்கூட் டியவா கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி அறஇச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே. ௧00

நூற்பயன்

சலங்காணும் வேந்தர் தமக்கும்அஞ் சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோய்அணுகார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும் கந்தன்நன்னூல்
அலங்கார நூற்றுள் ஒருகவி தான்கற் றறிந்தவரே.

---

## சில பிரதிகளிலே அதிகமாகக் காணப்பட்ட பாக்கள்

திருவடி யும்தண்டை யும்சிலம் பும்சிலம் பூடுருவப்
பொருவடி வேலும் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்
குருவடி வாய்வந்தென் உள்ளங் குளிரக் குதிகொண்டவே.

இராப்பகல் அற்ற இடங்காட்டி யான்இருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே.

செங்கேழடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியும்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேஎன் முன்வந் தெதிர்நிற்பனே.

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் அருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே அமர சிகாமணியே.

கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையும்என்றன்
உள்ளத் துயரை ஒழித்தரு ளாய்ஒரு கோடிமுத்தம்
தெள்ளிக் கொழிக்கும் கடற்செந்தில் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயில் ஏறிய மாணிக்கமே.

சூலம் பிடித்தெம பாசம் சுழற்றித் தொடர்ந்துவரும்
காலன் தனக்கொரு காலும்அஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையும் உண்டே நமக்கொரு மெய்த்துணையே.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# கந்தர் அந்தாதி

## காப்பு

வாரணத் தானை அயனைவிண் ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென் றோன்மைந் தனைத்துவச
வாரணத் தானைத் துணைநயந் தானை வயலருணை
வாரணத் தானைத் திறைகொண்ட யானையை வாழ்த்துவனே.

### இதுவுமது

உண்ணா முலையுமை மைந்தா சரணம் பரருயிர்சேர்
உண்ணா முலையுமை மைந்தா சரணம் அருணைவெற்பாள்
உண்ணா முலையுமை மைந்தா சரணந் தனமுமொப்பில்
உண்ணா முலையுமை மைந்தா சரணஞ் சரணுனக்கே.

---

திருவாவி னன்குடி பங்காள ரெண்முது சீருரைச
திருவாவி னன்குடி வானூர் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங் குன்றுதொ றுடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண் கார்வரை செப்புமினே. க

செப்புங் கவசங் கரபா லகதெய்வ வாவியம்பு
செப்புங் கவசங் கரிமரு காவெனச் சின்னமுன்னே
செப்புங் கவசம் பெறுவார் கணுந்தெய்வ யானைதனச்
செப்புங் கவசம் புனைபுயன் பாதமென் சென்னியதே. உ

சென்னிய மோகந் தவிராமு தோகண் டிகிரிவெண்ணெய்ச்
சென்னிய மோகம் படவூ தெனத்தொனி செய்தபஞ்ச
சென்னிய மோகந் தரம்புனத் தேன்புணர் தேவைத்தெய்வச்
சென்னிய மோகம் பணிபணி யேரகத் தேமொழிக்கே. ௩

தேமொழி யத்தம் பெறவோந் தனக்கன்று சேணுலகத்
தேமொழி யத்தம் சினங்காட் டவுணரைச் சேமகரத்
தேமொழி யத்தம் புயமவர் சூடிகை சிந்தவென்ற
தேமொழி யத்தம் பதினா லுலகுமந் தித்ததொன்றே. ௪

தித்தவித் தார மணித்தரைத் தேவர் வணங்கமுன்போ
தித்தவித் தாரகை மைந்தர்செந் தூர்க்கந்தர் சிந்துரவா
தித்தவித் தார முடையா ரருள்வெள்ளந் தேக்கியன்பு
தித்தவித் தாரந் தனிவீ டுறத்துக்கச் செவ்வனலே. ௫

செவ்வந்தி நீலப் புயமுரு காபத்தர் சித்தமெய்யிற்
செவ்வந்தி நீலத்தை யுற்றருள் வாய்திங்கட் சேய்புனைந்த
செவ்வந்தி நீலத் தொருபாகர் போன்ற தினிச்சிந்தியார்
செவ்வந்தி நீலத்தி னீடுமுற் றாத திமிரமுமே. ௬

திமிரத் திமிரக் கதரங்க கோபசெவ் வேலகைவேல்
திமிரத் திமிரக் ககுலாந் தகவரைத் தேன்பெருகுந்
திமிரத் திமிரத் தனையாவி யாளுமென் சேவகனே
திமிரத் திமிரக் கனலாய சந்தன சீதளமே. ௭

சீதனங் கோடு புயங்கைகொண் டார்தந் திருமருக
சீதனங் கோடு முடியாளர் சேய்தனக் கேதுளதோ
சீதனங் கோடு னிதருமென் பார்தொழுந் தேவிபெறுஞ்
சீதனங் கோடு கொடிவேல் மயூரஞ் சிலையாசே. ௮

சிலைமத னம்படு மாறெழுஞ் சேய்மயி லுச்சிட்டவெச்
சிலைமத னம்படு சிந்துவை யிந்துவைச் செய்வதென்யான்
சிலைமத னம்படு காட்டுவர் கேளிருஞ் செங்கழுநீர்ச்
சிலைமத னம்படு தாமரை வாவி திரள்சங்கமே. ௯

திரளக் கரக்கரை வென்கண்ட வேலன் திசைமுகன்மால்
திரளக் கரக்கரை யான்பாட நாடுதல் செய்யசங்க

திரளக் கரக்கரை காண்பான்கைந் நீத்திசை வார்பணிக்க
திரளக் கரக்கரை வானீட்டு மைந்தர்புந் திக்கொக்குமே. ௧0

திக்கத்திக் கோடு படிபுடைச் சூதத் தெறிபடபத்
திக்கத்திக் கோடு கட்டக் கடறடி சேப்படைச்சத்
திக்கத்திக் கோடு துறைத்திறத் தற்ற குறக்குறச்சத்
திக்கத்திக் கோடு பறித்துக்கொ டாதி சிறைபிறப்பே. ௧௧

சிறைவர வாமையி லேறிச் சிகரி தகரவந்து
சிறைவர வாமையில் கூப்பிடத் தானவர் சேனைகொண்ட
சிறைவர வாமையில் வாங்கிதன் றேங்கழல் யாங்கழலாச்
சிறைவர வாமையி னெஞ்சுட னேநின்று தேங்குவதே. ௧௨

தேங்கா வனமும் மதகரி வேந்துடன் சேர்ந்தவிண்ணோர்
தேங்கா வனமுனை யவ்வேற் பணியெனுஞ் சேயிடமேல்
தேங்கா வனமுந் தளர்நடை யாயஞ்சல் செண்பகப்பூந்
தேங்கா வனமுங் கழுநீ ரிலஞ்சியுஞ் செந்திலுமே. ௧௩

செந்தி லகத்தலர் வாணுதல் வேடிச் சிமுகபங்க
செந்தி லகத்தலர் அண்டமென் னுநின்ற சேயசங்க
செந்தி லகத்தலர் ராசிதந் தானைச் சிறையிட்டவேற்
செந்தி லகத்தலர் தூற்றிடுங் கேடு திவாகருளே. ௧௪

திவாகர கன்ன கொடைப்பாரி யென்றுழ றீனவல்லீர்
திவாகர கன்ன புரக்குழை வல்லி செருக்குரவந்
திவாகர கன்ன சுகவா சகதிறல் வேல்கொடென்புந்
திவாகர கன்ன மறலி யிடாதுயிர்ச் சேவலுக்கே. ௧௫

சேவற் கொடியும் பனிசாந் தகனுந் திருக்கரத்துச்
சேவற் கொடியுங் கொடியகண் டாய்தினை சூழ்புனத்துச்
சேவற் கொடியுந் திவளத் தவளுந்தந் திக்களபச்
சேவற் கொடியு முடையாய் பிரியினுஞ் சேரினுமே. ௧௬

சேரிக் குவடு மொழிவிழி யாடனச் செவ்விகுறச்
சேரிக் குவடு விளைந்ததன் றேநன்று தெண்திரைநீர்
சேரிக் குவடு கடைநாளி லுஞ்சிதை வற்றசெவ்வேள்
சேரிக் குவடு புடைசூழ் புனத்திற் றினைவிளைவே. ௧௭

திணைவேத் தியன்புசெய் வேந்தன் பதாம்புயத் திற்பத்திபுந்
திணைவேத் தியமுகந் தேற்றினர் மாற்றினர் பாற்றினந்தீத்
திணைவேத் தியர்நெறி செல்லாத விந்தியத் தித்தியினத்
திணைவேத் தியங்குயிர் கூற்றுரி லாகிடுஞ் சீயுடம்பே. கஅ

சீயனம் போதி யெனவாய் புதைத்துச் செவிதாத்தோல்
சீயனம் போதி யமலையிற் றுதைத சிறுமுகிவன்
சீயனம் போதி கடைந்தான் மருகன்செப் பத்திகைத்தார்
சீயனம் போதி லரறு திருக்கென் செயக்கற்றதே. கசு

செயதுங்க பத்திரி போற்றும் பகீர திகரசெவ்வேற்
செயதுங்க பத்திரி சூடுங் குறத்தி திறத்ததண்டஞ்
செயதுங்க பத்திரி புத்திரி பாதத்தர் செல்வதென்பாற்
செயதுங்க பத்திரி யத்திரி யாதிரென் சிந்தையிலே. உ0

சிந்தா குலவ ரிசைப்பேரு மூருநஞ் சீருமென்றோர்
சிந்தா குலவ ரிடத்தணு காதரு டீமதலை
சிந்தா குலவரி மாயூர வீர செகமளப்பச்
சிந்தா குலவரி மருக சூரனைச் செற்றவனே. உக

செற்றை வரும்பழ னஞ்சோலை யிஞ்சி திகழ்வரைமேற்
செற்றை வரும்பழ நிக்கந்த தேற்றிடு நூற்றுவரைச்
செற்றை வரும்பழ நாடாள நாடிகண் சேய்விடுத்த
செற்றை வரும்பழ மாங்கூடு வேமத் தினத்தில்வந்தே. உஉ

தினகர ரக்கர தங்கெடுத் தார்குரு தேசிகர்செந்
தினகர ரக்கர மாறுடை யார்தெய்வ வாரணத்தந்
தினகர ரக்கர சத்தியின் றுகிலத் தேவர்நண்ப
தினகர ரக்கர தந்தீர்வ ரீர்வர் செகமெங்குமே. உந

செகம்புர வார்கிளை யெல்லா மருண்டு திரண்டுகொண்ட
செகம்புர வாதிங்ஙன் செய்வதென் னேமயல் செய்யவன்பு
செகம்புர வாச மெனத்துயில் வார்செப்ப பங்கபங்க
செகம்புர வாமுரல் செந்தூர வென்னத் தெளிதருமே. உச

தெளிதரு முத்தமிழ் வேதத்திற் றெய்வப் பலகையின்கீழ்த்
தெளிதரு முத்தமி ழாசித்தர் சேவித்து நின்றதென்னுள்

தெளிதரு முத்தமிழ் தெய்நகை வாசகச் செல்விதினைத்
தெளிதரு முத்தமிழ் செவ்வே ளிருப்பச் செவிகுனித்தே.

செவிக்குன்ற வாரண நல்கிசை பூட்டவன் சிந்தையம்பு
செவிக்குன்ற வாரண மஞ்சலென் றுண்டது நீண்டகன்மச்
செவிக்குன்ற வாரண வேலா யுதஞ்செற்ற துற்றனகட்
செவிக்குன்ற வாரண வள்ளிபொற் றுண்மற்றென் றேடுவதே.

தேடிக் கொடும்படை கைக்கூற் றடாதுளஞ் சேவின்மைமீண்
தேடிக் கொடும்படை கோமான் சிறைபட வேறுளபுத்
தேடிக் கொடும்படை யாவெகு நாட்டன் சிறைகளையுந்
தேடிக் கொடும்படை மின்கேள்வ னற்றுணை சிக்கெனவே.

சிக்குறத் தத்தை வழங்கா திழந்து தியங்குவர்தே
சிக்குறத் தத்தை வடிவே லெனார்சில ரன்பர்செந்தாள்
சிக்குறத் தத்தை கடிந்தேனல் காக்குஞ் சிறுமிகுறிஞ்
சிக்குறத் தத்தை யனகிலெப் போதுந் திகழ்புயனே. ௨௮

திகழு மலங்கற் கழல்பணி வார்சொற் படிசெய்யவோ
திகழு மலங்கற் பகவூர் செருத்தணி செப்பிவெண்பூ
திகழு மலங்கற் பருனாமென் னாவமண் சேணையுபா
திகழு மலங்கற் குரைத்தோ னலதில்லை தெய்வங்களே. ௨௯

தெய்வ மணம்புணர் தீகால் வெளிசெய்த தேவரைந்த
தெய்வ மணம்புண ராரிக்கு மருக செச்சையந்தார்
தெய்வ மணம்புண ருங்குழ லாளைத் தினைப்புனத்தே
தெய்வ மணம்புணர் கந்தனென் னீருங்க டீதறவே. ௩௰

தீதா வசவ னுபவிக்க மண்ணினும் விண்ணினுஞ்செந்
தீதா வசவ னியாயஞ்செய் வேதிய ரேதியங்காத்
தீதா வசவ னிமலர்செல் வாசாக் கிரவசத்த
தீதா வசவன் புறப்பா ரெனுமுத்தி சித்திக்கவே. ௩௧

சித்திக்கத் தத்துவ ருத்திர பாலக செச்சைகுறிஞ்
சித்திக்கத் தத்துவ ரத்தியின் மாவென்ற சேவகவிச்
சித்திக்கத் தத்துவர் வாய்மொழி மாதர்க் கெனுந்திணைவா
சித்திக்கத் தத்துவ ருத்தப் படாதுநற் சேதனமே. ௩௨

சேதனந் தந்துறை யென்றுமை செப்புங் குருந்துறைகாற்
சேதனந் தந்துறை யல்லிமன் வாவிச்செந் தூர்கருத
சேதனந் தந்துறை யென்றறி யார்திற நீங்கி நெஞ்சே
சேதனந் தந்துறை மற்றுமுற் றூடித் திரிகைவிட்டே. ௩௩

திரிகையி லாயிர வெல்லாழி மண்விண் டருசிரபாத்
திரிகையி லாயிர வாநந்த நாடகி சேரிமகோத்
திரிகையி லாயிர மிக்குமைந் தாசெந்தி லாயொருகால்
திரிகையி லாயிரக் கோடிசுற் றேடுந் திருத்துளமே. ௩௪

திருத்துள வாரிகல் போதுடன் சேண்மழை தூங்குஞ்சங்க
திருத்துள வாரிதி கண்டுயி லாசெயன் மாண்டசிந்தை
திருத்துள வாரன்னை செந்தூரை யன்னள் செம்மேனியென்பு
திருத்துள வார்சடை யீசர்மைந் தாவினிச் செச்சைநல்கே.

செச்சைய வாவி கலயில்வல் வாயிடைச் சேடனிற்கச்
செச்சைய வாவி பருகுஞ் சிகாவல செங்கைவெந்தீ
செச்சைய வாவி விடுகெனுஞ் செல்வநின் றூளனுகச்
செச்சைய வாவி னுயிர்வாழ் வினியலஞ் சீர்ப்பினுமே. ௩௬

சீர்க்கை வனப்பு மலர்வேங்கை யானவன் செஞ்சிலையோர்
சீர்க்கை வனப்பு னிதத்தவ வேடன் றினைவளைக்குஞ்
சீர்க்கை வனப்பு னமதுருக் காட்டிய சேய்தமிழ்நூற்
சீர்க்கை வனப்பு னிமிர்சடை யோன்மகன் சிற்றடிக்கே. ௩௭

சிற்றம் பலத்தை யரன்புகெய் தூற்றிரி சிந்தையிடுஞ்
சிற்றம் பலத்தை வரஞான தீபமிட் டார்க்குப்பரி
சிற்றம் பலத்தை யருளுஞ்செந் தூரர் பகைக்குலமாஞ்
சிற்றம் பலத்தைப் பதவரந் தோளின் தீவரமே. ௩௮

தீவர கந்தரி தாம்பகி ராருற வானசெம்பொன்
தீவர கந்தரி யாநொந்த போதினிற் செச்சையவிந்
தீவர கந்தரி சிந்துரை பாக சிவகரண
தீவர கந்த ரிபுதீ ருனதடி சேமநட்பே. ௩௯

சேமர விக்கம் படையாக வீசுப தேசமுன்னூற்
சேமர விக்கம் பலந்தரு வாய்செரு வாயவெஞ்சூர்ச்

சேமர் விக்கந் திரித்தாய் வருத்திய வன்றிறென்றல்
சேமர விக்கம் புயவாளி விண்டிரை தெண்டிரையே. ௪௦

தெண்டன் புரந்தர வக்குன்றில் வாழ்கந்த சிந்துவிலுத்
தெண்டன் புரந்தர லோகஞ் செறுதுசெற் றோய்களைவாய்
தெண்டன் புரந்தர நற்கேள் சிறுவ ரழச்செய்தெம்மைத்
தெண்டன் புரந்தர வின்படி நூக்கிய தீரகே. ௪௧

தீனந் தினத்து தரச்செல்வர் பாற்சென் றெனக்கென்பதோர்
தீனந் தினத்து முதரா னலஞ்சுடச் சேர்ந்துசுடுந்
தீனந் தினத்து ணிகளைசெங் கோட்டினன் செந்திலந்நீர்
தீனந் தினத்து தவத்துப் பிரசதஞ் செய்பவற்றே. ௪௨

செய்யசெந் தாமரை யில்லாத மாதுடன் செந்திணைசூழ்
செய்யசெந் தாமரை மாஞூர் சிலம்பிற் கலந்துறையுஞ்
செய்யசெந் தாமரை யென்னுங் குமார சிறுசதங்கைச்
செய்யசெந் தாமரை சேர்வதென் றோவினை சேய்தொலைத்தே.

சேதாம் பலதுறை வேறும் பணிகங்கை செல்வநந்தன்
சேதாம் பலதுறை யாதசிற் றூயன் றிருமருக
சேதாம் பலதுறை செவ்வாய்க் குறத்தி திறத்தழுத்திச்
சேதாம் பலதுறை யீதென் றெனக்குப தேசநல்கே. ௪௪

தேசம் புகல வயிலேயெ னச்சிறை புக்கொருகந்
தேசம் புகல வணவாரி செற்றவ னீசற்குப
தேசம் புகல திகவாச கன்சிறி தோர்கிலன்மாந்
தேசம் புகல கழுதவி மானைச் செருச்செய்வதே. ௪௫

செருக்கும் பராக வயிராவ தத்தெய்வ யானைமணஞ்
செருக்கும் பராக தனந்தோய் கடம்ப செகமதநூல்
செருக்கும் பராக மகிரு புனந்தந் தெளிவியம்பு
செருக்கும் பராகம் விடுங்கடை நாளுந் திடம்பெறவே. ௪௬

திடம்படு கத்துங் கெடீர்கன்ம லோகஞ் சிலுகுமச்சோ
திடம்படு கத்துந் திரித்தம்பு வாலியு ரத்தும்பத்துத்
திடம்படு கத்துந் தெறித்தான் மருக திருகுழும்ம
திடம்படு கத்துங் கநகங் குனித்தவன் சேயெனுமே. ௪௭

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்தசெந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவெண்ணிற்
சேயவன் புந்தி பணிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே. ச௮

சேதக மொன்று மனுதியுந் தாதையுந் தேடரியார்
சேதக மொன்றுஞ் சதங்கையங் கிண்கிணி செச்சையந்தாள்
சேதக மொன்றும் வகைபணி யாயினித் தீயவினைச்
சேதக மொன்று மறியா துழலுயிர்ச் சித்திரமே. ச௯

சித்திர மிக்க னவில்வாழ் வெனத்தெளி யுந்தவவா
சித்திர மிக்க னெறிக்கழிந் தேறகினிச் செச்சைநல்வி
சித்திர மிக்க தனக்குறத் தோகை திறத்தமுத்தி
சித்திர மிக்க வருளாய் பிறவிச் சிகையறவே. ௫0

சிகைத்தோகை மாமயில் வீரா சிலம்புஞ் சிலம்பம்புரா
சிகைத்தோகை மாமயில் வாங்கிப் பொருது திசைமுகன்வா
சிகைத்தோகை மாமயில் வானில்வைத் தோய்வெஞ் செருமகள்வா
சிகைத்தோகை மாமயில் செவ்விநக் கீரர்சொற் றித்தித்ததே.

தித்திக்குந் தொந்திக்கு நித்தம் புரியுஞ் சிவன்செவிபத்
தித்திக்குந் தொந்திக் கறமொழி பாலக தேனலைத்துத்
தித்திக்குந் தொந்திக் கிளையாய் விளையுயிர்க் குஞ்சிதைதோல்
தித்திக்குந் தொந்திப் பனவேது செய்வினைத் தீவிலங்கே.

தீவிலங் கங்கை தரித்தார் குமார திமிரமுந்நீர்
தீவிலங் கங்கை வருமான் மருக தெரிவற்றவான்
தீவிலங் கங்கை வரவா விரைக்குத் திரிந்துழலுந்
தீவிலங் கங்கை யமன்றொடு ராமற் றிதம்பெறவே. ௫௩

திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்த திதித்தித்த தேதாத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே. ௫௪

தீதோ மரணந் தவிரும் பிறப்பறுந் தீயகற்புந்
தீதோ மரணம் பரமீது தானவர் சேனை முற்றுந்

தீதோ மாணந் தனபூசு ரர்திரண் டேத்தியமுத்
தீதோ மாண மலையாளி யென்றுரை தென்னுறவே. ருரு

தென்ன வனங்கனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்
தென்ன வனங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
தென்ன வனங்கனன் னீற்றுற் றிருத்திய தென்னவின்னந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே. ருசு

தீத்தன் பாவை வெளிநீங்கிச் சேய்தொழச் செல்பதவுத்
தீத்தன் பாவை முறையிட மாங்குறை தீங்குறவே
தீத்தன் பாவை தழைக்கவிண் காவெனச் சென்னியின்மேல்
தீத்தன் பாவையில் வேலத்த னேகுரு சீலத்தனே. ருஎ

சீலங் கனமுற்ற பங்கா காசல தீரக்கநி
சீலங் கனமுற்ற முத்தூர்செந் தூர சிகண்டியஞ்சு
சீலங் கனமுற்ற வேதனை மேவித் தியங்கினஞ்சீ
சீலங் கனமுற்ற விப்பிறப் பூடினிச் சேர்ப்பதன்றே. ருஅ

சேர்ப்பது மாலய நீலோற் பலகிரித் தெய்வவள்ளி
சேர்ப்பது மாலய முற்று ரெனப்பலர் செப்பவெப்புச்
சேர்ப்பது மாலய வத்தைமன் யாக்கை சிதைவதன்முன்
சேர்ப்பது மாலய வாசவன் செப்பிய செப்பதத்தே. ருகூ

செப்பத் தமதிலை மாற்றார் கொளுமுன்னஞ் செல்வர்க்கிடச்
செப்பத் தமதிலை எங்ஙனுய் வார்தெய்வ வேழமுகன்
செப்பத் தமதிலை வாணுத னேக்கினர் சேணில்வெள்ளிச்
செப்பத் தமதிலை வென்றார் குமாரவத் திக்கரசே. சுO

திக்கர சத்தி தவன்சென்று முன்றி திகுமார்வந்
திக்கர சத்தி யிடத்தோயென் செய்வ தெனத்தருநீ
திக்கர சத்தி விதிர்த்திலை யேலெவன் செய்குவாத்
திக்கர சத்தி யலைவாய் வளர்நித் திலக்கொழுந்தே. சுக

திலமுந் தயில முநிகர வெங்குந் திகழ்தருசெந்
திலமுந் தயில முருகா வெனுதத் திநகையினித்
திலமுந் தயிலமு தத்தா லுருகிய சித்தவென்னே
திலமுந் தயில கலவினை மேவித் தியங்குவதே. சுஉ

தியங்காப் பொறியுண் டெனுந்தனுத் தீதனு மேதியையூர்
தியங்காப் பொறியுண் டவமிலி யேயென்று செப்பலுஞ்சத்
தியங்காப் பொறியுண் டயன்கைப் படாது திரவெற்புநி
தியங்காப் பொறியுண்டை பண்டுயப் போர்செய்த சேவகனே.

சேவக மன்ன மலர்க்கோமுன் னீசொலத் தெய்வவள்ளி
சேவக மன்ன வதனும் புயகிரி செற்றமுழுச்
சேவக மன்ன திருவாவி னன்குடிச் செல்வகல்விச்
சேவக மன்ன முநிக்கெங்ங னணித் திகைப்புற்றதே. சுச

திகைப்படங் கப்புயக் தந்தரு ளானென் படிங்கணிய
திகைப்படங் கத்தமை யார்செந்தி லாரென்ப டென்னனுய
திகைப்படங் கப்புகல் சேயென்பள் கன்னிகண் ணீர்தாவி
திகைப்படங் கத்தமை யாதெமை யாட்கொளுஞ் சீகரமே.

சீகர சிந்துர வுத்தவெஞ் சூர செயபுயவ
சீகர சிந்துர வல்லிசிங் கார சிவசுதசு
சீகர சிந்துர கந்தர வாகன் சிறைவிடுஞ்சு
சீகர சிந்துர மால்வினைக் குன்றைச் சிகண்டிகொண்டே. சுசு

சிகண்டிதத் தத்த மரவாரி விட்டத் திதிபுத்ரரா
சிகண்டிதத் தத்த நகபூ தரதெய்வ வள்ளிக்கொடிச்
சிகண்டிதத் தத்த மலர்மேற் குவித்திடை செப்புருவஞ்
சிகண்டிதத் தத்த கறபோ பலமென்னுஞ் சேகரனே. சுஎ

சேகர வாரண வேல்வீர வேடச் சிறுமிபத
சேகர வாரண மேவும் புயாசல தீவினையின்
சேகர வாரண வெற்பாள காளுந் த்ரியம்பகனார்
சேகர வாரண நின்கையில் வாரணஞ் சீவனென்றே. சுஅ

சீவன சத்துரு கன்பாற் பிறப்பறத் தேவருய்யச்
சீவன சத்துரு மிக்குமெய் யோன்கையிற் சேர்த்தசெவ்வேள்
சீவன சத்துருச் செய்யாள் மருகவெ னுதிடையே
சீவன சத்துரு வெய்தியெய் தாப்பழி சிந்திப்பதே. சுகூ

சிந்துர வித்தக வாரும் புகர்முகத் தெய்வவெள்ளைச்
சிந்துர வித்தக வல்லிசிங் காரசெந் தூரகுன்றஞ்
சிந்துர வித்தக முத்திக்கு மாய்நின்ற செல்வதுஞ்சா
சிந்துர வித்தக னம்போலு மிங்கிளந் திங்களுமே. ௭௰

திங்களு மாசுண மும்புனை வார்செல்வ னென்னையிரு
திங்களு மாசுண மாக்கும்ப தாம்புயன் செந்திலன்னாள்
திங்களு மாசுண மன்போல் விழியுஞ் செழுங்கரும்பும்
திங்களு மாசுண நன்றான மாற்றமுந் தீட்டினன்றே. ௭௧

தீட்டப் படாவினி யுன்னாலென் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன் யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா சலன்சிறை விட்டவன்றாள்
தீட்டப் படாவி வனையே நினைவன் றிசாமுகனே. ௭௨

திசாமுக வேதனை யன்பாற் கரன்றிங் கடங்களவ
திசாமுக வேதனை யீறிலு மீறிலர் சேறுமம்போ
திசாமுக வேதனை வென்கண்ட வேலன் றினைப்புனத்தந்
திசாமுக வேதனை நண்ணுதண் கார்வரை சேர்பவரே. ௭௩

சேரப் பொருப்பட வித்தே னிறைவன் றிரைசிறையைச்
சேரப் பொருப்பட வல்லவன் சூரைச் சிகரியுடன்
சேரப் பொருப்பட வென்றண்ட ரேத்திய சேவகன்வான்
சேரப் பொருப்பட வேணியிற் சேர்த்தவன் செய்தவமே. ௭௪

செய்தவத் தாலஞ்சு சிரெழுத் தோதிலந் தீதலருஞ்
செய்தவத் தாலஞ்சு கம்பெறச் சேயுரைக் கேற்றுருப்போய்ச்
செய்தவத் தாலஞ்சு வைக்கனி யீன்றதென் னேம்வினையே
செய்தவத் தாலஞ்சு கின்றன மும்மலச் செம்மல்கொண்டே.

செம்மலை வண்டு கடாங்க மாவென்ற திண்படைவேற்
செம்மலை வண்டு வசவார ணத்தனைச் செப்பவுன்னிச்
செம்மலை வண்டு தவந்தமிழ்ப் பாணதெண் டங்கையில்வாய்
செம்மலை வண்டு விருப்புறு மோவிது தேர்ந்துரையே. ௭௬

தேறை விடப்பணி யேறேறி முப்புரஞ் செற்றபிரான்
தேறை விடப்பணி சூராரி யென்க தெரிவைபர்பால்
தேறை விடப்பணி வாய்ப்படு மாறு செறிந்தலகைத்
தேறை விடப்பணித் தென்றேடி யென்றுந் திரிபவரே. எஎ

திரிபுரத் தப்புப் புவிதரத் தோன்றி சிலைபிடிப்பத்
திரிபுரத் தப்புத் தலைபட நாண்டொடுஞ் சேவகன்கோத்
திரிபுரத் தப்புத் திரமான் மருக திருக்கையம்போ
திரிபுரத் தப்புத் துறையா யுதவெனச் செப்புநெஞ்சே. எஅ

செப்பா ரமுதலை மன்னே திகனங் குரும்பைமுலை
செப்பா ரமுதலை கண்கா னகைமுருந் தீரிருகண்
செப்பா ரமுதலை வாவியிற் சென்ற பிரான்மருகன்
செப்பா ரமுதலை வேர்களை வான்வரைச் சீரினுக்கே. எகூ

சீராம ராம சிவசங்க ரானுந் திருமுடிக்குச்
சீராம ராம துகரத் துழாயென்பர் தெண்டிரைமேற்
சீராம ராம னிறந்திறக் கத்தொட்ட சேய்கழற்குச்
சீராம ராம னிமையோர் மகுடச் சிகாவிம்பமே. அ0

சிகாவல வன்பரி தப்பாடு செய்புஞ்செவ் வேலவிலஞ்
சிகாவல வன்பரி வூரார் மதனித் திலஞ்சலரா
சிகாவல வன்பரி யங்கங் குழல்பெற்ற தேமொழிவஞ்
சிகாவல வன்பரி யானல மன்றிலுந் தென்றலுமே. அக

தென்றலை யம்பு புனைவார் குமார திமிரமுந்நீர்த்
தென்றலை யம்புய மின்கோ மருக செழுமறைதேர்
தென்றலை யம்பு சகபூ தரவெரி சிந்திமன்றல்
தென்றலை யம்பு படுநெறி போயுயிர் தீர்க்கின்றதே. அஉ

தீரா கமல சவிகித போக மெனத்தெளிந்துந்
தீரா கமல மெனக்கரு தாதுதென் சேயவநூல்
தீரா கமல குகாம் பொறுப்ப னெனத்திருக்கண்
தீரா கமல மரவே கருகச் சிவந்தவனே. அஙு

சிவசிவ சங்கர வேலா யுததினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கர வாமயில் வீர செகந்திருக்கண்
சிவசிவ சங்கர மாவை யெனுந்திற லோய்பொறைவா
சிவசிவ சங்கர மான்பட்ட வாவொளி சேர்ந்தபின்னே. அச

சேந்த மராத்துடர் தானவர் சேனையைத் தெண்டிரைக்கண்
சேந்த மராத்துடன் கொன்றசெவ் வேல திருமுடிமேற்
சேந்த மராத்துட ரச்சூடி மைந்த திளைத்திளைத்தேன்
சேந்த மராத்துட ரின்னுரி யென்னுமிச் சேறுபுக்கே. அரு

சேறலைத் தாறலைக் கப்பா லெழுந்து செழுங்கமுகிற்
சேறலைத் தாறலைக் குஞ்செந்தி லாய்சிந்தை தீநெறியிற்
சேறலைத் தாறலைத் தீர்க்குங் குமார திரியவினைச்
சேறலைத் தாறலைக் கத்தகு மோமெய்த் திறங்கண்டுமே. அசு

திறம்பா டுவர்தண் புனத்தெய்வ மேயென்பர் சேதத்துமாந்
திறம்பா டுவர்முது நீரெனக் காய்பவர் செந்தினைமேல்
திறம்பா டுவரிதழ் கண்டுரு காநிற்பர் செப்புறச்செந்
திறம்பா டுவரி லிவர்வல் லவர்நஞ் செயல்கொள்ளவே. அஎ

செயலங்கை வானை யிறைகோயி லைச்சிவ ஞாமுதைச்
செயலங்கை வானை முனிகொண்டல் வாளியைத் தேவர்பிரான்
செயலங்கை வானை முனைவேலை யன்னவிச் சேயுறையுஞ்
செயலங்கை வானை யுகள்செந்தில் வாழ்பவள் சேல்விழியே.

சேலையி லாருந் தவன்சூல மேறச் சினத்தவன்கண்
சேலையி லாருந் திவனேறற் பவையர சிந்திரியச்
சேலையி லாரும் பாரபரி புக்குறச் சிக்கெனுமிச்
சேலையி லாருந் திறையிட் டனர்தங்கள் சித்தங்களே. அகூ

சித்தத் தாங்கத்தர் சித்தியெய் தத்திரி கின்றதென்னர்ச்
சித்தத் தாங்கத்தர் சந்ததி யேசெந்தி லாய்சலரா
சித்தத் தாங்கத்த ரக்கரைச் செற்றகந் தாதிங்களிஞ்
சித்தத் தாங்கத்தர் சேயா ரணத்தந் திகிரிஸயமே. கூ0

திகிரி வலம்புரி மாற்கரி யார்க்குப தேசஞ்சொன்ன
திகிரி வலம்புரி செய்யா ரிலஞ்கிசெந் தூர்கனதந்
திகிரி வலம்புரி வேறும் படைத்தருள் சேய்தணியில்
திகிரி வலம்புரி சூடிய வாநன்று சேடியின்றே. கூக

சேடி வணங்கு வளைத்தோ ளெனப்புணர் சேயவட
சேடி வணங்கு திருத்தணி காவல நின்செருக்காற்
சேடி வணங்கு கொடியிடை யாரையென் செப்புமுலை
சேடி வணங்கு தலைக்களி றீந்தது செல்லநில்லே. கூஉ

செல்லலை யம்பொழில் சூழ்செந்தி லானறி யாணிறைகைச்
செல்லலை யம்பொழி லெங்கணு மேற்ப வெனத்தெறித்த
செல்லலை யம்பொழி லங்கைக் கருள்திரு மானிறம்போற்
செல்லலை யம்பொழி லாகவ மாதுயிர் சேதிப்பதே. கூங

சேதிக் கனைத்து களதாக்கு நோக்கினன் செல்வசெந்திற்
சேதிக் கனைத்து நிலைபெறச் சூரங்கஞ் சீரங்கமால்
சேதிக் கனைத்து வரிதோ யயில்கொடேற் சேர்க்கவந்தாற்
சேதிக் கனைத்து வருமா மறலி திறலினையே. கூச

திறவா வனக புரிவாச னீக்கச் சிகரிநெஞ்சந்
திறவா வனச முநியைவென் றேய்தென் றிசைத்திருச்செந்
திறவா வனமயி லோயந்த காலமென் சிந்தைவைக்கத்
திறவா வனநின் றிருவான தண்டைத் திருவடியே. கூரு

திருக்கையம் போதிக ளோகஞ்ச மோகஞ்ச மோதிருமால்
திருக்கையம் போசெய்ய வேலோ விலோசனந் தென்னனங்கத்
திருக்கையம் போருகக் கைந்நீற்றின் மாற்றித்தென் னூல்சிவபத்
திருக்கையம் போக வுரைத்தோன் சிலம்பிற் சிறுமிதற்கே.

சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிதையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரணமென் னீருய்வீர் செந்திலைமேற்
சிறுமிக் குமர புரைத்துநின் றேன்சிலை வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி யான்மகன் சீறடிக்கே. கூஎ

சீரங்க ராக மறமோது திகிரி செங்கைகொண்ட
சீரங்க ராக மருகந்த தேசிக செந்திலைமேற்
சீரங்க ராக தனகிரி தோய்கந்த செந்தமிழ்நூற்
சீரங்க ராக விநோதவென் பார்க்கில்லை தீவினையே. ௯௮

தீவினை யற்ற சினந்தீ ரகத்துண்மெய்த் தீபநந்தந்
தீவினை யற்ற வநந்தா தெடுத்தனஞ் செந்திலைமேல்
தீவினை யற்ற புனமான் கொழுநன் செழுங்கனகத்
தீவினை யற்ற வடியார்க் கருள்பெருஞ் செல்வனுக்கே. ௯௯

செல்வந் திகழு மலநெஞ்ச மேயவன் தெய்வமின்னார்
செல்வந் திகழு நமதின்மை தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில் வேறினை காத்த செல்வி
செல்வந் திகழு மணவாள னல்குந் திருவடியே. ௧00



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# கந்தர் அநுபூதி

---

## காப்பு

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரஆ னைபதம் பணிவாம்.

---

ஆடும் பரிவேல் அணிசே வல்எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியா னைசகோ தரனே. க

உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவினோ தனுநீ யலையோ
எல்லா மறஎன் னையிழந் தநலம்
சொல்லாய் முருகா சுரபூ பதியே. உ

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனையாண் டவிடம்
தானோ பொருளா வதுசண் முகனே. ௩

வளைபட் டகைம்மா தொடுமக் களெனும்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ

கிளைபட் டெழுசூர் உரமுங் கிரியும்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே. ௪

மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் தும்ஒழிந் திலனே
அகமா டைமடந் தையரென் றயரும்
சகமா யையுள்நின் றுதயங் குவதே. ௫

திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தம்அரும் புமதோ
பணியா எனவள் ளிபதம் பணியும்
தணியா அதிமோ கதயா பரனே. ௬

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே. ௭

அமரும் பதிகேள் அகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே. ௮

மட்டூர் குழல்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் பரிசென் றொழிவேன்
தட்டூ டறவேல் சயிலத் தெறியும்
நிட்டூ ரநிரா குலநிர்ப் பயனே! ௯

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே. ௧௦

கூகா எனஎன் கிளைகூ டிஅழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோ கசிகா மணியே. ௧௧

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இருசொல் அறஎன் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே. ௧௨

முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே. ௧௩

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநா சியொடும் செவியாம்
ஐவாய் வழிசெல் லுமவா வினையே. ௧௪

முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகும் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவஎண் குணபஞ் சரனே. ௧௫

பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையேன் உழலத் தகுமோ
வீரா முதுசூர் படவேல் எறியும்
சூரா சுரலோ கதுரந் தரனே. ௧௬

யாமோ தியகல் வியும்எம் அறிவும்
தாமே பெறவே லவர்தந் ததனால்
பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீர் இனியே. ௧௭

உதியா மரியா உணரா மறவா
விதிமால் அறியா விமலன் புதல்வா
அதிகா அநகா அபயா அமரா
வதிகா வலசூ ரபயங் கரனே. ௧௮

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோ கியவா

அடிஅந் தமிலா அயில்வேல் அரசே
மிடியென் றொருபா விவெளிப் படினே. ௧௯

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவேள் இமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே. ௨௦

கருதா மறவா நெறிகா ணஎனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூ ரவிபா டணனே. ௨௧

காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே. ௨௨

அடியைக் குறியா தறியா மையினல்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேல் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே. ௨௩

கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வேன் அருள்சே ரவுமெண் ணுமதோ
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே. ௨௪

மெய்யே எனவெவ் வினைவாழ் வைஉகந்
தையோ அடியேன் அலையத் தகுமோ
கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய் மயிலே றியசே வகனே. ௨௫

ஆதா ரமிலேன் அருளைப் பெறவே
நீதான் ஒருசற் றுநினைந் திலையே
வேதா கமஞா னவிநோ தமனோ
தீதா சுரலோ கசிகா மணியே. ௨௬

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே அருளே
மன்னே மயிலே றியவா னவனே. ௨௭

ஆனா அமுதே அயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியஎன் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. ௨௮

இல்லே யெனுமா யையில்இட் டனைநீ
பொல்லேன் அறியா மைபொறுத் திலையே
மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே. ௨௯

செவ்வான் உருவில் திகழ்வே லவன்அன்
றொவ்வா ததென உணர்வித் ததுதான்
அவ்வா றறிவார் அறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே. ௩௦

பாழ்வாழ் வெனும்இப் படுமா யையிலே
வீழ்வாய் எனஎன் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதாம் உளவோ
வாழ்வாய் இனிநீ மயில்வா கனனே. ௩௧

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே மலைகூ றிடுவா கையனே. ௩௨

சிந்தா குலஇல் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே. ௩௩

சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குவரம் தருவாய்

சங்க்ரா மசிகா வலசண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே. ௩௪

விதிகா ணுமுடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்
மதிவாள் நுதல்வள் ளியையல் லதுபின்
துதியா விரதா சுரபூ பதியே. ௩௫

நாதா குமரா நமஎன் றரனார்
ஓதா எனவோ தியதெப் பொருள்தான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே. ௩௬

கிரிவாய் விடுவிக் ரமவேல் இறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோ டும்அகந் தையையே. ௩௭

ஆதா ளியையொன் றறியே னையறத்
தீதா ளியையாண் டதுசெப் புமதோ
கூதா ளகிரா தகுலிக் கிறைவா
வேதா ளகணம் புகழ்வே லவனே. ௩௮

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணையென் றுமுடிந் திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவசங் கரதே சிகனே. ௩௯

வினையோ டவிடுங் கதிர்வேல் மறவேன்
மனையோ டுதியங் கிமயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோ டுதிரிந் தவனே. ௪௦

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகம் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னோபதே சிகனே. ௪௧

குறியைக் குறியா துகுறித் தறியும்
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலும்
செறிவற் றுலகோ டுரைசிந் தையும்அற்
றறிவற் றறியா மையும்அற் றதுவே. ௪௨

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அநுபூ திபிறந் ததுவே.* ௪௩

சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடும் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமும் கமழும் கழலே. ௪௪

கரவா கியகல்வி யுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோ கதயா பரனே. ௪௫

எந்தா யும்எனக் கருள்தந் தையும்நீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே. ௪௬

ஆறா றையும்நீத் ததன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா உலகங் குளிர்வித் தவனே. ௪௭

அறிவொன் றறநின் றறிவார் அறிவில்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே. ௪௮

---

* சில பழைய பிரதிகளில் ௪௩ பாடல்களே உள்ளன. அருணகிரிநாதர் வாக்கு இவ்வளவே யென்பது சிலர் ஆராய்ச்சியிற் கண்ட உண்மை.

தன்னந் தனிநின் றதுதான் அறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே. ௪௯

மதிகெட் டறவா டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திரஞா னசுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே. ௫௦

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.* ௫௧

காணா விழியும் கருதா மனமும்
வீணாய் விடமுன் விதியோ விதியோ
பூணார் குறமின் புனமும் வனமும்
நாணா துநடந் திடுநா யகனே. ௫௨

ஊணே பொருளாய் உழலுற் றடியேன்
வீணே கெடமுன் விதியோ விதியோ
பூணே இமையோர் புகலே மகவான்
சேணே பெறவேல் விடுசே வகனே. ௫௩

கழுகார் அயில்வேல் கருணைக் கடலில்
முழுகார் குறுகார் முளரிக் கைக்கொண்
டொழுகார் வினையூ டுழல்வார் அவரே
அழுகார் தொழுநோய் அதிபா தகரே. ௫௪

விண்ணாள் பதமும் விரிநீர் புடைசூழ்
மண்ணாள் பதமும் மகிழேன் மகிழேன்
தண்ணார் அமுதே சயிலப் பகையே
கண்ணார் உனருள் கனியைப் பெறினே. ௫௫

* பற்பல பிரதிகளில் ௫௧ பாடல்களே காணப்படுகின்றன. ௫௨—௧௦௫ பாடல்கள் அருணகிரிநாதர் வாக்கல்லவென்பது பெரும்பான்மையோர் கொள்கை

உனையே அலதோர் பரமுண் டெனவே
நினையேன் எனையூழ் வினைநீ டுமதோ
சனையேழ் கடல்போல் வருகா ரவுணர்
முனையே தெறுசண் முகவே லவனே. ௫௬

இரவும் பகலும் துதிசெய் திருதாள்
பரவும் பரிசே பரிசா அருள்வாய்
கரவுண் டெழுசூர் களையக் கதிர்போல்
விரவும் சுடர்வேல் விடுசே வகனே. ௫௭

இலகும் துடிநே ரிடையார் விழிகூர்
அலகம் பெனவே அறியா தழிகோ
கலகம் தருசூர் கதறப் பொருதேழ்
உலகும் புகழ்பெற் றிடும்ஓ கையனே. ௫௮

மாதோ தகமா யைமயக் கவரும்
சூதோ எனமெய் துணியா எனைஇன்
றேதோ அருள்செய் வதிறைஞ் சிடுவார்
தீதோ டஅருள் சிவதே சிகனே. ௫௯

களவும் படிறும் கதமும் படுமென்
அளவும் கதிதந் தருள்சே ருமதோ
இளகும் குறமின் இருதோள் முலையும்
புளகம் பரவப் புணர்வே லவனே. ௬௦

வாழைக் கனிமா மதுரச் சுளையே
ஏழைக் கரிதென் றிடுவார் உளரோ
பாழைப் பயிர்செய் திடுசிற் பரையின்
பேழைப் பொருளா கியபே ரொளியே. ௬௧

சதிகொண் டமடந் தையர்தம் மயலில்
குதிகொண் டமனத் தனெனக் குறியேல்
மதிகொண் டநுதல் குறமங் கைகுயம்
துதிகொண் டுமணந் தருள்தூ யவனே. ௬௨

தாயே எனையாள் தனிவே லரசே
காயே பொருளாய்க் கனிகை விடுமோ

பேயே னிடைஇன் பெழவந் தெளிதாய்
நீயே பிறவா நெறிதந் ததுவே. ௬௩

சின்னம் சிறியோர் சிதைவே செயினும்
பென்னம் பெரியோர் பிழைசெய் குவரோ
கன்னம் கரியோன் மருகா கழியத்
தன்னம் தனியேன் தனைஆண் டவனே. ௬௪

துடிபட் டமடந் தையர்சூ றையிலே
குடிபட் டிடும்என் குறைகட் டறுமே
வெடிபட் டெழுசூர் கிளைவே ரொடுசென்
றடிபட் டிடவென் றமரும் பதியே. ௬௫

கல்லைய் மனமும் கணையேய் விழியும்
வில்லைய் நுதலும் பெறுமெல் லியர்வாய்ச்
சொல்லே பதமாய்த் துடிபட் டழிய
வல்லேன் அலன்யான் மயில்வா கனனே. ௬௬

கலைகற் கினும்என் கவிபா டினும்என்
நிலைகற் கினும்என் நினையுற் றுணரார்
கொலைகற் றிடும்வேல் கொடுவஞ் சகமா
மலைகட் டறவென் றிடுவா கையனே. ௬௭

சனகா தியருக் கரியாய் தமியை
எனகா ரணமா கவிரும் பினைநீ
கனகா சலவில் லிகளிக் கவரும்
அநகா அமலா அமரா பதியே. ௬௮

கல்லேன் அயலார் கவியைப் பொருளாப்
புல்லேன் அவரோ டதுபோய் யலவே
வல்லே இனிவந் தருளாய் எனில்யான்
நில்லேன் இறையும் நெடுவே லரசே. ௬௯

மஞ்சைப் பொருவார் குழலார் மயலால்
பஞ்சைப் பலதே வரையும் பரவா
நெஞ்சைப் புரிவாய் நிகழ்மா மதியின்
பிஞ்சைப் புனையும் பெருமான் மகனே. ௭0

விதிவந் தனைசெய் விமலன் கழலே
கதிஎன் றடையார் கடனா வதுவே
வதிவன் பிணியோ டழிகல் குரவும்
மதிசஞ் சலமும் மறனா தியுமே. ௭௧

எந்நே ரமும்நின் இருதாள் மலரைப்
பொன்னே எனயான் புனையப் பெறின்என்
அன்னே அமுதே அயில்வே லரசே
கொன்னே பிறவிக் குறைபெற் றிலனே. ௭௨

அருளைத் தரும்நின் அடியிற் பணியா
மருளைச் சிதையா துமயங் குறுவேன்
குருளைத் திசையிற் குறியோன் வினவும்
பொருளைத் தெளியப் புகல்தே சிகனே. ௭௩

தொண்டா கியநம் துயர்தீ ருமருந்
துண்டா கியும்என் உலைவாய் மனனே
வண்டார் குழல்வள் ளிமணந் தருளும்
தண்டார் அயில்வேல் சரணம் துதியே. ௭௪

அழியா நிலைதந் தருள்சே வலனை
விழியா துணர்வார் விவிதம் புகலார்
பழியார் புகழார் பயில்நண் பிகவார்
ஒழியா தொழிவா ருலகியா வையுமே. ௭௫

துனிநா ளும்விடா துதொடர்ந் தபவம்
இனிநான் அணுகா மைஇயம் பினனால்
பனிநாள் மதிசூ டிபணிந் துதொழும்
தனிநா யகனா கியசண் முகனே. ௭௬

ஞானம் தனிநின் றநடித் தல்விடா
மோனந் தனைஎன் றுமொழிந் திடுவாய்
ஆனந் தநடத் தனளித் தருளும்
வானம் தொழுமா மயில்வா கனனே. ௭௭

மதமுஞ் சினமும் வளருந் தனுவே
சதமென் றுணருஞ் சனனிக் கெளிதோ

கதம்உந் தியசூர் கடிவே லவநின்
பதமும் சிதமும் பரமும் பெறவே. எஅ

*ஐயா ருடலன் னியமா னனதா
றையா றையும்நீ அறிவித் தருள்வாய்
செய்யா றுமுகா திகழ்வே லரசே
அய்யா குமரா அருளா கரனே. எகூ

நவிஎன் றிடுகண் மடவார் நனிகேள்
செவிஎன் றிடில்வேள் புகழ்சென் றிலதோ
கவிஎன் றிடுநால் வளமும் கமழப்
புவிஎன் றமிருந் தொளிர்புண் ணியரே. அ0

பெரியோ ரெனினும் புலையோ ரெனினும்
சிறியோ ரெனினும் தெளிவோ ரவரே
குறியோ ரெனினும் குருவா வருவான்
நெறியோ டொழுகும் நிலைபெற் றிடினே. அக

பத்திக் கயலேன் நனிநின் பதமும்
சித்திக் கவிடேன் இதுநின் ணமதே
புத்திக் கடலே பொருப்வே லரசே
முத்திக் கனியே முனிபுங் கவனே. அஉ

பேயா கிலும்நன் றதிலும் பிறிதென்
றூயா தெனைவந் தடிமைத் தொழில்கொண்
டோயா தினிநீ உணர்வைத் தருவாய்
வாயா ரமுதே மயில்வா கனனே. அங

மிகவும் கொடியேன் விதிகுன் றிடவந்
திகமும் பரமும் தரஎன் றிசைவாய்
சுகமும் ககமும் தொடர்வேல் கொடுமுச்
சகமும் தனிகாத் தருள்சண் முகனே. அச

---

* ஐயா றுடனே யையா றையுமா
றையா றையுநீ யறிவித் திடுவா
யையா றுமுகத் தயில்வே லரசே
ஐயா குமரா அருளா கரனே. எனவும் பாடம்.

நகையன் பிலர்பால் நயவா தொழியின்
வசையுண் டெனுமவ் வழிநின் றருள்வாய்
விசையம் புகல்சூர் வெருவப் பொருதெண்
டிசையும் புகழத் திகழ்வே லவனே. ௮௫

உறுகற் பகமென் றுனையே அடைவேன்
இறுகற் பகைவற் கிதமோ துமதோ
தெறுகற் சிலைகொண் டெயில்செற் றிடுபூண்
தறுகட் செவியன் தருபுத் திரனே. ௮௬

கள்ளம் படுகண் கடையார் கடைதே
ருள்ளம் படுமென் துகளைக் களைவாய்
பள்ளம் படுநீர் எனவே பரிவின்
வெள்ளம் படுநல் வழிவே லவனே. ௮௭

வள்ளைக் குழைமங் கையர்சிங் கியிலே
கொள்ளைப் படும்என் குறைதீ ருமதோ
வெள்ளைத் தனிமால் விடையன் புகழும்
பிள்ளைப் பெருமா ளெனும்பெற் றியனே. ௮௮

வளையும் சகமா யைமயக் கில்விழுந்
துளையும் துயர்இன் னும்உணர்ந் திலேயே
அளையுண் டபிரான் மருகா அடுசூர்
களையும் சினவெங் கதிர்வே லவனே. ௮௯

பண்டே தொடர்பற் றெடுசுற் றமெனும்
வெண்டே ரைமகிழ்ந் துவிளிந் திடவோ
கண்டே குறமங் கைதனைக் களவில்
கொண்டே கடிதே கியகொற் றவனே. ௯0

பொன்னா வல்கெடப் பொழியும் புகழோர்
இன்னார் இனியார் எனஎண் ணுவரோ
துன்னார் கிளைவே ரறவே தொடும்வேல்
மன்னா பொதுவாய் மழைபெய் திடுமே. ௯௧

பொறியும் புலனும் புதிதும் முதிதும்
குறியும் குணமும் குலமும் குடியும்

நெறியும் பிறிதொன் றுமிலா நிலையான்
அறியுந் தரமோ அயில்வே லவனே. ௯௨

எங்கே நமதோ தெரியா திருநாள்
அங்கே நமதொன் றுகா தெனமுன்
சொன்னோம் மனனே தவலோ தவலோ
தன்னேர் குகனைச் சரண்என் றடையே. ௯௩

தெரியத் தெரியச் செயலுற் றிடுமோர்
துரியப் பொருளைச் சொலும்நா ளுளதோ
கரிபெற் றிடுமின் கணவா குறமின்
பரியப் பெரிதும் பணிஉத் தமனே. ௯௪

மடிமைப் படினும் மயலுற் றிடினும்
அடிமைக் குரியார் அருள்சே ருவரே
குடிமைக் கிலதோர் கொடிவெற் பனையிற்
படிமைப் புயலே பரிவாய் இனியே. ௯௫

வரிவேல் விழியார் வலைவீ சுமினார்
புரிவே தையிலே பொழுதைக் களைகோ
பரிவே டம்வலைந் ததுபோல் அவுணர்
செறுவேல் முனைமேல் எறிசே வகனே. ௯௬

நனவிற் படுநல் உலகத் தனையும்
கனவிற் பொருளாய்க் கருதா எனைநீ
வினவிக் கொளுநாள் உளதோ விதியைச்
சினவிச் சிறையிட் டருள்தே சிகனே. ௯௭

காடும் மலையும் கடலும் உருளச்
சாடும் தனிவே லுடையாய் சரணம்
ஆடும் மயில்வே லரசே சரணம்
பாடும் வரதற் பரனே சரணம். ௯௮

அணியா யம்இதென் றவரே மடவார்
துணியார் பவமும் துயரும் களைவார்
கனியார் முருகன் கழல்பெற் றிடுவார்
இனியார் இனியார் இவருக் கிணையே. ௯௯

ஆளாய் அயில்வேள் அடியிற் படிவார்
கேளார் பிறரைக் குறிசெய் தழியார்
மாளார் சமனால் மறுகார் பகையால்
மீளார் வினையால் வெருவார் அவமே. க00

உடலைச் சுமையா கழுயற் சிகெடா
நடலைத் துணிவாழ் வைநயந் திடவோ
கடலைத் துகள்செய் திடவேல் கடவும்
விடலைப் பெருமான் எனும்வித் தகனே. க0க

பிணியும் பசியும் பெருகும் துயரில்
அணியும் கழல்கட் கயலாய் விடவோ
கணியும் குரவும் கமழோ திமயல்
தணியும் படிவந் தருள்சண் முகனே. க0உ

கல்லும் கரையக் கவிபா டிஇதம்
சொல்லும் தொழிலே தொழிலாய் விடவோ
கொல்லும் தொழிலிற் கொடியோர் மடியச்
செல்லும் சுடர்வேல் செறிபா ணியனே. க0ங

முறுகும் தழல்போல் முடுகும் சமனால்
மறுகும் பொழுதும் மறவேன் மறவேன்
குறுகும் குலிசன் குலவா ரணமால்
பெறுகுஞ் சரிதோய் பெருமான் அடியே. க0ச

வாழ்வார் உறவாய் மகிழ்வார் பலரும்
தாழ்வார்க் கருள்உத் தமன்நீ யலையோ
பேழ்வாய் அரவும் பிறைவெள் ளிறகும்
சூழ்வார் சடையார் தொழுதே சிகனே. க0ரு

---

**குறிப்பு** :—பல அச்சுப் பிரதிகளிலே, கந்தாநுபூதியிலுள்ள ஒவ்வொரு பாடலின் தொடக்கத்திலும் ஒரு தலைப்பு காணப்படுகிறது. பல இடங்களில் இத்தலைப்பு, பாடலின் கருத்துக்கு ஒவ்வாததாயும், தாழ்ந்த நோக்கத்தை விளக்குவதாயும் காணப்படுகிறது. நூலாராய்ச்

சிக்குப் பயன்படக் கூடுமெனக் கருதி, அத்தலைப்புக்கள் கீழே கோவை செய்யப்பட்டுள்ளன.

1. மதயானை அநுசரிக்க. 2. வணங்காதாரைத் தண்டிக்க. 3. கல்வியின் மெச்ச. 4. துறவு பெற. 5. மாயையை ஒழிக்க. 6. மாதரைத் தழுவ. 7. தீராப்பிணி தீர. 8. குடிகளைத் தன் வசமாக்க. 9. பெண்ணாசை நீக்க. 10. எமனை விலக்க. 11. தளிகை சேர்க்க. 12. களவு வெல்ல. 13. இருள்வழி நடக்க. 14. பாத தரிசனம் செய்ய. 15. அஷ்டாவதானஞ் செய்ய. 16. பேராசை விலக்க. 17. தன்னடத்தை மேன்மையாக. 18. கற்பழியாதிருக்க. 19 இல் வாழ்க்கை நீக்க. 20. அநுக்கிரகம் பெற. 21. திருவடி வணங்க. 22. தவம் பெற. 23. சலிகை சொல்ல. 24. மாதர் வலையில் அகப் படாதிருக்க. 25. மகா வினை ஒழிக்க. 26. ஆதாரமா யிருக்க. 27. பாக்கியத்தை விதிவழி யனுபவிக்க. 28. தான் அவனாக. 29. கடவுள் முன் கோபமாற்ற. 30. வழக்குப் பேச. 31. கடவுள் முன்னிலையில் ஞானம் பெற. 32. கொலை மறுக்க. 33. வியாகுலம் ஒழிக்க. 34. பெண்களைத் தாயாக நினைக்க. 35. சரீரவாஞ்சை ஒழிக்க. 36. கடவுளைக் காண. 37. தனது அகந்தையை ஒழிக்க. 38. பிசாசம் ஒழிக்க. 39. ஜனனம் எடாதிருக்க. 40. மாயை தெளிய. 41. நித்திய தேகம் பெற. 42. நின்றநிலை நிற்க. 43. ஆசானுகி அநுக்கிரகிக்க. 44. குரு மந்திரம் பெற. 45. கல்வியில் சம்பாஷிக்க. 46. மனவருத்தந் தீர. 47. ஆனந்த நடனம் காண. 48. தற் சொரூபங் காண. 49. தன்னை அறிந்து கொள்ள. 50. அவா அறுக்க. 51. நினைத்தபடி தரிசனங் கொடுக்க. 52. சலக்கரை பெற. 53. இழந்ததைப் பெற. 54. நோய் தீர. 55. மோட்ச சாதனம் பெற. 56. உச்சாடனம் செய்ய. 57. சத்துருவைச் சங்கரிக்க. 58. புகழ் பெற. 59. உலக நடை அறிய. 60. தேர்ந்து கொள்ள. 61. தேசம் செழிக்க. 62. செங்கோல் செலுத்த. 63. செங்கோல் நடக்க. 64. நகரி சோதிக்க. 65. படை வெல்ல. 66. எதிரி மூறிய. 67. கொலை களவு வஞ்சகம் தீர. 68. அபசாரம் வாரமலிருக்க. 69. அற்பரை நீங்க. 70. மறு தெய்வந் தொழாதிருக்க. 71. விதிப் படி பணிவிடை செய்ய. 72. குருவுக்குப் பணிவிடை செய்ய. 73. குருவுக்கு விதிப்படி பணிவிடை செய்ய. 74. தொண்டராக.

75. கிருபையால் பதம்பெற, 76. தெய்வ நீதியாக. 77. ஞானம் பெற. 78. பரமார்த்தம் அடைய. 79. பஞ்ச பூதங்களை அறிய. 80. குருவாக. 81. தானே குருவாயிருக்க. 82. பக்தி செய்ய. 83. மகா தேசிகனாக. 84. கடவுள் துணையாயிருக்க. 85. கடவுளை ஏவல் கொள்ள. 86. கற்பகத் தரு பெற. 87. கவடு தீர, சுவாமி பார்வையாயிருக்க. 88. பெண்ணாசை தீர. 89. தன்னையடுத்தோன் மாயை அகல. 90. பழவினை நீக்க. 91. சகலமும் நன்றாயிருக்க. 92. சர்வமும் ஒன்றாய்க் காண. 93. அடைக்கலம் பெற. 94. பெரியோராக. 95. தடுத்தாட்கொள்ள. 96. பாசம் அண்டாமல் வேஷங் கொள்ள. 97. விதியை வெல்ல. 98. சகல பாசமும் அற. 99. இருவரும் ஒன்றாயிருக்க. 100. சிவசாயுஜ்யம் பெற. 101. சூக்கும தேகத்தால் நாதாந்த வாழ்வு பெற. 102. பிணி பசி தீர. 103. மனம் கரைய. 104. சரணம் செய்ய. 105. வாழ்த்து.

---

ஒப்புயர்வி யாண்டும் செப்பரு முக்கட்
பெம்மான் பண்டுருப் பெற்றிய னுதிதரு
பீடுசா லறுமுகப் பிள்ளை கேண்மோ
பூம்புகார் செம்மற் புதல்வனிற் புனைஅநு
பூதி நூறைந்தே யாகின்
மற்றதிற் பலரால் வரைதொறுஞ் செறீஇய
வழூஉக் களைந்தெழுதா வரியி லிடுகெனச்
சொப்பனத் திகுளைவாய்த் தூயோ னாகிச்
சொற்றதூஉ நீயே யாகின்
உற்றவா றென்னு ளுறீஇத் தெரித்தருளே.

ஆதார னாறு முகனே என்றோர்ந்த அருணகிரி
நாதா நினக்குமொர் விண்ணப்பங் காண்சுக நல்லுருக்கொண்
டோதா விடுத்த அநுபூதி நூறைந்தும் உள்ளபடி
நீதா எனக்கிந்த நீணிலத் தோர்பவம் நீந்துதற்கே.

இவ்விரு பாடல்களும் 1891-ம் ஆண்டு அச்சிடப்பெற்ற திருமழிசை முத்துச்சாமி முதலியாரவர்கள் பதிப்பிலுள்ளன. இப்பதிப்பிலும் 1918-ம் ஆண்டு திரு. ஆர். என். சுப்பிரமணிய பிள்ளையவர்கள் வெளியிட்ட பதிப்பிலும் மேற்கண்ட சுமூ பாடல்களும் உள்ளன.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
வேலுமயிலும் துணை

# மயில் விருத்தம்

காப்பு

சந்தன பாளித குங்கும புளகித சண்பக கடகபுயச்
சமர சிகாவல குமர ஷடாநந சரவண குரவணியுங்
கொந்தள பாரகி ராத புராதனி கொங்க எனப்பரவுங்
கூதள சீதள பாதமெ னக்கருள் குஞ்சரி மஞ்சரிதோய்
கந்தக்ரு பாகர கோமள கும்ப கராதிப மோகரத
கரமுக சாமர கர்ணவி சால கபோல விதானமதத்
தெந்தம கோதர மூஷிக வாகன சிந்துர பத்மமுகச்
சிவசுத கணபதி விக்னவி நாயக தெய்வ சகோதரனே.

நூல்

சந்தான புஷ்பபரி மளகிண் கிணீமுகச்
சரணயுக ளமிர்தப்ரபா
சந்த்ரசே காமூஷி காரூட வெகுமோக
சத்யப்ரி யாலிங்கனச்
சிந்தா மணிக்கலச கரகட கபோலத்ரி
யம்பக விநாயகன்முதற்
சிவனைவலம் வருமளவில் உலகடைய நொடியில்வரு
சித்ரக் கலாபமயிலாம்
மந்தா கினிப்பிரப வதரங்க விதரங்க
வனசரோ தயகிர்த்திகா
வரபுத்ர ராஜீவ பரியங்க தந்திய
வராசலன் குலிசாயுதத்
திந்த்ராணி மங்கில்ய தந்துர க்ஷாபரண
இகல்வேல் விநோதன் அருள்கூர்
இமையகிரி குமரிமகன் ஏறுநீ லக்ரீப
ரத்னக் கலாபமயிலே.

சக்ரப்ர சண்டகிரி முட்டக் கிழிந்துவெளி
படுக்ர வுஞ்சசயிலந்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
தனிவெற்பும் அம்புவியும்எண்
திக்குத் தடங்குவடும் ஒக்கக் குலுங்கவரு
சித்ரப் பதம்பெயரவே
சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
திடுக்கிட நடிக்குமயிலாம்
பக்கத்தி லொன்றுபடு பச்சைப் பசுங்கவுரி
பத்மப் பதங்கமழ்தரும்
பாகீ ரதிச்சடில யோகீ சுரர்க்குரிய
பரமவுப தேசமறிவிக்
கைக்குச் செழுஞ்சரவ ணத்திற் பிறந்தவொரு
கந்தச் சுவாமிதணிகைக்
கல்லார கிரியுருக வருகிரண மரகத
கலாபத்தில் இலகுமயிலே. உ

ஆதார பாதலம் பெயரஅடி பெயரமூ
தண்டமுக டதுபெயரவே
ஆடரவ முடிபெயர எண்திசைகள் பெயரவெறி
கவுட்கிரி சரம்பெயரவே
வேதாள தாளங்க ளுக்கிசைய ஆடுவார்
மிக்கப்ரி யப்படவிடா
விழிபவுரி கௌரிகண் டுளமகிழ விளையாடும்
விஸ்தார நிர்த்தமயிலாம்
மாதாநு பங்கியெனும் மாலது சகோதரி
மகீதரி கிராதகுலிமா
மறைமுனி குமாரிசா ரங்கனந் தனிவந்த
வள்ளிமணி நூபுரமலர்ப்
பாதார விந்தசே கரனேய மலருமுற்
பலகிரி யமர்ந்தபெருமாள்
படைநிருதர் கடகமுடை படநடவு பச்சைப்
பசுந்தோகை வாகைமயிலே. ங

யுககோடி முடிவின்மண் டியசண்ட மாருதம்
உதித்ததென் றயன்அஞ்சவே
ஒருகோடி அண்டர்அண் டங்களும் பாதாள
லோகமும் பொற்குவடுறும்
வெருகோடி மலைகளும் அடியினில் தகர்ந்திரு
விசும்பிற் பறக்கவிரிநீர்
வேலைசுவ றச்சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப் பறக்குமயிலாம்
நககோடி கொண்டவுணர் நெஞ்சம் பிளந்துநர
கேசரி முராரிதிருமால்
நாரணன் கேசவன் சீதரன் தேவகீ
நந்தனன் முகுந்தன்மருகன்
முககோடி நதிதரன் குருகோடி யனவரத
முகில்உலவு நீலகிரிவாழ்
முருகன்உமை குமரன்அறு முகன்நடவு விகடதட
மூரிக் கலாபமயிலே. ௪

சோதியிம வேதண்ட கன்னிகையர் தந்தஅபி
நயதுல்ய சோமவதன
துங்கத்ரி சூலதரி கங்காளி சிவகாம
சுந்தரி பயந்தநிரைசேர்
ஆதிநெடு மூதண்ட அண்டபகி ரண்டங்கள்
யாவுங் கொடுஞ்சிறகினால்
அணையுந்த னதுமேபடை அண்டங்க ளென்னவே
அணைக்குங் கலாபமயிலாம்
நீதிமறை யோதண்ட முப்பத்து முக்கோடி
நித்தரும் பரவுகிரியாம்
நீலகிரி வேலவன் நிராலம்ப நிர்ப்பயன்
நிர்வியா குலன்சங்குவாள்
மாதிகிரி கோதண்ட தண்டந் தரித்தபுயன்
மாதவன் முராரிதிருமால்
மதுகைட வாரிதிரு மருகன்முரு கன்குமரன்
வாமுதவு வாகைமயிலே. ௫

சங்கார காலமென அரிபிரமர் வெருவுறச்
சகலலோ கமுங்நடுங்கச்
சந்த்ரசூ ரியர்ஒளித் திந்த்ராதி அமரருஞ்
சஞ்சலப் படவுமையுடன்
கங்காளர் தனிநாட கஞ்செய்த போதந்த
காரம் பிறந்திடநெடுங்
ககனகூ டமுமேலை முகடுமூ டியபசுங்
கற்றைக் கலாபமயிலாம்
சிங்கார குங்கும படீரம்ருக மதயுகள
சித்ரப்ப யோதரகிரித்
தெய்வவா ரணவனிதை புனிதன் குமாரன்
திருத்தணி மகீதரன்இருங்
கெங்கா தரன்கீத மாகிய சுராலய
க்ருபாகரன் கார்த்திகேயன்
கீர்த்திமா அசுரர்கள் மடியக்ர வுஞ்சகிரி
கிழிபட நடாவுமயிலே. சு

தீரப் பயோததி திக்குமா காயமும்
செகதலமும் நின்றுசுழலத்
திகழ்கின்ற முடிமவுலி சிதறிவிழ வெஞ்சிகைத்
தீக்கொப் புளிக்கவெருளும்
பாரப் பணாமுடி அனந்தன்முதல் அரவெலாம்
பதைபதைத் தேநடுங்கப்
படர்சக்ர வாளகிரி துகள்படவை யாளிவரு
பச்சைப்ர வாளமயிலாம்
ஆரப்ர தாபபுள கிதமதன பாடீர
அமிர்தகல சக்கொங்கையாள்
ஆடுமயில் நிகர்வல்லி அபிராம வல்லிபர
மானந்த வல்லிசிறுவன்
கோத்ரி சூலத்ரி யம்பக ஜடாதர
குருதரு திருத்தணிகைவேள்
கொடியநிசி சாருதா மெரிபுகுத விபுதர்பதி
குடிபுகுத நடவுமயிலே. எ

செக்கரள கேசசிக ரத்னபுரி ராசிநிரை
சிந்தப்பு ராரிஅமிர்தந்
திரும்பப் பிறந்ததெனை ஆயிரம் பகுவாய்கள்
தீவிஷங் கொப்புளிப்பச்
சக்ரகிரி சூழவரு மண்டலங் கள்சகல
சங்கார கோரநயனத்
தறுகண்வா சுகிபணு முடியெடுத் துதறுமொரு
சண்டப்ர சண்டமயிலாம்
விக்ரம கிராதகுலி புனமீ துலாவிய
விருத்தன் தி ருத்தணிகைவாழ்
வேலாயு தன்பழ வினைத்துயர் அறுத்தெனை
வெளிப்பட வுணர்த்தியருளித
துக்கசுக பேதமற வாழ்வித்த கந்தச்
சுவாமிவா கனமானதோர்
துரககஜ ரதகடக விகடதட நிருதர்குல
துஷ்டர்நிஷ் டூரமயிலே. அ

சிகரதம ணியமேரு கிரிரசத கிரிநீல
கிரியெனவும் ஆயிரமுகத்
தெய்வநதி காளிந்தி எனநீழல் இட்டுவெண்
திங்கள்சங் கெனவும்ப்ரபா
நிகரெனவும் எழுதரிய நேமியென வுலகடைய
நின்றமா முகிலென்னவே
நெடியமுது ககனமுக டுறவீசி நிமிருமொரு
நீலக்க லாபமயிலாம்
அகருமரு மணம்வீசு தணிகையபி ராமவேள்
அடியவர்கள் மிடியகலவே
அடல்வேல் கரத்தசைய ஆறிரு புயங்களில்
அலங்கற் குழாமசையவே
மகரகன கோமளக் குண்டலம் பலவசைய
வல்லவுணர் மனமசையமால்
வரைஅசைய உரகபிலம் அசையஎண் திசைஅசைய
வையாளி ஏறுமயிலே. சு

நிராசத விராசத வரோதய பராபரன்
நிராகுலன் நிராமயபிரான்
நிலாவெழு தலாலற மிலான்நெறி யிலான்நெறி
நிலாவிய வுலாசஇதயன்
குராமலி விராவுமிழ் பராரைய மராநிழல்
குராநிழல் பராவுதணிகைக்
குலாசல சராசலம் எலாம்இனி துலாவிய
குலாவிய கலாபமயிலாம்
புராரிகு மாரகுரு பராஎனும் வரோதய
புராதன முராரிமருகன்
புலோமசை சலாமிடு பலாசன வலாரிபுக
லாகுமயி லாயுதன்நெடுந்
தராதல கிராதர்கள் குலாதஅபி ராமவல
சதானன விநோதசமரன்
தடாரிவிக டாசுரன் குடாரித படாதிகழ்
சடானனன் நடாவுமயிலே. க0

எந்நாளும் ஒருசுனையில் இந்த்ரநீ லப்போ
திலங்கிய திருத்தணிகைவாழ்
எம்பிரான் இமையவர்கள் தம்பிரான் ஏறும்ஒரு
நம்பிரா னனமயிலைப்
பன்னாளும் அடிபரவும் அருணகிரி நாதன்
பகர்ந்தஅதி மதுரசித்ரப்
பாடல்தரும் மாசறு விருத்தம்ஒரு பத்தும்
படிப்பவர்க ளாதிமறைநூல்
மன்னன் முகம்பெறுவர் அன்னம்ஏ றப்பெறுவர்
வாணிதழு வப்பெறுவரால்
மகரால யம்பெறுவர் உவணம்ஏ றப்பெறுவர்
வாரிச மடந்தையுடன்வாழ்
அந்நாய கம்பெறுவர் அயிராவ தம்பெறுவர்
அமுதா சனம்பெறுவர்மேல்
ஆயிரம் பிறைதொழுவர் சீர்பெறுவர் பேர்பெறுவர்
அழியா வரம்பெறுவரே. கக

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# வேல் விருத்தம்



மகரமள றிடைபுரள உரககண பணமவுலி
மதியும்இர வியுமலையவே
வளரெழிலி குடருமல இமையவர்கள் துயரகல
மகிழ்வுபெற மறுசிறையவாஞ்
சிகரவரை மனைமறுகு தொறுநுளைய மகளிர்செழு
செநெல்களொடு தரளமிடவே
செகசிரப கிரதிமுதல் நதிகள்கதி பெறவுததி
திடரடைய நுகரும்வடிவேல்
தகரமிரு கமதமென மணமருவு கடகலுழி
தருகவுளு முறுவளெயிறுந்
தழைசெவியும் நுதல்விழியும் உடையவொரு கடவுள்மகிழ்
தருதுணைவன் அமரர்குயிலுங்
குகரமலை எயினர்குல மடமயிலும் எனஇருவர்
குயமொடமர் புரியுமுருகன்
குமரன்அறு முகன்எதிரும் விருதுநிசி சரரணிகள்
குலையவிடு கொடியவேலே.

வெங்காள கண்டர்கைச் சூலமுந் திருமாயன்
வெற்றிபெறு சுடராழியும்
விபுதர்பதி குலிசமுஞ் சூரன்கு லங்கல்லி
வெல்லா எனக்கருதியே
சங்க்ராம நீசயித் தருளெனத் தேவரும்
சதுர்முகனும் நின்றிரப்பச்
சயிலமொடு சூரனுடல் ஒருநொடியில் உருவியே
தனியாண்மை கொண்டநெடுவேல்
கங்காளி சாமுண்டி வாராகி இந்த்ராணி
கௌமாரி கமலாசனக்
கன்னிநா ரணிகுமரி த்ரிபுரைபயி ரவிஅமலை
கௌரிகா மாக்ஷிசைவ
சிங்காரி யாமளை பவாநிகார்த் திகைகொற்றி
த்ரியம்பகி அளித்தசெல்வச்
சிறுவன்அறு முகன்முருகன் நிருதர்கள்கு லாந்தகன்
செம்பொற் றிருக்கைவேலே. ௨

வேதாள பூதமொடு காளிகா ளாத்ரிகளும்
வெகுளுறு பசாசகணமும்
வெங்கழு குடன்கொடி பருந்துசெம் புவனத்தில்
வெம்பசி யொழிக்கவந்தே
ஆதார கமடமுங் கணபண வியாளமும்
அடக்கிய தடக்கிரியெலாம்
அலையநட மிடுநெடுந் தானவர் நிணத்தசை
அருந்திப் புரந்தவைவேல்
தாதார் மலர்ச்சுனைப் பழநிமலை சோலைமலை
தனிப்பரங் குன்றேரகம்
தணிகைசெந் தூரிடைக் கழியாவி னன்குடி
தடங்கடல் இலங்கையதனிற்
போதார் பொழிற்கதிர் காமத் தலத்தினைப்
புகழுமவ ரவர்நாவினிற்
புந்தியில் அமர்ந்தவன் கந்தன்முரு கன்குகன்
புங்கவன் செங்கைவேலே.

அண்டருல குஞ்சுழல எண்திசைக ளுஞ்சுழல
அங்கியும் உடன்சுழலவே
அலைகடல்க ளுஞ்சுழல அவுணர்உயி ருஞ்சுழல
அகிலதல முஞ்சுழலவே
மண்டல நிறைந்தரவி சதகோடி மதியுதிர
மாணப் பிறங்கியணியும்
மணியொலியி னிற்சகல தலமுமரு ளச்சிரம
வகைவகையி னிற்சுழலவே
தண்டமுட னுங்கொடிய பாசமுட னுங்கரிய
சந்தமுட னும்பிறைகள்போல்
தந்தமுட னுந்தழலும் வெங்கணுட னும்பகடு
தன்புறம் வருஞ்சமனையான்
கண்டுகுலை யும்பொழுதில் அஞ்சலென மென்சரண
கஞ்சமுத வுங்கருணைவேள்
கந்தன்முரு கன்குமரன் வண்குறவர் தம்புதல்வி
கணவன்அடல் கொண்டவேலே. ச

ஆலமாய் அவுணருக் கமரருக் கமுதமாய்
ஆதவனில் வெம்மையொளிமீ
தரியதவ முநிவருக் கிந்துவித் தவனன்
றமைந்தன் பருக்குமுற்று
மூலமாம் வினையறுத் தவர்கள்வெம் பகையினை
முடித்திந்தி ரர்க்குமெட்டா
முடிவிலா நந்தநல் கும்பதம் அளித்தெந்த
மூதண்ட மும்புகழும்வேல்
ஏலவாம் யானையின் கோடதிற் சொரிமுத்தும்
மின்பணிகள் உமிழுமுத்தும்
மினிவாடை மான்மதம் அகிலோடு சந்தனம்
இலவங்க நறவமாருந்
தாலமா மாமுதற் பொருள்படைத் திடும்எயினர்
தருவநிதை மகிழ்நன்ஐயன்
தனிநடம் புரிசமர முருகன்அறு முகன்குகன்
சரவணக் குமரன்வேலே. ரு

பந்தாட லிற்கழங் காடலிற் சுடரூசல்
பாடலினொ டாடலெலலாம்
பழந்தெவ்வர் கட்கந் துணித்திந்தி ரற்காசு
பாலித்த திறல்புகழ்ந்தே
சந்தாரு நாண்மலர்க் குழலரம் பையர்களுஞ்
சசிமங்கை யனையர்தாமுந்
தன்னைஅன் பொடுபாடி யாடும்ப்ர தாபமுந்
தலைமையும் பெற்றவைவேல்
மந்தா கினித்தரங் கச்சடில ருக்கரிய
மந்த்ரவுப தேசகல்கும்
வரதேசி கன்கிஞ்சு கச்சிகா லங்கார
வாரணக் கொடிஉயர்த்தோன்
கொந்தார் மலர்க்கடம் புஞ்செச்சை மாலையுங்
குவளையுஞ் செங்காந்தளுங்
கூதாள மலருந் தொடுத்தணியு மார்பினன்
கோலத் திருக்கைவேலே. ௬

அண்டங்க ளொருகோடி யாயினுங் குலகிரி
அநந்தமா யினுமேவினால்
அடையவுரு விப்புறம் போவதல் லதுதங்கல்
அறியாது சூரன்உடலைக்
கண்டம் படப்பொருது காலனுங் குலைவுறுங்
கடியகொலை புரியுமதுசெங்
கநகா சலத்தைக் கடந்துமுனை யிட்டுக்
கடுக்கின்ற துங்கநெடுவேல்
தண்டந் தரூத்திகிரி சங்குகட் கங்கொண்ட
தானவாந் தகன்மாயவன்
தழல்விழிக் கொடுவரிப் பருவுடற் பஃறலைத்
தமனியச் சுடிகையின்மேல்
வண்டொன் று கமலத்து மங்கையுங் கடலாடை
மங்கையும் பதம்வருடவே
மதுமலர்க் கண்துயில் முகுந்தன்மரு கன்குகன்
வாகைத் திருக்கைவேலே. ௭

மாமுதல் தடிந்துதண் மல்குகிரி யூடுபோய்
வலியதா னவர்மார்பிடம்
வழிகண்டு கமலபவ னத்தனைச் சிறையிட்டு
மகவான் றனைச்சிறைவிடுத்
தோமஇரு டித்தலைவர் ஆசிபெற் றுயர்வானில்
உம்பர்சொற் றுதிபெற்றநா
வுடையகீ ரன்தனது பாடல்பெற் றுலகுதனில்
ஒப்பில்புகழ் பெற்றவைவேல்
சோமகல சப்ரபா லங்கார தாஜடா
சூடிகா லாந்தகாலர்
துங்கரக்ஷ கத்ரோண கட்கசூலி சஞ்சூல
தாரகசே சரமாம்பரச்
சேமவட வாம்புயப் பரணசங் காபரண
திகம்பர த்ரியம்பகமகா
தேவநந் தனகஜா நநசகோ தரகுகன்
செம்பொற் றிருக்கைவேலே. அ

தேடுதற் கரிதான நவமணி யழுத்தியிடு
செங்காலை அமுதம்வாய்கொள்
செயமளித் தருளெனக் கெனவுவப் பொடுவந்து
சேவடி பிடித்தசெனவும்
நீடுமைக் கடல்சுட்ட திற்கடைந் தெழுகடலும்
நீளமைக் காக்களனவும்
நிபுடமுடி நெடியகிரி எந்தமைக் காளனவும்
நிகழ்கின்ற துங்கநெடுவேல்
ஆடுமைக் கணபணக் கதிர்முடிப் புடைஎயிற்
றடலெரிக் கொடியவுக்ர
அழல்விழிப் படுகொலைக் கடையகட் செவியினுக்
கரசினைத் தனியெடுத்தே
சாடுமைப் புயலெனப் பசுநிறச் சிகரியில்
தாதிமித் துடன்நடிக்குஞ்
சமரமயில் வாகனன் அமரர்தொழு நாயகன்
சண்முகன் தன்கைவேலே. கூ

வலாரியல லாகுலமி லாதகல வேகரிய
மாலறியும் நாலுமறைநூல்
வலானலை விலானசி விலான்மலை விலானிவர்
மனோலய வுலாசமுறவே
உலாவரு கலோலமக ராலய சலங்களும்
உலோகநிலை நீர்நிலையிலா
ஒலாவொலி நிசாசரர் உலோகம தெலாமழல்
உலாவிய நிலாவுகொலைவேல்
சிலாவட கலாவினோத வாசிவிமு காவிலோச
ஞசின சிலாதணிவிலா
சிலாமலர் எலாமதிய மோதிமதி சேலொழிய
சேவக சராபமுகிலாம்
விலாசகவி யாணகலை சேரபசு மேலைமுலை
மேவிய விலாசவகலன்
விலாழியி னிலாழியகல் வானிலன லாரவிடு
வேழமிளை ஞன்கைவேலே. ௧0



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# திருவகுப்பு

## 1. சீர்பாத வகுப்பு

உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவி னிருளகல ஒருசோதி வீசுவதும்
உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
உணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்
உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்
உழலுவன பரசமய கலையார வாரமற
உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
உளபடியை யுணருமவர் அநுபூதி யானதுவும்
உறவுமுறை மனைவிமக வெனுமலையில் எனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும்
உறுபுணையும் அறிமுகமும் உயரமரர் மணிமுடியில்
உறைவதுவும் உலைவிலதும் அடியேன் மனோரதமும்;

இதழிவெகு முகககன நதியறுகு தறுகணர
இமகிரண தருணவுடு பதிசேர்ஜ டாமவுலி
இறைமகிழ வுடைமணியொ டணிசகல மணிகலென
இமையமயில் தழுவும்ஒரு திருமார்பி லாடுவதும்
இமையவர்கள் நகரில்இறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத உரகர்பதி அபிஷேக மாயிரமும்
எழுபிலமும் நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்
இனியகனி கடலைபய றொடியல்பொரி யமுதுசெயும்
இலகுவெகு கடவிகட தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை ஒருநொடியில் வலமாக ஓடுவதும்
எறுழிபுலி கரடிஅரி கரிகடமை வருடைஉழை
இரலைமரை இரவுபகல் இரைதேர்க டாடவியில்
எயினரிடும் இதணதனில் இளகுதினை கிளிகடிய
இனிதுபயில் சிறுமிவளர் புனமீ துலாவுவதும்;

முதலவினை முடிவிலிரு பிறைஎயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட
முடுகுவதும் அருள்நெறியில் உதவுவது நினையுமவை
முடியவரு வதும்அடியர் பகைகோடி சாடுவதும்
மொகுமொகென மதுபமுரல் குரவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள முழுநீல நீவரமும்
முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முநிவர்கரு தரியதவ முயல்வார்த போபலமும்
முருகசர வணமகளிர் அறுவர்முலை நுகரும்அறு
முககுமர சரணம்என அருள்பாடி ஆடிமிக
மொழிகுழற அழுதுதொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகஎன அறைகூவி யாளுவதும்
முடியவழி வழிஅடிமை எனும்உரிமை அடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடும் ஆசுகவி
முதலமொழி வனநிபுண மதுபமுகர் இதமவுன.
முகுளபரி மளநிகில கவிமாலை சூடுவதும்;

மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசையாதி மூலமென
வருகருணை வரதன் இகல் இரணியனை நுதிஉகிரின்
வகிரும்அடல் அரிவடிவு குறளாகி மாபலியை
வலியசிறை யிடவெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகில் நிருதன்இரு பதுவாகு பூதரமும்
மகுடம்ஒரு பதுமுறிய வடுபகழி விடுகுரிசின்
மருகன்நிசி சரர்தளமும் வருதார காசுரனும்
மடியமலை பிளவுபட மகரசல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும் வடிவேலன் நீலகிரி
மருவுகுரு பதியுவதி பவதிபக வதிமதுர
வசனிபயி ரவிகவுரி உமையாள்த்ரி சூலதரி
வநசைமது பதியமலை விசயைதிரி புரைபுநிதை
வநிதையபி நவையநகை அபிராம நாயகிதன்
மதலைமலை கிழவன்அறு பவன்அபயன் உபயசதுர்
மறையின்முதல் நடுமுடிவின் மணநாறு சீறடியே.

---

## 2. தேவேந்திர சங்கவகுப்பு

தரணியில் அரணிய முரண்இர ணியன்உடல்
தனைநக நுதிகொடு
சாடோங்குநெ டுங்கிரி யோடேந்துப யங்கிரி
தமருக பரிபுர வொலிகொடு நடநவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்தப ரம்பரை
சரிவளை விரிசடை எரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குச மென்றிரு தாளாந்தர அம்பிகை
தருபதி சுரரொடு சருவிய அசுரர்கள்
தடமணி முடிபொடி
தாளும்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி ;

இபணகி ரணமட மயின்ம்ருக மதபுள
கிதவிள முலையிள
நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்
இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபடர்
எனதுயிர் கொளவரின்
யானேனங்குதல் கண்டெதிர் தானேனென் றுகொ ளுங்குயில்
இடுபலி கொடுதிரி இரவலர் இடர்கெட
விடுமன கரதல
ஏகாம்பரை இந்திரை மோகாங்கசு மங்கலை
எழுதிய படமென இருளறு சுடரடி
யிணைதொழு மவுனிகள்
ஏகாந்தசு கந்தரு பாசாங்குச சுந்தரி ;

கரணமும் அரணமும் மலமொடும் உடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்
கனலெரி கணபண குணமணி யணிபணி
கனவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்
கனைகழல் நினையலர் உயிரவி பயிரவி
கவுரிக மலைகுழை
காதார்ந்தசெ ழுங்கழு நீர்தோய்ந்தபெ ருந்திரு
கரைபொழி திருமுக கருணையில் உலகெழு
கடல்நிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன் ;

அரண்நெடு வடவரை அடியொடு பொடிபட
அலைகடல் கெடஅயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்கும ரன்குகன்
அறுமுகன் ஒருபதொ டிருபுய னபிநவன்
அழகிய குறமகள்
தார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்கள் அந்தகன்

அடல்மிகு கடதட விகடித மதகளி
றனவர தமுமக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்
அதிபதி எனவரு பொருதிறன் முருகனை
அருள்பட மொழிபவர்
ஆராய்ந்துவ ணங்குவர் தேவேந்திர சங்கமே.

---

## 3. வேல்வகுப்பு

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்
பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்
பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும்
பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கஅருள் நேரும்;
சுரர்க்கும்முநி வரர்க்கும்மக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்குநரர் தமக்கும்உறும்
இடுக்கண்வினை சாடும்
சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும்
துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும்
சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்தெறிய உறுக்கியெழும்
அறத்தைநிலை காணும்;

தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும்
தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்
தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும்இரு புறத்தும்அரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்
சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை எனச்சிகையில்
விருப்பமொடு சூடும் ;

திரைக்கடலை உடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்
திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்
சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்
திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன்என துளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே.

---

## 4. திருவேளைக்காரன் வகுப்பு

ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன வாரக் காரனும்
ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
ஞருடனு ணக்கைபரி தீமைக் காரனும்

ஆகமம்வி ளைத்தகில லோகமும் நொடிப்பளவில்
ஆசையொடு சுற்றும்அதி வேகக் காரனும்
ஆணவஅ ழுக்கடையும் ஆவியை விளக்கிஅரு
பூதிஅடை வித்ததொரு பார்வைக் காரனும்
ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கஅம
ராவதிபு ரக்கும்அடல் ஆண்மைக் காரனும்
ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பில்அரு
ணாபுரியில் நிற்கும்அடை யாளக் காரனும்
ஆயிரமு கத்துநதி பாலனும்அ கத்தடிமை
யானவர்தொ டுத்தகவி மாலைக் காரனும்
ஆறுமுக வித்தகனும் ஆறிருபு யத்தரசும்
ஆதிமுடி வற்றதிரு நாமக் காரனும்;

யானெனதெ னச்சருவும் ஈனசம யத்தெவரும்
யாரும்உணர் தற்கரிய நேர்மைக் காரனும்
யாதுநிலை யற்றலையும் ஏழுபிற விக்கடலை
ஏறவிடு நற்கருணை ஓடக் காரனும்
ஏரகமி டைக்கழிசி ராமலைதி ருப்பழநி
ஏரணிசெ ருத்தணியில் வாசக் காரனும்
ஏழையின்இ ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக் காரனும்
யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனஅ ழைத்துருகு நேயக் காரனும்
ஏதமற நிச்சயம னோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற் காரனும்
ஈரிரும ருப்புடைய சோனைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளும் ஆசைக் காரனும்
ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்கும்இளை
யோனும்அறி விற்பெரிய மேன்மைக் காரனும்;

வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியில்உ தித்தமுக மாயக் காரனும்
வாரணப திக்குதவு நாரணன்உ வக்குமரு
மானும்அய னைக்கறுவு கோபக் காரனும்

வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம்அ ளிக்கும்உப காரக் காரனும்
மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவு ளாயக் காரனும்
வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும் வாசிக் காரனும்
வாளகிரி யைத்தனது தாளில்இடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் காரனும்
மாசில்உயி ருக்குயிரு மாசில்உணர் வுக்குணர்வும்
வானில்அணு வுக்கணுவு பாயக் காரனும்
வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியில் நிற்பதொர்ச காயக் காரனும் ;

மீனவனும் மிக்கபுல வோரும்உறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி நோதக் காரனும்
வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் காரனும்
வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக் காரனும்
மீனுலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
வீடுபெற வைத்தருள்உ தாரக் காரனும்
மேனைஅரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும்அ ரக்கர்குல சூறைக் காரனும்
வேதியர்வெ றுக்கையும்அ நாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு ரூபக் காரனும்
வேடுவர்பு னத்தில்உரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்தினொடு போம்விற் காரனும்
மேவியபு னத்திதணில் ஓவியமெ னத்திகழும்
மேதகுகு றத்திதிரு வேளைக் காரனே.

---

## 5. பெருத்த வசன வகுப்பு

அருக்க னுலவிய சகத்ர யமுமிசை
அதிர்கொள் சுவையென அனைத்து நிறைவதும்
அவஸ்தை பலவையும் அடக்கி அகிலமும்
அவிழ்ச்சி பெறஇனி திருக்கு மவுனமும்
அசட்டு வெறுவழி வழக்கர் அறுவரும்
அரற்று வனபொருள் விகற்ப மொழிவதும்
அழுக்கு மலஇருள் முழுக்கில் உழல்வதை
அடக்கி அவநெறி கடக்க விடுவதும்;

எருக்கும் இதழியும் முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன் எனத்தி கழுவதும்
இரட்டை வினைகொடு திரட்டு மலவுடல்
இணக்க மறவொரு கணக்கை அருள்வதும்
இருக்கு முதலிய சமஸ்த கலைகளும்
இதற்கி தெதிரென இணைக்க அரியதும்
இறக்க எனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொர் இயற்கை அருள்வதும்;

நெருக்கு வனவுப நிடத்தின் இறுதிகள்
நிரப்பு கடையினில் இருப்பை யுடையதும்
நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென
நிரைத்த நெறிமுறை காக்கும் உருவமும்
நினைப்பு நினைவதும் நினைப்ப வனும்அறு
நிலத்தில் நிலைபெற நிறுத்த வுரியதும்
நிலைத்த அடியவர் மலைத்தல் அதுகெட
நிவிர்த்தி யுறஅநு பவிக்கு நிதியமும்;

உருக்கு திருவருள் திளைத்து மகிழ்தர
உளத்தொ டுரைசெய ஒளித்து விடுவதும்
ஒளிக்கும் ஒளியென வெளிக்கும் வெளியென
உயிர்க்கும் உயிரென நிகழ்ச்சி தருவதும்

ஊரத்த தனிமயில் உகைத்து நிசிசரர்
ஒளிக்க அமர்பொரு சமர்த்தன் அணிதழை
உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன்
ஒருத்தன் அருளிய பெருத்த வசனமே.

---

## 6. பூத வேதாள வகுப்பு

அருண கணபண புயக சுடிகையின்
அகில புவனமும் உதவு மலைமகள்
அமலை ஆரியை அந்தரி சுந்தரி
இமய மாமயில் அம்பைத்ரி யம்பகி
அச்சுதச கோதரிஅ னைத்துவே தத்தலைவி
அற்புதபு ராதனிவ ரப்ரகா சப்ரக்ருதி
அம்பொற் குண்டலப் பேதை சாம்பவி
விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி
அக்ஷர லக்ஷஜ பத்தர்க்ர மத்திடு
சக்ராத லத்தித்ரி யக்ஷிச டக்ஷரி
ஆயிதிரு மைந்தன்முகம் ஆயிரம்வி ளங்கியதொர்
ஆறுதர வந்தருளும் ஆறுமுக புண்டரிகன்
அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென் றங்கீர னுக்குதவி
அரசறிய வாமனமு நிக்கொருத மிழ்த்ரயமும்
அபரிமித மாகவிவ ரித்தகட வுட்புலவன்
அநுபவ சித்த பவக்கட லிற்பு காதெனை
வினவியெ டுத்தருள் வைத்த கழற்க்ரு பாகரன்
ஆசிலா சார தபோதனர் இன்புறும்
வாசகா தீத மனோலய பஞ்சரன்
அகரு ம்ருகமத களப பரிமள
விகட முகபட கடின புளகித
அமிர்த பூதரி அண்டர்செ ழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி
அக்கமொரு கோடிபெறு வஜ்ரபா ணிக்குமரி
தக்கஅம ராவதிபு ரக்கும்ஆ ணைக்கிறைவன்

ஐம்பத் தொன்றில்எட் டாறில் மூன்றினில்
ஐந்திற் றங்குமப் பாலை வான்பொருள்
அப்படி பத்திப மூத்தம னத்தினர்
அர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்
ஆறுநிலை யென்றமுத லாகியப ரங்கிரியும்
ஆவின னெடுங்குடியும் ஆரண முடிந்திடமும்
அருணையும் இலஞ்சியுஞ் செந்தூர்தி ருப்பழநி
அடியர்மன பங்கயஞ் செங்கோடி டைக்கழியும்
அநவரத நீலமலர் முத்தெறிசு னைப்புனலில்
அருவிகுதி பாய்தருசெ ருத்தணியென் வெற்புமெனும்
அலகில்தி ருப்ப தியிற்பயில் கற்ப காடவி
அநுபவ னத்தனி ருத்தன ரத்த ஆடையன்
ஆறுமா மாதர் பயோதர பந்தியில்
ஆரவே பால முதாருநெ டுந்தகை;

வருண சரவண மடுவில் வருமொரு
மதலை மறைகமழ் குதலை மொழியினன்
மதுக ராரவ மந்திர சிந்துர
மணம ருதக டம்பு னைந்தவன்
மட்டொழுகு சாரமது ரித்ததே னைப்பருக
மர்க்கடசமூகமமை தொட்டிரு லெட்டுவரை
மன்றற் பைம்புனத் தாள்ப தாம்புயம்
வந்திக் குந்தனிக் காம வாஞ்சையன்
மத்தமு டித்தரு ளத்தர்ப்ரி யப்பட
நித்தம றைப்பொரு ளைத்தெளி வித்தவன்
மாதிரமும் மந்தரமும் நீருநில னுங்கனக
மால்வரையு டன்சுழல வாசுகிவி டம்பொழிய
மகரச லிலங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்
மருகன்மற வாதவர்நி னைப்பவைமு டிக்குமவன்
உருகுமடி யார்இருவி னைத்தொகைய றுக்குமவன்
மறவர்பொ ருப்பி லொருத்திபொ ருட்ட நாள்இள
வடிவமு மூக்க நரைத்தவி ருத்த வேதியன்

மாதரா ரூபன் நிராகுல சிந்தையன்
ஆதிகூ தாள மதாணிய லங்க்ருதன்
வாத விதாரண விரத அநுபவ
மவுன குருபரன் நிபுண குணதரன்
வனஜ ஜாதனை யன்றமு னிந்தற
வலிய பாரவி லங்கிடு புங்கவன்
மட்டிவிரு நாலுதிசை கட்டுநே மிக்கிரியும்
உத்தரகு ணாதிகுட தக்ஷிணா திக்கிரியும்
மங்கத் துங்கவிட் டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காங்கெயன்
மத்தம லத்ரய மித்தைத விர்த்தருள்
சுத்தப வித்ரநி வர்த்திய ளிப்பவன்
வாரணமு கன்றனது தாதையைவ லஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடிவ ருங்குமரன்
மயமுறு ப்ரபஞ்சமுஞ் சங்கேத ஷட்சமய
வழியும னமுங்கடந் தெங்கேனும் நிற்குமவன்
மதுரமொழி யால்உலக னைத்தையும்உ ணர்த்துமவன்
வடவனல நேர்கொடிய குக்குடம்உ யர்த்தகுகன்
மரகத பக்ஷ குலத்துர கத்தி வாகரர்
வடிவையு ருக்கி வடித்ததி ருக்கை வேல்கொடு
வாரிகோ கோவென வாய்விட வந்தெதிர்
சூரமா சேனையை மோதுக ளந்தனில்;

உருவம் இருளெழ எயிறு நிலவெழ
உலகு வெருவர அசைய வருவன
உடைய நாயகி கண்டும கிழ்ந்திட
நடைவி நோதவி தம்புரி பந்திய
ஒக்கலைவி டாதழுத ரற்றுபா லர்க்குமிக
உச்சிவெடி யாதுநிண மெத்தமே தப்புவன
உங்குக் கிங்குவிட் டாழி நான்கினும்
ஒன்றுக் கொன்றடி பாய்தல் காண்பன
யுத்தக ளத்தினில் ரத்தம ணிக்குவை
யொட்டமொ டொற்றையி ரட்டைபி டிப்பன

யோகினிக ளும்பெரிய சாகினிக ளும்புதிய
மோகினிக ளும்பழைய டாகினிக ளும்புகழ
உவணநிரை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையில்
உறவுகொள வந்துதம் பெண்காறை கட்டுவன
உமிழ்குருதி யாறடைப டக்குறட டுக்கியதில்
உபவனமொ ரேழையும்உ றித்தருகொ ழுக்குவன
உடுபட லத்தை மறைத்த குறைக்கு வாலுடல்
உதிரச முத்திர முற்று நிலைப்ப டாதன
ஓடைமால் வாரண யூகம டங்கலும்
ஓரொர்பேய் நீள்கடை வாயி லடங்குவ
உடலி நிசிசரர் மவுலி யொலியலும்
உதடு மலைவன பதடி மூலையின
உததி எழும டங்கவு றிஞ்சியும்
உதர வாரழல் நின்றுகொ ளுந்துவ
உக்கிர இராவணன்எ டுத்தமே ருக்கிரியும்
ஒற்றியிரு தோள்கொடுப றித்திடா தப்புவன
ஒன்றித் திண்குரற் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன
ஒக்கமி டற்றில் இறக்கு குறைத்தலை
விக்கி வெளுக்க வெளுக்க விழிப்பன
யோகுபுரி யுங்குகையும் யோகபா ரும்பொருவ
ஓடைமத தந்திவயி றாடினிது றங்குவன
உசிதபிசி தங்கொணர்ந் திங்கேற விற்றுமென
மதமலையெ லும்புகொண் டங்காடி கட்டுவன
உதிரநிண வாள்பெருக ஒட்டுவன வெட்டுவன
உடலின்நடு ஊடுருவ முட்டுவன தட்டுவன
ஒழுகுபிண ணத்துநி ணத்தின ளற்றி லேபழு
ஒடியஉ ழக்கிவ ழுக்கி யுருட்டி வீழ்வன
ஊசலார் வார்குழை ஓலை யிடும்படி
ஓதுசா மீகர நேமி பிடுங்குவ ;

கரண மிடுவன குணலை யிடுவன
கழையை நடுவன பவுரி வருவன
ககன கூடமுடைந்துவி ழும்படி
கதறி வாயனல் கண்கனல் சிந்துவ
கைச்சதியி னுமுறைவி தித்தவா முற்கடித
சச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக
கண்டச் சம்பதிப் பேத மாம்பல
கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி
கற்சரி யுற்சவ தர்ப்பண லக்ஷண
சச்சரி மட்டிசை யொற்றிய றுப்பன
காயெரிய பங்கியொடு சேகரமி குந்தசைவ
காதுபடு சங்கவள மாலிகைபு னைந்திசைவ
கருணைய திகந்துவந் தொண்கோகு லப்பெரிய
கருமுடியொ டும்படுங் கங்காள மோதுவன
கடிபயிர வாதிகள்ப்ரி யப்படுக திக்கிசைய
நடைநவிலு பாவனை யுதிக்குநட வித்தையின
கடகம டுத்த விடக்கை வலக்கை வாளின
கருதிய லக்ஷிய லக்ஷண முற்று மோதுவ
காலமா ரூத வராளிசி கண்டிகை
பாலசீ காமர மானவி பஞ்சிகை
கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி இசைவன
கனவ ராடிய ரும்பட மஞ்சரி
தனத னுசிவி தம்படு பஞ்சமி
கைச்சுலவு கோன்முறைவி தித்தரா கத்தடைவி
லுச்சமது சாதிகம்வ டுத்துமேல் எட்டுவன
கஞ்சக் கஞ்சநற் றேசி ராஞ்சிகு
றிஞ்சிப் பண்குறித் தியாழை யேந்துவ
கற்றவு டுக்கையி டக்கைக ஞப்பறை
மத்தளி கொட்டிய முற்றும்அ டிப்பன
காரெனமு ழங்குகுர லேறுதுடி சந்த்ரவளை
வீரமுர சுந்திமிற டாரிகுட பஞ்சமுகி

கரடிபறை யங்கனந் தங்கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தநின் றுன்றுடு கிட்டுவன
கசரதப தாகினிய ரக்கர்துணி பட்டுவிழு
களமுழுதும் வாழியதி ருப்புகழ்மு ழக்குவன
கடியகு ணத்த சினத்த சகத்ர யோசனை
நெடிய கழுத்த சுழித்த விழித்த பார்வைய
காதநா ருயிர கோடி வளைந்தன
பூதவே தாள மநேகவி தங்களே.

---

## 7. போருகளத்தலகை வகுப்பு

அதிர்த்த பரிபுர பதத்தி பயிரவி
அமைத்த காதலி ப்ரியத்தை யுடையன
அடித்த தமருக கரத்தர் பயிரவர்
நடித்த நவரச நடத்தை அறிவன
அருக்கர் பதமல வுடுக்கள் பதமள
வடுக்கு பிணமொரு குறட்டி லடைசுவ
அளக்க ருடைபட மிகுத்த குருதியை
அடைத்து மடைபட உடைத்து விடுவன
அரக்கர் முடிகளை அடுப்பு வகிர்வன
அவற்றி னுலையென இரத்தம் விடுவன
அடுக்கல் எனும்அவர் எயிற்றை அவர்கர
வகப்பை யவைகொடு புகட்டி அடுவன
அமிழ்த்தி அடிவிழு பிணத்தின் நிணவெளி
றளற்றின் இடைஅடி வழுக்கி விழுவன
அடப்பை யிடவரும் அணுக்க ருடன்வரு
தடக்கை மதமலை நடத்தி வருவன;

குதித்து மகிழ்வொடு மிதித்து நடமிடு
குறட்கு மிகுதசை கொடுத்து வருவன
கொழுத்த குரகத இறைச்சி வகைவகை
குவித்து முறைமுறை அவித்து நுகர்வன

குருத்து மலரினும் வெளுத்த நிணமது
கொளுத்தி அனலதில் வெதுப்பி இடுவன
குதட்டி நெடியன உதட்டி விடுதசை
கொடிக்கு முதுசின நரிக்கும் உமிழ்வன
குணக்கு வளைகடல் வடக்கி யமதிசை
குடக்கு முழுவதும் அடக்கும் வயிறின
குரக்கு மிடறின கரத்தில் எழுகிரி
குலுக்கி அடியொடு பறித்து நிமிர்வன
குதித்து முழுகியும் இரத்த நதியிடை
குடித்தும் உணர்வொடு களித்து வருவன
குறத்தி இறைவனை நிறைத்து மலரடி
குறித்து வழிபடு குணத்தை யுடையன ;

துதிக்கை மலைகளை அடுக்கி அலகைகள்
துதிக்க அவைமிசை இருக்கும் அரசின
துளக்க முறுசுடர் விளக்கை அனையன
சுழித்து வெருவர விழித்த விழியின
துதித்து வழிபட நடத்தல் குறையன
சுகித்து வெளிபட நகைத்து வருவன
துணித்த கரியுடல் திணித்த மிடறிடை
துவக்கி யவசமொ டுவிக்கி நிமிர்வன
தொலைத்த முடிநிரை பரப்பி வயிரவர்
சுழற்றி நடமிடு துருத்தி யிடுவன
துணுக்க முளஅவர் துணுக்க மிலையென
எடுத்த கழிநெடில் படித்து வருவன
சுரர்க்கும் மகபதி தனக்கும் இனியொரு
துளக்கம் இலையென மகிழ்ச்சி புகல்வன
தொகுக்கு தொகுதொகு தொகுக்கு தொகுதொகு
தொகுக்கு தொகுவென நடித்து வருவன ;

எதிர்த்து மலைவன முடித்து வெளிமுக
டிடித்து விழுமிடி இடித்த குரலின
இரட்டை இளமதி யுதித்த எனவெளி
றெயிற்றின் நிலவெழும் இருட்டு வடிவின

இயக்க முறுபல ரதத்தின் உருளைகள்
இருத்தி அணிதரு பெருத்த குழையின
இடக்கை குடமுழ வுடுக்கை துடிபறை
எடுத்து முகிலென முழக்கி வருவன
இதத்த கயிசிகம் இனித்த பயிரவி
எழுப்பி எழுவகை நிருத்த மிடுவன
இறப்பும் வரும்எழு பிறப்பும் அறஇனி
திருத்தும் எனமயில் விருத்த மொழிவன
இடைக்க ழியில்ஒரு செருத்த ணியில்இனி
திருக்கும் அறுமுகன் ஒருத்தன் இளையவன்
இளைத்து நிசிசரர் பதைத்து மடியவொர்
இமைப்பில் அமர்பொரு களத்தின் அலகையே.

---

## 8. செருக்களத்தலகை வகுப்பு

குதிரைத் திரள்பட் டபிணத் தையெடுத்
துதிரப் புனலிற் குளிக்கு மொருதிரள்
குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனிற் களிக்கு மொருதிரள்
கொடுகொட் டிபடத் துடிகொட் டிநடத்
தடமிட் டுவளைத் திருக்கு மொருதிரள்
குடரைப் புயமிட் டுடலைச் சிறுகக்
குலையிட் டதிரச் சிரிக்கு மொருதிரள்;

சதையைச் சிலகைக் கொளமற் றதனைச்
சருவிச் சருவிப் பறிக்கு மொருதிரள்
தறுகட் சிறுகட் டவளக் கவளத்
தமரத் திமிரப் பணைக்கை மதமலை
தலையுக் குளநற் றருணக் கிரணத்
தரளத் திரளைக் குவித்த டியெனுரல்
தனிவிட் டதனைத் தகுகைத் தலமுற்
றிடுநெட் டைமருப் புலக்கை முறைமுறை;

எதிரிட் டதுகுத் திமுடித் தலையொப்
பவடுப் பெனவைத் தெலுப்பு விறகினை
எரியிட் டெரியிட் டுருவத் துடனெட்
டுலைவைத் துணைவைச் சமைக்கு மொருதிரள்
இருள்செற் றதடித் தினையொத் திடுகட்
கமெடுத் தெரியத் தெறித்த தலைகளை
இதெனக் கதுனக் கதுமற் றதனுக்
கெனமொய்த் துலவிப் பொறுக்கு மொருதிரள்;

அதாத் துவிரற் படவைத் துமிகுத்
தரவத் தொடுகொக் கரிக்கு மொருதிரள்
அழுதொத் தனைத் தசைமுக் கியறத்
தவசத் துயிலிற் கிடக்கு மொருதிரள்
அடவிப் புனமுற் றகுறத் திருவுக்
கமைவுற் றமணிப் புயத்த னறுமுகன்
அடன்மிக் கதயித் தியர்பட் டுவிழப்
பொருதிட் டசெருக் களத்தில் அலகையே.

---

## 9. போர்க்களத்தலகை வகுப்பு

பகலிர வின்றியொர் புகறிசை நந்திய பற்பா னுத்தகை
படமுதல் விசும்பு தூர்த்த டுக்கு பிணமலை
பவுரிவ ரும்பரி புரநரல் பங்கய வித்தா ரத்தன
பயிரவி பதங்கள் வாழ்த்தெ டுத்த பசியன
பரியகொ ழுந்தசை பயிரவ ரென்றுப லிக்கா நிற்பவர்
பகரிட மறிந்து பாத்தி ரத்தி லிடுவன
பரவிவ ருங்குறள் பசிதணி யும்படி பட்டார் கைப்படு
பரிசையின் முகந்து கூட்டி றைச்சி சொரிவன
படுகள மென்பதொர் செறுவில் விளைந்தன பற்கோ வைப்பயில்
பவுரிவி சைகொண்டு தீட்டி மெத்த அடுவன
பரியணி திண்பணை முடியமடிந்துடல் பப்பா தித்துணி
படவிழு பெருங்கை மாக்க ருக்கல் பகிர்வன

படைவிச யந்தெரி சலதிவ லம்புரி பற்றூர் பட்டுள
பலபல விதங்க ளார்ப்பெ டுக்கு முதடின
பகடுபி ளந்ததன் உரிவைபு னைந்திடு குப்பா யத்தன
பதவியர் இணைஞ்செ யூட்டு டுத்த வுடையின ;

உகமுடி வன்றினும் வெருவவ ருும்பல வுற்பா தத்தன
வொளிமதி வகிர்ந்த கீற்றெ யிற்று நிலவின
உருவமி ருண்டன கிரிவி லங்கலின் உட்பாய் கிற்பன
உலவினி ணமொண்டு கூட்ட மைத்து றுகர்வன
உததியு றுஞ்சுவ வடவைநெ டுங்கனல் உட்கா கப்பெரு
குதிரபி சிதங்கள் பேர்த்தி றக்கி யிடுவன
உருமுமி டைந்தென வதிர்குர லின்றமில் ஒப்பே றிட்டுநி
ருதர்மவு லிகொண்டு கோட்டை யிட்டு மலைவன
உலகுகு லுங்கிட அரியது ணங்கையி னைச்சா திப்பன
உவணப டலங்கள் காக்கை சுற்றி வருவன
உலைதரு மென்குடர் இடைபட இந்திர னுத்யா னத்தலர்
உகிர்கொடு புனைந்த சூட்டு முற்றி மலைவன
உயரிப முங்குர கதகுல முங்கன பொற்றேர் வர்க்கமும்
உடைபடு கலங்கள் போற்சு ழித்து விரைபட
ஒழுகுதி ரந்தனின் முழுகியெ ழுந்தன உச்சா டத்துடன்
உடைகட லதிர்ந்து கூப்பி ளக்கு நடையின ;

செகதல மெங்கணும் அதிரமு ழங்கிய டிப்பாய் வெற்றிய
திரள்வரை பிடுங்கி நாட்டி யொட்டு குழையின
சினமலி வெங்குறள் இனமொடு திண்திறல் மற்போர் கற்பன
திசையள வுநின்று நீட்டி வைக்கு மடியின
திசைகள்தொ றும்பல குறைகளெ ழுந்துது டித்தா டச்சிறை
செறிகழு காங்கில் வீற்றி ருக்கு மாசின
திமிரபி லங்கிழி படவிசை கொண்டுகு தித்தா லிப்பன
சிகரவ டகுன்றி னூற்றி ரட்டி நெடியன
சிறியன கிண்கிணி அணிகுரு வின்சர ணத்யா னத்தின
திசைபட அகண்ட சீர்த்தி மெச்சி யிரைவன
திமிலைபெ ரும்பறை சிறுபறை நின்றதி ரச்சே வித்துயர்
சயமகள் விளங்கு வேற்க ரத்தை மொழிவன

திரிகட தொங்கிட திரிகட திங்கிட தித்தி செக்கண
செககண மொழிந்து கூத்த னைத்து நவில்வன
சிலைமலி திண்புய வசுரர்சி ரங்கள டிப்பா வைத்தவர்
செறிசுடர் நிணங்கள் காய்ச்சி மிக்க அயில்வன;

நிகறி லறம்புரி குருகுல பஞ்சவர் மெய்த்தூ துக்கொரு
நிமிடம திலன்று போய்க்க வித்த மணிமுடி
நிருபர்ப யங்கொள நெறுநெ றெனும்படி பொற்பீ டத்திடை
நிலைபெற விருந்து நூற்று வர்க்கும் அவாறி
நினைவுற அன்புறு மொருபதி னெண்குண வக்ரோ ணிப்படை
நிகிலமு மடிந்து கூற்று வற்கு நிறைவுற
நிலமகள் வன்பொறை கடியுமு குந்தன்மு தற்சேண் முட்டவு
நெறிபட நிமிர்ந்த வாக்கை யற்கு மருமகன்
நிமலைத்ரி யம்பகி கவுரிதி கம்பரி நிர்ப்பா வக்குண
நிபுணி யிரங்கு தாய்ப்ரி யத்த னறுமுகன்
நிகரக னங்குல சிகரிதொ டும்பெரு வெற்பார் உற்பல
நிறையருவி கொஞ்ச வோச்சி யத்தி லொளிர்சுனை
நியதியி னன்கலர் தணிகையெ னும்பதி நிற்பான் முற்பட
நெடுமகர சிந்து தீப்ப றக்க வெகுவித
நிபுடது ரங்கக சவிரத சங்க்ரம நிட்டு ரக்கொலை
நிருதரை முனிந்த போர்க்க ளத்தில் அலகையே.

---

## 10. திருஞான வேழ வகுப்பு

சடலை பட்டலை யுடலெ னப்படு
தரும சித்திர கூட மானவை
தவிர நிட்கள வெளியின் நிற்பன
சமய தர்க்கவி ரோத வாதிகள்
தகர வெற்றுவ புகர்ம தக்கிரி
தனையு ருக்குவ ஆசை ஆணவ
தளைஇ யற்கையை விடந டிப்பன
சனன முற்றிய சாத மாம்எழு;

கடல்க டப்பன படுகொ லைச்சமர்
கடக மப்படி சாய மோதுவ
கருவி னைத்தரும் இருவி னைத்தொடர்
கழல்ப தத்தன யோக சாதகர்
களைப றிப்பன கிளையெ னப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ
கருணை மெய்த்தவ திருவ ருட்கன
கவள மொக்குவ காம ராசனை;

அடல்கெ டுப்பன அகில கற்பனை
அரண ழிப்பன கோப மானவை
அவிய நற்பொறை யெனுந திப்பிர
ளயமி றைப்பன லோப மோகிதம்
அவைமு றிப்பன மதமு ழுத்தறி
யடிப றிப்பன ராச தாதியின்
அதிகு ணத்ரய மதிலி டிப்பன
அளவி றத்துவ தூளி வீசுவ;

திடமு டைச்சிறை மயிலு கைத்தெழு
சிகரி குத்திய வேலை நீள்சுனை
தினமு முற்பல மலர்தி ருத்தணி
இறைதி ருப்புகழ் பாடு நாவலர்
திரள்ப்ரி யப்பட இனித ளிப்பன
செயலொ ழித்தரு பூதி மீமிசை
திகழும் அற்புத மவுன நிர்க்குண
சிவம யத்திரு ஞான வேழமே.

---

## 11. திருக்கையில் வழக்க வகுப்பு

தருக்குவ செருக்களம் வெருக்கொள அதிர்ப்பன
தடக்கர நிமிர்த்துயர் உடுக்குலம் உதிர்ப்பன
தடித்தெழு குலப்புவி நடுக்குற அதிர்ப்பன
தழைச்செவி படைப்பன திரட்கயிலை யொப்பன

சதுர்த்தச தலத்தையும் எடுத்தக டவுட்பணி
சகஸ்ரப ணபத்தியும் ஒடுக்குற நடப்பன
சமுத்ரம தனத்தி லமுதத்துடன் உதிப்பன
தாத்தன தலைச்சுர நதிப்புனல் குளிப்பன ;

அருக்கர்ப தமுட்பட மிதித்திடு பதத்தன
அறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன
அரக்கர்ப டைகெட்டுமு றியப்பொரு பதத்தன
அயற்கு மமரர்க்குமொ ருபொற்பதி யளிப்பன
அளித்தவ முதுக்கவ ளமொக்குவ னமுத்தெறி
அலைக்கடல் கலக்குவ குலக்கிரி குலுக்குவ
அடித்தெழு பொருப்பினை நெருப்பெழ விழிப்பன
அதிக்ரம கமப்ரவு டவிக்ரம மதத்தன ;

மருக்குல வுகற்பக வனத்தலர் பறிப்பன
வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன
மதிப்பிள வெனச்செரு கிவைத்தென மணிச்சதுர்
மருப்பின இமைப்பற விழித்தந யனத்தன
வளைத்தகி ரியைப்பொடி படுத்திஇ பமெட்டையும்
அலைத்தவ ணடிப்பட மடப்பிடி அணைப்பன
மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன
மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன ;

திருத்திய புனத்திடை வனத்தழை யுடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
செகுப்பவன் நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்தக மலச்சர வணத்தறு முகப்பொருள்
செகத்ரய முகிழ்த்தவு தரத்திரி புரைக்கொரு
திருப்புதல் வனுற்பல கிரிப்பெயர் தரித்தருள்
திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.

---

## 12. வேடிச்சி காவலன் வகுப்பு

உதரகம லத்தினிடை முதியபுவ னத்ரயமும்
உகமுடிவில் வைக்கும்உமை யாள்பெற் றபாலகனும்
உமிழ்திரைப ரப்பிவரு வெகுமுககு லப்பழைய
உதகமகள் பக்கல்வரு சோதிச் சடானனனும்
உவகையொடு கிர்த்திகையர் அறுவரும்எ டுக்கஅவர்
ஒருவரொரு வர்க்கவனொ ரோர்புத் ரனானவனும்
உதயரவி வர்க்கநிகர் வனகிரண விர்த்தவித
முடையசத பத்ரநவ பீடத் துவாழ்பவனும்
உறைசரவ ணக்கடவுள் மடுவிலடர் வஜ்ரதர
னுடையமத வெற்புலைய வேதித் தவீரியனும்
உரைபெறவ குத்தருணை நகரிலொரு பத்தனிடும்
ஒளிவளர்தி ருப்புகழ்ம தாணிக் ருபாகரனும்
உரககண சித்தகண கருடகண யக்ஷகணம்
உபநிடமு ரைத்தபடி பூசிக் கும்வானவனும்
ஒருவனும கிழ்ச்சிதரு குருபரனும் உத்தமனும்
உபயமுறும் அக்நிகர மீதிற் ரபாகரனும்;

அதிமதுர சித்ரகவி நிருபனு மகத்தியனும்
அடிதொழுத மிழ்த்ரயவி நோதக் கலாதரனும்
அவரைபொரி எட்பயறு துவரைஅவல் சர்க்கரையொ
டமுதுசெயும் விக்நபதி யானைச் சகோதரனும்
அவுணர்படை கெட்டுமுது மகரசல வட்டமுடன்
அபயமிட விற்படைகொ டாயத் தமானவனும்
அருணையி விடைக்கழியில் உரககிரி யிற்புவியில்
அழகியசெ ருத்தணியில் வாழ்கற் பகாடவியில்
அறிவும்அறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியெனஇ மைப்பொழுதில் வாழ்வித் தவேதியனும்
அரிபிரம ருக்குமுதல் அரியபர மற்குயரும்
அருமறைமு டிப்பைஉப தேசித் ததேசிகனும்
அமலனு மெனக்கரசு மதிகுணனும் நிர்க்குணனும்
அகிலபுவ னத்தமர சேனைக் குநாயகனும்
அநுபவனும் அற்புதனும் அநுகுணனும் அக்ஷரனும்
அருமனமொ ழிக்கும்அநு பூதிச் சுகோதயனும்;

இதமகிதம் விட்டுருகி இரவுபக லற்றஇட
மெனதறஇ ருக்கைபுரி யோகப் புராதனனும்
எனதுமன சிற்பரம சுகமவுன கட்கமதை
யமன்முடிது ணிக்கவிதி யாவைத் தபூபதியும்
எழுமையுமெ னைத்தனது கழல்பரவு பத்தனென
இனிதுகவி யப்படிப்ர சாதித் தபாவலனும்
இமையவர்மு டித்தொகையும் வனசரர்பொ ருப்புமென
திதயமும ணக்குமிரு பாதச் சரோருகனும்
எழுதரிய கற்பதரு நிழலில்வளர் தத்தைதழு
வியகடக வஜ்ரவதி பாரப் புயாசலனும்
எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவளர்
இவுளிமுகி யைப்பொருத ராவுத் தனனவனும்
எழுபரித தத்திரவி எழுநிலமொ டக்கரிகள்
இடர்படமு ழக்கியெழு சேவற் பதாகையனும்
இணையிலியும் நிர்ப்பயனும் மலமிலியும் நிஷ்களனும்
இளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும்;

மதுகைபொடு சக்ரகிரி முதுகுநெளி யப்புவியை
வளையவரும் விக்ரமக லாபச் சிகாவலனும்
வலியநிக ளத்தினொடு மறுகுசிறை பட்டொழிய
வனசமுனி யைச்சிறிது கோபித் தகாவலனும்
வருசுரர்ம திக்கவொரு குருகுபெயர் பெற்றகன
வடசிகரி பட்டுருவ வேல்தொட் டசேவகனும்
வரதனும நுக்ரகனும் நிருதர்குல நிஷ்டுரனு
மறுபவன சித்தனும நோதுக் கபேதனனும்
வயிரிசைமு ழக்கமிகு மழைதவழ்கு றிச்சிதொறும்
மகிழ்குரவை யுட்டிரியும் வேடிக் கைவேடுவனும்
மரகதம ணிப்பணியின் அணிதழையு டுத்துலவும்
வனசரர்கொ டிச்சிதனை யாசிக் கும்யாசகனும்
மதனன்விடு புட்பசர படலமுட லத்தனையும்
மடலெழுதி நிற்குமதி மோகத் தபோதனனும்
வரிசிலைம லைக்குறவர் பாவியபு னத்திதனின்
மயிலெனஇ ருக்குமொரு வேடிச் சிகாவலனே.

## 13. சேவகன் வகுப்பு

இருபிறை எயிறு நிலவெழ உடலம்
இருள்படு சொருப முடைக்கோ விடவே
இறுகிய கயிறு படவினை முடுகி
எமபடர் பிடரி பிடித்தே கொடுபோய்;
அருமறை முறையின் முறை முறை கருதி
அதரிடை வெருவ ஒறுத்தால் வகையால்
அறிவொடு மதுர மொழியது குழறி
அலமரு பொழுதில் அழைத்தால் வருவாய்;
ஒருபது சிரமும் இருபது கரமும்
விழஒரு பகழி தொடுத்தோன் மருகா
உரமது பெரிய திரிபுரம் எரிய
உயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா;
மருவளர் அடவி வனிதையர் பரவ
மரகத இதணில் இருப்பாள் கணவா
வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சே வகனே.

---

## 14. வேல்வாங்கு வகுப்பு

திடவிய நெஞ்சுடை அடியர்இ டும்பைகெ டும்படி
தீயாங்குறை போயாழ்ந்தது
செயசெய வென்றிசை பரவிய எங்கள்கொ டுங்கலி
தேசாந்தர மேசாய்ந்தது
செயலுமை நஞ்சுறழ் மயலுறு நெஞ்சினர் வஞ்சகர்
தீமான்கதர் தாமேங்கினர்
சிகரத ரங்கித மகரநெ ருங்குபெ ருங்கடல்
தீமூண்டுதன் வாய்மாண்டது
தெரியலர் சென்றடை திசைகளில் எண்கரி சிம்பெழ
மாறுங்கிரி நூறுந்துளை
சிகரநெ டுங்கிரி குகைகடி தந்துதி கந்தமும்
லோகாந்தமு நீர்தேங்கின

சிறையுள ழுந்திய குறைகளொ ழிந்துசெ யங்கொடு
தேவேந்திரர் சேணாண்டனர்
திரிபுவ னங்களும் ஒருபய மின்றிவ ளங்கெழு
சீர்பூண்டற நேர்பூண்டன ;

விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி லங்கது
கால்பூண்டுதன் மேறீர்ந்தனன்
விகசித சுந்தர விதரண வைந்தரு வெங்தெழில்
வீவான்பொழில் பூவாய்ந்தது
விழைவுத ரும்பத சசிதன்வி ளங்கிய மங்கல
நூல்வாங்குகி லாள்வாழ்ந்தனள்
வெருவியொ துங்கிமை அவர்எவர் உஞ்சிறை வென்றித
மேலாம்படி யேமீண்டனர்
விழியொரி ரண்டொரு பதுசத நின்றெறி கண்டகன்
மேல்வாங்கிளை கால்சாய்ந்தது
வெளிமுழு துந்திசை முழுதும்வி ழுங்கியெ ழுங்கன
சூர்மாண்டற வேர்மாய்ந்தது
விபுதர்ப யங்கெட நிருதர்த ளங்கெட விண்கெடு
மேடாம்படி பாடோங்கின
மிடைகுறள் வெங்கொடி கழுகுப ருந்துவி ருந்தென
வூணார்ந்தகல் வானார்ந்தன ;

அடவிப டுஞ்சடை மவுலியில் வெம்பணி அம்பணி
யாமாங்கதர் வாமாங்கனை
அநுபவை அம்பிகை அநுதிதை அம்பைத்ரி அம்பகி
யாசாம்பரை பாசாங்குசை
அநகைஅ சஞ்சலை அதிகுண சுந்தரி அந்தரி
காலாந்தகி மேலாந்திரு
அமலைஅ லங்க்ருதை அபிநய பங்குரை சங்கினி
மானாங்கணி ஞானாங்குரை
அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்தவி ளைந்தழல்
வாய்கான்றிடு நாகாங்கதை
அபயவ ரம்புரி உபயக ரந்திகழ் அந்தணி
யாமாங்கறி தாய்மாண்பினள்

அதுலைத ருந்திரு மதலையி பங்கொள்ப யங்கொடு
பாய்மாண்கலை வாய்மாண்புன
அணிகுற மின்புணர் தணிகையில் அந்தணன் இந்திர
ராசாங்கம தாராய்ந்தவன் ;

வடவைஇ டும்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய
மாடாம்புடை நாடாண்டகை
வசைக்கரு துங்குரு பதியொடு தம்பிய ரும்பட
வேபாண்டவர் தேரூர்ந்தவன்
வளவில்வ ளர்ந்திடை மகளிர்கு விந்துத டங்குடை
வார்பூந்துகில் வார்பூம்புயல்
வரைநிரை கன்றின முழுதும யங்கிய பண்கெழு
வேயேந்திய வாயான்கழல்
மருதிடை சென்றுயர் சகடுத டிந்தடர் வெம்புளை
வாய்கீண்டொரு பேய்காய்ந்தவன்
மதசயி லம்பொர வரவிடு நெஞ்சினில் வஞ்சக
மாமான்பகை கோமான்திரு
மருகன்நி ரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி
வாகாம்பரை தோய்காங்கெயன்
மகபதி தன்பதி பகைகிழி யும்படி அன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே.

---

## 15. புயவகுப்பு

வசைதவிர் ககன சரசிவ சுரண மகாவ்ருத
சீல சால வரமுநி சித்தரை
அஞ்ச லஞ்ச லென்று வாழ்வித் துநின்றன
மணிவட மழலை யுடைமணி தபனி யநாணழ
காக நாடி வகைவகை கட்டும
ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன
வருணித கிரண வருணித வெகுத ருணதப
சோதி யாடை வடிவுபெ றப்புனை
திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன

வளைகட லுலகை வலம்வரு பவுரி விநோதக
லாப கோப மயில்வத னத்துவி
ளங்கு மங்கு சங்க டாவிச் சிறந்தன
வரைபக நிருதர் முடிபக மகர மகோததி
தீயின் வாயின் மறுகவி திர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன
மதியென உதய ரவியென வளைப டுதோல்வி
சால நீல மலிபரி சைப்படை
கொண்டு நின்று மூன்று சாதிக் கமழ்ந்தின
மனகுண சலன மவினமில் துரிய அதீதசு
காறு பூதி மவுனநி ரக்ஷர
மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன
வகைவகை குழுமி மொகுமொகு மொகென அநேகசு
மூக ராக மதுபம்வி ழச்சிறு
சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன ;

மிசைமிசை கருவி வெளிமுக டளவு நிசாசர
சேனை தேடி விததிபெ றச்சில
கங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன
வெருவுவ வெருவ எரிசொரி விழியு ளபூதபி
சாசு போத மிகுதொனி பற்றிமு
ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன
விதமிகு பாத சுரவனி தையர் கணமேறும்
லீலை யாக விமலச லத்தினை
விண்தி றந்து மொண்டு வீசிப் பொலிந்தன
விதரண தருவின் மலரிடை செருகி யகூதள
நீப மாலை விபுதர்கு லக்குவி
சன்ய யந்த செங்கை யானைக் கிசைந்தன
விகசித தமர பரிபுர முளரி தொழாஅபி
ராம வேடர் விமலைதி னைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன
விதிர்தரு சமர முறிகர கமல நகாயுத
கோழி வீற விதரண சித்ரவ
லங்க்ரு தம்பு னைந்து பூரித் திலங்கின

விரகுடை எனது மனதுடன் அகில்ப னிநீர்புழு
கோட ளாவி ம்ருகமத கர்ப்புர
குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன
வினைபுரி பவனி தொழுதழு துருகி யகோதையர்
தூது போக விடுமது பக்ஷண
வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன ;
இசைதனில் இனிய கயிசிகை கவுட வராளித
ஞசி தேசி பயிரவி குச்சரி
பஞ்சு ரங்தெ ரிந்து வீணைக் கிசைந்தன
இறுதியில் உதய ரவிகண கிகரெ னஆறிரு
காது தோயும் இலகும ணிக்கன
விம்ப குண்ட லங்கள் மேவிப் புரண்டன
எதிர்படு நெடிய தருவடு பெரிய கடாமுமிழ்
நாக மேக மிடிபட மற்பொரு
திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின
எழுதரும் அழகு நிறமலி திறல்இ சையாகவு
தார தீர மெனவுரை பெற்றவ
டங்க லுஞ்சி றந்து சாலத் ததும்பின
இருள்பொரு கிரண இரணிய வடகு லபாரிய
மேரு சாதி இனமென வொத்துல
கங்க ளெங்க ணும்ப்ர காசித் துநின்றன
இயன்முநி பரவ ஒருவிசை அருவ ரையூடதி
பார கோர இவுளிமு கத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன
இபரத துரக நிசிசரர் கெடவொ ருசூரனை
மார்பு பீறி அவனுதி ரப்புனல்
செங்க ளந்து ளங்கி ஆடிச் சிவந்தன
எவைஎவை கருதில் அவையவை தருகொ டையான்மணி
மேக ராசி சுரபிய வற்றொடு
சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன;
அசைவற நினையும் அவர்பவம் அகல வெமேல்வரு
கால தூத ரையுடையு மப்படி
அங்கும் இங்கும் எங்கும் ஓடத் துரந்தன

அகிலமும் எனது செயல்அல திலைன யானென
வீறு கூறி அறவுமி குத்தெழும்
ஐம்பு லன்தி யங்கி வீழத் திமிர்ந்தன
அனலெழு துவசம் உடுகுலம் உதிர வியோமமும்
எழு பாரும் அசலமும் மிக்கபி
லங்க ளுங்கு லுங்க ஆலித் ததிர்ந்தன
அடல்நெடு நிருதர் தளமது மடிய வலாரிதன்
வாழ்வு யாள அரசுகொ டுத்தப
யம்பு குந்த அண்டர் ஊரைப் புரந்தன
அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாடல் அளிமுரல் செச்சைஅ
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன
அரியதொர் தமிழ்கொ டுரிமையொ டடிதொ ழுதேதகவி
மாலை யாக அடிமைதொ டுத்திடு
புன்சொ லென்று நிந்தி யாமற் புனைந்தன
அழகிய குமரன் உமைதிரு மதலை பகீரதி
மாதர் வாழும அறுவர் ப்ரியப்படு
கந்தன் எந்தை இந்த்ர நீலச் சிலம்பினன்
அநுபவன் அநகன் அனனியன் அமலன் அமோகன்அ
நேகன் ஏகன் அபினவன் நித்தியன்
அஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்களே.

---

## 16. சித்து வகுப்பு

அடல்பு னைந்த வேலு மயிலு மென்றும் வாழி
அரிய தொன்று கூற அருகி ருந்து கேண்மின்
அளவில் பலகாய மோடாடி அண்டர்
அறிய விளையாட லாமுவி யொன்றில்
ஆசை வேறிலை அறுமுக வன்திரு
வாழ்வு மேருவை அடிதலை கண்டனம்
அகில லோகமும் அடைவடை வேமுதல்
அருளி ஞைமது சிவனறி யாதல

அமையு மெனும்படி நின்றம நோரதம்
    அவைமு ழுதுந்தரு வம்பத ருதுகொள்
ஆதியும் முடிவுமி லாநந் தந்தரும்
    ஆறிரு கரதல நாதன் றந்தவை
அவுஷத முளசில கிலுகி லுப்பைகள்
    அரசிலை நறுவிலி கரிய கக்கரி
அத்தி செம்பி ராகை முட்காவளை
    துத்தி சங்க மோரி தழ்த்தாமரை
அவுரி கற்றாழை யொடுவைகு றிஞ்சிலி
    சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம்
ஆரைகொடு வேலிவேல் காஞ்சிரம்
    வீரையிரு வேலிபே ரீந்திலை
அமுக்கிணை எருக்கிலை முருக்கிதழ் செருப்படை
    அகத்தி தமரத்தை மதமத்தமொடு பித்திகை
ஆல மாத்திக டுக்கைகொ டிக்கழல்
    கோலி தேட்கடை நெய்க்கொடை வக்கணை

அகில்ப ரம்பை காரை துடரி தும்பை சூரை
    அலரி சம்பு நாவன் மருது சிந்து வாரம்
அறுகு தழுதாழை மாபாலை புன்கு
    புரசு பழுபாகல் பூலாவ ழிஞ்சில்
ஆயி லாவிரை இறலிஇ ரும்பிலி
    ஆடி ஆவணி புடமிட வென்றழை
அவனி பாடல மனலம கீருகம்
    இவைச மூலமும் எழுபது சாலடை
அதிம துரந்தக ரஞ்சிறு பாலடை
    பதிமுக வெந்தய மின்கய மோதகம்
ஆறிடை அபினரி தாரங் கந்தக
    நூறிடை திரிபலை யோரொன் றெண்பலம்
அதிவிட யமும்மொழி கிருமி சத்ருவு
    மனன்முறு கலும்அற முறகு துத்தமும்
அற்பம் ஒன்று கீரை வித்தேழிடை
    யத்தில் ஒன்று பாதி தக்கோலமும்

அடவி கச்சோல நிமிளை நறும்பிசின்
அரிதம் வெட்பாலை அரிசிக ருங்கணி
ஆமலக மேலநான் மூன்றிடை
சேமசிலை கூடலோ காஞ்சனம்
அரப்பொடி கடிப்பகை விடத்திர ணமப்பிர
கசத்தைசு தகுப்பிவி தைகொத்தம லிதிப்பிலி
ஆலி கோட்டமெ லிப்பகை சச்சிலை
நீலி காய்ச்சுநி லப்பனை கற்பிசின் ;

மடல்சி வந்த தாழை மணவ சம்பு நீலம்
வருகு றும்பை கோடல் துருசு சம்பி ராணி
மரிசி வசவாசி காசீச மஞ்சள்
மகிழ விதைமேதை மாமேதை குன்றி
வாரி வாய்நுரை சயிலச லம்புரி
பூரி வாதுமை சணவுபெ ருங்குமிழ்
வடுவில் சீரக பலமயி ரோசனை
கடுகு ரோகணி சிவிதைம ஞேசிலை
வகைவ கைகொண்டொரு மண்டலம் ஓரொடு
குகையி னிலெண்பது செம்பினில் ஊறவை
வாதநல் வழிக ளநேகம் பண்டையில்
வாகட மலகுரு நாதன் தந்தது
வழிபடு மரியா பிரம ருட்பட
மொழிகிற வகையிது சிறிது பெற்றிலர்
மற்று மிந்த்ர சால முச்சாடன
முற்று மிங்ங னேத ரத்தாழ்விலை
மதலை யர்க்கீது மொழிவது பண்பல
கதவி னிற்றுழை இடுபய மொன்றிலை
வாலுழுவை யோரிகா ராம்பசு
வாலின்மயிர் கீரிதே வாங்கழை
மரித்தவர் சனித்தகு ழியுப்புறு சலத்தினை
வடித்தினி தெடுத்தொரு குடத்தினி னிறைத்துவை
மாறில் தோத்திர வித்தைப லித்திடின்
மாடை சேர்க்கவ ருத்தமு னக்கிலை

மணம தின்று நாளை எனமொ ழிந்து கேளும்
மனைக ளெங்கும் ஓடி இனிவி ரைந்து தேடு
வளையல் குழைபீலி காலாழி தண்டை
மணிவ யிரவீடு மேலீடு செம்பொன்
வாளி பாடக மணிபிறை சங்கிலி
பாளை சூடக மயில மிலம்பகம்
மவுலி நூபுர மயில்திரு வாசிகை
சவடி தோள்வளை முகவளை மேல்வளை
மரக தகுண்டலம் வெண்டய மேகலை
அரசி லைகம்பிகு றுங்குணி சாலகம்
வாரணி யுடைமணி யாரங் கிங்கிணி
வாகுவ லயநெளி பீடங் கண்டிகை
மணிமக ரிகைவளை திகிரி பட்டிகை
பணிகளில் அழகிய பணிகள் கொக்கிகள்
வட்ட வம்பொ னோலை முத்தாவளி
சுட்டி சந்து காறை கைக்காறைகள்
வடக முத்தோலை அரைவட முஞ்செறி
கடகம் வித்தார மகரநெ டுங்குழை
மாதரணி தாலிநூல் காஞ்சன
மாலிகைம தாணிபீ தாம்பரம்
மதிப்பரி யகைச்சரி சரப்பணி இலைச்சினை
பதக்கமி வையுட்பட அணிப்பட லமிட்டுவை
மாடை பாட்டிபு தைத்தகு டப்பண
மோடு கூட்டியு ருக்கவி ருப்புடன் ;

இடுப்ர சங்கி யாம லுலைய நந்த கோடி
எரியில் வெந்தி டாத கரிநி ரம்ப வேணும்
இதுப ழையகவுரி பாஷாண உண்டை
இடுச கலவேதி பூநாக செம்பின்
ஈய மானதொர் இரதமும் எண்பலம்
எழு கோடியும் இரவுசி வந்திடும்
யமுனை நீர்கொடு குகைபதி னாயிரம்
இறுக வேசமை நிலவறை யூடுவை

எழுப தொடெண்பது வண்டியி லேபதர்
இடுகொ டுவெந்துசொ ரிந்துகு வாலிடு
யாமொழி படரச வாதந் தந்தன
நீசிவ குருஉப காரங் கண்டிரு
இரதமொ டுருகிய சருகு பித்தளை
இவைஇவை குகைதொறு மிடைந றுக்கிவை
எற்ற வந்தி ராது பொய்க்காளல
எட்டி ரண்டும் ஆறு தப்பாதுகொள்
எழுப தக்ரோணி புடமுள செங்களம்
ரணமு கத்தானை படையொடு வந்திரு
ஈழம்வெகு கோடியா னீந்திட
ஏழுநில மாடநீ மேய்ந்துகொள்
இபத்திரள் உரித்தன பருத்தன துருத்திகள்
இலக்கற உனக்கரு கடுக்கிவை சடக்கென
யாவும் வாய்ப்பது சத்யம்உ னக்கிவை
ஏழு நாட்டரும் மெத்தஇ ளைத்தனம்

இறைவர் குன்ற மானை மணம கிழ்ந்த நாளில்
இணையில் அண்ட ரோடும் உணவு கொண்ட தாகும்
எமது பசிதீர மாராச விந்த்ர
வமுது படைபோத ஆகாச கங்கை
யாறு போலநெய் சொரிவட கம்படை
நூறு சாலொடு பொரியலை யிங்கழை
இடுக மாவடு வடையிடை கீரையி
லவண மீறிய கறியடை வேபடை
இருப துதண்டையு டும்புகு வால்சமை
துருவை கள்பன்றிச மைந்தவெ லாமழை
யாமையை யழைமுய லாணங் கண்டறி
யோமிது சிவசிவ மேலெங் கும்படை
இடைவெளி யறமிகு விடுக ருக்கலை
யிறவகை கயல்கெளி றிவைபொ டித்தன
எட்டு வண்டி வானை யிப்பிலியில்
இட்ட முண்டு தீயன் முற்பாடழை

இடைகொ ழூப்பாடில் இளையள லும்புடன்
அடைசு ரைக்காயில் அடுபடை மூன்கறி
ஈறுபுளி வார்விடாய் போம்படி
ஏடுபிரி யாதபால் தேன்சொரி
இருக்கிற சருக்கரை வருக்கைக தலிக்கனி
ரசத்தினை அனைத்தையும் இலைக்குள டையப்படை
ஈக பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம்
யாரு மேத்தஇ னிச்சுக முற்றிரு;

மிடைத ரும்ப்ர வாள சடைபெ ரும்ப்ர வாக
விமலர் கொன்றை மாலை தருண சந்த்ர ரேகை
விரவு மணநாறு பாதார விந்த
விதர ணவிநோத மாதாவின் மைந்தன்
மீன கேதனன் உருவின்மி குந்தருள்
தான வாரிதி சரவண சம்பவன்
விகிர்தி வேதனன் மவுனசு காதனன்
அகில காரணன் அகிலகலா தரன்
விகசி தசுந்தர சந்தன பாளித
ம்ருகம தகுங்கும கஞ்சப யோதரி
வேழமும் உழைகளு மாரும் பைம்புன
மேவுறு குறமகள் மேவுந் திண்புயன்
விரிகடல் துகளெழ வெகுளி விக்ரமன்
அரிதிரு மருமகன் அறுமு கத்தவன்
வெட்சி கொண்ட தோளன் வெற்பூடுற
விட்ட வென்றி வேல்மு ழுச்சேவகன்
விரவு நக்கீரர் சரணென வந்தருள்
முருகன் நிஷ்க்ரோத முநிகுண பஞ்சரன்
மேதகுபு ராணவே தாங்குரன்
ஓதரிய மோனஞா னங்குரன்
மிகைத்தவர் புரத்ரயம் எரித்தவர் ப்ரியப்பட
அகஸ்திய முநிக்கொரு தமிழ்த்ரயம் உரைத்தவன்
வேத மூர்த்திதி ருத்தணி வெற்புறை
சோதி கார்த்திகை பெற்றவி ளக்கொளி

வெகுளி வென்ற வேள்வி முநிவர் சங்கம் ஏற
விரவும் இந்த்ர லோக வழிதி றந்த மீளி
மிகவி ருதுகூறு மேவார்கள் கண்டன்
விகட அசுரேசர் சாமோது சண்டன்
மேக வாகன மிகுமத வெண்கய
பாக சாதனன் நகரிபு ரந்தவன்
விபுத தாரகன் விபுததி வாகரன்
விபுத தேசிகன் விபுதசி காமணி
விபரி தகஞ்சவி ரிஞ்சப ராமுகன்
அபின வகந்தன் அடைந்தவர் தாபரன்
மேருவை இடிபட மோதுஞ் சங்க்ரம
தாரகன் மகுடவி பாடன் புங்கவன்
வெயிலுமிழ் கொடியொடு வினைமு கத்தினில்
மயில்மிசை வரும்ஒரு வரதன் நிர்ப்பயன்
வித்த கன்சு வாமி நிர்ப்பாவகன்
சத்தி யன்ப்ர தாப வித்யாதரன்
விரத நட்பாளர் பரியும சஞ்சலன்
நிருத நிட்டூரன் நிருதர்ப யங்கரன்
வீரமத லோகவேள் காங்கெயன்
சூராண சூரசூ ராந்தகன்
வினைப்பகை அறுப்பவன் நினைத்தது முடிப்பவன்
மனத்துயர் கெடுத்தெனை வளர்த்தருள் க்ருபைக்கடல்
வேலன் வாய்த்ததி ருப்புகழ் கற்றவர்
சீல மேத்திய சித்தப்ர சித்தரே.

---

## 17. கடைக்கணியல் வகுப்பு

அலைகடல் வளைந்து டுத்த எழுபுவி புரந்தி ருக்கும்
அரசென நிரந்த ரிக்க வாழலாம்
அளகைஅ ரசன்ற னக்கும் அமரா ரசன்ற னக்கும்
அரசென அறஞ்செ லுத்தி ஆளலாம்

அடைபெறு வதென்று மூத்தி யதிமது ரசெந்த மிழ்க்கும்
அருள்பெற நினைந்து சித்தி யாகலாம்
அதிரவ ருமென்று முட்ட அலகில்வி னைசண்டை நிற்க
அடலெதிர் புரிந்து வெற்றி யாகலாம் ;

இலகிய நலஞ்செய் புட்ப கழுமுடன் நிறம்வெ ளுத்த
இபஅர செனும்பொ ருப்பும் ஏறலாம்
இருவர வர்நின்றி டத்தும் எவரெவர் இருந்தி டத்தும்
ஒருவனிவ னென்று ணர்ச்சி கூடலாம்
எமபடர் தொடர்ந்த ழைக்கில் அவருடன் எதிர்ந்துள் உட்க
இடியென முழங்கி வெற்றி பேசலாம்
இவையொழி யவும்ப லிப்ப தகலவிடு மூங்கள் வித்தை
இனைஇனி விடும்பெ ருத்த பாருளீர் ;

முலையிடை கிடந்தி ளைப்ப மொகுமொகெ னவண்டி ரைப்ப
முகையவிழ் கடம்ப டுத்த தாரினன்
முதலிபெ ரியம்ப லத்துள் வரையச லமண்ட பத்துள்
முநிவர்தொ ழஅன்று நிர்த்தம் ஆடினன்
முனைதொறு முழங்கி ஒற்றி முகிலென இரங்க வெற்றி
முறைநெறி பறந்து விட்ட கோழியான்
முதியவு ணர்அன்று பட்ட முதியகு டர்நன்று சுற்று
முதுகழு குபந்த ரிட்ட வேலினன் ;

மலைமரு வுபைம்பு னத்தி வளருமி ருகுன்ற மொத்தி
வலிகுடி புகுந்தி ருக்கும் மார்பினன்
மழலைகள் விளம்பி மொய்த்த அறுவர்மு லையுண்டு முற்றும்
வடிவுடன் வளர்ந்தி ருக்கும் வாழ்வினன்
மலையிறை மடந்தை பெற்ற ஒருமத லையென்று தித்து
மலையிடி யவுந்து ணித்த தோளினன்
மயிலையும் அவன்திருக்கை அயிலையும் அவன்க டைக்கண்
இயலையும் நினைந்தி ருக்க வாருமே.

---

## 18. சிவலோக வகுப்பு

உரகமும் இதழியும் உதகமும் உடுபதி யும்புனை
யும்பஞ் சாட்சரர் பங்கின் கொடிதாளினில்
உலகமு மலைகளுஞ் உததியும் உயிரு மடங்கவொ
டுங்கும் பார்ப்பதி மைந்தன் கமலாலயன்
உபநிட முடியினும் இடபம தனிலுமு யங்கிவ
யங்குஞ் சீர்ப்பதி ஒன்றெறன் றவிதாவென
உறைவிடு படையினன் அடலுடை நிசிசரர் தண்டமு
டைந்தங் கார்ப்பெழ வங்கம் பொருசேவகன்;

வரபதி சுரபதி சரவண மடுவினில் வந்தருள்
கந்தன் கார்த்திகெ யன்செங் கழுநீர்மலர்
மருவிய குருபரன் வனசரி பதயுக கஞ்சம்வ
ணங்கும் பாக்யக தம்பன் கருணாகரன்
வடதரு விலையிலும் வெகுமுக மவுலிய னந்தனெ
னுஞ்செஞ் சேக்கையி லுங்கண் டுயின்மாறிரு
மருமகன் இமையவர் வழிபடு மணியணி கிங்கிணி
பண்கொண் டார்த்திசை கொஞ்சும் பதசூடிகை;

அருவுரு வொழியவொர் அபிநவ வடிவரு ளுந்தனி
அந்தந் தீக்ஷை னுங்குண் டலபூஷணம்
அணிமய மெனுமொரு சிவிகையொ டதிகுண மஞ்சினு
மஞ்சொன் முக்கிய தென்பொங் கரியாசனம்
அறநெறி முறைமையில் ஒழுகிய அழகிய பண்பெனும்
அம்பொன் சேர்த்தக லிங்கஞ் சயசாரமும்
அவனவ ளதுவென மொழியவு மிலதொரு வன்பிணி
யுங்கொண் டாக்கமும் இன்பங் களுமேதரும்;

இரவலர் மிடிகெட உதவிய விதரண கங்கண
மிங்கங் காப்பிலெ னுஞ்சுந் தரகாகளம்
எனதற துறவினும் உயர்கொடை யவிரத சங்குல
கெங்குங் கேட்டுவெ ழுங்கும் பொறைமாமுர
சிமையவர் கணமுனி கணமுடன் இனிதுப்ர பஞ்சம்இ
றைஞ்சுங் கீர்த்திது ரங்கந் திறல்வாரணம்
இருவினை கெடஒரு நிரமய பரமவு னந்தரும்
இன்பந் தேக்கிய அன்பின் சிவலோகமே.

# 19. மயில் வகுப்பு

ஆதவனும் அம்புலியும் ஆசுறவி மூங்கியுமிழ்
ஆலமரு வும்பணிஇ ரண்டும் அழுதே
ஆறுமுகன் ஐந்துமுகன் ஆனைமுகன் எங்கடவுள்
ஆமெனமொ ழிந்தகல வென்று விடுமே
ஆர்கலிக டைந்தமுது வானவர்அ ருந்தஅரு
ளாதிபக வன்துயில்அ நந்தன் மணிசேர்
ஆயிரம்இ ருந்தலைக ளாய்விரிப ணங்குருதி
யாகமுழு துங்குலைய வந்த றையுமே ;

வேதமுழு தும்புகலி ராமனொரு தம்பிமிசை
வீடணன்அ ருந்தமையன் மைந்தன் இகலாய்
வீசுமர வஞ்சிதறி யோடவரு வெங்கலுழன்
மேலிடிஎ னும்படிமு ழங்கி விழுமே
மேதினிசு மந்தபெரு மாசுணம யங்கநக
மேவுசர ணங்கொடுல கெங்கு முழுமே
வேலினை எண்திசையில் வாழும்உர கந்தளர
வேயழலெ னுஞ்சினமு டன்ப டருமே ;

போதினிலி ருந்தகலை மாதினைம ணந்தவுயர்
போதனைஇ ரந்துமலர் கொண்டு முறையே
பூசனைபு ரிந்துகொடி யாகிமகி ழொன்றுதுகிர்
போல்முடிவி ளங்கவரும் அஞ்சம் அடுமே
பூதரொடு கந்தருவர் நாதரொடு கிம்புருடர்
பூரணக ணங்களொடு வந்து தொழுமே
போரிடுவ வென்றுவெகு வாரணக ணங்களுயிர்
போயினமெ னும்படியெ திர்ந்து விழுமே ;

கோதகலும் ஐந்துமலர் வாளிமத னன்பொருவில்
கோலவுட லங்கருகி வெந்து விழவே
கோபமொடு கண்டவிழி நாதரணி யும்பணிகள்
கூடிமன மஞ்சிவளை சென்று புகவே
கூவியிர வந்தமுணர் வாழியென நின்றுபொரு
கோழியொடு வென்றிமுறை யும்ப கருமே
கோலமுறு செந்திநகர் மேவுகும ரன்சரண
கோகனதம் அன்பொடுவ ணங்கு மயிலே.

## 20. கோலு வகுப்பு

அருமறை யவன்முதல் அரிஅரன் மகபதி
அநங்கன் இமையோர் இனங்கள் ஒருபால்
அருணனும் மதியமும் அனலெழு கனலியும்
அணங்கி னொடுசூழ் கணங்கள் ஒருபால்
வருணனும் நிருதியும் வழியொடு தனதனும்
மகிழ்ந்து மிகவே புகழ்ந்த தொருபால்
வயிரவ ரொடுபடர் உவணரும் உரகரும்
வரங்கள் பெறவே இரங்க ஒருபால்
இருடிகள் எவர்களும் இனியகின் னரர்களும்
இணங்கி எதிரே வணங்க ஒருபால்
இபமுக வனும்எழில் இளவல்கள் அனைவரும்
இயன்ற நெறியே முயன்ற தொருபால்
உருமலி குறளின மொடுவசு முசுமுகன்
உறைந்து பரிவாய் நிறைந்த தொருபால்
உடுவொடு நடவுபன் னிருவரும் முறைமுறை
உகந்து தொழவே மிகுந்த தொருபால் ;

அடல்விடை முகன்அறை கதையுற வெகுசனம்
அதுங்கி அருகே ஒதுங்க ஒருபால்
அயன்முடி திருகிய வயவனும் நியமமொ
டடங்கி வலமே தொடங்க ஒருபால்
மடல்புனை புகரொடு வருபதி னொருவரும்
மருங்கி னுறவே நெருங்க ஒருபால்
மருவொடு துவர்இரு வருமிசை வலமொடு
வசிந்து மனமே கசிந்த தொருபால்
மிடல்இறை விறல்அரி விமலர்கள் அருள்சுதன்
வியந்து விரைவாய் நயந்த தொருபால்
வெயில்விரி சுடரவன் மகனொடு மதிமகன்
விளம்பு முறையே கிளம்ப ஒருபால்
உடலொளி மவுனிக ளுடன்உப னிடதரும்
உளங்கு ளிரவே விளங்க ஒருபால்
உமைதிரு மகள்நில மகள்கலை மகளொடும்
உகந்தெ வருமே தொகுந்த தொருபால் ;

அதிபகி ரதிபயி ரவிபக வதிசகி
அரம்பை யருமே நிரம்ப ஒருபால்
அழகிய கவுரியொ டிலகிய வலவையும்
அடைந்து தயவாய் மிடைந்த தொருபால்
மதியர சருநிறை வசியரும் விஞைரும்
மலிந்து முகமே பொலிந்த தொருபால்
வருசிவ னடியவர் அரகர எனமுறை
வழங்கு கடல்போல் முழங்க ஒருபால்
விதிமுறை கருதியை வகைபுரி கருவிகள்
விளைந்த ஒலிவான் அளைந்த தொருபால்
விதமுடன் அபிநய வனிதையர் சதிமுறை
விரிந்த நடமே புரிந்த தொருபால்
உதிர்தரு மலர்விரை உறுபுகை ம்ருகமதம்
உமிழ்ந்த மணமே கமழ்ந்த தொருபால்
ஒழுகிய கிரிதொடு பணிதம தடுசுடர்
உவந்த ஒளியே நிவந்த தொருபால்;

அரியக டனமுக டளவிய வொருகுடை
அமர்ந்த நிழலே சமைந்த தொருபால்
அருமட வனமென இருபுடை கவரிகள்
அசைந்த அழகே இசைந்த தொருபால்
வரிசைசெய் துயிலொடு வனமயில் சிவிறியின்
வயங்கு சிறுகால் இயங்க ஒருபால்
மறுகட லினில்எழு நிறைமதி அமுதென
வரிந்து பனிநீர் சொரிந்த தொருபால்
விரியிருள் வலிதரு கிரணம தெனநல
மிகுஞ்சு ழலில்வீ சுகுஞ்ச மொருபால்
வியன்மர கதமணி மிளிர்தரு களசெதிர்
விரைந்து நிரையாய் நிரைந்த தொருபால்
உரியவெ ளிலையுடன் உயரிய கமுகினில்
உகுந்த கனியே பகுந்த தொருபால்
உலகுள வனிதையர் அவரவர் விரதமொ
டுணர்ந்து கனியே கொணர்ந்த தொருபால்;

அறுகதி ரவரென அறுமணி மவுலிகள்
அடர்ந்து வெயிலே படர்ந்த தொருபால்
அறுமதி எனஅறு திருமுக சததளம்
அலர்ந்த மலரே மலர்ந்த தொருபால்
மறுவறு கடலென மருவுபன் னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்
வனைதரு மகரமும் மணியணி பணிகளும்
வயங்கு குழையே தயங்க ஒருபால்
இறுகுபொன் மலையொடும் இடறுபன் னிருபுயம்
இசைந்து நெடுவான் அசைந்த தொருபால்
எழில்விளை அணையபன் னிருகையில் அயில்முதல்
இலங்கு படையே துலங்க ஒருபால்
உறுவரை அருவியை நிகர்தரும் உரமிசை
உடன்கொள் புரிநூல் கிடந்த தொருபால்
உருமென இகலிமுன் எதிர்பொரும் அவுணருள்
உடைந்த உடைவாள் சிறந்த தொருபால்;

அநவர தமும்மறை முறையிடு பரிபுரம்
அலங்கும் இருதாள் குலுங்க ஒருபால்
அளவறு கலவியில் முழுகிய குறமகள்
அமர்ந்துள் ஒயிலாய் நிமிர்ந்த தொருபால்
வனதரு வினில்உறை சதமகன் அருள்மகள்
வதிந்து மணமே பொதிந்த தொருபால்
வரும்அடி யவரிடம் வலியச நதம்வர
வளர்ந்த சபையே கிளர்ந்த தொருபால்
நினைவொடு பணிபவர் வினைதுகள் படஎதிர்
நினைந்து திருநீ றணிந்த தொருபால்
நிறைமல ரொடுநல கலவையும் உயர்குரு
நினைந்து தரவே புனைந்த தொருபால்
தினகரன் உலவுச நிதியினில் இரவலர்
தெளிந்த தமிழே பொழிந்த தொருபால்
சிவபர கிரியினில் ஒருசிவன் வடிவொடு
திருந்த முருகோன் இருந்த கொலுவே.

## 21. வீரவாள் வகுப்பு

பூவுளோ னுக்கும்உயர் தேவர்கோ னுக்கும்எழு
பூவில்யா வர்க்கும்வரு துன்புதீர்த் திடுமே
பூதசே னைக்குளொரு கோடிசூர் யப்பிரபை
போலமா யக்கரிய கங்குல்நீக் கிடுமே
பூதிபூ சிப்பரமர் தோலைமே விட்டதொரு
போர்வைபோ னெட்டுறைம ருங்குசேர்த் திடுமே
போரிலே நிர்த்தமிடு வீரமா லக்ஷ்மிமகிழ்
பூசைநே சித்துமலர் தும்பைசாத் திடுமே;

பாவரூ பக்கொடிய சூரனுர் பெற்றபல
பாலர்மா ளத்தலைக ளுண்டுதேக் கிடுமே
பானுகோ பப்பகைஞன் மேனிசோ ரக்குருதி
பாயவே வெட்டியிரு துண்டமாக் கிடுமே
பாடுசேர் யுத்தகள மீதிலே சுற்றுநரி
பாறுபேய் துய்த்திடநி ணங்களூட் டிடுமே
பாடியா டிப்பொருத போரிலே பத்திரக
பாலிசூ லப்படையை வென்றுதாக் கிடுமே;

ஆவலா கத்துதிசெய் பாவலோர் மெய்க்கவிக
ளாமகோ ரக்களைக ளைந்துநீக் கிடுமே
யாருமே அற்றவனென் மீதொரா பத்துறவ
ராமலே சுற்றிலுமி ருந்துகாத் திடுமே
ஆடல்வேள் நற்படைக ளாணையா வுக்குமுதல்
ஆணையா வைத்துவலம் வந்துபோற் றிடுமே
ஆலகா லத்தைநிகர் காலசூ லத்தையும
ரூதபா சத்தையும ரிந்துபோட் டிடுமே;

மேவலார் முப்புரமும் நீறவே சுட்டஒரு
மேருவாம் விற்பரமர் தந்தபாக் கியவான்
வேடர்மா னுக்கும்உயர் தேவயா னைக்குமிசை
வேலர்தா ளைத்தொழுது யர்ந்தவாழ்க் கையினன்
வீறுசேர் மிக்ககண நாதனுர் எட்டுவகை
வீரர்நே யத்தலைமையன் என்றதோள் துணைவன்
மேன்மையாம் லக்ஷரத வீரர்பூ சிக்கவரு
வீரவா குத்தலைவன் வென்றவாட் படையே.

## 22. சிவகிரி வகுப்பு

மெத்த மெத்த வக்ர மத்தின்
மெத்த மெத்த விக்ர மத்தின்
மெத்த மெத்த உக்ர வெற்றி மிகுபாசமே
விட்டு விட்டு றுக்கு றுக்கு
கட்டு கட்டு குத்து குத்து
வெட்டு வெட்டெ னச்சி னத்து நமனுடியே;

சத்த மிட்ட தட்டி நெட்டெ
யிற்றி னைக்க டித்து றுக்கு
தர்க்க மிட்டெ னைப்பி டிக்க வருபோதிலே
தத்த ளிக்கும் புத்தி யைத்தி
டப்ப டுத்தி ஒத்தி டத்த
ணிப்பு றுத்தி மெய்த்து னைக்கு வரவேணுமே;

எத்த லத்தும் எப்ப திக்கும்
எப்ப டிக்கும் எச்ச ரித்து
நற்ப தத்தை உச்ச ரிக்கு நினைவாகியே
இட்டம் வைத்த வர்க்க நுக்ர
கச்ச முத்ர வித்தை யிற்ப்ர
சித்த நித்ய முத்த மிழ்க்கும் அருள்போதனே;

அத்ர பத்ர சித்ர மிட்ட
யிற்ப டைத்த யிற்கி னைத்த
லர்க்க ணுற்ற பொற்கு றத்தி மணவாளனே
அத்த னுக்கு மைக்கி தத்த
புத்ர சித்தி முத்தி யைச்செ
யற்பு தச்சி வக்கி ரிக்குள் முருகேசனே.

## 23. திருச்செந்தில் வகுப்பு

சந்த பந்த முந்து விந்தை செஞ்சொ லின்ப்ர பந்த நந்து
சங்க மங்க லம்பொ ருந்து தமிழ்பாடியே
தஞ்ச மென்று சென்று சென்று நஞ்சு விஞ்சு நெஞ்ச வஞ்சர்
தங்கள் முன்பு நின்று நின்று மெலிவோதியே;

சிந்தை நொந்து நொந்து நைந்து நைந்து வெம்பி வெம்பி யங்கி
சிந்தி யிந்த வெங்கு டம்பை யழிபோதுமா
சிங்க முன்பு குந்த தந்தி யின்கு லங்க லங்கு பண்பொ
சிந்த துன்ப மென்பெரு ழிந்து கரையேறுவேன்;

அந்த ரங்க ளண்ட ரண்ட மண்ட லங்கு லுங்க நின்ற
சைந்த சைந்து பங்கெ ழும்ப அசுராதியோர்
அங்க டங்க டுண்ட துண்ட கண்ட பந்தி சண்டை வந்த
லைந்து ருண்டு மண்டை சிந்த அடர்கோபனே;

கந்த சந்த நுங்கு கும்ப கொங்கை இந்தி ரன்ம டந்தை
கங்க ணம்பு ரந்த வென்றி அணிநேயனே
கம்பு மஞ்ச முந்தி கழுந்தி ருந்தி டுந்தி றஞ்செ றிந்து
கஞ்ச நன்ற லர்ந்த செந்தில் முருகேசனே.

---

## 24. திருப்பழநி வகுப்பு

எந்தவினை யும்பவமும் எந்தவிட மும்படரும்
எந்தஇக லும்பழியும் எந்தவழு வும்பிணியும்
எந்தஇகழ் வுங்கொடிய எந்தவசி யுஞ்சிறிதும்
அணுகாமலே

எந்தஇர வுந்தனிமை எந்தவழி யும்புகுத
எந்தஇட முஞ்சபையில் எந்தமுக மும்புகலும்
எந்தமொழி யுந்தமிழும் எந்தவிசை யும்பெருமை
சிதறாமலே;

வந்தனைசெய் துன்சரண நம்புதல்பு ரிந்தஅருள்
வந்தநுதி னந்தனிலும் நெஞ்சில்நினை வின்படிவ
ரந்தரஉ வந்தருள்இ தம்பெறுவ தன்றிநெடு
வலைவீசியே

வஞ்சவிழி சண்டனுறு கின்றபொழு துங்குமர
கந்தஎன நன்கறைய வுந்தெளிவு தந்துயிர்வ
ருந்துபய முந்தனிமை யுந்தவிர அஞ்சலென
வரவேணுமே;

தந்தனன தந்தனன டிண்டிகுடி டிண்டிகுடி
குண்டமட குண்டமட மண்டமென நின்றுமுர
சந்திமிலை பம்பைதுடி திண்டிமமு ழங்குமொலி
திசைவீறவே

தண்டஅமர் மண்டசுரர் மண்டைநிணம் என்றலகை
உண்டுமிழ்தல் கண்டமரர் இந்திரன்வ ணங்குபத
தண்டைசிறு கிங்கிணிபு லம்பிடவ ரும்பவனி
மயில்வாகனு;

செந்தினிரை முந்துபடம் என்றுளம ருண்டுநிறை
சந்தனவ னங்குலவு மந்திகுதி கொண்டயல்செ
றிந்தகமு கின்புடைப துங்கிடவ ளைந்துநிமிர்
மடல்சாடவே

சிந்தியஅ ரம்பைபல வின்கனியில் வந்துவிழ
மென்கனிஉ டைந்தசுளை விண்டநறை கொண்டுசிறு
செண்பகவ னங்கள்வளர் தென்பழநி யம்பதியின்
முருகேசனே.

---

## 25. திருப்பரங்கிரி வகுப்பு

சாதியுங்குல மாவதுங்குடி யாவதுஞ்சன மாவதுங்கிளை
தாரமுந்திர பாலரும்பிர தானமும்பெரு காண்மையும்பெறு
தானமும்பகு மானமுஞ்சிவ ஞானமும்பல கோலமும்புரி
தொழிலோடுமே

தாழ்வகன்றிடு வாழ்வும்வெம்பிணி நோயுமங்கதி லாதுரந்தனி
லாவதுந்தளர் சாவொழிந்திடு யோகமுஞ்சிவ பேறுமெந்தநி
தானமுஞ்செய்தாசுகண்டதுபோல்வரும்பொதுவாகுமென்றுன
திருதாளையே;

ஓதிநெஞ்சய ரார்தினந்திரி காலமுந்தொழு வோர்விரும்பிய
தேதும்அன்புட னேதருங்க்ருபை யாகவந்தரு பூதிதந்தமு
னூல்கடந்திட வேபுரந்தருள் கூறும்இங்கித சேவைநம்பிய
படிகாணவே

ஓகைவந்தனை யாய்வணங்கிய ஏழைசிந்தையு ளேநினைந்திடு
வேளைவந்தினி தாய்வரந்தர வேணுமென்றக மேவருந்தியும்
ஓதினன்றின நான்விளம்புதல் நீயறிந்துமி தேன்இரங்கிலை
அறிவேனையா ;

ஆதிஅந்தம்அ னாதிவிந்துவும் நாதமும்பிரி யாநிறைந்தஅ
ரூபஇன்பசொ ரூபசுந்தர சோதிமின்பொலி நீதிஅம்பொரு
ளாகநின்றப ராபரன்கரு ணாலயன்புல வோரிறைஞ்சிட
எதிர்காளிவா

தாடலின்செக சேகிணங்கிண சேகுடண்டம டாடமண்டம
தாகிணங்கிணதோ திணங்கிண தாதிமிந்திமிதோ வெனுந்தொனி
யார்சிலம்பொலி தாளமிஞ்சிட வேநடம்புரி பாதநம்பரன்
அருள்பாலனே ;

மாதிரந்திசை யாகவந்திக டாசலந்திரை மாசலம்புவி
மாகமண்டக டாகமும்பொனின் மேருவின்தலை யேகுலுங்கிட
வாசமொன்றிய கால்பொருந்துகள் வானிரம்பிட வேவருங்கதிர்
வடிவேலனே

வானரங்கதிர் தாவுதண்டலை மேவுகொண்டலை யூடுநின்றலை
மாவினங்களி கூருநண்பொடு கோகநஞ்செறி வாவிசிந்திய
பாலருந்திய பேர்சிறந்திரு மூவர்விஞ்சையர் சூழ்பரங்கிரி
முருகேசனே.

— ⁓⁓⁓ —

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# திருப்புகழ்

## சிறப்புப் பாயிரம்

எல்லாரும் ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி. க

வேதம்வேண் டாம்சகல வித்தைவேண் டாம்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம். உ

சீராந் திருப்புகழைச் செவ்வேள்மே லன்பாக
ஆராய்ந் துரைத்தான் அருணகிரி—நேராக
அந்தப் புகழை அநுதினமும் ஓதாமல்
எந்தப் புகழோது வீர். ங

மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன்—பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்
கெவ்வேலை வேண்டும் இனி. ச

ஆனைமுக வற்கிளைய ஐயா அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை—யானினைந்து

போற்றிடவும் நின்னைப் புகழ்ந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவும் ஓதிடவுந் தா. ௫

அருணகிரி நாத னகிலதலத் துன்னைக்
கருணையினாற் பாடுங் கவிபோற்—பிரியமுற
வேறுமோர் புன்கவிகள் வேலோனே நின்செவியில்
ஏறுமோ என்னே இனி. ௬

வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள்ளுதமி ழாற்புனைந்து சீர்பெறவே—உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார். ௭

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினார்க் காமேயிக் கூறு. ௮

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்றும் எழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால். ௯

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
பேரால் அருணகிரி பேருலகில்—சீராரும்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவர் ஈடேறு வார். ௧௦

அருணகிரி நாதர்பதி னாறா யிரமென்
றுரைசெய் திருப்புகழை ஓதீர்—பரகதிக்கஃ
தேணி அருட்கடலுக் கேற்றம் மனத்தளர்ச்சிக்
காணி பிறவிக் கரம். ௧௧

திருப்புகழைக் கற்க திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்க—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெட. ௧௨

பொருப்பது பொடிப்பட விடுத்திடு கைவேலா
இருப்பிட முனக்கெது வெனக்கரு ளியம்பாய்
உருக்கநல் விழுக்குல மொழுக்கமி லரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினி லிருப்பாய். ௧௫

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதிலை உன்றனரு ளாலே
பொருப்புகள் மிகப்பொருது வென்றுமயில் மீதே
தரித்தொரு திருத்தணிகை நின்றபெரு மாளே. ௧௬

படங்க ணடுங்குந் தனைச்சுடு மீதென்று மாதிரத்தோர்
அடங்கி நடுங்குவர் சூலா யுதமென் றசுரர்கடல்
ஒடுங்கி நடுங்குவர் வேலா யுதமென் றுரகனுங்கீழ்க்
கிடங்கி னடுங்கு மயிலோன் திருப்புகழ் கேட்டளவே.

தருப்புகழ் வல்ல சுரர்மகள் நாயகன் சங்கரற்குக்
குருப்புகழ்வல்லகுமரேசன்ஷண்முகன்குன்றெறிந்தோன்
மருப்புகழ் வல்ல அருணை கிரிபெயர் வள்ளல்சொன்ன
திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளியென் சென்னியதே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# திருப்புகழ்

## விநாயகர் துதி

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பக எனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொட சுப்பிர மணிபடும்
அப்புனம் அதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கணம் மணமருள் பெருமாளே. க

உம்பர் தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலில் தேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே. உ

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே
இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடன்நெய்
எள்பொரிய வல்துவரை இளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனும் அருளாழி
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே. ௩

விடமடைசு வேலை அமரர்படை சூலம்
விசையன்விடு பாணம் எனவேதான்
விழியுமதி பார தனமுமுடை மாதர்
வினையின்விளை வேதும் அறியாதே
கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே

இடையர்சிறு பால்நெய் திருடிநெடி தேக
இறைவன்மகள் வாய்மை அறியாதே
இதயமிக வாடி உடையபிளை நாத
கணபதியெ னும்பேர் முறைகூற
அடையலவ ராவி வெருவஅடி கூர
அசலுமறி யாமல் அவரோட
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே. ௪

நினது திருவடி சத்திம யிற்கொடு
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய அமுதுசெய் முப்பழம் அப்பமும் நிகழ்பால்தேன்
நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம்
நிரவில் அரிசிப ருப்பவல் எள்பொரி
நிகரில் இனிகத லிக்கனி வர்க்கமும் இளநீரும்
மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகா சலநிதி வைத்தது திக்கர
வலிய கரிமுக ஒற்றைம ருப்பனை வலமாக
மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே
தெனன தெனதென தெத்தென னப்பல
சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளு முறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை
செரும வுதரநி ரப்புசெ ருக்குட
னிரைய விரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே
எனவெ துகுதுகு துத்தென வொத்துகள்
துடிக ளிடிமிக வொத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவில் எழுமோசை
இகலி யலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரும் நிசிசரை யைப்பலி யிட்டருள் பெருமாளே. ௫

உ

வேலுமயிலுந் துணை

## நூல்

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேணப்
பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் இரவாகப்
பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வதும் ஒருநாளே
தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொக்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் ரிகடக எனவோதக்
கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே.

1. அகத்தி னைக்கொண் டிப்புவி மேல்சில
தினத்து மற்றொன் றற்றறி யாதுபின்
அவத்துள் வைக்குஞ் சித்தச னூடு கணையாலே
அசுத்த மைக்கண் கொட்புறு பாவையர்
நகைத்து ரைக்கும் பொய்க்கடல் மூழ்கியெ
அலக்க ணிற்பொன் றித்தடு மாறியெ சிலநாள்போய்
இகத்தை மெய்க்கொண் டிப்புவி பாலர்பொன்
மயக்கி லுற்றும் பற்றைவி டாதுடல்
இளைப்பி ரைப்பும் பித்தமு மாய்நரை முதிர்வாயே
எமக்க யிற்றின் சிக்கினி லாமுனுன்
மலர்ப்ப தத்தின் பத்திவி டாமன
திருக்கு நற்றொண் டர்க்கிணை யாகவுன் அருள்தாராய்
புகழ்ச்சி லைக்கந் தர்ப்பனு மேபொடி
படச்சி ரித்தம் முப்புரம் நீறுசெய்
புகைக்க னற்கண் பெற்றவர் காதலி அருள்பாலா
புவிக்குள் யுத்தம் புத்திரர் சேயர
சனைத்து முற்றுஞ் செற்றிட வேபகை
புகட்டி வைக்குஞ் சக்கர பாணிதன் மருகோனே
திகழ்க்க டப்பம் புட்பம தார்புய
மறைத்து ருக்கொண் டற்புத மாகிய
தினைப்பு னத்தின் புற்றுறை பாவையை அணைசீலா
செகத்தி லுச்சம் பெற்றம ராவதி
அதற்கு மொப்பென் றுற்றழ கேசெறி
திருக்க ழுக்குன் றத்தினில் மேவிய பெருமாளே.

2. அகரமுத லெனஉரைசெய் ஐம்பத்தொ ரக்ஷரமும்
அகிலகலை களும்வெகுவி தங்கொண்ட தத்துவமும்
அபரிமித சுருதியும டங்குந்த னிப்பொருளை
எப்பொ ருளுமாய
அறிவையறி பவரறியும் இன்பந்த னைத்துரிய
முடிவைஅடி நடுமுடிவில் துங்கந்த னைச்சிறிய
அணுவையணு வினில்மலமு நெஞ்சுங்கு ணத்ரயமும்
அற்ற தொருகாலம்

நிகழும்வடி வினைமுடிவி லொன்றென்றி ருப்பதனை
நிறைவுகுறை வொழிவறநி றைந்தெங்கு நிற்பதனை
நிகர்பகர அரியதைவி சும்பின்பு ரத்ரயமெ
ரித்த பெருமானும்
நிருபகுரு பரகுமர என்றென்று பத்திகொடு
பரவஅரு ளியமவுன மந்த்ரந்த னைப்பழைய
நினதுவழி யடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது
ணர்த்தி யருள்வாயே
தகுதகுகு தகுதகுகு தந்தந்த குத்தகுகு
டிகுடிகுகு டிகுடிகுகு டிண்டிண்டி குக்குடிகு
தகுதகெண கெணசெகுத தந்தந்த ரித்தகுத
தத்த தகுதீதோ
தனதனன தனதனன தந்தந்த னத்ததன
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுண்டு டுட்டுடுடு
தரரரர ரிரிரிரிரி என்றென்றி டக்கையுமு
டுக்கை யுடியாவும்
மொகுமொகென அதிரமுதி ரண்டம்பி ளக்கநிமிர்
அலகைகர ணமிடஉல கெங்கும்ப்ர மிக்கநட
முடுகுபயி ரவர்பவுரி கொண்டின்பு றப்படுக
ளத்தி லொருகோடி
முதுகழுகு கொடிகருட னங்கம்பொ ரக்குருதி
நதிபெருக வெகுமுகக வந்தங்கள் நிர்த்தமிட
முரசதிர நிசிசரரை வென்றிந்தி ரற்கரசு
ளித்த பெருமாளே.

3. அகரமு மாகி அதிபனு மாகி
அதிகமு மாகி அகமாகி
அயனென வாகி அரியென வாகி
அரனென வாகி அவர்மேலாய்
இகரமு மாகி எவைகளு மாகி
இனிமையு மாகி வருவோனே
இருநில மீதில் எளியனும் வாழ
எனதுமு னோடி வரவேணும்

மகபதி யாகி மருவும்வ லாரி
மகிழ்களி கூரும் வடிவோனே
வனமுறை வேட னருளிய பூஜை
மகிழ்கதிர் காம முடையோனே
செககண சேகு தகுதிமி தோதி
திமியென ஆடு மயிலோனே
திருமலி வான பழமுதிர் சோலை
மலைமிசை மேவு பெருமாளே.

4. அகல நீளம் யாதாலும் ஒருவ ராலு மாராய
அரிய மோன மேகோயில் எனமேவி
அசைய வேக்ரி யாபீட மிசைபு காம காஞான
அறிவி னுதை ராமோத மலர்தூவிச்
சகல வேத ஞதீத சகல வாச காதீத
சகல மாக்ரி யாதீத சிவரூப
சகல சாத காதீத சகல வாச ஞதீத
தனுவை நாடி மாபூசை புரிவேனோ
விகட தார சூதான நிகள பாத போதுள
விரக ராக போதார சுரர்கால
விபுத மாலி காநீல முகப டாக மாயூர
விமல வ்யாப காசீல கவிநோத
ககன கூட பாடீர தவள சோபி தாளான
கவன பூத ராரூட சதகோடி
களப காம வீர்வீசு கரமு கார வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

5. அகல்வினை உட்சார் சட்சம
யிகளொடு வெட்கா தட்கிடும்
அறிவிலி வித்தா ரத்தன மலிகாரம்
அகில்கமழ் கத்தூ ரித்தனி
அணைமிசை கைக்கா சுக்கள
வருள்பவர் நட்பே கொட்புறும் ஒருபோதன்

பகலிர விற்போ திற்பணி
பணியற விட்டா ரெட்டிய
பரமம யச்சோ திச்சிவ மயமாநின்
பழநித னிற்போ யுற்பவ
வினைவிள கட்சேர் வெட்சிகு
ரவுபயில் நற்றாள் பற்றுவ தொருநாளே
புகலிவ னப்பே றப்புகல்
மதுரைமன் வெப்பா றத்திகழ்
பொடிகொடு புற்பாய் சுற்றிகள் கழுவேறப்
பொருதச மர்த்தா குத்திர
துரகமு கக்கோ தைக்கிடை
புலவரில் நக்கீ ரர்க்குத வியவேளே
இகல்படு நெட்டூர் பொட்டெழ
இளநகை இட்டே சுட்டருள்
எழுபுவி துய்த்தார் மைத்துனர் மதலாய்வெண்
றிடரற முப்பால் செப்பிய
கவிதையின் மிக்கா ரத்தினை
எழுதி வனத்தே எற்றிய பெருமாளே.

6. அகிலநறுஞ் சேறு ம்ருகமதமுந் தோயு
மசலமிரண் டாலும் இடைபோமென்
றடியில்விழுந் தாடு பரிபுரசெஞ் சீர
தபயமிடுங் கீதம் அமையாதே
நகமிசைசென் றூடி வனசரர்சந் தான
நவையறநின் றேனல் விளைவாள்தன்
லளிதவிர்சிங் கார தனமுறுசிந் தூர
நமசரணென் றோத அருள்வாயே
பகலிரவுண் டான இருவரும்வண் டாடு
பரிமளபங் கேரு கனுமாலும்
படிகநெடும் பார கடதடகெம் பீர
பணைமுகசெம் பால மணிமாலை

முகபடசிந் தூர கரியில்வருந் தேவு
முடியஅரன் தேவி யுடனுடே
முழுதுலகுந் தாவி எழுகடல்மண் ணேழி
முடிவினுமஞ் சாத பெருமாளே.

7. அக்குப் பீளைமு ளாவிளை மூளையொ
டப்புக் காய்பனி நீர்மயிர் தோல்குடி
லப்புச் சீபுழு வோடடை யார்தசை யுறமேவி
அத்திப் பால்பல நாடிகு ழாயள்வ
ழுப்புச் சார்வல மேவிளை யூளைகொ
ளச்சுத் தோள்குடி லாமதி லேபொறி விரகாளர்
சுக்கத் தாழ்கட லேசுக மாமென
புக்கிட் டாசைபெ ருசைம ருசைகள்
தொக்குத் தீவினை யூழ்வினை காலமொ டதனுலே
துக்கத் தேபர வாமல்ச தாசிவ
முத்திக் கேசுக மாகப ராபர
சொர்க்கப் பூமியி லேறிட வேபதம் அருள்வாயே
தக்கத் தோகிட தாகிட தீகிட
செக்கச் சேகண தாகண தோகண
தத்தத் தானன டகுட டாடுடு வெனதாளம்
தத்திச் சூர்கு ழாமொடு தேர்பரி
கெட்டுக் கேவல மாய்கடல் மூழ்கிட
சக்திக் கேயிரை யாமென வேவிடு கதிர்வேலா
திக்கத் தோகண தாவென வேபொரு
சொச்சத் தாதையர் தாமென வேதிரு
செக்கர்ப் பாதம தேபதி யாசுதி யவைபாடச்
செப்பொற் பீலியு லாமயில் மாமிசை
பக்கத் தேகுற மாதொடு சீர்பெறு
தெற்குக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே.

8. அங்கதன் கண்டகன் பங்கிலன் பொங்குகெஞ்
சன்பிலன் துன்பவன் புகழ்வாரா
அஞ்சொடுங் கும்பொதும் பொன்றையென் றுஞ்சுமங்
தங்குமிங் குந்திரிந் திரைதேடும்

சங்கடங் கொண்டவெஞ் சண்டிபண் டன்பெருஞ்
 சஞ்சலன் கிஞ்சுகந் தருவாயார்
தந்தொழும் பன்தழும் பன்பணிந் தென்றுநின்
 தண்டையம் பங்கயம் புகழ்வேனோ
கங்கையும் பொங்குகஞ் சம்பொருந் தும்புயங்
 கங்களுந் திங்களுங் கழுநீரும்
கஞ்சமுந் தும்பையுங் கொன்றையுஞ் சந்ததங்
 கந்தமுந் துன்றுசெஞ் சடையாளர்
பங்குதங் கும்பசுங் கொம்புதந் தின்புறும்
 பந்தவெங் குண்டர்தங் குலகாலா
பண்டிதன் கந்தனென் றண்டரண் டந்தொழும்
 பண்புநண் பும்பெறும் பெருமாளே.

9\. அங்கை நீட்டிய ழைத்துப் பாரிய
 கொங்கை காட்டிம றைத்துச் சீரிய
 அன்பு போற்பொய்ந டித்துக் காசள வுறவாடி
அம்பு தோற்றக ணிட்டுத் தோதக
 இன்ப சாத்ரமு ரைத்துக் கோகிலம்
 அன்றில் போற்குர லிட்டுக் கூரிய நகரேகை
பங்க மாக்கிய லைத்துச் சாதனை
 கொண்டு வேட்கையெ ழுப்பிக் காமுகர்
 பண்பில் வாய்க்கம யக்கிக் கூடுதல் இயல்பாகப்
பண்டி ராப்பகல் சுற்றுச் சூளைகள்
 தங்கள் மேற்ப்ரமை விட்டுப் பார்வதி
 பங்கர் போற்றிய பத்மத் தாள்தொழ அருள்வாயே
எங்கு மாய்க்குறை வற்றுச் சேதன
 அங்க மாய்ப்பரி சுத்தத் தோர்பெறும்
 இன்ப மாய்ப்புகழ் முப்பத் தாறினின் முடிவேறும்
இந்த்ர கோட்டிம யக்கத் தான்மிக
 மந்த்ர மூர்த்தமெ டுத்துத் தாமத
 மின்றி வாழ்த்திய சொர்க்கக் காவல வயலூரா

செங்கை வேற்கொடு துட்டச் சூரனை
வென்று தோற்பறை கொட்டக் கூளிகள்
தின்று கூத்துந டிக்கத் தோகையில் வரும்வீரா
செம்பொ னூற்றிகழ் சித்ரக் கோபுர
மஞ்சி ராப்பகல் மெத்தச் சூழ்தரு
தென்சி ராப்பளி வெற்பிற் றேவர்கள் பெருமாளே.

10. அங்கை மென்குழ லாய்வார் போலே
சந்தி நின்றய லோடே போவார்
அன்பு கொண்டிட நீரோ போரீர் அறியீரோ
அன்று வந்தொரு நாள்நீர் போனீர்
பின்பு கண்டறி யோநா மீதே
அன்று மின்றுமொர் போதோ போகா துயில்வாரா
எங்க ளந்தரம் வேறா ரோர்வார்
பண்டு தந்தது போதா தோமேல்
இன்று தந்துற வோதா னீதே னிதுபோதா
திங்கு நின்றதென் வீடே வாரீர்
என்றி ணங்கிகள் மாயா லீலா
இன்ப சிங்கியில் வீணே வீழா தருள்வாயே
மங்கு லின்புறு வானாய் வானூ
டன்ற ரும்பிய காலாய் நீள்கால்
மண்டு றும்புகை நீறா வீறா எரிதீயாய்
வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
மண்ட லம்புகழ் நீயாய் நானாய் மலரோனாய்
உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
அண்ட பந்திகள் தாமாய் வானாய்
ஒன்றி னுங்கடை தோயா மாயோன் மருகோனே
ஒண்த டம்பொழில் நீடூர் கோடூர்
செந்தி லம்பதி வாழ்வே வாழ்வோர்
உண்ட நெஞ்சறி தேனே வானோர் பெருமாளே.

11. அச்சா யிறுக்காணி காட்டிக் கடைந்த
செப்பார் முலைக்கோடு நீட்டிச் சரங்க
ளொப்போ ல்விழிக்கூர்மை நோக்கிக் குழைந்து உறவாடி
அத்தா னெனக்காசை கூட்டித் தயங்க
வைத்தா யெனப்பேசி மூக்கைச் சொறிந்து
அக்கா லொருக்கால மேக்கற் றிருந்தி ரிலையாசை
வைச்சா யெடுப்பான பேச்சுக் கிடங்க
ளொப்பா ருனக்கீடு பார்க்கிற் கடம்பன்
மட்டோ எனப்பாரின் மூர்க்கத் தனங்கள் அதனாலே
மைப்பா கெனக்கூறி வீட்டிற் கொணர்ந்து
புற்பா யலிற்காலம் வீற்றுக் கலந்து
வைப்பார் தமக்காசை யாற்பித் தளைந்து திரிவேனோ
எச்சாய் மருட்பாடு மேற்பட் டிருந்த
பிச்சா சருக்கோதி கோட்டைக் கிலங்க
மிக்கா நினைப்போர்கள் வீக்கிற் பொருந்தி நிலையாயே
எட்டா மெழுத்தேழை யேற்குப் பகர்ந்த
மூத்தா வலுப்பான போர்க்குட் டொடங்கி
எக்கா லுமக்காத சூர்க்கொத் தரிந்த சினவேலா
தச்சா மயிற்சேவ லாக்கிப் பிளந்த
சித்தா குறப்பாவை தாட்குட் படிந்து
சக்கா கியப்பேடை யாட்குப் புகுந்து மணமாகித்
தப்பா மலிப்பூர்வ மேற்குத் தரங்கள்
தெற்கா குமிப்பாரில் கீர்த்திக் கிசைந்த
தச்சூர் வடக்காகு மார்க்கத் தமர்ந்த பெருமாளே.

12. அஞ்சன வேல்விழி மடமாதர்
அங்கவர் மாயையில் அலைவேனோ
விஞ்சுறு மாவுன தடிசேர
விம்பம தாயருள் அருளாயோ
நஞ்சமு தாவுணும் அரனார்தம்
நன்கும ராவுமை அருள்பாலா
தஞ்சென வாமடி யவர்வாழத்
தஞ்சையில் மேவிய பெருமாளே.

13. அஞ்சன வேல்விழி யிட்டழைக்கவும்
இங்கித மாகந கைத்துருக்கவும்
அம்புயல் நேர்குழ லைக்குலைக்கவும் நகரேகை
அங்கையின் மூலம்வெ ளிப்படுத்தவும்
மந்தர மாமுலை சற்றசைக்கவும்
அம்பரம் வீணில விழ்த்துடுக்கவும் இளைஞோர்கள்
நெஞ்சினி லாசைநெ ருப்பெழுப்பவும்
வம்புரை கூறிவ ளைத்திழுக்கவும்
மன்றிடை யாடிம ருட்கொடுக்கவும் எவரேனும்
நிந்தைசெ யாதுபொ ருட்பறிக்கவும்
இங்குவ லார்கள்கை யிற்பிணிப்பற
நின்பத சேவைய நுக்ரகிப்பதும் ஒருநாளே
குஞ்சர மாமுக விக்கிநப்ரபு
அங்குச பாசக ரப்ரசித்தனோர்
கொம்பன்ம கோதரன் முக்கண்விக்கின கணராஜன்
கும்பிடு வார்வினை பற்றறுப்பவன்
எங்கள்வி நாயக னக்கர்பெற்றருள்
குண்டலி ரூபக கற்பகப்பிளைக் கிளையோனே
துஞ்சலி லாதச டக்ஷரப்பிர
பந்தச டானன துஷ்டநிக்ரக
சுந்தர ஞானவை யிற்றமிழ்த்ரய பரிபாலா
துங்கக ஜாரணி யத்திலுத்தம
சம்புத டாகம டுத்ததக்ஷிண
*சுந்தர மாறன்ம திட்புறத்துறை பெருமாளே.

14. அஞ்சுவித பூத முங்கரண நாலும்
அந்திபகல் யாதும் அறியாத
அந்தநடு வாதி ஒன்றுமில தான
அந்தவொரு வீடு பெறுமாறு

---

*சுந்தரமா மதுரைத் தலத்துறை பெருமாளே.

மஞ்சுதவழ் சார லஞ்சயில வேடர்
　　மங்கைதனை நாடி　　　　　　　　　　வனமீதே
வந்தசர ணார விந்தமது பாட
　　வண்டமிழ் விநோதம்　　　　　　　　அருள்வாயே
குஞ்சரக லாப வஞ்சியபி ராம
　　குங்குமப டீர　　　　　　　　　　　வதிரேகக்
கும்பதன மீது சென்றணையு மார்ப
　　குன்றுதடு மாற　　　　　　　　　　விடுகோப
வெஞ்சமர சூர னெஞ்சுபக வீர
　　வென்றிவடி வேலை　　　　　　　　விடுவோனே
விம்பமதில் சூழ நிம்பபுர வாண
　　விண்டலம கீபர்　　　　　　　　　　பெருமாளே.

15. அடப்பக் கம்பிடித்துத் தோளொடு தோள்பொர
　　வளைத்துச் செங்கரத்திற் சீரொடு பாவொடு
　　அணுக்கிச் செந்துணுக்கிற் கோவித ழூறல்க ளதுகோதி
　அணிப்பொற் பங்கயத்துப் பூண்முலை மேகலை
　　நெகிழ்த்துப் பஞ்சரித்துத் தாபண மேயென
　　அருட்டிக் கண்சிமிட்டிப் பேசிய மாதர்கள் உறவோடே
படிச்சித் தங்களித்துத் தான்மிக மாயைகள்
　　படுத்துப் பண்பயிற்றிக் காதல்கள் மேல்கொள
　　பசப்பிப் பின்பிணக்கைக் கூறிய வீணிகள் அவமாயப்
　பரத்தைக் குண்டுணர்த்துத் தோதக பேதைகள்
　　பழிக்குட் சஞ்சரித்துப் போடிடு மூடனை
　　பரத்துற் றண்பதத்துப் போதக மீதென அருள்தாராய்
தடக்கைத் தண்டெடுத்துச் சூரரை வீரரை
　　நொறுக்கிப் பொன்றவிட்டுத் தூளெழ நீறெழ
　　தகர்த்துப் பந்தடித்துச் சூடிய தோரண கலைவீரா
　தகட்டுப் பொன்சுவட்டுப் பூவணை மேடையில்
　　சமைப்பித் தங்கொருத்திக் கோதில மாமயில்
　　தனிப்பொற் பைம்புனத்திற் கோகில மாவளி மணவாளா

திடத்திற் றிண்பொருப்பைத் தோள்கொடு சாடிய
அரக்கத் திண்குலத்தைச் சூறைகொள் வீரிய
திருப்பொற் பங்கயத்துக் கேசவர் மாயவர் அறியாமல்
திமித்தத் திந்திமித்தத் தோவென ஆடிய
சமர்த்தர்ப் பொன்புவிக்குட் டேவர்கள் நாயக
திருச்சிற் றம்பலத்துட் கோபுர மேவிய பெருமாளே.

16. அடலரி மகவு விதிவழி ஒழுகு
மைவரு மொய்க்குரம்பை உடனூரும்
அலைகட லுலகி லலம்வரு கலக
ஐவர்த மக்குடைந்து தடுமாறி
இடர்படு மடிமை உளமுறை உடலொ
டெல்லைவி டப்ரபஞ்ச மயல்தீர
எனதற நினது கழல்பெற மவுன
எல்லைகு றிப்பதொன்று புகல்வாயே
வடமணி முலையு மழகிய முகமும்
வள்ளையெ னத்தயங்கும் இருகாதும்
மரகத வடிவு மடலிடை எழுதி
வள்ளிபு னத்தில்நின்ற மயில்வீரா
விடதர திகுண ரசசிதர் நிமலர்
வெள்ளிம லைச்சயம்பு குருநாதா
விகசித கமல பரிபுர முளரி
வெள்ளிக ரத்தமர்ந்த பெருமாளே.

17. அடல்வடி வேல்கள் வாளிக ளவைவிட வோடல் நேர்படு
மயில்விழி யாலு மாலெனு மதவேழத்
தளவிய கோடு போல்வினை அளவள வான கூர்முலை
அதின்முக மூடு மாடையின் அழகாலும்
துடியிடை யாலும் வாலர்கள் துயர்வுற மாய மாயொரு
துணிவுட னூடு மாதர்கள் துணையாகத்
தொழுதவர் பாத மோதியுன் வழிவழி யானெ னுவுயர்
தலையலை மாறு போலுயிர் சுழல்வேனோ

அடவியி னூடு வேடர்கள் அரிவையொ டாசை பேசியும்
அடிதொழு தாடு மாண்மையு முடையோனே
அழகிய தோளி ராறுடை அறுமுக வேளெ னுவனே
அறிவுட னோது மாதவர் பெருவாழ்வே
விடையெறு மீசர் நேசமு மிகநினை வார்கள் தீவினை
உகநெடி தோட மேலணை பவர்மூதூர்
விரைசெறி தோகை மாதர்கள் விரகுட னாடு மாதையில்
விறல்மயில் மீது மேவிய பெருமாளே.

18. அடிமையிது மாடு மனையெனது மாது
அனைமகவி தாமென் றகலாதே
அணியலற வீறு பொருள்களிது வாசை
அரிவையர்க ளீது வெனுமாசை
உடலைநிச மாக வழிவிலெனை நாடி
உழலுமடி யேனை நரகூடே
யுவியவிடொ ணாதெ படியுனது தாளில்
உருகுதலை வாழ்வை அருள்வாயே
அடையவுள தேவர் கடல்கடையு நாளில்
அரவுவிட வாலம் அதனாலே
அயனமரர் மாலும் அபயமென வோட
அவர்களுடல் பேரில் அருளாயே
கடுவையமு தாக அமுதுசெய்த பால
கபதவிச காயர் புதல்வோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதுங்
காபுரியில் வீறும் பெருமாளே.

19. அடியார்ம னஞ்சலிக்க எவராகி லும்பழிக்க
அபாரதம் வந்துகெட்ட பிணிமூடி
அனைவோரும் வந்துசிச்சி எனநால்வ ருஞ்சிரிக்க
அனலோட மூன்றுசெத்து விடுமாபோற்
கடையேன்ம லங்கள்முற்று மிருநோயு டன்பிடித்த
கலியோடி றந்துசுத்த வெளியாகிக்
களிகூர என்றனுக்கு மயிலேறி வந்துமுத்தி
கதியேற அன்புவைத்துன் அருள்தாராய்

சடைமீது கங்கைவைத்து விடையேறு மெந்தைசுத்த
தழல்மேனி யன்சிரித்தொர் புரமூணும்
தவிடாக வந்தெதிர்த்த மதனைக முஞ்சிதைத்த
தழல்பார்வை அன்றளித்த குருநாதா
மிடிதீர அண்டருக்கு மயிலேறி வஞ்சர்கொட்டம்
வெளியாக வந்துநிர்த்தம் அருள்வோனே
மினனூல்ம ருங்குல்பொற்பு முலைமாதி ளங்குறத்தி
மிகுமாலொ டன்புவைத்த பெருமாளே.

20. அடியில்வி டாப்பிண மடையவி டாச்சிறி
தழியுமுன் வீட்டுமுன் உயர்பாடை
அழகொடு கூட்டுமி னழையுமின் வார்ப்பறை
அழுகையை மாற்றுமி னெதியாமுன்
எடுமினி யாக்கையை எனஇடு காட்டெரி
இடைகொடு போய்த்தமர் சுடுநாளில்
எயினர்கு லோத்தமி உடன்மயில் மேற்கடி
தெனதுயிர் காத்திட வரவேணும்
மடுவிடை போய்ப்பரு முதலையின் வாய்ப்படு
மதகரி கூப்பிட வளையூதி
மழைமுகில் போற்ககப திமிசை தோற்றிய
மகிபதி போற்றிடு மருகோனே
படர்சடை யாத்திகர் பரிவுற ராட்சதர்
பரவையி லார்ப்பெழ விடும்வேலால்
படமுனி யாப்பணி தமணிய நாட்டவர்
பதிகுடி ஏற்றிய பெருமாளே.

21. அடைப டாது நாடோறும் இடைவி டாது போம்வாயு
அடைய மீளில் வீடாகும் எனநாடி
அருள்பெ ருவ ஞசார கரும யோகி யாகாமல்
அவனி மீதி லோயாது தடுமாறும்
உடலம் வேறு யான்வேறு கரணம் வேறு வேறாக
உதறி வாச காதீத அடியூடே
உருகி ஆரி யாசார பரம யோகி யாமாறுன்
உபய பாத ராசீகம் அருள்வாயே

வடப ராரை மாமேரு கிரியெ டாக டாமோது
மகர வாரி யோரேழும் அமுதாக
மகுட வாள ராநோவ மதிய நோவ வாரீச
வனிதை மேவு தோளாயி ரமுநோவக்
கடையு மாதி கோபாலன் மருக தீர வேல்வீர
கதிருகாம மூதூரில் உறைவோனே
கனக லோக பூபால சகல லோக ஆதார
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

22\. அணிசெவ்வி யார்திரை சூழ்புவி தனகிவ்வி யேகரை யேறிட
அறிவில்லி யாமடி யேனிட ரதுதீரா
அருள்வல்லை யோநெடு நாளின மிருளில்லி லேயிடு மோவுன
தருளில்லை யோஇன மானவை அறியேனே
குணவில்ல தாமக மேரினை அணிசெல்வி யாயரு ணாசல
குருவல்ல மாதவ மேபெறு குணசாத
குடிவில்ல மேதரு நாளெது மொழிநல்ல யோகவ ரேபணி
குணவல்ல வாசிவ னேசிவ குருநாதா
பணிகொள்ளி மாகணபூதமொ டமர்கள்ளி கானக நாடக
பரமெல்லி யார்பர மேஸ்வரி தருகோவே
படரல்லி மாமலர் பாணம துடைவில்லி மாமத னானை
பரிசெல்வி யார்மரு காசுர முருகேசா
மணமொல்லை யாகிந காகன தனவல்லி மோகன மோடமர்
மகிழ்தில்லை மாநட மாடினர் அருள்பாலா
மருமல்லி மாவன நீடிய பொழில்மெல்லி காவன மாடமை
வடமுல்லை வாயிலில் மேவிய பெருமாளே.

23\. அணிபட் டணுகித் திணிபட் டமனத்
தவர்விட் டவிழிக் கணையாலும்
அரிசுற் றுகழைத் தவர்பெற் றவளைத்
தவன்விட் டமலர்க் கணையாலும்
பிணிபட் டுணர்வற் றவமுற் றியமற்
பெறுமக் குணமுற் றுயிர்மாளும்
பிறவித் துறையைக் குறையைச் சிறையைப்
பிரிதற் கருளைத் தரவேணும்

கனிநற் சொருபத் தையெடுத் துமலைக்
கனியைக் கனியுற் றிடுவோனே
கமலத் தயனைப் ரவணத் துரையைக்
கருதிச் சிறைவைத் திடுவோனே
பணியப் பணியப் பரமர்ப் பரவப்
பரிவுற் றொருசொற் பகர்வோனே
பவளத் தவளக் கனகப் புரிசைப்
பழநிக் குமரப் பெருமாளே.

24. அணையிணி விருத்தி உரைமிசைக் கிடத்தி
இருகையொ டணைத்து முகமும மூத்தி
அதரமு மழுத்தி அறுசுவை யளித்து நகரேகை
அடைவுபட வைத்து விழிதுயி லகத்து
மிடறதிர வெட்டும் நிறைகுர லெழுப்பி
அவசமற விட்டு வெகுவித மறுத்தும் வகைசேரத்
துணிவினிட விட்டு மடிசுரு ளளித்து
மருவிய முயக்கில் மொழிபல மிழற்று
சுகமென வுரைத்து மதியிர தியொத்து விளையாடித்
துணைமுலை பகைப்ப மயிர்முக மறைப்ப
உபரிசுர தத்தில் உயிர்களை யுருக்கும்
உரமகளிர் நட்பை இதமென நினைப்ப தொழியாதோ
முனையற வெதிர்த்த பினையவர்கள் பட்ட
பொழுதுசுர னுக்ர னொடுகொடிய வெற்றி
சுரனென வெடுத்து நொடிதமர் விளைப்ப அவனேயும்
எரிகணை விலக்கி யரதமு மொழித்து
இருவர்மிசை யுற்ற கவசமு மறுத்தும்
உணர்மிசை வெளுத்துக் ககனமுற விட்டு வீரகோடே
மணிமுடி யறுப்ப நணியவ னடுத்த
ஒருகணை யெடுத்த செவியளவில் நிற்கும்
மதியென வளைத்த தழல்சிலை யிரத்தவிடலோடும்
வருணனை நினைத்து முதுகர மெடுத்த
இனியவ னளித்த வரிசிலை குனித்த
மழையென மிகுத்த சரமெனத் தொடுத்த பெருமாளே.

25. அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ்மீற அருளாலே
அந்தரியொ டுடனாடு சங்கரனு மகிழ்கூர
ஐங்கரனும் உமையாளு மகிழ்வாக
மண்டலமு முநிவோரு மெண்டிசையி லுளபேரு
மஞ்சினனு மயனாரு மெதிர்காண
மங்கையுட னரிதானு மின்பமுற மகிழ்கூற
மைந்துமயி லுடனாடி வரவேணும்
புண்டரிக விழியாள அண்டர்மகள் மணவாள
புந்திநிறை யறிவாள வுயர்தோளா
பொங்குகட லுடனாகம் விண்டுவரை யிகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா
தண்டரள மணிமார்ப செம்பொனெழில் செறிரூப
தண்டமிழின் மிகுநேய முருகேசா
சந்ததமு மடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே.

26. அதல சேட னாராட அகில மேரு மீதாட
அபின காளி தானாட அவளோடன்
றதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
அருகு பூத வேதாளம் அவையாட
மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
மருவு வானு ளோராட மதியாட
வனச மாமி யாராட நெடிய மாம னாராட
மயிலு மாடி நீயாடி வரவேணும்
கதைவி டாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால்நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்
கதறு காலி போய்மீள விஜய னேறு தேர்மீது
கனக வேத கோடூதி அலைமோதும்
உததி மீதி லேசாயு முலக மூடு சீபாத
உவண மூர்தி மாமாயன் மருகோனே
உதய தாம மார்பார்பி ரபுட தேவ மாராஜன்
உளமு மாட வாழ்தேவர் பெருமாளே.

27. அதல விதலமுத லந்தத்த லங்களென
அவனி எனஅமரர் அண்டத்த கண்டமென
அகில சலதியென எண்டிக்குள் விண்டுவென
அங்கிபானு

அமுத கதிர்களென அந்தத்தி லந்தமென
அறையு மறையெனஅ ருந்தத்து வங்களென
அணுவி லணுவெனநி றைந்திட்டு நின்றதொரு
சம்ப்ரதாயம்

உதய மெழஇருள்வி டிந்தக்க ணந்தனிலி
ருதய கமலமுகி ழுங்கட்ட விழ்ந்துணர்வில்
உணரு மநுபவம னம்பெற்றி டும்படியை வந்துநீமுன்

உதவ இயலினியல் செஞ்சொற்ப்ர பந்தமென
மதுர கவிகளில்ம னம்பற்றி ருந்துபுகழ்
உரிய அடிமையுனை அன்றிப்ர பஞ்சமதை
நம்புவேனோ

தகத தததகத தந்தத்த தந்ததத
திதிதி திதிதிதிதி திந்தித்தி திந்திதிதி
தகுகு தகுதகுகு தந்தத்த தந்தகுகு திந்திதோதி

சகக சககெணக தந்தத்த குங்கெணக
டிடிடி டிடிடிடிடி டிண்டிட்டி டிண்டிடிடி
தகக தகதகக தந்தத்த தந்தகக என்றுதாளம்

பதலை திமிலைதுடி தம்பட்ட மும்பெருக
அகில நிசிசரர்ந டுங்கக்கொ டுங்கழுகு
பரிய குடர்பழுவெ லும்பைப்பி டுங்கரண துங்ககாளி

பவுரி இடநரிபு லம்பப்ப ருந்திறகு
கவரி இடவிகலை வென்றுச்சி கண்டிதனில்
பழநி மலையின்மிசை வந்திக்கும் இந்திரர்கள்
தம்பிரானே.

28. அதிக ராய்ப்பொரு ளீவார் நேர்படில்
ரசனை காட்டிக ளீயார் கூடினும்
அகல வோட்டிகள் மாயா ரூபிகள் நண்புபோலே

அசட ராக்கிகள் மார்மே லேபடு
 மூலேகள் காட்டிகள் கூசா தேவிழும்
 அழகு காட்டிக ளாரோ டாகிலும் அன்புபோலே
சதிர தாய்த்திரி மாயா வேசிகள்
 கருணை நோக்கமி லாமா பாவிகள்
 தருமு பேட்சைசெய் தோஷா தோஷிகள்
 நம்பொணாத
சரச வார்த்தையி னாலே வாதுசெய்
 விரக மாக்கிவி டாமூ தேவிகள்
 தகைமை நீத்துன தாளே சேர்வது எந்தநாளோ
மதுரை நாட்டினி லேவாழ் வாகிய
 அருகர் வாக்கினி லேசார் வாகிய
 வழுதி மேற்றிரு நீறே பூசிநி மிர்ந்துகூனும்
மருவு மாற்றெதிர் வீறே டேறிட
 அழகி போற்றிய நீரு லாகிய
 மகிமை யாற்சமண் வேரோ டேகெட வென்றகோவே
புதிய மாக்கனி வீழ்தே னூறல்கள்
 பகலி ராத்திரி ஓயா வாளேகள்
 புரளு நாட்டினி லேகான் மாதைய ணைந்தமார்பா
புகழு நாற்கடல் சூழ்பார் மீதினில்
 அளகை போற்பல வாழ்வால் வீறிய
 புலவர் போற்றிய *வேலூர் மேவிய தம்பிரானே.

29. அதிமதங் கக்கப் பக்கமு கக்குஞ்
 சரிதனந் தைக்கச் சிக்கென நெக்கங்
 கணைதருஞ் செச்சைப் பொற்புய னத்தன் குறவாணர்
அடவியந் தத்தைக் கெய்த்துரு கிச்சென்
 றடிபணிந் திட்டப் பட்டும யற்கொண்
 டயர்பவன் சத்திக் கைத்தல னித்தன் குமரேசன்

*வேளூர் மேவிய பெருமாளே.

துதிசெயும் சுத்தப் பத்தியர் துக்கங்
களைபவன் பச்சைப் பக்ஷிந டத்துந்
துணைவனென் றர்ச்சித் திச்சைத ணித்துன் புகழ்பாடிச்
சுருதியின் கொத்துப் பத்திமு முற்றுந்
துரியமுந் தப்பித் தத்வம ணைத்துந்
தொலையுமந் தத்துக் கப்புற நிற்கும் படிபாராய்
கதிபொருந் தக்கற் பித்துந டத்துங்
கனல்தலம் புக்குச் சக்ரமெ டுக்குங்
கடவுளும் பத்மத் தச்சனு முட்கும் படிமோதிக்
கதிரவன் பற்குற் றிக்குயி லைத்திண்
சிறகரிந் தெட்டுத் திக்கர்வ குக்குங்
கடகமுந் தட்டுப் பட்டொழி யக்கொன் றபிராமி
பதிவ்ரதம் பற்றப் பெற்றம கப்பெண்
பரிவொழிந் தக்கிக் குட்படு தக்கன்
பரிபவம் பட்டுக் கெட்டொழி யத்தன் செவிபோயப்
பணிபங் கப்பட் டப்படி வெட்கும்
படிமுனிந் தற்றைக் கொற்றம்வி ளைக்கும்
பரமர்வந் திக்கக் கச்சியில் நிற்கும் பெருமாளே.

30. அதிருங் கழல்ப ணிந்துன் அடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில் உமைபாலா
பதியெங் கிலுமி ருந்து விளையாடிப்
பலகுன் றிலுமமர்ந்த பெருமாளே.

31. அத்த வேட்கைப் பற்றி நோக்கத்
தத்தை மார்க்குத் தமராயன்
பற்ற கூட்டத் திற்ப ராக்குற்
றச்சு தோட்பற் றியவோடும்

சித்த மீட்டுப் பொய்த்த வாழ்க்கைச்
சிக்கை நீக்கி இனிதான
சித்ர வாக்குப் பெற்று வாழ்த்திச்
செச்சை சாத்தப் பெறுவேனோ
கொத்து நூற்றுப் பத்து நாட்டக்
கொற்ற வேத்துக் கரசாய
குக்கு டாத்தச் சர்ப்ப கோத்ரிப்
பொற்ப வேற்கைக் குமரேசா
தத்வ நாற்பத் தெட்டு நாற்பத்
தெட்டு மேற்றுத் திடமேவும்
தர்க்க சாத்ரத் தக்க மார்க்கச்
சத்ய வாக்யப் பெருமாளே.

32. அத்த னன்னை இல்லம் வைத்த சொன்னம் வெள்ளி
அத்தை நண்ணு செல்வர் உடனாகி
அத்து பண்ணு கல்வி சுற்ற மென்னு மல்ல
லற்று நின்னை வல்ல படிபாடி
முத்த னென்ன வல்லை அத்த னென்ன வள்ளி
முத்த னென்ன உள்ளம் உணராதே
முட்ட வெண்மை உள்ள பட்ட னெண்மை கொள்ளு
முட்ட னிங்ங னைவ . தொழியாதோ
நித்தி மன்னு தில்லை நிர்த்தர் கண்ணி னுள்ளு
நித்து மன்னு பிள்ளை முருகோனே
சித்தி மன்னு செய்ய சத்தி துன்னு கைய
சித்ர வண்ண வல்லி அலர்சூடும்
பத்த ருண்மை சொல்லு ளூற்ற செம்மல் வெள்ளி
பத்தர் கன்னி புல்லு மணிமார்பா
பச்சை வன்னி அல்லி செச்சை சென்னி உள்ள
பச்சை மஞ்சை வல்ல பெருமாளே.

33. அத்து கிரிவலத ரத்து அலஎவள
கத்து வளர்செய்புள கிதபூத
ரத்தி ருகமலக ரத்தி தயமுருகி
யத்தி யிடனுறைபு நெடுமாம

ரத்து மலர்கனிய லைத்து வருமிடைத
லத்து ரகசிகரி பகராதே
யத்தி மலவுடல்ந டத்தி யெரிகொணிரை
யத்தி னிடையடிமை விழலாமோ
தத்து கவனவரி ணத்து வுபநிடவி
தத்து முனியுதவு மொழியாறுத்
தத்தை நறவையமு தத்தை நிகர்குறவர்
தத்தை தழுவியப னிருதோளா
தத்து தநிதுரக தத்து மிகுநிதிசர்
தத்து மலையவுணர் குலநாகந்
தத்த மிசைமரக தத்த மணியமயில்
தத்த விடுமமரர் பெருமாளே.

34. அந்தகன்வ ருந்தினம் பிறகிடச்
சந்ததமு வந்துகண் டரிவையர்க்
கன்புரு குசங்கதந் தவிரமுக் குணமாள
அந்திய கலென்றிரண் டையுமொழித்
திந்திரி யசஞ்சலங் களையறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்
செந்திலை உணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை அறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெ ருகுந்தடந் தெளிதரத் தணியாத
சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவ ரஎன்றுநின் தெரிசனைப் படுவேனோ
கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்
குன்றிடி யஅம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்

தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான
சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் பெருமாளே.

35. அந்தோமன மேநம தாக்கையை
நம்பாதெளி தாகிய சூத்திர
மம்போருக ளுடிய பூட்டிது இனிமேல்நாம்
அஞ்சாதமை யாகிரி யாக்கையை
பஞ்சாடிய வேலவ னுர்க்கிய
லங்காருவம் வாவினி தாக்கையை ஒழியாமல்
வந்தோமிது வேகதி யாட்சியு
மிந்தாமயில் வாகனர் சீட்டிது
வந்தாளுவம் நாமென வீக்கிய சிவநீறும்
வந்தேவெகு வானமை யாட்கொளும்
வந்தார்மத மேதினி மேற்பட
மைந்தாகும ராவென ஆர்த்துள மறவாதே
திந்தோதிமி தீதத மாத்துடி
தந்தாதன னுதன தாத்தன
செம்பூரிகை பேரிகை ஆர்த்தெழ மறையோதச்
செங்காடென வேவரு மூர்க்கர்கள்
சங்காரசி காமணி வேற்கொடு
செண்டாடிம காமயில் மேற்கொளு முருகோனே
இந்தோடிதழ் நாகம காப்புனல்
கங்காளமி னுர்சடை சூட்டிய
என்தாதைச தாசிவ கோத்திரன் அருள்பாலா
எண்கூடரு ளால்நெளவி நோக்கியை
நன்பூமண மேவுசி ராப்பளி
என்பார்மன மேதனி நோக்கிய பெருமாளே.

36\. அபகார நிந்தைபட் டுழலாதே
  அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
  உனைநானி னைந்தருட் பெறுவேனோ
இபமாமு கன்றனக் கிளையோனே
  இமவான்ம டந்தையுத் தமிபாலா
செபமாலை தந்தசற் குருநாதா
  திருவாவி னன்குடிப் பெருமாளே.

37\. அப்படி ஏழு மேழும்வ குத்துவ ழாது போதினி
  னக்ரம்வி யோம கோளகை மிசைவாழும்
 அக்ஷர தேவி கோவின்வி திப்படி மாறி மாறிய
  னைத்துரு வாய காயம தடைவேகொண்
டிப்படி யோனி வாய்தொறு முற்பவி யாவி ழாவுல
  கிற்றடு மாறி யேதிரி தருகாலம்
 எத்தனை ஊழி காலமெ னத்தெரி யாது வாழியி
  னிப்பிற வாது நீயருள் புரிவாயே
கற்பக வேழ மேய்வன பச்சிள ஏனல் மீதுறை
  கற்புடை மாது தோய்தரும் அபிராம
 கர்ப்புர தூளி லேபன மற்புய பாக சாதன
  கற்பக லோக தாரண கிரிசால
விப்ரச மூக வேதன பச்சிம பூமி காவல
  வெட்சியு நீப மாலையும் அணிவோனே
 மெத்திய ஆழி சேறெழ வெற்பொடு சூர னீறெழ
  விக்ரம வேலை ஏவிய பெருமாளே.

38\. அமரு மமரரினி லதிக னயனுமரி
  யவரும் வெருவவரும் அதிகாளம்
 அதனை அதகரண விதன பரிபுரண
  மமைய னவர்கரண அகிலேச
நிமிர அருள்சரண நிபிட மதெனவுன
  நிமிர சமிரமய நியமாய
 நிமிட மதனிலுண வலசி வசுதவர
  தினது பதவிதர வருவாயே

சமர சமராசுர அசுர விதாபர
சரத விரதவயில் விடுவோனே
தகுர்த தகுர்ததிகு திகுர்த திகுர்ததிகு
தரர ரரரரிரி தகுர்தாத
எமர நடனவித மயிலின் முதுகில்வரு
மிமைய மகள்குமர எமதீச
இயலி னியல்மயிலை நகரி லினிதுறையு
மெமது பரகுரவ பெருமாளே.

39. அமல கமலவுரு சங்கந் தொனித்தமறை
அரிய பரமவெளி எங்கும் பொலித்தசெய
லளவு மசலமது கண்டங் கொருத்தருள வறியாத
தகர முதலுருகொ ளேம்பந் தொரக்ஷரமொ
டகில புவனநதி அண்டங் களுக்குமுத
லருண கிரணவொளி எங்கெங் குமுற்றுமுதல் நடுவான
கமல சூரியமதி விந்துங் கதிர்ப்பரவு
கனக நிறமுடைய பண்பம் படிக்கதவ
ககன சுழிமுனையி லஞ்சுங் களித்தமுத சிவயோகம்
கருணை உடனறிவி தங்கொண் டிடக்கவுரி
குமர குமரகுரு வென்றென் றுரைப்பமுது
கனிவு வரஇளமை தந்துன் பதத்திலெனை அருள்வாயே
திமிலை பலமுருடு திந்திந் திமித்திமித
டுமுட டுமுடுமுட டுண்டுண் டுமுட்டுமுட
திகுட திகுடதிகு திந்திந் திகுர்த்திகுர்த திகுதீதோ
செகண செகணசெக செஞ்செஞ் செகக்கணென
அகில முரகன்முடி அண்டம் பிளக்கவெகு
திமிர்த குலவிருது சங்கந் தொனித்தசுரர் களமீதே
அமரர் குழுமிமலர் கொண்டங் கிறைத்தருள
அரிய குருகுகொடி எங்குந் தழைத்தருள
அரியொ டயன்முனிவ ரண்டம் பிழைத்தருள
விடும்வேலா
அரியின் மகள்தனமொ டங்கம் புதைக்கமுக
அழகு புயமொடணை இன்பங் களித்துமகிழ்
அரிய மயிலயில்கொ டிந்தம் பலத்தின்மகிழ் பெருமாளே.

**40.** அமல வாயு வோடாத கமல நாபி மேல்மூல
அமுத பான மேமூல அனல்மூள
அசைவு றாது பேராத விதமு மேவி யோவாது
அரிச தான சோபான மதனாலே
எமனை மோதி யாகாச கமன மாம னோபாவ
மெளிது சால மேலாக உரையாடும்
எனதி யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவ னாதீதம் அருள்வாயே
விமலை தோடி மீதோடும் யமுனை போல வோரேழு
விபுத மேக மேபோல உலகேழும்
விரிவு காணு மாமாயன் முடிய நீளு மாபோல
வெருவி தாமு காகாய பதமோடிக்
கமல யோனி வீடான ககன கோள மீதோடு
கலப நீல மாயூர இளையோனே
கருணை மேக மேதூய கருணை வாரி யேயீறில்
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

**41.** அமுத மூறுசொ லாகிய தோகையர்
பொருளு ளாரைய ணையு ணையெ
னருகு வீடிது தானிதில் வாருமெ னுரைகூறும்
அசடு மாதர்கு வாதுசொல் கேடிகள்
தெருவின் மீதுகு லாவியு லாவிகள்
அவர்கள் மாயைப டாமல்கெ டாமல்நி னருள்தாராய்
குமரி காளிவ ராகிம கேஸ்வரி
கவுரி மோடிசு ராரிநி ராபரி
கொடிய சூலிசு டாரணி யாமளி மகமாயி
குறளு ரூபமு ராரிச கோதரி
உலக தாரியு தாரிப ராபரி
குருப ராரிவி காரிந மோகரி அபிராமி
சமர நீலிபு ராரித னாயகி
மலைகு மாரிக பாலிந னாரணி
சலில மாரிசி வாயம னோகரி பரையோகி

சவுரி வீரிமு நீர்விட போஜனி
திகிரி மேவுகை யாளிசெ யாளொரு
சகல வேதமு மாயின தாயுமை அருள்பாலா
திமித மாடுசு ராரிநி சாசரர்
முடிக டோறுக டாவியி டேயொரு
சிலப சாசுகு ணலிநி ணமுண விடும்வேலா
திருவு லாவுசொ ணேசர ணாமலை
முகிலு லாவுவி மானந வோநிலை
சிகர மீதுகு லாவியு லாவிய பெருமாளே.

42\. அமுதினை மெத்தச் சொரிந்து மாவின
தினியப ழத்தைப் பிழிந்து பானற
வதனொடு தித்தித் தகண்ட ளாவிய விதமாராய்
அழகிய பொற்றட் டினிலுண்டு வேடையின்
வருபசி யர்க்குற் றவன்பி னாலுண
வருள்பவ ரொத்துத் தளர்ந்த காமுகர் மயல்தீரக்
குமுதம் விளர்க்கத் தடங்கு லாவிய
நிலவெழு முத்தைப் புனைந்த பாரிய
குலவிய சித்ரப் ப்ரசண்ட பூரண தனபாரக்
குவடிள கக்கட் டியுந்தி மேல்விழு
மவர்மய லிற்புக் கழிந்த பாவியை
குரைகழல் பற்றிப் புகழ்ந்து வாழ்வுற அருள்வாயே
வமிசமி குத்துப் ப்ரபஞ்சம் யாவையு
மறுகிட வுக்ரக் கொடும்பை யானபுன்
மதிகொ டழித்திட் டிடும்பை ராவணன் மதியாமே
மறுவறு கற்பிற் சிறந்த சீதையை
விதனம் விளைக்கக் குரங்கி னாலவன்
வமிச மறுத்திட் டிலங்கு மாயவன் மருகோனே
எமதும லத்தைக் களைந்து பாடென
அருள அதற்குப் புகழ்ந்து பாடிய
இயல்கவி மெச்சிட் டுயர்ந்த பேறருண் முருகோனே
எழில்வளை மிக்கத் தவழ்ந்து லாவிய
பொனிநதி தெற்கிற் றிகழ்ந்து மேவிய
இணையிலி ரத்னச் சிகண்டி யூருறை பெருமாளே.

43. அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை

அதுவருகு மளவிலுயி ரங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்தமிகு தம்பட் டம்பற்
கறையவுற வினரலற உந்திச் சந்தித் தெருவூடே

எமதுபொரு ளெனுமருளை யின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கிளையுமுது வசைதவிர இன்றைக் கன்றைக்
கெனநாடா

திடுககடி தெனுமுணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனவகலு நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ

குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாடக்

குலதடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழலதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத்
தொகுதீதோ

திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
தமருகம திர்சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பாதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா

திரளுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே.

44. அமைவுற் றடையப் பசியுற் றவருக்
கமுதைப் பகிர்தற் கிசையாதே
அடையப் பொருள்கைக் கிளமைக் கெனவைத்
தருள்தப் பிமதத் தயராதே

தமர்சுற் றியழப் பறைகொட் டியிடச்
சமனெட் டுயிரைக் கொடுபோகுஞ்
சரிரத் தினைநிற் குமெனக் கருதித்
தளர்வுற் றொழியக் கடவேனோ
இமயத் துமயிற் கொருபக் கமளித்
தவருக் கிசையப் புகல்வோனே
இரணத் தினிலெற் றுவரைக் கழுகுக்
கிரையிட் டிடுவிக் ரமவேலா
சமயச் சிலுகிட் டவரைத் தவறித்
தவமுற் றவருட் புகநாடும்
சடுபத் மமுகக் குகபுக் ககனத்
தணியிற் குமரப் பெருமாளே.

45. அம்பு ராசியிற் கெண்டை சேலொளித்
தஞ்ச வேமணிக் குழைவீசும்
அங்க ணாரிடத் தின்ப சாகரத்
தங்கி மூழ்குமிச் சையினாலே
எம்பி ரானுனைச் சிந்தி யாதொழித்
திந்த்ர சாலஇப் ப்ரமைதீர
இங்கு வாவெனப் பண்பி னாலழைத்
தெங்கு மானமெய்ப் பொருள்தாராய்
கொம்பு போலிடைத் தொண்டை போலிதழ்க்
கொண்டல் போல்குழற் கனமேருக்
குன்று போல்முலைப் பைங்கி ராதியைக்
கொண்ட கோலசற் குணவேலா
சம்ப ராரியைக் கொன்ற தீவிழிச்
சம்பு போதகக் குருநாதா
சண்ட கோபுரச் செம்பொன் மாளிகைத்
தஞ்சை மாநகர்ப் பெருமாளே.

46. அம்புலி நீரைச் சூடிய செஞ்சடை மீதிற் றாவிய
ஐந்தலை நாகப் பூஷணர் அருள்பாலா
அன்புட னாவிற் பாவது சந்தத மோதித் தாள்தனில்
அங்கையி னால்நற் பூசனை புரியாமல்

வம்பணி பாரப் பூண்முலை வஞ்சியர் மாயச் சாயலில்
வண்டுழ லோதித் தாழலில் இருகாதில்
மண்டிய நீலப் பார்வையில் வெண்டுகி லாடைச் சேர்வையில்
மங்கிய வேழைப் பாவியென் அழிவேனோ
கொம்பனை நீலக் கோமளை அம்புய மாலைப் பூஷணி
குண்டலி யாலப் போசனி அபிராமி
கொஞ்சிய வானச் சானவி சங்கரி வேதப் பார்வதி
குன்றது வார்பொற் காரிகை அருள்பாலா
செம்பவ ளாயக் கூரிதழ் மின்குற மானைப் பூண்முலை
திண்புய மாரப் பூரணம் அணைவோனே
செந்தமிழ் பாணப் பாவலர் சங்கித யாழைப் பாடிய
தென்திரு வானைக் காஉறை பெருமாளே.

47. அம்பொத் தவிழித் தந்தக் கலகத்
தஞ்சிக் கமலக் கணையாலே
அன்றிற் குமனற் றென்றற் குயிலைத்
தந்திப் பொழுதிற் பிறையாலே
எம்பொற் கொடிமற் றுன்பக் கலனற்
றின்பக் கலவித் துயரானாள்
என்பெற் றுலகிற் பெண்பெற் றவருக்
கின்பப் புலியுற் றிடலாமோ
கொம்புக் கரிபட் டஞ்சப் பதுமக்
கொங்கைக் குறவிக் கினியோனே
கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே
செம்பொற் சிகரப் பைம்பொற் கிரியைச்
சிந்தக் கறுவிப் பொரும்வேலா
செஞ்சொற் புலவர்க் கன்புற் றதிருச்
செந்திற் குமரப் பெருமாளே.

48. அயிலப்புக் கயலப்புத் தலைமெச்சுற் பலநச்சுக்
கணுரத்தைக் கனவெற்புத் தனமேகம்
அளகக்கொத் தெனவொப்பிப் புளுகிச்சொற் பலகற்பித்
திளகிக்கற் புளநெக்குத் தடுமாறித்

துயில்விட்டுச் செயல்விட்டுத் துயர்வுற்றுக் கயர்வுற்றுத்
தொடியர்க்கிப் படியெய்த்துச் சுழலாதே
சுருதிப்பொற் பொருள்செக்கர்க் குரவிட்டுத் தமர்பற்றித்
தொழுசெச்சைக் கழல்பற்றிப் பணிவேனோ
புயலத்தைக் குயில்தத்தைக் கிளிபுக்குத் துளைபச்சைப்
புனமுத்தைப் புணர்சித்ரப் புயவீரா
புரவிக்கொட் பிரதற்றத் திருள்திக்கிப் படிமட்கப்
புகல்பொற்குக் குடவெற்றிக் கொடியோனே
கயிலச்சுத் தரதத்துச் சயிலத்துத் தரநிற்கக்
கரணிச்சித் தருள்கச்சிப் பதியோனே
கடலிற்கொக் கடல்கெட்டுக் கரமுட்கத் தரமுட்கப்
பொருசத்திக் கரசொக்கப் பெருமாளே.

49. அயிலார் மைக்கடு விழியார் மட்டைகள்
அயலார் நத்திடு விலைமாதர்
அணைமீ திற்றுயில் பொழுதே தெட்டிக
ளவரோ வற்செய்து தமியேனும்
மயலா கித்திரி வதுதா னற்றிட
மலமா யைக்குணம் அதுமாற
மறையால் மிக்கருள் பெறவே யற்புத
மதுமா லைப்பதம் அருள்வாயே
கயிலா யப்பதி யுடையா ருக்கொரு
பொருளே கட்டளை இடுவோனே
கடலோ டிப்புகு முதுசூர் பொட்டெழ
கதிர்வேல் விட்டிடு திறலோனே
குயிலா லித்திடு பொழிலே சுற்றிய
குடவா யிற்பதி உறைவோனே
குறமா தைப்புணர் சதுரா வித்தக
குறையா மெய்த்தவர் பெருமாளே.

50. அயிலின் வாளி வேல்வாளி அளவு கூரி தாயீச
ரமுத ளாவு மாவேசம் அதுபோல
அறவு நீளி தாய்மீள அகலி தாய வார்காதி
னளவு மோடி நீடோதி நிழலாறித்

துயில்கொ ளாத வாளுெரு மயல்கொ ளாத ஆவேத
துறவ ரான பேர்யாரு மடலேறத்
துணியு மாறு லாநீல நயன மாத ராரோடு
துவளு வேனை ஈடேறு நெறிபாராய்
பயிலு மேக நீகார சயில ராசன் வாழ்வான
பவதி யாம ளாவாமை அபிராமி
பரிபு ரார பாதார சரணி சாம ளாகார
பரம யோகி னீமோகி மகமாயி
கயிலை யாள ரோர்பாதி கடவு ளாளி லோகாயி
கனத னூச லாபார அமுதூறல்
கமழு மார ஞாகீத கவிதை வாண வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

51. அயிலொத் திடுமிரு விழியாலே
அமுதொத் திடுமெரு மொழியாலே
சயிலத் தெழுதுணை முலையாலே
தடையுற் றடியனு மடிவேனோ
கயிலைப் பதியரன் முருகோனே
கடலக் கரைதிரை அருகேசூழ்
மயிலைப் பதிதனில் உறைவோனே
மகிமைக் கடியவர் பெருமாளே.

52. அயில்வி லோசனங் குவிய வாசகம்
பதற ஆனனங் குறுவேர்வுற்
றளக பாரமுங் குலைய மேல்விழுந்
ததர பானமுண் டியல்மாதர்
சயில பாரகுங் கும யோதரந்
தழுவு மாதரந் தமியேனால்
தவிரொ ணாதுநின் கருணை கூர்தருந்
தருண பாதமுந் தரவேணும்
கயிலை யாளியுங் குலிச பாணியுங்
கமல யோனியும் புயகேசன்
கணப ணாமுகங் கிழிய மோதுவெங்
கருட வாகனந் தனிலேறும்

புயலி லேகரும் பரவ வானினும்
புணரி மீதினுங் கிரிமீதும்
பொருநி சாசரன் தனது மார்பினும்
புதைய வேல்விடும் பெருமாளே.

53. அரகர சிவனரி அயனிவர் பரவிமுன்
அறுமுக சரவண பவனேயென்
றநுதின மொழிதர அசுரர்கள் கெடஅயில்
அனலென எழவிடும் அதிவீரா
பரிபுர கமலம தடியிணை அடியவ
ருளமதி லுறவருள் முருகேசா
பகவதி வரைமகள் உமைதர வருகுக
பரமன திருசெவி களிகூர
உரைசெயு மொருமொழி பிரணவ முடிவதை
உரைதரு குருபர உயர்வாய
உலகம னலகில உயிர்களு மிமையவ
ரவர்களு முறுவர முநிவோரும்
பரவிமு னநுதின மனமகிழ் வுறவணி
பணிதிகழ் தணிகையில் உறைவோனே
பகர்தரு குறமகள் தருவமை வனிதையும்
இருபுடை உறவரு பெருமாளே.

54. அரிசன பரிசஅ லங்க்ரு தாம்ருத
கலசமு மதனுய ரம்பொன் மாமுடி
யதுமென இளைஞர்கள் நெஞ்சு மாவியும் ஒருகோடி
அடைபடு குடயுக ளங்க ளாமென
ம்ருகமத களபம ணிந்த சீதள
அபிநவ கனதன மங்கை மாருடன் விளையாடி
இரவொடு பகலொழி வின்றி மால்தரு
மலைகட லளறுப டிந்து வாயமு
தினிதென அருளஅ ருந்தி யார்வமொ டிதமாகி
இருவரு மருவிய ணைந்து பாழ்படு
மருவினை யறவும றந்து னீள்தரு
மிணைமல ரடிகள்நி னைந்து வாழ்வதும் ஒருநாளே

சுரர்குல பதிவிதி விண்டு தோலுரி
உடைபுனை இருடிக ளண்ட ரானவர்
துதிசெய எதிர்பொர வந்த தானவர் குடிமாளத்
தொலைவறு மலகையி னங்க ளானவை
நடமிட நிணமலை துன்ற வேயதில்
துவரிது புளியிது தொய்ந்த தீதிது இதுவீனால்
பருகுத லரியது கந்த தீதிது
உளதென குறளிகள் தின்று மேதகு
பசிகெட ஒருதனி வென்ற சேவக மயில்வீரா
பகிரதி சிறுவவி லங்க லூடுறு
குறமகள் கொழுநப டர்ந்து மேலெழு
பருவரை உருவஎ றிந்த வேல்வல பெருமாளே.

55. அரிசன வாடைச் சேர்வை குளித்துப்
பலவித கோலச் சேலை உடுத்திட்
டலர்குழல் கோதிக் கோதி முடித்துச் சுருளோடே
அமர்பொரு காதுக் கோலை திருத்தித்
திருநுதல் நீவிப் பாளித பொட்டிட்
டகில்புழு காரச் சேறு தனத்திட் டலர்வேளின்
சுரத விநோதப் பார்வை மையிட்டுத்
தருணக லாரத் தோடைத ரித்துத்
தொழிலிடு தோளுக் கேறவ ரித்திட் டிளைஞோர்மார்
துறவினர் சோரச் சோரந கைத்துப்
பொருள்கவர் மாதர்க் காசைய ளித்தற்
றுயரற வேபொற் பாதமெ னக்குத் தருவாயே
கிரியலை வாரிச் சூரரி ரத்தப்
புணரியின் மூழ்கிக் கூளிக ளிக்கக்
கிரணவை வேல்புத் தேளிர்பிழைக்கத் தொடுவோனே
கெருவித கோலப் பாரத னத்துக்
குறமகள் பாதச் சேகர சொர்க்கக்
கிளிதெய்வ யானைக் கேபுய வெற்பைத் தருவோனே

பரிமள நீபத் தாரொடு வெட்சித்
தொடைபுனை சேவற் கேதன துத்திப்
பணியகல் பீடத் தோகைம யிற்பொற் பரியோனே
பனிமல ரோடைச் சேலுக ளித்துக்
ககனம ளாவிப் போய்வரு வெற்றிப்
பழநியில் வாழ்பொற் கோமள சத்திப் பெருமாளே.

56. அரிமரு கோனெ மோவென் றறுதியி லானெ மோவென்
றறுமுக வேளெ மோவென் றுனபாதம்
அரகர சேயெ மோவென் றிமையவர் வாழ்வெ மோவென்
றருணசொ ரூபா மோவென் றுளதாசை
பரிபுர பாதாசு ரேசன் றருமக ளுதாஅ ராவின்
பகைமயில் வேலாயு தாடம் பாநாளும்
பகர்தவி லாதானை யேதுஞ் சிலதறி யாவேழை நாளுன்
பதிபசு பாசோப தேசம் பெறவேணும்
கரதல சூலாயு தாமுன் சலபதி போலார வாரங்
கடினசு ராபான சாமுண் டியுமாடக்
கரிபரி மேலேறு வானுஞ் செயசெய சேனாப தீயென்
களமிசை தானேறி யேயஞ் சியசூரன்
கூரல்விட நாய்பேய்கள் பூதங் கழுகுகள் கோமாயு காகங்
குடல்கொள வேபூச லாடும் பலதோளா
குடதிசை வாராழி போலும் படர்நதி காவேரி சூழுங்
குளிர்வய லூரார மேவும் பெருமாளே.

57. அரியய னறியா தவரெரி புரமூ
ணதுபுக நகையே வியநாதர்
அவிர்சடை மிசையோர் வனிதையர் பதிசீ
றழலையு மழுமேர் பிடிநாதர்
வரைமக ளொருகூ றுடையவர் மதனை
கழும்விழ விழியே வியநாதர்
மனமகிழ் குமரா எனவுன திருதாள்
மலரடி தொழுமா றருள்வாயே

அருவரை யிருகூ றிடவொரு மயில்மே
லவனியை வலமாய் வருவோனே
அமரர்க ளிகல்நீ டசுரர்கள் சிரமே
லயில்தனை விசையாய் விடுவோனே
வரிசையொ டொருமா தினைதரு வனமே
மருவியொர் குறமா தணைவேடா
மலைகளில் மகிழ்வாய் மருவிநல் வடுகூர்
வருதவ முனிவோர் பெருமாளே.

58. அரியயன் புட்பிக் கக்குழு மிக்கொண்
டமரர்வந் திக்கத் தட்டுரு வச்சென்
றவுணரங் கத்தைக் குத்திமு றித்தங் கொருகோடி
அலகைநின் றுருத்தித் தித்திய றுத்தும்
பலவியங் கொட்டச் சக்கடி கற்றந்
தரியுடன் பற்றிக் குச்சரி மெச்சும் படிபாடிப்
பரிமுகங் கக்கச் செக்கண்வி ழித்தும்
பவுரிகொண் டெட்டுத் திக்கையு டைத்தும்
படுகளம் புக்குத் தொக்குந டிக்கும் படிமோதிப்
படைபொருஞ் சத்திப் பத்மநி னைத்துஞ்
சரவணன் கச்சிப் பொற்பனெ னப்பின்
பரவியுஞ் சித்தத் துக்குவ ரத்தொண் டடைவேனோ
பெரியதண் செச்சைக் கச்சணி வெற்பும்
சிறியவஞ் சிக்கொத் தெய்த்தநு சுப்பும்
ப்ரிதியொழிந் தொக்கக் கைக்கிளை துத்தங் குரலாதிப்
பிரிவில்கண் டிக்கப் பட்டவு ருட்டும்
கமுகமுஞ் சிற்பச் சித்ரமு ருக்கும்
பிரதியண் டத்தைப் பெற்றருள் சிற்றுந் தியும்நீலக்
கரியகொண் டற்கொப் பித்தகு துப்புந்
திலதமுஞ் செப்பொற் பட்டமு முத்தின்
கனவடங் கட்டப் பட்டக ழுத்துந் திருவான
கருணையுஞ் சுத்தப் பச்சைவ னப்புங்
கருதுமன் பர்க்குச் சித்திய ளிக்குங்
கவுரியம் பைக்குப் புத்ரஎ வர்க்கும் பெருமாளே.

59. அரிய வஞ்சக ரறவே கொடியவர்
அவலர் வன்கண ரினியா ரவகுணர்
அசட ரன்பில ரவமே திரிபவர் அதிமோக

அலையில் மண்டிய வழியே ஒழுகியர்
வினைநி ரம்பிடு மவமே செறிபவர்
அருள்து றந்தவ ரிடம்வாழ் சவலைகள் நரகேற

உரிய சஞ்சல மதியா னதுபெறு
மனஇ டும்பர்க ளிடமே தெனஅவர்
உபய அங்கமு நிலையா கிடவொரு கவியாலே

உலக முண்டவர் மதனு ரிமையவர்
தருவெ னும்படி மொழியா அவர்தர
உளது கொண்டுயி ரவமே விடுவது தவிராதோ

கரிய கொந்தள மலையா ளிருதன
அமுது ணுங்குரு பரனே திரைபடு
கடல டும்படி கணையே வியஅரி மருகோனே

கருணை கொண்டொரு குறமா மகளிடை
கலவி தங்கிய குமரா மயில்மிசை
கடுகி எண்டிசை நொடியே வலம்வரு மிளையோனே

திரிபு ரங்கனல் நகையா லெரிசெய்து
பொதுந டப்புரி யரனு ரிடமுறை
சிவைச வுந்தரி உமையா ளருளிய புதல்வோனே

சிகர வெண்கரி அயிரா வதமிசை
வருபு ரந்தர னமரா பதியவர்
சிறைவி டும்படி வடிவேல் விடவல பெருமாளே.

60. அரிவைய ரெனுமிரு தங்கக் கட்டியும்
இருபுறம் வருமிரு சிங்கக் குட்டியும்
அறுமுக மதிபுனை செம்பொற் சுட்டியும் முகமீதே

அழகொழு கியமது வின்றிற் சிப்பையும்
அவளிவள் விழிதுயில் தும்பிப் பக்ஷியும்
அதுவிது வெனுமொரு சண்டைப் பட்டதும்

எழுநூறும்

இரவில் ஒளிவிடு மின்பப் புட்களும்
இமையவ ரவரவர் சந்திப் புக்களும்
இருள்படு மகபதி இந்த்ரப் பட்டமும் அழியாதே
இசையெழு கனகச தங்கைக் கொத்துகள்
கலகல வெனுமொரு விந்தைப் புட்பமும்
இருவிழி குளிரவும் என்றைக் கிப்படி வருவாயே
குரைகட லெனுமொரு தம்பட் டத்தொனி
கிழிபட மதனனு டம்பைச் சுட்டதும்
குளிர்தர வருள்மழை சிந்தத் தக்கவர் குருநாதா
குறமகள் கிளிமொழி கண்டிச் சைப்படு
பரிமள களபசு கந்தத் தைப்புனை
குவிமுலை முகடும ழுந்தத் தைத்திடு மணிமார்பா
திரைகட லமுதொரு பெண்பெற் றிட்டது
தெரிசனை பெறவிரு கண்பெற் றிட்டனு
தினம்விழி துயில்பவர் தங்கச் சிக்கொரு
புதல்வோனே
திமிரப டலமுறு துன்பத் துக்கெழு
தினகர னெனவரு மன்னைப் பெற்றுயர்
திரிசிர கிரியினி லின்பத் தைத்தரு முருகோனே.

61\. அரிவையர்கள் தொடரு மின்பத்
துலகுநெறி மிகம ருண்டிட்
டசடனென மனது நொந்திட் டயராமல்
அறுதினமு முவகை மிஞ்சிச்
சுகநெறியை விழைவு கொண்டிட்
டவநெறியின் விழையு மொன்றைத் தவிர்வேனோ
பரிதிமதி நிறைய நின்றங்
கெனவொளிரு முனது துங்கப்
படிவமுக மவைகள் கண்டுற் றகமேவும்
படர்கள்முழு வதும கன்றுட்
பரிவினொடு துதிபு கன்றெற்
பதயுகள மிசைவ ணங்கற் கருள்வாயே

செருவிலகு மசுரர் மங்கக்
குலகிரிகள் நடுந டுங்கச்
சிலுசிலென வளைகு லுங்கத் திடமான
செயமுதவு மலர்பொ ருங்கைத்
தலமிலகு மயில்கொ ளுஞ்சத்
தியைவிடுதல் புரியு முன்பிற் குழகோனே
கருணைபொழி கிருபை முந்தப்
பரிவினொடு கவுரி கொஞ்சக்
கலகலென வருக டம்பத் திருமார்பா
கரிமுகவர் தமைய னென்றுற்
றிடுமிளைய குமர பண்பிற்
கநககிரி யிலகு கந்தப் பெருமாளே.

62. அரிவையர் நெஞ்சுரு காப்புணர் தருவிர கங்களி னுற்பெரி
தவசம்வி ளைந்துவி டாய்த்திரள் முலைமீதே
அகிலொடு சந்தன சேற்றினில் முழுகியெ ழுந்தெதிர் கூப்புகை
அடியின கம்பிறை போறபட விளையாடிப்
பரிமளம் விஞ்சிய பூக்குழல் சரியம ருங்கிடை போய்ச்சில
பறவைக ளின்குர லாய்க்கயல் விழிசோரப்
பதுமமு கங்குறு வேர்ப்பெழ இதழமு துண்டிர வாய்ப்பகல்
பகடியி டும்படி தூர்த்தனை விடலாமோ
சரியையு டன்க்ரியை போற்றிய பரமப தம்பெற வேற்றிய
சதிர நெருங்கும மாற்றிரு மருகோனே
சயிலமெறிந்தகைவேற்கொடுமயிலினில்வந்தெனையாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய குருநாதா
திரிபுவ னந்தொழு பார்த்திபன் மருவிய மண்டப கோட்டிகள்
தெருவில்வி ளங்குசி ராப்பளி மலைமீதே
திரியஇ ருந்தப ராக்ரம முறுவரை குன்றுடை யார்க்கொரு
திலதமெ னும்படி தோற்றிய பெருமாளே.

63. அருக்கார் நலத்தைத் திரிப்பார்மனத்துக்
கடுத்தா சைபற்றித் தளராதே
அடற்கா லனுக்குக் கடைக்கால் மிதித்திட்
டறப்பே தகப்பட் டழியாதே

கருக்கா ரர்நட்பைப் பெருக்கா சரித்துக்
கலிச்சா கரத்திற் பிறவாதே
கருத்தா லெனக்குத் திருத்தா ளளித்துக்
கலைப்போ தகத்தைப் புகல்வாயே
ஒருக்கால் நினைத்திட் டிருக்கால் மிகுத்திட்
டுரைப்பார் கள்சித்தத் துறைவோனே
உரத்தோ ளிடத்திற் குறத்தே னைவைத்திட்
டொளித்தோ டும்வெற்றிக் குமரேசா
செருக்கா தருக்கிச் சுரர்சூர் நெருக்கச்
செருச்சூர் மரிக்கப் பொரும்வேலா
திறப்பூ தலத்திற் றிரட்சோ ணவெற்பிற்
றிருக்கோ புரத்திற் பெருமாளே.

64. அருக்கி மெத்ததோள் திருத்தி உற்றுமார்
பசைத்து வக்குமால் இளைஞோரை
அழைத்து மிக்ககா சிழைத்து மெத்தைமீ
தணைத்து மெத்தமால் அதுகூர
உருக்கி உட்கொள்மா தருக்கு ளெய்த்துநா
வுலற்றி உட்குநா ளுடன்மேவி
உழைக்கு மத்தைநீ ஒழித்து முத்திபா
லுறக்கு ணத்ததாள் அருள்வாயே
சுருக்க முற்றமால் தனக்கு மெட்டிடா
தொருத்தர் மிக்கமா நடமாடும்
சுகத்தி லத்தர்தா மிகுத்த பத்திகூர்
சுரக்க வித்தைதான் அருள்வோனே
பெருக்க வெற்றிகூர் திருக்கை கொற்றவேல்
பிடித்து குற்றமார் ஒருசூரன்
பெலத்தை முட்டிமார் துளைத்து நட்டுளோர்
பிழைக்க விட்டவோர் பெருமாளே.

65. அருக்கி மெத்தெனச் சிரித்து மைக்கணிட்
டழைத்தி தப்படச் சிலகூறி
அரைப்ப ணத்தைவிற் றுடுத்த பட்டவிழ்த்
தணைத்தி தழ்க்கொடுத் தநுராகத்

அருக்கி மட்டறப் பொருட்ப றிப்பவர்க்
குளக்க ருத்தினிற் ப்ரமைகூரா
துரைத்து செய்ப்பதித் தலத்தி னைத்துதித்
துனைத்தி ருப்புகழ்ப் பகர்வேனோ
தருக்கு மற்கடப் படைப்ப லத்தினிற்
றடப்பொ ருப்பெடுத் தணையாகச்
சமுத்தி ரத்தினைக் குறுக்க டைத்ததிற்
றரித்த ரக்கர்பொட் டெழவேபோர்
செருக்கு விக்ரமச் சரத்தை விட்டுறச்
செயித்த வுத்தமத் திருமாமன்
திருத்த கப்பன்மெச் சொருத்த முத்தமிழ்த்
*திருப்ப டிக்கரைப் பெருமாளே.

66. அருக்கிமெத் தெனச்சிரித் துருக்கியிட் டுளக்கருத்
தழித்தறக் கறுத்தகட் பயிலாலே
அழைத்தகப் படுத்தியொட் டறப்பொருட் பறிப்பவர்க்
கடுத்தபத் தமுற்றுவித் தகர்போலத்
தரிக்கும்வித் தரிக்குமிக் கதத்துவப் ப்ரசித்திபெத்
தலத்துமற் றிலைப்பிறர்க் கெனஞானம்
சமைத்துரைத் திமைப்பினிற் சடக்கெனப் படுத்தெழச்
சறுக்குமிப் பிறப்புமுற் றிடலாமோ
பொருக்கெழக் கடற்பரப் பரக்கர்கொத் திறப்புறப்
பொருப்பினிற் பெருக்கவுற் றிடுமாயம்
புடைத்திடித் தடற்கரத் துறப்பிடித் தகற்பகப்
புரிக்கிரக் கம்வைத்தபொற் கதிர்வேலா
திருத்தமுத் தமிழ்க்கவிக் கொருத்தமைக் குறத்தியைத்
தினைப்புனக் கிரித்தலத் திடைதோயும்
சிவத்தகுக் குடக்கொடிச் செருக்கவுற் பலச்சுனைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே.

67. அருக்கு மங்கையர் மலரடி வருடியும்
கருத்த றிந்தபின் அரைதனி லுடைதனை
அவிழ்த்தும் அங்குள அரசிலை தடவியும் இருதோளுற்

*திருத்த ணிப்பதிப் பெருமாளே.

றணைத்து மங்கையின் அடிதொறு நகமெழ
உதட்டை மென்றுப விடுகுறி களுமிட
அடிக்க ளந்தனில் மயில்குயில் புறவென் மிகவாய்விட்
டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவ முறுபலம்
உறக்கை யின்கனி நிகரென இலகிய முலைமேல்வீழ்ந்
திருக்க லங்கிமெ யுருகிட அமுதுகு
பெருத்த உந்தியின் முழுகிமெ யுணர்வற
உழைத்தி டுங்கன கலவியை மகிழ்வது தவிர்வேனோ
இருக்கு மந்திர மொழிவகை முனிபெற
உரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வேளென்
றிலக்க ணங்களும் இயலிசை களுமிக
விரிக்கு மம்பல மதுரித கவிதனை
இயற்று செந்தமிழ் விதமொடு புயமிசை புனைவோனே
செருக்கு மம்பல மிசைதனி லசைவுற
நடித்த சங்கரர் வழிவழி யடியவர்
திருக்கு றுந்தடி அருள்பெற அருளிய குருநாதர்
திருக்கு ழந்தையு மெனஅவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

68. அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபினவவி சால பூரண அம்பொற் கும்பத் தனமோதி
அளிகுலவு மாதர் லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய அங்கைக் கொங்கைக் கிதமாகி
இருணிறைய மோதி மாலிகை சருவியுற வான வேளையில்
இழைகலைய மாத ரார்வழி இன்புற் றன்புற் றழியாநீள்
இரவுபகல் மோன மாகிய நினதடிய ரோடு யானுமுன்
இணையடிகள் பாடியாடிட நெஞ்சிற் செஞ்சொற் றருவாயே
தருணமணி யாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர்மறையி னாதி யாகிய சங்கத் துங்கக் குழையாளர்
தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரியேயமு துண்டிட் டண்டர்க் கருள்கூரும்

செருமுதலைவாயின் மேவிய அதிமதக போல மால்கரி
தெளிவினுடன் மூலமேயென முந்தச் சிந்தித் தருள்மாயன்
திருமருக சூரன் மார்பொடு சிலையுருவ வேலை யேவிய
செகதலவி யாச சீர்திகழ் செந்திற் கந்தப் பெருமாளே.

69. அருத்தி வாழ்வொடு தனகிய மனைவியும் உறவோரும்
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்
தரித்த வூருமெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்ப ராவியும் வழிபடு தொழிலது தருவாயே
எருத்தி லேறிய இறையவர் செவிபுக உபதேசம்
இசைத்த நாவின இதணுறு குறமகள் இருபாதம்
பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே.

70. அருமா மதனைப் பிரியா தசரக்
கயலார் நயனக் கொடியார்தம்
அழகார் புளகப் புழுகார் சயிலத்
தணையா வலிகெட் டுடல்தாழ
இருமா நடைபுக் குரைபோ யுணர்வற்
றிளையா உளமுக் குயிர்சோர
எரிவாய் நரகிற் புகுதா தபடிக்
கிருபா தமெனக் கருள்வாயே
ஒருமால் வரையைச் சிறுதூள் படவிட்
டுரமோ டெறிபொற் கதிர்வேலா
உரமான் மறவக் குறமா மகளுக்
குருகா திருபொற் புயவீரா
திருமால் கமலப் பிரமா விழியிற்
றெரியா அரனுக் குரியோனே
செழுநீர் வயல்சுற் றருணை புரியிற்
றிருவீ தியினிற் பெருமாளே.

71. அரும்பி னாற்றனிக் கரும்பி னாற்றொடுத்
தடர்ந்து மேற்றெறித் தமராடும்
அநங்க னார்க்கிளைத் தயர்ந்த னைப்பியெத்
தாம்பை மார்க்கடைக் கலமாகி

குரும்பை போற்பணைத் தரும்பு ருக்கொதித்
தெழுந்து கூற்றெனக் கொலைசூழும்
குயங்கள் வேட்டறத் தியங்கு தூர்த்தனைக்
குணங்க ளாக்கிநற் கழல்சேராய்
பொருந்தி டார்ப்புரத் திலங்கை தீப்படக்
கூரங்கி னூற்படைத் தொருதேரிற்
புகுந்து நூற்றுவர்க் கொழிந்து பார்த்தனுக்
கிரங்கி ஆற்புறத் தலைமேவிப்
பெருங்கு ரூட்டைவிட் டிறங்கு காற்றெனப்
பிறங்க வேத்தியக் குறுமாசூர்
பிறங்க லார்ப்பெழுச் சலங்கள் கூப்பிடப்
பிளந்த வேற்கரப் பெருமாளே.

72. அருவ மிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகியு ம்ருகமத
அளக மலையவு மணிதுகி லகலவும் அதிபார
அசல முலைபுள கிதமெழ அமளியில்
அமளி படஅன வரதமு மவசமொ
டணையு மழகிய கலவியும் அலமலம் உலகோரைத்
தருவை நிகரிடு புலமையும் அலமலம்
உருவு மிளமையும் அலமலம் விபரித
சமய கலைகளும் அலமலம் அலமரும் வினைவாழ்வுஞ்
சலில லிபியன சனனமும் அலமலம்
இனியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமும் அருள்வாயே
உருவு கரியதொர் கணைகொடு பணிபதி
இருகு தையுமுடி தமனிய தநுவுட
னுருளை இருசுடர் வலவனு மயனென மறைபூணும்
உறுதி படுசுர ரதமிசை அடியிட
நெறுநெ றெனமுறி தலுநிலை பெறுதவம்
உடைய ஒருவரு மிருவரு மருள்பெற ஒருகோடி

தெருவு நகரியு நிசிசரர் முடியொடு
சடச டெனவடி படுவன புகைவன
திகுதி கெனஎரி வனஅனல் நகைகொடு முனிவார்தஞ்
சிறுவ வனசரர் சிறுமியொ டுருகிய
பெருமை அருணையி லெழுநிலை திகழ்வன
சிகரி மிசையொரு கலபியி லுலவிய பெருமாளே..

73. அருவரை எடுத்த வீர னெரிபட விரற்க ளூனு
மானிட மிருக்கு மாயி அருள்வோனே
அலைகட லடைத்த ராமன் மிகமன மகிழ்ச்சி கூரு
மணிமயில் நடத்து மாசை மருகோனே
பருதியி னொளிக்கண் வீறும் அறுமுக நிரைத்த தோள்ப
ணிருகர மிகுத்த பார முருகாநின்
பதமல ருளத்தி னாளும் நினைவுறு கருத்தர் தாள்கள்
பணியவு மெனக்கு ஞானம் அருள்வாயே
சுருதிக ளுரைத்த வேத னுரைமொழி தனக்கு ளாதி
சொலுவென உரைத்த ஞான குருநாதா
சுரர்பதி தழைத்து வாழ அமர்சிறை அனைத்து மீள
துணிபட அரக்கர் மாள விடும்வேலா
மருமலர் மணக்கும் வாச நிறைதரு தருக்கள் சூழும்
வயல்புடை கிடக்கும் நீல மலர்வாவி
வளமுறு தடத்தி னோடு சரஸ்வதி நதிக்கண் வீறு
வயிரவி வனத்தில் மேவு பெருமாளே.

74. அருளே அருட்கிருபை அருளே அருட்கருணை
அருளே அளித்தருளின் வடிவான
அறுமா முகத்தினிடம் அறுமா முகத்தமிகும்
அறுமா முகத்தளழில் அழகாயே
பொருளே பொருட்பொருளின் பொருளே பொருட்கடலின்
பொருளே பொருட்டெவையும் பொருளாக
புகழே புகழ்ப்பெருகு புகழே புகழ்ப்புகழின்
புகழே புகட்டருவ புகழாள

இருளே இருட்பரும இருளே விளித்திலகு
இருளே விசிட்டவிட இருள்தீர
விழிநீர் கொழித்தவழி விழிநீர குற்றமழி
விழிநீ ருகுத்தஅடி யவரூடே
மருளே துடைத்தமர மருளே யளித்திமிர
மருளே யொளித்தமத அநுபூதி
மனமே உதித்தபடி மனமே தரித்ததிரு
மனமே திருத்தமிகு பெருமாளே.

75\. அருளொளி யாகிய வடிவே யடியவர்
மன திமி ராமிரு ளரிமா பருதியி
னணைவரு மா[மூக] வசுரர்கள் பொடிபட அயிலேவும்
அழகிய ஆறிரு கரனே குறமகள்
மருண பராபர வெளியே யுயர்பெரு
வெளியினில் வீறிய வெளியே வெளியொளி
எனவேதான்
ஒருவரு மேயறி ய[றிவே] யாவரு
மறிவரி தாகிய பெருமா னேயென
திருவினை தீரவெ வருவா யேகுரு பரனாகி
ஒருபொரு ளாமதை யறையா யோவென
திருசெவி யாரவெ விரவா யோவிதை
யறியவி னவின தறியா யோவரு ளொருநாளே
கருதரி தாகிய மறையோ னமரி
யரிகரி யாவரு மறியா நாதன
வருள்சுத வாயின மணவே திருடி உறைவோனே
கனதன மாதுமை யிமவா னேதரு
வருசிவ னாரணி மகவா னேபணி
கமலவு லோசன செகமா தாசுத முருகோனே
செருவளர் மாபுய விரனே பரிபுர
கமலப தாம்புய பரனே சரவண
பவகுக சாம்பவி குமரா திகழொளி சுகராச
செயசெய மாதவ தவரா ராதவ
செயசெய வாதவ நிபரு தூதிவ
செயசெய நாதவி னோதா தாபரர் பெருமாளே.

76. அலகில வுணரைக் கொன்ற தோளென
மலைதுளை உருவச் சென்ற வேலென
அழகிய கனகத் தண்டை சூழ்வன புண்டரீக
அடியென முடியிற் கொண்ட கூதள
மெனவன சரியைக் கொண்ட மார்பென
அறுமுக மெனநெக் கென்ப லாமுரு கன்புறாதோ
கலகல கலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்
கதறிய வெகுசொற் பங்க மாகிய பொங்களாவும்
கலைகளு மொழியப் பஞ்ச பூதமு
மொழியுற மொழியிற் றுஞ்சு ருதன
காணமு மொழியத் தந்த ஞானமி ருந்தவாறென்
இலகுக டலைகற் கண்டு தேனொடு
மிரதமு றுதினைப் பிண்டி பாகுடன்
இனிமையி னுகருற் றெம்பி ராணொரு கொம்பினாலே
எழுதென மொழியப் பண்டு பாரதம்
வடகுல சிகரச் செம்பொன் மேருவில்
எழுதிய பவளக் குன்று தாதையை அன்றுசூழ
வலம்வரு மளவிற் சண்ட மாருத
விசையினும் விசையுற் றெண்டி சாமுக
மகிதல மடையக் கண்டு மாசுணம் உண்டுலாவு
மரகத கலபச் செம்புள் வாகன
மிசைவரு முருகச் சிம்பு ளேயென
மதுரையில் வழிபட் டும்ப ரார்தொழு தம்பிரானே.

77. அலகின் மாறு மாருத கலதி பூத வேதாளி
அடைவில் ஞாளி கோமாளி அறமீயா
அழிவு கோளி நாணாது புழுகு பூசி வாழ்மாதர்
அருளி லாத தோதோய மருளாகிப்
பலக லாக ராமேரு மலைக ராச லாவீசு
பருவ மேக மேதாரு எனயாதும்
பரிவு றாத மாபாதர் வரிசை பாடி ஓயாத
பரிசில் தேடி மாயாத படிபாராய்

இலகு வேலை நீள்வாடை எரிகொள் வேலை மாசூரி
 லெறியும் வேலை மாருத திறல்வீரா
இமய மாது பாகீர திநதி பால காசார
 விறைவி கான மால்வேடர் சுதைபாகா
கலக வாரி போல்மோதி வடவை ஆறு சூழ்சீத
 கதிர காம மூதூரில் இளையோனே
கனக நாடு வீடாய கடவுள் யானை வாழ்வான
 கருணை மேரு வேதேவர் பெருமாளே.

78. அலங்கார முடிக்கிரணத் திரண்டாறு முகத்தழகிற்
 கசைந்தாடு குழைக்கவசத் திரடோளும்
அலந்தாம மணித்தரளம் புரண்டாட நிரைத்தகரத்
 தணிந்தாழி வளைக்கடகச் சுடர்வேலும்
சிலம்போடு மணிச்சுருதிச் சலங்கோசை மிகுத்ததிரச்
 சிவந்தேறி மணத்தமலர்ப் புனைபாதம்
திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனனத்
 தினந்தோறு நடிப்பதுமற் புகல்வேனோ
இலங்கேசர் வனத்துள்வனக் குரங்கேவி யழற்புகையிட்
 டிளந்தாது மலர்த்திருவைச் சிறைமீளும்
இளங்காள முகிற்கடுமைச் சரங்கோடு கரத்திலெடுத்
 திருங்கான நடக்குமவர்க் கினியோனே
குலங்கோடு படைத்தசுரப் பெருஞ்சேனை யழிக்கமுனைக்
 கொடுந்தாரை வெயிற்கயிலைத் தொடும்வீரா
கொழுங்காவின்மலர்ப்பொழிலிற்கரும்பாலைபுணர்க்குமிசைக்
 குரங்காடு துறைக்குமரப் பெருமாளே.

79. அலமல மிப்புலாற் புலையுடல் கட்டனேற்
 கறுமுக நித்தர்போற் றியநாதா
அறிவிலி இட்டுணைப் பொறியிலி சித்தமாய்த்
 தணிதரு முத்திவீட் டணுகாதே
பலபல புத்தியாய்க் கலவியி லெய்த்திடாப்
 பரிவொடு தத்தைமார்க் கிதமாடும்
பகடிது டுக்கன்வாய்க் கறையனெ னத்தராப்
 படியில்ம னித்தர்தூற் றிடலாமோ

குலகிரி பொற்றலாய்க் குரைகடல் வற்றலாய்க்
கொடியவ ரக்கரார்ப் பெழவேதக்
குயவனை நெற்றிமேற் றவனெதிர் குட்டினாற்
குடுமியை நெட்டைபோக் கியவீரா
கலைதலை கெட்டபாய்ச் சமணரை நட்டகூர்க்
கழுநிரை முட்டவேற் றியதாளக்
கவிதையும் வெற்றிவேற் காமுடன் வற்றிடாக்
கருணையு மொப்பிலாப் பெருமாளே.

80. அலைகடல் சிலைமதன் அந்தி யூதையும்
அரிவையர் வசையுட னங்கி போல்வர
அசைவன இடைமணி யன்றில் கோகிலம் அஞ்சிநாளும்
அழலிடு மெழுகென வெம்பி வேர்வெழ
அகிலொடு ம்ருகமத நஞ்சு போலுற
அணிபணி மணிபல வெந்து நீறெழ அங்கம்வேறாய்
முலைகனல் சொரிவர முன்பு போல்நினை
வழிவச மறஅற நின்று சோர்வுற
முழுதுகொள் விரகனல் மொண்டு வீசிட மங்கிடாதே
முருகவிழ் திரள்புய முந்து வேலணி
முளரியொ டழகிய தொங்கல் தாரினை
முனிவற நினதருள் தந்தென் மாலைமு னிந்திடாதோ
சிலைநுதல் கயல்விழி செஞ்சொல் வானவி
திரிபுரை பயிரவி திங்கள் சூடிய
திகழ்சடை நெடியவள் செம்பொன் மேனியள் சிங்கமேறித்
திரள்படை யலைகைகள் பொங்கு கோடுகள்
திமிலையொ டறைபறை நின்று மோதிட
சிவனுட னடம்வரு மங்கை மாதுமை தந்தவேளே
மலைதனி லொருமுனி தந்த மாதுதன்
மலரடி வருடியெ நின்று நாடொறு
மயில்பயில் குயில்கிளி வம்பி லேகடி தொண்டினேனே
மழைமுகில் தவழ்தரு மண்டு கோபுர
மதிள்வயல் புடையுற விஞ்சு காழியில்
வருமொரு கவுணியர் மைந்த தேவர்கள் தம்பிரானே.

81. அலைகடல் நிகராகிய விழிகொடு வலைவீசிகள்
அபகட மகபாவிகள் விரகாலே
அதிவித மதராயத நிதமொழி பலகூறிகள்
அசடரொ டுறவாடிகள் அநியாயக்
கலைபகர் விலைமாதர்கள் இளைஞர்கள் குடிகேடிகள்
கருதிடு கொடியாருடன் இனிதாகக்
கனதன முலைமேல்விழு கபடனை நிருமூடனை
கழலிணை பெறவேயினி அருள்வாயே
அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய
அறுமுக வடிவேஅருள் குருநாதா
அசுரர்கள் குடியேகெட அமரர்கள் பதியேபெற
அதிரிடும் வடிவேல்விடும் அதிசூரா
தலையய னறியாவொரு சிவகுரு பரனேயென
தரணியி லடியார்கண நினைவாகா
சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனிலேறிய பெருமாளே.

82. அல்லயல டர்ந்த வில்லடல னங்கன்
அல்லிமல ரம்பு தனையேவ
அள்ளியெறி கின்ற பிள்ளைமதி தென்ற
லையமுது றுகின்ற அணையூடே
சொல்லுமர விந்த வல்விதனை கண்டு
தொல்லைவினை வந்து முனியாதே
துய்யவரி வண்டு செய்யமது உண்டு
துள்ளியக டம்பு தரவேணும்
கல்லசல மங்கை எல்லையில்வி ரிந்த
கல்விகரை கண்ட புலவோனே
கள்ளொழுகு கொன்றை வள்ளல்தொழ அன்று
கல்லலற ஒன்றை அருள்வோனே
வல்லசுர ரஞ்ச நல்லசுரர் விஞ்ச
வல்லைநகர் வந்த மயில்வீரா
வள்ளிபடர் கின்ற வள்ளிமலை சென்று
வள்ளியைம ணந்த பெருமாளே.

83\. அல்லிவிழி யாலு முல்லைநகை யாலும்
அல்லல்பட ஆசைக் கடலீயும்
அள்ளவினி தாகி நள்ளிரவு போலும்
உள்ளவினை யாரத் தனமாரும்
இல்லுமிளை யோரு மெல்லஅய லாக
வல்லெருமை மாயச் சமனாரும்
எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளில்
உய்யவொரு நீபொற் கழல்தாராய்
தொல்லைமறை தேடி இல்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா
துள்ளிவிளை யாடு புள்ளியுழை மேவு
வெள்ளிவன மீதுற் றுறைவோனே
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லவடி வேலைத் தொடுவோனே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.

84\. அல்லி னேருமின் அதுதானும் அல்ல தாகிய உடல்மாயை
கல்வி னேரவ வழிதோறும் கையும் நானுமு லையலாமோ
சொல்லி நேர்படு முதுசூரர் தொய்ய வூர்கெட விடும்வேலா
வல்லி மாரிரு புறமாக வள்ளி யூருறை பெருமாளே.

85\. அவகுண விரகனை வேதாள ரூபனை
அசடனை மசடனை ஆசார ஈனனை
அகதியை மறவனை ஆதாளி வாயனை அஞ்சுபூதம்
அடைசிய சவடனை மோடாதி மோடனை
அழிகரு வழிவரு வீணாதி வீணனை
அழுகலை யவிசலை ஆணா ணூணனை அன்பிலாத
கவடனை விகடனை நானாவி காரனை
வெகுளியை வெகுவித மூதேவி மூடிய
கலியனை அலியனை ஆதேச வாழ்வனை வெம்பிவீழும்
களியனை யறிவுரை பேணாத மாநுட
கசனியை யசனியை மாபாத னாகிய
கதியிலி தனையடி நாயேனை யாளுவ தெந்தநாளோ

மவுலியி லழகிய பாதாள லோகனு
மரகத முழுகிய காகோத ராஜனு
மநுநெறி யுடன்வளர் சோனாடர் கோனுடன்
உம்பர்சேரும்

மகபதி புகழ்புலி யூர்வாழு நாயகர்
மடமயில் மகிழ்வுற வானாடர் கோவென
மலைமக ளுமைதரு வாழ்வேமனோகர மன்றுளாடும்

சிவசிவ ஹரஹர தேவாநமோநம
தெரிசன பரகதி யானாய் நமோநம
திசையினு மிசையினும் வாழ்வே நமோநம
செஞ்சொல்சேரும்

தினைபுன வனிதைதம ணாளாந மோநம
திரிபுர மெரிசெய்த கோவேந மோநம
செயசெய ஹரஹர தேவாசு ராதிபர் தம்பிரானே.

86. அவசியமுன் வேண்டிப் பலகாலும்
அறிவினுணர்ந் தாண்டுக் கொருநாளில்
தவசெபமுந் தீண்டிக் கனிவாகிச்
சரணமதும் பூண்டற் கருள்வாயே
சவதமொடுந் தாண்டித் தகரூர்வாய்
சடுசமயங் காண்டற் கரியானே
சிவகுமரன் பீண்டிற் பெயரானே
திருமுருகன் பூண்டிப் பெருமாளே.

87. அவனிதனி லேபிறந்து மதலையென வேதவழ்ந்து
அழகுபெற வேநடந்து இளைஞோனாய்
அமிர்தரச மேமிகுந்த குதலைமொழி யேபுகன்று
அதிவிதம தாய்வளர்ந்து பதினாறாய்
சிவகலைக ளாகமங்கள் மிகவுமறை யோதுமன்பர்
திருவடிக ளேநினைந்து துதியாமல்
தெரிவையர்க ளாசைமிஞ்சி வெகுகவலை யாயுழன்று
திரியுமடி யேனை உன்றன் அடிசேராய்

மவுனவுப தேச சம்பு மதியறுகு வேணி தும்பை
மணிமுடியின் மீத ணிந்த மகதேவர்
மனமகிழ வேய ணைந்து ஒருபுறம தாக வந்த
மலைமகள்கு மார துங்க வடிவேலா
பவனிவர வேயு கந்து மயிலின்மிசை யேதி கழ்ந்து
படியதிர வேந டந்த கழல்வீரா
பரமபத மாய செந்தில் முருகனென வேயு கந்து
பழநிமலை மேல மர்ந்த பெருமாளே.

88. அவனிபெ றுந்தோட் டம்பொற்
குழையட ரம்பாற் புண்பட்
டரிவையர் தம்பாற் கொங்கைக் கிடையேசென்
றணைதரு பண்டாட் டங்கற்
றுருகிய கொண்டாட் டம்பெற்
றழிதரு திண்டாட் டஞ்சற் றொழியாதே
பவமற நெஞ்சாற் சிந்தித்
திலகுக டம்பார்த் தண்டைப்
பதயுக ளம்போற் றுங்கொற் றமுநாளும்
பதறிய அங்காப் பும்பத்
தியுமறி வும்போற் சங்கைப்
படுதுயர் கண்பார்த் தன்புற் றருளாயோ
தவநெறி குன்றாப் பண்பிற்
றுறவின ருந்தோற் றஞ்சத்
தனிமல ரஞ்சார்ப் புங்கத் தமராடித்
தமிழினி தென்காற் கன்றிற்
றிரிதரு கஞ்சாக் கன்றைத்
தழலெழ வென்றூர்க் கன்றற் புதமாகச்
சிவவடி வங்காட் டுஞ்சற்
குருபர தென்பாற் சங்கத்
திரள்மணி சிந்தாச் சிந்துக் கரைபோதும்
தினகர திண்டேர்ச் சண்டப்
பரியிட றுங்கோட் டிஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே.

89\. அவாமருவி னவுசுதை காணுமட வாரெனும
வார்கனலில் வாழ்வென் றுணராதே
அராநுகர வாதையுறு தேரைகதி நாடுமறி
வாகியுள மால்கொண் டதனாலே
சிவாயநம நாமமொரு காலுநினை யாததிமி
ராகரனை வாவென் றருள்வாயே
திரோதமல மாறுமடி யார்களரு மாதவர்தி
யானமுறு பாதந் தருவாயே
உவாவினிய காவினிலு லாவுமயில் வாகனமு
லாசமுட னேறுங் கழலோனே
உலாவுதய பானுசத கோடியுரு வானவொளி
வாகுமயில் வேலங் கையிலோனே
துவாதசபு யாசலச டானனவ ராசிவசு
தாவெயினர் மானன் புடையோனே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடுசு
வாமிமலை வாழும் பெருமாளே.

90\. அழகு தவழ்குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை யசைத்துக் காட்டி அநுராக
அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மணிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி அழுத்திக் காட்டி அணியாரம்
ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
எழுத வரியிடை வளைத்துக் காட்டி
உலவு முடைதனை நெகிழ்த்துக் காட்டி உறவாடி
உருகு கடிதட மொளித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
உயிரை விலைகொளு மவர்க்குத் தேட்டம் ஒழிவேனோ
முழுகு தமிழ்நிறை முகத்துப் பாட்டி
கொழுநர் குடுமியை அறுத்துப் போட்ட
முதல்வ குகைபடு திருப்பொற் கோட்டு முனிநாட

முடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழுமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட முதுநீதர்
பழைய கடதட முகத்துக் கோட்டு
வழுவை உரியணி மறைச்சொற் கூட்டு
பரமர் பகிரதி சடைக்குட் சூட்டு பரமேசர்
பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு
குமர *குலமலை உயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு பெருமாளே.

91. அழகுபெறு மோலை மருவுமிரு காதை
அடருமய லான விழியாலே
அவனியிட ராகு மனதுதடு மாறி
அலையவிடு மாதர் மயலாலே
உழலைபடு நானு மழலில்மெழு காகி
உருகிவிடொ ணாத படிதானே
உனதுபத மான கமலமலர் நாளு
முறையுமிட மாக அருள்வாயே
பொழியுமழை யாக மனமுருகு வார்கள்
புகழ்கவிதை மாலை புனைவோனே
புரதகன ராதி கயிலைமலை யாளர்
புதல்வகும ரேச வடிவேலா
கழையினிசை ஊது மரிமருக மேனி
கதிரனைய சோதி உடையோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோது
காபுரியில் வீறு பெருமாளே.

92. அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த
அமுத புஞ்ச இன்சொல் மொழியாலே
அடிது வண்ட தண்டை கலிலெ னுஞ்சி லம்பொ
டணிச தங்கை கொஞ்சு நடையாலே

*கொலிமலை யொலித்துச் சூட்டு.

சுழியெ றிந்து நெஞ்சு சுழல நஞ்ச ணைந்து
தொடுமி ரண்டு கண்க ளதனாலே
துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்
துயரை என்றொ ழிந்து விடுவேனோ
எழுது கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி
எதிர டைந்தி றைஞ்சல் புரிபோதே
இதம கிழ்ந்தி லங்கை அசுர ரந்த ரங்க
மொழிய வென்ற கொண்டல் மருகோனே
மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச
மனுவி யம்பி நின்ற குருநாதா
வளமி குந்த குன்ற நகர்பு ரந்து துங்க
மலைவி ளங்க வந்த பெருமாளே.

93. அழலைபடு காய்தல் தலைவலிகண் ணோவு
வதையல்கடி கூனல் செவிடூமை
அடியில்வெடி யீளை குருடுமுட மூளை
அழுவைசெறி சூலை தொடைவாழை
சுழல்குருமனோடு முரைகழலை காசத்
தொகைவலிசு வாச வகைநாவால்
சொலவரிய நோய்க ளிவைகளில்வி ழாமல்
துணையுன து தாளை அருள்வாயே
உழுவையுரி நாதர் தரவருகு மார
உமைகவுரி பால வடிவேலா
உனைமனதில் நாடும் அடியன்மிடி நோயை
ஒருநொடியில் வெல்ல அருள்தாராய்
கழுவிலமண் மூகர் மருவவிசை பாடு
கவுணியசு வேத மறையோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதுங்
கரபுரியில் வீறும் பெருமாளே.

94. அமுதமா மாவெனப் பலர்கள்கோ கோவெனக்
கவசமா யீமமுற் றெரிமூழ்கி
அமையு நீருமெனச் சமயமா மூடருக்
கறியொணு மோனமுத் திரைநாடிப்

பிழைபடா ஞானமெய்ப் பொருள்பெறு தேவினைப்
பெரியவா தேசபுற் புதமாய
பிறவிவா ராகரச் சுழியிலே போய்விழப்
பெறுவதோ நானினிப் புகல்வாயே
பழையபா கீரதிப் படுகைமேல் வாழ்வெனப்
படியுமா றுயினத் தனசாரம்
பருகுமா றுனனச் சிறுவசோ ணாசலப்
பரமமா யூரவித் தகவேளே
பொழுதுசூழ் போதுவெற் பிடிபடா பார்முதற்
பொடிபடா ஓடமுத் தெறிமீனப்
புணரிகோ கோவெனச் சுருதிகோ கோவெனப்
பொருதவே லாயுதப் பெருமாளே.

95\. அழுதழு தாசார நேசமு முடையவர் போலேபொய் சூழ்வுறும்
அசடிகள் மாலான காமுகர் பொன்கொடாநாள்
அவருடன் வாய்பேசி டாமையு முனிதலு மாறுத தோஷிகள்
அறுதியில் காசாசை வேசைகள் நஞ்சுதோயும்
விழிகளி னல்மாட வீதியில் முலைகளை ஓராம லாரொடும்
விலையிடு மாமாய ரூபிகள் பண்பிலாத
விரகிகள் வேதாள மோவென முறையிடு கோமாளி மூளிகள்
வினைசெய லாலேயெ னாவிம யங்கலாமோ
வழியினில் வாழ்ஞான போதக பரமசு வாமீவ ரோதய
வயலியில் வேலாயு தாவரை எங்குமானுய்
மதுரையின் மீதால வாயினில் எதிரம ணரோரெ ணாயிரர்
மறிகழு மீதேற நீறுப ரந்துலாவச்
செழியனு மாளாக வாதுசெய் கவிமத சீகாழி மாமுனி
சிவசிவ மாதேவ காவென வந்துபாடுந்
திருவுடை யாய்தீதி லாதவர் உமையொரு பாலான மேனியர்
சிரகிரி வாழ்வான தேவர்கள் தம்பிரானே.

96\. அளகநிரை குலையவிழி குவியவளை கலகலென
அமுதமொழி பதறியெழ அணியாரம்
அழகொழுகு புளகமுலை குழையஇடை துவளமிக
அமுதநிலை அதுபரவ அதிமோகம்

உளமுருக வருகலவி தருமகளிர் கொடுமையெனு
முறுகபட மதனில்மதி அழியாதே
உலகடைய மயிலின்மிசை நொடியளவில் வலம்வருமு
னுபயநறு மலரடியை அருள்வாயே
வளையுமலை கடல்சுவற விடுபகழி வரதனிரு
மருதினொடு பொருதருளும் அபிராமன்
வரியரவின் மிசைதுயிலும் வரதஜய மகள்கொழுநன்
மருகஅமர் முடுகிவரு நிருதேசர்
தளமுறிய வரைதகர அசுரர்பதி தலைசிதற
தகனமெழ முடுகவிடு வடிவேலா
தரளமணி வடமிலகு குறவர்திரு மகள்கணவ
சகலகலை முழுதும்வல பெருமாளே.

97. அளக பாரம் அலைந்து குலைந்திட
வதனம் வேர்வு துலங்கி நலங்கிட
அவச மோகம் விளைந்து தளைந்திட அணைமீதே
அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந காநுதி பங்கவி தஞ்செய்து
அதர பானம்அ ருந்திம ருங்குற முலைமேல்வீழ்ந்
துளமும் வேறுப டும்படி ஒன்றிடு
மகளிர் தோதக இன்பின் முயங்குதல்
ஒழியு மாறுதெ ளிந்துள மன்பொடு சிவயோகத்
துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென்கழல் தருவாயே
இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கைந லம்புனை
இரதி வேள்பணி தந்தையும் அந்தண மறையோனும்
இனிது றாதெதி ரிந்திர னண்டரும்
அரக ராசிவ சங்கர சங்கர
எனமி காவரு நஞ்சினை உண்டவர் அருள்பாலா

வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரமன்
மகர வாரிக டைந்தநெ டும்புயல் மருகோனே
வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

98. அளகபாரம லைந்துச ரிந்திட
வதனவேர்வுது லங்கிந லங்கமழ்
அதிக மோகம்வி ளைந்துக லந்துறை குயில்காடை
அளிபுறாமயி லொன்றுசொ லுங்குரல்
மிடறதாதுதி பங்கவி தஞ்செயு
மகளிர்தோதக வன்பினி னின்றுள மறுகாதே
உளம்விடாதுபு கழ்ந்துப ணிந்திட
அறிவிலாதம னங்கொடு நின்றினி
அலையுறாமலு வந்தெனை நண்பொடு சிவயோகத்
துருகுஞானப ரம்பர மந்திரம்
அணுகொணாதப தந்தரு சிந்துர
உபயசீதள பங்கய நின்கழல் அருள்வாயே
இளகிடாவகை சந்தன குங்கும
களபபூரண கொங்கைந லம்புனை
இரதிவேள்பணி தந்தையு கந்தருள் இளையோனே
இனியதாயெதி ரிந்திர ரண்டரும்
அரகராசிவ சங்கர சங்கர
எனமிகாவரு நஞ்சினை யுண்டவர் அருள்பாலா
வளவியோதையி டுங்கன வம்பர
மகரவாரிக டைந்தவ சஞ்சல
மரமொரேழுரு வுங்கணை சிந்துவன் மருகோனே
வனிதைநாயக வம்பவி ழும்பொழில்
அசுரர்சேனைய டங்கம டிந்திட
மயிலைமீதினில் வந்துறை யிந்திரர் பெருமாளே.

99. அளகபார முங்குலைந்து அரியபார்வை யுஞ்சிவந்து
அணுகியாக முங்கலந்து அமுதூறல்
அதரபான முண்டுகந்து அறிவுசோர வும்பகர்ந்து
அவசமாக வும்புணர்ந்து மடவாரைப்
பளகனுவி யுந்தளர்ந்து பதறுமாக மும்பயந்து
பகலிராவை யும்மறந்து திரியாமல்
பரமஞான முந்தெளிந்து பரிவுநேச முங்கிளர்ந்து
பகருமாறு செம்பதங்கள் தரவேணும்
துளபமாய னுஞ்சிறந்த கமலவேத னும்புகழ்ந்து
தொழுதுதேட ரும்ப்ரசண்டன் அருள்பாலா
சுரர்கள்நாய கன்பயந்த திருவைமாம ணம்புணர்ந்து
சுடருமோக னஞ்சிறந்த மயில்பாகா
களபமார்பு டன்தயங்கு குறவர்மாது டன்செறிந்து
கலவிநாட கம்பொருந்தி மகிழ்வோனே
கடியபாத கந்தவிர்ந்து கழலைநாடொ றுங்கிளர்ந்து
கருதுவார்ம னம்புகுந்த பெருமாளே.

100. அளிசுழ லளகக் காடு காட்டவும்
விழிகொடு கலவித் தீயை மூட்டவும்
அமளியில் முடியப் போது போக்கவும் இளைஞோர்கள்
அவர்வச மொழுகிக் காசு கேட்கவும்
அழகிய மயிலிற் சாயல் காட்டவும்
அளவிய தெருவிற் போயு லாத்தவும் அதிபார
இளமுலை மிசையிற் றூசு நீக்கவும்
முகமொடு முகம்வைத் தாசை யாக்கவும்
இருநிதி யிலரைத் தூர நோக்கவும் இனிதாக
எவரையு மளவிப் போய ணைப்பவும்
நினைபவ ரளவிற் காதல் நீக்கியென்
இடரது தொலையத் தாள்கள் காட்டிநின் அருள்தாராய்
நெளிபடு களமுற் றூறு போற்சுழல்
குருதியில் முழுகிப் பேய்கள் கூப்பிட
நிணமது பருகிப் பாறு காக்கைகள் கழுகாட

நிரைநிரை யணியிட் டோரி யார்த்திட
அதிர்தரு சமரிற் சேனை கூட்டிய
நிசிசரர் மடியச் சாடு வேற்கொடு பொரும்வீரா
களிமயில் தனில்புக் கேறு தாட்டிக
அழகிய கனகத் தாம மார்த்தொளிர்
கனகிரி புயமுத் தார மேற்றருள் வயலூரா
கரியவ னகரிற் றேவ பார்ப்பதி
அருள்சுத குறநற் பாவை தாட்பணி
கருணைய தமிழிற் பாடல் கேட்டருள் பெருமாளே.

101. அறப்பாவை அத்தற் கருள்பாலா
அளித்தாது வெட்சித் திருமார்பா
குறப்பாவை அற்பிற் புணர்வோனே
குலத்தேவ வர்க்கப் பரிபாலா
மறப்பாத கத்துற் றுழல்வேனை
மலர்த்தாள்வ ழுத்தக் க்ருபையீவாய்
சிறப்பான முத்திக் கொருவாழ்வே
திருப்பூவ ணத்திற் பெருமாளே.

102. அறமிலா நிலைகற்று கொடியவேல் விழிவிட்
டறிவுதா னறவைத்து விலைபேசி
அமளிமீ தினில்முத்து பவளவா யமுதத்தை
அதிகமா வுதவிக்கை வளையாலே
உறவினு லுடலத்தை இறுகவே தழுவிக்கொ
ளுலையிலே மெழுகொத்த மடவாரோ
டுருகியே வருபெற்றி மதனநா டகபித்தும்
ஒழியுமா றொருமுத்தி தரவேணும்
மறவர்மா தொருரத்ந விமலகோ கநகத்தி
மயிலனாள் புணர்செச்சை மணிமார்பா
மருள்நிசா சரன்வெற்பி லுருகிவீழ் வுறமிக்க
மயிலிலே றியவுக்ர வடிவேலா

பறைகள்பே ணியருத்ரி கரியகா ளகத்தி
    பரமர்பா லுறைசத்தி எமதாயி
பழையபார் வதிகொற்றி பெரியநா யகிபெற்ற
    பழநிமா மலையுற்ற பெருமாளே.

103. அறமி லாவதி பாதக வஞ்சத் தொழிலாலே
    அடிய னேன்மெலி வாகிம னஞ்சற் றிளையாதே
திறல்கு லாவிய சேவடிவந்தித் தருள்கூடத்
    தினமு மேமிக வாழ்வு றுமின்பைத் தருவாயே
விறல்நி சாசரர் சேனைக ளஞ்சப் பொரும்வேலா
    விமல மாதபி ராமித ருஞ்சற் புதல்வோனே
மறவர் வாணுதல் வேடைகொ ளும்பொற் புயவீரா
    மயிலை மாநகர் மேவிய கந்தப் பெருமாளே.

104. அறிவழிய மயல்பெருக உரையுமற விழிசுழல
    அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை அருகிலுற வெருவியழ உறவுமழ
    அழலினிகர் மறலியெனை அழையாதே
செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியஉயர்
    திருவடியி லணுகவரம் அருள்வாயே
சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
    செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே
நெறிதவறி அலரிமதி நடுவன்மக பதிமுளரி
    நிருதிநிதி பதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
    நிருதனுர மறஅயிலை விடுவோனே
மறிபரசு கரமிலகு பரமனுமை இருவிழியும்
    மகிழவடி மிசைவளரும் இளையோனே
மதலைதவ ழுததியிடை வருதரள மணிபுளின
    மறையஉயர் கரையிலுறை பெருமாளே.

105. அறிவி லாதவ ரீனர்பேச் சிரண்டு
    பகரு நாவினர் லோபர்தீக் குணங்க
    ளதிக பாதகர் மாதர்மேற் கலன்கள் புனைசூதர்

அசடர் பூமிசை வீணராய்ப் பிறந்து
திரியு மானுடர் பேதைமார்க் கிரங்கி
அழியு மாலினர் நீதிநூற் பயன்கள் தெரியாத
நெறியி லாதவர் சூதினாற் கவர்ந்து
பொருள்செய் பூரியர் மோகமாய்ப் ப்ரபஞ்ச
நிலையில் வீழ்தரு மூடர்பாற் சிறந்த தமிழ்கூறி
நினைவு பாழ்பட வாடிநோக் கிழந்து
வறுமை யாகிய தீயின்மேற் கிடந்து
வெளியு நீள்புழு வாயினேற் கிரங்கி அருள்வாயே
நறிய வார்குழல் வானநாட் டரம்பை
மகளிர் காதலர் தோள்கள்வேட் டிணங்கி
நகைகொ டேழிசை பாடிமேற் பொலிந்து களிகூர
நடுவி லாதகு ரோதமாய்த் தடிந்த
தருவர் மாதர்ம ணாளர்தோட் பிரிந்து
நகைபொ ருதழு தாகமாய்த் தழுங்கி இடர்கூர
மறியு மாழ்கட லூடுபோய்க் கரந்து
கவடு கோடியின் மேலுமாய்ப் பரந்து
வளரு மாவிரு கூறதாய்த் தடிந்த வடிவேலா
மருவு காளமு கில்கள்கூட் டெழுந்து
மதியு லாவிய மாடமேற் படிந்த
வயல்கள் மேவுநெல் வாயில்வீற் றிருந்த பெருமாளே.

**106.** அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி யறியாத
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்பு கழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடிச்
சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து
தெரிவைமார்க் குச்சொ ரிந்து அவமேயான்
திரியுமார்க் கத்து சிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோ க்ஷத்தை யென்று அருள்வாயே
இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம்வேற் றுப்பி ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தன்
இருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்குழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சொல் உடையோனே

குறவர்கூட் டத்தி லன்று கிழவனுய்ப் புக்கு நின்று
குருவியோட் டித்தி ரிந்த தவமானைக்
குணமதாக் கிச்செறிந்த அழகுகாட் டிப்பு ணர்ந்த
குமரகோட் டத்த மர்ந்த பெருமாளே.

**107.** அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர் பால ரூபமாய்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்
அருமையினி லருமையிட மொளுமொளென உடல்வளர
ஆளு மேளமாய் வால ரூபமாய் அவரொரு பெரியோராய்
அழகுபெறு நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர் தேவி மாருமாய்
விழிசுவறு மரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய் மாட கூடமாய்
அணுவளவு தவிடுமிகள் பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய் ஊசி வாசியாய் அவியுறு சுடர்போலே
வெறுமிடிய னொருதவசி யமுதுபடை யெனுமளவில்
மேலை வீடுகேள் கீழை வீடுகேள்
திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
சீறி ஞாளிபோல் ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணி யார்சொலே மேல தாயிட விதிதனை நினையாதே
மினுகுமினு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர் சேவையே பூணு பாவியாய்
மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனின்வரு
வார்கள் போகுவார் காணு மோவெனு
விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசொலாய் ஆளி வாயராய் மிடையுற வருநாளில்
வறுமைகளு முடுகிவர உறுபொருளு நழுவசில
வாத மூதுகா மாலை சோகைநோய்
பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
பீளை சாறிடா ஈளை மேலிடா
வழவழென உமிழுமது கொழகொழென ஒழுகிவிழ
வாடி யூனெலாம் நாடி பேதமாய் மனையவள் மனம்வேறாய்

மறுகமனை யுறுமவர்கள் நணுகுநணு கெனுமளவில்
மாதர் சீயெனு வாலர் சீயெனு
கனவுதனி விரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வர்வெனு வீடு போவெனு
வல்தழிய விரகழிய உரைகுழறி விழிசொருகி
வாயு மேலிடர ஆவி போகுநாள் மனிதர்கள் பலபேச்
இறுதியதொ டறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதராள் மோதி மேல்விழா
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
ஈமொ லேலெனு வாயை யாவெனு
இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய் எரிதனி விடும்வாழ்வே
இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டார்களோ பாச நாசனே
இருவினையு மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையருளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா இமையவர் பெருமாளே

**108.** அற்றைக் கற்றைக் கொப்பித் தொப்பித்
தத்தத் தத்தத் தருவோர்தாள்
ஆர்ச்சித் திச்சித் தக்கத் தக்கத்
தொக்குத் திக்குக் குடில்பேணிச்
செற்றைப் புற்சொற் கற்றுக் கற்றுச்
செத்துச் செத்துப் பிறவாதே
செப்பச் செப்பப் பச்சைப் பச்சைச்
செச்சைச் செச்சைக் கழல்தாராய்
திற்றுப் பிற்புக் குற்றக் கொக்கைத்
துட்கத் திட்கப் பொரும்வேலா
சுத்தப் பத்திச் சித்திச் சொர்க்கச்
சொர்க்கத் தத்தைக் கினியோனே

கற்றைப் பொற்றைப் பற்றக் குத்திக்
கத்தக் கத்தக் களைவோனே
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக்
கச்சிச் சொக்கப் பெருமாளே.

109. அற்றைக் கிரைதேடி அத்தத் திலுமாசை
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத் துளைசீலா
கற்றுற் றுணர்போதா கச்சிப் பெருமாளே.

110. அனகனென அதிகனென அமலனென அசலனென
அபயனென அதுலனென அநபாயன்
அடல்மதன னெனவிசைய னெனமுருக னெனநெருடி
அவர்பெயரு மிடைசெருகி இசைபாடி
வனசமணி பணிலமழை சுரபிசுரர் தருநிகர்கை
மகிபவென நினையளவு ளவுமீயா
மனிதர்கடை தொறுமுழலு மிடியொழிய மொழியொழிய
மனமொழிய ஒருபொருளை அருள்வாயே
இனனிலவு தலைமலைய அடியினுகி ரிலைகளென
இருசதுர திசையிலுர கமும்வீழ
இரணியச யிலம்ரசித சயிலமர கதசயில
மெனவிமலை யமுனையென நிழல்வீசிக்
கனகமழை யுகைகடவு ளுடலமென முதியவிழி
கதுவியெழில் பொதியமிசை படர்கோலக்
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே.

111. அனங்க னம்பொன் றஞ்சும் மிஞ்சுங் கண்களாலே
அடர்ந்தெ ழும்பொன் குன்றங் கும்பங்
கொங்கையாலே
முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே
முடங்கு மென்றன் தொண்டுங் கொண்டின்
றின்புறாதோ

தெனந்தெ னந்தென் தெந்தெந் தெந்தெந் தெந்தநாளுஞ்
செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்
குனிந்தி லங்குங் கொம்புங் கொங்குந் தூன்றுசோலைக்
*கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்குந் தம்பிரானே.

112. அனத்தோடொப்பா மெனுநடை மடவியர் அநுராகம்
அதற்கேசிச்சீ இனமென துயிர்கெடல் அழகாமோ
உனைப்பாடிப்பே றுறுமொரு வரமினி உதவாயோ
உவப்பாகத்தே வர்கள்சிறை விடவிடும் அயிலோனே
முனைப்பாடிக்கே திரிதரும் அரிதிரு மருகோனே
முகிற்கே நத்தா விரிதரு கலபநன் மயிலோனே
தினைக்காவற்கே உரியவள் மனமகிழ் மணவாளா
திருக்கானப்பேர் நகர்தனி லினிதுறை பெருமாளே.

113. அனலப் பரிபுக் கருணைத் ரயம்வைத்
தடர்பொய்க் குருதிக் குடில்பேணு
அவலக் கவலைச் சவலைக் கலைகற்
றதனிற் பொருள்சற் றறியாதே
குனகித் தனகிக் கனலொத் துருகிக்
குலவிக் கலவிக் கொடியார்தம்
கொடுமைக் கடுமைக் குவளைக் கடையிற்
குலைபட் டலையக் கடவேனோ
தினவித் தினநற் புனமுற் றகுறத்
திருவைப் புணர்பொற் புயவீரா
தெளியப் பவளச் சடிலச் சிவனுக்
கொருசொற் பொருளைப் பகர்வோனே
கனகச் சிகரக் குலவெற் புருவக்
கறுவிப் பொருகைக் கதிர்வேலா
கழியிற் கிழியக் கயல்தத் துமிடைக்
கழியிற் குமரப் பெருமாளே.

---

*கொழும்ப ரங்குன் றன்பின் றங்குந் தம்பிரானே.

114. அனிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின் தூவிகு லாவிய சீறடி மடமானார்

அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுத்தும் பாவியை ஆவிஇ டேறிட நெறிபாரா

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டாணவ மானநிர் மூடனை
விடக்கன் பாய்நுகர் பாழனை யோர்மொழி பகராதே

விகற்பங் கூறிடு மோகவி காரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ

முனைச்சங் கோலிடு நீலம கோததி
அடைத்தஞ் சாதஇ ராவண னீள்பல
முடிக்கன் றோர்கணை ஏவுமி ராகவன் மருகோனே

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி தாதகி கூவிள
முடிக்கூஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே

தினைச்செக் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வேகணி யாகிய
திறற்கந் தாவளி நாயகி காமுறும் எழில்வேலா

திறக்குந் தாமரை யோடையில் மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச்செந் தூர்வரு சேவக னேசுரர் பெருமாளே.

115. அனித்த மான வூனாளு மிருப்ப தாக வேநாசி
அடைத்து வாயு வோடாத வகைசாதித்
தவத்தி லேகு வால்மூலி புசித்து வாடு மாயாச
அசட்டு யோகி யாகாமல் மலமாயை

செனித்த காரி யோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறென் உடல்வேறு
செகத்தி யாவும் வேறாக நிகழ்ச்சி யாம னோதீத
சிவச்சொ ரூப மாயோகி எனஆள்வாய்

தொனித்த நாத வேயூது சகத்ர நாம கோபால
சுதற்கு நேச மாருத மருகோனே
சுவர்க்க லோக மீகாம சமஸ்த லோக பூபால
தொடுத்த நீப வேல்வீர வயலூரா
மணித்த ராதி சோணாடு தழைக்க மேவு காவேரி
மகப்ர வாக பானீயம் அலைமோதும்
மணத்த சோலை சூழ்காவை அனைத்து லோக மாள்வாரு
மதித்த சாமி யேதேவர் பெருமாளே.

116. அனுத்தே னேர்மொழி யாலே மாமய
லுடைத்தார் போலவு மோர்நா ளானதி
லடுத்தே தூதுகள் நூறு றுனதும் விடுவார்கள்
அழைத்தே வீடினி லேதா னேகுவர்
நகைத்தே மோடிக ளாவார் காதலொ
டடுத்தே மாமுலை மீதே மார்புற அணைவார்பின்
குனித்தே பாகிலை ஈவார் பாதியில்
கடிப்பார் வாயிதழ் வாய்நீ ரானது
குடிப்பார் தேனென நாறு லீலைகள் புரிவார்கள்
குறித்தே மாமய லாலே நீள்பொருள்
பறிப்பா ராசுகள் சூழ்மா பாதக
குணத்தார் மாதர்கள் மேலா சாவிட அருள்வாயே
வனத்தே வேடுவர் மாதா மோர்மினை
எடுத்தே தான்வர வேதான் யாவரும்
வளைத்தே சூழவு மோர்வா ளால்வெலும் விறல்வீரா
மலர்த்தே னோடையி லோர்மா வானதை
பிடித்தே நீள்கர வாதா டாழியை
மனத்தா லேவிய மாமா லானவர் மருகோனே
சினத்தே சூரர்கள் போராய் மாளவு
மெடுத்தோர் வேல்விடு தீரா தாரணி
திருத்தோ ளாஇரு பாதா தாமரை முருகோனே
திருத்தேர் சூழ்மதி ளேரார் தூபிக
ளடுக்கார் மாளிகை யேநீ ளேருள
திருப்போ ரூருறை தேவா தேவர்கள் பெருமாளே.

**117.** அணைவரும ருண்ட ருண்டு கடிதெனவெ குண்டி யம்ப
அமரஅடி பின்தொ டர்ந்து பிணநாறும்
அழுகுபிணி கொண்டு விண்டு புழுவுடனெ லும்ப லம்பும்
அவலவுட லஞ்சு மந்து தடுமாறி
மனைதொறுமி தம்ப கர்ந்து வரவரவி ருந்த ருந்தி
மனவழிதி ரிந்து மங்கும் வசைதீர
மறைசதுர்வி தந்தெ ரிந்து வகைசிறுச தங்கை கொஞ்சு
மலரடிவ ணங்க என்று பெறுவேனோ
தினைமிசைசு கங்க டந்த புனமயிலி ளங்கு ரும்பை
திகழிருத னம்பு ணர்ந்த திருமார்பா
செகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா
இனியகனி மந்தி சிந்து மலைகிழவ செந்தில் வந்த
இறைவகுக கந்த என்றும் இளையோனே
எழுகடலு மெண்சி லம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்சும்
இமயவரை அஞ்ச லென்ற பெருமாளே.

**118.** அன்பாக வந்து நின்றாள்ப ணிந்து
ஐம்பூத மொன்ற நினையாமல்
அன்பால்மி குந்த நஞ்சாரு கண்க
ளம்போரு கங்கள் முலைதானும்
கொந்தேமி குந்து வண்டாடி நின்று
கொண்டாடு கின்ற குழலாரைக்
கொண்டேநி னைந்து அன்பேது மின்றிக்
குன்றாம லுன்றன் அருள்தாராய்
மன்றாடி தந்த மைந்தாமி குந்த
வம்பார்க டம்பை அணிவோனே
வந்தேப ணிந்து நின்றார்ப வங்கள்
அன்றேக வர்ந்த வடிவேலா
சென்றேயி றைஞ்ச கந்தாவென் முன்பு
செஞ்சேவல் கொண்டு வரவேணும்
செஞ்சாலி கஞ்ச மொன்றாய்வ ளர்ந்த
செங்கோட மர்ந்த பெருமாளே.

119. அன்னமிசைச் செந்நளிநச் சென்மிகணக் கந்நியமத்
தன்னமயப் புலால்யாக்கை துஞ்சிடாதென்
றந்நினைவுற் றன்னினைவிற் றன்னுயிரிற் றன்னெறிபுக்
கன்னியசற் றுலாமூச்ச டங்கயோகம்
என்னுமருட் கின்னமுடைப் பன்னவைகற் றின்னவைவிட்
டின்னணமெய்த் தடாமார்க்கம் இன்புறுதென்
றின்னதெனக் கென்னுமதப் புன்மைகெடுத் தின்னல்விடுத்
தின்னதெனப் படாவாழ்க்கை தந்திடாதோ
கன்னல்மொழிப் பின்னளகத் தன்னநடைப் பன்னவுடைக்
கண்ணவிரச் சுறுவிட்டு கெண்டையாளைக்
கன்னமிடப் பின்னிரவிற் றுன்னுபுரைக் கன்முழையிற்
கன்னிலையிற் புகாவேர்த்து நின்றவாழ்வே
பொன்னசலப் பின்னசலச் சென்னியினற் கன்னபுரப்
பொன்னிநதிக் கராநீர்ப்பு யங்கனுதா
பொன்மலையிற்பொன்னிநகர்ப்புண்ணியர்பொற்பொன்மவுலிப்
பொன்னுலகத் திராசாக்கள் தம்பிரானே.

120. ஆகத் தேதப் பாமற் சேரிக்
கார்கைத் தேறற் கணையாலே
ஆலப் பாலைப் போலக் கோலத்
தாயக் காயப் பிறையாலே
போகத் தேசற் றேதற் பாயற்
பூவிற் றீயிற் கருகாதே
போதக் காதற் போகத்
தாளைப் பூரித் தாரப் புணராயே
தோகைக் கேயுற் றேறித் தோயச்
சூர்கெட் டோடப் பொரும்வேலா
சோதிக் காலைப் போதக்
கூவத் தூவற் சேவற் கொடியோனே
பாகொத் தேசொற் பாகத் தாளைப்
பாரித் தார்நற் குமரேசா
பாரிற் காமத் தூரிற் சீலப்
பாலத் தேவப் பெருமாளே.

121. ஆங்குடல்வ ளைந்து நீங்குபல்நெ கிழ்ந்து
ஆய்ஞ்சுதளர் சிந்தை தடுமாறி
ஆர்ந்துளக டன்கள் வாங்கவும றிந்து
ஆண்டுபல சென்று இடையோடே
ஊங்கிருமல் வந்து வீங்குகுடல் நொந்து
ஓய்ந்துணர்வ ழிந்து உயிர்போமுன்
ஓங்கு மயில் வந்து சேண்பெறஇ சைந்து
ஊன்றியப தங்கள் தருவாயே
வேங்கைபுமு யர்ந்த தீம்புனமி ருந்த
வேந்திழையி னின்ப மணவாளா
வேண்டுமவர் தங்கள் பூண்டபத மிஞ்ச
வேண்டியப தங்கள் புரிவோனே
மாங்கனியு டைந்து தேங்கவயல் வந்து
மாண்புநெல்வி ளைந்த வளநாடா
மாந்தர்தவ ரும்பர் கோன்பரவி நின்ற
மாந்துறைய மர்ந்த பெருமாளே.

122. ஆசார வீனக் குதர்க்க துட்டர்கள்
மாதாபி தாவைப் பழித்த துட்டர்கள்
ஆமாவி னூனைச் செருத்த துட்டர்கள் பாதாரம்
ஆகாதெ னுமற் பொசித்த துட்டர்கள்
நானாவு பாயச் சரித்ர துட்டர்கள்
ஆவேச நீரைக் குடித்த துட்டர்கள் தமியோர்சொம்
கூசாது சேரப் பறித்த துட்டர்கள்
ஊரார்க ளாசைப் பிதற்று துட்டர்கள்
கோலால வாழ்விற் செருக்கு துட்டர்கள் குருசேவை
கூடாத பாவத் தவத்த துட்டர்கள்
ஈயாது தேடிப் புதைத்த துட்டர்கள்
கோமாள நாயிற் கடைப்பி றப்பினில் உழல்வாரே
வீசாவி சாலப் பொருப்பெ டுத்தெறி
பேரார வாரச் சமுத்தி ரத்தினில்
மீளாம லோடித் துரத்தி யுட்குறும் ஒருமாவை

வேரோடு வீழத் தறித்த டுக்கிய
போராடு சாமர்த் தியத்தி ருக்கையில்
வேலாயு தாமெய்த் திருப்பு கழ்ப்பெறு வயலூரா
நாசாதி ப்ராரத் ததுக்க மிக்கவர்
மாயாவி காரத் தியக்க றுத்தருள்
ஞானோப தேசப் ரசித்த சற்குரு வடிவான
நாதாவெ ளுழற் றுதித்தி டப்புவி
யாதார மாய்கைக் குமுட்ட முற்றருள்
நாகீச நாமத் தகப்பன் மெச்சிய பெருமாளே.

**123.** ஆசார வீனன் அறிவிலி கோபாப ராதி அவகுண
ஞகாத நீசன் அறுசிதன் விபரீதன்
ஆசாவி சார வெகுவித மோகாச ரீத பரவச
ஞகாச நீர்ம ணனல்வளி உருமாறி
மாசான நாலெண் வகைதனை நீநாமெ ஞுத அறிவுளம்
வாயாத பாவி இவனென நினையாமல்
மாதாபி தாவி னருள்நல மாறும காரி லெனையினி
மாஞான போத மருள்செய நினைவாயே
விசால வேலை சுவறிட மாசூரர் மார்பு துளைபட
வேதாள ராசி பசிகெட அறைகூறி
மேகார வார மெனஅதிர் போர்மோது தான ரெமபுர
மீதேற வேல்கொ டமர்செயும் இளையோனே
கூசாது வேட னுமிழ்தரு நீராடி யூனு ணெனுமுறை
கூறுமு னீய அவனுகர் தருசேடம்
கோதாமெ னுமலமுதுசெய் வேதாக மாதி முதல்தரு
கோலோக நாத குறமகள் பெருமாளே.

**124.** ஆசைகூர்பத்த னேன்மனோபத்ம மானபூவைத்து நடுவேயன்
பானநூலிட்டு நாவிலேசித்ர மாகவேகட்டி ஒருஞான
வாசம்வீசிப்ர காசியாநிற்ப மாசிலோர்புத்தி அளிபாட
மாத்ருகாபுஷ்ப மாலைகோலப்ர வாளபாதத்தில் அணிவேனோ

மூசுகானத்து மீதுவாழ்முத்த மூரல்வேடிச்சி தனபார
மூழ்குநீபப்ர தாபமார்புற்ற மூலனேவெற்றி வயலூரா
வீசுமீனப்ப யோதிவாய்விட்டு வேகவேதித்து வருமாசூர்
வீழமோதிப்ப ராரைநாகத்து வீரவேல்தொட்ட பெருமாளே.

**125.** ஆசைக்கொ ளுத்திவெகு வாகப்ப சப்பிவரும்
ஆடைப்ப ணத்தையெடெ  னுறவாடி
ஆரக்க ழுத்துமுலை மார்பைக்கு லுக்கிவிழி
ஆடக்கு லத்துமயில்  கிளிபோலப்
பேசிச்சி ரித்துமயிர் கோதிக்கு லைத்துமுடி
பேதைப்ப டுத்திமயல்  இடுமாதர்
பீறற்ச லத்துவழி நாறப்ப டுத்தியெனைப்
பீடைப்ப டுத்துமயல்  ஒழியாதோ
தேசத்த டைத்துபிர காசித்தொ லித்துவரி
சேடற்பி டித்துதறு  மயில்வீரா
தேடித்து தித்தஅடி யார்சித்த முற்றருளு
சீர்பொற்ப தத்தஅரி  மருகோனே
நேசப்ப டுத்தியிமை யோரைக்கெ டுத்தமுழு
நீசர்க்க னத்தமுற  விடும்வேலா
நேசக்கு றத்திமய லாசைக்கு ணத்ததிரு
ஆனைப்பு ரத்திலருள்  பெருமாளே.

**126.** ஆசை நாலுசது ரக்கமல முற்றிநொளி
வீசி ஓடியிரு பக்கமொடு றச்செல்வளி
ஆவல் கூரமண்மு தற்சலச பொற்சபையும் இந்துவாகு
ஆர மூணுபதி யிற்கொளநி றுத்திவெளி
யாரு சோதிநடு பத்திவுட னெட்டுஇத
ழாகி யேழுமள விட்டருண விற்பதியின் விந்துநாத
ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடு கூடியொரு மித்தமுத சித்தியொடு
மோது வேதசர சத்தியடி உற்றதிரு  நந்தியூடே
ஊமை யேனையொளிர் வித்துனது முத்திபெற
மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்
யோகபேதவகைஎட்டுமிதிலொட்டும்வகை இன்றுதாராய்

வாசி வாணிகனெ னக்குதிரை விற்றுமகிழ்
வாத வூரனடி மைக்கொள்கிரு பைக்கடவுள்
மாழைரூபன்முக மத்திகைவி தத்தருண செங்கையாளி
வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை
வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவையென்
மாசு சேரெழுபி றப்பையும றுத்தவுமை தந்தவாழ்வே
காசி ராமெசுரம் ரத்நகிரி சர்ப்பகிரி
ஆரூர் வேலூர்தெவுர் கச்சிமது ரைப்பறியல்
காவை மூதாரு ணக்கிரிதி ருத்தணியல் செந்தில்நாகை
காழி வேளூர்பழ நிக்கிரிகு றுக்கைதிரு
நாவ லூர்திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்
காதல்சோலைவளர்வெற்பிலுறைமுத்தர்புகழ் தம்பிரானே.

127. ஆசை நேச மயக்கிகள் காசு தேடு மனத்திகள்
ஆவி சோர உருக்கிகள் தெருமீதே
யாவ ரோடு நகைப்பவர் வேறு கூறு விளைப்பவர்
ஆல கால விழிச்சிகள் மலைபோலு
மாசி லாத தனத்தியர் ஆடை சோர நடப்பவர்
வாரி ஓதி முடிப்பவர் ஒழியாமல்
வாயி லூற லளிப்பவர் நாளு நாளு மினுக்கிகள்
வாசல் தேடி நடப்பது தவிர்வேனோ
ஓசை யான மறைக்குபர் வான ஞான திருப்புகழ்
ஓதுசோலை மலைப்பதி உறைவேலா
யோகி ஞானி பராபரி நீலி நார ணியுத்தமி
ஓல மான மறைச்சிசொல் அபிராமி
ஏசி லாத மலைக்கொடி தாய்ம னோன்ம ணிசற்குணி
ஈறி லாத மலைக்கொடி அருள்பாலா
ஏறு மேனி ஒருத்தனும் வேத னொ சமர்த்தனும்
ஈச னோடு ப்ரியப்படு பெருமாளே.

128. ஆடல்மத னம்பு மங்கிட ஆலவிழி யம்பு வந்திட
ஆரமுத ரும்பு கொங்கையின் மயலாகி
ஆதிகுரு வின்ப தங்களை நீதியுட னன்பு டன்பணி
யாமல்மன நைந்து நொந்துடல் அழியாதே

வேடரென நின்ற ஐம்புல னுலுகர ணங்க ளின்தொழில்
வேறுபட நின்று ணர்ந்தருள் பெறுமாறென்
வேடைகெட வந்து சிந்தனை மாயையற வென்று துன்றிய
வேதமுடி வின்ப ரம்பொருள் அருள்வாயே
தாடகையு ரங்க டிந்தொளிர் மாமுனிம கஞ்சிறந்தொரு
தாழ்வறந டந்து திண்சிலை முறியாவொண்
சானகித னங்க லந்தபின் ஊரில்மகு டங்க டந்தொரு
தாயர்வச னஞ்சி றந்தவன் மருகோனே
சேடன்முடி யுங்க லங்கிட நீடுமுல குங்கு லுங்கிட
தேவர்கள்ம கிழ்ந்து பொங்கிட நடமாடும்
*சீர்மயில மஞ்சு துஞ்சிய சோலைவளர் செம்பொ னுந்திய
சீபுருட மங்கை தங்கிய பெருமாளே.

129. ஆடல் மாமத ராஜன் பூசல் வாளியி லேநொந்
தாகம் வேர்வுற மால்கொண் டயராதே
ஆர வாணகை யார்செஞ் சேலி னேவலி லேசென்
றுயு வேதனை யேயென் றலையாதே
சேடன் மாமுடி மேவும் பாரு ளோர்களுள் நீடுந்
த்யாக மீபவர் யாரென் றலையாதே
தேடி நான்மறை நாடுங் காடு மோடிய தாளுந்
தேவ நாயக நானின் றடைவேனோ
பாடு நான்மறை யோனும் மாமனுகிய மாலும்
பாவை பாகனு நாளுந் தவறாதே
பாக நாண்மலர் சூடுஞ் சேக ராமதில் சூழ்தென்
பாகை மாநக ராளுங் குமரேசா
கூட லான்முது கூனன் றேற வாதுயர் வேதங்
கூறு நாவல மேவுந் தமிழ்வீரா
கோடி தானவர் தோளுந் தாளும் வீழவு லாவுங்
கோல மாமயி லேறும் பெருமாளே.

---

*சீர்மயில்ம கிழ்ந்து துன்றிய சோலைமலை யின்ப ரிந்தருள் சீரு டன்ம கிழ்ந்து தங்கிய பெருமாளே.

130. ஆதவித பாரமுலை மாதரிடை நூல்வயிற
தாவிலையெ னுமதன கலைலீலை
ஆயம்விளை வானகுழி ஆனதிரி கோணமதி
லாசைமிக வாயடியன் அலையாமல்
நாதசத கோடிமறை யோலமிடு நூபுரமு
ணுபத மாமலரை நலமாக
நானனுதி னுதினமு மேநினைய வேகிருபை
நாடியரு ளேயருள வருவாயே
சீதமதி யாடரவு வேராறுகு மாஇறகு
சீதசல மாசடில பரமேசர்
சீர்மைபெற வேயுதவு கூர்மைதரு வேலசிவ
சீறிவரு மாவசுரர் குலகாலா
கோதைகுற மாதுகுண தேவமட மாதுமிரு
பாலுமுற வீறிவரு குமரேசா
கோசைநகர் வாழவரு மீசபவ நாசகரு
வேசமுரு காவமரர் பெருமாளே.

131. ஆதா ளிகள்புரி கோலா கலவிழி
யாலே அமுதெனு மொழியாலே
ஆழ்சீ ரிளநகை யாலே துடியிடை
யாலே மணமலி குழலாலே
சூதா ரிளமுலை யாலே அழகிய
தோடா ரிருகுழை அதனாலே
சோரா மயல்தரு மானு ருறவிடர்
சூழா வகையருள் புரிவாயே
போதா ரிருகழல் சூழா ததுதொழில்
பூணு தெதிருற மதியாதே
போரா டியஅதி சூரா பொறுபொறு
போகா தெனஅடு திறலோனே
வேதா உடனெடு மாலா னவனறி
யாதா ரருளிய குமரேசா
வீரா புரிவரு கோவே பழநியுள்
வேலா இமையவர் பெருமாளே.

132. ஆதிமக மாயி அம்மை தேவசிவ னார்ம கிழ்ந்த
ஆவுடைய மாது தந்த குமரேசா
ஆதரவ தாய்வ ருந்தி ஆதியரு ணேச ரென்று
ஆளுமுனை யேவ ணங்க அருள்வாயே
பூதமது வான ஐந்து பேதமிட வேய லைந்து
பூரணசி வாக மங்கள் அறியாத
பூணுமுலை மாதர் தங்கள் ஆசைவகை யேநி னைந்து
போகமுற வேவி ரும்பும் அடியேனை
நீதயவ தாயி ரங்கி நேசவரு ளேபு ரிந்து
நீதிநெறி யேவி ளங்க உபதேச
நேர்மைசிவ னார்ம கிழ்ந்த காதிலுரை வேத மந்த்ர
நீலமயி லேறி வந்த வடிவேலா
ஓதுமறை யாக மஞ்சொல் யோகமது வேபு ரிந்து
ஊழியுணர் வார்கள் தங்கள் வினைதீர
ஊனுமுயி ராய்வ ளர்ந்து ஓசையுடன் வாழ்வு தந்த
ஊதிமலை மீது கந்த பெருமாளே.

133. ஆதிமுத னாளி லென்றன் தாயுடலி லேயி ருந்து
ஆகமல மாகி நின்று புவிமீதில்
ஆசையுட னேபி றந்து நேசமுட னேவ ளர்ந்து
ஆளழக னாகி நின்று விளையாடிப்
பூதலமெ லாம லைந்து மாதருட னேக லந்து
பூமிதனில் வேணு மென்று பொருள்தேடிப்
போகமதி லேயு ழன்று பாழ்நரகெய் தாம லுன்றன்
பூவடிகள் சேர அன்பு தருவாயே
சீதைகொடு போகு மந்த ராவணனை மாள வென்ற
தீரனரி நார ணன்றன் மருகோனே
தேவர்முநி வோர்கள் கொண்டல் மாலரிபிர் மாவு நின்று
தேடஅரி தான வன்றன் முருகோனே
கோதைமலை வாழு கின்ற நாதரிட பாக நின்ற
கோமளிய நாதி தந்த குமரேசா
கூடிவரு சூரர் தங்கள் மார்பையிரு கூறு கண்ட
கோடைநகர் வாழ வந்த பெருமாளே.

**134.** ஆரத்தன பாரத்துகில் மூடிப்பலர் காணக்கையில்
யாழ்வைத்திசை கூரக்குழ லுடைசோர
ஆகப்பணி நீரப்புழு கோடக்குழை யாடப்பிர
யாசப்படு வார்பொட்டணி சசிநேர்வாள்
கூரக்கணை வேல்கட்கயல் போலச்சுழல் வார்சர்க்கரை
கோவைக்கனி வாய்பற்கதிர் ஒளிசேரும்
கோலக்குயி லார்பட்டிடை நூலொத்திடை யார்சித்திர
கோபச்செய லார்பித்தர்கள் உறவாமோ
பூரித்தன பாரச்சடை வேதக்குழ லாள்பத்தர்கள்
பூசைக்கியல் வாள்பத்தினி சிவகாமி
பூமிக்கடல் மூவர்க்குமு ளாள்பத்திர காளிப்புணர்
போகர்க்குப தேசித்தருள் குருநாதா
சூரக்குவ டாழித்தவி டாய்மூட்டசு ராருக்கிட
சோர்விற்கதிர் வேல்விட்டருள் விறல்வீரா
தோகைச்செய லாள்பொற்பிர காசக்குற மான்முத்தொடு
சோதித்துறை யூர்கத்திய பெருமாளே.

**135.** ஆரத் தோடணி மார்பிணை யானைகள்
போருக் காமென மாமுலை யேகொடு
ஆயத் தூசினை மேவிய நூலிடை மடமாதர்
ஆலைக் கோதினி லீரமி லாமன
நேசத் தோடுற வானவர் போலுவர்
ஆருக் கேபொரு ளாமென வேநினை வதனாலே
காருக் கேநிக ராகிய வோதிய
மாழைத் தோடணி காதொடு மோதிய
காலத் தூதர்கை வேலெனு நீள்விழி வலையாலே
காதற் சாகர மூழ்கிய காமுகர்
மேவிட் டேயெறி கீலிகள் நீலிகள்
காமத் தோடுற வாகையி லாவருள் புரிவாயே
சூரர்க் கேயொரு கோளரி யாமென
நீலத் தோகைம யூரம தேறிய
தூளிக் கேகடல் தூரநி சாசரர் களமீதே

சோரிக் கேவெகு ரூபம தாவடு
தானத் தானன தானன தானன
சூழிட் டேபல சோகுக ளாடவெ பொரும்வேலா

வீரத் தால்வல ராவண னார்முடி
போகத் தானொரு வாளியை யேவிய
மேகத் தேநிக ராகிய மேனியன் மருகோனே

வேதத் தோன்முத லாகிய தேவர்கள்
பூசித் தேதொழ வாழ்புலி யூரினில்
மேலைக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே.

**136.** ஆரமணி வாரைப் பீறியற மேலிட்
டாடவர்கள் வாடத் துறவோரை

ஆசைமட லூர்வித் தாளுமதி பாரப்
பாளிதப டீரத் தனமானார்

காரளக நீழற் காதளவு மோடிக்
காதுமபி ராமக் கயல்போலக்

காலனுடல் போடத் தேடிவரு நாளிற்
காலைமற வாமற் புகல்வேனோ

பாரடைய வாழ்வித் தாரஅகி பாசச்
சாமளக லாபப் பரியேறிப்

பாய்மதக போலத் தானொடிக லாமுற்
பாடிவரு மேழைச் சிறியோனே

சூர்புர சூறைக் காரசுரர் காவற்
காரஇள வேனற் புனமேவும்

தோகைதிரு வேளைக் காரதமிழ் வேதச்
சோதிவளர் காவைப் பெருமாளே.

**137.** ஆரமுலை காட்டி மாரனிலை காட்டி
ஆடையணி காட்டி அனுராக

ஆலவிழி காட்டி ஆசைமொழி காட்டி
ஆதரவு காட்டி எவரோடும்

ஈரநகை காட்டி நேரமிகை காட்டி
யேவினைகள் காட்டி உறவாடி
ஏதமயல் காட்டு மாதர்வலை காட்டி
ஈடழிதல் காட்டல் அமையாதோ
வீரவப ராட்டு சூரர்படை காட்டில்
வீழனலை யூட்டி மயலூர்தி
வேலையுறை நீட்டி வேலைதனி லோட்டு
வேலைவிளை யாட்டு வயலூரா
சேரமலை நாட்டில் வாரமுடன் வேட்ட
சீலிகுற வாட்டி மணவாளா
தேசுபுகழ் தீட்டி யாசைவரு கோட்டி
தேவர்சிறை மீட்ட பெருமாளே.

138. ஆரவார மாயிருந்து எமதூத ரோடிவந்து
ஆழிவேலை போல்முழங்கி மடவார்கள்
ஆகமீதி லேசிவந்து ஊசிதானு மேநுழைந்து
ஆலைமீதி லேகரும்பு எனவேதான்
வீரமான சூரிகொண்டு நேரைநேரை யேபிளந்து
வீசுவார்கள் கூகுவென்று அழுபோது
வீடுவாச லானபெண்டிர் ஆசையான மாதர்வந்து
மேலைவீழ்வ ரீதுகண்டு வருவாயே
நாரிவீரி சூரியம்பை வேதவேத மேபுகழ்ந்த
நாதர்பாலி லேயிருந்த மகமாயி
நாடியோடி வாரஅன்பர் காணவேண தேபுகழ்ந்து
நாளுநாளு மேபுகன்ற வரைமாது
நீரின்மீதி லேயிருந்த நீலிசூலி வாழ்வுமைந்த
நீபமாலை யேபுனைந்த குமரேசா
நீலஞக வோடிவந்த சூரைவேறு வேறுகண்ட
நீதனுனை தோர்குழந்தைப் பெருமாளே.

139. ஆராத் காத லாகி மாதர்த
மாபாத சூட மீதி லேவிழி
யாலோல னுய்வி கார மாகியி லஞ்சியாலே

ஆசாப சாசு மூடி மேவிட
ஆசார ஈன னாகி யேமிக
ஆபாச னாகி யோடி நாளுமழிந் திடாதே
ஈராறு தோளு மாறு மாமுக
மோடாரு நீப வாச மாலையு
மேருன தோகை நீல வாசியும் அன் பினாலே
ஏனோரு மோது மாறு தீதற
நாணாசு பாடி யாடி நாடோறு
மீடேறு மாறு ஞான போதகம் வந் திடாதோ
வாராகி நீள்க பாலி மாலினி
மாமாயி ஆயி தேவி யாமளை
வாசாம கோச ராப ராபரை இங்குளாயி
வாதாடி மோடி காடு காளுமை
மாஞால லீலி யால போசனி
மாகாளி சூலி பால லோசனி அம்பவானி
சூராரி மாபு ராரி கோமளை
தூளாய பூதி பூசு நாரணி
சோணாச லாதி லோக நாயகி தந்தவாழ்வே
தோளாலும் வாளி னாலு மாறிடு
தோலாத வான நாடு சூறைகொள்
சூராரி யேவி சாக னேசுரர் தம்பிரானே.

140\. ஆராதன ரடம்பரத்து மாறுதுச வாலம்பனத்து
மாவாகன மாமந்திரத்து மடலாலும்
ஆரூர்தெச மாமண்டபத்தும் வேதாகம மோதுந்தலத்தும்
ஆமாறெரி தாமிந்தனத்தும் அருளாதே
நீராளக நீர்மஞ்சனத்த நீடாரக வேதண்டமத்த
நீநானற வேறின்றினிற்க நியமாக
நீவாவென நீயிங்கழைத்து பாராவர வாநந்தசித்தி
நேரேபர மாநந்தமுத்தி தரவேணும்
வீராகர சாமுண்டிசக்ர பாராகண பூதங்களிக்க
வேதாளச மூகம்பிழைக்க அமராடி
வேதாமுறை யோவென்றரற்ற ஆகாசக பாலம் பிளக்க
வேர்மாமர மூலந்தறித்து வடவாலும்

வாராகர மேழுங்குடித்து மாசூரொடு போரம்பறுத்து
வாஞ்சன மேலுந்துணித்த கதிர்வேலா
வாஞடர சாஞெம்படிக்கு வாவாவென வாவென்றழைத்து
வானோர்பரி தாபந்தவிர்த்த பெருமாளே.

141. ஆல காலப டப்பைம டப்பியர்
ஈரும் வாளென வெற்றிவி ழிச்சியர்
யாவ ராயினும் நத்திய ழைப்பவர் தெருவூடே
ஆடி ஆடிந டப்பதொர் பிச்சியர்
பேசி யாசைகொ டுத்தும ருட்டிகள்
ஆசை வீசிய ணைக்குமு லைச்சியர் பலரூடே
மாலை ஓதிவி ரித்துமு டிப்பவர்
சேலை தாழநெ கிழ்த்தரை சுற்றிகள்
வாசம் வீசும ணத்தில்மி னுக்கிகள் உறவாலே
மாயை ஊடுவி ழுத்திய ழுத்திகள்
காம போகம்வி ளைத்தப ரத்தையர்
வாழ்வின் மேவிம லச்சன னத்தினில் உழல்வேனோ
மேலை வானொரு ரைக்கிசை தற்கொரு
பால னாகவு தித்தொர்மு நிக்கொரு
வேள்வி காவல்ந டத்திய கற்குரு அடியாலே
மேவி யேமிதி லைச்சிலை செற்றுமின்
மாது தோள்தழு விப்பதி புக்கிட
வேறு தாயட விக்குள்வி டுக்கபி னவனோடே
ஞால மாதொடு புக்கவ னத்தினில்
வாழும் வாலிப டக்கணை தொட்டபின்
நாடி ராவண னைக்கொலு மச்சுதன் மருகோனே
ஞான தேசிக சற்குரு உத்தம
*வேல வாநெரு வைப்பதி வித்தக
நாக மாமலை சொற்பெற நிற்பதொர் பெருமாளே.

---

*வீர வேலவ வித்தக வெற்றிகொள், நாக மாமலை நற்பதி நிற்கு மொர் பெருமாளே.

**142.** ஆல காலமெ னக்கொலை முற்றிய
வேல தாமென மிக்கவி ழிக்கடை
யாலு மோகம்வி ளைத்துவி தத்துடன் இளைஞோரை
ஆர வாணைமெ யிட்டும றித்துவி
கார மோகமெ ழுப்பிய தற்குற
வான பேரைய கப்படு வித்ததி விதமாகச்
சால மாலைய ளித்தவர் கைப்பொருள்
மாள வேசிலு கிட்டும ருட்டியெ
சாதி பேதம றத்தழு வித்திரி மடமாதர்
தாக போகமொ ழித்துனி னக்கடி
யானென் வேள்விமு கத்தவ முற்றிரு
தாளை நாளும்வ ழுத்திநி னைத்திட அருள்வாயே
வால மாமதி மத்தமெ ருக்கறு
காறு பூளைத ரித்தச டைத்திரு
வால வாயன ளித்தரு ளற்புத முருகோனே
மாய மாவுடை ரக்கரை வெற்றிகொள்
வாலி மார்புதொ ளைத்திட விற்கொடு
வாளி யேவிய மற்புய னச்சுதன் மருகோனே
நாலு வேதந விற்றுமு றைப்பயில்
வீணை நாதனு ரைத்தவ னத்திடை
நாடி யோடுகு றத்திதனைக்கொடு வருவோனே
நாளி கேரம்வ ருக்கைப ழுத்துதிர்
சோலை சூழ்பழ நிப்பதி யிற்றிரு
ஞான பூரண சத்திதரித்தருள் பெருமாளே.

**143.** ஆல மேற்ற விழியினர் சால நீட்டி அழுதழு
தாக மாய்க்க முறைமுறை பறைமோதி
ஆடல் பார்க்க நிலையெழு பாடை கூட்டி விரையம
யான மேற்றி உறவினர் அயலாகக்
கால மாச்சு வருகென ஓலை காட்டி யமபடர்
காவ லாக்கி உயிரது கொடுபோமுன்
காம வாழ்க்கை பொடிபட ஞானம் வாய்த்த கழலிணை
காத லாற்க ருதுமுணர் தருவாயே

வேல கீர்த்தி விதாண சீலர் வாழ்த்து சரவண
வியாழ கோத்ர மருவிய முருகோனே
வேடர் நாட்டில் விளைபுன ஏனல் காத்த சிறுமியை
வேட மாற்றி வழிபடும் இளையோனே
ஞால மேத்தி வழிபடு மாறு பேர்க்கு மகவென
நாணல் பூத்த படுகையில் வருவோனே
நாத போற்றி எனமுது தாதை கேட்க அநுபவ
ஞான வார்த்தை அருளிய பெருமாளே.

144. ஆலம் போலெழு நீல மேலங் காய்வரு கோல
ஆழம் போர்செயு மாய விழியாலே
ஆரம் பால்தொடை சால ஆலுங் கோபுர வார
ஆடம் பார்குவி நேய முலையாலே
சாலந் தாழ்வுறு மால ஏலங் கோர்பிடி ஆய
வேலங் கார்துடி போலும் இடையாலே
சாரஞ் சார்வில ஞய நேகங் காயமன் மீறு
காலந் தாநெறி வேது உரையாயோ
பாலம் பால்மண நாறு காலங் கேயிறி லாத
மாதம் பாதரு சேய வயலூரா
பாடம் பார்திரி சூல நீடந் தாகர வீர
பாசந் தாதிரு மாலின் மருகோனே
வேலம் பார்குற மாது மேலும் பார்தரு மாதும்
வீறங் கேயிரு பாலு முறவீறு
வேதந் தாவபி ராம நாதந் தாவருள் பாவு
வேலங் காடுறை சீல பெருமாளே.

145. ஆலம் வைத்தவி ழிச்சிகள் சித்தச
ஞகமக்கலை கற்றச மர்த்திக
ளார்ம னத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே
ஆர வட்டமு லைக்குவி லைப்பண
மாயி ரக்கல மொட்டிய ளப்பினு
மாசை யைப்பொரு ளொக்கந டிப்பவ ருடன்மாலாய்

மேலி ளைப்புமு சிப்புமு வத்தையு
மாயெ டுத்தகு லைப்பொடு பித்தமு
மேல்கொ ளத்தலை யிட்டவி திப்படி யெனுமாறும்

வேள்க ணைக்கிரை யிட்டுட லத்தனை
பாடு பட்டுபு ழுக்கொள்ம லக்குகை
வீடு கட்டியி ருக்குமெ னக்குநின் அருள்தாராய்

பீலி மெத்தும யிற்றுர கத்தினி
லேறி முட்டவ ளைத்துவ குத்துடல்
பீற லுற்றவு யுத்தக ளத்திடை மடியாத

பேர ரக்கரெ திர்த்தவ ரத்தனை
பேரை யுக்ரக ளப்பலி யிட்டுயர்
பேய்கை கொட்டிந டிப்பம ணிக்கழு குடனுடை

ஏலம் வைத்தபு யத்தில ணைத்தருள்
வேலெ டுத்தச மர்த்தையு ரைப்பவர்
ஏவ ருக்கும னத்தில்நி னைப்பவை அருள்வோனே

ஏழி சைத்தமி ழிற்பய னுற்றவெ
ணாவ லுற்றடி யிற்பயி லுத்தம
ஈசன் முக்கணி நித்தன ளித்தருள் பெருமாளே.

146. ஆலவிழி நீலத் தாலதர பானத்
தாலளக பாரக் கொண்டலாலே

ஆரநகை யால்விற் போலுநுத லால்வித்
தாரநடை யால்நற் கொங்கையாலே

சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் துன்பமூழ்கித்

தாழ்விலுயிர் வீழ்பட் டூழ்வினைவி டாமற்
சாவதன்மு னேவற் கொண்டிடாயோ

சோலைதரு கானிற் கோலமற மானைத்
தோளிலுற வாகக் கொண்டவாழ்வே

சோதிமுரு காகித் தாபழைய ஞானச்
சோணகிரி வீதிக் கந்தவேளே

பாலகக லாபக் கோமளம யூரப்
 பாகவுமை பாகத் தன்குமாரா
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
 பாடுமவர் தோழத் தம்பிரானே.

147. ஆலா லத்தைய மூத்திய
 வேல்போல் நற்குழை யைப்பொரு
 தாகா ரைத்தொடர் கைக்கெணும் விழியாலே
ஆளா மற்றவர் சுற்றிட
 மீளா மற்றலை இட்டறி
 வார்போ கச்செயல் விச்சைகள் விலைகூறிக்
கோலா லக்கண மிட்டுவ
 ராதார் நெக்குரு கப்பொருள்
 கூறு கப்பெறில் நிற்கவும் இலதானார்
கூடா நட்புமு ரைத்திடு
 கேடா விட்டகல் மட்டைகள்
 கோமா ளத்துய ருட்பயம் உறலாமோ
பாலா மக்கட லிற்றுயில்
 மாலோ ரெட்டுத லைக்கிரி
 பால்பார் வைக்கள விட்டுமை யுறுபோதிற்
பார்மே லிக்கனு டற்பொறி
 யாய்வீ ழச்சுடும் வித்தகர்
 பாலா பத்தரி டத்தியல் பயில்வோனே
மேலா யத்தொடு திக்கடை
 மேவார் வெற்பொட ரக்கரை
 வேர்மா ளப்பொரு திட்டொளி விடும்வேலா
மேனா டர்ச்சிறை விட்டருள்
 மீளா விக்கிர மத்தொடு
 வேதா வைச்சிறை இட்டருள் பெருமாளே.

148. ஆலுமயில் போலொத்த தோகையர்க ளேமெத்த
 ஆரவட மேலிட்ட முலைமீதே
ஆனதுகி லேயிட்டு வீதிதனி லேநிற்க
 ஆமவரை யேசற்று முறையாதே

வேலுமழ கார்கொற்ற நீலமயில் மேலுற்று
வீறுமுன தார்பத்ம முகமாறு
மேவியிரு பாகத்தும் வாழுமனே மார்தக்க
மேதகவு நாணித்தம் உரையேனோ
நாலுமுக வேதற்கும் ஆலிலையில் மாலுக்கும்
நாடவரி யார்பெற்ற ஒருபாலா
காணமுடை யாள்வெற்றி வேடர்குல மீதொக்க
நாடுகுயில் பார்மிக்க எழில்மாது
வேலைவிழி வேடச்சி யோடமரர் மாதொக்க
வீறருணை மால்வெற்பில் உறைவோனே
வீரமுட னேயுற்ற சூரர்கிளை வீழ்விக்க
வேலைமிக வேவிட்ட பெருமாளே.

149. ஆலையான மொழிக்கு மானையூடு கிழிக்கு
மாலகால விழிக்கும் உறுகாதல்
ஆசைமாத ரழைக்கு மோசையான தொனிக்கு
மாரபார முலைக்கும் அழகான
ஓலைமேவு குழைக்கு மோடையானை நடைக்கும்
ஓசைசாயு மிடைக்கும் மயல்மேவி
ஊறுபாவ உறுப்பி லூறல்தேறு கரிப்பி
லூரவோடு விருப்பில் உழல்வேனோ
வேலையாக வளைக்கை வேடர்பாவை தனக்கு
மீறுகாத லளிக்கு முகமாய
மேவுவேடை அளித்து நீடுகோல மளித்து
மீளவாய்மை தெளித்தும் இதண்மீது
மாலையோதி முடித்து மாதுதாள்கள் பிடித்து
வாயிலூறல் குடித்து மயல்தீர
வாகுதோளி லணைத்து மாகமார்பொ ழிலுற்ற
வாகைமாந கர்பற்று பெருமாளே.

150. ஆவி காப்பது மேற்பத மாத லாற்புரு டார்த்தமி
தாமெ னப்பர மார்த்தம துணராதே
ஆனை மேற்பரி மேற்பல சேனை போற்றிட விட்டோட
நேக நாட்டொடு காட்டொடு தடுமாறிப்

பூவை மார்க்குரு காப்புதி தான கூத்தொடு பாட்டொடு
பூவி னுற்றம ருத்தன கிரிதோயும்
போக போக்யக லாத்தொடு வாழ்ப ராக்கொடி ராப்பகல்
போது போக்கியெ னுக்கையை விடலாமோ
தேவி பார்ப்பதி சேர்ப்பர பாவ னார்க்கொரு சாக்ரஅ
தீத தீட்சைப ரீட்சைகள் அறவோதும்
தேவ பாற்கர நாற்கவி பாடு லாட்சண மோட்சதி
யாக ராத்திகழ் கார்த்திகை பெறுவாழ்வே
மேவி னார்க்கருள் தேக்குது வாத சாக்ஷச டாக்ஷர
மேரு வீழ்த்தப ராக்ரம வடிவேலா
வீர ராக்கத ரார்ப்பெழ வேத தாக்ஷக னுக்கெட
வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே.

**151.** ஆறுமாறு மஞ்சுமஞ்சும் ஆறுமாறு மஞ்சுமஞ்சும்
ஆறுமாறு மஞ்சுமஞ்சும் அறுநாலும்
ஆறுமாய சஞ்சலங்கள் வேறதாவி ளங்குகின்ற
ஆரணாக மங்கடந்த கலையான
ஈறுகூற ரும்பெருஞ்சு வாமியாயி ருந்தநன்றி
ஏதுவேறி யம்பலின்றி ஒருதானாய்
யாவுமாய்ம னங்கடந்த மோனவீட டைந்தொருங்கி
யானவாவ டங்களன்று பெறுவேனோ
மாறுகூறி வந்தெதிர்ந்த சூரர்சேனை மங்கவங்க
வாரிமேல்வெ குண்டசண்ட விததாரை
வாகைவேலை கொண்டதும்பை மாலைகூவி ளங்கொழுந்து
வாலசோம னஞ்சுபொங்கு பகுவாய
சீறுமாசு ணங்கரந்தை ஆறுவேணி கொண்டநம்பர்
தேசிகாக டம்பலங்கல் புனைவோனே
தேவர்யாவ ருந்திரண்டு பாரின்மீது வந்திறைஞ்சு
தேவனூர்வி ளங்கவந்த பெருமாளே.

**152.** ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்

ஏறுமயில் வாகனகு காசரவ ணாவெனது
ஈசவென மானமுற என்றுமோதும்
ஏழைகள்வி யாகுலமி தேதெனவி னாவிலுனை
ஏவர்புகழ் வார்மறையும் என்சொலாதோ
நீறுபடு மாழைதிரு மேனிதிரி சூலனுமை
நீலமயில் வாகியுமை தந்தவேளே
நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கலேறே
சீறிவரு மாறவுண னாவியுணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடம்
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே.

153. ஆனனமு கந்து தோளொடு தோளிணைக லந்து பாலன
ஆரமுது கண்டு தேனென இதழூறல்
ஆதரவி னுண்டு வேல்விழி பூசலிட நன்று காணென
ஆனையுர மெங்கு மோதிட அபிராம
மானனைய மங்கை மார்மடு நாபியில்வி ழுந்து வீணினில்
மாயுமனு வின்ப வாசைய றவேயுன்
வாரிசப தங்கள் நாயடி யேன்முடிபு னைந்து போதக
வாசகம்வ ழங்கி யாள்வதும் ஒருநாளே
ஈனவதி பஞ்ச பாதக தானவர்ப்ர சண்ட சேனைகள்
ஈடழிய வென்று வானவர் குலசேனை
ஏவல்கொளு மிந்த்ர லோகவ சீகரவ லங்க்ரு தாகர
ராசதம றிந்த கோமள வடிவோனே
சோணைசொரி குன்ற வேடுவர் பேதைபயில் கின்ற ஆறிரு
தோளுடைய கந்த னேவய லியில்வாழ்வே
சூளிகையு யர்ந்த கோபுர மாளிகைபொ னிஞ்சி சூழ்தரு
ஸ்வாமிமலை நின்று லாவிய பெருமாளே.

154. ஆனாத ஞான புத்தி யைக்கொ டுத்ததும்
ஆராயு நூல்க ளிற்க ருத்த ளித்ததும்
ஆதேச வாழ்வி னிற்ப்ர மித்தி ளைத்துயிர்
அழியாதே

ஆசாப யோதி யைக்க டக்க விட்டதும்
வாசாம கோச ரத்தி ருத்து வித்ததும்
ஆபாத னேன்மி கப்ர சித்தி பெற்றினி துலகேழும்
யாஞக நாம அற்பு தத்தி ருப்புகழ்
தேனூற வோதி எத்தி சைப்பு றத்தினும்
ஏடேவு ராஜ தத்தி னைப்ப ணித்ததும் இடாழி
ஏருத மாம லத்ர யக்கு ணத்ரய
நாஞவி கார புற்பு தப்பி றப்புற
ஏதேம மாயெ னக்க நுக்ர கித்ததும் மறவேனே
மாநாக நாண்வ லுப்பு றத்தொ டக்கியோர்
மாமேரு பூத ரத்த னுப்பி டித்தொரு
மாலாய வாளி யைத்தொ டுத்த ரக்கரில் ஒருமூவர்
மாளாது பாத கப்பு ரத்ர யத்தவர்
தூளாக வேமு தற்சி ரித்த வித்தகர்
வாழ்வேவ லாரி பெற்றெ டுத்த கற்பக வனமேவும்
தேநாய காவெ னத்து தித்த உத்தம
வாஞடர் வாழ விக்ர மத்தி ருக்கழல்
சேராத சூர னைத்து ணித்த டக்கிய வரைமோதிச்
சேறுய சோரி புக்க ளக்கர் திட்டெழ
மாறுநி சாச ரக்கு லத்தை இப்படி
சீரேவி ஞல றுத்த றுத்தொ துக்கிய பெருமாளே.

155. ஆஞத பிருதிவிப் பாச நிகளமும்
மாமாய விருளுமற் றேகி பவமென
ஆகாச பரமசிற் சோதி பரையைய டைந்துளாமே
ஆறுறி னதிகமக் ராய மனுதினம்
யோகீச ரெவருமெட் டாத பரதுரி
யாதீத மகளமெப் போது முதயம னந்தமோகம்
வாஞதி சகலவிஸ் தார விபவரம்
லோகாதி முடிவுமெய்ப் போத மலரயன்
மாலீச ரெனுமவர்க் கேது விபுலம சங்கையால்நீள்
மாளாத தனிசமுற் றுய தரியதி
ராதார மூலவில்சிற் சோதி நிருபமு
மாறுத சுகவெளத் தாஞ வுடனினி தென்றுசேர்வேன்

நாஞவி தகருவிச் சேனை வகைவகை
சூழ்போது பிரபலச் சூரர் கொடுநெடு
நாவாய்செல் கடலடைத் தேறி நிலைமையி லங்கைசாய
நாலாறு மணிமுடிப் பாவி தனையடு
சீராமன் மருகமைக் காவில் பரிமள
நாவீசு வயலியக் கீசர் குமரக டம்பவேலா
காஞரு மெயினர்தற் சாதி வளர்குற
மாதோடு மகிழ்கருத் தாகி மருடரு
காதாடு முனதுகட் பாண மெனதுடை நெஞ்சுபாய்தல்
காணாது மமதைவிட் டாவி உயவருள்
பாராயெ னுரைவெகுப் ரீதி இளையவ
காவேரி வடகரைச் சாமி மலையுறை தம்பிரானே.

156. ஆனைமுக வற்கு நேரிளைய சுத்த
ஆறுமுக முற்ற அழகோனே
ஆதியர னுக்கும் வேதமுதல் வற்கும்
ஆரணமு ரைத்த குருநாதா
தானவர்கு லத்தை வேல்கொடுது ணித்த
சாரசதுர் மிக்க திறல்வீரா
தாளிணைக ளுற்று மேவியப தத்தில்
வாழ்வொடுசி றக்க அருள்வாயே
வானெழுபு விக்கு மாலுமய னுக்கும்
யாவரொரு வர்க்கும் அறியாத
மாமதுரை சொக்கர் மாதுமைக ளிக்க
மாமயில் நடத்து முருகோனே
தேனெழுபு னத்தில் மான்விழிகு றத்தி
சேரமரு வுற்ற திரடோளா
தேவர்கள்க ருத்தில் மேவியப யத்தைத்
தீரவிடு வித்த பெருமாளே.

157. ஆனைவரிக் கோடிளநிர்ப் பாரமுலைச் சாரசைபட்
டாடைமறைத் தாடுமலர்க் குழலார்கள்
ஆரவடத் தோடலையப் பேசிநகைத் தாசைபொருட்
டாரையுமெத் தாகமயக் கிடுமோகர்

சோணமழைப் பாரவிழித் தோகைமயிற் சாதியர்கைத்
 தூதுவிடுத் தேபொருளைப் பறிமாதர்
தோதகமுற் றேழ்நரகிற் சேருமழற் காயனையுட்
 சோதியொளிப் பாதமளித் தருள்வாயே
தானதனத் தீதிமிலைப் பேரிகைகொட் டாசமரிற்
 சாயகடற் சூரைவதைத் திடுவோனே
தாளவியற் சோதிநிறக் காலினெழுக் கோலியெடுத்
 தாபரம்வைத் தாடுபவர்க் கொருசேயே
தேனிரசக் கோவையிதழ்ப் பூவைகுறப் பாவைதனத்
 தேயுருகிச் சேருமணிக் கதிர்வேலா
சீரருணைக் கோபுரமுற் றானபுனத் தோகையுமெய்த்
 தேவமகட் கோர்கருணைப் பெருமாளே.

158. இகல வருதிரை பெருகிய சலநிதி
 நிலவு முலகினி லிகமுறு பிறவியி
 னினிமை பெறவரு மிடருறு மிருவினை அதுதீர
இசையு முனதிரு பதமலர் தனைமன
 மிசைய நினைகிலி இதமுற உனதரு
 ளிவர உருகிலி அயர்கிலி தொழுகிலி உமைபாகர்
மகிழு மகவென அறைகிலி நிறைகிலி
 மடமை குறைகிலி மதியுணர் வறிகிலி
 வசன மறவுறு மவுனமொ டுறைகிலி மடமாதர்
மயம தடரிட இடருறு மடியனு
 மினிமை தருமுன தடியவ ருடனுற
 மருவ அருள்தரு கிருபையின் மலிகுவ தொருநாளே
சிகர தனகிரி குறமக ளினிதுற
 சிலத நலமுறு சிலபல வசனமு
 திறைய அறைபயி லறுமுக நிறைதரும் அருணேச
சிரண புரணவி தரணவி சிரவண
 சரணு சரவண பவகுக சயநெறி
 திரவ பரவதி சிரமறை முடிவுறு பொருணேச

அகர உகாதி மகாதி சிகாதி
யகர அருளாதி தெருளாதி வலவல
அரண முரணுறு மசுரர்கள் கெடவயில் விடுவோனே
அழகு மிலகிய புலமையு மகிமையும்
வளமு முறைதிரு மயிலையி லனுதின
மமரு மாகர சிவசுத அடியவர் பெருமாளே.

159. இகல்கடின முகபடவி சித்ரத்து திக்கைமத
மத்தக்க ளிற்றையெதிர்
புளகதன மிளகஇனி தெட்டிக்க மூத்தொடுகை
கட்டிப்பி ணித்திறுகி
இதழ்பொதியி னமுதுமுறை மெத்தப்பு சித்துருகி
முத்தத்தை யிட்டுநக தந்தமான
இடுகுறியும் வரையையுற நெற்றித்த லத்திடையி
லெற்றிக்க லக்கமுற
இடைதுவள உடைகழல இட்டத்த ரைப்பையது
தொட்டுத்தி ரித்துமிக
இரணமிடு மூரணர்விழி யொக்கக்க றுத்தவிழி
செக்கச்சி வக்கவளே செங்கைசோர
அகருவிடு ம்ருகமதம ணத்துக்க னத்தபல
கொத்துக்கு ழற்குலைய
மயில்புறவு குயில்ஞிமிறு குக்கிற்கு ரற்பகர
நெக்குக்க ருத்தழிய
அமளிபெரி தமளிபட வக்கிட்டு மெய்க்கரண
வர்க்கத்தி னிற்புணரும் இன்பவேலை
அலையின்விழி மணியின்வலை யிட்டுப்பொ ருட்கவர
கட்டுப்பொ றிச்சியர்கள்
மதனகலை விதனமறு வித்துத்தி ருப்புகழை
யுற்றுத்து திக்கும்வகை
அபரிமித சிவவறிவு சிக்குற்று ணர்ச்சியினில்
ரக்ஷித்த ளித்தருள்வ தெந்தநாளோ

திகுடதிகு தகுடதகு திக்குத்தி குத்திகுட
தத்தித்த ரித்தகுட
செகணசெக சகணசக செக்கச்செ கச்செகண
சத்தச்ச கச்சகண
திகுதிகுர்தி தகுதகுர்த திக்குத்தி குத்திகுர்தி
தக்குத்த குத்தகுர்த திங்குதீதோ
திரிரிதிரி தரிரிதரி தித்தித்தி ரித்திரிரி
தத்தித்த ரித்தரிரி
டிகுடடகு டகுடடிகு டிட்டிட்டி குட்டிகுடி
டட்டட்ட குட்டகுட
தெனதிமிர்த தவில்மிருக டக்கைத்தி ரட்சலிகை
பக்கக்க ணப்பறைத வண்டைபேரி

வகைவகையின் மிகவதிர வுக்ரத்த ரக்கர்படை
பக்கத்தி னிற்சரிய
எழுதுதுகில் முழுதுலவி பட்டப்ப கற்பருதி
விட்டத்த மித்ததென
வருகுறளி பெருகுகுரு திக்குட்கு ளித்துழுது
தொக்குக்கு ளிப்புவிட வென்றவேலா
வயலிநகர் பயில்குமர பத்தர்க்க னுக்ரகவி
சித்ரப்ர சித்தமுறு
அரிமருக அறுமுகவ முக்கட்க ணத்தர்துதி
தத்வத்தி றச்சிகர
வடகுவடில் நடனமிடு மப்பர்க்கு முத்திநெறி
தப்பற்று ரைக்கவல தம்பிரானே.

160\. இசைந்த ஏறுங் கரியுரி போர்வையும் எழில்நீறும்
இலங்கு நூலும் புலியத ளாடையு மழுமானும்
அசைந்த தோடுஞ் சிரமணி மாலையு முடிமீதே
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய குருநாதா
உசந்த மாறன் பதிமிகு கூடலி லுறைவோனே
உகந்த பாசங் கயிறொடு தூதுவர் நலியாதே
அசந்த போதென் துயர்கெட மாமயில் வரவேணும்
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமாளே.

161. இடமடு சுறவை முடுகிய மகர
மெறிகட லிடையெழு திங்களாலே
இருவினை மகளிர் மருவிய தெருவி
லெரியென வருசிறு தென்றலாலே
தடநடு வுடைய கடிபடு முளரி
சரம்விடு தறுகண னங்கனாலே
சரிவளை கழல மயல்கொளு மரிவை
தனிமல ரணையில்ந லங்கலாமோ
வடகுல சயில நெடுவுட லசுரர்
மணிமுடி சிதறவெ றிந்தவேலா
மறமக ளமுத புளகித களப
வளரிள முலையும ணைந்தமார்பா
அடலணி விகட மரகத மயிலி
லழகுட னருணையில் நின்றகோவே
அடியிணை பரவி அடியவர் பணியும்
அரியர பிரமர்கள் தம்பிரானே.

162. இடமருவுஞ் சீற்ற வேலெடுத்து
விடமுழுதுந் தேக்கி யேநிறைத்து
இருகுழையுந் தாக்கி மீள்கயற்கண் வலையாலே
இனிமையுடன் பார்த்து ளேயழைத்து
முகபடமுஞ் சேர்த்து வாரமுத்தும்
இருவரையுங் காட்டி மாலெழுப்பி விலைபேசி
மடலவிழும் பூக்க ளால்நிறைத்த
சுருளளகந் தூற்றி யேமுடித்து
மருகிடைநின் றூர்க்க வேநகைத்து நிலையாக
வருபொருள்கண் டேற்க வேபறிக்கும்
அரிவையர்தம் பேச்சி லேமுழுக்க
மனமுருகுந் தூர்த்த னையிளைத்து விடலாமோ
படிமுழுதுங் கூர்த்த மாகுலத்தி
பழமறையின் பேச்சி நூலிடைச்சி
பகிர்மதியம் பூத்த தாழ்சடைச்சி இருநாழி

படிகொடறங் காத்த மாவறத்தி
மணிவயிரங் கோத்த தோள்வளைச்சி
பலதிசையும் போய்க்கு லாவிருப்பி நெடுநீலி
அடுபுலியின் தோற்ப டாமுடைச்சி
சமராமுகங் காட்டு மால்விடைச்சி
அகிலமுமுண் டார்க்கு நேரிளைச்சி பெருவாழ்வே
அரியயனின் றேத்த வேமிகுத்த
விபுதர்குலம் பேர்க்க வாளெடுத்த
அசுரர்குலம் பாழ்க்க வேலெடுத்த பெருமாளே.

**163.** இடம்பார்த் திடம்பார்த் திதங்கேட் டிரந்தேற்
றிணங்காப் பசிப்பொங் கனல்மூழ்கி
இறுங்காற் கிறுங்காற் கிரும்பார்க் குநெஞ்சார்க்
கிரங்கார்க் கியற்றண் டமிழ்நூலின்
உடம்பாட் டுடன்பாட் டியம்பாத் தயங்காத்
துளங்காத் திடப்புன் கவிபாடி
ஒதுங்காப் பொதுங்காப் பதுங்காப் புகன்றேத்
துறும்பாற் குணக்கன் புறலாமோ
கடந்தோற் கடந்தோற் றறிந்தாட் கருந்தாட்
கணைந்தாட் கணித்திண் புயமீவாய்
கரும்போற் கரும்போர்க் குளங்காட் டிகண்டேத்
துசெங்கோட் டில்நிற்கும் கதிர்வேலா
அடைந்தோர்க் குணர்ந்தோர்க் களிந்தோர்க் கமைந்தோர்க்
கவிழ்ந்தோர்க் குணற்கொன் றிலதாகி
அலைந்தோர்க் குலைந்தோர்க் கிளைந்தோர்க் கலந்தோர்க்
கறிந்தோர்க் களிக்கும் பெருமாளே.

**164.** இடருக் கிடராகிய கொடுமைக் கணைமேல்வரு
பிறுதிச் சிறுகால்வரு மதனாலே
இயலைத் தருகானக முயலைத் தருமேனியி
லெரியைத் தருமாமதி நிலவாலே

தொடரக் கொடுவாதையி லடையக் கரைமேல்லே
தொலையத் தனிவீசிய கடலாலே
துணையற் றணிபூமல ரணையிற் றனியேனுயிர்
துவளத் தருமோதுயர் தொலையாதோ
வடபொற் குலமேருவின் முடுகிப் பொருசூரனை
மடியப் படையேவிய வடிவேலா
மறவக் குலமாமொரு குறமெய்த் திருமாமகள்
மகிழப் புனமேவிய மயில்வீரா
அடரப் படர்கேதகை மடலிற் றழைசேர்வய
லருணைத் திருவீதியி லுறைவோனே
அவனித் திருமாதொடு சிவனுக் கிமையாவிழி
அமரர்க் கரசாகிய பெருமாளே.

165. இடர்மொய்த்துத் தொடரிற்பொய்க்
குடிலக்குக் கிடையிட்டி
டினிமைச்சுற் றமுமற்றறப் புதல்வோரும்
இனமொப்பித் திசையச்சொற்
பலகத்திட் டிழியப்பிற்
கிடையத்துக் கழும்விட்டிட் டவரேக
விடமெத்தச் சொரிசெக்கட்
சமன்வெட்டத் தனமுற்றிட்
டுயிர்வித்துத் தனையெற்றிக் கொடுபோமுன்
வினைபற்றற் றறநித்தப்
புதுமைச்சொற் கொடுவெட்சிப்
புயவெற்றிப் புகழ்செப்பப் பெறுவேனோ
அடர்செக்கர்ச் சடையிற்பொற்
பிறையப்புப் புனையப்பர்க்
கறிவொக்கப் பொருள்கற்பித் திடுவோனே
அலகைக்குட் பசிதித்தப்
பலகைக்கொத் ததுபட்டிட்
டலறக்குத் துறமுட்டிப் பொரும்வேலா

கடலுக்குட் படுசர்ப்பத்
 தினில்மெச்சத் துயில்பச்சைக்
 கிரிகைக்குட் டிகிரிக்கொற் றவன்மாயன்
கமலத்திற் பயில்நெட்டைக்
 குயவற்கெட் டிசையர்க்குக்
 கடவுட்சக் கரவர்த்திப் பெருமாளே.

166. இடையித்தனை உளதத்தைய
 ரிதழ்துய்த்தவர் அநுபோகம்
இளகிக்கரை புரளப்புள
 கிதகற்புர தனபாரம்
உடன்மற்கடை படுதுற்குண
 மறநிற்குண உணர்வாலே
ஒருநிட்கள வடிவிற்புக
 ஒருசற்றருள் புரிவாயே
திடமற்றொளிர் நளினப்ரம
 சிறைபுக்கனன் எனவேகுந்
தெதிபக்ஷண க்ருதபக்ஷண
 செகபக்ஷணன் எனவோதும்
விடபட்சணர் திருமைத்துனன்
 வெருவச்சுரர் பகைமேல்வேல்
விடுவிக்ரம கிரியெட்டையும்
 விழவெட்டிய பெருமாளே.

167. இணங்கித் தட்பொடு பால்மொழி பேசிகள்
 மணத்திட் டுச்சுக மாய்விளை யாடிகள்
 இளஞ்சொற் செப்பிகள் சாதனை வீணிகள் கடிதாகும்
இடும்பைப் பற்றிய தாமென மேயினர்
 பெருஞ்சொற் பித்தனை தானும்வை யாதவர்
 இடும்பிற் பற்றிய கூர்விழி மாதர்கள் எவரேனும்
பணஞ்சுற் றிக்கொளு பாயவு தாரிகள்
 மணங்கட் டுக்குழல் வாசனை வீசிகள்
 பலஞ்செப் பித்தர மீளமை யாதவர் அவரோடே

பதந்துய்த் துக்கொடு தீமைய மாநர
  கடைந்திட் டுச்சவ மாகிவி டாதுன
  பதம்பற் றிப்புக ழானது கூறிட அருள்வாயே
வணங்கச் சித்தமி லாதவி ராவணன்
  சிரம்பத் துக்கெட வாளிக டாவியெ
  மலங்கப் பொக்கரை யீடழி மாதவன் மருகோனே
மதம்பட் டுப்பொரு சூரபன் மாதியர்
  குலங்கொட் டத்திகல் கூறிய மோடரை
  வளைந்திட் டுக்கள மீதினி லேகொல விடும்வேலா
பிணம்பற் றிக்கழு கோடுபல் கூளிகள்
  பிடுங்கிக் கொத்திட வேயம ராடியெ
  பிளந்திட் டுப்பல மாமயி லேறிய முருகோனே
பிரிந்திட் டுப்பரி வாகிய ஞானிகள்
  சிலம்பத் தக்கழல் சேரவெ நாடிடு
  பெரும்பற் றப்புலியூர்தனில் மேவிய பெருமாளே.

168. இணையதில தாமிரண்டு கயல்களென வேபுரண்டு
  இருகுழையின் மீதடர்ந்து அமராடி
இலகுசிலை வேள்துறந்த கணைஅதிலு மேசிறந்த
  இருநயனர் வாரிணங்கு மதிபார
பணைமுலையின் மீதணிந்த தரளமணி யார்துலங்கு
  பருவரதி போலவந்த விலைமாதர்
பயிலுநடை யாலுழன்று அவர்களிட மோகமென்ற
  படுகுழியி லேமயங்கி விழலாமோ
கணகணென வீரதண்டை சரணமதி லேவிளங்க
  கலபமயில் மேலுகந்த குமரேசா
கறுவிவரு சூரனங்க மிருபிளவ தாகவிண்டு
  கதறிவிழ வேலெறிந்த முருகோனே
மணிமகுட வேணிகொன்றை அறுகுமதி யாறணிந்த
  மலையவிலி ஞயகன்றன் ஒருபாக
மலையரையன் மாதுதந்த சிறுவனென வேவளர்ந்து
  மயிலைநகர் வாழவந்த பெருமாளே.

169. இதசந்தன புழுகுஞ்சில மணமுந்தக வீசி
யணையுந்தன கிரிகொண்டிணை யழகும்பொறி சோர
இருளுங்குழல் மழையென்பக வரசங்கொளு மோகக்
குயில்போலே

இடையுங்கொடி மதனன்தளை யிடுகுந்தள பார
இலையுஞ்சுழி தொடையரம்பையு மமுதக்தட மான
இயலங்கடி தடமும்பொழி மதவிஞ்சைகள் பேசித்
தெருமீதே

பதபங்கய மணையும்பரி புரமங்கொலி வீச
நடைகொண்டிடு மயிலென்பன கலையுஞ்சுழ லாட
பரிசும்பல மொழியுஞ்சில கிளிகொஞ்சுகை போலப்
பரிவாகிப்

பணமுண்டென அவலம்படு நினைவுண்டிடை சோர
இதுகண்டவர் மயல்கொண்டிட மனமுஞ்செயல் மாறப்
பகலுஞ்சில இரவுந்துயில் சிலவஞ்சகர் மாயைத்
துயர்தீராய்

திதிதிந்திமி தனதந்தன டுடுடுண்டுடு பேரி
டகுடங்குகு டிகுடிங்குகு படகந்துடி வீணை
செகணஞ்செக வெனவும்பறை திசையெங்கினு மோதக்
கொடுசூரர்

சிரமுங்கர வுடலும்பரி யிரதங்கரி யாளி
நிணமுங்குடல் தசையுங்கட லெனசெம்புன லோட
சிலசெம்புள்கள் கழுகுஞ்சிறு நரியுங்கொடி யாடப்
பொரும்வேலா

மதவெங்கய முரி கொண்டவர் மழுவுங்கலை பாணி
இடமன்பொடு வளருஞ்சிவை புகழ்சுந்தரி யாதி
வளருந்தழ லொளிர்சம்பவி பரைவிண்டிள தோகை
தரும்சேயே

வதனஞ்சசி யமுதம்பொழி முலைநன்குற மாதொ
டிசையுஞ்சுரர் தருமங்கையொ டிதயங்களி கூர
வருபந்தணை நகர்வந்துறை விமலன்குரு நாதப்
பெருமாளே.

170. இதத்துப்பற் றிகழ்த்துப்பற்
றிருட்பொக்கக் கருத்திட்டத்
தியக்கத்திற் றியக்குற்றுச் சுழலாதே
எலும்புச்சுக் கிலக்கத்தத்
தடித்தொக்குக் கடத்தைப்பெற்
றெடுத்துப்பற் றடுத்தறபத் துழலாதே
சுதத்தத்தச் சதத்தத்தப்
பதத்தர்க்குற் றவற்றைச்சொற்
றுவக்கிற்பட் டவத்தைப்பட் டயராதே
துணைச்செப்பத் தலர்க்கொத்துற்
பலச்செச்சைத் தொடைப்பத்திக்
கடப்பப்பொற் கழற்செப்பித் தொழுவேனோ
கொதித்துக்குத் திரக்கொக்கைச்
சதித்துப்பற் றிகைக்குட்பொற்
குலத்தைக்குத் திரத்தைக்குத் தியவேலா
குறத்தத்தைக் கறத்தத்திக்
குழுத்தத்தத் தமொக்கிக்குக்
குலத்துக்குக் குடக்கொற்றக் கொடியோனே
கதச்சுத்தச் சுதைச்சித்ரக்
களிற்றுக்கொற் றவற்குக்கற்
பகச்சொர்க்கப் புரப்பொற்பைப் புரிவோனே
கடுக்கைக்கட் செவிக்கற்றைச்
சடைப்பக்கக் கொடிக்கற்புக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

171. இதமுறு விரைபுனல் முழுகி அகில்மண
மூதவிய புகையினி லளவி வகைவகை
கொத்தலர்க ளின்தொடையல் வைத்துவளர் கொண்டலெனு
அறலென இசையளி எனநெ ளிருளெனு [லென
நிறமது கருகிநெ டுகிநெ றிவுபட
நெய்த்துமுசு வின்திரிகை ஒத்தசுருள் குந்தளமும்

இலகிய பிறையென எயினர் சிலையென
விலகிய திலதநு தலும திமுகமும்
உற்பலமும் வண்டுவடு விற்கணைய மன்படரு
முனைவாளும்
இடர்படு கவுநடு வனும்வ லடல்பொரு
கடுவது மெனநெடி தடுவ கொடியன
இக்குசிலை கொண்டமதன் மெய்த்தவநி றைந்தவிழி
தளவன முறுவலு மமுத குமுதமும்
விளைநற வினியமொ ழியுமி ளையதென
ஒப்பறுந கங்கள்விரல் துப்பெனவு றைந்துகமு
கிடியொடி படவினை செயும்வின் மதகலை
நெடியக வுடியிசை முரலு சுரிமுக
நத்தணைய கண்டமும்வெண் முத்துவிளை விண்டணைய
எழில்தோளும்
விதரண மனவித னமதை அருள்வன
சததள மரைமுகி ழதனை நிகர்வன
புத்தமிர்து கந்தகுடம் வெற்பெனநி ரம்புவன
இமசல மிர்கமத களப பரிமள
தமனிய ப்ரபைமிகு தருண புளகித
சித்ரவர மங்கலவி சித்ரவிரு துங்ககன
விகலித மிருதுள ம்ருதுள நவமணி
முகபட விகடின தனமு முயர்வட
பத்திரமி ருந்தகடி லொத்தசுழி யுந்தியுள மதியாத
விபரித முடையிடை இளைஞர் களைபட
அபகட மதுபுரி அரவ சுடிகைய
ரத்நபண மென்பவழ குற்றவரை யும்புதிய
நுணியத ளிரெனவு லவிய பரிபுர
அணிநட னபதமு முடைய வடிவினர்
பொற்கலவி யின்பமதி துக்கமென லன்றியவர்
விரகினி லெனதுறு மனம தருகிய
பிரமையு மறவுன தருள்கை வரவுயர்
பத்திவழி யும்பரம முத்திநெறி யுந்தெரிவ
தொருநாளே

தததத தததத தத்த தததத
திதிதிதி திதிதிதி திதிதி திதிதிதி
தத்ததத தந்ததத தித்திதிதி திந்திதிதி
டகுடகு டிகுடிகு டகுகு டிகுடிகு
டிகுடிகு டகுடகு டிகுகு டகுடகு
தத்ததிமி டங்குகுகு தித்திதிமி டிங்குகுகு
தமிதமி தமிதக தமித திமிதக
திமிதிமி செககண திமித திகதிக
தத்திமித தந்திமித தித்திமிதி திந்திமிதி
எனவேதான்

தபலேகு டமுழவு திமிலே படகம
தபுதச விகைதவில் முரசு கரடிகை
மத்தளித வண்டையற வைத்தகுணி துந்துமிகள்
மொகுமொகு மொகுவென அலற விருதுகள்
திகுதிகு திகுவென அலகை குறளிகள்
விக்கிடநி ணம்பருக பக்கியுவ ணங்கழுகு
சதிர்பெற அதிர்தர உததி சுவறிட
எதிர்பொரு நிருதர்கள் குருதி பெருகிட
வப்புவின்மி தந்தெழுப தற்புதக வந்தமெழ
வெகுகோடி

மதகஜ துரகர தமுமு டையபுவி
அதலமு தல்முடிய இடிய நெடியதொர்
மிக்கொலிமு ழங்கவிரு ளக்கணம்வி டிந்துவிட
இரவியு மதியமு நிலைமை பெறவடி
பரவிய அமரர்கள் தலைமை பெறவிய
லத்திறல ணங்குசெய சத்திவிடு கந்ததிரு
வயலியி லடிமைய குடிமை இனலற
மயலொடு மலமற அரிய பெரியதி
ருப்புகழ்வி ளம்புமென்மு னற்புதமெ ழுந்தருள்கு
கவிராவி

மலையுறை குரவந விறைவ வருகலே
பலதெரி விதரண முருக சரவண
உற்பவக்ர வுஞ்சகிரி நிக்ரகவ கண்டமய

நிருபவி மலசுக சொருப பரசிவ
குருபர வெளிமுக டுருவ உயர்தரு
சக்ரகிரி யுங்குலைய விக்ரமக டம்புரியு
மரகத கலபமெ ரிவிடு மயில்மிசை
மருவியெ அருமைய இளமை உருவொடு
சொர்க்கதல மும்புலவர் வர்க்கமும்வி ளங்கவரு
பெருமாளே.

**172.** இத்தரணி மீதிற் பிறவாதே
எத்தரொடு கூடிக் கலவாதே
முத்தமிழை ஓதித் தளராதே
முத்தியடி யேனுக் கருள்வாயே
தத்துவமெய்ஞ் ஞானக் குருநாதா
சத்தசொரு பாபுத் தமுதோனே
நித்தியக்ரு பாகரப் பெருவாழ்வே
நிர்த்தஜக ஜோதிப் பெருமாளே.

**173.** இத்தா ரணிக்குள்மனு வித்தாய் முளைத்தழுது
கேவிக் கிடந்துமடி மீதிற் றவழ்ந்தடிகள்
தத்தா தனத்ததன இட்டே தெருத்தலையில்
ஓடித் திரிந்துநவ கோடிப் ரபந்தகலை
இச்சீர் பயிற்றவய தெட்டோடு மெட்டுவர
வாலக் கணங்கள்பயில் கோலப் பெதும்பையர்கள்
உடனுறவாகி
இக்கார் சரத்துமத னுக்கே இளைத்துவெகு
வாகக் கலம்பவகை பாடிப் புகழ்ந்துபல
திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்தவணை மீதிற் றுயின்றுசுகம்
இட்டா தரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக் கிடந்துமய லாகித் துளைந்துசில
பிணியதுமூடிச்

சத்தான புத்தியது கெட்டே கிடக்கநமன்
ஓடித் தொடர்ந்துகயி றுடிக் கொளும்பொழுது
பெற்றூர்கள் சுற்றியழ உற்றூர்கள் மெத்தவழ
ஊருக் கடங்கவிலர் காலற் கடங்கவுயிர்
தக்கா திவர்க்குமய னிட்டான் விதிப்படியின்
ஓலைப் பழம்படியி னுலிற் றிறந்ததெனு
எடுமெனவோடி

சட்டா நவப்பறைகள் கொட்டா வரிச்சுடலை
ஏகிச் சடம்பெரிது வேகப் புடஞ்சமைய
இட்டே அனற்குளெரி பட்டா ரெனத்தழுவி
நீரிற் படிந்துவிடு பாசத் தகன்றுனது
சற்போ தகப்பதும முற்றே தமிழ்க்கவிதை
பேசிப் பணிந்துருகு நேசத் தையின்றுதர
இனிவரவேணும்

தித்தா திரித்திகுட தத்தா தனத்தகுத
தாதத் தனந்ததன தானத் தனந்ததன
செச்சே செகுச்செகுகு தித்தா திமித்ததிகு
தாதத் தசெந்திகுத தீதத் தசெந்தரிக
தித்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோதக் கணங்கணக கூகுக் கிணங்கிணென
ஒருமயிலேறித்

திட்டே ரதத்தசுரர் பட்டே விழப்பொருது
வேலைத் துளைந்துவரை ஏழைப் பிளந்துவரு
சித்தா பரத்தமரர் கத்தா குறத்திமுலை
மீதிற் புணர்ந்துசுக லீலைக் கதம்பமணி
சுத்தா உமைக்குமொரு முத்தாய் முளைத்தகுரு
நாதக் குழந்தையென வோடிக் கடம்பமலர்
அணிதிருமார்பா

மத்தா மதக்களிறு பிற்று னுதித்தகுக
னேதத் திலங்கையினி லாதிக் கமுண்டதொரு
முட்டா ளரக்கர்தலை இற்றே விழக்கணைக
ளேதொட் டகொண்டலுரு வாகிச் சுமந்ததிக

மட்டார் மலர்க்கமல முற்று சனத்திருவை
மார்பிற் புனைந்தாகு ராமற்கு மன்புடைய மருமகனாகி
வற்று மதுக்கருணை உற்றே மறைக்கலைகள்
ஓதித் தெரிந்துதமிழ் சோதித் தலங்கலணி
அத்தா பரத்தையறி வித்தாவி சுற்றுமொளி
ஆகிப் ரபந்தமணி வேல்தொட் டமைந்தபுய
வர்க்கா மருப்புழுகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடிய ராவிக்குள் நின்றுலவி
வருபெருமாளே.

174. இந்துகதிர்ச் சோருணப் பந்திநடுத் தூணொளிபட்
டின்பரசப் பாலமுதச் சுவைமேவும்
எண்குணமுற் றேருனடனச் சந்த்ரவொளிப் பீடகமுற்
றெந்தைநடித் தாடுமணிச் சபையூடே
கந்தமெழுத் தோடுறுசிற் கெந்தமணப் பூவிதழைக்
கண்டுகளித் தேயமுதக் கடல்மூழ்கிக்
கந்தமதித் தாயிரவெட் டண்டமதைக் கோல்புவனக்
கண்டமதைக் காணவெனக் கருள்வாயே
திந்ததிமித் தீதகுடட் டுண்டுமிடட் டாடுடிட்
டிந்தமெனக் காளமணித் தவிலோசை
சிந்தைதிகைத் தேழுகடற் பொங்கவரிச் சூர்மகுடச்
செண்டுகுலைத தாடுமணிக் கதிர்வேலா
குந்தியரித் தாழ்துளபச் செந்திருவைச் சேர்களபக்
கொண்டல்நிறத் தோன்மகளைத் தரைமீதே
கும்பிடுகைத் தாளமெடுத் தம்பொனுருப் பாவைபுகழ்க்
கும்பகோணத் தாறுமுகப் பெருமாளே.

175. இபமாந்தர் சக்ரபதிசெறி
படையாண்டு சக்ரவரிசைக
ளிடவாழ்ந்து திக்குவிஜயமண் ணரசாகி
இறுமாந்து வட்டவணைமிசை
விரிசார்ந்து வெற்றிமலர்தொடை
எழிலார்ந்த பட்டிவகைபரி மளமேலங்

தபனுங்க ரத்கவணிகல
னிவைசேர்ந்த விச்சுவடிவது
தமர்சூழ்ந்து மிக்கவுயிர்நழு வியபோது

தழல்தாங்கொ ளுத்தியிடவொரு
பிடிசாம்பல் பட்டதறிகிலர்
தனவாஞ்சை மிக்குனடிதொழ நினையாரே

உபசாந்த சித்தகுருகுல
பவபாண்ட வர்க்குவரதன்மை
யுருவோன்ப்ர சித்தநெடியவன் ரிஷிகேசன்

உலகீன்ற பச்சையுமையணன்
வடவேங்க டத்திலுறைபவ
னுயர்சார்ங்க சக்ரகரதலன் மருகோனே

த்ரிபுராந்த கற்குவரசுத
அதிகாந்தன் மைத்துனமுருக
திறல்பூண்ட சுப்ரமணியசண் முகவேலா

திரைபாய்ந்த பத்மதடவய
லியில்வேந்த முத்தியருள்தரு
திருவாஞ்சி யத்திலமரர்கள் பெருமாளே.

176. இமகிரி மத்திற் புயங்க வெம்பணி
கயிறது சுற்றித் தரங்க வொண்கட
லிமையவர் பற்றிக் கடைந்த அன்றெழு நஞ்சுபோலே

இருகுழை தத்திப் புரண்டு வந்தொரு
குமிழையு மெற்றிக் கரும்பெ னுஞ்சிலை
ரதிபதி வெற்றிச் சரங்க ளஞ்சையும் விஞ்சிநீடு

சமரமி குத்துப் பரந்த செங்கயல்
விழியினில் மெத்தத் ததும்பி விஞ்சிய
தமனிய வெற்புக் கிசைந்த வம்பணி கொங்கைமீதே

தனிமனம் வைத்துத் தளர்ந்து வண்டமர்
குழலியர் பொய்க்குட் கலங்க லின்றியெ
சததளம் வைத்துச் சிவந்த நின்கழல் தந்திடாயோ

அமரர்து திக்கப் புரந்த ரன்தொழ
எழுபது வர்க்கக் குரங்கு கொண்டெறி
அலையைய டைத்துக் கடந்து சென்றெதிர் முந்துபோரில்
அசுரர்மு தற்கொற் றவன்பெ ருந்திற
லிருபது கொற்றப் புயங்கள் சிந்திட
அழகிய கொத்துச் சிரங்க ளொன்பதும் ஒன்றுமாளக்
கமலம லர்க்கைச் சரந்து ரந்தவர்
மருமக மட்டுக் கடுகொன்றை யந்தொடை
கறையற வொப்பற் றதும்பை யம்புலி கங்கைசூடுங்
கடவுளர் பக்கத் தணங்கு தந்தருள்
குமரகு றத்தத் தைபின்தி ரிந்தவள்
கடினத னத்திற் கலந்தி லங்கிய தம்பிரானே.

177. இமராஜனி லாவி லெரிக்குங் கனலாலே
இளவாடையு மீறி யொறுக்கும் படியாலே
சமராடிய மார னெடுக்குங் கணையாலே
தனிமானுயிர் சோரு மதற்கொன் றருள்வாயே
குமராமுரு காச டிலத்தன் குருநாதா
குறமாமக ளாசை தணிக்குந் திருமார்பா
அமராவதி வாழ்வ மரர்க்கன் றருள்வோனே
அருணபுரி வீதி யினிற்கும் பெருமாளே.

178. இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை அனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

179. இரக்குமவர்க் கிரக்கமிகுத்
தளிப்பனசொப் பனத்திலுமற்
றெனக்கியலுக் கிசைக்கெதிர்ப் புலவோரென்

றெடுத்துமுடித் தடக்கைமுடித்
 திரட்டையுடுத் திலச்சினையிட்
 டடைப்பையிடப் ரபுத்துவமுற் றியல்மாதர்
குரக்குமுகத் தினைக்குழலைப்
 பனிப்பிறையொப் பெனப்புயலொப்
 பெனக்குறுகிக் கலைக்குள்மறைத் திடுமானின்
குளப்படியிற் சளப்படுமிப்
 பவக்கடலைக் கடக்கவினிக்
 குறித்திருபொற் கழற்புணையைத் தருவாயே
அரக்கரடற் கடக்க அமர்க்
 களத்தடையப் புடைத்துலகுக்
 கலக்கணறக் குலக்கிரிபொட் டெழுவாரி
அனைத்தும்வறப் புறச்சுரர்கற்
 பகப்புரியிற் புகக்கமலத்
 தனைச்சிறையிட் டிடைக்கழியிற் பயில்வோனே
கரக்கரடக் களிற்றுமருப்
 புலக்கையினிற் கொழித்தமணிக்
 கழைத்தரளத் தினைத்தினையிற் குறுவாளைக்
கணிக்குறவக் குறிச்சியினிற்
 சிலைக்குறவர்க் கிலச்சைவரக்
 கயத்தொடுகைப் பிடித்தமணப் பெருமாளே.

௩80. இரசபா கொத்தமொழி யமுர்தமா ணிக்கநகை
 இணையிலா சத்திவிழி யார்பசும்பொனிறர்
 எழிலிநே ரொத்தவிரு ளளகபா ரச்செயல்க
 ளெழுதொணா தப்பிறையி னாரும்புருவர்
 எழுதுதோ டிட்டசெவி பவளநீ லக்கொடிக
 ளிகலியா டப்படிக மோடடும்பொனுரு திங்கள்மேவும்
 இலவுதா வித்தவிதழ் குமிழைநே ரொத்தவெழி
 லிலகுநா சிக்கமுகு மாலசங்கினொளி
 இணைசொல்கீ வத்தரள வினவொள்தா லப்பனையி
 னியல்கலா புத்தகமொ டேர்சிறந்தவடி
 இணையிலா னைக்குவடெ னொளிநிலா துத்திபட
 ரிகலியா ரத்தொடையு மாருமின்பரச தங்கமார்பின்

வரிகள்தா பித்தமுலை யிசையவா விற்றளிரின்
வயிறுநா பிக்கமல மாமெனுஞ்சுழிய
மடுவுரோ மக்கொடியென் அளிகள்சூழ் வுற்றநிரை
மருவுறு லொத்தவிடை யாரசம் பையல்குல்
மணமெலா முற்றநறை கமலபோ துத்தொடையென்
வளமையார் புக்கதலி சேருசெம்பொனுடை ரம்பைமாதர்
மயலதா விற்றடியெ னவர்கள்பா லுற்றவெகு
மதனபா ணத்தினுடன் மேவிமஞ்சமிசை
வதனம்வேர் வுற்றவிர முலைகள்பூ ரிக்கமிடர்
மயில்புறு தத்தைகுயில் போலிலங்கமளி
வசனவாய் பொத்தியிடை துவளமோ கத்துளமிழ்
வசமெலாம் விட்டுமற வேறுசிந்தனையைத் தந்துஆள்வாய்

முரசுபே ரித்திமிலை துடிகள்பூ ரித்தவில்கள்
முருடுகா ளப்பறைகள் தாரைகொம்புவளை
முகடுபேர் வுற்றவொலி யிடிகள்போ லொத்தமறை
முதுவர்பா டிக்குமுற வேயிறந்தசுரர்
முடிகளோ டற்றியரி யிரதமா னைப்பிணமொ
டிவுளிவே லைக்குருதி நீர்மிதந்துதிசை எங்குமோட
முடுகிவேல் விட்டுவட குவடுவாய் விட்டமரர்
முனிவரா டிப்புகழ வேதவிஞ்சையர்கள்
முழவுவீ ணைக்கினரி யமிர்தகீ தத்தொனிகள்
முறையதா கப்பறைய வோதிரம்பையர்கள்
முலைகள்பா ரிக்கவுட னடனமா டிற்றுவர
முடிபதா கைப்பொலிய வேநடங்குலவு கந்தவேளே

அரசுமா கற்பகமொ டகில்பலா இர்ப்பைமகி
ழழகுவே யத்திகமு கோடாம்பையுடன்
அளவிமே கத்திலொளிர் வனமொடா டக்குயில்க
ளளிகள்தோ கைக்கிளிகள் கோவெனம்பெரிய
அமிர்தவா விக்கழனி வயலில்வா ளைக்கயல்க
ளடையுமே ரக்கனக நாடெனும்புலியூர் சந்தவேலா
அழகுமோ கக்குமரி விபுதையே னற்புனவி
யளிகுலா வுற்றகுழல் சேர்கடம்புதொடை

அரசிவே தச்சொருபி கமலபா தக்கரவி
அரியவே டச்சிறுமி யாளணைந்தபுகழ்
அருணரூ பப்பதமொ டிவுளிதோ கைச்செயல்கொ
டணைதெய்வானைத்தனமுமேமகிழ்ந்து புணர்தம்பிரானே.

181. இரதசுர தமுலை களுமார்புகுத்த நுதல்வேர்வரும்ப
அமுதநிலையில்விர லுகிரேகைதைக்க மணிபோல்விளங்க
இசலிபிசலியுப ரிதலீலையுற்று இடைநூல்நுடங்க
உளமகிழ்ச் சியினோடே

இருவருடலுமொரு உருவாய்நயக்க முகமேலழுந்த
அளகமவிழவளை களுமேகலிக்க நயனாரவிந்த
லகரிபெருகவத ரமுமேயருத்தி முறையேயருந்த
உரையெழப் பரிவாலே

புருவநிமிரவிரு கணவாளிமைக்க உபசாரமிஞ்ச
அவசகவசமள வியலேதரிக்க அதிலேயனந்த
புதுமைவிளையவது பரமாபரிக்க இணைதோளுமொன்றி
அதிசுகக் கலையாலே

புளகமுதிரவிர கமென்வாரிதத்த வரைநாண்மழுங்க
மனமுமனமுமுரு கியெயாதரிக்க உயிர்போலுகந்து
பொருளதளவுமரு வுறுமாயவித்தை விலைமாதர்சிங்கி
விடவருட் புரிவாயே

பரவுமகரமுக ரமுமேவலுற்ற சகரால்விளைந்த
தமரதிமிரபிர பலமோகரத்ந சலராசிகொண்ட
படியைமுழுதுமொரு நொடியேமதித்து வலமாகவந்து
சிவனிடத் தமர்சேயே

பழநிமிசையிலிசை இசையேரகத்தில் திருவாவினன்கு
டியினில்பிரமபுர மதில்வாழ்திருத்த ணிகையூடுமெண்டர்
பதியமுதியகதி அதுநாயெனக்கு முறவாகிநின்று
கவிதையைப் புனைவோனே

அரியுமயனுமம ருமாயசிட்ட பரிபாலனன்ப
ரடையுமிடரைமுடு கியெநூறதுட்ட கொலைகாரரென்ற
அசுரர்படையையடை யவும்வேறுத்த அபிராமசெந்தில்
உரகவெற் புடையோனே

அருணகிரணகரு ணையபூரணச்ச ரணமேலெழுந்த
இரணகரணமுரா ணுறுசூரனுட்க மயிலேறுகந்த
அருணையிறையவர்பெ ரியகோபுரத்தில் வடபாலமர்ந்த
அறுமுகப் பெருமாளே.

182. இரத மான தேனூறல் மதுர மான மாகாதல்
எதிரி லாத பூணார முலைமீதே
இனிது போடு மேகாச உடையி னாலு மாலால
விழியி னாலு மாலாகி அநுராக
விரக மாகி யேபாய விடைவி டாமல் நாடோறு
ம்ருகம தாதி தோளாசை தனில்மூழ்கி
விளையு மோக மாமாயை யதனின் மேவி யான்மாயும்
வினைக ளோட சீர்பாதம் அருள்வாயே
அரக ராவெ னாமூடர் திருவெணீறி டாமூடர்
அடிகள்பூசி யாமூடர் கழுவேற
அறிவுநூல்க லாமூடர் நெறியி லேகி லாமூடர்
அனமி டாத மாமூடர் நரகேழில்
புரள வீசு மீராறு கரவி நோத சேய்சோதி
புனிதபூர ணாகார முருகோனே
*புயலுலாவு சேணாடு பாவிநாளு மீடேறு
புகலிமேவி வாழ்தேவர் பெருமாளே.

183. இரத மான வாயூறல் பருகி டாவி டாய்போக
இனிய போக வாராழி அதில்மூழ்கி
இதயம் வேறு போகாம லுருகி யேக மாய்நாளு
மினிய மாதர் தோள்கூடி விளையாடும்
சரச மோக மாவேத சரியை யோக்ரி யாஞான
சமுக மோத ராபூத முதலான
சகள மோச டாதார முருள மோகி ராதார
தரணி யோகி ராகார வடிவேயோ

*புயலளாவு மோர்சோலை மலையின்மீது சீர்மேவு புலவரோத வாழ்தேவர் பெருமாளே.

பரத நீல மாயூர வரத நாக கேயூர
பரம யோகி மாதேசி மிகுஞான
பரமர் தேசி காவேட பதிவ்ரு தாசு சீபாத
பதும சேக ராவேலை மறவாத
கரத லாவி சாகாச கலக லாத ராபோத
கமுக மூஷி காரூட மததாரைக்
கடவுள் தாதை சூழ்போதி லுலக மேழு சூழ்போது
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

184. இரத்த முஞ்சியு மூளை யெலும்புட்
டசைப்ப சுங்குடல் நாடிபு னைந்திட்
டிறுக்கு மண்சல வீடுபு குந்திட் டதில்மேவி
இதத்து டன்புகல் சூதுமி குந்திட்
டகைத்தி டும்பொரு ளாசையெ னும்புட்
டெருட்ட வுந்தெளி யாதுப றந்திட் டிடமாயா
பிரத்தம் வந்தடு வாதசு ரம்பித்
துளைப்பு டன்பல வாயுவு மிஞ்சிப்
பெலத்தை யுஞ்சில நாளுமொ டுங்கித் தடிமேலாய்ப்
பிடித்தி டும்பல நாள்கொடு மந்திக்
குலத்தெ னும்படி கூனிய டங்கிப்
பிசக்கு வந்திடு போதுபி னஞ்சிச் சடமாமோ
தரித்த னந்தன தானன தந்தத்
திமித்தி மிந்திமி தீதக திந்தத்
தடுட்டு டுண்டுடு டூடுடி மிண்டிட் டியல்தாளம்
தனத்த குந்தகு தானன தந்தக்
கொதித்து வந்திடு சூருடல் சிந்தச்
சலத்து டன்கிரி தூள்பட றிந்திட் டிடும்வேலா
சிரத்து டன்கர மேடுபொ ழிந்திட்
டிரைத்து வந்தம ரோர்கள் படிந்துச்
சிரத்தி னுங்கமழ் மாலைம ணம்பொற் சரணோனே
செகத்தி னின்குரு வாகிய தந்தைக்
களித்தி டுங்குரு ஞானப்ர சங்கத்
திருப்பெ ருந்துறை மேவிய கந்தப் பெருமாளே.

185. இரவியு மதியுந் தெரிவுற எழுமம்
புவிதனி லினமொன் றிடுமாதும்
எழில்புதல் வருநின் றழுதுள முருகும்
இடர்கொடு நடலம் பலகூறக்
கருகிய உருவங் கொடுகனல் விழிகொண்
டுயிரினை நமனுங் கருதாமுன்
கலைகொடு பலதுன் பமுமக லிடநின்
கழலிணை கருதும் படிபாராய்
திருமரு வியதிண் புயனயன் விரியெண்
டிசைகிடு கிடவந் திடுசூரன்
திணிபுய மதுசிந் திடவலை கடலஞ்
சிடவலி யொடுகன் றிடும்வேலா
அருமறை யவரந் தரமுறை பவரன்
புடையவ ருயவன் றறமேவும்
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையி லுறையும் பெருமாளே.

186. இரவியென வடவையென ஆலால விடமதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதிகணைகளொருநாலேலவிருதுகுயிலதுகூவ
எழுகடலின் முரசினிசை வேயோசைவிடையின்மணி
இசைகுறுகி இருசெவியி னூராச முறுவதென
இகல்புரிய மதனகுரு வோராத அனையர்கொடு வசைபேச
அரஹரென வனிதைபடு பாடோத அரிதரிது
அமுதமயி லதுகருதி யாரோடு மிகல்புரிவள்
அவசமுற அவசமுற ஆரோமல் தரவுமிக மெலிவாளுள்
அகுதியிவள் தலையில்விதி யானாலும் விலகரிது
அடிமைகொள உனதுபர மாமுத ஒருதனிமை
அவளையணை தரஇனிதி னேகார பரியின்மிசை
வருவாயே
நிரைபரவி வரவரையு ளோர்சீத மருதினொடு
பொருசகடு உதையதுசெய் தாமாய மழைசொரிதல்
நிலைகுலைய மலைகுடைய தாவேகொள் காகமலன்
மருகோனே

நிருமலிய திரிநயனி வாள்வீச வருகுமரி
கவுரிபயி ரவியரவ பூஷணி திரிபுவனி
நிபுடமலே அரசனருள் வாழ்வான புரணவுமை
அருள்பாலா
பரவைகிரி அசுரர்திரள் மாசேனே தவிடுபொடி
படவமரர் துயரகல மேலேவி அமர்பொருத
பதுமகர தலமுருக நால்வேத காரணிக மயில்வீரா
பனிதம்ருக மதகளப சேருர வளருமுலே
வனிதைகுற மகள்மகிழும் லீலாவி தரமதுர
பனுவல்தரு பழநிவரு கோலாக லாவமரர் பெருமாளே.

187. இரவினிடை வேள்தொ டுத்துடன்று
முறுகுமலர் வாளி யைப்பிணங்கி
இருகுழையு மோதி அப்படங்கு கடலோடே
எதிர்பொருது மானி னேத்துரந்து
சலதிகிழி வேல்த னைப்பொருந்தி
இனியமுத ஆல முற்றகண்கள் வலேயாலே
முரணிளேஞ ராவி யைத்தொடர்ந்து
விசிறிவனே மாத ரைக்கலந்து
மொழியதர கோவை இக்கருந்தி அமுதாகு
முகிழ்முகுளி தார வெற்பனேந்து
சுழிமிதுன வாவி யிற்புகுந்து
முழுகியழி யாம னற்பதங்கள் தரவேணும்
திரையுலவு சாக ரத்திலங்கை
நகரிலுறை ராவ ணற்கியைந்த
தெசமுடியு மீரு பத்தொழுங்கு திணிதோளும்
சிதையவொரு வாளி யைத்துரந்த
அரிமருக தீத றக்கடந்து
தெளிமருவு காரணத்தமர்ந்த முருகோனே
அரணமதிள் சூழ்பு ரத்திருந்து
கருதுமொரு மூவ ருக்கிரங்கி
அருளுமொரு நாய கற்பணிந்த குருநாதா

அகல்முடிவை ஆதி யைத்தெளிந்து
இரவுபக லாக நெக்கவிழ்ந்த
அடியவர்கள் பாட லுக்கிசைந்த பெருமாளே.

188. இரவுபகற் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத் துவஞான
அரனருள்சற் புதல்வோனே அருணகிரிப் பெருமாளே.

189. இரவொ டும்பக லேமா றாதே
அறுதி னந்துய ரோயா தேயே
எரியு முந்திபி னாலே மாலே பெரிதாகி
இரைகொ ளும்படி ஊடே பாடே
மிகுதி கொண்டொழி யாதே வாதே
இடைக ளின்சில நாளே போயே வயதாகி
நரைக ளும்பெரி தாயே போயே
கிழவ னென்றொரு பேரே சார்வே
நடைக ளும்பல தாறே மாறே விழலாகி
நயனமுந்தெரி யாதே போனால்
விடிவ தென்றடி யேனே தானே
நடன குஞ்சித வீடே கூடா தழிவேனோ
திருந டம்புரி தாளீ தூளீ
மகர குண்டலி மாரீ சூரீ
திரிபு ரந்தழ லேவீ சார்வீ அபிராமி
சிவனி டந்தரி நீலீ சூலீ
கவுரி பஞ்சவி யாயீ மாயீ
சிவைபெ ணம்பிகை வாலா சீலா அருள்பாலா
அரவ கிண்கிணி வீரா தீரா
கிரிபு ரந்தொளிர் நாதா பாதா
அழகி ளங்குற மானார் தேனார் மணவாளா
அரிய ரன்பிர மாவோ டேழு
வகைய ரிந்திர கோமா னீள்வா
னமரர் கந்தரு வானோ ரேனோர் பெருமாளே.

190. இராவினிருள் போலும் பராவுகுழ லாலும்
இராமசர மாகும் விழியாலும்
இராகமொழி யாலும் பொருதமுலை யாலும்
இராதஇடை யாலும் இளைஞோர்நெஞ்
சராவியிரு போதும் பராவிவிழ வேவந்
தடாதவிலை கூறும் மடவார்கண்
படாமலடி யேனும் சுவாமியடி தேடும்
அநாதிமொழி ஞானந் தருவாயே
குராவினிழல் மேவுங் குமாரனென நாளும்
குலாவியினி தோதன் பினர்வாழ்வே
குலையிடு சூரன் பலமுடிக டோறுங்
குடாவியிட வேலங் கெறிவோனே
துராலுமிகு தீமுன் பிராதவகை போலும்
தொடாமல்வினை ஓடும் படியாள்வாய்
சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே.

191. இருகனக மாமேரு வோகளப துங்க
கடகடின பாடீர வாரமுத கும்ப
மிணைசொலிள நீரோக ராசலவி ரண்டு குவடேயோ
இலகுமல ரேவாளி யாகியஅ னங்கன்
அணிமகுட மோதானெ னுமிகவ ளர்ந்த
இளமுலைமி னார்மோக மாயையில்வி ழுந்து
தணியாமல்
பெருகியொரு காசேகொ டாதவரை யைந்து
தருவைநிக ரேயாக வேயெதிர்பு கழ்ந்து
பெரியதமி ழேபாடி நாடொறுமி ரந்து நிலைகாணுப்
பிணியினக மேயான பாழுடலை நம்பி
உயிரையவ மாய்நாடி யேபவ நிரம்பு
பிறவிதனி லேபோக மீளவு முழன்று திரிவேனோ
கருணையுமை மாதேவி காரணிய நந்த
சயனகளி கூமாரி சோதரி புரந்த
கடவுளுடன் வாதாடு காளிமலை மங்கை அருள்பாலா

கருடனுடன் வீறுன கேதனம்வி ளங்கு
மதிலினொடு மாமாட மேடைகள்து லங்கு
கவிசைவரு காவேரி சேவகனொ டன்பு புரிவோனே
பாவையிடை யேபாத காசுரர்வி ழுந்து
கதறியிட வேபாக சாதனனு நெஞ்சு
பலிதமென வேயேக வேமயிலில் வந்த குமரேசா
பலமலர்க ளேதூவி ஆரணநவின் று
பாவியிமை யோர்சூழ நாடொறுமி சைந்து
பழநிமலை மீதோர்ப ராபரனி றைஞ்சு பெருமாளே.

192. இருகுழை மீது தாவடி இடுவன ஓதி நீழலி
ணிடமது தாவி மீள்வன நுதல்தாவி
இழிவன காம வேதமு மொழிவன தாரை வேலென
எறிவன காள கூடமும் அமுதாகக்
கருகிய நீல லோசன அபிநய மாத ரார்தரு
கலவியில் மூழ்கி வாடிய தமியேனும்
கதிபெற ஈட ருதன பதிபசு பாச மானவை
கசடற வேறு வேறுசெய் தருள்வாயே
ஒருபது பார மோலியு மிருபது வாகு மேருவு
முததியில் வீழ வானரம் உடனேசென்
றொருகணை ஏவு ராகவன் மருகவி பூதி பூஷணர்
உணருப தேச தேசிக வரையேனற்
பாவிய கான வேடுவர் தருமபி ராம நாயகி
பரிபுர பாத சேகர சுராராஜன்
பதிகுடி ஏற வேல்தொடு முருகம யூர வாகன
பரவச ஞான யோகிகள் பெருமாளே.

193. இருகுழை மீதோடி மீளவும்
கயல்களு மாலால காலமும்
ரதிபதி கோலாடு பூசலு மெனவேநின்
றிலகிய கூர்வேல் விலோசன
ம்ருகமத பாடீர பூஷித
இளமுலை மாமாத ரார்வச முருகாதே

முருகவிழ் கூதாள மாலிகை
தழுவிய சீர்பாத தூளியின்
முழுகிவி டாய்போம னோலயம் வரவோது
முழுமதி மாயாவி காரமு
மொழிவது வாசாம கோசர
முகுளித ஞானோப தேசமு மருள்வேணும்
அருமறை நூலோதும் வேதிய
னிரணிய ரூபாந மோவென
அரிகரி நாராய ணாவென ஒருபாலன்
அவனெவ னாதார மேதென
இதனுள னோவோது நீயென
அகிலமும் வாழ்வான நாயக னெனவேகி
ஒருகணை தூணோடு மோதிட
விசைகொடு தோள்போறு வாளரி
யுகிர்கொடு வாரா நிசாசர னுடல்பீறு
முலகொரு தாளான மாமனு
முமையொரு கூறன தாதையு
முறைதரு தேவாசு ராதிபர் பெருமாளே.

**194.** இருகுழை யிடறிக் காது மோதுவ
பரிமள நளினத் தோடு சீறுவ
இணையறு வினையைத் தாவி மீளுவ அதிசூர
எமபடர் படைகெட் டோட நாடுவ
அமுதுடன் விடமொத் தாளை யீருவ
ரதிபதி கலைதப் பாது சூழுவ முனிவோரும்
உருகிட விரகிற் பார்வை மேவுவ
பொருளது திருடற் காசை கூருவ
யுகமுடி விதெனப் பூச லாடுவ வடிவேல்போல்
உயிர்வதை நயனக் காதல் மாதர்கள்
மயல்தரு கமரிற் போய்வி ழாவகை
உனதடி நிழலிற் சேர வாழ்வதும் ஒருநாளே

முருகவிழ் தொடையைச் சூடி நாடிய
மாகத கிரணப் பீலி மாமயில்
மூதார்வி கிரணச் சோதி போல்வய லியில்வாழ்வே
முரண்முடி யிரணச் சூலி மாலினி
சரணெனு மவர்பற் றுன சாதகி
மூடுகிய கடினத் தாளி வாகினி மதுபானம்
பருகினர் பரமப் போக மோகினி
அரகர வெனும்வித் தாரி யாமளி
பரிபுர சரணக் காளி கூளிகள் நடமாடும்
பறையறை சுடலைக் கோயில் நாயகி
இறையொடு மிடமிட் டாடு காரணி
பயிரவி யருள்பட் டாலி யூர்வரு பெருமாளே.

195. இருகுழையெ றிந்த கெண்டைகள்
ஒருகுமிழ டர்ந்து வந்திட
இணைசிலைநெ ரிந்தெ ழுந்திட அணைமீதே
இருளளக பந்தி வஞ்சியி
லிருகலையு டன்கு லைந்திட
இதழமுத ருந்து சிங்கியின் மனமாய
முருகொடுக லந்த சந்தன
அளறுபடு குங்கு மங்கமழ்
முலைமுகடு கொண்டெ ழுந்தொரு முருகார
முழுமதிபு ரிந்த சிந்துர
அரிவையரு டன்க லந்திடு
முகடியுந லம்பி றந்திட அருள்வாயே
எரிவிடநி மிர்ந்த குஞ்சியி
னிலவொடுமெ ழுந்த கங்கையு
மிதழியொட ணிந்த சங்கரர் களிகூரும்
இமவரைத ருங்க ருங்குயில்
மரகதநி றந்த ருங்கிளி
எனதுயிரெ னுந்த்ரி யம்பகி பெருவாழ்வே
அடைவடம லம்பு கிண்கிணி
பரிபுரநெ ருங்கு தண்டைகள்
அணிமணிச தங்கை கொஞ்சிட மயில்மேலே

அகமகிழ்வு கொண்டு சந்ததம்
வருகுமர மூன்றி லின்புறம்
அலைபொருத செந்தில் தங்கிய பெருமாளே.

196. இருசெப் பெனவெற் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடுமாதர்
இடையைச் சுமையைப் பெறுதற் குறவுற்
றிறுகக் குறுகிக் குழல்சோரத்
தருமெய்ச் சுவையுற் றிதழைப் பருகித்
தழுவிக் கடிசுற் றணைமீதே
சருவிச் சருவிக் குனகித் தனகித்
தவமற் றுழலக் கடவேனோ
அரிபுத் திரசித் தசனுக் கருமைக்
குரிமைத் திருமைத் துனவேளே
அடல்குக் குடநற் கொடிபெற் றெதிருற்
றசுரக் கிளையைப் பொருவோனே
பரிவுற் றரனுக் கருணற் பொருளைப்
பயனுற் றறியப் பகர்வோனே
*பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே.

197. இருட்குழலைக் குலைத்துமுடித்
தெழிற்கலையைத் திருத்தியுடுத்
திணைக்கயலைப் புரட்டிவிழித் ததிபார
இழைக்களபப் பொருப்பணிகச்
செடுத்துமறைத் தழைத்துவளைத்
திருத்தியகப் படுத்திநகைத் துறவாடிப்
பொருட்குமிகத் துதித்திளகிப்
புலப்படுசித் திரக்கரணப்
புணர்ச்சிவிளைத் துருக்குபரத் தையர்மோகப்

*பழநித் தனின்முத் திழிரெட் டிகுடிப் பதியிற் குமரப் பெரு மாளே.

புழுத்தொளையிற் றிளைத்ததனைப்
பொறுத்தருளிச் சடக்கெனஅப்
புறத்திலழைத் திருத்தியளித் திடுவாயே
உருத்திரரைப் பழித்துலகுக்
குகக்கடையப் பெனக்ககனத்
துடித்தகரப் படுத்துகிரித் தலமேழும்
உடுத்தபொலப் பொருப்புவெடித்
தொலிப்பமருத் திளைப்பநெருப்
பொளிக்கஇருப் பிடத்தைவிடச் சுரரோடித்
திரைக்கடலுட் படச்சுழலச்
செகத்ரயமிப் படிக்கலையச்
சிரித்தெதிர்கொக் கரித்துமலைத் திடுபாவி
செருக்கழியத் தெழித்துதிரத்
திரைக்கடலிற் சுழித்தலையிற்
றிளைத்தஅயிற் கரக்குமரப் பெருமாளே.

198. இருநோய்ம லத்தைசிவ ஒளியால்மி ரட்டியெனை
இனிதாவ ழைத்தெனது முடிமேலே
இணைதாள ளித்துனது மயில்மேலி ருத்தியொளி
ரியல்வேலளித்துமகிழ் இருவோரும்
ஒருவாகெ னக்கயிலை இறையோன ளித்தருளு
மொளிர்வேத கற்பகநல் இளையோனே
ஒளிர்மாம றைத்தொகுதி சுரர்பார்து தித்தருள
உபதேசி கப்பதமும் அருள்வாயே
கருநோய றுத்தெனது மிடிதூள்ப டுத்திவிடு
கரிமாமு கக்கடவுள் அடியார்கள்
கருதாவ கைக்குவர மருள்ஞான தொப்பைமகிழ்
கருணாக டப்பமலர் அணிவோனே
திருமால ளித்தருளு மொருஞான பத்தினியை
திகழ்மார்பு றத்தழுவு மயில்வேலா
சிலைதூளெ ழுப்பிகவ டவுணோரை வெட்டிசுரர்
சிறைமீள விட்டபுகழ் பெருமாளே.

199. இருந்த வீடுங் கொஞ்சிய சிறுவரும் உறுகேளும்
இசைந்த வூரும் பெண்டிரு மிளமையும் வளமேவும்
விரிந்த நாடுங் குன்றமு நிலையென மகிழாதே
விளங்கு தீபங் கொண்டுனை வழிபட அருள்வாயே
குருந்தி லேறுங் கொண்டலின் மருகபொன் வயலூரா
குராங்கு லாவுங் குன்றுறை குறமகள் மணவாளா
திருந்த வேதந் தண்டமிழ் தெரிதரு புலவோனே
சிவந்த காலுந் தண்டையு மழகிய பெருமாளே.

200. இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை அறுத்திடும் எனவோதும்
இயற்றமிழ் இசைத்தமிழ் நடத்தமி ழெழுத்தொடும்
இலக்கண மிலக்கிய கவிநாலும்
தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் உனைச்சக
தலத்தினில் நவிற்றுதல் அறியாதே
தனத்தினில் முகத்தினில் மனத்தினி லுருக்கிடு
சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ
கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்தியல்
களிப்புட னொளித்தெய்த மதவேளைக்
கருத்தினில் நினைத்தவ னெருப்பெழ நுதற்படு
கனற்கணி லெரித்தவர் கயிலாயப்
பொருப்பினி லிருப்பவர் பருப்பத உமைக்கொரு
புறத்தினை அளித்தவர் தருசேயே
புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி
பொருப்பினில் விருப்புறு பெருமாளே.

201. இருமலு ரோக முயலகன் வாதம்
எரிகுண நாசி விடமேநீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
எழுகள மாலை இவையோடே
பெருவயி றீளை எரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்
பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்தந் தருள்வாயே

வருமொரு கோடி அசுரர்ப தாதி
மடியஅ நேக இசைபாடி
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே
தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூமி நடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.

202\. இருமுலை மலையென ஒப்பிட் டேயவர்
இருவிழி யதனில கப்பட் டேமன
மிசைபட வசனமு ரைத்திட் டேபல மினிதோடே
இடையது துவளகு லுக்கிக் காலணி
பரிபுர வொலிகள் தொனிக்கப் பூதர
இளமுலை குழைய அணைத்துக் கேயுர மணியோடே
மரகத பவள மழுத்திப் பூஷண
மணிபல சிதறி நெறித்துத் தானுக
மருமலர் புனுகு தரித்துப் பூவணை மதராஜன்
மருவிய கலவி தனக்கொப் பாமென
மகிழ்வொடு ரசிது மிகுத்துக் கோதையை
மருவியு முருகி களைத்துப் பூமியி லுழல்வேனோ
திரிபுர மெரிய நகைத்துக் காலனை
யுதைபட மதனை யழித்துச் சாகர
திரைவரு கடுவை மிடற்றிற் றுனணி சிவனார்தந்
திருவருள் முருக பெருத்துப் பாரினில்
சியொதனன் மடிய மிகுத்துப் பாரத
செயமுறு மரிதன் மனத்துக் காகிய மருகோனே
நரிகழு வதுகள் களிக்கச் சோரிகள்
ரணகள முழுதுமி குத்துக் கூளிகள்
நடமிட அசுரர் குலத்துக் காலனை நிகராகி
நனிகடல் கதற பொருப்புத் தூளெழ
நணுகிய இமையவ ருக்குச் சீருற
நணுகலர் மடியதொ லைத்துப் பேர்பெறு பெருமாளே.

203. இருவர் மயலோ அமளி விதமோ
எனென செயலோ அணுகாத
இருடி அயன்மா லமர ரடியா
ரிசையு மொலிதான் அவைகேளா
தொருவ னடியே னலறு மொழிதா
னொருவர் பரிவாய் மொழிவாரோ
உனது பததூள் புவன கிரிதா
னுனது கிருபா கரமேதோ
பரமகுருவா யணுவி லசைவாய்
பவன முதலா கியபூதப்
படையு முடையாய் சகள வடிவாய்
பழைய வடிவா கியவேலா
அரியு மயனோ டபய மெனவே
அயிலை அலைமேல் விடுவோனே
அடுமை கொடுநோய் பொடிகள் படவே
அருண கிரிவாழ் பெருமாளே.

204. இருவினை ஊஞ்ப சும்பை கருவிளை கூன்கு டம்பை
இடரடை பாழ்ம்பொ தும்ப கிதவாரி
இடைதிரி சோங்கு கந்த மதுவது தேங்கு கும்ப
மிரவிடை தூங்கு கின்ற பிணநோவுக்
குருவியல் பாண்ட மஞ்சு மருவிய கூண்டு நெஞ்சொ
டுயிர்குடி போங்கு ரம்பை அழியாதென்
றுலகுட னேன்று கொண்ட கருமபி ராக்தொ ழிந்து
னுபயப தாம்பு யங்கள் அடைவேனோ
அருணையி லோங்கு துங்க சிகரக ராம்பு யங்கள்
அமரர்கு ழாங்கு விந்து தொழவாழும்
அடியவர் பாங்க பண்டு புகலகி லாண்ட முண்ட
அபிநவ சார்ங்க கண்டன் மருகோனே
கருணைம்ரு கேந்த்ர அன்ப ருடனுர கேந்த்ரர் கண்ட
கடவுள்ந டேந்த்ரர் மைந்த வரைசாடும்
கலபக கேந்த்ர தந்த்ர அரசநி சேந்த்ர கந்த
காகுலி சேந்த்ரர் தங்கள் பெருமாளே.

**205.** இருவினைக ளீட்டு மிழவுபடு கூட்டை
எடுமெடென வீட்டில் அனைவோரும்
இறுதியிடு காட்டி லழுதுதலை மாட்டி
லெரியெரி மூட்டி இடுமாறு
கரியஇரு கோட்டு முரணொருமை மோட்டர்
கயிறுயிரின் மாட்டி அழையாமுன்
கனகமணி மாட்டு மறுகுவளை சூட்டு
கழலிணைகள் காட்டி அருள்வாயே
பருவமலை நாட்டு மருவுகிளி யோட்டு
பழையகுற வாட்டி மணவாளா
பகைஞர்படை வீட்டில் முதியகன லூட்டு
பயிலுமலை நாட்டுக் குமரேசா
அருமறைகள் ஈட்டி உரைசெய்தமிழ் பாட்டை
அடைவடைவு கேட்ட முருகோனே
அலைகடலி லீட்டு மசுரர்களை யோட்டி
அமரர்சிறை மீட்ட பெருமாளே.

**206.** இருவினை புனைந்து ஞான விழிமுனை திறந்து நோயின்
இருவினை இடைந்து போக மலமூட
இருளற விளங்கி ஆறு முகமொடு கலந்து பேதம்
இலையென இரண்டு பேரும் அழகான
பரிமள சுகந்த வீத மயமென மகிழ்ந்து தேவர்
பணியவிண் மடந்தை பாத மலர்தூவப்
பரிவுகொ டநந்த கோடி முனிவர்கள் புகழ்ந்து பாடப்
பருமயி லுடன்கு லாவி வரவேணும்
அரியய னறிந்தி டாத அடியிணை சிவந்த பாதம்
அடியென விளங்கி யாடு நடராஜன்
அழலுறு மிரும்பின் மேனி மகிழ்மர கதம்பெ ணாகம்
அயலணி சிவன்பு ராரி அருள்சேயே
மருவலர்க டிண்ப ணூர முடியுடல் நடுங்க ஆவி
மறலிபு ணவென்ற வேலை உடையோனே
வளைகுல மலங்கு காவி ரியின்வட புறஞ்சு வாமி
மலைமிசை விளங்கு தேவர் பெருமாளே.

207. இருவினைப் பிறவிக் கடல்மூழ்கி
இடர்கள்பட் டலையப் புகுதாதே
திருவருட் கருணைப் ரபையாலே
திரமெனக் கதியைப் பெறுவேனோ
அரியயற் கறிதற் கரியானே
அடியவர்க் கெளியற் புதநேயா
குருவெனச் சிவனுக் கருள்போதா
கொடுமுடிக் குமரப் பெருமாளே.

208. இருவினை மங்க மலவகை மங்க
இருள்பிணி மங்க மயிலேறி
எனதரு ளன்பு பொழியக டம்பு
எனநித முங்கொண் டளிபாடக்
கரிமுகன் றம்பி முருகனென் றண்டர்
களிமலர் சிந்த அடியேன்முன்
கருணைபொ ழிந்து முகமும லர்ந்து
கடுகிந டங்கொண் டருள்வாயே
திரிபுர மங்க மதனுடல் மங்க
திகழ்நகை கொண்டு விடையேறிச்
சிவவெளி பொங்க வருள்குடி கொண்டு
திகழ்ந டஞ்செய் தெமையாளும்
அரசியி டங்கொள் மழுவுடை எந்தை
அமலன்ம கிழ்ந்த குருநாதா
அருணைவி லங்கல் மகிழ்குற மங்கை
அமளிந லங்கொள் பெருமாளே.

209. இருவினை யஞ்ச வருவினை கெஞ்ச
இருள்பிணி துஞ்ச மலமாய
எனதிடர் மங்க உனதருள் பொங்க
இசைகொடு துங்க புகழ்கூறித்
திருமுக சந்த்ர முருககடம்ப
சிவசுத கந்த குகவேலா
சிவசிவ வென்று தெளிவுறு நெஞ்சு
திகழந டஞ்செய் கழல்தாராய்

மருதொடு கஞ்ச னுயிர்பலி கொண்டு
மகிழரி விண்டு மருகோனே
வதைபுரி கின்ற நிசிசரர் குன்ற
வலம்வரு செம்பொன் மயில்வீரா
அருகுறு மங்கை யொடுவிடை யுந்து
மமலனு கந்த முருகோனே
அருள்செறி பந்த ணையிலிரு மங்கை
அமளிந லங்கொள் பெருமாளே.

210. இருவினையின் மதிம யங்கித் திரியாதே
எழுநரகி லுழலு நெஞ்சுற் றலையாதே
பரமகுரு அருள்நி னைந்திட் டுணர்வாலே
பரவுதரி சனையை யென்றெற் கருள்வாயே
தெரிதமிழை யுதவு சங்கப் புலவோனே
சிவனருளு முருக செம்பொற் கழலோனே
கருணைநெறி புரியு மன்பர்க் கெளியோனே
கனகசபை மருவு கந்தப் பெருமாளே.

211. இருளளக மவிழ நுதல் வேர்வை முத்த ரும்ப
இலகுகயல் புரளஇரு பார பொற்ற னங்கள்
இளகஇடை துவளவளை பூச லிட்டி ரங்க எவராலும்
எழுதரிய கலைநெகிழ ஆசை மெத்த உந்தி
இனியசுழி மடுவினிடை மூழ்கி நட்பொ டந்த
இதழமுது பருகியுயிர் தேக மொத்தி ருந்த அநுராக
முருகுகமழ் மலரமளி மீதி னிற்பு குந்து
முகவனச மலர்குவிய மோக முற்ற மூந்தி
மொழிபதற வசமழிய ஆசை யிற்க விழ்ந்து
விடுபோதும்
முழுதுணரு மடியவர்கள் வாழ்வை யொத்த டைந்து
உததியிடை யவுணர்களை யோட விட்டு யர்ந்த
முநிவர்சுரர் தொழுதுருகு பாத பத்ம மென்று
மறவேனே

ஒருசிறுவன் மணமதுசெய் போதி னிற்சென் றார்ந்து
கிழவடிவு கொடுமுடுகி வாச லிற்பு குந்து
உலகறிய இவனடிமை யாமெ னக்கொ ணர்ந்து
சபையூடே
ஒருபழைய சருகுபடி ஆவ ணத்தை அன்று
உரமொடவ னதுவலிய வேகி ழிக்க நின்று
உதறிமுறை இடுபழைய வேத வித்தர் தந்த
சிறியோனே
அரியவுடு பதிகடவி ஆட கச்சி லம்பொ
டழகுவட மணிமுடிவி யாள மிட்ட பூந்த
அமரரொடு பலர்முடுகி ஆழி யைக்க டைந்து அமுதாக
அருளுமரி திருமருக வார ணத்தை அன்று
அறிவினுட னொருகொடியி லேத ரித்து கந்த
அருணகிரி நகரிலெழு கோபு ரத்த மர்ந்த
பெருமாளே.

212. இருளு மோர்கதி ரணுகொ ணாதபொ
னிடம தேறியென் இருநோயும்
எரிய வேமல மொழிய வேசுட
ரிலகு மூலக ஒளிமேவி
அருவி பாயஇ னமுத மூறவுன்
அருளெ லாமென தளவாக
அருளி யேசிவ மகிழ வேபெற
அருளி யேயிணை அடிதாராய்
பரம தேசிகர் குருவி லாதவர்
பரவை வான்மதி தவழ்வேணிப்
பவள மேனியர் எனது தாதையர்
பரம ராசியர் அருள்பாலா
மருவி நாயெனை யடிமை யாமென
மகிழ்மெய்ஞ் ஞானமும் அருள்வோனே
மறைகு லாவிய புலியூர் வாழ்குற
மகள்மெ லாசைகொள் பெருமாளே.

213. இருள்காட்டு செவ்வி மதிகாட்டி வில்லி
னுதல்காட்டி வெல்லும் இருபாணை
இயல்காட்டு கொல்கு வளைகாட்டி முல்லை
நகைகாட்டு வல்லி இடைமாதர்
மருள்காட்டி நல்கு ரவுகாட்டு மில்ல
இடுகாட்டி னெல்லை நடவாத
வழிகாட்டி நல்ல றிவுகாட்டி மெல்ல
வினைவாட்டி அல்லல் செயலாமோ
தெருள்காட்டு தொல்லை மறைகாட்டு மல்லல்
மொழிகாட்டு தில்லை இளையோனே
தினைகாட்டு கொல்லை வழிகாட்ட வல்ல
குறவாட்டி புல்லு மணிமார்பா
அருள்காட்டு கல்வி நெறிகாட்டு செல்வ
அடல்காட்டு வல்ல சூர்கோபா
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

214. இருள்விரி குழலை விரித்துத் தூற்றவும்
இறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவும்
இருகடை விழியு முறுக்கிப் பார்க்கவும் மைந்தரோடே
இலைபிள வதனை நடித்துக் கேட்கவும்
மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவும்
இடையிடை சிறிது நகைத்துக் காட்டவும் எங்கள்வீடே
வருகென வொருசொ லுரைத்துப் பூட்டவும்
விரிமல ரமளி அணைத்துச் சேர்க்கவும்
வருபொரு ளளவி லுருக்கித் தேற்றவும் விந்தையாலே
வனைமனை புகுதி லடித்துப் போக்கவும்
ஒருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள்
வசைவிட நினது பதத்தைப் போற்றுவ தெந்தநாளோ
குருமணி வயிர மிழித்துக் கோட்டிய
கழைவட உருவு வெளுத்துத் தோற்றிய
குளிறிசை அருவி கொழித்துத் தூற்றிய மண்டுநீரூர்

குழிபடு கலுழி வயிற்றைத் தூர்த்தெழு
திடர்மண லிறுகு துருத்திக் காப்பொதி
குளிர்நிழ லருவி கலக்கிப் பூப்புனை வண்டலாடா
முருகவிழ் துணர்க ளுகுத்துக் காய்த்தினை
விளைநடு இதணி விருப்பைக் காட்டிய
முகிழ்முலை இளைய குறத்திக் காட்படு செந்தில்வாழ்வே
முளையிள மதியை எடுத்துச் சாத்திய
சடைமுடி இறைவர் தமக்குச் சாத்திர
முறையருள் முருக தவத்தைக் காப்பவர் தம்பிரானே.

215\. இலகி இருகுழை கிழிகயல் விழியினு
மிசையி னசைதரு மொழியினு மருவம
ரிருள்செய் குழலினு மிடையினு நடையினும் அநுராக
இனிமை தருமொரு இதழினு நகையினு
மிளைய ம்ருகமத தனகுவ டழகினு
மியலு மயல்கொடு துணிவது பணிவது தணியாதே
குலவி விரகெனு மளறிடை முழுகிய
கொடிய நடலைய னடமிட வருபிணி
குறுகி யிடவெம னிறுதியி லுயிரது கொடுபோநாள்
குனகி அழுபவர் அயர்பவர் முயல்பவர்
குதறு முதுபிண மெடுமென வொருபறை
குணலை இடஅடு சுடலையில் நடவுதல் இனிதோதான்
மலையில் நிகரில தொருமலை தனையுடல்
மறுகி யலமர அறவுர முடுகிய
வலிய பெலமிக உடையவ னடையவும் அதிகாய
மவுலி ஒருபது மிருபது காமுடன்
மடிய ஒருசரம் விடுபவன் மதகரி
மடுவில் முறையிட உதவிய க்ருபைமுகில் மதியாதே
அலகை உயிர்முலை அமுதுசெய் தருளிய
அதுல னிருபத மதுதனி லெழுபுவி
அடைய அளவிட நெடுகிய அரிதிரு மருகோனே
அவுண ருடலம தலமர அலைகட
லறவு மறுகிட வடகுவ டனகிரி
அடைய இடிபொடி படஅயில் விடவல பெருமாளே.

216. இலகிதழ் கோதி நேதி மதகலை ஆர வார
இளநகை ஆட வாடி மிகவாதுற்
றெதிர்பொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற மதராஜன்
கலவியி லோடி நீடு வெகுவித ராக போக
கரணப்ர தாப லீலை மடமாதர்
கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனுன் மீது
கருதிய ஞான போதம் அடைவேனோ
கொலைபுரி காளி சூலி வயிரவி நீலி மோடி
குலிசகு டாரி ஆயி மகமாயி
குமரிவ ராகி மோகி பகவதி ஆதி சோதி
குணவதி ஆல மூணி அபிராமி
பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே
படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே.

217. இலகிய களபசு கந்த வாடையின்
ம்ருகமத மதனைம கிழ்ந்து பூசியெ
இலைசுருள் பிளவைய ருந்தி யேயதை இதமாகக்
கலவியி லவரவர் தங்கள் வாய்தனில்
இடுபவர் பலபல சிந்தை மாதர்கள்
கசனையை விடுவது மெந்த நாளது பகர்வாயே
சிலைதரு குறவர்ம டந்தை நாயகி
தினைவன மதனிலு கந்த நாயகி
திரள்தன மதனில ணைந்த நாயக சிவலோகா
கொலைபுரி அசுரர்கு லங்கள் மாளவெ
அயிலயி லதனையு கந்த நாயக
குருபர பழநியி லென்று மேவிய பெருமாளே.

218. இலகிய வேலோ சேலோ ஒளிவிடு வாளோ போதோ
எமன்விடு தூதோ மானோ விடமீதோ
எனவிழி கூறு வாரா அரிவையர் தோளூ டாடா
இறுதியில் வேறாய் மாறு நினைவாலே

பலபல கோளாய் மாலா யுழலும தானல் வீணே
படிறுசொ லாகா லோகா யதனுகிப்
பரிவுட னாடாய் வீடா யடிமையு மீடே றாதே
பணிதியில் மூழ்கா மாயா விடுவேனோ
அலைகடல் கோகோ கோகோ எனவுரை கூறு வோடா
அவுணரை வாடா போடா எனலாகி
அழகிய வேலால் வாளால் நிலவிய சீரா வாலே
யவருடல் வாளு ளீரா எதிராகி
மலைமிகு தோளா போதா அழகிய வாலா பாலா
மகபதி வாழ்வே சேயே மயில்வீரா
மறைதொழு கோவே தேவே நறைசெறி பூவே நீரே
வளவிய வேளே மேலோர் பெருமாளே.

**219.** இலகுகனி மிஞ்சு மொழியிரவு துஞ்சு
மிருவிழியெ னஞ்சு முகமீதே
இசைமுரல்சு ரும்பு மிளமுலைய ரும்பும்
இலகியக ரும்பு மயலாலே
நிலவினுடல் வெந்து கரியஅல மந்து
நெகிழுமுயிர் நொந்து மதவேளால்
நிலையழிவு நெஞ்சி லவர்குடிபு குந்த
நினைவொடுமி றந்து படலாமோ
புலவினைய ளைந்து படுமணிக லந்து
புதுமலர ணிந்த கதிர்வேலா
புழுகெழும ணந்த குறமகள்கு ரும்பை
பொரமுகையு டைந்த தொடைமார்பா
பலநிறமி டைந்த விழுசிறைய லர்ந்த
பருமயில டைந்த குகவீரா
பணிபணிசி றந்த தரளமணி சிந்து
பழநிமலை வந்த பெருமாளே.

**220.** இலகு குழைகிழிய வூடு போயுலவி
யடர வருமதன னூல ளாவியெதி
ரிளைஞ ருயிர்கவர ஆல வேல்வலைபொ திந்தநீலம்

இனிமை கரைபுரள வாகு லாவுசரி
நெறிவு கலகலெனு வாசம் வீசுகுழ
லிருளின் முகநிலவு கூர மாமதியைக் கன்றுகோப
மலையு மிதழ்பருகி வேடை தீரவுட
லிறுக இறுகியனு ராக போகமிக
வளரு மிளகுதன பார மீதினில்மு யங்குவேனோ
மதுர கவியடைவு பாடி வீடறிவு
முதிய அரியதமி ழோசை யாகவொளி
வசன முடையவழி பாடு சேருமருள் தந்திடாதோ
கலக அசுரர்கிளை மாள மேருகிரி
தவிடு படவுதிர வோல வாரியலை
கதற வரியரவம் வாய்வி டாபசித ணிந்தபோகக்
கலப மயிலின்மிசை யேறி வேதநெறி
பரவு மமரர்குடி யேற நாளும்விளை
கடிய கொடியவினை வீழ வேலைவிட வந்தவாழ்வே
அலகை யுடனடம தாடு தாதைசெவி
நிறைய மவுனவுரை யாடு நீபவெழி
லடவி தனிலுறையும் வேடர் பேதையைம ணந்தகோவே
அமணர் கழுவில்விளை யாட வாதுபடை
கருது குமரகுரு நாத வூழியிலு
மழிவி லிடைமருதில் மேவு மாமுனிவர் தம்பிரானே.

221. இலகு முலைவிலை யசடிகள் கசடிகள்
கலைகள் பலவறி தெருளிகள் மருளிகள்
எயிறு கடிபடு முதடிகள் பதடிகள் எவரோடும்
இனிய நயமொழி பழகிகள் அழகிகள்
மடையர் பொருள்பெற மருவிகள் சருவிகள்
யமனு மிகையென வழிதரு முழிதரும் விழிவாளால்
உலக மிடர்செயு நடலிகள் மடலிகள்
சிலுகு சிலரொடு புகலிக ளிகலிக
ளுறவு சொலவல தூர்கிகள் விரகிகள் பிறைபோலே
உகிர்கை குறியிடு கமுகிகள் சமுகிகள்
பகடி யிடவல கபடிகள் முகடிகள்
உணர்வு கெடும்வகை பருவிக ளுருவிகள் உறவாமோ

அலகை புடைபட வருவன பொருவன
கலக கணங்ிரை நகுவன தகுவன
அசுரர் தசைவழி நிமிர்வன திமிர்வன பொடியாடி

அலரி குடதிசை அடைவன குடைவன
தரும வநிதையு மகிழ்வன புகழ்வன
அகில புவனமு மாகர கரவென அமர்வேள்வி

திலக நுதலுமை பணிவரு செயமகள்
கலையி னடமிட வெரிவிரி முடியினர்
திரள்ப லுயிருடல் குவடுக ளெனநட மயிலேறிச்

சிறிது பொழுதினி லயில்விடு குருபர
அறிவு நெறியுள அறுமுக இறையவ
த்ரிசிர கிரியயல் வயலியி லினிதுறை பெருமாளே.

222. இலகு வேலெனு மிருவினை விழிகளு
மெழுதொ ணாதெனு மிருதன கிரிகளு
மிசையிலுல்வசைபொசிதருமொழிகளும்எதிர்வேகொண்

டெதிரி லாவதி பலமுடை இளைஞர்தம்
இனிய காதலை இருளெனும் வலைகொடு
இடைவி டாதெனு நடுவனு மெனவளை மடவார்தம்

கலவி மால்கொடு கலைகளு மறிவொடு
கருதொ ணாதென முனிவுற மருள்கொடு
கரையி லாவிதி எனுமொரு கடலிடை கவிழாதே

கருணை வானவர் தொழுதெழ மயிலுறை
குமர கானவர் சிறுமியொ டுருகிய
கமல தாளிணை கனவிலு நினைவுற அருள்தாராய்

பலகை யோடொரு பதுசிர மறஎறி
பகழி யானர வணைமிசை துயில்தரு
பரமன் மால்படி அளவிடு மரிதிரு மருகோனே

பழுதி லாமன முடையவர் மலர்கொடு
பரவ மால்விடை மிசையுறை பவரொடு
பரம ஞானமு மிதுவென உரைசெய்த பெரியோனே

அலகை காளிகள் நடமிட அலைகட
லதனில் நீள்குடல் நிணமலை பிணமலை
அசுரர் மார்பக மளறது படவிடும் அயில்வேலா
அரிய பாவல ருரைசெய அருள்புரி
முருக ஆறிரு புயஇய லிசையுடன்
அழகு மாண்மையு மிலகிய சரவணப் பெருமாளே.

223. இலாபமில் பொலாவுரை சொலாமன தபோதன
ரியாவரு மிராவுபகல் அடியேனை
இராகமும் விநோதமு முலோபமு டன்மோகமு
மிலாணிவ னுமாபுருஷன் எனஏயச்
சலாபவ மலாகர சசீதர விதாரண
சதாசிவ மயேசுரச கலலோக
சராசர வியாபக பராபர மநோலய
சமாதிய நுபூதிபெற நினைவாயே
நிலாவிரி நிலாமதி நிலாதவ நிலாசன
நியாயப ரிபாலஅர நதிசூடி
நிசாசர குலாதிப திராவண புயாரிட
நிராமய சரோருகர னருள்பாலா
விலாசுகம் வலாரெனு முலாசவி தவாகவ
வியாதர்கள் விநோதமகள் மணவாளா
விராவுவ யலார்புரி சிராமலை பிரான்மலை
விராலிம லைமீதிலுறை பெருமாளே.

224. இலைச்சுருட் கொடுத்தணைத் தலத்திருத் திமட்டைகட்
கிதத்தபுட் குரற்கள்விட் டனுராகம்
எழுப்பிமைக் கயற்கணைக் கழுத்தைமுத் தமிட்டணைத்
தெடுத்திதழ்க் கடித்தரத் திடைதாவி
அலைச்சலுற் றிலச்சையற் றரைப்பைதொட் டுழைத்துழைத்
தலக்கணுற் றுயிர்க்களைத் திடவேதான்
அறத்தவித் திளைத்துறத் தனத்தினிற் புணர்ச்சிபட்
டயர்க்குமிப் பிறப்பினித் தவிராதோ
கொலைச்செருக் கரக்கரைக் கலக்குமிக் கருக்குடக்
கொடித்திருக் கரத்தபொற் பதிபாடுங்

குறித்தநற் றிருப்புகழ்ப் ப்ரபுத்துவக் கவித்துவக்
குருத்துவத் தெனைப்பணித் தருள்வோனே
தலைச்சுமைச் சடைச்சிவற் கிலக்கணத் திலக்கியத்
தமிழ்த்ரயத் தகத்தியற் கறிவோதுஞ்
சமர்த்தரிற் சமர்த்தபச் சிமத்திசைக் குளத்தமத்
தனிச்சயத் தினிற்பிளைப் பெருமாளே.

225. இல்லையென நாணி உள்ள தின்ம ருமை
லெள்ளினள வேனும் பகிராரை
எவ்வமென நாடி உய்வகையி லேனை
எவ்வகையு நாமங் கவியாகச்
சொல்லவறி யேனை எல்லைதெரி யாத
தொல்லைமுத லேதென் றுணரேனைத்
தொய்யுமுடல் பேணு பொய்யனைவி டாதுன்
துய்யகழ லாளுந் திறமேதோ
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
மையவரை பாகம் படமோது
மையுலவு சோலை செய்யகுளிர் சாரல்
வள்ளிமலை வாழுங் கொடிகோவே
வெல்லுமயி லேறு வல்லகும ரேச
வெள்ளிலுட னீபம் புனைவோனே
வெள்ளிமணி மாட மல்குதிரு வீதி
வெள்ளிநகர் மேவும் பெருமாளே.

226. இளநீர்க்கு வட்டுமுலை யமுதத்த டத்தைகனி
இரதக்கு டத்தையெணு மாபோடே
இருகைக்க டைத்துஇடை துவளக்கு ழற்சரிய
இதழ்சர்க்க ரைப்பழமொ டுறழூறல்
முளரிப்பு வொத்தமுக முகம்வைத்த ருத்திநல
முதிரத்து வற்பவல்குல் மிசைமூழ்கி
மொழிதத்தை யொப்பகடை விழிகட்சி வப்பமளி
முழுகிச்சு கிக்கும்வினை அறஆளாய்
நளினப்ப தக்கழலு மொளிர்செச்சை பொற்புயமெ
னயனத்தி லுற்றுநட மிடும்வேலா

நாணுக்க மைத்தகொடி இரதச்சு தக்களவ
னறைபுட்ப நற்றுளவன் மருகோனே
களபத்த னத்திசுக சரசக்கு றத்திமுக
கமலப்பு யத்துவளி மணவாளா
கடலைக்கு வட்டவுணை யிரணப்ப டுத்தியுயர்
கருவைப்ப திக்குளுறை பெருமாளே.

227. இளையவர் நெஞ்சத் தளையமெ னுஞ்சிற்
றிடைகொடு வஞ்சிக் கொடிபோல்வார்
இணையடி கும்பிட் டணியல் குல்சும்பித்
திதழமு துந்துய்த் தணியாரக்
களபசு கந்தப் புளகித இன்பக்
கனதன கும்பத் திடைமூழ்கும்
கலவியை நிந்தித் திலகிய நின்பொற்
கழல்தொழு மன்பைத் தருவாயே
தளர்வுறு மன்பர்க் குளமல மொன்றிச்
சதுமறை சந்தத் தொடுபாடித்
தரிகிட தந்தத் தரிகிட திந்தித்
தகுதியெ னுங்கொட் டுடனாடித்
தெளிவுற வந்துற் றுளிர்சிவ னன்பிற்
சிறுவஅ லங்கற் றிருமார்பா
செழுமறை அஞ்சொற் பரிபுர கொண்டற்
றிரிசிர குன்றப் பெருமாளே.

228. இறவாமற் பிறவாமல் எனையாள்சற் குருவாகிப்
பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே குகனேசொற் குமரேசா
*அறநாலைப் புகல்வோனே அவிநாசிப் பெருமாளே.

229. இறுகு மணிமுலை மருவு தாளமு
மெரியு மெழுமதி நிலவாலே
இரவி லெனதுயிர் கவர வருகுழ
லிசையு முறுகடல் அலையாலே

*கறையானைக் கிளையோனே கதிர்காமப் பெருமாளே.

தறுகண் ரதிபதி மதனன் விடுகொடு
சரமு மினியெனை அணுகாதே
தருண மணிபொழி லருணை நகருறை
சயில மிசையினில் வரவேணும்
முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா
முடிய கொடுமுடி அசுரர் பொடிபட
முடுகு மரகத மயில்வீரா
குறவர் மடமகள் அமிர்த கனதன
குவடு படுமொரு திருமார்பா
கொடிய சுடரயில் தனையு மெழுகடல்
குறுக விடவல பெருமாளே.

230. இறைச்சிப்பற் றிரத்தத்திட்
டிசைக்கொக்கப் பரப்பப்பட்
டெலுப்புக்கட் டளைச்சுற்றிச் சுவர்கோலி
எடுத்துச்செப் பெனக்கட்டிப்
புதுக்குப்புத் தகத்திற்புக்
கெனக்குச்சற் றுனக்குச்சற் றெனுமாசைச்
சிறைக்கொத்திப் பிறப்பிற்பட்
டுறக்கச்சொப் பனத்துற்றுத்
திகைக்கப்பட் டவத்தைப்பட் டுழலாதுன்
திருப்பத்மத் திறத்தைப்பற்
றுகைக்குச்சித் திரத்தைச்சொற்
றிதக்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ
பிறைச்செக்கர்ப் புரைக்கொத்துச்
சடைப்பச்சைக் கொடிக்கிச்சைப்
பிறக்குற்றத் திருப்பக்கச் சிவநாதர்
பெருக்கப்புத் தடக்கைக்கற்
பகத்தொப்பைக் கணத்துக்குப்
பிரச்சித்தக் கொடிக்குக்டக் கொடியோனே

பறைக்கொட்டிக் களைச்சுற்றக்
குறட்செக்கட் கணத்திற்குப்
பசிக்குப்பச் சுடற்குத்திப் பகிர்வேலா
பணப்பத்திக் கணத்துத்திப்
படுக்கைக்கச் சபத்திச்சைப்
படுக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

231. இறையத் தனையோ அதுதானும்
இலையிட் டணலேய் தருகாலம்
அறையிற் பெரிதா மலமாயை
அலையப் படுமா றினியாமோ
மறையத் தனமா சிறைசாலை
வழியுய்த் துயர்வா னுறுதேவர்
சிறையைத் தவிரா விடும்வேலா
திலதைப் பதிவாழ் பெருமாளே.

232. இனமறைவி தங்கள்கொஞ் சியசிறுச தங்கைகிண்
கிணியிலகு தண்டையம் புண்டரீகம்
எனதுமன பங்கயங் குவளைகுர வம்புனைந்
திரவுபகல் சந்ததஞ் சிந்தியாதோ
உனதருளை அன்றியிங் கொருதுணையு மின்றிநின்
றுளையுமொரு வஞ்சகன் பஞ்சபூத
உடலதுசு மந்தலைந் துலகுதொறும் வந்துவந்
துழலுமது துன்புகண் டன்புறாதோ
கனநிவத தந்தசங் ரமகவள துங்கவெங்
கடவிகட குஞ்சரந் தங்கும்யானைக்
கடகசயி லம்பெறும் படியவுணர் துஞ்சமுன்
கனககிரி யுங்கலங் கம்புராசி
அனலெழமு னிந்தசங் ரமமதலை கந்தனென்
றாறுமுமை யும்புகழ்ந் தன்புகூர
அகிலபுவ னங்களுஞ் சுரரொடுதி ரண்டுநின்
றரிபிரமர் கும்பிடுந் தம்பிரானே.

233. இன்பமுந் துன்பமுஞ் சந்ததங் கொண்டுசென்
றிங்குமங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெண் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனோ
புன்குருந் துந்தியஞ் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசும்
தன்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்திடுஞ் செந்திலம் பெருமாளே.

234. ஈயெ றும்புநரி நாய்க ணங்கழுகு
காக முண்பவுட லேசு மந்துமிது
ஏல்வ தென்றுமத மேமொ ழிந்துமத உம்பல்போலே
ஏது மென்றனிட கோலெ னும்பரிவு
மேவி நம்பியிது போது மென்கசில
ரேய்த னங்கள்தனி வாகு சிந்திவச னங்கள்பேசிச்
சீத தொங்கலழ காவ ணிந்துமணம்
வீச மங்கையர்க ளாட வெண்கவரி
சீற கொம்புகுழ லூத தண்டிகையில் அந்தமாகச்
சேர்க னம்பெரிய வாழ்வு கொண்டுழலு
மாசை வெந்திடவு னைச மிஞ்சிசிவ
சேவை கண்டினது பாத தொண்டனென அன்புதாராய்
சூதி ருந்தவிடர் மேயி ருண்டகிரி
சூர் வெந்துபொடி யாகி மங்கிவிழ
சூரி யன்புரவி தேர்க டந்துநடு பங்கினோடச்
சோதி யந்தபிர மாபு ரந்தரனு
மோதி யந்தமுதல் தேவ ருந்தொழுது
சூழ மன்றில்நட மாடு மெந்தைமுதல் அன்புகூர
வாது கொண்டவுணர் மாள செங்கையயி
லேவி யண்டர்குடி யேற விஞ்சையர்கள்
மாதர் சிந்தைகளி கூர நின்றுநட னங்கொள்வோனே
வாச கும்பதன மானை வந்துதினை
காவல் கொண்டமுரு காநி தம்பெரிய
வாலி கொண்டபுர மேய மர்ந்துவளர் தம்பிரானே.

**235.** ஈர மோடுசி ரித்துவ ருத்தவும்
நாத கீதந டிப்பிலு ருக்கவும்
ஏவ ராயினு மெத்திய ழைக்கவும் மதராஜன்
ஏவின் மோதுக ணிட்டும ருட்டவும்
வீதி மீதுத லைக்கடை நிற்கவும்
ஏறு மாறும னத்தினி ணைக்கவும் விலைகூறி
ஆர பாரத னத்தைய சைக்கவும்
மாலை யோதிகு லைத்துமு டிக்கவும்
ஆடை சோரஅ விழ்த்தரை சுற்றவும் அதிமோக
ஆசை போல்மன இஷ்டமு ரைக்கவும்
மேல்வி ழாவெகு துக்கம்வி ளைக்கவும்
ஆன தோதக வித்தைகள் கற்பவர் உறவாமோ
பார மேருப ருப்பத மத்தென
நேரி தாகஎ டுத்துட னட்டுமை
பாக ராரப டப்பணி சுற்றிடு கயிறாகப்
பாதி வாலைபி டித்திட மற்றது
பூர்வ தேவர்பி டித்திட லட்சுமி
பாரி சாதமு தற்பல சித்திகள் வருமாறு
கீர வாரிதி யைக்கடை வித்ததி
காரி யாயமு தத்தைய ளித்தக்ரு
பாளு வாகிய பச்சுரு வச்சுதன் மருகோனே
கேடி லாவள கைப்பதி யிற்பல
மாட கூடம லர்ப்பொழில் சுற்றிய
கீர னூருறை சத்தித ரித்தருள் பெருமாளே.

**236.** ஈளை சுரங்குளிர் வாத மெனும்பல
நோய்கள் வளைந்தற இளையாதே
ஈடு படுஞ்சிறு கூடு புகுந்திடு
காடு பயின்றுயிர் இழவாதே
மூளை யெலும்புகள் நாடி நரம்புகள்
வேறு படுந்தழல் முழுகாதே
மூல மெனுஞ்சிவ யோக பதந்தனில்
வாழ்வு பெறும்படி மொழிவாயே

வாளை நெருங்கிய வாவியி லுங்கயல்
சேல்கள் மறிந்திட வலைபீற
வாகை துதைந்தணி கேதகை மங்கிட
மோதி வெகுண்டிள மதிதோயும்
பாளை நறுங்கமழ் பூக வனந்தலை
சாடி நெடுங்கடல் கழிபாயும்
பாகை வளம்பதி மேவி வளஞ்செறி
தோகை விரும்பிய பெருமாளே.

237. ஈனமிகுத் துளபிறவி அணுகாதே
யானுமுனக் கடிமையென வகையாக
ஞானஅருட் டனையருளி வினைதீர
நாணமகற் றியகருணை புரிவாயே
தானதவத் தினின்மிகுதி பெறுவோனே
சாரதியுத் தமிதுணைவ முருகோனே
ஆனதிருப் பதிகமருள் இளையோனே
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே.

238. உடலி னூடு போய்மீளு முயிரி னூடு மாயாத
உணர்வி னூடு வானூடு முதுதீயுள்
உலவை யூடு நீரூடு புவியு னூடு வாதாடு
மொருவ ரோடு மேவாத தனிஞானச்
சுடரி னூடு நால்வேத முடியினூடு மூடாடு
துரிய வாகு லாதீத சிவரூபம்
தொலைவி லாத பேராசை துரிச றாத ஓர்பேதை
தொடுமு பாய மேதோசொல் அருள்வாயே
மடல றாத வாரீச அடவி சாடி மாறான
வரிவ ரால்கு வால்சாய அமராடி
மதகு சாடி மீதோடி உழவ ரால்வி டாவோடை
மடையை மோதி யாறூடு தடமாறிக்
கடல்பு காத மாமீனை முடுகி வாளை தான்மேவு
கமல வாவி மேல்வீழு மலர்வாவி
கடவுள் நீல மாறாத தணிகை காவ லாவீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

239. உடுக்கத் துகில்வேணு நீள்பசி
யவிக்கக் கனபானம் வேணுநல்
ஒளிக்குப் புனலாடை வேணுமெய் யுறுநோயை
ஒழிக்கப் பரிகாரம் வேணுமுள்
இருக்கச் சிறுநாரி வேணுமோர்
படுக்கத் தனிவீடு வேணுமிவ் வகையாவுங்
கிடைத்துக் க்ருஹவாசி யாகிய
மயக்கக் கடலாடி நீடிய
கிளைக்குப் பரிபால னுயிர் ரவமேபோம்
க்ருபைச்சித் தமுஞான போதமு
மழைத்துத் தரவேணு மூழ்பவ
கிரிக்குட் சுழல்வேனை யாளுவ தொருநாளே
குடக்குச் சிலதூதர் தேடுக
வடக்குச் சிலதூதர் நாடுக
குணக்குச் சிலதூதர் தேடுக வெனமேவிக்
குறிப்பிற் குறிகாணு மாருதி
யினித்தெற் கொருதூது போவது
குறிப்பிற் குறிபோன போதிலும் வரலாமோ
அடிக்குத் திரகார ராகிய
வரக்கர்க் கிளையாத தீரனு
மலைக்கப் புறமேவி மாதுறு வனமேசென்
றருட்பொற் றிருவாழி மோதிர
மளித்துற் றவர்மேல் மனோகர
மளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே.

240. உடையவர்க ளேவ ரெவர்களென நாடி
உளமகிழ ஆசு கவிபாடி
உமதுபுகழ் மேரு கிரியளவு மான
தெனவுரமு மான மொழிபேசி
நடைபழகி மீள வறியவர்கள் நாளை
நடவுமென வாடி முகம்வேறாய்
நலியுமுன மேயுன் அருணவொளி வீசு
நளினமலர் பாதம் அருள்வாயே

விடையில்வரு பாகர் விமலர்திரி சூலர்
விகிதர்பர யோகர் நிலவோடே
விளவுசிறு பூளை நகுதலையொ டாறு
விரியரவு சூடும் அதிபாரச்
சடையிறைவர் காண உமைமகிழ ஞான
சுருதிதனை யோது குருநாதா
தவமிலகு நீல மலர்சுனைய நாதி
தணிகைமலை மேவு பெருமாளே.

241. உததியறல் மொண்டு சூழுகரு
முகிலெனஇ ருண்ட நீலமிக
ஒளிதிகழு மன்ற லோதிநரை பஞ்சுபோலாய்
உதிரமெழு துங்க வேலவிழி
மிடைகடையொ துங்கு பீளைகளு
முடைதயிர்பி திர்ந்த தோவிதென வெம்புலாலாய்
மதகரட தந்தி வாயினிடை
செருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்
வனமழிய மங்கை மாதர்களி
னிலைதனையு ணர்ந்து தாளிலுறு
வழியடிமை அன்பு கூருமது சிந்தியேனோ
இதழ்பொதிஅ விழ்ந்த தாமரையின்
மணவறைபு குந்த நான்முகனும்
எறிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழிது யின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர்வ ணங்கு வாசவனும் நின்றுதாழும்
முதல்வசுக மைந்த பீடிகையில்
அகிலசக அண்ட நாயகிதன்
முகிழ்முலைசு ரந்த பாலமுதம் உண்டவேளே
முளைமுருகு சங்கு வீசிஅலை
முடுகிமைத வழ்ந்த வாபெருகி
முதலிவரு செந்தில் வாழ்வுதரு தம்பிரானே.

242. உதிரவுரு ளாகிஅது தகருவ தாகி
உவகையுற வாரும் நிலமீதே
ஒரு....இருவயது மாகி
உயர்பெரிய ராகி நரையோராய்
முதியவுட லாகி யுடலையுயிர் போட
முசியுறவி னோர்கள் கொடுபோயே
முளரியி........வு நீரின்
முழுகியறு மாசை வினைதீராய்
மதியறுகு சூடி மரகதிபி நாகி
வடவயினி லேதென் றிடமாவாள்
மதனைஎரி நாதர் அழகினு......
......ன வீறு முருகோனே
கதமுடைய ஆனை முகனையுடல் காது
கயமுகவ னேரி னிளையோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதுங்
கரபுரியில் வீறும் பெருமாளே.

243. உமையெனு மயில்பெற்ற மயில்வா கனனே
வனிதைய ரறுவர்க்கு மொருபா லகனே
உளமுரு கியபத்த ருறவே மறவேன் எனவோதி
உருகுத லொருசற்று மறியேன் வறியேன்
இருவினை இடைபட்ட கொடியே னடியேன்
உணர்விலி பெறமுத்தி தருவாய் தவிர்வாய் மடமாதர்
அமையென வளர்சித்ர இருதோள் தழுவா
அமுதென மதுரித்த கனிவாய் நுகரா
அமளியி லணைவுற்ற அநுரா கமதோ ததிமூழ்கி
அநவரத் தமுமுத்த மணிமா முலைதோய்
கலவியி னலமற்ப சுகமா மெனவே
அநுபவ மிதுசற்றும் விடவோ வறியேன் அருள்தாராய்
தமனிய குலசக்ர கிரியோ கடலோ
விடமென முடிவற்ற முதுபே ரிருளோ
தனுவென முனையிட்ட கொலைமூ விலைவேல்
கொடுபோர்வை

தழலெழ வருமுக்ர எமபா தகனோ
உகஇறு தியில்மிக்க வடவா வனலோ
தனியிவ னெனமிக்க பிசிதா சனபூ பதியாகி
இமையவ ரனைவர்க்கும் அறையோ அறையோ
அரியயன் முழுதுக்கும் அறையோ அறையோ
எழுபுவி உலகுக்கும் அறையோ அறையோ
பொரவாரும்
எனவரு மொருதுட்டன் முறையோ முறையோ
எனவுடல் துணிபட்டு விழவே நெடிதாய்
இலகிய அயில்தொட்ட அரசே வயலூர்
பெருமாளே.

244. உம்பரா ரமுதெனுந் தொண்டைவா யமுதமுண்
டுண்டுமே கலைகழன் றயலாக
உந்திவா வியில்விழுந் தின்பமா முழுகியன்
பொன்றிலா ரொடுதுவண் டணைமீதே
செம்பொனூர் குடமெனுங் கொங்கையா பரணமுஞ்
சிந்தவாள் விழிசிவந் தமராடத்
திங்கள்வேர் வுறவணைந் தின்பவா ரியில்விழுஞ்
சிந்தையே னெனவிதங் கரைசேர்வேன்
கொம்புநா லுடையவெண் கம்பமால் கிரிவருங்
கொண்டல்மேலோ மசையள் சங் ரமபாரக்
கும்பமால் வரைபொருந் திந்த்ரபூ பதிதருங்
கொண்டலா னையைமணஞ் செயும்வீரா
அம்புரா சியுநெடுங் குன்றுமா மரமுமன்
றஞ்சவா னவருறுஞ் சிறைமீள
அங்கநான் மறைசொலும் பங்கயா சனமிருந்
தங்கைவே லுறவிடும் பெருமாளே.

245. உம்பர்தருத் தேனுமணிக் (111-வது பக்கம் பார்க்க)

246. உயிர்க்கூடு விடுமளவு முமைக்கூடி மருவுதொழில்
ஒருக்காலு நெகிழ்வதிலை எனவேசூள்
உரைத்தேமுன் மருவினரை வெறுத்தேம திரவியம
துடைத்தாய்பின் வருகுமவர் எதிரேபோய்

பயிற்பேசி இரவுபகல் அவர்க்கான பதமைபல
படப்பேசி உறுபொருள்கொள் விலைமாதர்
படப்பார வலைபடுதல் தவிர்த்தாள மணிபொருவு
பதத்தாள மயிலின்மிசை வரவேணும்
தயிர்ச்சோர னெனுமவுரை வசைக்கோவ வனிதையர்கள்
தரத்தாடல் புரியுமரி மருகோனே
தமிழ்க்காழி மருதவன மறைக்காடு திருமருகல்
தநுக்கோடி வருகுழகர் தருவாழ்வே
செயிற்சேல்வி ணுடுவினொடு பொரப்போய்வி மமர்பொருது
செயித்தோடி வருபழநி அமர்வோனே
தினைக்காவல் புரியவல குறப்பாவை முலைதழுவு
திருத்தோள அமரர்பணி பெருமாளே.

247. உய்யஞா னத்துநெறி கைவிடா தெப்பொழுது
முள்ளவே தத்துமைகொ டுனையோதி
உள்ளமோ கத்திருளை விள்ளமோ கப்பொருளை
உள்ளமோ கத்தருளி உறவாகி
வையமே ழுக்குநிலை செய்யுநீ திப்பழைய
*மஞ்ஞைமே லுற்றொருச யிலமேவும்
வள்ளிகா னிற்புதிய வள்ளியோ டுற்றெனது
வல்லநோ யைக்களைய வருவாயே
பையரா வைப்புனையு மையர்பா கத்துவளர்
தையலாள் பெற்றுமகிழ் புதல்வோனே
பவ்வமீ திற்றுயில்வர் செல்விதோ ளைப்புணரும்
ஐயமா லுக்குரிய மருகோனே
செய்யமால் வெற்புருவ வெய்யவேல் சுற்றிவிடு
செல்வகா ளத்திமலை யுறைவோனே
தெய்வநா டர்க்குரிய வெள்ளையா னைத்தலைவர்
தெய்வயா னைக்கினிய பெருமாளே.

248. உரத்த சம்ப்ரம வடிவு திரங்கிக்
கறுத்த குஞ்சியும் வெளிறிய பஞ்சொத்
தொலித்தி டுஞ்செவி செவிடுற வொண்கட் குருடாகி

*வல்லமீ தற்பலச யிலமேவும்.

உரத்த வெண்பலு நழுவிம தங்கெட்
டுரைத்த கிண்கிணி னிருமலெ ழுந்திட்
டுளைப்பு டன்தலை கிறுகிறெ னும்பித் தமுமேல்கொண்
டாத்த மின்றிய புழுவினும் விஞ்சிப்
பழுத்து ளஞ்செயல் வசனம் வரம்பற்
றடுத்த பெண்டிரு மெதிர்வர நிந்தித் தனைவோரும்
அசுத்த னென்றிட உணர்வது குன்றித்
துடிப்ப துஞ்சிறி துளதில தென்கைக்
கவத்தை வந்துயி ரலமரு மன்றைக் கருள்வாயே
திரித்தி ரிந்திரி திரிரிரி யென்றிட்
டுடுட்டு டுண்டுடு டுடுடுடு டுண்டுட்
டிகுட்டி குண்டிகு டிகுடிகு டிங்குட் டெனவேதான்
திமித்தி மிந்திமி திமிதிமி யென்றிட்
டிடக்கை துந்துமி முரசு முழங்கச்
செருக்க ளந்தனில் நிருதர் தியங்கச் சிலபேய்கள்
தரித்து மண்டையி லுதிர மருந்தத்
திரட்ப ருந்துகள் குடர்கள் பிடுங்கத்
தருக்கு சம்புகள் நிணமது சிந்தப் பொரும்வேலா
தடச்சி கண்டியில் வயலி னிலம்பைப்
படைத்த *செந்திலி லியல்செறி துங்கத்
தனிப்ப ரங்கிரி தனிலுறை கந்தப் பெருமானே.

249. உரத்துறை போதத் தனியான
உனைச்சிறி தோதத் தெரியாது
மரத்துறை போலுற் றடியேனும்
மலத்திருள் மூடிக் கெடலாமோ
பரத்துறை சீலத் தவர்வாழ்வே
பணித்தடி வாழ்வுற் றருள்வோனே
வரத்துறை நீதர்க் கொருசேயே
வயித்திய நாதப் பெருமானே.

---

*நெஞ்சினி லியல்செறிகொங்கிற் றனிச்சயந்தனி லினிதுறை கந்தப் பெருமானே.

250. உரமுற் றிருசெப் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடமாயே
உடைசுற் றுமிடைச் சுமையொக் கஅடுத்
தமிதக் கெறுவத் துடன்வீறு
தரமொத் துபயக் களபத் தளமிக்
கவனத் தருணத் தனமீதே
சருவிச் சருவித் தழுவித் தழுவித்
தவமற் கவிடுத் துழல்வேனே
அரிபுத் திரசித் தசவக் கடவுட்
கருமைத் திருமைத் துனவேளே
அடல்குக் குடநற் கொடிகட் டியனர்த்
தசுரப் படையைப் பொருவோனே
பரிவுற் றவருக் கருள்வைத் தருள்வித்
தகமுத் தமிழைப் பகர்வோனே
பழனத் தொளிர்முத் தணியெட் டிகுடிப்
பதியிற் குமரப் பெருமாளே.

251. உருகு மாமெழு காகவு மேமயல்
பெருகு மாசையு ளாகிய பேர்வரி
லுரிய மேடையில் வார்குழல் நீவிய ஒளிமாதர்
உடைகொள் மேகலை யால்முலை மூடியு
நெகிழ நாடிய தோதக மாடியு
முவமை மாமயில் போல்நிற மேனியர் உரையாடுங்
கரவ தாமன மாதர்கள் நீள்வலை
கலக வாரியில் வீழடி யேனெறி
கருதொ ணாவதி பாதக னேசம தறியாத
கசட மூடனை ஆளவு மேயருள்
கருணை வாரிதி யேயிரு நாயகி
கணவ னேயுன தாளிணை மாமலர் தருவாயே
சுருதி மாமொழி வேதியன் வானவர்
பரவு கேசனை ஆயுத பாணிநல்
துளப மாலையை மார்பணி மாயவன் மருகோனே

தொலைவி லாவசு ரேசர்க ளானவர்
துகள தாகவு மேயெதி ராடிடு
சுடரின் வேலவ னேயுல கேழ்வலம் வருவோனே

அருணர் கோடியி னூடொளி வீசிய
தருண வாண்முக மேனிய னேயரன்
அணையு நாயகி பாலக னேநிறை கலையோனே

அணிபொன் மேருயர் கோபுர மாமதில்
அதிரு மாரண வாரண வீதியுள்
அருணை மாநகர் மேவியு லாவிய பெருமாளே.

252. உருக்கம் பேசிய நீலியர் காசுகள்
பறிக்குந் தோஷிகள் மோகவி காரிகள்
உருட்டும் பார்வையர் மாபழி காரிகள் மதியாதே

உரைக்கும் பீரிகள் கோளர வாமென
வுடற்றுந் தாதியர் காசள வேமனம்
உறைக்குந் தூரிகள் மீதினி லாசைகள் புரிவேனோ

அருக்கன் போலொளி வீசிய மாமுடி
யனைத்துந் தானழ காய்நல மேதர
அருட்கண் பார்வையி னாலடி யார்தமை மகிழ்வோடே

அழைத்துஞ் சேதிகள் பேசிய காரண
வடிப்பந் தானென வேயெனை நாடொறும்
அதிக்கஞ் சேர்தர வேயரு ளாலுட னினிதாள்வாய்

இருக்குங் காரண மீறிய வேதமும்
இசைக்குஞ் சாரமு மேதொழு தேவர்கள்
இடுக்கண் தீர்கன னேயடி யார்தவ முடன்மேவி

இலக்கந் தானென வேதொழ வேமகிழ்
விருப்பங் கூர்தரு மாதியு மாயுல
கிறுக்குந் தாதகி சூடிய வேணிய னருள்பாலா

திருக்குந் தாபதர் வேதிய ராதியர்
துதிக்குந் தாளுடை நாயக னாகிய
செகச்செஞ் சோதியு மாகிய மாதவன் மருகோனே

செழிக்குஞ் சாலியு மேகம ளாவிய
கருப்பஞ் சோலையும் வாழையு மேதிகழ்
திருச்செந் தூர்தனில் மேவிய தேவர்கள்
பெருமாளே.

253. உருக்கார் வாளிகண்கள் பொருப்பார் வார்தனங்கள்
உகப்பார் வாலசந்த்ர னுதனூலாம்
உருச்சேர் நீண்மருங்குல் பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பா மேல்விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள் வரைக்கே ஓடியின்ப
வலைக்கே பூணுநெஞ்சன் அதிபாவி
அசட்டால் மூடுகின்ற மசக்கால் மாயுமிந்த
அவத்தா லீனமின்றி அருள்வாயே
எருக்கார் தாளிதும்பை மருச்சேர் போதுகங்கை
யிணைச்சூ டாதிநம்பர் புதல்வோனே
இருக்கா லேநினைந்து துதிப்பார் நாவினெஞ்சி
லிருப்பா யானைதங்கு மணிமார்பா
செருக்கா லேமிகுந்த கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேல்கைகொண்ட முருகோனே
தினைக்கோர் காவல்கொண்ட குறத்தேன் மாதுபங்க
திருப்போ ரூரமர்ந்த பெருமாளே.

254. உருவேற வேசெபித்து ஒருகோடி யோமசித்தி
உடனாக ஆகமத்து கந்துபேணி
உணர்வாசை யாரிடத்து மருவாமல் ஒரெழுத்தை
ஒழியாம னாதைவிட்டி ருந்துநாளும்
தரியாத போதகத்தர் குருவாவ ரோரொருத்தர்
தருவார்கள் ஞானவித்தை தஞ்சமாமோ
தழலாடி வீதிவட்ட மொளிபோத ஞானசித்தி
தருமாகி லாகுமத்தை அண்டிலேனே
குருநாடி ராசரிக்கர் துரியோத னுதிவர்க்க
குடிமாள மாயமிட்டுக் குந்திபாலர்
குலையாமல் நீதிகட்டி எழுபாரை ஆளவிட்ட
குறளாக மாகிநெட்டை கொண்டஆதி

மருகாபு ராரிசித்தன் மகனேவி ராஸிசித்ர
மலேமேலு லாவுசித்த அங்கைவேலா
மதுராபு ரேசர் மெய்க்க அரசாளு மாறன்வெப்பு
வளைகூனை யேநிமிர்த்த தம்பிரானே.

255. உரைக்கா ரிகைப்பா லெனக்கே முதற்பே
ருனக்கோ மடற்கோவை ஒன் றுபாட
உழப்பா திபக்கோ டெழுத்தா ணியைத்தே
டுனைப்பா ரிலொப்பார்கள் கண்டிலேன்யான்
குரைக்கா னவித்யா கவிப்பூ பருக்கே
குடிக்காண் முடிப்போடு கொண்டுவாபொன்
குலப்பூ ணிரத்நா திபொற்றூ செடுப்பா
யெனக்கூ றிடர்ப்பாடில் மங்குவேனோ
அரைக்கா டைசுற்றூர் தமிழ்க்கூ டலிற்போய்
அனற்கே புனற்கேவ வைந்தவடிட்
டறத்தா யெனப்பேர் படைத்தாய் புனற்சே
லறப்பாய் வயற்கீழ மர்ந்தவேளே
திரைக்கா விரிக்கே கரைக்கா னகத்தே
சிவத்யா னமுற்றோர்சி லந்திநூல்செய்
திருக்கா வணத்தே இருப்பா ரருட்கூர்
திருச்சா லகச்சோதி தம்பிரானே.

256. உரைதரு பரசம யங்க ளோதுவ
துருவென அருவென வொன்றி லாதபொதா
ரொளியென வெளியென உம்ப ராமென இம்பாநின்
றுலகுகள் நிலைபெறு தம்ப மாமென
உரைசெய அதுபொருள் கண்டு மோனமொ
டுணர்வுற உணர்வொடி ருந்த நாளும ழிந்திடாதே
பரகதி பெறுவதொ ழிந்தி டாவகை
பரிசன தெரிசன கந்த ஓசைகள்
பலநல விதமுள துன்ப மாகிம யங்கிடாதே
பரிபுர பதமுள வஞ்ச மாதர்கள்
பலபல விதமுள துன்ப சாகர
படுகுழி இடைவிழு பஞ்ச பாதகம் என்றுதீர்வேன்

அரகர சிவசுத கந்த னேநின
தபயம பயமென நின்று வானவர்
அலறிடு பொழுதினி லஞ்சி டாதென அஞ்சல்கூறி
அடல்தரு நிருதர நந்த வாகினி
யமபுர மடையவ டர்ந்து போர்புரி
அசுரன தகலமி டந்து போகவ கிர்ந்தவேகம்
விரிகடல் துகளெழ வென்ற வேலவ
மரகத கலபசி கண்டி வாகன
விரகுள சரவண முந்தை நான்மறை அந்தமோதும்
விரைதரு மலரிலி ருந்த வேதனும்
விடவர வமளிது யின்ற மாயனும்
விமலைகொள் சடையர னும்ப ராவிய தம்பிரானே.

257. உரைத்த பற்றுட னடிகள்ப ணிந்திட்
டிருத்தி மெத்தென இளநகை யுஞ்சற்
றுமிழ்த்த டைக்கல மெனஎதிர் கும்பிட் டணைமேல்வீழ்ந்
துடுத்த பொற்றுகி லகலல்கு லுந்தொட்
டெடுத்த ணைத்திதழ் பெருகமு தந்துய்த்
துனக்கெ னக்கென உருகிமு யங்கிட் டுளம்வேறாய்
அருக்கி அத்தனை எனுமவ சம்பட்
டறுத்தொ துக்கிய நகநுதி யுந்தைத்
தறப்பி தற்றிட அமளிக லங்கித் தடுமாறி
அளைத்து ழைத்திரு விழிகள்சி வந்திட்
டயர்த்தி தத்தொடு மொழிபவ ருந்திக்
கடுத்த கப்படு கலவியில் கொங்கெய்த் திடலாமோ
தரைக்க டற்புகு நிருதர்த யங்கச்
சளப்ப டத்தட முடிகள்பி டுங்கித்
தகர்த்தொ லித்தெழு மலையொடு துண்டப் பிறைசூடி
தனுக்கி ரித்திரி தரவெதி ருங்கொக்
கிணைப்ப தைத்துட லலறிட வஞ்சத்
தருக்க டக்கிய சமர்பொரு துங்கத் தனிவேலா
பருப்ப தப்ரிய குறுமுனி வந்தித்
திருக்கு முத்தம நிருதர்க லங்கப்
படைப்ப லத்தொடு பழையக்ர வுஞ்சக் கிரிசாடிப்

படர்ப்ப றைக்குரு குடலுதி ரங்குக்
குடக்கொ டிக்கிடு குமரகொ டுங்கற்
பதத்தி றுத்துகு பசியசி கண்டிப் பெருமாளே.

258. உரையொ ழிந்துநின் றவர்பொரு ளெனிதென
உணர்வு கண்டுபின் திரவிய இகலரு
ளொருவர் நண்படைந் துளதிரள் கவர்கொடு
பொருள்தேடி

உளம கிழ்ந்துவந் துரிமையில் நினைவுறு
சகல விந்த்ர தந்த் ரமும்வல விலைமக
ளுபய கொங்கையும் புளகித மெழமிக உறவாயே

விரக வன்புடன் பரிமள மிகஉள
முழுகி நன்றியொன் றிடமல ரமளியில்
வெகுவி தம்புரிந் தமர்பொரு சமயம துறுநாளே

விளைத னங்கவர்ந் திடுபல மனதிய
ரயல்த னங்களுந் தமதென நினைபவர்
வெருளி யின்கணின் றழிதொழி லதுவற
அருள்வாயே

செருநி னைந்திடுஞ் சினவலி யசுரர்க
ளுகமு டிந்திடும் படியெழு பொழுதிடை
செகம டங்கலும் பயமற மயில்மிசை தனிலேறித்

திகுதி குந்திகுந் திகுதிகு திகுதிகு
தெனதெ னந்தெனந் தெனதென தெனதென
திமிதி மிந்திமிந் திமிதிமி திமியென வருபூதம்

கரையி றந்திடுங் கடலென மருவிய
உதிர மொண்டுமுண் டிடவமர் புரிபவ
கலவி யன்புடன் குறமகள் தழுவிய முருகோனே

கனமு லுந்த்ரியம் பகபுர மருவிய
கவுரி தந்தகந் தறுமுக வெனஇரு
கழல்ப ணிந்துநின் றமரர்கள் தொழவல
பெருமாளே.

259. உலகத் தினில் மாதரு மைந்தரும்
உயர்சுற் றமும் வாழ்வொடு றுங்கிளை
உறுதுக்கமு மோடுற வென்றுற வருகாலன்
உதிரத் துடனே சல மென்பொடு
உறுதிப்படவே வள ருங்குடில்
உதிரக்கனல் மீதுற என்றனை ஒழியாமுன்
கலகக்கலை நூல்பல கொண்டெதிர்
கதறிப்பத றுவுரை வென்றுயர்
கயவர்க்குள ணுய்வினை நெஞ்சொடு களிகூரும்
கவலைப்புல மோடுற என்துயர்
கழிவித்துன தாளிணை அன்பொடு
கருதித்தொழும் வாழ்வது தந்திட நினைவாயே
இலகப்பதி னுலக கங்களும்
இருளைக்கடி வாளெழு மம்புலி
எழில்மிக்கிட வேணியில் வந்துற எருதேறி
இருகைத்தல மான்மழு வும்புனை
இறையப்பதி யாகிய இன்சொலன்
இசையப்பரி வோடினி தன்றருள் இளையோனே
மலைபட்டிரு கூறெழ வன்கடல்
மலைவுற்றபி தாவென வஞ்சகர்
வலியற்றசு ரேசரு மங்கிட வடிவேலால்
மலைவித்தக வானவ ரிந்திரர்
மலர்கைக்கொடு மாதவ ருந்தொழ
வடிவுற்றொரு தோகையில் வந்தருள் பெருமாளே.

260. உலகபசு பாச தொந்த மதுவான
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசலசு வாச சஞ்ச லமதாலென்
மதிநிலைகெ டாம லுன்றன் அருள்தாராய்
சலமறுகு பூளை தும்பை அணிசேயே
சரவணப வாமு குந்தன் மருகோனே
பலகலைசி வாக மங்கள் பயில்வோனே
பழநிமலை வாழ வந்த பெருமாளே.

261. உலையிலனை லொத்த உடலினனல் பற்றி
உடுபதியை முட்டி அமுதூற
உருகிவர விட்ட பரமசுக முற்று
உனதடியை நத்தி நினையாமல்
சிலைநுதலி விட்ட திலதமவிர் பொட்டு
திகழ்முகவர் முத்து நகையாலே
சிறுகுவலை இட்ட மயல்கவலை பட்டு
திருடனென வெட்கி அலைவேனோ
கலைகனக வட்ட திமிலைபறை கொட்ட
கனகமயில் விட்ட கதிர்வேலா
கருதலரின் முட்டி கருகிவரு துட்ட
கதவமணு ருற்ற குலகாலா
அலைகடலு டுத்த தலமதனில் வெற்றி
அருணைவளர் வெற்பில் உறைவோனே
அசுரர்களை வெட்டி அமரர்சிறை விட்டு
அரசுநிலை இட்ட பெருமாளே.

262. உறவின்முறை கதறியழ ஊராரு மாசையற
பறைதிமிலை முழவினிசை ஆகாச மீதுமுற
உலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியும் அந்தநாளில்
உனதுமுக கருணைமல ரோரார்று மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்விழியு
முபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமும் அந்தமார்பும்
மறையறைய அமரர்தரு பூமாரி யேசொரிய
மதுவொழுகு தரளமணி மீதேமு நூலொளிர
மயிலின்மிசை அழகுபொலி ஆளாய்மு னோடியர்வந்துகூட
மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
மதலைஒரு குதலையடி நாயேனை ஆளவிவண் வந்திடாயோ
பிறையெயிறு முரணசுரர் போராது பாரில்விழ
அதிரவெழு புவியுலக மீரேழு மோலமிட
பிடிகளிறி னடல்நிரைகள் பாழாக வேதிசையில்
நின்றநாகம்

பெரியநெடு மலையிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடைய மாகாளி கூளியொடு
பிணநிணமு முணவுசெய்து பேயோடு மாடல்செய
வென்றதீரா
குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருட
கரடிபுலி திரிகடிய வாரான கானில்மிகு
குளிர்கணியி னிளமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவி
கொடியதொரு முயலகனின் மீதாடு வாருடைய
ஒருபுறம துறவளரு மாதாபெ ருவருள்செய்
குமரகுரு பரவமரர் வாழுடர் பேணவருள் தம்பிரானே.

263. உறவின்முறை யோர்க்கு முறுதுயரம் வாய்த்து
உளமுருகு தீர்த்தி வுடனூடே
உடலைமுடி வாக்கு நெடியதொரு காட்டி
லுயர்கனலை மூட்டி விடஆவி
மறலிமற மார்த்த கயிறுதனை வீக்கி
வலியினொடு தாக்கி வளையாமுன்
மனமுமுனி வேட்கை மிகவுமுன தாட்கள்
மகிழ்வியல்கொ டேத்த மதிதாராய்
பிறைநுதலி சேற்க ணமையரிவை வேட்பு
வரையில்மற வோர்க்கு மகவாகப்
பிறிதுருவில் வாய்த்து நிறைதினைகள் காத்த
பிடியினடி போற்று மணவாளா
அறுகுபிறை யாத்தி அலைசலமு மார்த்த
அடர்சடையி னார்க்கும் அறிவீவாய்
அடரவரு போர்க்கை அசுரர்கிளை மாய்த்து
அமரர்சிறை மீட்ட பெருமாளே.

264. உறவு சிங்கிகள் காமா காரிகள்
முறைம சங்கிக ளாசா வேசிகள்
உதடு கன்றிகள் நாணு வீணிகள் ககரேகை
உடைய கொங்கையின் மீதே தூசிகள்
பிணமெ னும்படி பேய்நீ ரூணிகள்
உணர்வை உண்டிடை சோர்கோ மாளிகள் கடல்ஞாலத்

தறவு நெஞ்சுபொ லாமா பாவிகள்
வறுமை தந்திடு பாழ்மூ தேவிகள்
அணிநெ ருங்கிக ளாசா பாஷண மடமாதர்
அழகு யர்ந்தபொய் மாயா ரூபிகள்
கலவி இன்பமெ னூவே சோருதல்
அலம லந்தடு மாறு தோர்கதி அருள்வாயே
பறவை என்கிற கூடார் மூவரண்
முறையி டுந்தமர் வானோர் தோரி
பகழி குன்றவி லாலே நீறெழ ஒருமூவர்
பதறி ஊனந்துவி டாதே தாள்பெற
அருள்பு ரிந்தபி ரானார் மாபதி
பாவு கந்தசு வாமீ கானகம் அதின்மேவும்
குறவர் தங்கள்பி ரானே மாமரம்
நெறுநெ றென்றடி வேரோ டேநிலை
குலைய வென்றிகொள் வேலே ஏவிய வயலூரா
குயில்க ளன்றில்கள் கூகூ கூவென
மயில்கள் தங்கிய தேன்வீழ் காமிசை
குலவு செந்திலின் மீதே மேவிய பெருமாளே.

265. உற்பா தப்பூ தக்கா யத்தே
யொத்தோ டித்தத் தியல்காலை
உட்பூ ரித்தே சற்றே சற்றே
யுக்கா ரித்தற் புதனேரும்
அற்பா யிற்றாய் நிற்பா னைப்போ
லப்பா வித்துத் திரிவேனுக்
கப்பா சத்தா லெட்டா அப்பா
லைப்போ தத்தைப் புரிவாயே
பொற்பார் பொற்பார் புத்தே ளிர்க்கா
கப்போய் முட்டிக் கிரிசாடிப்
புக்கா ழிச்சூழ் கிட்டா கிச்சூர்
பொட்டா கக்குத் தியவேலா

முற்பா டப்பா டற்றா ருக்கோர்
முட்பா டற்கப் பொருளீவாய்
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமானே.

266. உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறு
உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன் மலைபோலே
கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு பொருபோதே
கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறும்பொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில்முதுகினில் வருவாயே
வினைத்த லந்தனி லலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெ யுகுதசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா
மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை யுடையோனே
தினத்தி னஞ்சதுர் மறைமுனி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி னவரொடு
சினத்தை நிந்தனை செயுமுனி வரர்தொழ மகிழ்வோனே
தெனத்தெ னந்தன எனவரி அளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமானே.

267. ஊனத் தசை தோல்கள் சுமந்த காயப்பொதி மாயமிகுந்த
ஊசற்சுடு நாறு குரம்பை மறைநாலும்
ஓதப்படு நாலுமுகன்ற னாலுற்றிடு கோலமெழுந்து
ஓடித்தடு மாறியுழன்று தளர்வாகிக்

கூனித்தடி யோடுநடந்து ஈனப்படு கோழைமிகுந்த
கூளச்சட மீதையுகந்து புவிமீதே
கூசப்பிரமாணப்ரபஞ்சமாயக்கொடுநோய்களகன்று
கோலக்கழ லேபெறவின்று அருள்வாயே
சேனக்குருகூடலிலன்றுஞானத்தமிழ்நூல்கள்பகர்ந்து
சேனைச்சம ணோர்கழுவின்கண் மிசையேறத்
தீரத்திரு நீறுபுரிந்து மீனக்கொடி யோனுடல்துன்று
தீமைப்பிணி தீரவுவந்த குருநாதா
கானச்சிறு மானைநினைந்து ஏனற்புன மீதுநடந்து
காதற்கிளி யோடுமொழிந்து சிலைவேடர்
காணக்கணி யாகவளர்ந்து ஞானக்குற மானைமணந்து
காழிப்பதி மேவியுகந்த பெருமாளே.

**268.** ஊனாரு முட்பிணியு மாகவி தத்தவுட
லூதாரி பட்டொழிய உயிர்போனால்
ஊரார்கு வித்துவர ஆவாவெ னக்குறுகி
ஓயாமு ழக்கமெழ அழுதோய
நானாவி தச்சிவிகை மேலேறி டத்தியது
நாறாதெ டுத்தடவி எரியூடே
நாணாமல் வைத்துவிட நீறாமெ னிப்பிறவி
நாடாதெ னக்குனருள் புரிவாயே
மானாக துத்திமுடி மீதேறி நத்தமிடு
மாயோனு மட்டொழுகு மலர்மீதே
வாழ்வாயி ருக்குமொரு வேதாவு மெட்டிசையும்
வானோரு மட்டகுல கிரியாவும்
ஆனாவ ரக்கருடன் வானோர்பி ழைக்கவரு
மாலால முற்றவமு தயில்வோன்முன்
ஆசார பத்தியுடன் ஞானாக மத்தையரு
ளாடானை நித்தமுறை பெருமாளே.

**269.** ஊனுந் தசையுடல் தானொன் பதுவழி
யூருங் கருவழி ஒருகோடி
ஓதும் பலகலை கீதஞ் சகலமு
மோரும் படியுன தருள்பாடி

நானுன் திருவடி பேணும் படியிரு
போதுங் கருணையில் மறவாதுன்
நாமம் புகழ்பவர் பாதந் தொழவினி
நாடும் படியருள் புரிவாயே
கானுந் திகழ்கதி ரோனுஞ் சசியொடு
காலுங் கனுநடை உடையோனும்
காருங் கடல்வரை நீருந் தருகயி
லாயன் கழல்தொழும் இமையோரும்
வானிந் திரனொடு மாலும் பிரமனும்
வாழும் படிவிடும் வடிவேலா
மாயம் பலபுரி சூரன் பொடிபட
வாள்கொண் டமர்செய்த பெருமாளே.

270. ஊனே தானா யோயா நோயா
லூசா டூசற் குடில்பேணு
ஓதா மோதா வாதா காதே
லோகா சாரத் துளம்வேறாய்
நானே நீயாய் நீயே நானாய்
நாரு வேதப் பொருளாலும்
நாடா வீடா யீடே றாதே
நாயேன் மாயக் கடவேனோ
வானே காலே தீயே நீரே
பாரே பாருக் குரியோனே
மாயா மானே கோனே மானார்
வாழ்வே கோழிக் கொடியோனே
தேனே தேனீள் கானா றாய்வீழ்
சீரா ளூரிற் றிருவான
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

271. ஊனே றெலும்பு சீசீ மலங்க
ளோடே நரம்பு கசுமாலம்
ஊழ்நோ யடைந்து மாசா னமண்டு
மூனோ டுழன்ற கடைநாயேன்

நாளு ரொடுங்க நாளுர் வணங்க
நாளுர் மகிழ்ந்து உனையோத
நாளு ரிரங்க நாளு ருணங்க
நாளுர் நடந்து விழநாளுர்
தானே புணர்ந்து தானே அறிந்து
தானே மகிழ்ந்து அருளூறித்
தாய்போல் பரிந்த தேனோ டுகந்து
தானே தழைந்து சிவமாகித்
தானே வளர்ந்து தானே இருந்த
தார்வே ணிஎந்தை அருள்பாலா
சாலோக தொண்டர் சாமீப தொண்டர்
சாரூப தொண்டர் பெருமாளே.

**272.** ஊனோடு வாதுயிர் தரித்து மட்டற
ஊசாடு பாழ்குடி லெடுத்த திற்படி
ஓயாத மாமய லுழற்றி னிற்படு வம்பனேனை
ஊதாரி யாய்விடு சமத்தில் நிற்பது
மாராத காதலை மனத்தில் வைப்பது
மூரோடு போயெதிர் பிணக்கி னிற்பது முந்திடாதே
தேனூறு வாய்மொழி பரத்தை யர்க்கொரு
நாய்போல வேயவர் வசத்தில் நிற்பது
சீர்கேட தாய்விடு சிறுப்பி ளைத்தனம் என்றுநீபச்
சீதாள மாமலர் தொடுத்த பத்தர்கள்
சீராடி நாண்மல ரெனப்ரி யப்படு
சீபாத போதக மறுக்ர கிப்பதும் எந்தநாளோ
மாளுக பாயலில் படுக்கை இட்டவர்
மாமேரு வாரியில் திரித்து விட்டவர்
மாடோடு போய்வரு மிடைக்கு லத்தவர் அன்றுவாவி
வாய்நாக மோலிட பிடித்த சக்கர
வாளேவி யேகர விளைத்த றித்தவர்
மாமாய ளுவுல களித்த வித்தகர் தங்கைவாழ்வே
காளுரு மாமலை தினைப்பு னத்தினில்
கால்மேல்வி ழாவொரு குறச்சி றுக்கியைக்
காணுது போயியல் புணர்ச்சி இட்டருள் கந்தவேளே

காரேழு மாமலை இடித்து ருக்கெட
காராழி ஏழுவை கலக்கி விட்டுயர்
காவான நாடர்கள் பகைச்ச வட்டிய தம்பிரானே.

**273.** எகினி னம்பழி நாடக மாடிகள்
மயிலெ னுஞ்செய லாகி நேரல்குல்
இசையி டுங்குர லார்கட னுளிகள் வெகுமோகம்
எனவி ழுந்திட வார்முலை மேல்துகி
லலைய வுந்திரி வாரெவ ராயினு
மிளகு கண்சுழல் வார்விலை வேசியர் வலைவீசும்
அகித வஞ்சக பாவனை யால்மயல்
கொடுவி ழுந்திட ராகமு நோய்பிணி
யதிக முங்கொடு நாயடி யேனினி உழலாமல்
அமுத மந்திர ஞானொப தேசமு
மருளி யன்புற வேமுரு காவென
அருள்பு குந்திட வேகழ லார்கழல் அருள்வாயே
ககன விஞ்சையர் கோவென வேகுவ
டவுணர் சிந்திட வேகடல் தீவுகள்
கமற வெந்தழல் வேல்விடு சேவக முருகோனே
கரிநெ டும்புலி தோலுடை யாரெனை
யடிமை கொண்டசு வாமிச தாசிவ
கடவு ளெந்தையர் பாகம்வி டாவுமை அருள்பாலா
செகமு மண்டமு மோருரு வாய்நிறை
நெடிய அம்புயல் மேனிய னாரரி
திருவு றைந்துள மார்பக னார்திரு மருகோனே
தினைவ னந்தனில் வாழ்வளி நாயகி
வளர்த னம்புதை மார்பழ காமிகு
திலக பந்தணை மாநகர் மேவிய பெருமாளே.

**274.** எங்கேனு மொருவர்வர அங்கேக ணினிதுகொடு
இங்கேவ ருனதுமயல் தரியாரென்
றிந்தாவெ னினியவிதழ் தந்தேனை உறமருவ
என்றாசை குழையவிழி யிணையாடித்

தங்காம லவருடைய உண்டான பொருளுயிர்கள்
சந்தேக மறவெபறி கொளுமாளுர்
சங்கீத கலவிகல மென்றோது முதகிவிட
தண்பாரு முனதருளை அருள்வாயே
சங்கோடு திகிரியது கொண்டேயு நிரைபிறகு
சந்தாரும் வெதிருகுழ லதுவூதித்
தன்காதல் தனைஉகள என்றேழு மடவியர்கள்
தங்கூறை கொடுமரமி லதுவேறுஞ்
சிங்கார அரிமருக பங்கேரு கனுமருள
சென்றேயும் அமராரு சிறைமீளச்
செண்டாடி அசுரர்களை வென்றாடி அடியர்தொழ
தென்சேரி கிரியில்வளர் பெருமாளே.

275\. எட்டுட னொருதுளை வாயாகு மிகுபசு
மட்கல மிருவினை தோயாசு மிகுபிணி
இட்டடை செயவொரு போதேனு முடலுயிர்
நிலையாது
எப்படி உயர்கதி நாமேறு வகையினி
எட்பகி ரினுமிது வோராது தமதம
திச்சையி னிடர்தரு பேராசை யுறுகடல் அதிலேவீழ்
முட்டர்க ணெறியினில் வீழாத கடமொடு
முப்பதி னறுபதின் மேலாறு வழிவரு
முற்றுத லறிவரு ஞாஞேய முழும்வெளி யொளியாக
முக்குண மதுகெட நாளுவ தெனவரு
முத்திரை அழிதர வேயோக மதுவுணர்
முத்தமிழ்தெரிகனிவாயாலுமருளுவதொருநாளோ
திட்டென எதிர்வரு மாகாளி விசையொடு
திக்கிட தரிகிட தீதோதி திமியென
சித்திர நடமிடு மாதேவர் தமதிரு செவிமீதே
செப்புக வெனமுன மோதாம லுணர்வுறு
சிற்சுக பரவெளி ஈதாகும் எனவவர்
தெக்ஷண செவிதனி லேபோத மருளிய குருநாதா

மட்டற அமர்பொரு சூராதி பதியுடல்
பொட்டெழ முடுகிவை வேலேவி யடல்புரி
மற்புய மரகத மாதோ கைமிசைநடம் இடுவோனே
வச்சிர கரதல வானோர்கள் பதிநகர்
பொற்புறு கரிபரி தேர்வீதி ய்ழகியல்
மட்டுறு கவுரிநன் மாயூர மேவிய பெருமாளே.

**276.** எதிரி லாத பத்தி தனைமேவி
இனிய தாணி னைப்பை இருபோதும்
இதய வாரி திக்கு ளுறவாகி
எனது ளேசி றக்க அருள்வாயே
கதிர காம வெற்பி லுறைவோனே
கனக மேரு ஒத்த புயவீரா
மதுர வாணி உற்ற கழலோனே
வழுதி கூனி மிர்த்த பெருமாளே.

**277.** எதிரெதிர்கண் டோடிஆட்கள் களவதறிந் தாசைபூட்டி
இடறிவிழும் பாழிகாட்டு மடமாதர்
இறைவைகொளுங்கூவல்மூத்தகறையொழுகுந்தாரைபார்க்கி
விளைமைகொடுங் காதலாற்றில் நிலையாத
அதிவிகடம் பீழலாற்ற அழுகிவிழும் பீறலூத்தை
அடையுமிடஞ் சீலைதீற்று கருவாயில்
அருவிசலம் பாயுமோட்டை அடைவுகெடுந் தூரைபாழ்த்த
அளறிலழுந் தாமலாட்கொ டருள்வாயே
விதுரனெடுந் த்ரோணமேற்று எதிர்பொருமம் பாதியேற்றி
விரகினெழுந் தோயநூற்று வருமாள
விரவுசெயன் காளிகாட்டில் வருதருமன் தூதனீற்ற
விஜயனெடும் பாகதீர்த்தன் மருகோனே
மதியணையுஞ் சோலைஆர்த்து மதிவளர்சந் தானகோட்டின்
வளமைமிகும் பேறுகாட்டி யவிராலி
மலைமருவும் பாதியேற்றி மணமுமிழ்சந் தானகோட்டு
வழியருளின் பேறுகாட்டு பெருமாளே.

**278.** எதிரொருவ ரிலைஉலகி லெனவலகு சிலுகுவிரு
திட்டுக்ரி யைக்கேய பூந்துபாரின்
இடையுழல்வ சுழலுவன சமயவித சகலகலை
எட்டெட்டு மெட்டாத மந்த்ரவாளால்
விதிவழியி னுயிர்கவர வருகொடிய எமபடரை
வெட்டித்து ணித்தாண்மை கொண்டுநீபம்
விளவினிள இலைதளவு குவளைகமழ் பவளநிற
வெட்சித்தி ருத்தாள்வ ணங்குவேனோ
திதிபுதல்வ ரொடுபொருது குருதிநதி முழுகியொளிர்
செக்கச்செ வத்தேறு செங்கைவேலா
சிகரகிரி தகரவிடு முருவமர கதகலப
சித்ரக்க கத்தேறும் எம்பிரானே
முதியபதி னொருவிடையர் முடுகுவன பரிககன
முட்டச்செ லுத்தாறி ரண்டுதேரார்
மொழியுமிரு அசுவினிக ளிருசதுவி தவசுவெனு
முப்பத்து முத்தேவர் தம்பிரானே.

**279.** எதிர்பொருது கவிகடின
கச்சுக் கனும்பொருது குத்தித் திறந்தமலை
இவைகளென வதிம்ருகம
தப்பட் டுநின்றுருகி முத்துச் செறிந்தவட
மெனுநிகள மவையறவு
தைத்திட் டணைந்துகிரி னிற்கொத் துமங்குசநெ
ருங்குபாகர்
எதிர்பரவ உரமிசைது
கைத்துக் கிடந்துடல்ப தைக்கக் கடிந்துமிக
இரதிபதி மணிமவுலி
எற்றித் ரியம்பகனு முட்கத் திரண்டிளகி
இளைஞருயிர் கவளமென
மட்டித் தசைந்தெதிர்பு டைத்துச்சி னந்துபொரு
கொங்கையானை

பொதுவில்விலை இடுமகளிர்
பத்மப் பதந்தழுவி ஒக்கத் துவண்டமளி
புகவிணைய வரிபரவு
நச்சுக் கருங்கயல்கள் செக்கச் சிவந்தமுது
பொதியுமொழி பதறவள
கக்கற் றையுங்குலைய முத்தத் துடன்கருணை
தந்துமேல்வீழ்
புதுமைதரு கலவிவலை
யிற்பட் டழுந்தியுயிர் தட்டுப் படுந்திமிர
புணரியுத தி பில்மறுகி
மட்டற் றவிந்திரிய சட்டைக் குரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக
சுத்தக் கொடுங்கிரியி னிர்த்தச் சரண்களைம
றந்திடேனே
திதிதிதிதி திதிதிதிதி
தித்தித் திதிந்திதிதி தத்தத் ததந்ததத
தெததததெத தெததததெத
தெத்தெத் தெதந்ததெத திக்கட் டிகண்டிகட
ஜெகணகெண கெணஜெகுத
தெத்தித் ரியந்திரித தக்கத் தகுந்தகுர்த திந்திதீதோ
திகுடதிகு தொகுடதொகு
திக்கட் டிகண்டிகட டக்கட் டகண்டகட
டிடிடுடுடு டிடிடுடுடு
டிக்கட் டிகண்டிகட டுட்டுட் டுடுண்டுடுடு
திகுகுதிகு திகுகுகுகு
திக்குத் திகுந்திகுகு குக்குக் குகுங்குகுகு
என்றுதாளம்
முதிர்திமிலை காடிகையி
டக்கைக் கொடுந்துடியு டுக்கைப் பெரும்பறைகள்
முழவுபல மொகுமொகென
ஒத்திக் கொடும்பிரம கத்திக் களும்பாவ
முகடுபுகு வெகுகொடிகள்
பக்கத் தெழுந்தலைய மிக்கக் கவந்தநிரை தங்கியாட

முதுகழுகு கொடிகருட
னொக்கத் திரண்டுவர உக்ரப் பெருங்குருதி
முழுகியெழு பயிரவர்ந
டித்திட் டகண்டமும்வெ டிக்கத் துணிந்ததிர
முடுகிவரு நிசிசரரை
முட்டிச் சிரந்திருகி வெட்டிக் களம்பொருத
தம்பிரானே.

280. எத்தனைக லாதிசித்தங் கெத்தனைவி யாதிபித்தங்
கெத்தனைச ராசரத்தின் செடமான
எத்தனைவி டாவெருட்டங் கெத்தனைவ லாண்மைபற்றங்
கெத்தனைகொ லூனைநித்தம் பசியாறல்
பித்தனைய னைகட்டுண் டிப்படிகெ டாமல்முத்தம்
பெற்றிடநி னைசனத்தின் செயலான
பெற்றியுமொ ராதுநிற்குந் தத்தகுரு தாரநிற்கும்
பெத்தமுமொ ராதுநிற்குங் கழல்தாராய்
தத்தனத னதனத்தந் தத்தனத னதனத்தந்
தத்தனத னதனத்தந் தகுதீதோ
தக்குகுகு டுடுடுட்டுண் டிக்குகுகு டகுதத்தந்
தத்தனத னனனுர்த்துஞ் சதபேரி
சித்தர்கள்நி டாதர்வெற்பின் கொற்றவர்சு வாமிபத்தர்
திக்குகளொர் நாலிரட்டின் கிரிசூழச்
செக்கணரி மாகனைக்குஞ் சித்தணிகை வாழ்சிவப்பின்
செக்கர்நிற மாயிருக்கும் பெருமாளே.

281. எத்தனை கோடிகோடி விட்டுட லோடியாடி
எத்தனை கோடிபோன தளவேதோ
இப்படி மோகபோக மிப்படி யாகியாகி
இப்படி யாவதேது இனிமேலோ
சித்திடில் சீசிசீசி குத்திர மாயமாயை
சிக்கினி லாயுமாயும் அடியேனைச்
சித்தினி லாடலோடு முத்தமிழ் வாணரோது
சித்திர ஞானபாதம் அருள்வாயே

நித்தமு மோதுவார்கள் சித்தமெ வீடதாக
நிர்த்தம தாடுமாறு முகவோனே
நிட்கள ரூபர்பாதி பச்சுரு வானமூணு
நெட்டிலை சூலபாணி அருள்பாலா
பைத்தலை நீடுமாயி ரத்தனை மூதுபீறிப்
பற்றியே சாடிவீசு மயில்வீரா
*பச்சிள பூகபாளை செய்க்கயல் தாவுவேளூர்
பற்றிய மூவர்தேவர் பெருமாளே.

282. எத்தி இருகுழையை மோதி மீனமதின்
முட்டி இடறியம தூதர் போலமுகில்
எட்டி வயவர்கர வாளை வேல்முனையை எதிர்சீறி
எத்தி சையினுமொரு காம ராஜன்மிக
வெற்றி அரசுதனை ஆள வீசியடல்
எற்றி இளைஞருயிர் சோலு நீலவிழி மடமாதர்
வித்தை தனிலுருகி ஆசை ஆகியவர்
கைக்குள் மருவுபொரு ளான ஆகும்வரை
மெத்தை தனிலுருகி மோக மாகிவிட அதன்மேலே
வெட்க மிலைநடவு மேகு மேகுமினி
மற்ற வரையழையு மாத ரேயெனமுன்
விட்ட படிறிகடம் நேச ஆசைகெட அருள்வாயே
ஒத்த விரிகமுகு வாளை தாவுபுனல்
அத்தி நகரமர சான வாள்நிருபன்
ஒக்கு நினைவுமுனி லாமல் வாகுபல நிலைகூற
உற்ற தருமனடல் வீமன் வேல்விசையன்
வெற்றி நகுலசக தேவர் தேர்தனிலும்
ஒத்து முடுகிவிடு பாகன் வாளமரில் அசுரேசன்
பத்து முடிகள்துக ளாக வாகுவிரு
பத்து மொருகணையில் வீழ நேரவுணர்
பட்டு மடியவமர் மோது காளமுகில் மருகோனே

---

*பச்சிள மூகுபாளை யைக்கயல் மோதுசோலை சுற்றிய கூடல்
மேவு பெருமாளே.

பச்சை மயிலில்வரு வீர வேல்முருக
துட்ட நிருதர்குல கால வானவர்கள்
பத்தி உடனடியில் வீழ வாழ்வுதவு பெருமாளே.

283. எந்தத் திசையினும் அலையினும் உவரியில்
எந்தப் படியினு முகடினு முளபல
எந்தச் சடலமும் உயிரிசை பிறவியின் உழலாதே
இந்தச் சடமுட னுயிர்நிலை பெறநளி
னம்பொற் கழலிணை களில்மரு மலர்கொடு
என்சித் தமுமன முருகிநல் சுருதியின் முறையோடே
சந்தித் தரகர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி அவையென தலைமிசை
தங்கப் புளகித மெழவிரு விழிபுனல் குதிபாயச்
சண்பைக் கொடியிடை விபுதையி னழகுமு
னந்தத் திருநட மிடுசர ணழகுற
சந்தச் சபைதனி லெனதுள முருகவும் வருவாயே
தொந்தத் திகுகுட தகுகுட டிமிடிமி
தந்தத் தனதன டுடுடுடு டமடம
துங்கத் திசைமலை உவரியு மறுகசல் லரிபேரி
துங்கச் சிலைமணி கலகல கலினென
சிந்தச் சுரர்மல ரயன்மறை புகழ்தர
துன்புற்றவுணர்கள்நமனுலகுறவிடும் அயில்வேலா
கந்தச் சடைமுடி கனல்வடி வடலணி
எந்தைக் குயிரொரு மலைமகள் மரகத
கந்தப் பரிமள தனகிரி உமையருள் இளையோனே
கஞ்சப் பதமிவர் திருமகள் குலமகள்
அம்பொற் கொடியிடை *புணரரி மருகநல்
கந்தப்பொழில்திகழ்குருமலைமருவிய பெருமாளே.

*அரசியொ டருணையில், கந்தப் பதமென மயில்மிசை பரவிய பெருமாளே.

284. எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களில்
என்றுந்துயர் பொன்றும்படி ஒருநாளே
இன்பந்தரு செம்பொன்கழ லுந்தும்கழல் தந்தும்பினை
என்றும்படி பந்தங்கெட மயிலேறி
வந்தும்பிர சண்டம்பகி ரண்டம்புவி யெங்குந்திசை
மண்டும்படி நின்றுஞ்சுட ரொளிபோலும்
வஞ்சங்குடி கொண்டுந்திரி நெஞ்சன்துக ளென்றுங்கொளும்
வண்டன்தமி யன்றன்பவம் ஒழியாதோ
தந்தந்தன திந்திந்திமி யென்றும்பல சஞ்சங்கொடு
தஞ்சம்புரி கொஞ்சுஞ்சிறு மணியாரம்
சந்தந்தொனி கண்டும்புய லங்கன்சிவ னம்பன்பதி
சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்
கந்தன்குக னென்றன்குரு வென்றுந்தொழும் அன்பன்கவி
கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே
கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல் தங்கும்பொழில்
*கந்தங்கொள்ப ரங்குன்றமர் பெருமாளே.

285. எருவாய் கருவாய் தனிலே யுருவா
யிதுவே பயிராய் விளைவாகி
இவர்போ யவரா யவர்போ யிவரா
யிதுவே தொடர்பாய் வெறிபோல
ஒருதா யிருதாய் பலகோ டியதா
யுடனே யவமா யழியாதே
ஒருகால் முருகா பரமா குமரா
உயிர்கா வெனவோ தருள்தாராய்
முருகா வெனவோர் தரமோ தடியார்
முடிமே லிருதாள் அருள்வோனே
முனிவோ ரமரோர் முறையோ வெனவே
முதுசூ ரரமேல் விடும்வேலா

*கந்தன்குடி யின்றங்கிய.

திருமால் பிரமா அறியா தவர்சீர்
சிறுவா திருமால் மருகோனே
*செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ்
திருவீ ழியில்வாழ் பெருமாளே.

286. எலுப்புத் தோல்மயிர் நாடிகு ழாமிடை
இறுக்குச் சீபுழு வோடடை மூளைகள்
இரத்தச் சாகர நீர்மல மேவிய கும்பியோடை
இளைப்புச் சோகைகள் வாதம்வி லாவலி
உளைப்புச் சூலையொ டேவலு வாகிய
இரைப்புக் கேவல மூலவி யாதியொ டண்டவாதம்
குலைப்புக் காய்கனல் நீரிழி வீளையொ
டளைப்புக் காதடை கூனல்வி சூசிகை
குருட்டுக் கால்முட மூமையு ளூடறு கண்டமாலை
குடிப்புக் கூனமி தேசத மாமென
எடுத்துப் பாழ்வினை யாலுழல் நாயெனு
னிடத்துத் தாள்பெற ஞானச தாசிவ அன்புதாராய்
கெலிக்கப் போர்பொரு சூர்கு ழாமுமி
ழிரத்தச் சேறெழ தேர்பரி யாளிகள்
கெடுத்திட் டேகடல் சூர்கிரி தூள்பட கண்டவேலா
கிளர்ப்பொற் றேளிச ராசர மேவியெ
யசைத்துப் பூசைகொள் ஆயிப ராபரி
கிழப்பொற் காளைமே லேறுமெ நாயகி பங்கின்மேவும்
வலித்துத் தோள்மலை ராவண னானவன்
எடுத்துப் போதுடல் கீழ்விழ வேபணி
மகிழ்ப்பொற் பாதசி வாயந மோவர சம்புபாலா
மலைக்கொப் பாமுலை யாள்குற மாதினை
அணைத்துச் சீர்புலி யூர்பர மாகிய
வடக்குக் கோபுர வாசலில் மேவிய தம்பிரானே.

287. எலுப்பு நாடிக ளப்பொடி ரத்தமொ
டழுக்கு மூளைகள் மச்சொடு கொட்புழு
விருக்கும் வீடிதி லெத்தனை தத்துவ சதிகாரர்

*செழுமா பதிபா லகனே முருகா திருவா ருரைசேர் பெருமாளே.

இறப்பர் சூதக வர்ச்சுத ரப்பதி
உழப்பர் பூமித ரிப்பர்பி றப்புடன்
இருப்பர் வீடுகள் கட்டிய லட்டுறு சமுசாரம்
கெலிப்பர் மால்வலை பட்டுறு துட்டர்கள்
அழிப்பர் மாதவ முற்றுமி னைக்கிலர்
கெடுப்பர் யாரையு மித்திர குத்திரர் கொலைகாரர்
கிருத்தர் கோளகர் பெற்றுதி ரிக்கள
வரிப்பர் சூடக ரெத்தனை வெப்பிணி
கெலிக்கும் வீடதை நத்தியெ டுத்திவண் உழல்வேனோ
ஒலிப்பல் பேரிகை உக்ரவ மர்க்களம்
எதிர்த்த சூரரை வெட்டியி ருட்கிரி
உடைத்து வானவர் சித்தர்து தித்திட விடும்வேலா
உலுத்த ராவண னைச்சிர மிற்றிட
வதைத்து மாபலி யைச்சிறை வைத்தவன்
உலக்கை ராவிந டுக்கடல் விட்டவன் மருகோனே
வலிக்க வேதனைக் குட்டிந டித்தொரு
செகத்தை ஈனுமெம் பச்சைநி றத்தியை
மணத்த தாதைப ரப்பம ருக்கருள் குருநாதா
வனத்தில் வாழும யிற்குல மொத்திடு
குறத்தி யாரைம யக்கிய ணைத்துள
மகிழ்ச்சி யோடுதி ருத்தணி பற்றிய பெருமாளே.

288. எழுகடல் மணலை அளவிடி னதிக
மெனதிடர் பிறவி யவதாரம்
இனியுன தபய மெனதுயி ருடலு
மினியுடல் விடுக முடியாது
கழுகொடு நரியு மெரிபுவி மறலி
கமலனு மிகவும் அயர்வானார்
கடனுன தபய மடிமையு னடிமை
கடுகியு னடிகள் தருவாயே
விழுதிக ழுழுகி மரகத வடிவி
விமலிமு னருளு முருகோனே
விரிதல மெரிய குலகிரி நெரிய
விசைபெறு மயிலில் வருவோனே

எழுகடல் குமுற அவுணர்க ளுயிரை
　　யிரைகொளும் அயிலை　　　　　யுடையோனே
இமையவர் முநிவர் பரவிய புலியு
　　ரினில்நட மருவு　　　　　பெருமாளே.

289. எழுகுநிறை நாபி அரிபிரமர் சோதி
　　இலகுமரன் மூவர்　　　　　முதலானோர்
இறைவியெனு மாதி பரை முலையி லூறி
　　எழுமமிர்தம் நாறு　　　　　கனிவாயா
புழுகொழுகு காழி கவுணியரில் ஞான
　　புநிதனென ஏடு　　　　　தமிழாலே
புனலிலெதி ரேற அமணர்கழு வேற
　　பொருத கவிவீர　　　　　குருநாதா
மழுவுழைக பால வலியதிரி சூல
　　மணிகரவி நோதர்　　　　　அருள்பாலா
மலரயனை நீடு சிறைகொடவன் வேலை
　　வளமைபெற வேசெய்　　　　　முருகோனே
கழுகுதொழு வேத கிரிசிகரி வீறு
　　கதிருலவு வாசல்　　　　　நிறைவானோர்
கடலொலிய தான தமிழ்மறைக ளோது
　　கதலிவன மேவு　　　　　பெருமாளே.

290. எழுதிகழ் புவன நொடியள வதனில்
　　இயல்பெறு மயிலில்　　　　　வருவோனே
இமையவர் பரவி அடிதொழ அவுணர்
　　மடிவுற விடுவ　　　　　தொருவேலா
வழுதியர் தமிழி னொருபொரு ளதனை
　　வழிபட மொழியும்　　　　　முருகேசா
மலரடி பணியு மடமகள் பசலை
　　மயல்கொடு தளர்வ　　　　　தழகோதான்
முழுகிய புனலி னிமணி தரள
　　முதிரொளி பவள　　　　　மிகவாரி
முறமொடு புதரில் மறமகள் சொரியு
　　முதுவளி மலையில்　　　　　வருவோனே

பழையவெவ் வினைகள் பொடிபட அருளி
அடியவ ரிதயம் உறைவோனே
*பருவரை துணிய வொருகணை தெரிவ
பலமலை உடைய பெருமாளே.

291. எழுந்திடுங் கப்புச் செழுங்குரும் பைக்கொத்
திரண்டுகண் பட்டிட் டிளையோர்நெஞ்
சிசைந்திசைந் தெட்டிக் கசிந்தசைந் திட்டிட்
டிணங்குபொன் செப்புத் தனமாதர்
அழுங்கலங் கத்துக் குழைந் துமன் பற்றற்
றணைந்துபின் பற்றற் றகல்மாயத்
தழுங்குநெஞ் சத்துப் புழுங்குபுண் பட்டிட்
டலைந்தலைந் தெய்த்திட் டுழல்வேனோ
பழம்பெருந் தித்திப் புறுங்கரும் பப்பத்
துடன்பெருங் கைக்குட் படவாரிப்
பரந்தெழுந் தொப்பைக் கருந்திமுன் பெற்குப்
பதந்தருஞ் சுத்தற் கிளையோனே
தழைந்தெழுந் தொத்துத் தடங்கைகொண் டப்பிச்
சலம்பிளந் தெற்றிப் பொருசூரத்
தடம்பெருங் கொக்கைத் தொடர்ந்துடன் புக்குத்
தடிந்திடுஞ் சொக்கப் பெருமாளே.

292. எழுபிறவி நீர்நிலத்தி லிருவினைகள் வேர்பிடித்து
இடர்முளைக ளேமுளைத்து வளர்மாயை
எனுமுல்லை யேபணைத்து விரகுகுழை யேகுழைத்து
இருளிலைக ளேதழைத்து மிகநீளும்
இழவுநனை யேபிடித்து மரணபழ மேபழுத்து
இடியுமுடல் மாமரத்தின் அருநீழல்
இசையில்விழ ஆதபத்தி யழியுமுன மேயெனக்கு
ளினியதொரு போதகத்தை அருள்வாயே
வழுவுநெறி பேசுதக்க னிசையுமக சாலையுற்ற
மதியிரவி தேவர்வஜ்ர படையாளி

*பாவரு விசய புரமிசை யமரர் பதிதொழ மருவும் பெருமாளே.

மலர்கமல யோனிசக்ர வளைமருவு பாணிவிக்ர
மறையவெதிர் வீரவுக்ரர் புதல்வோனே
அழகியக லாபகற்றை விகடமயி லேறியெட்டு
மசலமிசை வாகையிட்டு வரும்வேலா
அடலசுரர் சேனைகெட்டு முறியமிக மோதிவெட்டி
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே.

293. எற்று வற்று மட்டா கத்தீ
யிற்காய் செக்கட் பிறைவாளே
இற்றார் கைப்பா சத்தே கட்டா
டிக்கோ பித்துக் கொடுபோமுன்
உற்றார் பெற்றார் சுற்று நிற்பா
ரொட்டோம் விட்டுக் கழியீரென்
றுற்றே றுற்றே பற்று நிற்பா
ரக்கா லத்துக் குறவார்தான்
பற்றார் மற்று டைக்கே குத்தா
பற்று னப்பிற் களைவோனே
பச்சே னற்கா னத்தே நிற்பாள்
பொற்பா தத்திற் பணிவோனே
முற்று வற்று மெய்ப்போ தத்தே
உற்றார் சித்தத் துறைவோனே
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

294. எனக்குச்சற் றுனக்குச்சற்
றெனக்கத்தத் தவர்க்கிச்சைப்
பொருட்பொற்றட் டிடிக்கைக்குக் குடில்மாயம்
எனக்கட்டைக் கிடைப்பட்டிட்
டனற்சுட்டிட் டடக்கைக்குப்
பிறக்கைக்குத் தலத்திற்புக் கிடியாமுன்
தினைக்குட்சித் திரக்கொச்சைக்
குறத்தத்தைத் தனத்தைப்பொற்
பெறச்செச்சைப் புயத்தொப்பித் தணிவோனே

செருக்கிச்சற் றுறுக்கிச்சொற்
பிரட்டத்துட் டரைத்தப்பித்
திரட்டப்பிக் கழற்செப்பத் திறல்தாராய்
பணைக்கைக்கொக் கணைத்தட்டுப்
படக்குத்திப் படச்சர்ப்பப்
பணத்துட்கக் கடற்றுட்கப் பொரும்வேலா
பரப்பற்றுச் சுருக்கற்றுப்
பதைப்பற்றுத் திகைப்பற்றுப்
பலிப்பப்பத் தருக்கொப்பித் தருள்வாழ்வே
கணிக்குத்திக் கணைத்துச்சுற்
றிடப்பச்சைக் கனப்பக்ஷிக்
கிடைப்புக்குக் களிப்புக்குத் திரிவோனே
கலிக்கொப்பிற் சலிப்பற்றுக்
கதிக்கொத்திட் டெழிற்சத்திக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

295. எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலந் தனிலோயா
எடுத்திடு காயந் தனைக்கொடு மாயும்
இலச்சையி லாதென் பவமாற
உனைப்பல நாளுந் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் குழுமேவி
உணர்த்திய போதந் தனைப்பிரி யாதொண்
பொலச்சர ணனுந் தொழுவேனோ
வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேல்கொண் டவனீயே
விளப்பென மேலென் றிடக்கய னரும்
விருப்புற வேதம் புகல்வோனே
சினத்தொடு சூரன் தனைப்பொரு போரின்
சிரத்தினை மாறும் முருகோனே
தினைப்புன மேவுங் குறக்கொடி யோடுந்
திருத்தணி மேவும் பெருமாளே.

296. ஏனைய டைந்த குட்டம் வினைமி குந்த பித்தம்
எரிவ ழங்கு வெப்பு வலிபேதி
இசைவி னின்ற லேக்கு முயல கன்கு லைப்பொ
டிரும லென்றி வைப்பும் இவையோடே
மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாமுன்
மருவி வந்தெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்
நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நினைவில் வந்து தித்த கதிர்வேலா
நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றில் நிற்கு முருகோனே
தினைவி ளங்க லுற்ற புனவி ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா
திசைமு கன்தி கைக்க அசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட, பெருமாளே.

297. என்பந்தவி னைத்தொடர் போக்கிவி சையமாகி
இன்பந்தனை உற்றும காப்ரியம் அதுவாகி
அன்புந்திய பொற்கிணி பாற்கடல் அமுதான
அந்தந்தனி லிச்சைகொ ளாஸ்பதம் அருள்வாயே
முனபுந்திநி னைத்துரு வாற்சிறு வடிவாகி
முன்திந்தியெ னப்பா தாத்துட னடமாடித்
தன்பந்தம றத்தவ நோற்பவர் குறைதீரச்
சம்பந்தனெ னத்தமிழ் தேக்கிய பெருமாளே.

298. என்னால் பிறக்கவும் என்னா லிறக்கவும்
என்னால் துதிக்கவுங் கண்களாலே
என்னா லழைக்கவும் என்னால் நடக்கவும்
என்னா லிருக்கவும் பெண்டிர்வீடு
என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்
என்னால் சலிக்கவும் தொந்தநோயை
என்னா லெரிக்கவும் என்னால் நினைக்கவும்
என்னால் தரிக்கவும் இங்குநானார்

கன்ன ருரித்தவென் மன்ன வெனக்குரல்
 கர்ண மிர்தப்பதந் தந்தகோவே
கல்லார் மனத்துட னில்லா மனத்தவ
 கண்ண டியிற்றடங் கண்டவேலா
மன்ன னதக்கனை முன்னாள் முடித்தலை
 வன்வா ளியிற்கொளுந் தங்களுபன்
மன்ன குறத்தியின் *மன்ன வயற்பதி
 மன்ன மூவர்க்கொரு தம்பிரானே.

299. ஏக மாய்ப்பல வாய்ச்சிவ போக மாய்த்தெளி வாய்ச்சிவ
 மீதெ னுக்குரு வார்த்தையை உணராதே
ஏழு பார்க்கும்வி யாக்கிரன் யானெ னப்பரி தேர்க்கரி
 ஏறு மாப்பிரு மாப்புடன் அரசாகித்
தோகை மார்க்கொரு காற்றெரு லையாத வேட்கையி னுற்கெடு
 சோர்வி னுற்கொடி தாக்கையை இழவாமுன்
சோதி காட்டவ ராச்சுத நாத னூர்க்கருள் போற்றிய
 தூரி தாப்பர மார்த்தம தருள்வாயே
நாக மேற்றுயில் வார்க்கய னைபேர்க்கரி யார்க்கொரு
 ஞான வார்த்தையி னற்குரு பரனைய
நாத நாட்டமு ருப்பல காலும் வேட்கையி னுற்புகல்
 நாவ லோர்க்கரு ளார்பதம் அருள்வாழ்வே
வேக மேற்கொள ராப்புடை தோகை மேற்கொடு வேற்கொடு
 வீர மாக்குலை யாக்குல வரைசாய
மேலை நாட்டவர் பூக்கொடுவேலபோற்றியெனத்தொழ
 வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே.

300. ஏடுக்கொத் தாரலர் வார்குழ
 லாடப்பட் டாடைநெ கிழ்வாக
ஏதப்பொற் றோள்மிசை மூடிய கரமாதர்
ஏதத்தைப் பேசுப னுளிகள்
 வீசத்துக் காசைகொ டாடிகள்
 ஏறிட்டிட் டேணியை வீழ்விடு முழுமாயர்

*மன்ன ருணக்கிரி மன்ன மூவர்க்கொரு தம்பிரானே.

மாடொக்கக் கூடிய காமுகர்
சூழ்குற்றுக் காயமொ டேவரு
வாயுப்புற் சூலைவி யாதிகள் இவைமேலாய்

மாசுற்றுப் பாசம்வி டாசம
னூர்புக்குப் பாழ்நர கேவிழு
மாயத்தைச் சீவியு னூதர வருள்வாயே

தாடுட்டுட் டூடுடு டூடிமி
டூடெட்டுட் டூடுடு டாடமி
தானத்தத் தானத னாவென வெகுபேரி

தாளொத்தப் பூதப சாசுகள்
வாய்விட்டுச் சூரர்கள் சேனைகள்
சாகப்பொற் றேரைகயி லேறிய சதுரோனே

கூடற்கச் சாலைசி ராமலை
காவைப்பொற் காழிவெ ணேர்திகழ்
கோடைக்கச் சூர்கரு வூரிலும் உயர்வான

கோதிற்பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே.

301. ஏடுமலை ருற்ற ஆடல்மத னுய்க்கு
மேவதுப ழிக்கும் விழியாலே

ஏதையுமழிக்கு மாதர்தம யக்கி
லேமருவி மெத்த மருளாகி

நாடுநகர் மிக்க வீடுதன மக்கள்
நாரியர்கள் சுற்றம் இவைபேணும்

ஞானவுணர் வற்று நாளெழுபி றப்பும்
நாடிநர கத்தில் விழலாமோ

ஆடுமர வத்தை யோடிஉடல் குத்தி
யாடுமொரு பச்சை மயில்வீரா

ஆரணமு ரைக்கு மோனகவி டத்தில்
ஆருமுய நிற்கு முருகோனே

வேடுவர்பு னத்தில் நீடுமித ணத்தில்
மேவியகு றத்தி மணவாளா
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே.

302. எட்டி லேலவரை பாட்டி லேசில
நீட்டி லேயினி தென்றுதேடி
ஈட்டு மாபொருள் பாத்து ஞாதிக
லேற்ற மானகு லங்கள்பேசிக்
காட்டி லேவியல் நாட்டி லேபயில்
வீட்டி லேயுல கங்களே சக்
காக்கை நாய்நரி பேய்க்கு ழாமுண
யாக்கை மாய்வதெ தாழிந்திடாதோ
கோட்டு மாயிர நாட்ட னூடுறை
கோட்டு வாலிப மங்கைகோவே
கோத்த வேலையி லார்த்த சூர்பொரு
வேற்சி காவள துங்கவேளே
பூட்டு வார்சிலை கோட்டு வேடுவர்
பூட்கை சேர்குற மங்கைபாகா
பூத்த மாமலர் சாத்தி யேகழல்
போற்று தேவர்கள் தம்பிரானே.

303. எட்டின்வி திப்படி யேகொடு மாபுர
வீட்டில டைத்திசை வேகசை மூணதி
லேற்றிய டித்திட வேகட லோடம தெனவேகி
எற்குமெ னப்பொரு ளாசைபெ ணாசைகொ
ளாத்துவெ னத்திரி யாபரி யாதவ
மேற்றியி ருப்பிட மேயதி யாமலும் உடல்பேணிப்
பூட்டுச ரப்பளி யேமத னூமென
ஆட்டிய சைத்திய லேதிரி நாளையில்
பூத்தமல க்குகை யோபொதி சோறென கழுகாகம்
போற்றிந மக்கிரை யாமென வேகொள
நாட்டிலொ டுக்கென வேவிழு போதினில்
பூட்டுப ணிப்பத மாமயி லாவருள் புரிவாயே

வீட்டில டைத்தெரி யேயிடு பாதக
ஞுட்டைவி டுத்திட வேபல சூதினில்
வீழ்த்தவி திப்படி யேகுரு காவலர் வனமேபோய்
வேற்றுமை யுற்றுரு வோடியல் நாளது
பார்த்துமு டித்திட வேயொரு பாரத
மேற்புனை வித்தம காவிர மாயவன் மருகோனே
கோட்டைய ழித்தசு ரார்பதி கோவென
மூட்டியெ ரித்தப ராபர சேகர
கோத்தம ணிக்கதி ரேநிக ராகிய வடிவேலா
கூற்றும ரித்திட வேயுதை பார்வதி
யார்க்குமி னித்தபெ ணாகிய மான்மகள்
கோட்டுமு லைக்கதி பாகட வூருறை பெருமாளே.

304. ஏது புத்தியை யாவெ னக்கினி
யாரை நத்திடு வேன வத்தினி
லேயி றத்தல்கொ லோவெ னக்குநி தந்தைதாயென்
றேயி ருக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவர்
ஏச லிற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்
பாதம் வைத்திடை யாத ரித்துன
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
பார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனோடிப்
பால்மொ ழிக்குர லோல மிட்டிடில்
யாரெ டுப்பதெ னாவெ றுத்தழ
பார்வி டுப்பர்க ளோவெ னக்கிது சிந்தியாதோ
ஓத முற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
ஓட வெட்டிய பானு சத்திகை எங்கள்கோவே
ஓத மொய்ச்சடை ஆட உற்றமர்
மான்ம ழுக்கர மாட நற்கழல்
ஓசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே
மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர அற்புத கந்தவேளே

மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ்தி ருத்தணி மாம லைப்பதி தம்பிரானே.

305. ஏலப்பணி நீரணி மாதர்கள் கானத்தினு மேயுற வாடிடு
மீரத்தினு மேவளை சேர்கர மதனாலும்
ஏமக்கிரி மீதினி லேகரு நீலக்கய மேறிய னேரென
ஏதுற்றிடு மாதன மீதினு மயலாகிச்
சோலைக்குயில்போல்மொழியாலுமெதூசுற்றிடுநூலிடையாலுமெ
தோமிற்கத லீநிக ராகிய தொடையாலும்
சோமப்ரபை வீசிய மாமுக சாலத்தினு மாகடு வேல்விழி
சூதத்தினு நானவ மேதினம் உழல்வேனோ
ஆலப்பணி மீதினில் மாசறு மாழிக்கிடை யேதுயில் மாதவ
ஞானக்கினி தாயுத வியருள் நெடுமாயன்
ஆதித்திரு நேமியன் வாமன னீலப்புயல்நேர்தருமேனியன்
ஆரத்துள வார்திரு மார்பினன் மருகோனே
கோலக்கய மாவுரி போர்வையர் ஆலக்கடு வார்கள நாயகர்
கோவிற்பொறி யால்வரு மாசுத குமரேசா
கூர்முத்தமிழ் வாணர்கள் வீறிய சீரற்புத மாநக ராகிய
கூடற்பதி மீதினில் மேவிய பெருமாளே.

306. ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணா
ஈனனை வீணனை ஏடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலாநீள்
மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை இகழாதே
மாமணி நூபுர சீதள தாள்தனில்
வாழ்வுற ஈவதும் ஒருநாளே
நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை
நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயில் உடையோனே

தேவிம ணேன்மணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே
சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே.

307. ஏறு ணுலே நீறாய் மாயா வேளே வாசக் கணையாலே
ஏயாவேயாமாயாவேயாலாமேழோசைத்தொலையாலே
மாறு பூறு யீறாய் மாலாய் வாடா மானைக் கழியாதே
வாராய் பாராய் சேரா யானால் வாடா நீபத் தொடைதாராய்
சீறு வீறு ஈரேழ் பார்சூழ் சீரார் தோகைக் குமரேசா
தேவா சாவா மூவா நாதா தீரா கோடைப் பதியோனே
வேறாய் மாறு யாறு மாசூர் வேர்போய் வீழப் பொருதோனே
வேதா போதா வேலா பாலா வீரா வீரப் பெருமாளே.

308. ஏறுமயி லேறிவினை (109-ம் பக்கம் பார்க்க)

309. ஐங்கரனை ஒத்தமன மைம்புலம கற்றிவளர்
அந்திபக லற்றநினை வருள்வாயே
அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை
அன்பொடுது திக்கமனம் அருள்வாயே
தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திரவெ ளிக்குவழி அருள்வாயே
தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்
சம்ப்ரமவி தத்துடனெ அருள்வாயே
மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமனம்
முன்றனைநி னைத்தமைய அருள்வாயே
மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரட்சைபுரி
வந்தணைசு புத்தியினை அருள்வாயே
கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொருள் அருள்வாயே
குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கணகி ரிக்குள்வளர் பெருமாளே.

310. ஐந்து பூதமு மாறு சமயமு
மந்த்ர வேதபு ராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும் வெகுரூப
அண்ட ராதிச ராச ரமுமுயர்
புண்ட ரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானும் நிலவொடு வெயில்காலும்
சந்த்ர சூரியர் தாமு மசபையும்
விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக உறைவது சிவயோகம்
தங்க ளாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ
வந்த தானவர் சேனை கெடிபுக
இந்த்ர லோகம்வி பூதர் குடிபுக
மண்டு பூதப சாசு பசிகெட மயிடாரி
வன்கண் வீரிபி டாரி அரஹர
சங்க ராவென மேரு கிரிதலை
மண்டு தூளெழ வேலை உருவிய வயலூரா
வெந்த நீறணி வேணி இருடிகள்
பந்த பாசவி கார பரவச
வென்றி யானச மாதி முறுகுகல் முழைகூடும்
விண்டு மேல்மயி லாட இனியக
ளுண்டு காரளி பாட இதழிபொன்
விஞ்ச வீசுவி ராலி மலையுறை பெருமாளே.

311. ஐயுமுறு நோயு மையலுமவாவி
கையவரு பாயப் பலநூலின்
அள்ளல்கட வாது துள்ளியதில் பாயு
முள்ளமுழல் வாழ்வைக் கருதாசைப்
பொய்யுமக லாத மெய்யைவள ராவி
உய்யும்வகை யோகத் தணுகாதே
புல்லறிவு பேசி அல்லல்படு வேனை
நல்லவிரு தாளிற் புணர்வாயே

மெய்யபொழில் நீடு தையலைமு நாலு
செய்யபுய மீதுற் றணைவோனே
வெள்ளையிப மேறு வள்ளல்கிளை வாழ
வெள்ளமுது மாவைப் பொருதோனே
வையமுழு தாளு மையமயில் வீர
வல்லமுரு காமுத் தமிழ்வேளே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.

312. ஒக்க வண்டெழு கொண்டைகு லைந்திட
வெற்பெ னுங்கன கொங்கைகு ழைந்திட
உற்ப லங்கள்சி வந்துகு விந்திட இந்த்ரகோபம்
ஒத்த தொண்டைது வண்டமு தந்தர
மெச்சு தும்பிக ருங்குயில் மென்புற
ஒக்க மென்தொனி வந்துபி றந்திட அன்புகூர
மிக்க சந்திர னென்றுநி லங்களில்
விக்ர மஞ்செய்தி லங்குந கம்பட
மெத்தமென்பொரு ளன்பள வுந்துவ ளின்பமாதர்
வித்த கந்தரு விந்துத வுங்குழி
பட்ட ழிந்துந லங்குகு ரம்பையை
விட்ட கன்றுநி னம்புயமென்பதம் என்றுசேர்வேன்
மைக்க ருங்கட லன்றெரி மண்டிட
மெய்க்ர வுஞ்சசி லம்புடல் வெம்பிட
மற்று நன்பதி குன்றிய ழிந்திட உம்பர்நாடன்
வச்சி ரங்கைய ணிந்துப தம்பெற
மெச்சு குஞ்சரி கொங்கைபு யம்பெற
மத்த வெஞ்சின வஞ்சகர் தங்களை நுங்கும்வேலா
குக்கு டங்கொடி கொண்டப ரம்பர
சக்ர மண்டல மெண்டிசை யும்புகழ்
கொட்க கொன்றைய ணிந்தசி ரஞ்சர ணங்கிகாரா
கொத்த விழ்ந்தக டம்பலர் தங்கிய
மிக்க வங்கண கங்கண திண்புய
கொற்ற வங்குற மங்கைவி ரும்பிய தம்பிரானே.

**313.** ஓய்யா ரச்சிலே யாமென வாசனை
மெய்யா ரப்பணி பூஷண மாலைக
ளுய்யா நற்கலை யேகொடு மாமத விதமாகி
ஒவ்வா ரிப்படி யோரென வேயிரு
கையா ரக்கணை மோதிர மேய்பல
உள்ளார் செப்பிட எழுற நாளிலும் உடல்பேணிச்
செய்வா ரிப்படி யேபல வாணிப
மிய்யா ரிற்பண மேயொரு காசிடை
செய்யார் சற்பனை காரர்பி சாசருன் அடிபேணுச்
சேய்வா ரிற்படு நானொரு பாதகன்
மெய்யா எப்படி யோர்கரை சேர்வது
செய்யா யற்புத மேபெற வோர்பொருள் அருள்வாயே
மையா ரக்கிரி யேபொடி யாய்விட
பொய்சூ ரப்பதி யேகெட வானவர்
வையாய் பொற்சர ணெனவே தொழ விடும்வேலா
வையா ளிப்பரி வாகன மாகொளு
துவ்வா ழிக்கட லேழ்மலை தூளிசெய்
மைபோ லக்கதி ரேய்நிற மாகிய மயில்வாழ்வே
தெய்வா னைக்கர சேகுற மான்மகிழ்
செய்யா முத்தமி ழாகர னேபுகழ்
தெய்வீ கப்பர மாகுரு வேயென விருதூதத்
திய்யா ரக்கழு வேறிட நீறிடு
கையா வற்புத னேபிர மாபுர
செய்கா ழிப்பதி வாழ்முரு காசுரர் பெருமாளே.

**314.** ஒருகை யுறவாட ஒருகை யுரநாட
உருகி யிடுபாயல் அணையீதே
ஒருவ ரிதழூறல் ஒருவர் பசியாற
உடலு யிர்கள்வேறு தெரியாதே
குருகி னிருநாலு குரலி சைகுலாவல்
குழுகு மெனவாக மறியாதே
குலவி மனவாசை யமையு மினியீறில்
குறைக ழலையோதல் தருவாயே

சுரரு முனிவோரும் நிசநி லையதான
சுகமு டையவாழ்வு பெறவேதான்
சுதபெ ரிதுகாணும் நிருதர் களிலான
சுரதி பறமாறும் நெறியோனே
கரனை யறுமாறு வொருக ணையையேவு
கரிய திருமாலின் மருகோனே
கழனி நெடுவாளை கமுகொ டியமோதுங்
காபு ரியில்வீறும் பெருமாளே.

315. ஒருபது மிருபது மறுபது முடனறும்
உணர்வுற இருபதம் உளநாடி
உருகிட முழுமதி தழலென ஒளிதிகழ்
வெளியொடு மொளிபெற விரவாதே
தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே
திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறவருள் புரிவாயே
பரிவுட னழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்
பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி இளையோனே
பெருமலை உருவிட அடிமலர் பணிபவர்
பிணிகெட அருள்தரு குமரேசா
பிடியொடு களிறுகள் நடைபயில் கலைதிரள்
பிணையமர் திருமலைப் பெருமாளே.

316. ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனோ
துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே
தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக்காரப் பெருமாளே.

317. ஒருவரை ஒருவர் தேறி அறிகிலர் மதவி சாரர்
ஒருகுண வழியு ருத பொறியாளர்
உடலது சதமெ னுடி களவுபொய் கொலைக ளாடி
உறநம னரகில் வீழ்வர் அதுபோக
வருமொரு வடிவ மேவி இருவினை அலையு ளாடி
மறைவரி னனைய கோல மதுவாக
மருவிய பரம ஞான சிவகதி பெறுக நீறு
வடிவுற உதவு பாதம் அருள்வாயே
திரிபுர மெரிய வேழ சிலைமத னெரிய மூரல்
திருவிழி அருள்மெய்ஞ் ஞான குருநாதன்
திருசரஸ் வதிம யேசு வரியிவர் தலைவ ரோத
திருநட மருளு நாதன் அருள்பாலா
சுரர்பதி அயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடுமெய்ஞ் ஞான அயிலோனே
சுககுற மகள்ம ணாள னெனமறை பலவு மோதி
தொழுமுது பழநி மேவு பெருமாளே.

318. ஒருவரைச் சிறுமனைச் சயனமெத் தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுழலவிட்
டொருவரைப்பரபரப்பொடுதெருத் திரியவிட்
டதனாலே
ஒருவருக் கொருவர்சக் களமையிற் சருவவிட்
டுருவுபத் திரமெடுத் தறையின்மற் புரியவிட்
டுயிர்பிழைப் பதுகருத் தளவிலுச் சிதமெனச்
செயுமாதர்
தருமயற் ப்ரமைதனிற் றவநெறிக் கயலெனச்
சரியையிற் கிரியையிற் றவமுமற் றெனதுகைத்
தனமவத் தினிலிறைத் தெவருமுற் றிகழ்வுறத்
திரிவேனைச்
சகலதுர்க் குணமறச் சகலசற் குணமுறத்
தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற் றனதுபொற்
சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திடவருட்
டருவாயே

குருமொழித் தவமுடைப் புலவரைச் சிறையில்வைத்
தறவுமுக் கிரம்விளைத் திடுமரக் கரைமுழுக்
கொடியதுர்க் குணவவத் தரைமுதற் றரிசறுத்
திடும்வேலா

குயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற்
சசிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்
கொடியிடைப் பிடிநடைக் குறமகட் டிருவினைப்
புணர்வோனே

கருதுசட் சமயிகட் கமைவுறக் கிறியுடைப்
பறிதலைச் சமணரைக் குலமுதற் பொடிபடக்
கலகமிட் டடலுயிர்க் கழுவினுச் சியினில்வைத்
திடுவோனே

கமுகினிற் குலையறக் கதலியிற் கனியுகக்
கழையின்முத் தமுதிரக் கயல்குதித் துலவுநற்
கனவயற் றிகழ்திருக் கரபுரத் தறுமுகப்
பெருமாளே.

319. ஒருவரையு மொருவரறி யாம லுந்திரிந்
திருவினையி னிடர்கலியொ டாடி நொந்துநொந்
துலையிலிடு மெழுகதென வாடி முன்செய்வஞ்
சனையாலே

ஒளிபெறவெ எழுபுமர பாவை துன்றிடுங்
கயிறுவித மெனமருவி ஆடி விண்பறிந்
தொளிருமின லுருவதென ஓடி அங்கம்வெந்
திடுவேனைக்

கருதியொரு பரமபொரு ளீது என்றுவென்
செவியிணையி னருளியுரு வாகி வந்தவென்
கருவினையொ டருமலமு நீறு கண்டுதண் டருமாமென்

கருணைபொழி கமலமுக மாறு மிந்துளந்
தொடைமகுட முடியுமொளிர் நூபு ரஞ்சரண்
கலகலென மயிலின்மிசை ஏறி வந்துகந்
தெனையாள்வாய்

திரிபுரமும் மதனுடலும் நீறு கண்டவன்
தருணமழ விடையனட ராஜ னெங்கணுந்
திகழருண கிரிசொருப ஞோதி அந்தமங் கறியாத

சிவயநம நமசிவய கார ணன்சுரந்
தமுதமதை அருளியெமை ஆளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்ப யந்திடும்
புதல்வோனே

குருகுகொடி உடன்மயிலி லேறி மந்தரம்
புவனகிரி சுழலமறை யாயி ரங்களும்
குமரகுரு எனவலிய சேட னஞ்சவந் திடுவோனே

குறமகளி னிடைதுவள பாத செஞ்சிலம்
பொலியவொரு சசிமகளொ டேக லந்துதிண்
குருமலையின் மருவுகுரு நாத உம்பர்தம் பெருமாளே.

320. ஒருவரொடு கண்கள் ஒருவரொடு கொங்கை
ஒருவரொடு செங்கை உறவாடி

ஒருவரொடு சிந்தை ஒருவரொடு நிந்தை
ஒருவரொடி ரண்டு முரையானை

மருவமிக அன்பு பெருகவுள தென்று
மனநினையு மிந்த மருள்தீர

வனசமென வண்டு தனதனன என்று
மருவுசர ணங்கள் அருளாயோ

அரவமெதிர் கண்டு நடுநடுந டுங்க
அடலிடுப்ர சண்ட மயில்வீரா

அமரர்முத லன்பர் முநிவர்கள்வ ணங்கி
அடிதொழவி ளங்கு வயலூரா

திருவையொரு பங்கர் கமலமலர் வந்த
திசைமுகன்ம கிழ்ந்த பெருமானார்

திருதகுதி யென்று நடமிடமு ழங்கு
திரிசிரகல் வந்த பெருமாளே.

**321.** ஒருவ ரொருசேலை தருவ ரெனநாடி
　　உருகி யவரோடு　　　　　மயலார்போல்
உலகி லுளலீலை அறுப துடனாலும்
　　உளவகை கள்சேரும்　　　　அணைமீதே
தருபொ ருளைநாடி அவதியி லிலாத
　　தகைமை யைவினவி　　　　முனிவாயே
தனிவிடு பொய்மாதர் அரைமடுவில் மூழ்கும்
　　தமிய னெனையாள　　　　நினைவாயே
அரிபிரமர் தேடி யறிய வரிதாய
　　அடிமுடிய ரோமென்　　　　றதனாலே
அடியின் முடிதாழ அதுபொருள் வழாமல்
　　அவர்செவி யிலோது　　　　குருநாதா
கரைநிறைய வார மணிநிறைய வீசு
　　கனதிரைகொள் பாலி　　　　நதியூடே
கழனி நெடுவாளை கமுகொடிய மோதும்
　　கரபுரியில் வீறும்　　　　பெருமாளே.

**322.** ஒருவழிப டாதுமாயை யிருவினைவி டாதுநாளு
　　முழலுமனு ராகமோக　　　　அனுபோகம்
உடலுமுயிர் தானுமாயு முணர்விலொரு காலிராத
　　உளமுநெகிழ் வாகுமாறு　　　　சிறியேனுக்
கிரவுபகல் போனஞான பரமசிவ யோகதீர
　　மெனமொழியும் வீசுபாச　　　　கனகோப
எமபடரை மோதும்மோன உரையிலுப தேசவாளை
　　எனதுபகை தீரநீயும்　　　　அருள்வாயே
அரிவையொரு பாகமான அருணகிரி நாதர்பூசை
　　அடைவுதவ றாதுபேணும்　　　　அறிவாளன்
அமணர்குல காலனாகும் அரியதவ ராஜராஜன்
　　அவனிபுகழ் சோமநாதன்　　　　மடமேவும்
முருகபொரு சூரர்சேனை முறியவட மேருவீழ
　　முதுகரசல ராசிவேக　　　　முனிவோனே
மொழியுமடி யார்கள்கோடி குறைகருதி னாலும்வேறு
　　முனியவறி யாததேவர்　　　　பெருமாளே.

323. ஒழுகூனி ரத்த மொடுதோலு டுத்தி
உயர்கால்க ரத்தின் உருவாகி
ஒருதாய்வ யிற்றி னிடையேயு தித்து
உழல்மாய மிக்கு வருகாயம்
பழகாவி ருப்பொ டணையா ரிடத்திற்
பரிதாப முற்று மடியாமுன்
பரிவாலு ளத்தில் முருகாவெ னச்சொல்
பகர்வாழ்வெ னக்கு மொழிவாயே
எழுவான கத்தி லிருநாள கற்றி
இமையோர்த மக்கும் அரசாகி
எதிரேது மற்ற மதவார ணத்தின்
இனிதேறு கொற்ற முடன்வாழுஞ்
செழுமாம ணிப்பொ னகராயு தித்த
திருவேர கத்தில் உறைவோனே
திடமோட ரக்கர் கொடுபோய டைத்த
சிறைமீள விட்ட பெருமாளே.

324. ஓங்கு மைம்புல னோடநினைத்தின் பயர்வேனை
ஓம்பெ ரும்ப்ரண வாதியுரைத்தென் றனையாள்வாய்
வாங்கி வெங்கணை சூரர்குலக்கொம் புகடாவி
வாங்கி நின்றன ஏவிலுகைக்குங் குமரேசா
தூங்கி லம்புய வாசமணக்குஞ் சரிமானும்
தூண்ட பைங்குற மாதுமணக்குந் திருமார்பா
காங்கை யங்கறு மாசின்மனத்தன் பர்கள்வாழ்வே
காஞ்சி ரங்குடி ஆறுமுகத்தெம் பெருமாளே.

325. ஓடி ஓடி அழைத்து வரச்சில
சேடி மார்கள் பசப்ப அதற்குமுன்
ஓதி கோதி முடித்த விலைச்சுருள் அதுகோதி
நீடு வாச நிறைத்த அகிற்புழு
கோட மீது திமிர்த்த தனத்தினில்
நேச மாகி அணைத்த சிறுக்கிகள் உறவாமோ

நாடி வாயும் வயற்ற லையிற்புனல்
ஓடை மீதி னிலத்த திவட்கையின்
நாத கீத மலர்த்து ளிபெற்றளி இசைபாடும்

கோடு லாவி யமுத்துநி ரைத்தவை
காவுர் நாட தனிற்பழ நிப்பதி
கோதி லாத குறத்தி யணைத்தருள் பெருமாளே.

**326.** ஓதி வைத்தவர் கூலிகொ டாதவர்
மாத வர்க்கதி பாதக மானவர்
பூச லிற்கன லாயெரி காளையர் மறையோர்கள்

ஊர்த னக்கிட ரேசெய்வ ரேழையர்
ஆர்த னக்குமு தாசின மானவர்
ஓது முத்தம நீதியை நாடிலர் இரவோருக்

கேது மித்தனை தானமி டாதவர்
பூத லத்தினி லோரம தானவர்
வதி னிற்சிவ ஞானியை மோனியை இகழ்வோரும்

வத சிற்றறி ஞானமி லாதவர்
யோக மற்றிடு போகித மீறினர்
ஈன ரித்தனை பேர்களு மேழ்நர குழல்வாரே

தாத தத்தத தாதத தாதத
தூது துத்துது தூதுது தூதுது
சாச சச்சச சாசச சாசச சசசாச

டாட டட்டட டாடட டாடட
டுடு டுட்டுடு டுடுடு டுடுடு
டீடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி

தீதி தித்திதி தீதிதி தீதிதி
தோதி குத்திகு தோதிகு தோதிகு
சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு

சேயெனப்பல ராடிட மாகலை
ஆயு முத்தமர் கூறிடும் வாசகர்
சேர் திருத்தணி மாமலை மேவிய பெருமாளே.

327. ஓயாத பிறவி யாய மாயாத கடல தாய
ஓரோரு சனன மாய கருவூடே
ஓடோடி அலைவ தான கேடாவல் பெறுவ தான
ஓராத முகுட ளுன எனையாள
சேயாநி மயுர மேற நாயேனை னடிமை மாற
தேமாரு கருணை கூற வரவேணும்
தேவாதி அமரர் வாழ மூவாதி முனிவர் சூழ
தீயாதி அசுரர் தாழ முனிவோனே
தாயான மதுரை மீன ளாயாட னமுத பான
தாராடு சமர ஞான குமரேசா
தானுன பிரம னுன வானுன வடியு மான
தாதாவெ னொருவ னுன பானுன
கோயாத வகுல ஞானி வேயூதி முகில மேனி
கோபால சகல தானி மருகோனே
கோலாக லவம யூர வேலாயு தவவ தார
கூறுறு வரைய கார பெருமாளே

328. ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர்சோர
ஊடா நன்றற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்
கூரா வன்பிற் சேரா நின்றக்
கோயா நின்றுட் குலையாதே
கோடார் செம்பொற் றோளா நின்சொற்
கோடா தென்கைக் கருள்தாராய்
தோரா வென்றிப் போரா மன்றற்
றோளா குன்றைத் துளையாடி
சூதா யொண்டிக் கேயா வஞ்சச்
சூர்மா அஞ்சப் பொரும்வேலா
சீரார் கொன்றைத் தார்மார் பொன்றச்
சேவே றெந்தைக் கினியோனே
தேனே அன்பர்க் கேயா மின்சொற்
சேயே செந்திற் பெருமாளே.

329. ஓல மறைக ளறைகின்ற ஒன்றது
மேலை வெளியி லொளிரும்ப ரஞ்சுடர்
யோக சரியை க்ரியையும்பு ணர்ந்தவர் எவராலும்
ஓத வரிய துரியங்க டந்தது
போத அருவ சுருபம்ப்ர பஞ்சமும்
ஊனு முயிரு முழுதுங்க லந்தது சிவஞானம்
சால உடைய தவர்கண்டு கொண்டது
மூல நிறைவு குறைவின்றி நின்றது
சாதி குலமு மிலதன்றி யன்பர்சொ னவியோமஞ்
சாரு மனுப வரமைந்த மைந்தமெய்
வீடு பரம சுகசிந்து இந்த்ரிய
தாப சபல மறவந்து நின்கழல் பெறுவேனோ
வால குமர குககந்த குன்றெறி
வேல மயில வெனவந்து கும்பிடு
வான விபுதர் பதியிந்த்ரன் வெந்துயர் களைவோனே
வாச களப வரதுங்க மங்கல
வீர கடக புயமந்த்ர தந்திர
வாகை பெருகு புயதுங்க புங்கவ வயலூரா
ஞால முதல்வி யிமயம்ப யந்தமின்
நீலி கவுரி பரைமங்கை குண்டலி
நாணு மினிய கனியெங்க ளம்பிகை த்ரிபுராயி
*நாத வடிவி யகிலம்ப ரந்தவ
ளாலி னுதர முளைபங்க ரும்புவெ
ளுவ லரசு மனைவஞ்சி தந்தருள் பெருமாளே.

330. ஓல மிட்ட சுரும்பு தனு தனுவென
வேசி ரத்தில் விழுங்கை பளீர் பளீரென
ஓசை பெற்ற சிலம்பு கலீர் கலீரென விரகலீலை
ஓர்மி டற்றி லெழும்புள் குகூ குகூவென
வேர்வை மெத்த வெழுந்து சலா சலாவென
உரோமகுச்சு நிறைந்து சிலீர் சிலீரென அமுதமாரன்

*நாத வடிவி யுமைமைந்த கந்தசுவாமி மலையி லாணின்றி றைஞ்சு
மெய்ஞ் ஞான சுருதி நிலையின் றிறம்பயில் பெருமாளே.

ஆல யத்து ளிருந்து குபீர் குபீரென
வேகு திக்க உடம்பு விரீர் விரீரென
ஆர முத்த மணிந்து அளா அளாவென மருவுமாதர்
ஆசை யிற்கை கலந்து சுமா சுமாபவ
சாக ரத்தி லழுந்தி எழா எழாதுளம்
ஆறெழுத்தை நினைந்து குகா குகாவென வகைவராதோ
மாலையிட்ட சிரங்கள் செவேல் செவேலென
வேலெ ழுச்சி தரும்பல் வெளேல் வெளேலென
வாகைபெற்ற புயங்கள் கறேல் கறேலென
எதிர்கொள்சூரன்
மார்பு மொக்க நெரிந்து கரீல் கரீலென
பேய்கு திக்க நிணங்கள் குழூ குழூவென
வாய்பு தைத்து விழுந்து ஐயோ ஐயோவென
உதிரமாறாய்
வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலை வெற்பு மிடிந்து திடீர் திடீரென
மேன்மை பெற்ற ஜனங்கள் ஐயா ஐயாவென
இசைகள்கூற
வேலெ டுத்து நடந்த திவா கராசல
வேடு வப்பெண் மணந்த புயா சலாதமிழ்
வேத வெற்பி லமர்ந்த க்ருபா கராசிவ குமரவேளே.

331. ஓலமிட்டி ரைத்தெழுந்த வேலைவட்ட மிட்டலைந்த
ஊர்முகிற்ற ருக்களொன்றும அவராரென்
றாமரைப்ர சித்தரென்று மூடரைச்ச மர்த்தரென்றும்
ஊனரைப்ர புக்களென்றும் அறியாமல்
கோலமுத்த மிழ்ப்ரபந்த மாலருக்கு ரைத்தனந்த
கோடியிச்சை செப்பிவம்பில் உழல்நாயேன்
கோபமற்று மத்துழன்ற மோகமற்று னைப்பணிந்து
கூடுதற்கு முத்தியென்று தருவாயே
வாலைதுர்க்கை சத்தியம்பி லோககத்தர் பித்தர்பங்கில்
மாதுபெற்றெ டுத்துகந்த சிறியோனே
வாரிபொட்டெ ழுக்ரவுஞ்சம் வீழநெட்ட யிற்றுரந்த
வாகைபொற்பு யப்ரசண்ட மயில்வீரா

ஞாலவட்ட முற்றவுண்டு நாகமெத்தை யிற்றுயின்ற
நாரணற்க ருட்சுரந்த மருகோனே
நாலுதிக்கும் வெற்றிகொண்ட சூரபத்ம னைக்களைந்த
நாகபட்டி னத்தமர்ந்த பெருமாளே.

**332.** ஓலை இட்டகு ழைச்சிகள் சித்திர
ரூப மொத்தமு கத்திகள் விற்கணை
யோடி ணைத்தவி ழிச்சிகள் சர்க்கரை அமுதூடே
ஊற லொத்தமொ ழிச்சிகள் குக்கில
மோட னத்தைம ருட்டுந டைச்சிகள்
ஓசை பெற்றது டிக்கொளி டைச்சிகள் மணம்வீசும்
மாலை இட்டக ழுத்திகள் முத்தணி
வார ழுத்துத னத்திகள் குத்திர
மால்வி ளைத்தும னத்தைஅ ழித்திடு மடமாதர்
மார்ப சைத்தும ருட்டியி ருட்டறை
வாவெ னப்பொருள் பற்றிமு யக்கிடு
மாத ருக்குவ ருத்தமி ருப்பது தணியாதோ
வேலை வற்றிட நற்கணை தொட்டலை
மீத ணைத்தலை கட்டிய ரக்கரில்
வீற ரக்கன்மு டித்தலை பத்தையு மலைபோலே
வேர றுத்துநி லத்தில டித்துமெய்
வேத லட்சுமி யைச்சிறை விட்டருள்
வீர அச்சுத னுக்குந லற்புத மருகோனே
நீலி நிர்க்குணி முக்கணி நிட்களி
வாலை யுத்தமி பத்தினி பத்திரை
நீண் மலைக்கொடி சத்திய ளித்தருள் புதல்வோனே
நீற திட்டுநி னைப்பவர் புத்தியில்
நேச முற்றளி வைத்தருள் சற்குரு
நீல முற்றதி ருத்தணி வெற்புறை பெருமாளே.

**333.** ஓலைத ரித்தகு ழைக்கு மப்புற
மோடிநி றத்தும தர்த்து நெய்த்தற
லோதிநி ழற்குள ளிக்கு லத்துடன் ஒன்றினானம்

ஓதிமி குத்தத வத்த வர்க்கிட
 ரோகைசெ லுத்திவ டுப்ப டுத்தகி
 ஊடுவி டத்தையி ருத்தி வைத்தகண் அம்பினாலே
மாலைம யக்கைவி ளைத்து நற்பொருள்
 வாசமு லைக்குள கப்ப டுத்தியில்
 வாவென முற்றிந டத்தி உட்புகு மந்தமாதர்
மாயம யக்கையொ ழித்து மெத்தென
 வானவ ருக்கரு ளூற்ற அட்சர
 வாய்மையெ னக்குமி னித்த ளித்தருள் தந்திடாயோ
வேலைய டைக்கவ ரிக்கு லத்தொடு
 வேணுமெ னச்சொலு மக்க ணத்தினில்
 வேகமொ டப்பும லைக்கு லத்தைந ளன்கைமேலே
வீசவ வற்றினை ஒப்ப மிட்டணை
 மேவிய ரக்கர்ப திக்குள் முற்பட
 வீடண னுக்கருள் வைத்த வற்றமை யன்கள்மாளக்
காலயி லக்கணை தொட்ட ருட்கன
 மாலமை திக்கரை யிற்ற ரித்துல
 காளவ ளித்தப்ர புத்வ ருட்கடல் தந்தகாமன்
காயமொ ழித்தவர் பெற்ற கொற்றவ
 நானில வித்ததி னைப்பு னத்தொரு
 காதல்மி குத்துமி கப்ர மித்தருள் தம்பிரானே.

334. ககனமு மனிலமு மனல்புனல் நிலமமை
 கள்ளப் புலாற்கி ருமிவீடு
 கனலெழ மொழிதரு சினமென மதமிகு
 கள்வைத்த தோற்பை சுமவாதே
 உகவிறு திகளிலு மிறுதியி லொருபொருள்
 உள்ளக் கணுக்கு மறிவூறி
 ஒளிதிக ழுருவுரு வெனுமறை இறுதியில்
 உள்ளத் தைநோக்க அருள்வாயே
 ம்ருகமத பரிமள விகசித நளினநள்
 வெள்ளைப் பிராட்டி இறைகாணு

விடதர குடிலச டிலமிசை வெகுமுக
வெள்ளத் தையேற்ற பதிவாழ்வே
வகுளமு முகுளித வழைகளு மலிபுன
வள்ளிக் குலாத்தி கிரிவாழும்
வனசரர் மரபினில் வருமொரு மரகத
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

[இப்பாடலில் ஒவ்வோரடியினும் இறுதியிலுள்ள பாகத்தை எடுத்தமைக்கப் பின் வருமாறு பிறிதொருபாடலாம்]

கள்ளப்பு லாற்கி ருமிவீடு
கள்வைத்த தோற்பை சுமவாதே
உள்ளக்க ணோக்கும் அறிவூறி
உள்ளத்தை நோக்க அருள்வாயே
வெள்ளைப்பி ராட்டி இறைகாணும்
வெள்ளத்தை ஏற்ற பதிவாழ்வே
வள்ளிக்கு லாத்தி கிரிவாழும்
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

335. கருபநிலை குலையவிகல் மிகுபகடின் வலியுடைய
தந்தத்தி னைத்தடிவ தொந்தத்தி ரத்தையுள
அகிலமறை புகழ்பரமர் ஞெகிழிகல கலகலெனும்
அம்பொற்ப தத்தர்தனு வம்பொற்பொ ருப்படர்வ
களபபரி மளமொழுகும் எழிலில்முழு குவமுளரி
அஞ்சப்பு டைத்தெழுவ வஞ்சக்க ருத்துமத
னபிஷேகம்

கவடிபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ
இன்பச்சு டர்க்கனக கும்பத்த ரச்செருவ
பிறிதில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்
புந்திக்கி டர்த்தருவ பந்தித்த கச்சடர்வ
கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்
சங்கிப்பி முத்தணிவ பொங்கிக்க னத்தொளிர்வ
முலைமாதர்

வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத
மொன்றிக்க ருத்துமுகில் வென்றிட்டு நெய்த்தகுழ
லசையருசி யமிர்தக்ருத வசியமொழி மயில்குயிலெ
னும்புட்கு ரற்பகர வம்புற்ற மற்புரிய
வருமறலி அரணமொடு முடுகுசமர் விழியிணைகள்
கன்றிச்சி வக்கமகிழ் நன்றிச்ச மர்த்தநக நுதிரேகை
வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை துவளவித
ழுண்டிட்ப ரிக்கநகை கொண்டுற்ற ணைத்தவதி
செறிகலவி வலையிலென தறிவுடைய கலைபடுத
லுந்திப்பி றப்பறநி னைந்திட்ட முற்றுனடி
வயலிநகர் முருகசெரு முயல்பனிரு கரகுமர
துன்றட்ட சிட்டகுண குன்றக்கு டிக்கதிப
அருளாதோ

தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
தங்குத்த குத்தககு திங்குத்தி குத்திகிகு
சகணசக சகசகண செகணசெக செகசெகண
சங்கச்ச கச்சகண செங்கச்செ கச்செகண
தனனதன தனதனன தெனனதென தெனதெனன
தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன
தனனனா
தகுததகு தகுதகுதி திகுதிகுதி திகுதிகுதி
தங்குந்த குத்தகுகு திங்குத்தி குத்திகுகு
டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி
டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி
தாராதா தாராதாரா திரிரிதிரி திரிதிரிரி
தன்றத்த ரத்தரா தின்றித்தி ரித்திரிரி எனதாளந்
தொகுதிவெகு முரசுகர டிகைடமரு முழவுதவில்
தம்பட்ட மத்தளமி னம்பட்ட டக்கைபறை
பதலைபல திமிலைமுத லதிரவுதிர் பெரியதலை
மண்டைத்தி ரட்பருகு சண்டைத்தி ரட்கழுகு
தொடர்நிபிட கருடனடர் தரகரட மொகுமொகென
வந்துற்றி டக்குடர்நி ணந்துற்றி சைத்ததிர
முதுபேய்கள்

சுனகனரி நெறுநெறெனஇனிதினிது தினவினைசெய்
வெங்குக்கு டத்தகொடி குங்குக்கு குக்குகென
அடனமிடு திசைபரவி நடனமிட வடவிரவி
திங்கட்ப்ர பைக்கதிர்கள் மங்கப்ர சித்தகுல
துரககஜ ரதகடக முரணரண நிருதர்விறல்
மிண்டைக்கு லைத்தமர்செய் தண்டர்க்கு ரத்தை
யருள் பெருமாளே.

336. கங்கு லின்குழற் கார்மு கஞ்சசி
மஞ்ச ளின்புயத் தார்ச ரம்பெறு
கண்கள்கொந்தளக் காது கொஞ்சுக செம்பொனாரம்
கந்த ரந்தரித் தாடு கொங்கைக
ளும்ப லின்குவட் டாமெ னுங்கிரி
கந்த முஞ்சிறுத் தேம லும்பட சம்பைபோல
அங்க மைந்திடப் பாளி தங்கொடு
குந்தி யின்குறைக் கால்ம றைந்திட
அஞ்சி லம்பொலிப் பாட கஞ்சரி கொஞ்சமேவும்
அஞ்சு கங்குயிற் பூவை யின்குரல்
அங்கை பொன்பறிக் கார பெண்களொ
டண்டி மண்டையர்க் கூழி யஞ்செய லென்றுபோமோ
சங்கு பொன்தவிற் காள முந்துரி
யங்கள் துந்துமிக் காட திர்ந்திட
சந்த செந்தமிழ்ப் பாணர் கொஞ்சிட அண்டகோசம்
சந்தி ரன்பதத் தோர்வ ணங்கிட
இந்தி ரன்குலத் தார்பொ ழிந்திட
தந்தி ரம்புயத் தார்பு கழ்ந்திட வந்தசூரைச்
செங்கை யுஞ்சிரத் தோடு பங்கெழ
அந்த கன்புரத் தேற வஞ்சகர்
செஞ்ச ரந்தொடுத் தேக டம்புரி கந்தவேளே
திங்க ளொண்கதிர்க் காமர் துண்டமுங்
கொங்கை மென்குறப் பாவை யுங்கொடு
செம்பொ னம்பலத் தேசி றந்தருள் தம்பிரானே.

337. கச்சணி இளமுலை முத்தணி பலவகை
கைச்சரி சொலிவர மயல்கூறிக்
கைப்பொருள் கவர்தரு மைப்பயில் விழியினர்
கட்செவி நிகரல்குல் மடமாதர்
இச்சையி னுருகிய கச்சைய னறிவிலி
எச்சமி லொருபொருள் அறியேனுக்
கிப்புவி மிசைகமழ் பொற்பத மலரிணை
இப்பொழு தணுகவுன் அருள்தாராய்
கொச்சையர் மனையிலி டைச்சியர் தயிர்தனை
நச்சியெ திருடிய குறையாலே
குற்றுர லொடுபிணி நற்றிற வகையறி
கொற்றவு வணமிசை வருமாயன்
அச்சுதை நிறைகடல் நச்சர வணைதுயில்
அச்சுதன் மகிழ்தரு மருகோனே
அப்பணி சடையரன் மெச்சிய தணிமலை
அப்பென அழகிய பெருமாளே.

338. கச்சிட் டணிமுலை தைச்சிட் டுருவிய
மச்சக் கொடிமதன் மலராலும்
கச்சைக் கலைமதி நக்குக் கடலிடை
அச்சப் படவெழு மதனாலும்
பிச்சுற் றிவளுள மெய்ச்சுத் தளர்வது
சொச்சத் தரமல இனிதான
பிச்சிப் புதுமலர் வைச்சுச் சொருகிய
செச்சைத் தொடையது தரவேணும்
பச்சைத் திருவுமை இச்சித் தருளிய
கச்சிப் பதிதனில் உறைவோனே
பற்றிப் பணிபவர் குற்றப் பகைகெட
உற்றுப் பொரவல கதிர்வேலா
இச்சித் தழகிய கொச்சைக் குறமகள்
மெச்சித் தழுவிய திருமார்பா
எட்டுக் குலகிரி முட்டப் பொடிபட
வெட்டித் துணிசெய்த பெருமாளே.

339. கச்சுப் பூட்டு கைச்சக் கோட்ட
கத்திற் கோட்டு கிரியாலம்
கக்கித் தேக்கு செக்கர் போர்க்க
யற்கட் கூற்றில் மயலாகி
அச்சக் கூச்ச மற்றுக் கேட்ட
வர்க்குத் தூர்த்தன் எனநாளும்
அத்தப் பேற்றி லிச்சிப் பார்க்க
றப்பித் தாய்த்தி ரியலாமோ
பச்சைக் கூத்தர் மெச்சிச் சேத்த
பத்மக் கூட்டில் உறைவோரி
பத்திற் சேர்ப்பல் சக்கிற் கூட்டர்
பத்தக் கூட்டர் இயல்வானம்
மெச்சிப் போற்ற வெற்புத் தோற்று
வெட்கக் கோத்த கடல்மீதே
மெத்தக் காய்த்த கொக்குக் கோட்டை
வெட்டிச் சாய்த்த பெருமாளே.

340. கடகட வருவிகள் 'தபவரி அதிர்கதிர்
காமத் தரங்க' மலைவீரா
கனகத நககுலி புணரித குணகுக
காமத் தனஞ்சம் புயனோடே
வடசிக ரகிரித விடுபட நடமிடு
மாவிற் புகுங்கந் தவழாது
வழிவழி தமரென வழிபடு கிலனென
வாவிக் கினம்பொன் றிடுமோதான்
அடவியி ருடியபி நவகும ரியடிமை
யாயப் புனஞ்சென் றயர்வோனே
அயிலவ சபரிசெய் கவிபுகல் தருகவி
யாளப் புயங்கொண் டருள்வோனே
இடமொரு மரகத மயிலிசை வடிவுள
ஏழைக் கிடங்கண் டவர்வாழ்வே
இதமொழி பகரினு மதமொழி பகரினு
மேழைக் கிரங்கும் பெருமாளே.

**341.** கடகரிம ருப்பிற்க திர்த்துப்ர மிக்கமிக
உரமிடநெ ருக்கிப்பி டித்துப்பு டைத்துவளர்
கனககுட மொத்துக்க னத்துப்பெ ருத்தமணி
யணியாலே
கதிர்திகழு செப்பைக்க திக்கப்ப தித்துமகிழ்
கமலமுகை பட்சத்தி ருத்திப்பொ ருத்துமுலை
கமழ்விரைகொள் செச்சைக்க லப்பைப்பொ திததனை
விலகாது
கடுவைவடு வைப்பற்றி விற்சிக்க வைத்தசெய
லெனநிறமி யற்றிக்கு யிற்றிப்பு ரட்டிவரு
கயல்விழிவெ ருட்டித்து ரத்திச்செ விக்குழையின்
மிசைதாவும்
களமதன னுக்குச்ச யத்தைப்ப டைத்துலவு
கடுமொழிப யிற்றக்க ளைத்துக்கொ டிச்சியர்கள்
கணியினில கப்பட்ட ழுத்தத்து யர்ப்படுவ தொழியேனோ
அடலைபுனை முக்கட்ப ரற்குப்பொ ருட்சொலரு
மறைதனையு ணர்த்திச்செ கத்தைப்பெ ருத்தமயில்
அதனைமுன டத்திக்க ணத்திற்றி ரித்துவரும்
அழகோனே
அபகடமு ரைத்தத்த மெத்தப்ப டைத்துலகில்
எளியரைம ருட்டிச்செ கத்திற்பி ழைக்கவெணு
மசடர்தம னத்தைக்க லக்கித்து ணித்தடரும்
அதிதீரா
விடவரவ ணைக்குட்டு யிற்கொட்க்ரு பைக்கடவு
ளுலவுமலை செப்பைச்செ விக்கட்செ றித்துமிக
விரைவிலுவ ணத்திற்சி றக்கப்ரி யத்தில்வரும்
ஒருமாமேயோன்
விழைமருக கொக்கிற்ச முத்ரத்தி லுற்றவனை
நெறுநெறென வெட்டுக்ர சத்தித்த னிப்படைய
விடையவர்தி ருச்சத்தி முத்தத்தி னிற்குலவு
பெருமானே.

**342.** கடத்தைப்பற் றெனப்பற்றிக்
கருத்துற்றுக் களித்திட்டுக்
கயற்கட்பொற் பிணைச்சித்ரத் தனமாதர்

கலைக்குட்பட் டறக்கத்திச்
சலித்துக்கட் டளைச்சொற்பொய்த்
திரைக்குட்பட் டறச்செத்திட் டுயிர்போனால்
எடுத்துக்கொட் டிடக்கட்டைப்
படத்தெட்டத் தணற்றட்டக்
கொளுத்திச்சுற் றவர்ப்பற்றற் றவர்போமுன்
இணக்கிப்பத் திமைச்செச்சைப்
பதத்தைப்பற் றுகைக்குச்சொற்
றமிழ்க்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ
அடைத்திட்டுப் புடைத்துப்பொற்
பதச்சொர்க்கத் தனைச்சுற்றிட்
டலைப்புப்பற் றெனச்சொற்றிட் டருசூரை
அடித்துச்செற் றிடித்துப்பொட்
டெழப்போர்ப்புப் படக்குத்திட்
டலைத்துச்சுற் றலைத்தெற்றுக் கடல்மாயப்
புடைத்திட்டுப் படிக்குட்செற்
றடப்புக்குக் கதத்துக்கக்
கயிற்கொக்கைப் படக்குத்திப் பொருவோனே
புனத்திற்பொற் குறத்திக்குப்
புணர்க்கொத்தப் பசப்பெத்திப்
புணர்க்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

343. கடலினும் பெரியவிழி மலையினும் பெரியமுலை
கவரினும் துவரதரம் இருதோள்பைங்
கழையினுங் குழையுமென மொழிபழங் கிளவிபல
களவுகொண் டொருவர்மிசை கவிபாடி
அடலசஞ் சலனதுல னநுபமன் குணதரன்மெய்
அருள்பரங் குரனபயன் எனஆசித்
தலமரும் பிறவியினி அலமலம் பிறவியற
அருணபங் கயசரணம் அருள்வாயே
வடநெடுங் குலாசத கிரியினின் றிருகலுழி
மகிதலம் புகவழியும் அதுபோல
மதசலஞ் சலசலென முதுசலஞ் சலதிநதி
வழிவிடும் படிபெருகு முதுபாகை

உடையசங்க் ரமகவள தவளசிந் தூரதிலக
னுலகுமிந் திரனுநிலை பெறவேல்கொண்
டுததிவெந் தபயமிட மலையொடுங் கொலையவுண
ருடனுடன், றமர்பொருத பெருமாளே.

344\. கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமரத் தையுடற் பொறியிட் டுமடுக்
கமலத் தைமலர்த் திவிடத் தையிரப் பவனூணுக்
கருதிச் சருவிக் கயலைக் கயமுட்
படுவித் துழையைக் கவனத் தடைசிக்
கணையைக் கடைவித் துவடுத் தனையுப் பினில்மேவி
அடலைச் செயல்சத் தியையக் கினியிற்
புகுவித் துயமப் ப்ரபுவைத் துகைவித்
தரிகட் கம்விதிர்த் துமுறித் துமதித் தசகோரம்
அலறப் பணிரத் னமணிக் குழையைச்
சிலுகிட் டுமையிட் டொளிவிட் டுமருட்
டிறமுற் றபொறிச் சியர்கட் கடையிற் படுவேனோ
சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர்செப் பியிடப் பரிவாலே
சனகர்க் குமகஸ்த் யபுலஸ்த் யசனற்
குமரர்க் குமநுக் க்ரகமெய்ப் பலகைச்
சதுபத் துநவப் புலவர்க் கும்விபத் தியில்ஞான
படலத் துறுலக் கணலக் யதமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத் தியினைப்
பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா
பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலைமுத் துதிர்செய்க் கழனிப்
பழநிப் பதிவெற் பினில்நிற் குமியற் பெருமாளே.

345\. கடலை பயறொடு துவரையெ ளவல்பொரி
சுகியன் வடைகனல் கதலியி னமுதொடு
கனியு முதுபல கனிவகை நலமிவை இனிதாகக்

கடல்கொள் புவிமுதல் துளிர்வொடு வளமுற
அமுது துதிகையில் மனமது களிபெற
கருணை யுடனளி திருவருள் மகிழ்வுற நெடிதான
குடகு வயிறினி லடைவிடு மதகரி
பிறகு வருமொரு முருகசண் முகவென
குவிய இருகர மலர்விழி புனலொடு பணியாமற்
கொடிய நெடியன அதிவினை துயர்கொடு
வறுமை சிறுமையி னலைவுட னரிவையர்
குழியில் முழுகியு மழுகியு முழல்வகை ஒழியாதோ
நெடிய கடலினில் முடுகியெ வருமுறு
மறலி வெருவுற ரவிமதி பயமுற
நிலமு நெறுநெறு நெறுவென வருமொரு கொடிதான
நிசிசர் கொடுமுடி சடசட சடவென
பகர கிரிமுடி கிடுகிடு கிடுவென
நிகரி லயில்வெயி லெழுபசு மையநிற முளதான
நடன மிடுபரி துரகத மயிலது
முடுகி கடுமையி லுலகதை வலம்வரு
நளின பதவர நதிகுமு குமுவென முனிவோரும்
நறிய மலர்கொடு ஹரஹர ஹரவென
அமரர் சிறைகெட நறைகமழ் மலர்மிசை
நணியெ சரவண மதில்வள ரழகிய பெருமாளே.

346. கடலை பொரியவரை பலக னிகழைநுகர்
கடின குடவுதர விபரீத
கரட தடமுமத நளின சிறுநயன
கரிணி முகவரது துணைவோனே
வடவ ரையின்முகடு அதிர ஒருநொடியில்
வலம்வ ருமரகத மயில்வீரா
மகப திதருசுதை குறமி னொடிருவரு
மருவு சரசவித மணவாளா
அடல சுரர்கள்குல முழுது மடியவுயர்
அமரர் சிறையைவிட எழில்மீறும்
அருண கிரணவொளி ஒளிரு மயிலைவிடும்
அரக ரசரவண பவலோலா

படல உடுபதியை இதழி அணிசடில
பசுப திவாரநதி அழகான
பழநி மலையருள்செய் மழலை மொழிமதலை
பழநி மலையில்வரு பெருமாளே.

347. கடலொத்த விடமொத்த கணையொத்த பிணையொத்த
கயலொத்த மலரொத்த விழிமாதர்
கனசெப்பு நளினத்து முகைவெற்பை நிகர்செப்பு
கதிர்முத்து முலைதைக்க அகலாதே
மிடலுற்ற கலவிக்கு ளுளநச்சி யளவற்ற
மிடிபட்டு மடிபட்டு மனமாழ்கி
மெலிவுற்ற தமியற்கு னிருபத்ம சரணத்தை
மிகநட்பொ டருள்தற்கு வருவாயே
தடையற்ற கணைவிட்டு மணிவச்ர முடிபெற்ற
தலைபத்து டையதுட்டன் உயிர்போகச்
சலசத்து மயிலுற்ற சிறைவிட்டு வருவெற்றி
தருசக்ர தரனுக்கு மருகோனே
திடமுற்ற கனகப்பொ துவில்நட்பு டனடித்த
சிவனுக்கு விழியொத்த புதல்வோனே
*செழுநத்து மிழுமுத்து வயலுக்குள் நிறைபெற்ற
திகழெட்டி குடியுற்ற பெருமாளே.

348. கடல்பரவு தரங்க மீதெழு திங்களாலே
கருதிமிக மடந்தை மார்சொல்வ தந்தியாலே
வடவனலை முனிந்து வீசிய தென்றலாலே
வயலருணை யில்வஞ்சி போதந லங்கலாமோ
இடமுமையை யணைந்த நாதரி றைஞ்சும்வீரா
எழுகிரிகள் பிளந்து வீழவெ றிந்தவேலா
அடலசுரர் கலங்கி யோடமு னிந்தகோவே
அரிபிரம புரந்த ராதியர் தம்பிரானே.

*திகழ்கச்சி நகர்பெற்ற பெருமாளே

349. கடல்போற் கணைவிழி சிலைபோற் பிறைநுதல்
கனிபோற் றுவரிதழ் எழிலாகும்
கரிபோற் கிரிமுலை கொடிபோற் றுடியிடை
கடிபோற் பணியரை எனவாகும்
உடல்காட் டினிமையி லெழில்பாத் திரமிவ
ளுடையாற் கெறுவித நடையாலும்
ஒருநாட் பிரிவது மரிதாய்ச் சுழல்படும்
ஒழியாத் துயரது தவிரேனோ
குடலீர்த் தசுரர்க ளுடல்காக் கைகள்நரி
கொளிவாய்ப் பலவல கைகள்பேய்கள்
கொலைபோர்க் களமிசை தினமேற் றமரர்கள்
குடியேற் றியகுக உயர்தாழை
மடல்கீற் றினிலெழு விரைபூப் பொழில்செறி
வயலூர்ப் பதிதனில் உறைவோனே
மலைமேற் குடியுறை கொடுவேட் டுவருடை
மகள்மேற் ப்ரியமுள பெருமாளே.

350. கடற்செகத் தடக்கிமற் றடுத்தவர்க் கிடுக்கணைக்
கடைக்கணிற் கொடுத்தழைத் தியல்காமக்
கலைக்கதற் றுரைத்தபுட் குரற்கள்விட் டுளத்தினைக்
கரைத்துடுத் தபட்டவிழ்த் தணைமீதே
சடக்கெனப் புகத்தனத் தணைத்திதழ்க் கொடுத்துமுத்
தமிட்டிருட் குழற்பிணித் துகிரேகை
சளப்படப் புதைத்தடித் திலக்குணக் கடித்தடத்
தலத்தில்வைப் பவர்க்கிதப் படுவேனோ
இடக்கடக் குமெய்ப்பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித்
தெழிற்றினைக் கிரிப்புறத் துறைவேலா
இகற்செருக் கரக்கரைத் தகர்த்தொலித் துரத்துபச்
சிறைச்சியைப் பசித்திரைக் கிசைகூவும்
பெடைத்திரட் களித்தருக் குடக்கொடிக் கரத்தபொய்ப்
பிதற்றறப் படுத்துசற் குருவாய்முன்
பிறப்பிலிக் குணர்த்துசித் தவுற்றநெற் பெருக்குவைப்
பெருக்குசெய்த் திருத்தணிப் பெருமாளே.

351. கடாவினடை வீரங் கெடாமலினி தேறுங்
கடாவினிக ராகுஞ் சமனும்
கடாவிவிடு தூதன் கெடாதபகை போலுங்
கனாவில்விளை யாடுங் கதைபோலும்
இடாதுபல தேடுங் கிராதர்பொருள் போலிங்
கிராமலுயிர் போகிங் கிதமாகும்
இதாமெனிரு போதும் சதாவின்மொழி யாலின்
றியானுமுனை ஓதும் படிபாராய்
விடாதுநட னாளும் பிடாரியுட னாடும்
வியாகரண வீரன் பெருவாழ்வே
விகாரமுறு சூரன் பகாரமுயிர் வாழ்வும்
விநாதமுற வேலங் கெறிவோனே
தொடாதுநெடு தூரந் தடாதுமிக வோடுஞ்
சுவாசமது தானம் புலனோடும்
சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே.

352. கடிமா மலர்க்கு ளின்ப முளவே ரிகக்கு நண்பு
தருமா கடப்ப மைந்த தொடைமாலை
கனமேரு வொத்தி டும்ப னிருமாபு யத்த ணிந்த
கருணா கரப்ர சண்ட கதிர்வேலா
வடிவார் குறத்தி தன்பொ னடிமீ துநித்த முந்தன்
முடியான துற்று கந்து பணிவோனே
வளவாய்மை சொற்ப்ர பந்த முளகீர னுக்கு கந்துன்
மலர்வாயி லக்க ணங்கள் இயல்போதி
அடிமோனை சொற்கி லங்க உலகாமு வப்ப என்றுன்
அருளா லளித்து கந்த பெரியோனே
அடியே னுரைத்த புன்சொ லதுமீ துநித்த முந்தன்
அருளே தழைத்து கந்து வரவேணும்
செடிநே ருடற்கு டம்பை தனின்மே வியுற்றி டிந்த
படிதா னலக்க ணிங்ஙன் உறலாமோ
திறமா தவர்க்க ணிந்து னிருபாத பத்ம முந்து
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே.

353. கடியவேக மாருத விரதகூத ராபாசர்
கலகமேசெய் பாழ்மூடர் வினைகேடர்
கபடவீன ராகாத இயல்புநாடி யேநீடு
கனவிகார மேபேசி நெறிபேணுக்
கொடியனேது மோராது விரகசால மேமூடு
குடில்மேவி யேநாளு மடியாதே
குலவுதோகை மீதாறு முகமும்வேலு மீராறு
குவளைவாகும் நேர்காண வருவாயே
படியினோடு மாமேரு அதிரவீசி யேசேட
பணாமுமாட வேநீடு வரைசாடிப்
பரவையாழி நீர்மோத நிருதர்மாள வாளோடு
பதியதாக வேலேவு மயில்வீரா
வடிவுலாவி ஆகாச மிளிர்பலாவி னீள்சோலை
வனசவாவி பூவோடை வயலோடே
மணிசெய்மாட மாமேடை சிகரமோடு வாகான
மயிலைமேவி வாழ்தேவர் பெருமாளே.

354. கடினதட கும்ப நேரன
வளருமிரு கொங்கை மேல்விழு
கலவிதரு கின்ற மாதரொ டுறவாடிக்
கனவளக பந்தி யாகிய
நிழல்தனிலி ருந்து தேனுமிழ்
கனியிதழை மென்று தாடனை செயலாலே
துடியிடைநு டங்க வாள்விழி
குழைபொரநி தம்ப மூடிய
துகில்நெகிழ வண்டு கோகில மயில்காடை
தொனியெழவி ளைந்து கூரிய
கொடுநகமி சைந்து தோள்மிசை
துயிலவச இன்ப மேவுதல் ஒழிவேனோ
இடிமுரச றைந்து பூசல்செய்
அசுரர்கள்மு றிந்து தூளெழ
எழுகடல்ப யந்து கோவென அதிகோப

எமபடரு மென்செய் வோமென
நடுநடு டுங்க வேல்விடு
இரணமுக சண்ட மாருத மயிலோனே
வடிவுடைய அம்பி காபதி
கணபதிசி றந்து வாழ்தட
வயலிநகர் குன்ற மாநகர் உறைவோனே
வகைவகைபு கழ்ந்து வாசவன்
அரிபிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல் கண்டு வாழ்வருள் பெருமாளே.

355. கடைசிவந்தகன் றுரைபுகன் றிரு
குழையையுந்துரந் தரிபரந்தொளிர்
கரியகண்துறந் தவர்திறந்தொளே படவோடக்
கலைநெகிழ்ந்திருங் குழல்சரிந்திட
முலைசுமந்தசைந் திடைஒசிந்துயிர்
கவாவிங்கிதங் கெறுவிதம்பெற விளையாடும்
படைமதன்பெருங் கிளைதிருந்திய
அதாகிஞ்சுகந் தனையுணர்ந்தணி
பணிநிதம்பவின் பசுகமுந்தா முதிர்காம
பரவசந்தணிந் துணையுணர்ந்தொரு
மவுனபஞ்சரம் பயில்தருஞ்சுக
பதமடைந்திருந் தருள்பொருந்தும தொருநாளே
வடநெடுஞ்சிலம் புகள்புலம்பிட
மகிதலம்ப்ரியங் கொடுமகிழ்ந்திட
வருபுரந்தரன் தனபுரம்பெற முதுகோப
மகரவெங்கருங் கடனடுங்கிட
நிசிசரன்பெருங் குலமொடுங்கிட
வனசனின்றழும் படிநெருங்கிய ஒருசூதம்
அடியொடும்பிடுங் கியதடங்கர
வடிவவஞ்சரும் புறவிரும்பிய
அடவியுந்தொழும் பொடுதொழும்படி அநுராக
அவசமும்புனைந் தறமுனைந்தெழு
பருவதஞ்சிறந் தகனதந்தியின்
அமுதமென்குயங் களில்முயங்கிய பெருமாளே.

356. கட்கா மக்ரோ தத்தே கட்சி
மிழ்த்தோர் கட்குக் கவிபாடிக்
கச்சா பிச்சா கத்தா வித்தா
ரத்தே யக்கொட் களைகீளக்
கொட்கா லக்கோ லக்கோ ணத்தே
யிட்டா சைப்பட் டிடவேவை
கொட்டா ணக்கூ னுக்கா எய்த்தே
னித்தீ தத்தைக் களைவாயே
வெட்கா மற்பாய் சுற்றா மர்ச்சேர்
விக்கா ணத்தைத் தரிமாறன்
வெப்பா றப்பா டிக்கா ழிக்கே
புக்காய் வெற்பிற் குறமானை
முட்கா னிற்கால் வைத்தோ டிப்போய்
முற்சார் செச்சைப் புயவீரா
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

357. கட்டக் கணப்பறைகள் கொட்டக் குலத்திளைஞர்
கட்டிப் புறத்தில் அணைமீதே
கச்சுக் கிழித்ததுணி சுற்றிக் கிடத்தியெரி
கத்திக் கொளுத்தி அனைவோரும்
சுட்டுக் குளித்துமனை புக்கிட் டிருப்பரிது
சுத்தப் பொயொப்ப துயிர்வாழ்வு
துக்கப் பிறப்பகல மிக்கச் சிவத்ததொரு
சொர்க்கப் பதத்தை அருள்வாயே
எட்டுக் குலச்சயில முட்டத் தொளைத்தமரர்
எய்ப்புத் தணித்த கதிர்வேலா
எத்திக் குறத்தியிரு முத்தத் தனக்கிரியை
எற்பொற் புயத்தில் அணைவோனே
வட்டக் கடப்பமலர் மட்டுற்ற செச்சைமலர்
வைத்துப் பணைத்த மணிமார்பா
வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே.

358. கட்ட மன்னு மள்ளல் கொட்டி பண்ணு மைவர்
கட்கு மன்னு மில்லம் இதுபேணிக்
கற்ற விஞ்ஞை சொல்லி உற்ற வெண்மை உள்ளு
கக்க எண்ணி முல்லை நகைமாதர்
இட்ட மெங்ங னல்ல கொட்டி அங்ங னல்கி
இட்டு பொன்னை இல்லை எனவேகி
எத்து பொய்ம்மை உள்ள லுற்று மின்மை உள்ளி
எற்று மிங்ங னைவ தியல்போதான்
முட்ட உண்மை சொல்லு செட்டி திண்மை கொள்ள
முட்ட நன்மை விள்ள வருவோனே
முத்து வண்ண வல்லி சித்ர வண்ண வல்லி
முத்தி விண்ண வல்லி மணவாளா
பட்ட மன்ன வல்லி மட்ட மன்ன வல்லி
பட்ட துன்னு கொல்லி மலைநாடா
பச்சை வன்னி அல்லி செச்சை சென்னி உள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே.

359. கட்டமுறு நோய்தீமை இட்டகுடில் மாமாய
கட்டுவிடு மோர்காலம் அளவாவே
கத்தவுற வோர்பாலர் தத்தைசெறி வார்வாழ்வு
கற்புநெறி தான்மாய உயர்காலன்
இட்டவொரு தூதாளு முட்டவினை யால்மூடி
இட்டவிதி யேயாவி இழவாமுன்
எத்தியுனை நாடோறு முத்தமிழி னாலோத
இட்டமினி தோதார நினைவாயே
துட்டரென ஏழ்பாரு முட்டவினை ஆள்சூரர்
தொக்கில்நெடு மாமார்பு தொளையாகத்
தொட்டவடி வேல்வீர நட்டமிடு வார்பால
சுத்ததமி ழார்ஞான முருகோனே
மட்டுமரை நால்வேத னிட்டமலர் போல்மேவ
மத்தமயில் மீதேறி வருநாளை
வைத்தநிதி போல்நாடி நித்தமடி யார்வாழ
வைத்தபடி மாறாத பெருமாளே.

**360.** கட்டழகு விட்டுத் தளர்ந்தங் கிருந்துமுன
மிட்டபொறி தப்பிப் பிணங்கொண் டதின்சிலர்கள்
கட்டணமெ டுத்துச் சுமந்தும் பெரும்பறைகள்
முறையோடே
வெட்டிவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென
மக்களொரு மிக்கத் தொடர்ந்தும் புரண்டும்வழி
விட்டுவரு மித்தைத் தவிர்ந்துன் பதங்களுற
உணர்வேனோ
பட்டுருவி நெட்டைக் க்ரௌஞ்சம் பிளந்துகடல்
முற்றமலை வற்றிக் குழம்புங் குழம்பமுனை
பட்டஅயில் தொட்டுத் திடங்கொண் டெதிர்ந்தவுணர்
முடிசாயத்
தட்டழிய வெட்டிக் கவந்தம் பெருங்கழுகு
நிர்த்தமிட ரத்தக் குளங்கண் டுமிழ்ந்துமணி
சற்சமய வித்தைப் பலன்கண் டுசெந்திலுறை
பெருமாளே.

**361.** கட்டி முண்டகர பாலி யங்கிதனை
முட்டி யண்டமொடு தாவி விந்துவொலி
கத்த மந்திரவ தான வெண்புரவி மிசையேறிக்
கற்ப கந்தெருவில் வீதி கொண்டுசுடர்
பட்டி மண்டபமு டாடி யிந்துவொடு
கட்டி விந்துபிச காமல் வெண்பொடிகொ டசையாமல்
சுட்டு வெம்புரநி ருக விஞ்சைகொடு
தத்து வங்கள்விழ சாடி யெண்குணவர்
சொர்க்கம் வந்துகையு ளாக எந்தைபதம் உறமேவித்
துக்கம் வெந்துவிழ ஞான முண்டுகுடில்
வச்சி ரங்களென மேனி தங்கமுற
சுத்த கம்புகுத வேத விந்தையொடு புகழ்வேனோ
எட்டி ரண்டுமறி யாத என்செவியி
லெட்டி ரண்டுமிது வாமி லிங்கமென
எட்டி ரண்டும்வெளி யாமொ ழிந்தகுரு முருகோனே
எட்டி ரண்டுதிசை யோட செங்குருதி
யெட்டி ரண்டுமுரு வாகி வஞ்சகர்மெ
லெட்டி ரண்டுதிசை யோர்கள் பொன்றவயில் விடுவோனே

செட்டி யென்றுசிவ காமி தன்பதியில்
கட்டு செங்கைவளை கூறு மெந்தையிட
சித்தமுங் குளிர ஞுதி வண்பொருளை நவில்வோனே
செட்டி யென்றுவன மேவி யின்பரச
சத்தி யின்செயலி னளை யன்புருக
தெட்டி வந்துபுலி யூரின் மன்றுள்வளர் பெருமாளே.

362. கண்கயற்பிணை மானேடுற
உண்டெனக்கழை தோளானது
நன்கமைக்கின மாமரமென முகையான
கஞ்சமொத்தெழு கூர்மாமுலை
குஞ்சரத்திரு கோடோடுற
விஞ்சுமைப்பொரு கார்கோதைகொ டியர்காலன்
பெண்டனக்குள கோலாகல
மின்றெடுத்திளை யோராவிகள்
மன்பிடிப்பது போல்நீள்வடி வுடைமாதர்
பின்பொழித்திடு மாமாயையி
லன்புவைத்தழி யாதேயுறு
கிஞ்சிலத்தனை தாள்பேணிட அருள்தாராய்
விண்டனக்குற வானேனுடல்
கண்படைத்தவன் வேதாவொடு
விண்டுவித்தகன் வீழ்தாளினர் விடையேறி
வெந்தனத்துமை யாள்மேவிய
சந்தனப்புய மாதீசுரர்
வெங்கயத்துரி யார்போர்வையர் மிகுவாழ்வே
தண்புடைப்பொழில் சூழ்மாதையில்
நண்புவைத்தருள் தாராதல
முங்கிளைத்திட வானீள்திசை ஓடுதாவித்
தண்டரக்கர்கள் கோகோவென
விண்டிடத்தட மாமீமிசை
சண்டவிக்ரம வேலேவிய பெருமாளே.

363. கண்டு போல்மொழி வண்டு சேர்குழல்
கண்கள் சேல்மதி முகம்வேய்தோள்
கண்டு பாவனை கொண்டு தோள்களி
லொண்டு காதலில் இருகோடு
மண்டி மார்பினில் விண்ட தாமென
வந்த கூர்முலை மடவார்தம்
வஞ்ச மாலதில் நெஞ்சு போய்மடி
கின்ற மாயம தொழியாதோ
கொண்ட லார்குழல் கெண்டை போல்விழி
கொண்டு கோகில மொழிகூறும்
கொங்கை யாள்குற மங்கை வாழ்தரு
குன்றில் மால்கொடு செலும்வேலா
வெண்டி மாமன மண்டு சூர்கடல்
வெம்ப மேதினி தனில்மீளா
வென்று யாவையு மன்றி வேலையும்
வென்று மேவிய பெருமாளே.

364. கண்டுமொழி கொம்பு கொங்கை
வஞ்சியிடை அம்பு நஞ்சு
கண்கள்குழல் கொண்ட லென்று பலகாலும்
கண்டுளம்வ ருந்தி நொந்து
மங்கையர்வ சம்பு ரிந்து
கங்குல்பக லென்று நின்று விதியாலே
பண்டைவினை கொண்டு ழன்று
வெந்துவிழு மின்னல் கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழோதும்
பண்புடைய சிந்தை யன்பர்
தங்களினு டன்க லந்து
பண்புபெற அஞ்ச லஞ்சல் எனவாராய்
வண்டுபடு கின்ற தொங்கல்
கொண்டுறநெ ருங்கி இன்சொல்
வம்பினைய டைந்து சந்தின் மிகமூழ்கி

வஞ்சியையு ணிந்த கொங்கை
மென்குறம டந்தை செங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா
திண்டிறல்பு னைந்த அண்டர்
தங்களப யங்கள் கண்டு
செஞ்சமர் புனைந்து துங்க மயில்மீதே
சென்றசுர ரஞ்ச வென்று
குன்றிடைம ணம்பு ணர்ந்து
செந்தில்நகர் வந்த மர்ந்த பெருமாளே.

365, கதறிய கலைகொடு சுட்டாத் தீர்பொருள்
பதறிய சமயிக ளெட்டாப் பேரொளி
கருவற இருவினை கெட்டாற் காண்வரு மென்றவேகம்
கருகிய வினைமன துட்டாக் காதது
சுருதிக ளுருகியோர் வட்டாத் தோய்வது
கசடற முழுதையும் விட்டாற் சேர்வது ணர்ந்திடாதே
விதமது காமுரல் மொட்டாற் சாடிய
ரதிபதி எனவரு துட்டாத் மாவுடன்
வினைபுரி பவரிடு முற்றூச் சாலிரு புண்டரீக
ம்ருகமத முகுளித மொட்டாற் கார்முக
நுதலெழு தியசிறு பொட்டாற் சாயக
விரகுடை விழிவலை பட்டாற் றுதுந லங்கலாமோ
பதமலர் மிசைகழல் கட்டாப் பாலக
சுருதிக ளடிதொழ எட்டாத் தேசிக
பருகென வனமுலை கிட்டாத் தாரகை தந்துநாளும்
பரிவுற வெகுமுக நெட்டாற் றாடொரு
படுகையி னிடைபுழு வெட்டாப் பாசடை
படர்வன பரிமள முட்டாட் டாமரை தங்கிவாழும்
சததள அமளியை விட்டாற் றேறிய
சலநிதி குறுகிட வொட்டாச் சூரொடு
தமனிய குலகிரி பொட்டாய்த் தூளெழ வென்றகோவே
தழைதரு குழைதரு பட்டாட் சாலவு
மழகிய கலவிதெ விட்டாக் காதலி
தலைமக னில்மடி தட்டாத் தேவர்கள் தம்பிரானே.

366\. கதித்துப்பொங் கலுக்கொத்துப்
பணைத்துக்கொம் பெனத்தெற்றிக்
கவித்துச்செம் பொனைத்துற்றுக் குழலார்பின்
கழுத்தைப்பண் புறக்கட்டிச்
சிரித்துத்தொங் கலைப்பற்றிக்
கலைத்துச்செங் குணத்திற்பித் திடுமாதர்
பதித்துத்தந் தனத்தொக்கப்
பிணித்துப்பண் புறக்கட்டிப்
பசப்பிப்பொன் தரப்பற்றிப் பொருள்மாளப்
பறித்துப்பின் துரத்துச்சொற்
பகட்டுப்பெண் களுக்கிச்சைப்
பலித்துப்பின் கசுத்திப்பட் டுழல்வேனோ
கதித்துக்கொண் டெதிர்த்துப்பிற்
கொதித்துச்சங் கரித்துப்பற்
கடித்துச்சென் றுழக்கித்துக் கசுரோரைக்
கழித்துப்பண் டமர்க்குச்செப்
பதத்தைத்தந் தளித்துக்கைக்
கணிக்குச்சந் தரத்தைச்சுத் தொளிர்வேலா
சிதைத்திட்டம் புரத்தைச்சொற்
கயத்தைச்சென் றரித்துத்தற்
சினத்தக்கன் சிரத்தைத்தட் சிவனார்தஞ்
செவிக்குச்செம் பொருட்கற்கப்
புகட்டிச்செம் பரத்திற்செய்த்
திருச்சிற்றம் பலச்சொக்கப் பெருமாளே.

367\. கதியைவி லக்கு மாதர்கள் புதுநவ ரத்ந பூஷண
கனதன வெற்பு மேல்மிகு மயலான
கவலைம னத்த னாகிலும் உனதுப்ர சித்த மாகிய
கனதன மொத்த மேனியும் முகமாறும்
அதிபல வஜ்ர வாகுவும் அயில்நுனை வெற்றி வேலதும்
அரவுபி டித்த தோகையும் உலகேழும்
அதிரவ ரற்று கோழியும் அடியர்வ ழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமும் மறவேனே

இரவிகு லத்தி ராசத மருவியெ திர்த்து வீழ்கடு
ரணமுக சுத்த வீரிய குணமான
இளையவ னுக்கு நீண்முடி அரசது பெற்று வாழ்வுற
இதமொட ளித்த ராகவன் மருகோனே
பதினொரு ருத்தி ராதிகள் திகழவி ளக்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர சுரலோக
பரிமள கற்ப காடவி அருவிகள் சுற்றிப் பூவுதிர்
பழநிம லைக்குள் மேவிய பெருமாளே.

368\. கதிரவனெ ழுந்து லாவு திசையளவு கண்டு மோது
கடலளவு கண்டு மாய மருளாலே
கணபணபு யங்க ராஜன் முடியளவு கண்டு தாள்கள்
கவினறந டந்து தேயும் வகையேபோய்
இதமிதமி தென்று நாளு மருகருகி ருந்து கூடும்
இடமிடமி தென்று சோர்வு படையாதே
இசையொடுபு கழ்ந்த போது நழுவியப்ர சண்டர் வாசல்
இரவுபகல் சென்று வாடி உழல்வேனோ
மதுகரமி டைந்து வேரி தருநறவ முண்டு பூக
மலர்வளநி றைந்த பாளை யெருடே
வகைவகையெ ழுந்து சாம வதிமறைவி யந்துபாட
மதிநிழலி டுஞ்சு வாமி மலைவாழ்வே
அதிரவரு சண்ட வாயு எனவருக ருங்க லாப
அணிமயில்வி ரும்பி ஏறும் இளையோனே
அடைவொடுலகங்கள் யாவு முதவிநிலை கண்ட பாவை
அருள்புதல்வ அண்ட ராஜர் பெருமாளே.

369\. கத்தூரி யகரு ம்ருகமத வித்தார படிர இமசல
கற்பூர களப மணிவன மணிசேரக்
கட்டார வடமு மடர்வன நிட்டூர கலக மிடுவன
கச்சோடு பொருது நிமிர்வன தனமாதர்
கொத்தூரு நறவ மெனவத ரத்தூறல் பருகி யவரொடு
கொற்சேரி உலையில் மெழுகென உருகாமே
கொக்காக நரைகள் வருமுன மிக்காய விளமை உடன்முயல்
குற்றேவல் அடிமை செயும்வகை அருளாயோ

அத்தூர புவன தரிசன நித்தார கனக நெடுமதில்
அச்சான வயலி நகரியில் உறைவேலா
அச்சோவெனவசஉவகையிலுட்சோர்தலுடையபரவையொ
டக்காகி விரக பரிபவம் அறவேபார்
பத்தூரர் பரவ விரைவுசெல் மெய்த்தூரர் விரவ வருடரு
பற்றுய பரம பவுருஷ குருநாதா
பச்சோலை குலவு பனைவளர் மைச்சோலை மயில்கள் நடமிடு
பட்டாலி மருவு மமரர்கள் பெருமாளே.

370\. கந்தவார் குழல்கோதி மாலையைப்பு னைந்து
மஞ்சளா லழகாக மேனியிற்றி மிர்ந்து
கண்டமாலைகளான ஆணிமுத் தணிந்து தெருவூடே
கண்டபே ரையெலாம வாவினிற்கொ ணர்ந்து
வண்பயோ தரபார மேருவைத்தி றந்து
கண்களா கியகூர வேலைவிட்டெ றிந்து விலைகூறி
வந்தபேர் களையேகை யாலெடுத்த ணைந்து
கொண்டுதே னிதழூறு வாயைவைத்த ருந்தி
மந்தமா ருதம்வீசு பாயலிற்பு ணர்ந்து மயல்பூணு
மங்கைமா ரநுபோக தீவினைப்ப வங்கள்
மங்கியே கெடுமாறு ஞானவித்தை தந்து
வண்டுலா வியநீப மாலைசற்றி லங்க வருவாயே
இந்த்ரதா ருவைஞால மீதினிற்கொ ணர்ந்த
சங்கபா ணியனுதி கேசவப்ர சங்க
னென்றுவாழ் மணிமார்பன் வீரவிக்ர மன்றன்
மருகோனே
எண்டிசா முகவேலை ஞாலமுற்று மண்டு
கந்ததா ருகசேனை நீறுபட்டொ துங்க
வென்றுபேரொளிசேர்ப்ரகாசம்விட்டிலங்கு கதிர்வேலா
சந்த்ரசே கரிநாக பூஷணத்தி யண்ட
முண்டகா ரணியால போஜனத்தி யம்பை
தந்தபூ ரணஞான வேள்குறத்தி துஞ்சு மணிமார்பா
சண்டநீ லகலாப வாசியிற் றிகழ்ந்து
கஞ்சன்வா சவன்மேவி வாழ்பதிக்கு யர்ந்த
தஞ்சைமா நகர்ராஜ கோபுரத்த மர்ந்த பெருமாளே.

371. கப்பரை கைக்கொள வைப்பவர் மைப்பயில்
கட்பயி லிட்டிள வளவோரைக்
கைக்குள்வ சப்பட பற்களை இட்டுமு
கத்தைமி னுக்கிவ ருமுபாயப்
பப்பர மட்டைகள் பொட்டிடு நெற்றியர்
பற்றென உற்றவொர் தமியேனைப்
பத்மப தத்தினில் வைத்தருள் துய்த்திரை
பட்டதெ னக்கினி அமையாதோ
குப்பர வப்படு பட்சமி குத்துள
முத்தரை யர்க்கொரு மகவாகிக்
குத்திர மற்றுரை பற்றுணர் வற்றவொர்
குற்றம றுத்திடு முதல்வோனே
விப்ரமு னிக்குழை பெற்றகொ டிச்சிவி
சித்ரத னக்கிரி மிசைதோயும்
விக்ரம மற்புய வெற்பினை இட்டெழு
வெற்பைநெ ருக்கிய பெருமாளே.

372. கமரி மலர்குழல் சரிய புளகித
கனக தனகிரி அசைய பொருவிழி
கணைக ளெனநுதல் புரள துகிலதை நெகிழ்மாதர்
கரிய மணிபுர ளரிய கதிரொளி
பரவ இணைகுழை அசைய நகைகதிர்
கனக வளைகல நடைகள் பழகிகள் மயில்போலத்
திமிரு மதபுழு கொழுக தெருவினி
லலைய விலைமுலை தெரிய மயல்கொடு
திலத மணிமுக அழகு சுழலிகள் இதழூறல்
திரையி லமுதென கழைகள் பலசுளை
எனவு மவர்மயல் தழுவு மசடனை
திருகு புலைகொலை கலிகள் சிதறிட அருள்தாராய்
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர எனதாளம்

குரைசெய் முரசமொ டரிய விருதொலி
டமட டமடம டமட டமவென
குமுற திமிலைச லரிகி னரிமுதல் இசைபாட
அமரர் முநிவரு மயனு மனைவரு
மதுகை மலர்கொடு தொழுது பதமுற
அசுரர் பரிகரி இரத முடைபட விடும்வேலா
அகில புவனமொ டடைய வொளிபெற
அழகு சரண்மயில் புறம தருளியொ
ரருண கிரிகுற மகளை மருவிய பெருமாளே.

373. கமல குமிளித முலைமிசை துகிலிடு
விகட கெருவிக ளசடிகள் கபடிகள்
கலக மிடுவிழி வலைகொடு தழுவிகள் இளைஞோர்கள்
கனவி விடுமெழு கெனநகை அருளிக
ளநெக விதமொடு தனியென நடவிகள்
கமரில் விழுகிடு கெடுவிகள் திருடிகள் தமைநாடி
அமுத மொழிகொடு தவநிலை அருளிய
பெரிய குணதர ருரைசெய்த மொழிவகை
அடைவு நடைபடி பயிலவும் முயலவும் அறியாத
அசட னறிவிலி இழிகுல னிவனென
இனமு மனிதரு ளனைவரு முரைசெய
அடிய னிதுபட அரிதினி ஒருபொருள் அருள்வாயே
திமித திமிதிமி டமடம டமவென
சிகர கரதல டமருக மடிபட
தெனனதெனதெனதெனவெனநடைபடமுனிவோர்கள்
சிவமி லுருகியு மரகர வெனவதி
பாத பரிபுர மலரடி தொழஅநு
தினமு நடமிடு பவரிட முறைபவள் தருசேயே
குமர சரவண பவதிற லுதவிய
தரும நிகரொடு புலமையு மழகிய
குழக குருபர னெனவொரு மயில்மிசை வருவோனே
குறவ ரிடுதினை வனமிசை இதணிடை
மலையு மரையொடு பசலைகொள் வளர்முலை
குலவு குறமக ளழகொடு தழுவிய பெருமாளே.

374. கமலத் தேகு லாவு மரிவையை
நிகர்பொற் கோல மாதர் மருள்தரு
கலகக் காம நூலை முழுதுண ரிளைஞோர்கள்
கலவிக் காசை கூர வளர்பரி
மளகற் பூர தூம கனதன
கலகத் தாலும் வாணி னசையுமி னிடையாலும்
விமலச் சோதி ரூப இமகர
வதனத் தாலு நாத முதலிய
விரவுற் றூறு கால்கள் சுழலிருள் குழலாலும்
வெயிலைப் போதும் வீசு மணிவளை
அணிபொற் றோள்க ளாலும் வடுவகிர்
விழியிற் பார்வை யாலு மினியிடர்ப் படுவேனோ
சமரிற் பூதம் யாளி பரிபிணி
கனகத் தேர்கள் யானை யவுணர்கள்
தகரக் கூர்கொள் வேலை விடுதிற லுருவோனே
சமுகப் பேய்கள் வாழி யெனஎதிர்
புகழுக் காணி லாடு பரிபுர
சரணத் தேக வீர அமைமன மகிழ்வீரா
அமரர்க் கீச னான சசிபதி
மகள்மெய்த் தோயு நாத குறமக
ளணையச் சூழு நீத கரமிசை யுறுவேலா
அருளிற் சீர்பொ யாத கணபதி
திருவக் கீசன் வாழும் வயலியி
னழகுக் கோயில் மீதில் மருவிய பெருமாளே.

375. கமல மாதுடன் இந்திரை யுஞ்சரி
சொலவொ ணாதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையில் அங்கையில் இருபோதேய்
களவு நூல்தெரி வஞ்சனை அஞ்சன
விழியில் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியில் இந்துமு கந்தனில் மருளாதே
அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதஅ றம்பொரு ளின்பமும்
அடைய வோதியு ணர்ந்துத ணந்தபின் அருள்தானே

அறியு மாறுபெ றும்படி அன்பினின்
இனிய நாதசி லம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்
குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை அம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி எமதாயி
குறைவி லாளுமை மந்தரி அந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்
மமவி நாயக னஞ்சுழிழ் கஞ்சுகி
அணிக ஜானன விம்பனொ ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தருள் இளையோனே
வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

376. கமலமுகப் பிறைநுதல்பொற்
சிலையெனவச் சிரகணைநற்
கயலெனபொற் சுழலும்விழிக் குழல்கார்போல்
கதிர்தரளொப் பியதசனக்
கமுகுகளப் புயகழைபொற்
கரகமலத் துகிர்விரலிற் கிளிசேரும்
குமரிதனத் திதலைமலைக்
கிகலியிணைக் கலசமெனக்
குவிமுலைசற் றசையமணிக் கலனுடைக்
கொடியிடைபட் டுடைநடைபொற்
சரணமயிற் கமனமெனக்
குணகிபொருட் பறிபவருக் குறவாமோ
திமிலையுடுக் குடன்முரசுப்
பறைதிமிதித் திமிதிமெனட்
டிமிடிமிடிட் டிகுர்திமிதித் தொலிதாளம்
செககணசெக் கணகதறத்
திடுதிடெனக் கொடிமுடியெட்
டிகைசிலைபட் டுவரிபடச் சிலைகோலித்

துயிலவுடற் றசுரர்முடிப்
பொடிபடாத் தழுள்பெருகத்
தொகுதசைதொட் டலகையுணத் தொடும்வேலா
துவணிதினைப் புனமருவிக்
குறமகளைக் களவுமயற்
சுகமொடணைத் தருணகிரிப் பெருமாளே.

377. கமலமொட் டைக்கட் டழித்துக் குமிழியை
நிலைகுலைத் துப்பொற் குடத்தைத் தமனிய
கலசவர்க் கத்தைத் தகர்த்துக் குலையற இளநீரைக்
கறுவிவட் டைப்பிற் றுரத்திப் பொருதவ
சயம்விளைத் துச்செப் படித்துக் குலவிய
கரிமருப் பைப்புக் கொடித்துத திறல்மதன் அபிஷேகம்
அமலர்நெற் றிக்கட் டழற்குட் பொடிசெய்து
அதிகசக் ரப்புட் பறக்கக் கொடுமைபி
னடல்படைத் தச்சப் படுத்திச் சபதமொ டிருதாளம்
அறைதல்கற் பித்துப் பொருப்பைப் பரவிய
சிறகறுப் பித்துக் கதிர்த்துப் புடைபடு
மபிநவச் சித்ரத் தனத்துத் திருடிகள் உறவாமோ
தமரமிக் குத்திக் கதிர்க்கப் பலபறை
தொகுதொகுக் குத்தொத் தொகுக்குத் தொகுதொகு
திரிகிடத் தத்தத் தரிக்கத் தரிகிட எனவோதிச்
சவுடுறப் பக்கப் பமொழத்திப் புகையெழ
விழிகளுட் செக்கச் சிவத்துக் குறளிகள்
தசைகள்பட் சித்துக் களிக்கக் கழுதொடு கழுகாட
அமலையுற் றுக்கொக் கரித்துப் படுகள
அசுரரத் தத்திற் குளித்துத் திமியென
அடிநடித் திட்டிட் டடித்துப் பொருதிடு மயிலோனே
அழகுமிக் கச்சித் ரபச்சைப் புரவியி
னுலவுமெய்ப் ப்ரத்ய க்ஷநற்சற் குருபர
*அருணையிற் சித்தித் தெனக்குத் தெளிவருள்
பெருமாளே.

*வயலியிற் சித்தித் தெனக்குத் தெளிவருள் பெருமாளே.

378. கமலரு சோகாம்பர முடிநடு வேய்பூங்கணை
கலகமர் வாய்தோய்ந்தம ளியின்மீதே
களையற மீதூர்ந்தெழ மதனவி டாய்போம்படி
கனவிய வாரேந்தின இளநீர்தோய்ந்
தெமதுயிர் நீலாஞ்சன மதர்விழி யால்வாங்கிய
இவளுடன் மால்கூர்ந்திடும் அநுபோகம்
இனிவிட வேதாந்தப ரமசுக வீடாம்பொருள்
இதவிய பாதாம்புயம் அருள்வாயே
அமகர ஆசாம்பர அதுகர ஏகாம்பர
அதுலன நீலாம்பரம் அறியாத
அநகர நாளாங்கிதர் தமையுமை யாள்சேர்ந்தருள்
அறமுறு சீகாஞ்சியில் உறைவோனே
விமலகி ராதாங்கனை தனகிரி தோய்காங்கெய
வெடிபடு தேவேந்திர னகர்வாழ
விரிகடல் தீமூண்டிட நிசிசரர் வேர்மாண்டிட
வினையற வேல்வாங்கிய பெருமாளே.

379. கமையற்ற சீர்கேடர் வெகுதர்க்க கோலாலர்
களையுற்று மாயாது மந்த்ரவாதக்
கடைகெட்ட ஆபாத முறுசித்ர கோமாளர்
கருமத்தின் மாயாது தொண்டுபூணுஞ்
சமயத்த ராசார நியமத்தின் மாயாது
சகளத்து ளேநாளு நண்புளோர்செய்
சரியைக்கிரி யாயோக நெறிபற்றி மாறாது
சலனப்ப டாஞானம் வந்துதாராய்
அமரிற்சு ராபான திதிபுத்ர ராலோக
மதுக்க மேயாக மிஞ்சிடாமல்
அடமிட்ட வேல்வீர திருவொற்றி யூர்நாத
அருணச்சி காநீல கண்டமூர்த்தி
மமபட்ச மாதேவ குமரச்சு வாமீநின்
மலநிட்க ளாமாயை விந்துநாதம்
வாசத்தி மேலான பாவத்து வேமேலை
வயலிக்குள் வாழ்தேவர் தம்பிரானே.

380. கயலைச் சருவிப் பிணையொத் தலர்பொற்
கமலத் தியல்மைக் கணியாலே
கடிமொய்ப் புயலைக் கருதிக் கறுவிக்
கதிர்விட் டெழுமைக் குழலாலே
நயபொற் கலசத் திணைவெற் பிணைமிக்
குளநற் பெருசெப் பிணையாலே
நலமற் றறிவற் றுணர்வற் றனனற்
கதியெப் படியுற் றிடுவேனோ
புயலுற் றியல்மைக் கடலிற் புகுகொக்
கறமுற் சரமுய்த் தடலோடும்
பொருதிட் டமரர்க் குறுதுக் கமும்விட்
டொழியப் புகழ்பெற் றிடுவோனே
செயசித் திரமுத் தமிழுற் பவநற்
செபமுற் பொருளுற் றருள்வாழ்வே
சிவதைப் பதிரத் தினவெற் பதனிற்
றிகழ்மெய்க் குமரப் பெருமாளே.

381. கயல்விழித் தேனைச் செயலழித் தாயெனக்
கணவகெட் டேனெனப் பெறுமாது
கருதுபுத் ராவெனப் புதல்வரப் பாவெனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே
பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனாரும்
பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாள்தயைத் தரவேணும்
அயிலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அமரரத் தாசிறுக் குமரிநட் பாகனத்
தரியசொற் பாவலர்க் கருள்வோனே
புயவிளைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே
பொடிபடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே.

382. காங்க மலமின தாம்ப வளம்வளை
களம்ப கழிவிழி மொழிபாகு
கரும்ப முதுமுலை குரும்பை குருகுப
கரும்பி டியினடை எயின்மாதோ
டாங்க நககன தனங்கு தலையிசை
அலங்கி ருதமுற மயில்மீதே
அமர்ந்து பவவினை களைந்து வருகொடி
யவந்த கனகல வருவாயே
தாங்க முதியம காம்பொ ருததிரை
தழங்கு நதிகும ரெனவான
தலம்ப ரவமறை புலம்ப வருசிறு
சதங்கை அடிதொழு பவராழி
இரங்கு நதிதிரு வரங்கர் மருகப
னிரண்டு புயமலை கிழவோனே
இலங்கு தாதமிழ் விளங்க வருதிரு
இலஞ்சி மருவிய பெருமாளே

383. காதல முங்குறி கொண்ட கண்டமும்
விரவியெ ழுந்துசு ருண்டு வண்டடர்
கனவிய கொண்டைகு லைந்த லைந்திட அதிபாரக்
களபசு கந்தமி குந்த கொங்கைக
ளிளகமு யங்கிம யங்கி அன்புசெய்
கனியித ழுண்டுதெ வண்டு பஞ்சணை மிசைவீழா
இரதம ருந்தியு றங்க றங்கயல்
பொருதுசி வந்துகு விந்தி டும்படி
இதவிய உந்தியெ னுந்த டந்தனில் உறமூழ்கி
இனியதொ ரின்பம்வி ளைந்த ளைந்துபொய்
வனிதையர் தங்கள்ம ருங்கி ணங்கிய
இளமை கிழம்படு முன்ப தம்பெற உணர்வேனோ
பாதசி லம்புபு லம்பு மம்பத
வரிமுக எண்கினு டன்கு ரங்கணி
பணிவிடை சென்றமு யன்று குன்றணி
இடையேபோய்ப்

பகடியி லங்கைக லங்க அம்பொனின்
மகுடசி ரந்தச ழுந்து ணிந்தெழு
படியுந டுங்கவி ழும்ப னம்பழ மெனவாகும்

மருதமு தைந்தமு குந்த னன்புறு
மருககு விந்தும லர்ந்த பங்கய
வயலியில் வம்பவிழ் சண்ப கம்பெரி யவிராலி

மலையில்வி ளங்கிய கந்த என்றனை
மகிழ்வொடு வந்திசெய் மைந்த னென்றனை
வழிவழி அன்புசெய் தொண்டு கொண்டருள்
பெருமாளே.

384. காமு முளரியின் மலர்முக மதிகுழல்
கனம தெனுமொழி கனிகதிர் முலைநகை
கலக மிடுவிழி கடலென விடமென மனதூடே

கருதி யனநடை கொடியிடை யியல்மயில்
கமழு மகிலுட னிளகிய ம்ருகமத
களப புளகித கிரியினு மயல்கொடு திரிவேனும்

இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவர
இதய முருகியெ யொருகுள பதமுற மடலூடே

எழுத அரியவள் குறமக ளிருதன
கிரியில் முழுகின விளையவ னெனுமுரை
இனிமைபெறுவதுமிருபதமடைவது மொருநாளே

சுரபி மகவுயிர் படவரண் மனையிடை
மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவுமுன் அதிதீது

துணிவி லிதுபிழை பெரிதென வருமனு
வுருகி யரகர சிவசிவ பெறுமதோர்
சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாகப்

பாவி யதனது துயர்கொடு நடவிய
பழுதின் மதலையை யுடலிரு பிளவொடு
படிய ரதமதை நடவிட மொழிபவன் அருளாரூர்

படியி லறுமுக சிவசுத கணபதி
யிளைய குமரநி ருபபதி சரவண
பரவைமுறையிடஅயில்கொடுநடவிய பெருமாளே.

385. காவுசேர் மகளிர்கும் குமபயோ தரதனங்
கனினறு துயில்வதுஞ் சரிபேசுங்
கரசரோ ருககசம் படவிடாய் தணிவதுஞ்
கமலநா பியின்முயங் கியவாழ்வும்
அரவுபோ லிடைபடிந் திரவெலா முழுகுமின்
பநல்மகோ ததிநலம் பெறுமாறும்
அதரபா னமுதமுந் தவிரவே மவுனபஞ்
சரமனோ லயசுகந் தருவாயே
பாவுமா யிரமுகங் கொடுதிசா முகதலம்
படர்பகீ ரதிவிதம் பெறஆடல்
பயில்பணா வனமுகந் தருணமா சுணகணம்
பணிநிலா வுமிழுமம் புலிதாளி
குரவுகூ விளமரும் பிதழிதா தகிநெடுங்
குடிலவே ணியிலணிந் தவராகங்
குழையவா தாவுடன் தழுவுநா யகிதருங்
குமரனே யமரர்தம் பெருமாளே.

386. கரிக்குழல் விரித்தும் புறக்கயல் விழித்துங்
கரிக்குவ டிணைக்குந் தனபாரக்
கரத்திடு வளைச்சங் கிலிச்சர மொலித்துங்
கலைத்துகில் மினுக்கும் பணிவாரைத்
தரித்துள மழிக்குங் கவட்டர்க ளிணக்கந்
தவிர்த்துன துசித்தங் களிகூரத்
தவக்கடல் குளித்திங் குனக்கடி மையுற்றுன்
தலத்தினி லிருக்கும் படிபாராய்
புரத்தையு மெரித்தங் கயத்தையு முரித்தொண்
பொடிப்பணி யெனப்பன் குருநாதா
புயப்பணி கடப்பந் தொடைச்சிக ரமுற்றின்
புகழ்ச்சிய முதத்தின் புலவோனே

திரட்பரி கரிக்கும் பொடிப்பட வுணர்க்குந்
தெறிப்புற விடுக்குங் கதிர்வேலா
சிறப்பொடு குறப்பெண் களிக்கும்வி சயத்தென்
திருத்தணி இருக்கும் பெருமாளே.

387. கரிக்கொம்பந் தனித்தங்கங்
குடத்தின்பந் தனத்திங்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்
கணைக்கும்பண் டுழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்
சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
துகிற்றந்தந் தரிக்குந்தன்
சடத்தும்பண் பிலுக்குஞ்சம் பளமாதர்
சலித்தும்பின் சிரித்துங்கொண்
டழைத்துங்கண் பசப்பும்பெண்
தனத்துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ
சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழித்தின்பங் களித்துண்பன்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்தங் கசுரரைத்
துவைத்தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா
சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங் கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே
திணைத்தொந்தங் குறப்பெண்பண்
சசிப்பெண்கொங் கையிற்றுஞ்சுஞ்
செழிக்குஞ்செந் திலிற்றங்கும் பெருமாளே.

388. கரிபு ராரி காமாரி திரிபு ராரி தீயாடி
கயிலை யாளி காபாலி கழையோனி
கரவு தாச னாசாரி பரசு பாணி பானாளி
கணமொ டாடி காயோகி சிவயோகி

பரம யோகி மாயோகி பரிய ராஜ டாகூடி
பகரொா ணாத மாஞானி பசுவேறி
பரத மாடி காணுடி பரவ யோகி காதீத
பரம ஞான வூர்பூத அருளாயோ
சுருதி யாடி தாதாவி வெருவி யோட மூதேவி
துரக கோப மீதோடி வடமேரு
சுழல வேலை தீமூள அழுத ளாவி வாய்பாறி
சுரதி னோடு சூர்மாள வுலகேழும்
திகிரி மாதி ராவார திகிரி சாய வேதாள
திரளி னோடு பாரோடு கழுகாடச்
செருவி னூடு வானீப கருணை மேரு வேபார
திருவி ராலி யூர்மேவு பெருமாளே.

389. கரிமுகக் கடகளிற் றதிகசுற் பகமதக்
கஜமுகத் தவுணனைக் கடியானை
கடலையெட் பயறுநற் கதலியிற் கனிபலக்
கனிவயிற் றினிலடக் கியவேழம்
அரிமுகத் தினனெதிர்த் திடுகளத் தினின்மிகுத்
தமர்புரிக் கணபதிக் கிளையோனே
அயிலெடுத் தசுரர்வெற் பலைவுறப் பொருதுவெற்
றியைமிகுத் தறுமுகக் குமரேசா
நரிமிகுக் கிளைகளைப் பரியெனக் கடிவளத்
தொடுபிடித் தெதிர்நடத் திடுமீசன்
நடனமிப் படியிடத் தினுமிசைத் தவையினிற்
கரியுரித் தணிபவற் கொருசேயே
துரிபெறச் சரிபொழிற் கனவயற் கழகுளத்
துரியமெய்த் தரளமொய்த் திடவீறிச்
சுரர்துதித் திடமிகுத் தியல்தழைத் தருணையிற்
சுடரயிற் சரவணப் பெருமாளே.

390. கரியகுழல் சரியமுகம் வேர்வாட வாசமுறு
களபமுலை புளகமெழ நேரான வேல்விழிகள்
கயல்பொருது செயலதென நீள்பூச லாடநல
கனிவாயின்

கமழ்குமுத விதழ்பெருகு தேனூறல் பருகமிகு
கடலமுத முதவியிரு தோள்மாலை தாழவளை
கலகலென மொழிபதற மாமோக வாரியது கரைகாணு
தெரியணுகு மெழுகுபத மாய்மேவி மேவியிணை
யிருவருட லொருவரென நாணூது பாயல்மிசை
இளமகளிர் கலவிதனி லேமூழ்கி யாழுகினு
மிமையாதே
இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும்
இளமையுமு னழகுபுனை யீராறு தோள்நிரையும்
இருபதமு மறுமுகமும் யானோத ஞானமதை
யருள்வாயே
உரியதவ நெறியில்நம நாராய ணாயவென
ஒருமதலை மொழியளவி லோராத கோபமுட
னுனதிறைவ னெதனிலுள னோதாய டாவெனுமுன்
உறுதூணில்
உரமுடைய அரிவடிவ தாய்மோதி வீழவிர
லுகிர்புதைய இரணியனை மார்கீறி வாகைபுனை
உவணபதி நெடியவனும் வேதாவும் நான்மறையும்
உயர்வாக
வரியளிக ளிசைமுரல வாகான தோகையிள
மயிலின்மிசை நடனமிட ஆகாச மூடுருவ
வளர்கமுகின் விரிபொழில்கள் பூணார மாகியிட
மதில்சூழும்
மருதரசர் படைவிடுதி வீடாக நாடிமிக
மழவிடையின்மிசையிவரு சோமீசர்கோயில்தனில்
மகிழ்வுபெற உறைமுருக னேபேணு வானவர்கள்
பெருமாளே.

391. கரிய பெரிய எருமை கடவு
கடிய கொடிய திரிசூலன்
கறுவி இறுகு கயிறொ டுயிர்கள்
கழிய முடுகி எழுகாலம்
திரியு நரியு மெரியு முரிமை
தெரிய விரவி அணுகாதே

செறிவு மறிவு முறவு மனைய
திகழு மடிகள் தாவேணும்
பரிய வரையி னரிவை மருவு
பரம ராருளு முருகோனே
பழன முழவர் கொழுவி லெழுது
பழைய பழநி அமர்வோனே
அரியு மயனும் வெருவ அரிய
கிரியை உருவ எறிவோனே
அயிலு மியலு மறமு நிறமு
மழகு முடைய பெருமாளே.

392. கரியமுகில் போலு மிருளளக பார
கயல்பொருத வேலின் விழிமாதர்
கலவிகளில் மூழ்கி ம்ருகமதப டீர
களபமுலை தோய அணையூடே
விரகமது வான மதனகலை யோது
வெறியனென நாளு முலகோர்கள்
விதரணம தான வகைநகைகள் கூறி
விடுவதன்முன் ஞான அருள்தாராய்
அரிபிரமர் தேவர் முனிவர்சிவ யோகர்
அவர்கள்புக ழோத புவிமீதே
அதிகநட ராஜர் பரவுகுரு ராஜ
அமரர்குல நேச குமரேசா
சிரகரக பாலர் அரிவையொரு பாகர்
திகழ்கனக மேனி உடையாளர்
திருவளரு மாதி புரியதனில் மேவு
செயமுருக தேவர் பெருமாளே.

393. கரிய மேகம தோஇரு ளோகுழல்
அரிய பூரண மாமதி யோமுகம்
கணைகொலோ அயில்வேலது வோவிழியிதழ்பாகோ
கமுகு தானிக ரோவளை யோகளம்
அரிய மாமல ரோதுளி ரோகரம்
கனக மோதது வோகுட மோமுலை மொழிதேனோ

கருணை மால்துயி லாலிலை யோவயி
றிடைய தீரொரு நூலது வோவென
கனக மாமயில் போல்மட வாருடன் மிகநாடி
கசட னுய்வய தாயொரு நூறுசெல்
வதனின் மேலென தாவியை நீயிரு
கமல மீதினி லேவர வேயருள் புரிவாயே
திரிபு ராதிகள் நீறெழ வேமிக
மதனை யேவிழி யால்விழ வேசெயும்
சிவசொ ரூபம கேசுர னீடிய தனயோனே
சினம தாய்வரு சூரர்கள் வேரற
அமரர் வானவர் வாடிடு தேவர்கள்
சிறைகள் மீளவு மேவடி வேல்விடு முருகோனே
பரிவு சேர்கம லாலய சீதன
மருவு வார்திரு மாலரி நாரணர்
பழைய மாயவர் மாதவ னார்திரு மருகோனே
பனக மாமணி தேவிக்கு பாகரி
குமர னேபதி னாலுல கோர்புகழ்
பழநி மாமலை மீதினி லேயுறை பெருமாளே.

394. கரியமேக மெனுங்குழ லார்பிறை
சிலைகொள் வாகு வெனும்புரு வார்விழி
கயல்கள் வாளி யெனுஞ்செய லார்மதி துண்டமாதர்
கனகமேவு புயங்கழை யார்தன
மலைகளாயி ணையுங்குவ டாரக
கமலவாழை மனுந்தொடை யார்மினிர் புங்கமாடை
வரியபாளி தமுந்துடை யாரிடை
துடிகள் நூலி யலுங்கவி னார்சுருல்
மணமுலாவி யாம்பையி னார்பொருள் சங்கமாதர்
மயில்கள்போல நடம்புரி வாரியல்
குணமிலாத வியன்செய லார்வலை
மசகிநாயெ னழிந்திட வோஉன தன்புதாராய்
சரியிலாத சயம்பவி யார்முகி
லளகபார பொனின்சடை யாள்சிவை
சருவலோக சவுந்தரி யாளருள் கந்தவேளே

சதபணும குடம்பொடி யாய்விட
அவுணர்சேனை மடிந்திட வேயொரு
தழல்கொள்வேலை யெறிந்திடு சேவக செம்பொன்வாகா
அரியமேனி யிலங்கையி ராவணன்
முடிகள்வீழ சரந்தொடு மாயவன்
அகிலமீரெ ழுமுண்டவன் மாமரு கண்டரோதும்
அழகுசோபி தவங்கொளு மானன
விபுதைமோகி குறிஞ்சியின் வாழ்வளி
அருள்கொடாடி சிதம்பர மேவிய தம்பிரானே.

395. கரியிணைக் கோடெனத் தனமசைத் தாடுநற்
கயல்விழிப் பார்வையிற் பொருள்பேசிக்
கலையிழுத் தேகுலுக் கெனநகைத் தேமயற்
கலதியிட் டேயழைத் தணையூடே
செருமிவித் தாரசிற் றிடைதுடித் தாடபற்
றிறமணித் தேபொருட் பறிமாதர்
செயலிழுக் காமலிக் கலியுகத் தேபுகழ்ச்
சிவபதத் தேபதித் தருள்வாயே
திரிபுரக் கோலவெற் பழல்கொளச் சீர்நகைச்
சிறிதருட் டேவனற் புதல்வோனே
திரைகடற் கோவெனக் குவடுகட் டூள்படத்
திருடர்கெட் டோடவிட் டிடும்வேலா
பரிமளப் பாகலிற் கனிகளைப் பீறிநற்
படியினிட் டேகுரக் கினமாடும்
பழநியிற் சீருறப் புகழ்குறப் பாவையைப்
பரிவுறச் சேர்மணப் பெருமாளே.

396. கரியுரி அரவ மணிந்த மேனியர்
கலைமதி சலமு நிறைந்த வேணியர்
கனல்மழு உழையு மமர்ந்த பாணியர் கஞ்சமாதின்
கனமுலை பருகி வளர்ந்த காமனை
முனிபவர் கயிலை அமர்ந்த காரணர்
கதிர்விரி மணிபொ னிறைந்த தோளினர் கண்டகாள

விரிவென வுனது ளுகந்த வேலென
மிகவிரு குழையு மடர்ந்து வேளினை
அனையவ ருயிரை விழுங்கி மேலும்வெ குண்டுலாடும்

வினைவிழி மகளிர் தனங்கள் மார்புற
விதமிகு கலவி பொருந்தி மேனியு
மெழில்கெட நினைவு மழிந்து மாய்வதொ ழிந்திடாதோ

எரிசொரி விழியு மிரண்டு வாளெயி
றிருபிறை சயில மிரண்டு தோள்முகி
லெனவரு மசுரர்சி ரங்கள் மேருவி டிந்துவீழ்வ

தெனவிழ முதுகு பிளந்து காளிக
ளிடுபலி எனவு நடந்து தாள்தொழ
எதிர்பொரு துதிர முகந்த வேகமி குந்தவேலா

அரிகரி உழுவை அடர்ந்த வாண்மலை
அருணையில் மிகவு முயர்ந்த கோபுர
மதிலுறை குமர அனந்த வேதமொ ழிந்துவாழும்

அறுமுக வடிவை ஒழிந்து வேடர்கள்
அடவியி லரிவை குயங்கள் தோய்புய
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே.

397. கருகிய கன்று வரிசெறி கண்கள்
கயல்நிக ரென்று துதிபேசி

இலைசுருள் மென்று இடர்படு கின்ற
கடுவிட முண்டு பலநாளும்

விரகுறு சண்ட வினையுடல் கொண்டு
விதிவழி நின்று தளராதே

விரைகமழ் தொங்கல் மருவிய துங்க
விருபத மென்று பெறுவேனோ

முருகக டம்ப குறமகள் பங்க
முறையென அண்டர் முறைபேச

முதுகிரி பொன்ற வருதிறல் வஞ்ச
முரணசுர் வென்ற வடிவேலா

பரிமள இன்ப மரகத துங்க
பகடித வென்றி மயில்வீரா
பறிதலை குண்டர் கழுநிரை கண்டு
பழநிய மர்ந்த பெருமாளே.

398. கருகியறி வகலவுயிர் விட்டுக் கிக்கிளைஞர்
கதறியழ விரவுபறை முட்டக் கொட்டியிட
கனகமணி சிவிகையில மர்த்திக் கட்டையினில்
இடைபோடாக்
கரமலர்கொ டரிசியினை இட்டுச் சித்ரமிகு
கலையையுரி செய்துறைகள் பற்றப் பற்றுகனல்
கணகணென எரியவுடல் சுட்டுக் கசிவியவர்
வழியேபோம்
மருவுபுனல் முழுகிமனை புக்குத் துக்கமறு
மனிதர்தமை உறவுநிலை சுட்டிச் சுட்டியுற
மகிழ்வுசெய்து அழுதுபட வைத்தத்துட்டன்மதன்
மலராலே
மயல்விளைய அரிவையர்கள் கைப்பட் டெய்த்துமிக
மனமழியு மடிமையைநி னைத்துச் சொர்க்கபதி
வழியையிது வழியெனவு ரைத்துப்பொற்கழல்கள்
தருவாயே
பொருவின்மலை யரையனருள் பச்சைச் சித்ரமயில்
புரமெரிய இரணியத னுக்கைப் பற்றியியல்
புதியமுடு கரியதவம் உற்றுக் கச்சியினில்
உறமேவும்
புகழ்வனிதை தருபுதல்வ பத்துக் கொத்துமுடி
புயமிருப தறவுமெய்த சக்ரக் கைக்கடவுள்
பொறியரவின்மிசைதுயிலு சுத்தப்பச்சைமுகில்
மருகோனே
அரியமர கதமயிலி லுற்றுக் கத்துகட
லதுசுவற அசுரர்கிளை கெட்டுக் கட்டையற
அமரர்பதி இனியகுடி வைத்தற் குற்றுமிகும்
இளையோனே

அருணமணி வெயில்பரவு பத்துத் திக்குமிகு
மழகுபொதி மதகுமடை தத்தித் தத்திவளர்
அணிகயல்க ளுகளும்வயல் அத்திப் பட்டிலுறை
பெருமாளே.

399. கருடன் மிசைவரு கரிய புயலென
கமல மணியென உலகோரைக்
கதறி யவர்பெயர் செருகி மனமது
கருதி முதுமொழி களைநாடித்
திருடி ஒருபடி நெருடி அறிவிலர்
செவியில் நுழைவன கவிபாடித்
திரியுஞ் சிலசில புலவ ரொடுமுழல்
சிறிய னுனதருள் பெறுவேனோ
வருடை இனமது முருடு படுமகில்
மாமு மருந்தமும் அடிசாய
மதுர மெனநதி பெருகி இருகரை
வழிய வருகயல் குதிபாயும்
குருடி மலையுறை முருக குலவட
குவடு தவிடெழ மயிலேறும்
*குமர குருபர திமிர தினகர
குறைவி லிமையவர் பெருமாளே.

400. கருணை சிறிதுமில் பறிதலை நிசிசர்
பிசித அசனம றவரிவர் முதலிய
கலக விபரித வெகுபர சமயிகள் பலர்கூடிக்
கலக லெனநெறி கெடமுறை முறைமுறை
கதறி வதறிய குதறிய கலைகொடு
கருத வரியதை விழிபுனல் வரமொழி குழறுவன்
புருகி உனதருள் பரவுகை வரில்விர
கொழியி லுலகியல் பிணைவிடி லுரைசெய
லுணர்வு கெடிலுயிர் புணரிரு வினையள றதுபோக

*குமர குருமலை மருவி வளர்குக.

உதறி யெனதெனு மலமறி அறிவினி
லெளிது பெறவென மறைபறை அறைவதொ
ருதய மரணமில் பொருளினை அருளுவ தொருநாளே

தருண சததள பரிமள பரிபுர
சரணி தமனிய தநுதரி திரிபுர
தகனி கவுரிப வதிபக வதிபயி ரவிசூலி

சடில தரியனு பவையுமை திரிபுரை
சகல புவனமு முதவிய பதிவ்ருதை
சமய முதல்வித னயபகி ரதிசுத சதகோடி

அருண ரவியினு மழகிய ப்ரபைவிடு
கருணை வருணித தனுபர குருபர
அருணை நகருறை சரவண குரவணி புயவேளே

அடவி சரர்குல மரகத வனிதையு
மமரர் குமரியு மனவர தமுமரு
கழகு பெறநிலை பெறவர மருளிய பெருமாளே.

401. கருதியே மெத்த விடமெலாம் வைத்த
கலகவா ளொத்த விழிமாதர்

கடினபோ கத்த புளகவா ருற்ற
களபமார் செப்பு முலைமீதே

உருகியான் மெத்த அவசமே உற்ற
உரைகளே செப்பி அழியாதுன்

உபயபா தத்தி னருளையே செப்பு
முதயஞா னத்தை அருள்வாயே

பருவரா லுற்ற மடுவின்மீ துற்ற
பகடுவாய் விட்ட மொழியாலே

பரிவினோ டுற்ற திகிரியே விட்ட
பழையமா யற்கு மருகோனே

முருகுலா வுற்ற குழலிவே டிச்சி
முலையின்மே வுற்ற க்ருபைவேளே

முருகனே பத்த ருருகனே வெற்பு
முறியவேல் தொட்ட பெருமாளே.

402. கருத்தி தப்படு காமா லீலைகள்
விதத்தை நத்திய வீணா வீணிகள்
கவட்டு விற்பன மாயா வாதிகள் பலகாலுங்
கரைத்து ரைத்திடு மோகா மோகிக
ளளிக்கு லப்பதி கார்போ லோதிகள்
கடைக்க ணிற்சுழ லாயே பாழ்படு வினையேனை
உரைத்த புத்திகள் கேளா நீசனை
அவத்த மெத்திய ஆசா பாசனை
உளத்தில் மெய்ப்பொரு ளோரா மூடனை அருளாகி
உயர்ச்சி பெற்றிடு மேலா மூதுரை
அளிக்கு நற்பொரு ளாயே மாதவ
உணர்ச்சி பெற்றிட வேநீ தாளிணை அருள்வாயே
செருக்கி வெட்டிய தீயோ ராமெனு
மதத்த துட்டர்கள் மாசூ ராதிய
சினத்தர் பட்டிட வேவே லேவிய முருகோனே
சிவத்தை உற்றிடு தூயா தூயவர்
கதித்த முத்தமிழ் மாலா யோதிய
செழிப்பை நத்திய சீலா வீறிய மயில்வீரா
வரைத்த வற்கலர் சூலா பாணிய
ரதிக்கு ணத்தரர் தீரா தீர்த
மனத்தி யற்படு ஞானா தேசிக வடிவேலா
வருக்கை யிற்கனி சாறாய் மேவிடு
தழைத்த செய்த்தலை ஊடே பாய்தரு
மருத்து வக்குடி வாழ்வே தேவர்கள் பெருமாளே

403. கருத்திலுல் விரகுசெய் மடமாதர்
கனத்தமோ கனமதில் மருளாதே
ஒருத்தனு னுனதிரு வருளாலே
உனக்குநா னடிமைகள் புகுவேனோ
பருத்ததோ கையில்வரு முருகோனே
பராக்கவே அயிலெறி வயலூரா
திருத்தமா தவர்பணி குருநாதா
திருக்கைவே லழகிய பெருமாளே.

404. கருநி றஞ்சிறந் தகல்வன புகல்வன
மதன தந்திரங் கடியன கொடியன
கனக குண்டலம் பொருவன வருவன பரிதாவுங்
கடலு டன்படர்ந் தடர்வன தொடர்வன
பிணைய னஞ்சனைந் தொளிர்வன மிளிர்வன
கணையை நின்றுநின் றெதிர்வன முதிர்வன
இளையோர்முன்
செருவை விண்டகஞ் சிறுவன உறுவன
களவு வஞ்சகஞ் சுழல்வன உழல்வன
தெனன தெந்தனந் தெனதென தெனதென
எனநாதம்
தெரிசு ரும்பைவென் றிடுவன அடுவன
மருள்செய் கண்கள்கொண் டணைவர்த முயிரது
திருகு கின்றமங் கையர்வச மழிதலை ஒழிவேனோ
மருவு தண்டைகிண் கிணிபரி புரமிவை
கலக லன்கலின் கலினென இருசரண்
மலர்கள் நொந்துநொந் தடியிட வடிவமு மிகவேறாய்
வலிய சிங்கமுங் கரடியு முழுவையு
முறைசெ ழும்புனந் தினைவிளை இதண்மிசை
மறவர் தங்கள்பெண் கொடிதனை ஒருதிரு வுளநாடி
அருகு சென்றடைந் தவள்சிறு பதயுக
சதத ளம்பணிந் ததிவித கலவியு
ளறம ருண்டுநெஞ் சவளுடன் மகிழ்வுற
அணைவோனே
அமரர் சங்கமுங் குடிபுக நொடியினில்
நிருதர் சங்கமும் பொடிபட அமர்செய்து
அருணை வந்துதென் திசைதனி லுறைதரு
பெருமாளே.

405. கருப்பத் தூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே

பாப்பற் றுருக் குரியோனே
    பரத்தப் பாலுக் கணியோனே
திருக்கைச் சேவற் கொடியோனே
    செகத்திற் சோதிப் பெருமாளே.

406. கருப்பந்தங் கிரத்தம்பொங்
    கரைப்புண்கொண் டிருக்கும்பெண்
    களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே
  கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
    துவக்குண்டும் பிணக்குண்டுங்
    கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்
செருத்தண்டந் தரித்தண்டம்
    புகத்தண்டத் தகற்கென்றுந்
    திகைத்தந்திண் செகத்தஞ்சுங் கொடுமாயும்
  தியக்கங்கண் டுயக்கொண்டென்
    பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்
    சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே
அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
    டிரைக்கண்சென் றரக்கன்பண்
    பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா
  அணிச்சங்கங் கொழிக்குந்தண்
    டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
    தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா
புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
    கார்க்குஞ்சங் கார்க்கின்பம்
    புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனைப்
  புனக்குன்றந் திளைக்குஞ்செந்
    தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
    புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே.

407. கருப்பற்றிப் பருத்தொக்கத்
    தரைக்குற்றிட் டுருப்பெற்றுக்
    கருத்திற்கட் பொருட்பட்டுப் பயில்காலம்

கணக்கிட்டுப் பிணக்கிட்டுக்
கதித்திட்டுக் கொதித்திட்டுக்
கயிற்றிட்டுப் பிடித்திட்டுச் சமனாவி

பெருக்கப்புத் தியிற்பட்டுப்
புடைத்துக்கக் கிளைப்பிற்பொய்ப்
பிணத்தைச்சுட் டகத்திற்புக் கனைவோரும்

பிறத்தற்சுற் றமுற்றுற்றிட்
டழைத்துத்தொக் கறக்கத்துப்
பிறப்புப்பற் றறச்செச்சைக் கழல்தாராய்

பொருப்புக்கர்ப் புரக்கச்சுத்
தனப்பொற்புத் தினைப்பச்சைப்
புனக்கொச்சைக் குறத்தத்தைக் கினியோனே

புரத்தைச்சுட் டெரித்துப்பற்
றலர்க்குப்பொற் பதத்துய்ப்பைப்
புணர்த்தப்பித் தனைக்கற்பித் தருள்வோனே

செருக்கக்குக் கரைக்குத்திச்
செருப்புக்குப் பிடித்தெற்றிச்
சினத்திட்டுச் சிதைத்திட்டுப் பொரும்வீரா

திருத்தத்திற் புகற்சுத்தத்
தமிழ்ச்செப்புத் ரயச்சித்ரத்
திருக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே

408. கருப்புச் சாப னனைய இளைஞர்கள்
ப்ரமிக்கக் காத லுலவு நெடுகிய
கடைக்கட் பார்வை இனிய வனிதையர் தனபாரங்

களிற்றுக் கோடு கலச மலிநவ
மணிச்செப் போடை வனச நறுமலர்
கனத்துப் பாளை முறிய வருநிகர் இளநீர்போற்

பொருப்பைச் சாடும் வலியை உடையன
அறச்சற் றான இடையை நலிவன
புதுக்கச் சார வடமொ டடர்வன எனநாளும்

புகழ்ச்சிப் பாட லடிமை அவரவர்
ப்ரியப்பட் டாள உரைசெ யிழிதொழில்
பொகட்டெப்போதுசரியைகிரியைசெய்துயிர்வாழ்வேன்
இருட்டுப் பாரில் மறலி தனதுடல்
பதைக்கக் கால்கொ டுதைசெய் தவன்விழ
எயிற்றுப் பேய்வி அமரா ருடலவர் தலைமாலை
எலுப்புக் கோவை அணியு மவர்மிக
அதிர்த்துக் காளி வெருவ நொடியினி
லெதிர்த்திட் டாடும் வயிர பயிரவர் நவநீத
திருட்டுப் பாணி இடப மூதுகிடை
மிதித்திட் டேறி அதிர வருபவர்
செலுத்துப் பூத மலகை இலகிய படையாளி
செடைக்குட் பூளை மதிய மிதழிவெ
ளெருக்குச் சூடி குமர வயலியல்
திருப்புத் தூரில் மருவி உறைதரு பெருமாளே.

409. கருப்புவிலில் மருப்பகழி தொடுத்துமதன் விடுத்தனைய
கடைக்கணொடு சிரித்தணுகு
கருத்தினுல் விரகுசெய் மடமாதர்
கதக்களிறு திடுக்கமுற மதர்த்துமிக எதிர்த்துமலை
கனத்தவிரு தனத்தின்மிசை
கலக்குமோ கனமதில் மருளாமே
ஒருப்படுதல் விருப்புடைமை மனத்தில்வர நினைத்தருளி
உனைப்புகழு மெனைப்புவியில்
ஒருத்தனும் வகைதிரு வருளாலே
உருத்திரனும் விருத்திபெற வனுக்கிரகி எனக்குறுகி
உரைக்கமறை அடுத்தபொருள்
உணர்த்துநா ளடிமையு முடையேனோ
பருப்பதமு முருப்பெரிய அரக்கர்களு மிரைக்குமெழு
படிக்கடலு மலைக்கவல
பருத்ததோ கையில்வரு முருகோனே
பதித்தமர கதத்தினுட னிரத்நமணி நிரைத்தபல
பணிப்பணிரு புயச்சயில
பரக்கவே இயல்தெரி வயலூரா

திருப்புகழை உரைப்பவர்கள் படிப்பவர்கள் மிடிப்பகைமை
செயித்தருளு மிசைப்பிரிய
திருத்தமா தவர்புகழ் குருநாதா
சிலைக்குறவ ரிலைக்குடிலில் புகைக்களக முகிற்புடைசெல்
திருப்பழநி மலைக்குளுறை
திருக்கைவே லழகிய பெருமாளே.

[இப்பாட்டின் ஒவ்வோரடியிலுமுள்ள கடைசி வரிகளைச் சேர்த்தால் கீழ்வரும் பாடல் அமைதல் காண்க.]

கருத்திஞல் விரகுசெய் மடமாதர்
கலக்குமோ கனமதில் மருளாமே
ஒருத்தனும் வகைதிரு வருளாலே
உணர்த்துநா ளடிமையு முடையேனோ
பருத்ததோ கையில்வரு முருகோனே
பரக்கவே யியல்தெரி வயலூரா
திருத்தமா தவர்புகழ் குருநாதா
திருக்கைவே லழகிய பெருமாளே.

410. கருப்பை யிற்சுக் கிலத்து
லைத்துற் பவித்து மறுகாதே
கபட்ட சட்டர்க் கிதத்த
சித்ரத் தமிழ்க்க ளுரையாதே
விருப்ப முற்றுத் துதித்தெ
னைப்பற் றெனக்க ருதுநீயே
வெளிப்ப டப்பற் றிடப்ப
டுத்தத் தருக்கி மகிழ்வோனே
பருப்ப தத்தைத் தொளைத்த
சத்திப் படைச்ச மரவேளே
பணிக்கு லத்தைக் கவர்ப்ப
தத்துக் களித்த மயிலோனே
செருப்பு றத்துச் சினத்தை
முற்றப் பரப்பு மிசையோனே
தினைப்பு னத்துக் குறத்தி
யைக்கைப் பிடித்த பெருமாளே.

411. கரும மானபி றப்பற வொருகதி
காணு தெய்த்துத் தடுமாறுங்
கலக காரண துர்க்குண சமயிகள்
நாலு வர்க்கக் கலைநூலின்
வரும நேகவி கற்பவி பரிதம
னோபா வத்துக் கரிதாய
மவுன பூரித சத்திய வடிவினை
மாலா மெற்குப் புகல்வாயே
தரும வீமவ ருச்சுன நகுலச
காதே வர்க்குப் புகலாகிச்
சமர பூமியில் விக்ரம வளைகொடு
நாளோர் பத்தெட் டினிலாளும்
குரும கீதல முட்பட வுளமது
கோடா மற்க்ஷத் ரியர்மாளக்
குலவு தேர்கடவ் வச்சுதன் மருககு
மாரா கச்சிப் பெருமாளே.

412. கருமய லேறிப் பெருகிய காமக்
கடலினில் மூழ்கித் துயராலே
கயல்விழி யாரைப் பொருளென நாடிக்
கழியும நாளிற் கடைநாளே
எருமையி லேறித் தருமனும் வாதுற்
றிறுகிய பாசக் கயிறாலே
எனைவளை யாமற் றுணைநினை வேனுக்
கியலிசை பாடத் தரவேணும்
திருமயில் சேர்பொற் புயனென வாழத்
தெரியல னோடப் பொரும்வீரா
செகதல மீதிற் பகர்தமிழ் பாடற்
செழுமறை சேர்பொற் புயநாதா
பொருமயி லேறிக் கிரிபொடி யாகப்
புவியது சூழத் திரிவோனே
புனமக ளாரைக் கனதன மார்பிற்
புணரும்வி னோதப் பெருமாளே.

413. கருமுகில்திர ளாகக் கூடிய
இருளெனவள ரோதிக் கேறிய
கடிகமழ்மலர் மாலைக் காரிகள் செவிமீதே

கனவியவிலை யோலைக் காரிகள்
முழுமதிமுக மாயப் பாவிகள்
களவுசெய்முழு மோசக் காரிகள் மயலாலே

பரநெறியுண ராவக் காமுகர்
உயிர்பலிகொளு மோகக் காரிகள்
பகழியைவிழி யாகத் தேடிகள் முகமாயப்

பகடிகள்பொரு ளாசைப் பீடிக
ளுருவியதன பாரக் கோடுகள்
படவுளமழி வேனுக் கோரருள் புரிவாயே

மரகதவித நேர்முத் தார்நகை
குறமகளதி பாரப் பூண்முலை
மருவியமண வாளக் கோலமும் உடையோனே

வளைதருபெரு ஞாலத் தாழ்கடல்
முறையிடநடு வாகப் போயிரு
வரைதொளைபட வேல்விட் டேவிய அதிதீரா

அரவணைதனி லேறிச் சீருடன்
விழிதுயில்திரு மால்சக் ராயுதன்
அயனடிமுடி தேடிக் காணவும் அரிதாய

அலைபுனல்சடை யார்மெச் சாண்மையும்
உடையதொர்மயில் வாகச் சேவக
அழகியதிரு வானைக் காவுறை பெருமாளே.

414. கருமுகில்போல்மட் டாகிய அளகிகள்தேனிற்பாகொடு
கனியமு தூறித்தேறிய மொழிமாதர்

கலவிகள் நேரொப் பாகிகள் மதனிகள் காமக்ரோதிகள்
கனதன பாரக்காரிகள் செயலோடே

பொருகயல் வாளைத்தாவிய விழியினர் சூறைக்காரிகள்
பொருளள வாசைப்பாடிகள் புவிமீதே

பொதுவிகள் போகப்பாவிகள் வசமழி வேனுக்கோரருள்
 புரிவது தானெப்போதது புகல்வாயே

தருவடு தீரச்சூரர்கள் அவர்கிளை மாளத்தூளெழ
 சமனிலை யேறப்பாமுருடு கொடிவீழத்

தனதன தானத்தானன எனவிசை பாடிப்பேய்பல
 தசையுண வேல்விட்டேவிய தனிவீரா

அரிதிரு மால்சக்ராயுத னவனிளை யாள்முத்தார்நகை
 அழகுடை யாள்மெய்ப்பாலுமை அருள்பாலா

அரவொடு பூளைத்தார்மதி அறுகொடு வேணிச்சூடிய
 அழகர்தென் மாதைக்கேயுறை பெருமாளே.

**415.** கருவ டைந்து பத்துற்ற திங்கள்
 வயிறி ருந்து முற்றிப்ப யின்று
 கடையில் வந்து தித்துக்கு ழந்தை வடிவாகிக்

கழுவி யங்கெ டுத்துச்சு ரந்த
 முலைய ருந்து விக்கக்கி டந்து
 கதறி யங்கை கொட்டித்த வழ்ந்து நடமாடி

அரைவ டங்கள் கட்டிச்ச தங்கை
 இடுகு தம்பை பொற்சுட்டி தண்டை
 அவைய ணிந்து முற்றிக்கி ளர்ந்து வயதேறி

அரிய பெண்கள் நட்பைப்பு ணர்ந்து
 பிணியு ழன்று சுற்றித்தி ரிந்த
 தமையு முன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ

இரவி யிந்த்ரன் வெற்றிக்கு ரங்கின்
 அரச ரென்று மொப்பற்ற வுந்தி
 இறைவன் எண்கி னக்கர்த்த னென்றும் நெடுநீலன்

எரிய தென்றும் ருத்ரற்சி றந்த
 அநும னென்றும் ஒப்பற்ற அண்டர்
 எவரு மிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ

அரிய தன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர் தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமு குந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே
அயனை யும்பு டைத்துச்சி னந்து
உலகமும்ப டைத்துப்ப ரிந்து
அருள்ப ரங்கி ரிக்குட்சி றந்த பெருமாளே.

**416.** கருவாகியெ தாயுத ரத்தினி
லுருவாகவெ கால்கையு றுப்பொடு
கனிவாய்விழி நாசியு டற்செவி நரைமாதர்
கையிலேவிழ வேகிய ணைத்துயி
ரெனவேமிக மீதுது யிற்றிய
கருதாய்முலை ஆரமு தத்தினில் இனிதாகித்
தருதாரமு மாகிய சுற்றமு
நலவாழ்வும்நி லாதபொ ருட்பதி
சதமாமிது தானென உற்றுனை நினையாத
சதுராயுன தாளிணை யைத்தொழ
அறியாதநிர் மூடனை நிற்புகழ்
தனையோதிமெய் ஞானமு றச்செய்வ தொருநாளே
செருவாயெதி ராமசு ரத்திரள்
தலைமூளைக ளோடுநி ணத்தசை
திமிர்தாதுள பூதக ணத்தொடு வருபேய்கள்
திகுகாவுண வாயுதி ரத்தினை
பலநாய்நரி யோடுகு டித்திட
சிலகூகைகள் தாமுந டித்திட அடுதீரா
அருமாமறை யோர்கள்து தித்திடு
புகர்வாரண மாதுத னைத்திக
ழுளிசேர்குழல் மேவுகு றத்தியை அணைவோனே
அழகான பொன் மேடையு யர்த்திடு
முகில்தாவிய சோலைவி யப்புறு
அலையாமலை மேவிய பத்தர்கள் பெருமாளே.

417. கருவாய் வயிற்றி லுருவா யுதித்து
முருகா மனக்க வலையோடே
கலைநூல் பிதற்றி நடுவே கறுத்த
தலைபோய் வெளுத்தும் அறியாதே
இருபோது மற்றை ஒருபோது மிட்ட
கனல்மூழ்கி மிக்க புனல்மூழ்கி
இறவாத சுத்த மறையோர் துதிக்கு
மியல்போத கத்தை மொழிவாயே
அருமாத பத்த அமரா பதிக்கு
வழிமூடி விட்ட தனைமீள
அயிரா வதத்து விழியா யிரத்த
னுடனேபி டித்து முடியாதே
திருவான கற்ப தருநா டழித்து
விபுதேசர் சுற்றம் அவைகோலித்
திடமோ டரக்கர் கொடுபோ யடைத்த
சிறைமீள விட்ட பெருமாளே.

418. கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள்பல வேதெ ரிந்து மதனாலே
கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி
அரகரசி வாய வென்று தினமுநினை யாமல் நின்று
அறுசமய நீதி ஒன்றும் அறியாமல்
அசனமிடு வார்கள் தங்கள் மனைகள்தலை வாசல் நின்று
அநுதினமும் நாண மின்றி அழிவேனோ
உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்கர்
உலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே
உபயகுல தீப வங்க விருதுகவி ராஜ சிங்க
உறைபுகலி யூரி லன்று வருவோனே

பாவைமனை மீதி லன்று ஒருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே.

419. கரையற உருகுதல் தருகயல் விழியினர்
கண்டான செஞ்சொல் மடமாதர்
கலவியில் முழுகிய நெறியினி லறிவுக
லங்காம யங்கும் வினையேனும்
உரையையும் அறிவையும் உயிரையும் உணர்வையும்
உன்பாத கஞ்ச மலர்மீதே
உறவொடு புனைதர நினைதொழு மடியரொ
டொன்றாக என்று பெறுவேனோ
வரையிரு துணிபட வளமொடு சுரர்குடி
வந்தேற இந்த்ர புரிவாழ
மதவித கஜரத துரகத நிசிசர
வன்சேனை மங்க முதுமீன
திரைமலி சலநிதி முறையிட அசுரர்கள்
திண்டாட வென்ற கதிர்வேலா
செகதல மிடிகெட விளைவள வயலணி
செங்கோட மர்ந்த பெருமாளே.

420. கலகக் கயல்விழி போர்செய வேள்படை
நடுவிற் புடைவரு பாபிகள் கோபிகள்
கனியக் கனியவு மேமொழி பேசிய விலைமாதர்
கலவித் தொழிலல மேயினி தாமென
மனமிப் படிதின மேயுழ லாவகை
கருணைப் படியெனை யாளவு மேயருள் தரவேணும்
இலவுக் கிளையெனும் வாய்வளி நாயகி
குழையத் தழுவிய மேன்மையி னாலுயர்
இசைபெற் றருளிய காமுக னாகிய வடிவோனே
இதமிக் கருமறை வேதிய ரானவர்
புகலத் தயவுட னேயருள் மேன்மைகள்
இசையத் தருமநு கூலவ சீகா முதல்வோனே

நிலவைச் சடைமிசை யேபுனை காரணர்
செவியிற் பிரணவ மோதிய தேசிக
நிருதர்க் கொருபகை யாளியு மாகிய சுடர்வேலா
நிமலக் குருபர ஆறிரு பார்வையும்
அருளைத் தரஅடி யார்தமை நாடொறும்
நிகரற் றவரென வேமகிழ் கூர்தரு முரியோனே
பலவிற் கனிபனை மீறிய மாமர
முருகிற் கனியுட னேநெடு வாளைகள்
பரவித் தனியுதிர் சோலைகள் மேவிய வகையாலே
பழனத் துழவர்க ளேரிட வேவிளை
கழனிப் புரவுகள் போதவு மீறிய
பழநிச் சிவகிரி மீதினி லேவளர் பெருமாளே.

421. கலக சம்ப்ரமத் தாலேவி லோசன
மலர்சி வந்திடப் பூசார மானவை
கழல வண்டெனச் சாரீரம் வாய்விட அபிராமக்
கனத னங்களிற் கோமாள மாகியெ
பலந கம்படச் சீரோடு பேதக
கரண முஞ்செய்துட் பாலூறு தேனிதழ் அமுதூறல்
செலுவி மென்பணைத் தோளோடு தோள்பொர
நிலைகு லைந்திளைத் தேராகு மாருயிர்
செருகு முந்தியிற் போய்வீழு மாலுடன் அனுராகம்
தெரிகு மண்டையிட் டாராத சேர்வையி
லுருகி மங்கையர்க் காளாகி யேவல்செய்
திடினு நின்கழற் சீபாத நானினி மறவேனே
உலக கண்டமிட் டாகாச மேல்விரி
சலதி கண்டிடச் சேராய மாமவ
ருடன்ம டிந்திடக் கோபாலர் சேரியில் மகவாயும்
உணர்சி றந்தசக் ராதார நாரணன்
மருக மந்திரக் காபாலி யாகிய
உரக கங்கணப் பூதேசர் பாலக வயலூரா
விலைத ருங்கொலைப் போர்வேடர் கோவென
இனையு மங்குறப் பாவாய்வி யாகுலம்
விடுவி டென்றுகைக் கூர்வேலை ஏவிய இளையோனே

விறல்சு ரும்புநற் க்ரீதேசி பாடிய
விரைசெய் பங்கயப் பூவோடை மேவிய
விஜய மங்கலத் தேவாதி தேவர்கள் பெருமாளே.

422. கலகமதன் காதுங் கனமலராம் பாலுங்
களிமதுவண் டோதும் பயிலாலும்
கடலலையங் காலுங் கனஇரையோன் றாலுங்
கலைமதியங் காயும் வெயிலாலும்
இலகியசங் காளும் இனியவளன் பீனும்
எனதிருமின் தானின் றிளையாதே
இருள்கெடமுன் தானின் றினமணிசெந் தார்தங்
கிருதனமுந் தோள்கொண் டணைவாயே
உலகைவளைந் தோடுங் கதிரவன்விண் பால்நின்
றுனதபயங் காவென் றனைநாட
உரவியவெஞ் சூரன் சுரமுடன்வன் தோளும்
உருவியுடன் போதும் ஒளிவேலா
அலகையுடன் பூதம் பலகவியும் பாடும்
அடைவுடனின் றாடும் பெரியோர்முன்
அறமுமறந் தோயும் அறிவுநிரம் போதென்
றழகுடனன் றோதும் பெருமாளே.

423. கலகமெ னச்சில கலைகள்பி தற்றிடு
கசடர்கள் பக்கம தணுகாதே
கருவின் வழிப்படு மிருவினை உட்படு
கடுநர குக்கிடை படியாதே
உலகுத னிற்பல பிறவித ரித்தற
உழல்வது விட்டினி அடிநாயேன்
உனதடி மைத்திர ளொனதடி மைப்புகழ்
உரைசெய்தி ருப்புகழ் அருள்வாயே
குலகிரி பொட்டெழ அலைகடல் வற்றிட
நிசிசர னைப்பொரும் அயில்வீரா
குணதர வித்தக குமரபு னத்திடை
குறமக ளைப்புணர் மணிமார்பா

*அலைபுன லிற்றவழ் வளைநில வைத்தரு
  மணிதிரு வக்கரை உறைவோனே
அடியவ ரிச்சையி லெவையெவை யுற்றன
  அவைதரு வித்தருள் பெருமாளே.

424. கலகலெ னப்பொற் சேந்த நூபுர
  பரிபுர மொத்தித் தாந்த ஞமென
  காமல ரச்சிற் றுந்தொ மாடிய பொறியார்பைங்
கடிதட முற்றுக் காந்த ளாமென
  இடைபிடி பட்டுச் சேர்ந்த ஆலிலை
  கனதன பொற்பிட் டோங்கு மார்பொடு வடமாடச்
சலசல சச்சச் சேங்கை பூண்வளை
  பரிமள பச்சைச் சேர்ந்து லாவிய
  சலசமு கத்துச் சார்ந்த வாள்விழி சுழலாடத்
தரளந கைப்பித் தாம்ப லாரிதழ்
  குலமுகி லொத்திட் டாய்ந்த வோதியர்
  சரசமு ரைத்துச் சேர்ந்த தூவையர் உறவாமோ
திலதமு கப்பொற் காந்தி மாதுமை
  எனையருள் வைத்திட் டாண்ட நாயகி
  சிவனுரு வத்திற் சேர்ந்த பார்வதி சிவகாமி
திரிபுவ னத்தைக் காண்ட நாடகி
  குமரிசு கத்தைப் பூண்ட காரணி
  சிவைசுடர் சத்திச் சாம்ப வியுமை அருள்பாலா
அலகையி ரத்தத் தோங்கி மூழ்கிட
  நரிகழு குப்பிச் சீர்ந்து வாயிட
  அசுரர்கு லத்தைக் காய்ந்த வேல்கரம் உடையோனே
அமரர்ம கட்குப் போந்த மால்கொளும்
  விபுதகு றத்திக் காண்ட வாதினம்
  அழகுசி றக்கக் காஞ்சி மேவிய பெருமாளே.

---

*அலைபுனல் தத்திட வளமைமி லத்தரு மலைசெய்தி ருப்பதி உறைவோனே.

425. கலக வாள்விழி வேலோ சேலோ
மதுர வாய்மொழி தேனோ பாலோ
கரிய வார்குழல் காரோ காணு றவரோவாய்
களமு நீள்கமு கோதோள் வேயோ
உதர மானது மாலோ பாயோ
களப வார்முலை மேரோ கோடோ இடைதானும்
இழைய தோமலர் வேதா ஆனோன்
எழுதி னானிலை யோவாய் பேசீர்
இதென மோனமி னூரே பாரீர் எனமாதர்
இருகண் மாயையி லேமூழ் காதே
உனது காவிய நூலா ராய்வேன்
இடர்ப டாதருள் வாழ்வே நீயே தரவேணும்
அலைவி லாதுயர் வானோ ரானோர்
நிலைமை யேகுறி வேலா சீலா
அடியர் பாலரு ளீவாய் நீபார் மணிமார்பா
அழகு லாவுவி சாகா வாகார்
இபமி னாள்மகிழ் கேள்வா தாழ்வார்
அயிலு லாவிய சீலா கோலா கலவீரா
வலவை கேள்வர்பி னாய் கானூர்
குறவர் மாதும ணாளா நாளார்
வனச மேல்வரு தேவா மூவா மயில்வாழ்வே
மதுர ஞானவி நோதா நாதா
பழநி மேவுகு மாரா தீரா
மயுர வாகன தேவா வானோர் பெருமாளே.

426. கலகவிழி மாமகளிர் கைக்குளே யாய்ப்பொய்
களவுமத னூல்பலப டித்தவா வேட்கை
கனதனமு மார்புமுற விச்சையாலார்த்து கழுநீரார்
கமழ்நறைச வாதுபுழு கைத்துழாய் வார்த்து
நிலவரின வாவரிய கட்டின்மே லேற்ற
கருமமறி யாதுசிறு புத்தியால் வாழ்க்கை கருதாதே

தலமுலவு சாளரமு கப்பிலே காற்றி
னசைவழகு வாழ்வழகு சத்யமே வாய்த்த
தெனவுருகி யோடியொரு சற்றுளே வார்த்தை தடுமாறித்
தழுவியனு ராகமும்வி ளைத்துமா யாக்கை
தனையுமரு நாளையும வத்திலே போக்கு
தலையறிவி லேனைநெறி நிற்கநீ தீக்ஷை தரவேணும்
அலகில்தமி ழாலுயர்ச மர்த்தனே போற்றி
அருணைநகர் கோபுரவி ருப்பனே போற்றி
அடல்மயில்நடாவுபிரபுத்வனே போற்றி அவதான
அறுமுகசு வாமியெனு மத்தனே போற்றி
அகிலதல மோடிவரு நிர்த்தனே போற்றி
அருணகிரிநாதவெனு மப்பனேபோற்றி அசுரேசர்
பெலமடிய வேல்விடுக ரத்தனே போற்றி
கரதலக பாலிதரு புத்ரனே போற்றி
பெரியகுற மாதணைபு யத்தனே போற்றி
*பெருவாழ்வாம்
பிரமனறி யாவிரத தக்ஷிணா மூர்த்தி
பரசமய கோளரித வத்தினால் வாய்த்த
பெரியமட மேவியசு கத்தனே யோக்யர் பெருமாளே.

427. கலக்குங் கோதற வடிக்குஞ் சீரிய
கருப்பஞ் சாறெனு மொழியாலே
கருத்தன் பாயுள முருக்கும் பாவிகள்
கடைக்கண் பார்வையில் அழியாதே
விலக்கும் போதக மெனக்கென் றேபெற
விருப்பஞ் சாலவு முடையேனான்
வினைக்கொண் டேமன நினைக்குந் தீமையை
விடற்கஞ் சேலென் அருள்வாயே
அலைக்குந் தானவர் குலத்தின் சேனையை
அறுக்குங் கூரிய வடிவேலா

---

*எனநாளும் குலவுமடி யார்தொழம கிழ்ச்சிகூர் தீர்த்த மலை
வருகு காவொருபொ ருப்பிலே பூத்த குமரியுமை யாள்பெருத வத்
திலே வாய்த்த பெருமாளே.

அழைத்துன் சீரிய கழற்செந் தாமரை
அடுக்கும் போதகம் உடையோமாம்
சிலர்க்கன் றேகதி அளிக்குந் தேசிக
திருச்செங் கோபுர வயலூரா
திதிக்கும் பார்வையின் மதிப்புண் டாகிய
திருச்செங் கோடுறை பெருமாளே.

428. கலந்த மாதுங் கண்களி யுறவரு புதல்வோரும்
கலங்கி டாரென் றின்பமு றுலகிடை கலிமேவி
உலந்த காயங் கொண்டுள முறுதுயர் உடன்மேவா
துகந்த பாதந் தந்துனை உரைசெய அருள்வாயே
மலர்ந்த பூவின் மங்கையை மருவரி மருகோனே
மறஞ்செய் வார்தம் வஞ்சியை மருவிய மணவாளா
சிலம்பி னோடுங் கிண்கிணி திசைதொறும் ஒலிவீசச்
சிவந்த காலுந் தண்டையு மழகிய பெருமாளே.

429. கலவியி லிச்சித் திரங்கி நின்றெழில்
கன தனம் விற்கச் சமைந்த மங்கையர்
கயல்கள்சி வப்பப் பரிந்து கண்பொடும் இன்பமூறிக்
கனியித ழூற்றுற் றருந்தி அங்குறும்
அவசமி குத்துப் பொருந்தி இன்புறு
கலகம்வி ளைத்துக் கலந்து மண்டணை அங்கமீதே
குலவிய நற்கைத் தலங்கொ டங்கணை
கொடியிடை மெத்தத் துவண்டு தண்புயல்
குழலள கக்கட் டவிழ்ந்து பண்டையில் அங்கம்வேறுய்க்
குறிதரு வட்டத் தடர்ந்த சந்திர
முகதல முத்துப் பொலிந்தி லங்கிட
கொடியம யற்செய்ப் பெருந்த டந்தனில் மங்கலாமோ
இலகிய சித்ரப் புனந்த னிந்துறை
குறமகள் கச்சுக் கிடந்த கொங்கையின்
இனிதுற பத்மப் பதம்ப ணிந்தருள் கந்தவேளே
ஏழுகடல் வற்றப் பெருங்கொ டுங்கிரி
இடிபட மிக்கப் ரசண்ட விண்டுறும்
இகலர்ப தைக்கத் தடிந்தி லங்கிய செங்கைவேலா

பலவித நற்கற் படர்ந்த சுந்தரி
பயில்தரு வெற்புத் தருஞ்செ ழுங்கொடி
பணைமுலை மெத்தப் பொதிந்து பண்புறு கின்றபாலை

பலதிசை மெச்சத் தெரிந்த செந்தமிழ்
பகரென இச்சித் துகந்து கொண்டருள்
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே.

430. கலவியி னலமுரை யாமட வார்சந்
தனத்த னங்களில் வசம தாகி யவரவர்
பாதாதி கேச மளவும் பாடுங்
கவிஞ ருய்த்திரி வேனைக் காமக் ரோதத்
தூர்த்தனை, யபாதக்

கபடனை வெகுபரி தாபனை நாளும்
ப்ரமிக்கு நெஞ்சனை உருவ மாறி முறைமுறை
ஆசார வீன சமயந் தோறுங்
களவு சாத்திர மோதிச் சாதித் தேனைச்
சாத்திர, நெறிபோயைம்

புலன்வழி யொழுகிய மோகனை மூகந்
தனிற்பி றந்தொரு நொடியின் மீள அழிதரு
மாதேச வாழ்வை நிலையென் றேயம்
புவியின் மேற்பசு பாசத் தேபட் டேனைப்
பூக்கழ, லிணைசேரப்

பொறியிலி தனையதி பாவியை நீடுங்
குணத்ர யங்களும் வரும நேக வினைகளு
மாயாவி கார முழுதுஞ் சாடும்
பொருளின் மேற்சிறி தாசைப் பாடற் றேனைக்
காப்பது, மொருநாளே

குலகிரி தரும்பி ராமம யூரம்
ப்ரியப்ப டும்படி குவளை வாச மலர்கொடு
வாராவு லாவி யுணரும் யோகங்
குலைய வீக்கிய வேளைக் கோபித் தேறப்
பார்த்தரு, ளியபார்வைக்

குரிசிலு மொருசுரர் பூசுர னேமென்
றதற்க நந்தா மிரணி யாய நமவென
நாராய ணாய நமவென் றோதுங்
குதலை வாய்ச்சிறி யோனுக் காகத் தூணிற்
றோற்றிய, வசபாணிப்

பலநக நுதியினி சாசர னாகங்
கிழித்த ளைந்தணி துளசி யோடு சிறுகுடல்
தோண்மாலை யாக அணியுங் கோவும்
பாவி வாழ்த்திட வேகற் றூரச் சோதிப்
பாற்பணி, யிறைவாகைப்

படமுக வடலயி ராபத மேறும்
ப்ரபுப்ப யங்கெட வடப ராரை வரைகெட
வேலைவி வாவி மகரஞ் சீறும்
பரவை கூப்பிட மோதிச் சூர்கெட் டோடத்
தாக்கிய, பெருமாளே.

431\. கலியைய லைத்துக் குலைத்து விட்டுறு
பிணியைய டித்துத் துரத்தி விட்டெழு
கவலைநெ ருப்பைத் தணித்து விட்டற நெறியாமோ

கடினக சப்புக் கினிப்பை விட்டென
துயிரில முக்கைத் துடைத்து விட்டெழு
கருணைம ழைக்குட் குளிக்க விட்டினி அலையாதே

அலையும னத்தைப் பிடித்து வைத்ததில்
உறையுமி ருட்டுக் கருக்க லுக்குநின்
அழகுவி ளக்கைப் பதித்து வைத்ததும் அவியாதே

அறிவையு ருட்டித் திரட்டி வைத்ததின்
அமிர்தகு ணத்தைத் துதிக்க வைத்தெனை
அடிமைப டைக்கக் கருத்தில் முற்றிலும் நினையாயோ

மனைகல கப்பட் டொளிப்ப தற்கொரு
புகலிட மற்றுத் தவித்து நிற்கவும்
வடவரை மெத்தச் சலித்தி ருக்கவும் இதனாலே

மலையா சற்குப் பழிப்பெ னச்சொலி
உறவின்மு றைப்பபற் றெனக்கு றித்தபின்
மனதிலி ரக்கக் குறிப்பை வைத்தமர் விளையாதே
குலகிரி யெட்டுத் திசைக்க ளிற்றினை
உடலைமி தித்துக் கிழித்தெ டுத்தெழு
குருதிகு டித்துப் பெருத்த செப்பிள முலையாளோர்
குறமக ளைக்கைப் பிடித்து மற்றொரு
குலமக ளைக்கைப் பிடித்து மிக்குள
குருகிரி யைக்கைப் பிடித்தி ருக்குமென் முருகோனே.

432. கலைகொடு பவுத்தர் காம கருமிகள் துருக்கர் மாய
கபிலர்ப கரக்க ணாதர் உலகாயர்
கலகமி டுதர்க்கர் வாம பயிரவர் விருத்த ரோடு
கலகலெ னமிக்க நூல்க ளதனாலே
சிலுகியெ திர்குத்தி வாது செயவுமொ ருவர்க்கு நீதி
தெரிவரி யசித்தி யான வுபதேசந்
தெரிதர விளக்கி ஞான தரிசன மளித்து வீறு
திருவடி யெனக்கு நேர்வ தொருநாளே
கொலையுற எதிர்த்த கோர இபமுக அரக்க னோடு
குரகத முகத்தர் சீய முகவீரர்
குறையுட லெடுத்து வீசி யலகையொ டுபத்ர காளி
குலவியி டவெற்றி வேலை விடுவோனே
பலமிகு புனத்து லாவு குறவனி தைசித்ர பார
பரிமள தனத்தில் மேவு மணிமார்பா
படைபொரு துமிக்க யூக மழைமுகி லையொட்டி யேறு
பழநிம லையுற்ற தேவர் பெருமாளே.

433. கலைகோட்டு வல்லி விலைகாட்டு வில்ல
ரிவைமார்க்கு மெய்யி லவநூலின்
கலைகாட்டு பொய்ய மலைமாக்கள் சொல்ல
கடுகாட்டி வெய்ய அதிபாரக்
கொலைகோட்டு கள்ளி டறிவோர்க்கு முள்ள
முலையாக்கை யையும் உயிர்வாழக்

கொடிகோட்டு மல்லி குரவார்க்கொள் தொல்லை
மறைவாழ்த்து செய்ய கழல்தாராய்
சிலைகோட்டு மள்ளர் தினைகாத்த கிள்ளை
முலைவேட்ட பிள்ளை முருகோனே
திணிகோட்டு வெள்ளி பவனட்டி லுள்ள
சிறைமீட்ட தில்ல மயில்வீரா
அலைகோட்டு வெள்ள மலைமாக்கள் விள்ள
மலைவீழ்த்த வல்ல அயில்மோகா
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

**434.** கலைகுரெனுங் கற்புக் கலியுகபந் தத்துக்
கடனபையம் பட்டுக் கசடாகும்
கருமசடங் கச்சட் சமயிகள்பங் கிட்டுக்
கலகலெனுங் கொட்புற் றுடன்மோதும்
அலகில்பெருந் தர்க்கப் பலகலையின் பற்றற்
றரவியிடந் தப்பிக் குறியாத
அறிவையறிந் தப்பற் றதனினொடுஞ் சற்றுற்
றருள்வசனங் கிட்டப் பெறலாமோ
கொலைகுரெனுங் கொச்சைக் குறவரிளம் பச்சைக்
கொடிமருவுஞ் செச்சைப் புயமார்பா
கொடியநெடுங் கொக்குக் குறுகவுணன் பட்டுக்
குரைகடல்செம் பச்சக் கரவாளச்
சிலைபகவெண் டிக்குத் திகிரிகளும் பத்துத்
திசைகளினுந் தத்தச் செகமேழும்
திருகுசிகண் டிப்பொற் குதிரைவிடுஞ் செட்டித்
திறலகொடும் பைக்குட் பெருமாளே.

**435.** கலைமட வார்தஞ் சிலையத னாலுங்
கலவியி னாலுங் கரைமேலே
கருகிய காளம் பெருகிய தோயங்
கருதலை யாலுஞ் சிலையாலும்

கொலைதரு காமன் பலகணை யாலுங்
கொடியிடை யாள்நின் றயராதே
குரவணி நீடும் புயமணி நீபங்
குளிர்தொடை நீதந் தருள்வாயே
சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
திருமகள் நாயன் தொழும்வேலா
தினைவன மானுங் கநவன மானுஞ்
செறிவுடன் மேவுந் திருமார்பா
தலமகள் மீதெண் புலவரு லாவுந்
தணிகையில் வாழ்செங் கதிர்வேலா
தனியவர் கூறுந் தனிகெட நாளுந்
தனிமயி லேறும் பெருமாளே.

436. கலைமேவு ஞானப் பிரகாச
கடலாடி ஆசைக் கடலேறிப்
பலமாய வாதிற் பிறழாதே
பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின்
மணமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவால வாயிற் பெருமாளே.

437. கலையிலே மைக்கண் விழியிலே பெற்ற
குருதிநே ரிட்ட விதழ்மாதர்
குழையிலே தெற்று நடையிலே நெய்க்கொள்
குழலிலே பற்கள் தனிலேமா
முலையிலே அற்ப இடையிலே பத்ம
முழுநிலா வட்ட முகமீதே
முதுகிலே சுட்டி நுதலிலே இக்கு
மொழியிலே சிக்கி விடலாமோ
தலைவனே முத்தி முதல்வனே துட்டர்
இகலனே நித்தம் இளையோனே
சதுரனே பித்தர் புதல்வனே மெச்சு
சரவண செச்சை முருகோனே

உலகனே மிக்க கதிருகா மத்தில்
ஒருவனே விஷ்ணு மருகோனே
ஒயிலனே பச்சை மயிலனே சித்ர
உருவனே பத்தர் பெருமாளே.

438. கவடு கோத்தெழு முவரி மாத்திறல்
காய்வேல் பாடே னுடேன் வீடா னதுகூடக்
கருணை கூர்ப்பன கழல்க ளார்ப்பன
கால்மேல் வீழேன் வீழ்வார் கால்மீ தினும்வீழேன்
தவடி னார்ப்பத மெனினு மேற்பவர்
தாழா தீயேன் வாழா தேசா வதுசாலத்
தாமு மோக்ஷமு மினியெ னுக்கைச
தாவா மாறே நீதா னுதா புரிவாயே
சுவடு பார்த்தட வருக ராத்தலை
தூளா மாறே தானு நாரா யணனேநற்
றுணைவ பாற்கடல் வனிதை சேர்ப்பது
மூய்மார் பாகோ பாலா காவா எனவேகைக்
குவடு கூப்பிட உவண மேற்கன
கோடு தாவா னேபோ தாள்வான் மருகோனே
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே.

439. கவடுற்ற சித்தர்சட் சமயப்ர மத்தர்நற்
கடவுட்ப்ர திஷ்டைபற் பலவாகக்
கருதிப்பெ யர்க்குறித் துருவர்க்க மிட்டிடர்க்
கருவிற்பு கப்பகுத் துழல்வானேன்
சவடிக்கி லச்சினைக் கிருகைச்ச ரிக்குமிக்
கசரப்ப ளிக்கெனப் பொருள்தேடி
சகலத்து மொற்றைபட் டயல்பட்டு நிற்குநிற்
சரணப்ர சித்திசற் றுணராரோ
குவடெட்டு மட்டுகெட் டுவரிக்க ணத்தினைக்
குமுறக்க லக்கிவிக் ரமசூரன்
குடலைப்பு யத்திலிட் டடலைத்த றித்துகுத்
துதிரத்தி னிற்குளித் தெழும்வேலா

சுவடுற்ற அற்புதக் கவலைப்பு னத்தினிற்
றுயரற்ற டுத்துநிற் பவள்நாணத்
தொழுதெத்து முத்தபொற் புரிசைத்தி ருத்தணிச்
சுருதித்த மிழ்க்கவிப் பெருமாளே.

440. கவளகன மாவு மிரதமும ருத
கவணகள சேனைத் திரளாலுங்
கதிரவனு மேரு கிரியுமக லாத
களபமிடு றாணிற் பணிமாற
இவனமது மேவ விறுகவனை யாமல்
இருமலமு மாசிற் புகுதாதே
இசைபொசிய வாடி இதயம்வழு வாமல்
இருகழல்வி டாமல் தருவோனே
சிவனுருவ மான சதுமறையு மோது
சிலகலையு மாயப் பொருளோனே
தினையளவு நீடு பனையளவ னேக
சிலவுருவ மாகப் புணர்வோனே
அவனிமற வாமல் அமுதகவி பாடும்
அருணகிரி நாதற் கிறையோனே
அவள்வெருவி வீழ அகிலடவி மோதி
அதிரவரும் வேள்விப் பெருமாளே.

441. கழைமுத்துமாலை புயல்முத்துமாலை
கரிமுத்துமாலை மலைமேவும்
கடிமுத்துமாலை வளைமுத்துமாலை
கடல்முத்துமாலை அரவீனும்
அழல்முத்துமாலை யிறைமுற்றுமார்பி
னடைவொத்துலாவ அடியேன்முன்
அடர்பச்சைமாவி லருளிற்பெணோடு
மடிமைக்குழாமொ டருள்வாயே
மழையொத்தசோதி குயில்தத்தைபோலு
மழலைச்சொலாயி யெமையீனும்
மதமத்தநீல களநித்தநாதர்
மகிழ்சத்தியீனு முருகோனே

செழுமுத்துமார்பி னமுதத்தெய்வானை
திருமுத்திமாதின் மணவாளா
சிறையிட்டசூரர் தலைவெட்டிஞான
திருமுட்டமேவு பெருமாளே.

**442.** களபமணி யாரமுற்ற வனசமுலை மீதுகொற்ற
கலகமத வேள்தொடுத்த கணையாலும்
கனிமொழிமி னார்கள்முற்று மிசைவசைகள் பேசவுற்ற
கனலெனவு லாவுவட்ட மதியாலும்
வளமையணி நீடுபுட்ப சயனவணை மீதுருக்கு
வனிதைமயல் நாடிநித்தம் நலியாதே
வரியளியு லாவதுற்ற இருபுயம ளாவிவெற்றி
மலரணையில் நீயணைக்க வரவேணும்
துளபமணி மார்பசக்ர தரனரிமு ராரிசர்ப்ப
துயிலதரா னாதரித்த மருகோனே
சுருதிமறை வேள்விமிக்க மயிலைநகர் மேவுமுக்ர
துரகதக லாபபச்சை மயில்வீரா
அளகைவணி கோர்குலத்தில் வனிதையுயிர் மீளழைப்ப
அருள்பரவு பாடல்சொற்ற குமரேசா
அருவரையை நீறெழுப்பி நிருதர்தமை வேரறுத்து
அமரர்பதி வாழவைத்த பெருமாளே.

**443.** களபமுலையைத்தி றந்து தவளநகையைக்கொ ணர்ந்து
கயலொடு பகைத்த கண்கள் குழைதாவக்
கரியகுழலைப்ப கிர்ந்து மலர்சொருகுகொப்ப விழ்ந்து
கடியிரு ளுடுக்கு லங்கள் எனவீழ
முழுமதி எனச்சி றந்த நகைமுக மினுக்கி இன்ப
முருகிதழ் சிவப்ப நின்று விலைகூறி
முதலுள துகைப்பு குந்து அழகுது கிலைத்தி றந்து
முடுகும வருக்கி ரங்கி மெலிவேனோ
இளமதி கடுக்கை தும்பை அரவணி பவர்க்கி சைந்து
இனியபொ ருளைப்ப கர்ந்த குருநாதா
இபமுக வனுக்கு கந்த இளையவ மருக்க டம்ப
எனதுத லையிற்ப தங்கள் அருள்வோனே

குழகென எடுத்து கந்த உமைமுலை பிடித்த ருந்து
குமரசி வவெற்ப மர்ந்த குகவேலா
குடியொடு மிகச்செ றிந்த இதணுள புனத்தி ருந்த
குறவர்ம கனைப்பு ணர்ந்த பெருமாளே.

444. களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலினர் எவரோடும்
கலக மிடுகய லெறிகுழை விரகியர்
பொருளி லிளைஞரை வழிகொடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினி லெவரையும் நகையாடிப்
பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர்
பெருகு பொருள்பெறி லமளியி விதமொடு குழைவோடே
பிணமு மணைபவர் வெறிதரு புனலுணும்
அவச வனிதையர் முடுகொடு மணைபவர்
பெருமை உடையவர் உறவினை விடஅருள் புரிவாயே
அளையி லுறைபுலி பெறுமக வயிறரு
பசுவி னிரைமுலை அமுதுண நிரைமகள்
வசவ னெடுபுலி முலையுண மலையுடன் உருகாநீள்
அடவி தனிலுள உலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறவைகள் நிலம்வர விரல்சேரேழ்
தொளைகள் விடுகழை விரன்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி உடையவ னெடியவன் மனமகிழ் மருகோனே
துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளரறு முககுக
துறையி லலையெறி திருநக ருறைதரு பெருமாளே.

445. களவுகொண்டு கைக்காசி னளவறிந்து கர்ப்பூர
களபதுங்க வித்தார முலைமீதே
கலவியின்பம் விற்பார்க ளவயவங்க ளைப்பாடு
கவிதெரிந்து கற்பார்கள் சிலர்தாமே

உளநெகிழ்ந்த சத்தான உரைமறந்து சத்தான
உனையுணர்ந்து கத்தூரி மணநாறும்
உபயபங்க யத்தாளி லபயமென்று னைப்பாடி
உருகிநெஞ்சு சற்றேனு மிழிவாமோ
அளவில்வன்க விச்சேனை பரவவந்த சுக்ரீவ
அரசுடன்க டற்றூளி யெழவேபோய்
அடலிலங்கை சுட்டாடி நிசிசரந்த சக்ரீவ
னறவொரம்பு தொட்டார்த மருகோனே
வளருமந்த ரச்சோலை மலையுகந்த முற்பாலை
வனவர்கொம்பி னைத்தேடி யொருவேட
வடிவுகொண்டு பித்தாகி உருகிவெந்த மூற்கானில்
மறவர்குன்றி னிற்போன பெருமாளே.

446. கள்ளக்கு வாற்பை தொள்ளைப்பு லாற்பை
துள்ளிக்க ளூர்க்க வருமோக
கள்வைத்த தோற்பை பொள்ளூற்ற காற்பை
கொள்ளைத்து ராற்பை பசுபாச
அள்ளற்பை மாற்பை ஞெள்ளற்பை சீப்பை
வெள்ளிட்ட சாப்பி சிதமீரல்
அள்ளச்சு வாக்கள் சள்ளிட்டி ழாப்பல்
கொள்ளப்ப டாக்கை தவிர்வேனோ
தெள்ளத்தி சேர்ப்ப வெள்ளத்தி மாற்கும்
வெள்ளூத்தி மாற்கும் மருகோனே
சிள்ளிட்ட காட்டி லுள்ளூற்ற ராக்கொல்
புள்ளச்வ மேற்று வருவோனே
வள்ளிச்சன் மார்க்கம் விள்ளைக்கு நோக்க
வல்லைக்கு மேற்று பிளையோனே
வள்ளிக்கு ழாத்து வள்ளிக்கல் காத்த
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

447. கள்ளமீ னச்சுறவு கொள்ளுமீ னற்பெரிய
கல்விவீ றற்கரிய மனமாகும்
கல்விடா துற்றதிசை சொல்விசா ரத்திசைய
மெய்கள்தோ ணிப்பிறவி அலைவேலை

மெள்ளவே றிக்குராவு வெள்ளிலார் வெட்சிதண
முல்லைவே றுற்பலமு ளரிநீபம்
வில்லநீள் பொற்கனக வல்லிமே லிட்டுனது
சொல்லையோ திப்பணிவ தொருநாளே
துள்ளுமா னித்தமுனி புள்ளிமான் வெற்புதவு
வள்ளிமா னுக்குமயல் மொழிவோனே
தொல்வியா ளத்துவளர் செல்வர்யா கத்தரையன்
எல்லைகா ணற்கரியர் குருநாதா
தெள்ளுநா தச்சுருதி வள்ளல்மோ லிப்புடைகொள்
செல்வனே முத்தமிழர் பெருவாழ்வே
தெய்வயா னைக்கிளைய வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே.

448. கள்ள முள்ள வல்ல வல்லி
கையி லள்ளி நிதியீய
கல்லு நெல்லு வெள்ளி தெள்ளு
கல்வி செல்வர் கிளைமாய
அள்ளல் துள்ளி ஐவர் செல்லு
மல்லல் சொல்ல முடியாதே
ஐய ரைய மெய்யர் மெய்ய
ஐய செய்ய கழல்தாராய்
வள்ளல் புள்ளி நவ்வி நல்கு
வள்ளி கிள்ளை மொழியாலே
மைய லெய்து மைய செய்யில்
வையில் வெள்வ ளைகளேற
மெள்ள மள்ளர் கொய்யு நெல்லின்
வெள்ள வெள்ளி நகர்வாழ்வே
வெய்ய சைய வில்லி சொல்லை
வெல்ல வல்ல பெருமாளே.

449. கறுக்கப்பற் றுவர்ப்பிட்டுச்
சிரித்துச்சற் றுறுக்கிக்கட்
பிறக்கிட்டுப் படக்கற்பித் திளைஞோர்தம்

கழுத்தைச்சிக் கெனக்கட்டித்
தனச்செப்புப் படக்குத்திட்
டுருக்கிக்கற் பழிக்கப்பொற் பெழுகாதல்
புறப்பட்டுக் களிக்கக்கற்
புரத்தைப்பிட் டாக்கிப்பொற்
பணிக்கட்டிற் புறத்துற்றுப் புணர்மாதர்
பொருத்தத்தைத் தவிர்த்துச்சற்
றிரக்ஷித்துப் புரப்பப்பொற்
பதத்தைப்பெற் றிருக்கைக்குப் பெறுவேனோ
திறற்கொக்கைப் படக்குத்திச்
செருக்கிக்கொக் கரித்துச்சக்
கரிக்குப்புத் திரற்குற்றுத் தளைபூணச்
சினத்துப்பொற் பொருப்பைப்பொட்
டழுத்தித்திக் கரித்துப்புத்
திரத்தத்திற் சிரித்துற்றுப் பலபேய்கள்
பறிக்கப்பச் சிறைச்சிக்கட்
கறிக்குப்பைச் சிரச்சிக்குப்
பரப்பொய்க்கட் டறப்புக்குப் பொருதோனே
பணிச்செச்சைத் தொடைச்சித்ரப்
புயத்துக்ரப் படைச்சத்திப்
படைக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.

**450.** கறுக்கு மஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சற எறிதரு பொழுதொரு
கனிக்கு ளின்சுவை அமுதகு மொருசிறு நகையாலே
களக்கொ ழுங்கலி வலைகொடு விசிறியெ
மனைக்கெ ழுந்திரு மெனமன முருகவெவார்
கவற்சி கொண்டிட மனைதனி லழகொடு கொடுபோகி
நறைத்த பஞ்சணை மிசையினில் மனமுற
அணைத்த கந்தனி லிணைமுலை எதிர்பொர
நகத்த ழுந்திட அமுதிதழ் பருகியு மிடறாடே
நடித்தெ ழுங்குரல் குமுகுமு குமுவென
இசைத்து நன்கொடு மனமது மறுகிட
நழுப்பு நஞ்சன சிறுமிகள் துயரற அருள்வாயே

நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
உரத்த கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிரைத்த அண்டமுங் கிடுகிடு கிடுவென வரைபோலும்
நிவத்த திண்கழல் நிசிசர ருரமொடு
சிரக்கொ டுங்குவை மலைபுரை தரஇரு
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா
திறற்க ருங்குழ லுமையவ ளருளுறு
புழைக்கை மும்மத கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தன கணபதி யுடன்வரும் இளையோனே
சினத்தொ டுஞ்சம னுதைபட நிறுவிய
பரற்கு ளன்புறு புதல்வநன் மணியுகு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

451. கறுத்த குஞ்சியும் வெளிறியெ ழுங்கொத்
துருத்த வெண்பலு மடையவி ழுந்துட்
கருத்து டன்திகழ் மதியும ருண்டுச் சுருள்நோயால்
கலக்க முண்டல மலமுற வெண்டிப்
பழுத்தெ ழும்பிய முதுகும டங்கக்
கழுத்தில் வந்திளை யிருமலொ டுங்கக் கொழுமேனி
அறத்தி ரங்கியொர் தடிகைந டுங்கப்
பிடித்தி டும்புற மனைவியு நிந்தித்
தடுத்த மைந்தரும் வசைகள்வி ளம்பச் சடமாகி
அழுக்க டைந்திடர் படுமுடல் பங்கப்
பிறப்பெ னுங்கட லழியலொ ழிந்திட்
டடுத்தி ருந்திரு வடிதனை யென்றுற் றிடுவேனோ
புறத்த லம்பொடி படமிக வுங்கட்
டறப்பெ ருங்கடல் வயிறுகு ழம்பப்
புகழ்ப்ப ரங்கிரி தனிலுறை துங்கத் திறல்வீரா
பொருப்பு டம்படர் கிழிபட வென்றட்
டரக்கர் வன்றலை நெரிய நெருங்கிப்
புதைக்கு றுந்தசை குருதிகள் பொங்கப் பொரும்வேலா
சிறுத்த தண்டைய மதலையொ ரஞ்சச்
சினத்து மிஞ்சரி திரிதரு குன்றத்
தினைப்பு னந்திகழ் குறமகள் கொங்கைக் கிரிமேவிச்

செருக்கு நெஞ்சுடை முருகசி கண்டிப்
பரிச்சு மந்திடு குமரக டம்பத்
திருக்கு டந்தையி லுறைதரு கந்தப் பெருமாளே.

452. கறுத்த குழலணி மலரணி பொங்கப்
பதித்த சிலைநுத லணிதில தம்பொற்
கணைக்கு நிகர்விழி சுழலெழு கஞ்சச் சிரமான
கழுத்தி லுறுமணி வளைகுழை மின்கக்
குவட்டு முலையசை படவிடை யண்மைக்
கமைத்த கலையிறு குறுதுவள் வஞ்சிக் கொடிபோலச்
சிறுத்த களமிகு மதமொழு கின்சொற்
குயிற்க ளெனமட மயிலெகி னங்கட்
டிருக்கு நடைபழ கிகள்கள பங்கச் சுடைமாதர்
திகைத்த தனமொடு பொருள்பறி யொண்கட்
குவட்டி யவர்வலை யழலுறு பங்கத்
திடக்கு தலைபுலை யவர்வழி யின்மைத் தவிர்வேனோ
பறித்த விழிதலை மழுவுழை செங்கைச்
செழித்த சிவபர னிதழிநல் தும்பைப்
படித்த மதியற லரவணி சம்புக் குருநாதா
பருத்த அசுரர்க ளுடன்மலை துஞ்சக்
கொதித்த அலைகட லெரிபட செம்பொற்
படக்கை மணியயில் விடுநட னங்கொட் கதிர்வேலா
தெறித்து விழியர வுடல்நிமி ரம்பொற்
குவட்டொ டிகைகிரி பொடிபட சண்டச்
சிறப்பு மயில்மிசை பவுரிகொ ளும்பொற் றிருபாதா
சிறக்கு மழகிய திருமகள் வஞ்சிக்
குறத்தி மகளுமை மருமகள் கொங்கைச்
சிலைக்கு ளணைகுக சிவமலை கந்தப் பெருமாளே.

453. கறுத்ததலை வெளிறு மிகுந்து
மதர்த்தவிணை விழிகள் குழிந்து
கதுப்பிலுறு தசைகள் வறண்டு செவிதோலாய்க்

கழுத்தடியு மடிய வளைந்து
கனத்தநெடு முதுகு குனிந்து
கதுப்புறப லடைய விழுந்து தடுநீர்சோர்
உறக்கம்வரு மளவி லெலும்பு
குலுக்கிவிடு மிருமல் தொடங்கி
உரத்தகுரை குரலு நெரிந்து தடிகாலாய்
உரத்தநடை தளரு முடம்பு
பழுத்திடுமுன் மிகவும் விரும்பி
உனக்கடிமை படும வர்தொண்டு புரிவேனே
சிறுத்தசெலு வதனு ளிருந்து
பெருத்ததிரை உததி கரந்து
செறித்தமறை கொணர நிவந்த செயமாலே
செறித்தவளை கடலில் வரம்பு
புதுக்கியிளை யவனோ டறிந்து
செயிர்த்தவநு மனையு முகந்து படையோடு
மறப்புரிசை வளையு மிலங்கை
அரக்கனொரு பதுமு டிசிந்த
வளைத்தசிலை விஜய முகுந்தன் மருகோனே
மலர்க்கமல வடிவு ளசெங்கை
அயிற்குமர *குகைவ ழிவந்த
மலைச்சிகர வடம லைநின்ற பெருமாளே.

454. கறுத்து நீவிடு கூர்வேலி னுங்கடை
சிவத்து நீடிய வாய்மீன ஒண்குழை
கடக்க ஓடிய ஆலால நஞ்சன வஞ்சநீடு
கயற்க ணார்கனி வாயூற லுண்டணி
கழுத்து மாகமு மேகீப வங்கொடு
கலக்க மார்பக பாடீர குங்கும கொங்கைமீதே
உறுத்து மாரமு மோகாவ டங்களு
மறுத்து நேரிய கூர்வாள்ந கம்பட
உடுத்த ஆடையும் வேறாயு றன்றாக மூன்றுவிழ

*கயிலை யிதென்று மதித்தகுரு மலைத னில்வந்த பெருமாளே.

உருக்கு நாபியின் மூழ்காம ருங்கிடை
செருக்கு மோகன வாராத ரங்களை
ஒழிக்க ஓர்வகை காணேனு றுந்துணை ஒன்றுகாணேன்
நிறத்து நூபுர பாதார விந்தமு
முடுத்த பீலியும் வாரார்த னங்களும்
நிறத்தி லேயடு வேலான கண்களும் வண்டுபாட
நெறித்த ஓதியு மாயான்ம னம்பரி
தவிக்க மால்தர லாமோ கலந்திட
நினைக்கலாமென வேல்வேடர் கொம்புடன் நண்புகூர்வாய்
மறித்து வாரிதி கோகோவெ னும்படி
வெறுத்த ராவணன் வாளை அம்பினில்
வதைத்த மாமனு மேவார்பு ரங்கனல் மண்டமேரு
வளைத்த தாதையு மாருன குன்றமு
மனைத்து லோகமும் வேதாக மங்களும்
மதித்த சேவக வானோரு ம்பர்கள் தம்பிரானே.

455. கறுவிமைக்கணிட் டினிதழைத்தியற்
கவிசொலிச்சிரித் துறவாடிக்
களவுவித்தையிட் டுளமுருக்கிமுற்
கருதிவைத்தவைப் பவைசேரத்
தறுகணிற்பறித் திருகழுத்துறத்
தழுவிநெக்குநெக் குயிர்சோரச்
சயனமெத்தையிற் செயலழிக்குமித்
தருணிகட்ககப் படலாமோ
பிறவியைத்தணித் தருளுநிட்களப்
பிரமசிற்சுகக் கடல்மூழ்கும்
பெருமுனித்திரட் பரவுசெப்பதிப்
ரபலகொச்சையிற் சதுர்வேதச்
சிறுவநிற்கருட் கவிகைநித்திலச்
சிவிகையைக்கொடுத் தருளீசன்
செகதலத்தினிற் புகழ்படைத்தமெய்த்
திருவரத்துறைப் பெருமாளே.

456. கறுவுமிக் காவியைக் கலகுமக் காலனைத்
திலகுகட் சேல்களிப் புடனடக்
கருகிழற் பாடுகட் டளையுடற் பேசியுட்
களவினிற் காசினுக் குறவாலுற்
றுறுமலர்ப் பாயலிற் றுயர்விளைத் தூடலுற்
றுயர்பொருட் கோதியுட் படுமாதர்
உறவினுக் கேயுளத் தறிவுகெட் டேனுயிர்ப்
புணையிணைத் தாள்தனைத் தொழுவேனோ
மறையெடுத் தோதிவச் சிரமெடுத் தானுமைச்
செறிதிருக் கோலமுற் றணைவானும்
மறைகள்புக் காரெனக் குவடுகெட் டாழிவற்
றிடவடற் சூரனைப் பொரும்வேலா
அறிவுடைத் தாருமற் றடனுனைப் பாடலுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அடவியிற் றேருகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே

457. கறைபடுமு டம்பி ராதெனக்
கருதுதலொ ழிந்து வாயுவைக்
கருமவச னங்க ளால்மறித் தனலூதிக்
கவலைபடு கின்ற யோககற்
பனைமருவு சிந்தை போய்விட்க்
கலகமிடு மஞ்சும் வேரறச் செயல்மாளக்
குறைவறநி றைந்த மோனநிர்க்
குணமதுபொ ருந்தி வீடுறக்
குருமலை விளங்கு ஞானசற் குருநாதா
குமரசர ணென்று கூதளப்
புதுமலர்சொ ரிந்து கோமளப்
பதயுகள புண்ட ரீகமுற் றுணர்வேனோ
சிறைதளைவி ளங்கு பேர்முடிப்
புயலுடன டங்க வேபிழைத்
திமையவர்கள் தங்க ளூர்புகச் சமராடித்

திமிரமிகு சிந்து வாய்விடச்
சிகரிகளும் வெந்து நீறெழத்
திகிரிகொள நந்த சூடிகைத் திருமாலும்
பிறைமவுலி மைந்த கோவெனப்
பிரமனைமு னிந்து காவலிட்
டொருநொடியில் மண்டு சூரனைப் பொருதேறிப்
பெருகுமத கும்ப லாளிதக்
கரியுதவு மண்டர் வாரணப்
பிடிதனைம ணந்த சேவகப் பெருமாளே.

458. கறையிலங் குக்ரச் சத்தித ரிக்குஞ்
சரவணன் சித்தத் துக்குளொ ளிக்குங்
கரவடன் கொற்றக் குக்குட வத்தன் தனிவீரக்
கழலிடும் பத்மக் கட்செவி வெற்பன்
பழனிமன் கச்சிக் கொற்றவன் மற்றுங்
கடகவஞ் சிக்குக் கத்தனெ னச்செந் தமிழ்பாடிக்
குறையிலன் புற்றுக் குற்றம றுக்கும்
பொறைகள்நந் தறப்பப் புத்தியை விட்டென்
குணமடங் கக்கெட் டுக்குண மற்றொன் றிலதான
குணமடைந் தெப்பற் றுக்களு மற்றுங்
குறியொடுஞ் சுத்தப் பத்தரி ருக்குங்
குருபதஞ் சித்திக் கைக்கருள் சற்றுங் கிடையாதோ
பிறைகரந் தைக்கொத் துப்பணி மத்தந்
தலையெலும் பப்புக் கொக்கிற கக்கம்
பிரமனன் றெட்டற் கற்றதி ருக்கொன் றையும்வேணிப்
பிறவுகின் றெக்கத் தொக்கும ணக்குஞ்
சரணியம் பத்மக் கைக்கொடி முக்கண்
பெறுகரும் பத்தக் கத்தருள் நற்பங் கயவாவித்
திறைகொளுஞ் சித்ரக் குத்துமு லைக்கொம்
பறியுமந் தத்தைக் கைக்கக மொய்க்குந்
த்ரிபுரைசெம் பட்டுக் கட்டுநு சுப்பின் திருவான
தெரிவையந் தூர்க்கிச் சத்தியெ வர்க்குந்
தெரிவருஞ் சுத்தப் பச்சைநி றப்பெண்
சிறுவதொண் டர்க்குச் சித்திய ளிக்கும் பெருமாளே.

459. கற்பக ஞானக் கடவுண்மு னண்டத்
திற்புத சேனைக் கதிபதி யின்பக்
கட்கழை பாகப் பமமுது வெண்சர்க் கரைபால்தேன்
கட்டிள நீர்முக் கனிபய றம்பொற்
றொப்பையி னேறிட் டருளிய தந்திக்
கட்டிளை யாய்பொற் பதமதி றைஞ்சிப் பரியாய
பொற்சிகி யாய்கொத் தருண்மணி தண்டைப்
பொற்சரி நாதப் பரிபுர என்றுப்
பொற்புற வோதிக் கசிவொடு சிந்தித் திளிதேயான்
பொற்புகழ் பாடிச் சிவபத மும்பெற்
றப்பொருள் ஞானப் பெருவெளி யும்பெற்
றப்புக லாகத் தமுதையு முண்டிட் டிடுவேனோ
தெற்பமு ளாகத் திரள்பரி யும்பற்
குப்பைக ளாகத் தகரர்பி ணந்திக்
கெட்டையு மூடிக் குருதிகள் மங்குற் செவையாகித்
திக்கய மாடச் சிலசில பம்பைத்
தத்தன தானத் தடுடுடு வென்கச்
செப்பறை தாளத் தகுதொகு வென்கச் சிலபேரி
உற்பன மாகத் தடிபடு சம்பத்
தற்புத மாகத் தமரர்பு ரம்பெற்
றுட்செல்வ மேவிக் கனமலர் சிந்தத் தொடுவேலா
உட்பொருள் ஞானக் குறமக ளும்பற்
சித்திரை நீடப் பரிமயில் முன்பெற்
றுத்தர கோசத் தலமுறை கந்தப் பெருமாளே.

460. கற்பார்மெய்ப் பாட்டைத் தவறிய
செற்பாகைக் காட்டிப் புழுகொடு
கத்தூரிச் சேற்றைத் தடவிய இளநீரைக்
கட்சேலைக் காட்டிக் குழலழ
கைத்தோளைக் காட்டித் தரகொடு
கைக்காசைக் கேட்டுத் தெருவினில் மயில்போலே
நிற்பாருக் காட்பட் டுயரிய
வித்தாரப் பூக்கட் டிலின்மிசை
நெட்டூரக் கூட்டத் தனவர தமுமாயும்

நெட்டாசைப் பாட்டைத் துரிசற
விட்டேறிப் போய்ப்பத் தியருடன்
நெக்கோதிப் போற்றிக் கழலிணை பணிவேனோ
வெற்பால்மத் தாக்கிக் கடல்கடை
மைச்சேவிக் காக்கைக் கடவுளை
விட்டார்முக் கோட்டைக் கொருகிரி இருகாலும்
விற்போலக் கோட்டிப் பிறகொரு
சற்றேபற் காட்டித் தழலெழு
வித்தார்தத் வார்த்தக் குருபரன் எனவோதும்
பொற்பாபற் றுக்கைப் புதுமலர்
பெட்டேயப் பாற்பட் டுயரிய
பொற்றோளிற் சேர்த்துக் கருணைசெய் எனமாலாய்ப்
புட்கானத் தோச்சிக் கிரிமிசை
பச்சேனற் காத்துத் திரிதரு
பொற்பூவைப் பேச்சுக் குருகிய பெருமாளே.

461\. கனக கும்பமி ரண்டு நேர்மலை
எனநெ ருங்குகு ரும்பை மாமணி
கதிர்சி றந்தவ டங்கு லாவிய முந்துசூதம்
கடையில் நின்றுப ரந்து நாடொறும்
இளகி விஞ்சியெ ழுந்த கோமள
களப குங்கும கொங்கை யானையை இன்பமாக
அனைவ ருங்கொளு மென்று மேவிலை
இடும டந்தையர் தந்த கோதகம்
அதின்ம ருண்டுது வண்டு பாயலில் நைந்துசோர
அதிவி தங்கொளு மின்ப சாகர
முழுகும் வஞ்சக நெஞ்சை யேயொழி
அருப தங்கதி எம்பி ரானருள் தந்திடாதோ
தனத னந்தன தந்த னாவென
டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
தகுதி திந்திகு திந்த தோவென உந்துதாளந்
தமர சஞ்சல சஞ்ச லாவென
முழவு டுண்டுடு டுண்டு டூவென
தருண கிண்கிணி கிண்கி ணாமுமு முந்தவோதும்

பணிப தங்கய மெண்டி சாமுக
கரிய டங்கலு மண்ட கோளகை
பதறி நின்றிட நின்று தோதக என்றுதோகை
பவுரி கொண்டிட மண்டி யேவரு
நிசிச ரன்கிளை கொன்ற வேலவ
பழநி யங்கிரி யின்கண் மேவிய தம்பிரானே.

462. கனகசபை மேவு மெனதுகுரு நாத
கருணைமுரு கேசப் பெருமாள்காண்
கனகநிற வேத னபயமிட மோது
கரகமல சோதிப் பெருமாள்காண்
வினவுமடி யாரை மருவிவிளை யாடு
விரகரச மோகப் பெருமாள்காண்
விதிமுநிவர் தேவ ரருணகிரி நாதர்
விமலசுரர் சோதிப் பெருமாள்காண்
சனகிமண வாளன் மருகனென வீறு
சகமகிழ்கு மாரப் பெருமாள்காண்
சரணசிவ காமி யிரணகுல காரி
தருமுருக நாமப் பெருமாள்காண்
எனதுமன மேவு மமுதகுற மாதொ
டியல்பரவு காதற் பெருமாள்காண்
இணையிலிப தோகை மதியின்மக ளோடு
மியல்புலியுர் வாழ்பொற் பெருமாளே.

463. கனகதம் பத்தைச் செச்சையை மெச்சுங்
கடகசங் கத்துப் பொற்புய வெற்பன்
கடலுள்வஞ் சித்துப் புக்கதொர் கொக்கும் பொடியாகக்
கறுவுசெஞ் சத்திப் பத்மக ரத்தன்
குமரனென் றர்ச்சித் தப்படி செப்புங்
கவிமொழிந் தத்தைக் கற்றறிவற் றும் புவியோரைக்
குணகியுங் கைக்குக் கற்பக மொப்பென்
றனகனென் றிச்சைப் பட்டத ளிக்கும்
குமுணனென் றெப்பிட் டித்தனை பட்டுந் தனவாணர்

குதறுகொண்டிட்டுச் சுற்றம னைத்துந்
திருடியுஞ் சொற்குத் தக்கது பெற்றுங்
குலவியுங் கத்தப் பட்டக லக்கந் தவிரேனோ
சனகனன் புற்றுப் பெற்றம டப்பெண்
தனிபெருங் கற்புச் சக்ரந டத்துந்
தகையிலங் கைச்சுற் றத்தைமு ழுத்துஞ் சுடவேவெஞ்
சமரசண் டக்கொற் றத்தவ ரக்கன்
கதிர்விடும் பத்துக் கொத்துமு டிக்குந்
தனியொரம் பைத்தொட் டுச்சுரர் விக்னங் களைவோனும்
தினகரன் சொர்க்கத் துக்கிறை வச்ரன்
குருபுதன் சுக்ரச் சத்யன கத்யன்
திசைமுகன் செப்பப் பட்டவ சிட்டன் திரள்வேதஞ்
செகதலஞ் சுத்தப் பத்தர்கள் சித்தம்
செயலொழிந் தற்றுப் பெற்றவர் மற்றும்
சிவனும்வந் திக்கக் கச்சியில் நிற்கும் பெருமாளே.

464. கனகந்திரள் கின்றபெ ருங்கிரி
தனில்வந்துத கன்தக னென்றிடு
கதிர்மிஞ்சிய செண்டையெ றிந்திடு கதியோனே
கடமிஞ்சிய னந்தவி தம்புணர்
கவளந்தனை யுண்டுவ ளர்ந்திடு
கரியின்றுணை யென்றுபி றந்திடு முருகோனே
பனகந்துயில் கின்றதி றம்புனை
கடல்முன்புக டைந்தப ரம்பரர்
படரும்புய லென்றவ ரன்புகொள் மருகோனே
பலதுன்பமு ழன்றுக லங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்றுக ழிந்திட வந்தருள் புரிவாயே
அனகன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட இன்புடன்
அழலுந்தந குந்திறல் கொண்டவர் புதல்வோனே

அடல்வந்துமு ழங்கியி டும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்டநெ ரிந்திட வருசூர்
மனமுந்தழல் சென்றிட அன்றவர்
உடலுங்குட லுங்கிழி கொண்டிட
மயில்வென்றனில் வந்தரு ளுங்கன பெரியோனே
மதியுங்கதி ருந்தட வும்படி
உயர்கின்றவ னங்கள்பொ ருந்திய
வளமொன்றுப ரங்கிரி வந்தருள் பெருமாளே.

465. கனகரவுஞ் சத்திற் சத்தியை விட்டன்
றசுரர்தண் டத்தைச் செற்றவி தழ்ப்பங்
கயனைமுன் குட்டிக் கைத்தளை யிட்டும் பரையாளும்
கடவுளன் புற்றுக் கற்றவர் சுற்றும்
பெரியதும் பிக்கைக் கற்பக முற்றங்
காதலம் பற்றப் பெற்ற ஒருத்தன் ஜகதாதை
புனவிளந் தத்தைக் கிச்சை யுரைக்கும்
புரவலன் பத்தர்க் குத்துணை நிற்கும்
புதியவன் செச்சைப் புட்ப மணக்கும் பலபாரப்
புயனெனுஞ் சொற்கற் றுப்பிற கற்கும்
பசையொழிந் தத்தத் திக்கென நிற்கும்
பொருடொறும் பொத்தப் பட்டதொ ரத்தம்
பெறுவேனே
அனல்விடுஞ் செக்கட் டிக்கய மெட்டும்
பொரவரிந் திட்டெட் டிற்பகு திக்கொம்
பணிதருஞ் சித்ரத் தொற்றை யுரத்தன் திடமாக
அடியொடும் பற்றிப் பொற்கயி லைக்குன்
றதுபிடுங் கப்புக் கப்பொழு தக்குன்
றணிபுயம் பத்துப் பத்துநெ ரிப்புண் டவனீடுந்
தனதொரங் குட்டத் தெட்பல டுக்குஞ்
சரியலன் கொற்றத் துக்ரவ ரக்கன்
தசமுகன் கைக்குக் கட்க மளிக்கும் பெரியோனும்

தலைவியும் பக்கத் தொக்க விருக்குஞ்
சயிலமுன் தெற்குச் சற்குரு வெற்புந்
தணியலும்பெற்றுக் கச்சியில்நிற்கும் பெருமாளே.

466. கனங்கள் கொண்ட குந்தளங் களுங்கு லைந்த லைந்துவிஞ்
சுகண்க ளுஞ்சி வந்த யர்ந்து களிகூரக்
காங்க ளுங்கு விந்துநெஞ் சகங்க ளுங்க சிந்திடுங்
கறங்கு பெண்க ளும்பி றந்து விலைகூறிப்
பொனின்கு டங்க ளஞ்சுமென் தனங்க ளும்பு யங்களும்
பொருந்தி அன்பு நண்பு பண்பு முடனாகப்
புணர்ந்து டன்பு லர்ந்துபின் கலந்த கங்கு ழைந்தவம்
புரிந்து சந்த தந்தி ரிந்து படுவேனோ
அனங்க னைந்து நைந்துவெந் தருந்து சிந்த அன்றுகண்
திறந்தி ருண்ட கண்டர் தந்த அயில்வேலா
அடர்ந்த டர்ந்தெ திர்ந்துவந் தவஞ்ச ரஞ்ச வெஞ்சமம்
புரிந்த அன்ப ரின்ப நண்ப உரவோனே
சினங்கள் கொண்டி லங்கைமன் சிரங்கள் சிந்த வெஞ்சரந்
தெரிந்த வன்ப ரிந்த இன்ப மருகோனே
சிவந்த செஞ்ச தங்கையுஞ் சிலம்பு தண்டை யும்புனைந்
துசெந்தில் வந்த கந்த எங்கள் பெருமாளே.

467. கனத்த திர்க்குமிப் பொங்கு பாற்கடல் ஒன்றினாலே
கருத்த றச்சிவத் தங்கி பூத்தெழுங் கண்களாலே
தனிக்க ருப்புவிற் கொண்டு வீழ்த்தச ரங்களாலே
தகைத்தொ ருத்தியெய்த் திங்கு மோகத்த ழுந்தலாமோ
தினைப்பு னத்தினைப் பண்டு காத்தம டந்தைகேள்வா
திருத்த ணிப்பதிக் குன்றின் மேற்றிகழ் கந்தவேளே
பனைக்க ரக்கயத் தண்டர் போற்றிய மங்கைகோவே
படைத்த ளித்தழிக் குந்த்ரி மூர்த்திகள் தம்பிரானே.

468. கனத்தறப் பணைத்தபொற் கழைப்புயத் தனக்கிரிக்
கனத்தையொத் துமொய்த்தமைக் குழலார்தங்
கழுத்தமைக்கயற்கணிற் கருத்துவைத் தொருத்தகிற்
கழற்பதத் தடுத்திடற் கறியாதே

இனப்பிணிக்கணத்தினுக்கிருப்பெனத் துருத்தியொத்
திசைத்தசைத் தசுக்கிலத் தசைதோலால்
எடுத்தபொய்க்கடத்தினைப் பொறுக்குமிப் பிறப்பறுத்
தெனக்குநித் தமுத்தியைத் தரவேணும்
பனைக்கரச் சினத்திபத் தனைத்துரத் தரக்கனைப்
பயத்தினிற் பயப்படப் பொரும்வேலா
பருப்பதச் செருக்கறுத் துகைக்குமுட் பதத்தினைப்
படைத்தகுக் குடக்கொடிக் குமரேசா
தினைப்புனப் பருப்பதத் தினிற்குடிக் குறத்தியைச்
செருக்குறத் திருப்புயத் தணைவோனே
திருப்புறப் புறத்தியற் றிருத்தகுத் துநித்தலத்
திருத்திசைத் திருத்தணிப் பெருமாளே.

**469.** கனத்திறுகிப் பெருத்திளகிப்
பணைத்துமணத் திதத்துமுகக்
கறுப்புமிகுத் தடர்த்துநிகர்த் தலமோராய்
கவட்டையுமெத் தடக்கிமதர்த்
தறக்கெருவித் திதத்திடுநற்
கலைச்சவுரித் தலைக்குலவிக் களிகூரும்
தனத்தியர்கட் கிதத்துமிகுத்
தனற்குண்மெழுக் கெனப்புவியிற்
றவித்திழிசொற் பவக்கடலுற் றயர்வாலே
சலித்தவெறித் துடக்குமனத்
திடக்கனெனச் சிரிக்கமயற்
சலத்தின்வசைக் கிணக்கமுறக் கடவேனோ
புனத்தின்மலைக் குறத்தியுயர்த்
திருக்குதனக் குடத்தினறைப்
புயத்தவநற் கருத்தையுடைக் குகவீரா
பொருப்பரசர்க் கிரக்கமொடுற்
றறற்சடிலத் தவச்சிவனிற்
புலச்சிதனக் கிதத்தைமிகுத் திடுநாதா

சினத்தெதிர்துட் டரக்கர்தமைத்
திகைத்துவிழக் கணப்பொழுதிற்
சிதைத்திடுநற் கதிர்க்கைபடைத் துடையோனே
செருக்கொடுநற் றவக்கமலத்
தயற்குமரிக் கருட்புரிசைத்
திருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே.

470. கனமா யெழுந்துவெற் பெனவே உயர்ந்துகற்
புரமா ரணைந்துளிர்த் திடுமானார்
கனிவா யுகந்துசிக் கெனவே அணைந்துகைப்
பொருளே இழந்துவிட் டயர்வாயே
மனமே தளர்ந்துவிக் கலுமே எழுந்துமட்
டறவே உலர்ந்துசுக் கதுபோல
வசமே அழிந்துவுக் கிடுநோய் துறந்துவைப்
பெனவே நினைந்துனைப் புகழ்வேனோ
புனவே டர்தந்தபொற் குறமா துஇன்புறப்
புணர்கா தல்கொண்டவக் கிழவோனே
புனலே ழுமங்கவெற் பொடுசூர் சிரங்கள்பொட்
டெழவே லெறிந்தவுக் கிரவீரா
தினமேவு குங்குமப் புயவாச கிண்கிணிச்
சிறுகீத செம்பதத் தருளாளா
சிவலோக சங்கரிக் கிறைபால பைங்கயத்
திருவா வினன்குடிப் பெருமாளே.

471. கனவாலங் கூர்விழி மாதர்கள்
மனசாலஞ் சால்பழி காரிகள்
கனமாரம் போருக மாமிணை முலைமீதே
கசிவாருங் கீறுகி ளாலுறு
வசைகாணுங் காளிம வீணிகள்
களிகூரும் பேயமு தூணிடு கசுமாலர்
மனமோகங் கூர்மக பாவிகள்
மதுவார்சங் கீதவி னோதிகள்
மருளாருங் காதலர் மேல்விழு மகளீர்வில்

மதிமாடஞ் சேர்பவர் காதலில்
மகிழ்கூரும் பாழ்மனம் வாரிச
மலர்பேணுந் தாளுன வேயருள் அருளாயோ
தனதானந் தானன தானன
எனவேதங் கூறுசொல் மீறளி
தகைசேர்தண் பூமண மாலிகை அணிமார்பா
தகரேறங் காரச மேவிய
குகவீரம் பாகும ராமிரு
தகைசாலன் பாரடி யார்மகிழ் பெருவாழ்வே
தினமாமன் பாபுன மேவிய
தனிமானின் தோளுட னாடிய
தினைமாவின் பாவுயர் தேவர்கள் தலைவாமா
திகழ்வேடங் காளியொ டாடிய
செகதீசங் கேசந டேசுரர்
திருவாலங் காடினில் வீறிய பெருமாளே.

472. கனிதருங் கொக்குக் கட்செவி வெற்பும்
பழநியுந் தெற்குச் சற்குரு வெற்புங்
கதிரையுஞ் சொற்குட் பட்டதிருச்செந் திலும்வேலும்
கனவிலுஞ் செப்பத் தப்பு மெனைச்சங்
கடவுடம் புக்குத் தக்கவ னைத்துங்
களவுகொண் டிட்டுக் கற்பனை யிற்கண் சுழல்வேனைப்
புனிதனம் பைக்குக் கைத்தல ரத்னம்
பழையகங் கைக்குற் றப்புது முத்தம்
புவியிலன் றைக்கற் றெய்ப்பவர் வைப்பென் றருகாவெப்
பொழுதும்வந் திக்கைக் கற்ற எனைப்பின்
பிழையுடன் பட்டுப் பத்தருள் வைக்கும்
பொறையையென் செப்பிச் செப்புவ தொப்பொன்
றுளதோதான்
அனனியம் பெற்றற் றற்றொரு பற்றுந்
தெளிதருஞ் சித்தர்க் குத்தெளி சிற்கொந்
தமலைதென் கச்சிப் பிச்சிம லர்க்கொந் தளபாரை

அறவிநுண் பச்சைப் பொற்கொடி கற்கண்
டமுதினுந் தித்திக் கப்படு சொற்கோம்
பகிலவண் டத்துற் பத்திசெய் முத்தின் பொலமேரு

தனிவடம் பொற்புப் பெற்றமு லைக்குன்
றிணைசுமந் தெய்க்கப் பட்ட நுசுப்பின்
தருணிசங் குற்றுத் தத்துதி ரைக்கம் பையினூடே

தவமுயன் றப்பொற் புப்படி கைக்கொண்
டறமிரண் டெட்டெட் டெட்டும்வ ளர்க்கும்
தலைவிபங் கர்க்குச் சத்ய முரைக்கும் பெருமாளே.

473. கனைகடல் வயிறு குழம்பி வாய்விட
வடதம ணியகி ரிகம்ப மாய்நட
கணபண விபரி தகந்த காளபு யங்கராஜன்

கயிறென அமர ரனந்த கோடியு
முறைமுறை அமுது கடைந்த நாளொரு
கதியற உலகை விழுங்கு மேகவொ ழுங்குபோல

வினைமத கரிக ளுமெண்டி சாமுக
கிரிகளு முருகி டவண்ட கோளகை
வெடிபட எவரை யும்விஞ்சி மேலிடு நஞ்சுபோல

விரிகுழை அளவு வளர்ந்து காமுக
ருயிர்பலி கவர்வு றுபஞ்ச பாதக
விழிவலை மகளி ரொடன்பு கூர்வதொ ழிந்திடாதோ

முனைபெற வளைய அணைந்த மோகர
நிசிசரர் கடக முறிந்து தூளெழ
முகிலினம் வெருவ இருண்ட தாருகன் அஞ்சமீன

முழுகிய திமிர தரங்க சாகர
முறையிட இமைய வர்தங்க ளூர்புக
முதுகிரி உருவ முனிந்த சேவக செம்பொன்மேரு

அனையன கனவி தசண்ட கோபுர
அருணையி லுறையு மருந்து ணாமுலை
அபிநவ வனிதை தருங்கு மாரநெ ருங்குமால்கொண்

டடவியில் வடிவு கரந்து போயொரு
குறமகள் பிறகு திரிந்த காமுக
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே.

474. கன்றிவரு நீல குங்கும படீர
கஞ்சமலர் மேவு முலைகாட்டி
கங்குல்செறி கேச மங்குல்குலை யாமை
கண்கள்கடை காட்டி விலைகாட்டி
நன்றுபொருள் தீது வென்றுவிலை பேசி
நம்பவிடு மாதர் உடனாட்ட
நஞ்சுபுசி தேரை அங்கமது வாக
நைந்துவிடு மேற்கென் றருள்வாயே
குன்றிமணி போல செங்கண்வரி நாகம்
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்
கொண்டமயி லேறி குன்றிடிய மோதி
சென்றவடி வேலைக் கொடுபோர்செய்
மன்றல்கமழ் பூகந் தெங்குதிரள் சோலை
வண்டுபடு வாவி புடைசூழ
மந்திநட மாடுஞ் செந்திநகர் மேவு
மந்தசுர காலப் பெருமானே.

475. கன்னலொத்த மொழிச்சொல் வேசியர்
வன்மனத்தை யுருக்கு லீலையர்
கண்வெருட்டி விழித்த பார்வையர் இதமாகக்
கையிலுற்ற பொருட்கள் யாவையும்
வையெனக்கை விரிக்கும் வீணியர்
கைகள்பற்றி யிழுத்து மார்முலை தனில்வீழப்
பின்னிவிட்ட சடைக்கு ளேமலர்
தன்னை வைத்து முடிப்பை நீயவி
ழென்னுமற்ப குணத்த ராசையில் உழலாமல்
பெய்யுமுத்த மிழிற்ற யாபர
என்ன மூத்தர் துதிக்க வேமகிழ்
பிஞ்ஞகர்க்கு ரைசெப்பு நாயக அருள்தாராய்

வன்னியொத்த படைக்கலாதிய
துன்னுகைக்கொ ளரக்கர் மாமுடி
மண்ணிலற்று விழச்செய் மாதவன் மருகோனே
மன்னுபைப்ப ணியுற்ற நீள்விட
மென்னவிட்டு முடுக்கு சூரனை
மல்லுடற்று முருட்டு மார்பற அடைவாகச்
சென்னிபற்றி யறுத்த கூரிய
மின்னிழைத்த திறத்த வேலவ
செய்யபொற்பு னவெற்பு மானனை மணிமார்பா
செம்மனத்தர் மிகுத்த மாதவர்
நன்மைபெற்ற உளத்தி லேமலர்
செல்வசிக்கல் நகர்க்குள் மேவிய பெருமாளே.

476. கன்னியர் கடுவிட மன்னிய கயலன
கண்ணிலு மிருகன தனமீதும்
கன்மைகள் மருவிய மன்மத னுருவிலி
மென்மைகொ ளுருவிலு மயலாகி
இன்னல்செய் குடிலுட னின்னமு முலகினி
லிங்கிலை பெறவிவண் உதியாதே
எண்ணமு னடியவர் நண்ணிய பதமிசை
என்னையும் வழிபட விடவேணும்
பொன்னவ மணிபயில் மன்னவ புனமற
மின்முலை தழுவிய புயவீரா
புண்ணிய முளபல விண்ணவர் தொழுமுத
லெண்மலை யொடுபொரு கதிர்வேலா
தன்னிறை சடையிறை என்முனி பரவரு
மின்னிசை உறுதமிழ் தெரிவோனே
தண்ணளி தருமொரு பன்னிரு விழிபயில்
சண்முக அழகிய பெருமாளே.

477. காணுத தூரம் நீணுத வாரி
காதார வார மதன்பினாலே
காலாளும் வேளும் ஆலால நாதர்
காலால் நிலாவு முனிந்துபூமேல்

நாஞான தோகை நூலாடை சோர
நாடோர்க ளேச அழிந்துதானே
நாளுப வாத மேலாக ஆகம்
நாடோறும் வாடி மயங்கலாமோ
சோஞச லேச பூஞர நீடு
தோளாறு மாறும் விளங்குநாதா
தோலாத வீர வேலால டாத
சூராளன் மாள வெகுண்டகோவே
சேஞடர் லோகம் வாழ்மாதி யானை
தீராத காதல் சிறந்தமார்பா
தேவாதி கூடு மூவாதி மூவர்
தேவாதி தேவர் கடம்பிரானே.

478. காணொ ணாதது உருவோ டருவது
பேசொ ணாதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய் நிறைவது பஞ்சபூதக்
காய பாசம தனிலே உறைவது
மாய மாயுட லறியா வகையது
காய மானவ ரெதிரே யவரென வந்துபேசிப்
பேணொ ணாதது வெளியேய் ஒளியது
மாய ஞாய னறியா வகையது
பேத பேதமொ டுலகாய் வளர்வது விந்துநாதப்
பேறு மாகலை துரியா துரியவ
தீத மானது வினையேன் முடிதவப்
பேறு மாயருள் நிறைவாய் விளைவது ஒன்றுநீயே
வீணொ ணாதென அமையா தசுரரை
நூறி யேயுயிர் நமனீ கொளுவென
வேல்க டாவிய கரனே உமைமுலை உண்டகோவே
வேத நான்முக மறையோ னொடும்விளை
யாடி யேகுடு மியிலே கரமொடு
வீற மோதின வழகா குறவர்கு றிஞ்சியூடே

சேணெ ணுயிடு மிதண்மே லரிவையை
மேவி யேமயல் கொளலீ லைகள்செய்து
சேர நாடிய திருடா அருடரு கந்தவேளே
சேரொ ணுவகை வெளியே திரியுமெய்ஞ்
ஞான யோகிக ளுளமே உறைதரு
*தேவ னூர்வரு குமரா அமரர்கள் தம்பிரானே.

479. காதட ருங்கயல் கொண்டிசைந் தைம்பொறி
வாளிம யங்கம ணம்பயந் தந்திருள்
கால்தர இந்துவி சும்பிலங் கும்பொழு தொருகோடி
காய்கதி ரென்றொளிர் செஞ்சிலம் புங்கணை
யாழியு டன்கட கந்துலங் கும்படி
காமனெ டுஞ்சிலை கொண்டடர்ந் தும்பொரு மயலாலே
வாதுபு ரிந்தவர் செங்கைதந் திங்கித
மாகந டந்தவர் பின்திரிந் தந்தன
மார்பில ழுந்தவ ணைந்திடுந் துன்பம துழலாதே
வாசமி குந்தக டம்பமென் கிண்கிணி
மாலைக ரங்கொளு மன்பர்வந் தன்பொடு
வாழ்நி தம்புனை யும்பதந் தந்துன தருள்தாராய்
போதிலு றைந்தருள் கின்றவன் செஞ்சிர
மீதுத டிந்துவி லங்கிடும் புங்கவ
போதவ ளஞ்சிவ சங்கரன் கொண்டிட மொழிவோனே
பூகமு டன்திகழ் சங்கினங் கொண்டகி
ரீவம டைந்தபு ரந்தரன் தந்தருள்
பூவைக ருங்குற மின்கலந் தங்குப ணிருதோளா
தீதக மொன்றினர் வஞ்சகந் துஞ்சிமி
டாதவர் சங்கரர் தந்தவன் பும்பல
சேர்நிரு தன்குல மஞ்சமுன் சென்றிடு திறலோனே
சீதள முந்தும ணந்தயங் கும்பொழில்
சூழ்தர விஞ்சைகள் வந்திறைஞ் சும்பதி
தேவர்ப ணிந்தெழு தென்பரங் குன்றுறை பெருமானே.

---

*தேவை யூர்வரு குமரா அமரர்கள் தம்பிரானே.

480. காதல்மோ கந்தருங் கோதைமார் கொங்கைசிங்
காரநா கஞ்செழுங் கனிவாய்கண்
காளகூ டங்கொடுங் காலரூ பம்பொருங்
காமபா ணஞ்சுரும் பினம்வாழும்
ஓதிகார் செஞ்சொல்மென் பாகுதே னென்றயர்ந்
தோரமோ கந்தவென் றுரையாதே
ஊசலா டும்புலன் தாரியே சென்றுநின்
றேயுமா றொன்றையுங் கருதாதோ
தாதகி சண்பகம் பூகமார் கந்தமந்
தாரம்வா சந்திசந் தனநீடு
சாமவே தண்டவெங் கோபகோ தண்டசந்
தானமா தெங்கள்பைம் புனமேவும்
தீதிலா வஞ்சியஞ் சீதபா தம்படுஞ்
சேகரா தென்குடந் தையின்வாழ்வே
தேவிபா கம்பொருந் தாதிநா தன்தொழுந்
தேசிகா உம்பர்தம் பெருமாளே.

481. காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோரும்
காசு தேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்
மாது பாகர் வாழ்வேயெ னெநெக் குருகாரும்
மாறி லாத மாகால னூர்புக் கலைவாரே
நாத ரூப மாநாத ராகத் துறைவோனே
நாக லோக மீரேழு பாருக் குரியோனே
தீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே.

482. காதிலோலை கிழிக்குங் காமபாண விழிக்குங்
கானயாழின் மொழிக்கும் பொதுமாதர்
காணொணாத இடைக்கும் பூணுலாவு முலைக்குங்
காதில்நீடு குழைக்கும் புதிதாய
கோதிலாத கருப்பஞ் சாறுபோல ருசிக்குங்
கோவைவாய முதுக்குந் தணியாமல்
கூருவேனொ ருவர்க்குந் தேடொணாத தொரர்த்தங்
கூடுமாறொ ருசற்றுங் கருதாயோ

பூதிபூஷ ணர்கற்பின் பேதைபாகர் துதிக்கும்
போததேசி கசக்ரந் தவறுதே
போகபூமி புரக்குந் த்யாகமோக குறப்பெண்
போதஆத ரம்வைக்கும் புயவீரா
சோதிவேலை எடுத்தன் றேறுதவேலை யில்நிற்குஞ்
சூததாரு வும்வெற்பும் பொருகோவே
சூரர்சேனை துணித்தன் றேறுதேவர் துதிக்குஞ்
சோலைமாம லைநிற்கும் பெருமாளே.

483. காதின்மணி ஓலையிட்டு வருமானார்
காமவலை ஊடுபுக்கு மதிமாழ்கி
நீதிநெறி யேவிடுத்து மலையாதே
நீயுனிரு தாளளிக்க வரவேணும்
ஆதிமக மாயிபெற்ற குமரேசா
ஆறுமுக மேபடைத்த குருநாதா
தீதிலடி யார்மனத்தில் உறைவோனே
தேவர்குடி வாழவைத்த பெருமாளே.

484. காதைக் காதி மெத்த மோதிக் கேள்வி யுற்ற
காமப் பூச லிட்டு மதியாதே
காரொத் தேய்நி றத்த வோதிக் காவ னத்தி
னூறற் கேத ருக்கி விளையாடிச்
சேதித் தேக ருத்தை நேருற் றேபெ ருத்த
சேலத் தேவ ருத்தும் விழிமானார்
தேமற் பார வெற்பில் மூழ்கித் தாப மிக்க
தீமைக் காவி தப்ப நெறிதாராய்
மாதைக் காத லித்து வேடக் கான கத்து
வாசத் தாள்சி வப்ப வருவோனே
வாரிக் கேயொ ளித்த மாயச் சூரை வெட்டி
மாளப் போர்தொ லைத்த வடிவேலா
வீதித் தேர்ந டத்து தூளத் தால ருக்கன்
வீரத் தேர்ம றைத்த புலியூர்வாழ்
மேலைக் கோபு ரத்து மேவிக் கேள்வி மிக்க
வேதத் தோர்து தித்த பெருமாளே.

485. காதோடு தோடிகலி யாடவிழி வாள்சுழல
கோலாக லாரமுலை மார்புதைய பூணகல
காரோடு கூடளக பாரமல ரோடலைய அணைமீதே
காலோடு காலிகலி யாடபரி நூபுரமொ
டேகாச மானவுடை வீசியிடை நூல்துவள
காவீர மானவித ழூறல்தர நேசமென மிடறூதை
நாதான கீதகுயில் போலவல்குல் மால்புரள
மார்போடு தோள்கரமொ டாடிமிக நாணழிய
நாணுவி ணோதமுற மாதரொடு கூடிமயல் படுவேனை
நாளுரு நீயெவனெ னுமலென தாவிகவர்
சீபாத மேகவலை யாயுமுன வேநிதமும்
நாதாகு மாரமுரு காவெனவு மோதவருள் புரிவாயே
பாதாள சேடனுட லாயிரப ணுமகுட
மாமேரொ டேழுகட லோதமலை சூருடல்
பாழாக தூளிவிணி லேறபுவி வாழவிடு சுடர்வேலா
பாலாழி மீதரவின் மேல்திருவொ டேயமளி
சேர்நீல ரூபன்வலி ராவணகு ழாமிரிய
பாரேவை யேவியமு ராரியைவர் தோழனரி மருகோனே
மாதாபு ராரிசுக வாரிபரை நாரியுமை
ஆகாச ரூபியபி ராமிவல மேவுசிவன்
மாடேறி யாடுமொரு நாதன்மகிழ் போதமருள்
குருநாதா
வானோர்க ளீசன்மயி லோடுகுற மாதுமணா
வாளாகு காகுமர மாமயிலின் மீதுதிரு
மாகாள மாநகரில் மாலொடடி யார்பரவு பெருமாளே.

486. காந்தட் கரவளை சேந்துற் றிடமத
காண்டத் தரிவைய ருடனூசி
காந்தத் துறவென வீழ்ந்தப் படிகுறி
காண்டற் கனுபவ விதமேவிச்
சாந்தைத் தடவிய கூந்தற் கருமுகில்
சாய்ந்திட் டயில்விழி குழைமீதே
தாண்டிப் பொரவுடை தீண்டித் தனகிரி
தாங்கித் தழுவுதல் ஒழியேனோ

மாந்தர்க் கமரர்கள் வேந்தற் கவரவர்
வாஞ்சைப் படியருள் — வயலூரா
வான்கிட் டியபெரு மூங்கிற் புனமிசை
மான்சிற் றடிதொழு — மதிகாமி
பாந்தட் சடைமுடி யேந்திக் குலவிய
பாண்டிக் கொடுமுடி — உடையாரும்
பாங்கிற் பரகுரு வாங்கற் பனையொடு
பாண்சொற் பரவிய — பெருமாளே.

**487.** காமாத்திர மாகி இளைஞர்கள்
வாழ்நாட்கொடு போகி அழகிய
காதாட்டிய பார இருகுழை — அளவோடிக்
கார்போற்றவ மோதி நிழல்தனி
லார்வாட்கடை ஈடு கனமொடு
காலேற்றுவை வேலின் முனைகடை — யமதூதர்
ஏமாப்புற மோக வியல்செய்து
நீலோற்பல மாசில் மலருட
னோராட்டவி னேத மிடும்விழி — மடவார்பால்
ஏகாப்பழி பூணு மருளற
நீதோற்றிமு ஞானு மடிமையை
ஈடேற்றுத லாலுன் வலிமையை — மறவேனே
சீமாட்டியு மாய திரிபுரை
காலாக்கினி கோப பயிரவி
சீலோத்தமி நீலி சுரதிரி — புவனேசை
சீகார்த்திகை ஆய அறுவகை
மாதாக்கள்கு மார னெனவெகு
சீராட்டொடு பேண வடதிசை — கயிலாசக்
கோமாற்குப தேச முபணிட
வேதார்த்தமெய்ஞ் ஞான நெறியருள்
கோதாட்டிய சாமி எனவரு — மிளையோனே
கோடாச்சிவ பூசை பவுருஷ
மாறுக்கொடை நாளு மருவிய
கோனாட்டுவி ராலி மலையுறை — பெருமாளே.

488. காமி யத்த ழுந்தி இளையாதே
காலர் கைப்ப டிந்து மடியாதே
ஓமெ ழுத்தி லன்பு மிகவூறி
ஒவி யத்தி லந்தம் அருள்வாயே
தூம மெய்க்க ணிந்த சுகலீலா
சூர னைக்க டிந்த கதிர்வேலா
ஏம வெற்பு யர்ந்த மயில்வீரா
ஏர கத்த மர்ந்த பெருமாளே..

489. காய மாய வீடு மீறிய கூடு நந்து
புற்பு தந்த னிற்கு ரம்பை கொண்டுநாளுங்
காசி லாசை தேடி வாழ்வினை நாடி யிந்த்ரி
யப்ர மந்த டித்த லைந்து சிந்தைவேறாய்
வேயி லாய தோள மாமட வார்கள் பங்க
யத்து கொங்கை யுற்றி ணங்கி நொந்திடாதே
வேத கீத போத மோனமெய்ஞ் ஞான நந்த
முற்றி டின்ப முத்தி யொன்று தந்திடாயோ
மாய வீர தீர சூரர்கள் பாற நின்ற
விக்ர மங்கொள் வெற்பி டந்த செங்கைவேலா
வாகை வேடர் பேதை காதல் வேழ மங்கை
யைப்பு ணர்ந்த வெற்ப கந்த செந்தில்வேளே
ஆயும் வேத கீத மேழிசை பாட வஞ்செ
ழுத்த ழங்க முட்ட நின்று துன்றுசோதி
ஆதி நாத ராடு நாடக சாலை யம்ப
லச்சி தம்ப ரத்த மர்ந்த தம்பிரானே..

490. காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே.

491. காரணிந் தவரைப் பாரடர்ந் துவினைக்
காதல்நெஞ் சயாத் தடுமாறிக்
கானரம் புதிரத் தோல்வழும் புழுபொய்க்
காயமொன் றுபொறுத் தடியேனும்
தாரணிந் தகுழற் கூரணிந் தவிழிச்
சாபமொன் றுறுதற் கொடியார்தம்
தாள்பணிந் தவர்பொற் றோள்விரும் பிமிகத்
தாழ்வடைந் துலையத் தகுமோதான்
சூரனங் கம்விழத் தேவர்நின் றுதொழத்
தோயமுஞ் சுவறப் பொரும்வேலா
தூய்மைகொண் டகுறத் தோகைநின் றபுனச்
சூழ்பெருங் கிரியிற் றிரிவோனே
ஆரணன் கருடக் கேதனன் தொழுமுற்
றுலமுண் டவருக் குரியோனே
ஆலையும் பழனச் சோலையும் புடைசூற்
றுவினன் குடியிற் பெருமாளே.

492. காரணி யுங்குழ லைக்கு வித்திடு
கோகன கங்கொடு மெத்தெ னப்பிறர்
காணவ ருந்திமு டித்தி டக்கடு விரகாலே
காதள வுங்கய லைப்பு ரட்டிம
ருதிகள் வஞ்சமி குத்தி டப்படி
காமுக ரன்புகு வித்த கைப்பொருள் உறவாகிப்
பூரண கும்பமெ னப்பு டைத்தெழு
சீதள குங்கும மொத்த சித்திர
பூஷித கொங்கையி லுற்று முத்தணி பிறையான
போருவை யொன்றுநெ கிழ்த்து ருக்கிமெய்
யாரையும் நெஞ்சைவி லைப்ப டுத்திடு
பூவையர் தங்கள்ம யக்கை விட்டிட அருள்வாயே
வீரபு யங்கிரி யுக்ர விக்ரம
பூதக ணம்பல நிர்த்த மிட்டிட
வேகமு டன்பறை கொட்டி டக்கழு கினமாட

வீசிய பம்பர மொப்பெ னக்களி
வீசக டஞ்செய்வி டைத்த ளித்துசர்
வேதப ரம்பரை யுட்க ளித்திட வரும்வீரா

சீரணி யுந்திரை தத்து முத்தெறி
காவிரி யின்கரை மோத்து மெத்திய
சீர்புனை கின்றதி ருத்த வத்துறை வரும்வாழ்வே

சீறியெ திர்ந்தவ ரக்க ரைக்கெட
மோதி யடர்ந்தருள் பட்ச முற்றிய
தேவர்கள் தஞ்சிறைவெட்டிவிட்டருள்பெருமாளே.

493. காரா டக்குழ லாலா லக்கணை
கண்கள் சுழன்றிட வேமு கங்களி
னூலா பச்சிலை யாலே மெற்புசி
மஞ்சள் கலந்தணி வாளி கொந்தள
காதா டக்கலன் மேலா டக்குடி
இன்ப ரசங்குட மார்ப ளிங்கொளி கொங்கைமாதர்

காசா சைச்செய லாலே சொக்கிடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
போலே நற்றெரு வூடா டித்துயல்
தொங்கல் நெகிழ்ந்திடை யேது வண்டிட
கால்தா விச்சதி யோடே சித்திர
மென்ப நடம்புரி வாரு டன்செயல் மிஞ்சலாகிச்

சீரா டிச்சில நாள்போய் மெய்த்திரை
வந்து கலந்துயி ரோட வங்கமோ
டூடா டிப்பல நோயோ டுத்தடி
கொண்டு குரங்கென வேக டந்துசெல்
சீயோ டிக்கிடை பாயோ டுக்கிய
டங்கி அழிந்துயி ரோடு ளைஞ்சொளி யுங்கண்மாறிச்

சேரா மற்பொறி கேளா மற்செவி
துன்பமொ டின்பமு மேம றந்துபின்
ஊரார் சுற்றமு மாதோர் மக்களு
மண்டியு மண்டையு டேகு விந்திது

சீசீ சிச்சிசி போகா நற்சனி
யன்கட வென்றிட வேகி டந்துடல் மங்குவேனோ

மாரோன் முப்புர நீறு யுற்றிட
அங்கி உமிழ்ந்திடு வோரி பம்புலி
தோல்சீ யத்தொடே ஏகா சர்ச்சடை
கங்கை இளம்பிறை யார ணிந்தவர்
மாடே றிக்கட லாலா லத்தையு
முண்டவ ரெந்தைசி வாணுபங்குறை என்றன்மாதா

மாலோ னுக்கிளை யாள்மா பத்தினி
அம்பிகை சங்கரி மோக சுந்தரி
வேதா மக்கலை ரூபாள் முக்கணி
ரம்பிய கொங்கையி னுள்ப யந்தருள்
மாணா னக்கும ராதோ கைப்பரி
யின்பத வண்குரு வேயெ னஞ்சுரர் தொண்டுபாடச்

சூரார் மக்கிட மாமே ருக்கிட
அங்கட லெண்கிரி யோடி பங்கொடு
தீபே ழற்றிட பாதா ளத்துறை
நஞ்சா கின்பண மாயி ரங்கெட
சூழ்வா ளக்கிரி தூளா கிப்பொடி
விண்கணி றைந்திட வேந டம்புரி கின்றவேலா

சோர்வே தத்தலை மேலா டிச்சுக
பங்கய செங்கர மோட கம்பெற
வாகா னக்குற மாதோ டற்புத
மங்குல ணங்குட னேம கிழ்ந்துநல்
தூனே டிச்சுட ராகா சத்தைய
ணைந்துவி ளங்கரு ணாச லந்திகழ் தம்பிரானே.

494\. காருமரு வும்பெரிய சோலைமரு வுங்கொடிய
காகளம டங்கவுமு ழங்கு மதனாலே
காலடர வம்பமளி மேலடர வந்துபொரு
காமன்விடு விஞ்சுகணை அஞ்சு மலராலே

ஊருமுல கும்பழைய பேருகம்பி லேந்தவெதன
வோரிரவு வந்தெனது சிந்தை அழியாதே
ஊடியிரு கொங்கையிசை கூடிவரி வண்டினமு
லாவியக டம்பமலர் தந்த ருளுவாயே
ஆருமா வும்பிறையு நீருமணி யுஞ்சடைய
ராதிபா வும்படிநி னைந்த குருநாதா
ஆறுமுக முங்குரவு மேறுமயி லுங்குறவி
யாளுமுரா முந்திருவும் அன்பு முடையோனே
மேருமலை யும்பெரிய சூருமலை யுங்கரிய
வேலையலை யும்பகையும் அஞ்ச விடும்வேலா
மேதினியி றைஞ்சுமரு ணைபுரிவி ளங்குதிரு
வீதியிலெ ழுந்தருளி நின்ற பெருமாளே.

495. காருலாவு குழற்குங் கூரிதான விழிக்குங்
காதல்பேணு நுதற்குங் கதிர்போலுங்
காவிசேர்ப வளத்தின் கோவைவாயி தழுக்குங்
காசுபூணு முலைக்குங் கதிசேரா
நேரிதான இடைக்குஞ் சீதவார நகைக்கும்
நேரிலாத தொடைக்குஞ் சதிபாடும்
நீதமான அடிக்கும் மாலுருத படிக்குன்
நேயமோடு துதிக்கும் படிபாராய்
பாரமேரு வளைக்கும் பாணியார்ச டையிற்செம்
பாதிசோம னெருக்கும் புனைவார்தம்
பாலகாவெ னநித்தம் பாடுநாவ லர்துக்கம்
பாவநாச மறுத்துன் பதமீவாய்
சோரிவாரி இடச்சென் றேறியோடி அழற்கண்
சூலகாளி நடிக்கும் படிவேலாற்
சூர்சேனை தனைக்கொன் றூரவார மிகுத்தெண்
தோகைவாசி நடத்தும் பெருமாளே.

496. கார்குழல்கு லைந்தலைந்து வார்குழையி சைந்தசைந்து
காதலுறு சிந்தையுந்து மடமாணர்
காமுகா கங்கலங்க போர்மருவ முந்திவந்த
காழ்கடிய கும்பதம்ப இருகோடார்

பேர்மருவும் அந்திதந்த வாரணவ னங்கன் அங்க
பேதையர்கள் தங்கள்கண்கள் வலையாலே
பேரறிவு குந்துநொந்து காதலில லைந்தசிந்தை
பீடையற வந்துநின்றன் அருள்தாராய்
ஏர்மருவு தண்டைகொண்ட தாளசைய வந்தகந்த
ஏகமயி லங்கதுங்க வடிவேலா
ஏமனுமை மைந்தசந்தி சேவலணி கொண்டுவண்டர்
ஈடெறவி ருந்தசெந்தில் நகர்வாழ்வே
தேருகள்மி குந்தசந்தி வீதிகள ணிந்துகெந்த
சீரலர்கு ளிர்ந்துயர்ந்த பொழிலோடே
சேரவெயி லங்குதுங்க வாவிகளி சைந்திருந்த
சீபுருட மங்கைதங்கு பெருமாளே.

497. கார்க்கொத்த மேனிகடல் போற்சுற்ற மானவழி
காய்த்தொட்டொ ணாதவுரு ஒருகோடி
காக்கைக்கு நாய்கழுகு பேய்க்கக்க மானவுடல்
காட்டத்தி னீளெரியில் உறவானிற்
கூர்ப்பித்த சூலனத னூற்குத்தி யாவிகொடு
போய்த்துக்க மானகுறை உடையேனைக்
கூப்பிட்டு சாவருளி வாக்கிட்டு நாமமொழி
கோக்கைக்கு நூலறிவு தருவாயே
போர்க்கெய்த்தி டாமறலி போற்குத்தி மேவசுரர்
போய்த்திக்கெ லாமடிய வடிவேலாற்
பூச்சித்தர் தேவர்மழை போற்றூர்க்க வேபொருது
போற்றிச்செய் வார்சிறையை விடுவோனே
பார்க்கொற்ற நீறுபுனை வார்க்கொக்க ஞானபா
ணய்ப்பத்தி கூர்மொழிகள் பகர்வாழ்வே
பாக்கொத்தி னலியலர் கோக்கைக்கு வேல்கொடுயர்
பாக்கத்தில் மேவவல பெருமாளே.

498. கார்ச்சார்குழ லார்விழி யாரயி
லார்ப்பால்மொழி யாரிடை நூலெழு
வார்ச்சாரிள நீர்முலை மாதர்கள் மயலாலே

காழ்க்காதல தாமண மேமிக
வார்க்காமுக ஞயுறு சாதக
மாப்பாதக ஞமடி யேனைநின் அருளாலே

பார்ப்பாயலை யோவடி யாரொடு
சேர்ப்பாயலை யோவுன தாருள்
கூர்ப்பாயலை யோவுமை யாள்தரு குமரேசா

பார்ப்பாவல ரோதுசொ லால்முது
நீர்ப்பாரினில் மீறிய கீரரை
யார்ப்பாய்ன தாமரு ளாலொர்சொல் அருள்வாயே

வார்ப்போரு ளேபொழி காரண
நேர்ப்பாவச காரண மாமத
ஏற்பாடிக ளேயழி வேயுற அறைகோப

வாக்காசிவ மாமத மேமிக
ஊக்காதிப யோகம தேயுறும்
ஆத்தாசிவ பாலகு காவடி யர்கள்வாழ்வே

வேற்காடவல் வேடர்கள் மாமக
ளார்க்கார்வநன் மாமகி ழுதிரு
வேற்காடுறை வேதபுரீசுரர் தருசேயே

வேட்டார்மக வான்மக ளானவள்
ஏட்டார்திரு மாமண வாபொனி
நாட்டார்பெரு வாழ்வெனவேவரு பெருமாளே.

499. கால முகிலென நினைவுகொ டுருவிலி
காதி அமர்பொரு கணையென வடுவகிர்
காண மிதுவென இளைஞர்கள் விதவிடு கயலாலும்

கான மமர்குழ லரிவையர் சிலுகொடு
காசி னளவொரு தலையணு மனதினர்
காம மிவர்சில கபடிகள் படிறுசொல் கலையாலும்

சால மயல்கொடு புளகித கனதன
பார முறவணை முருகவிழ் மலரணை
சாயல் தனின்மிகு கலவியி லழிவுறும் அடியேனை

சாதி குலமுறு படியினின் முழுகிய
தாழ்வ தறவிடை தருவன வெளியுயர்
தாள தடைவது தவமிக நினைவது தருவாயே
வேலை தனில்விழி துயில்பவ னரவணை
வேயி னிசையது நிரைதனி லருள்பவன்
வீர துரகத நரபதி வனிதையர் கரமீதே
வேறு வடிவுகொ டுறிவெணெய் தயிரது
வேடை கெடவமு தருளிய பொழுதினில்
வீசு கயிறுட னடிபடு சிறியவன் அதிகோப
வாலி யுடனெழு மாமர நிசிசரன்
வாகு முடியொரு பதுகர மிருபது
மாள வொருசரம் விடுமொரு கரியவன் மருகோனே
வாச முறுமலர் விசிறிய பரிமள
மாதை நகர்தனி லுறையுமொ ரறுமுக
வானி லடியவ ரிடர்கெட அருளிய பெருமாளே.

500. காலனார் வெங்கொடுந் தூதர்பா சங்கொடென்
காலினார் தந்துடன் கொடுபோக
காதலார் மைந்தருந் தாயாா ருஞ்சுடுங்
கானமே பின்தொடர்ந் தலறாமுன்
சூலம்வாள் கண்டுசெஞ் சேவல்கோ தண்டமுஞ்
சூடுதோ ளுந்தடந் திருமார்பும்
தூயதாள் தண்டையுங் காணஆர் வஞ்செயுந்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்
ஆலகா லம்பரன் பாலதா கஞ்சிடுந்
தேவர்வா ழுன்றுகந் தமுதீயும்
ஆரவா ரஞ்செயும் வேலைமீ கண்டுயின்
றாதிமா யன்றனன் மருகோனே
சாலிசேர் சங்கினம் வாவிசூழ் பங்கயஞ்
சாரலார் செந்திலம் பதிவாழ்வே
தாவுசூ ரஞ்சிமுன் சாயவே கம்பெறுந்
தாரைவே லுந்திடும் பெருமாளே.

501. காலனிடத் தணுகாதே காசினியிற் பிறவாதே
சீலவகத் தியஞான தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே
*சோலைமலைக் குரியானே ஸ்வாமிமலைப் பெருமாளே.

502. காலன் வேற்கணை யீர்வா ளாலமு
நேர்க ளாற்கொலை சூழ்மா பாவிகள்
காம சாத்திர வாய்பா டேணிகள் எவரேனும்
காத லார்க்கும்வி னவாய் கூறிகள்
போக பாத்திர மாமூ தேவிகள்
காசு கேட்டிடு மாயா ரூபிகள் அதிமோக
மாலை மூட்டிகள் வானூ டேகிமிர்
ஆனைபோற்பொர நேரே போர்முலை
மார்பு காட்டிகள் நாணு பேதக மெனமாயா
மாய ராக்கிக ளோடே சீரிய
போது போக்குத லாமோ நீயினி
வாவெ னப்பரி வாலே யாள்வதும் ஒருநாளே
யால ருத்திரு வாயா லோதிய
ஏடு நீர்க்கெதிர் போயே வாதுசெய்
பாடல் தோற்றிரு நாலா மாயிர சமண்மூடர்
பாரின் மேற்கழு மீதே யேறிட
நீறி டாத்தமிழ் நாடே டேறிட
பாது காத்தரு ளாலே கூனிமிர் இறையோனும்
ஞால மேத்திய தோர்மா தேவியும்
ஆல வாய்ப்பதி வாழ்வா மாறெணு
ஞான பாக்கிய பாலா வேலவ மயில்வீரா
ஞான தீக்ஷித சேயே காவிரி
யாறு தேக்கிய கால்வாய் மாவள
நாடு போற்றிய பூவா ளூருறை பெருமாளே.

503. காவிப் பூவை யேவை யிகல்வன
நீலத் தால கால நிகர்வன
காதிப் போக மோக மருள்வன இருதோடார்

---

*நாலுமறைப் பொருளானே நாககிரிப் பெருமானே.

காதிற் காதி மோதி யுழல்கண
மாயத் தார்கள் தேக பரிசன
காமக் ரோத லோப மதமிவை சிதையாத

பாவிக் காயு வாயு வலம்வர
லாவிப் பார்கள் போத கருமவு
பாயத் தான ஞான நெறிதனை இனிமேலன்

பாலெக் காக யோக ஜபதப
நேசித் தார வார பரிபுர
பாதத் தாளு மாறு திருவுள நினையாதோ

கூவிக் கோழி வாழி யெனமயி
லாலித் தால கால மெனஉயர்
கூளிச் சேனை வான மிசைதனில் விளையாடக்

கோரத் தீர சூர னுடலிரு
கூறுற் றோட வேனை யசுரர்கள்
கூடிக் கால மாக அமர்செய்த வடிவேலா

ஆவிச் சேல்கள் பூக மடலிள
பாளைத் தாறு கூறு படஉய
ராலைச் சோலை மேலை வயலியில் உறைவோனே

ஆசைத் தோகை மார்க ளிசையுட
னாடிப் பாடி நாடி வருதிரு
ஆனைக் காவில் மேவி யருளிய பெருமாளே.

504. காவியு டுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்

காய்கனி துய்த்துங் காயமொ றுத்துங்
காசினி முற்றுந் திரியாதே

சீவனொ டுக்கம் பூதவொ டுக்கம்
தேறவு திக்கும் பரஞான

தீபவி ளக்கங் காணவெ னக்குன்
சீதள பத்மந் தருவாயே

பாவநி றத்தின் தாருக வர்க்கம்
பாழ்பட வுக்ரந் தருவீரா

பாணிகள் கொட்டும் பேய்கள்பி தற்றும்
பாடலை மெச்சுங் கதிர்வேலா
தூவிகள் நிற்குஞ் சாலிவ ளைக்குஞ்
சோலைசி றக்கும் புலியூரா
சூரர்மி கக்கொண் டாடந டிக்குந்
தோகைந டத்தும் பெருமாளே.

505. கிஞ்சுகமெ னச்சிவத்த தொண்டையள்மி கக்கறுத்த
கொண்டையள்பு னக்கொடிச்சி அதிபாரக்
கிம்புரிம ருப்பையொத்த குங்குமமு லைக்குறத்தி
கிங்கரனெ னப்படைத்த பெயர்பேசா
நெஞ்சுருகி நெக்குநெக்கு நின்றுதொழு நிர்க்குணத்தர்
நிந்தனையில் பத்தர்வெட்சி மலர்தூவும்
நின்பதயு கப்ரசித்தி என்பனவ குத்துரைக்க
நின்பணித மிழ்த்ரயத்தை அருள்வாயே
கஞ்சன்வர விட்டதுட்ட குஞ்சரம ருப்பொசித்த
கங்கனும தித்திகைக்க மதம்வீசும்
கந்தெறிக ளிற்றுரித்து வென்றுதிரு நட்டமிட்ட
கம்பனும திக்கவுக்ர வடிவேல்கொண்
டஞ்சியஜ கத்ரயத்தை அஞ்சலென விக்ரமித்து
அன்பர்புக ழப்பொருப்பொ டமராடி
அன்றவுண ரைக்களத்தில் வென்றுததி யைக்கலக்கி
அண்டர்சிறை வெட்டிவிட்ட பெருமாளே.

506. கிரியு லாவிய முலைமிசை துகிலிடு
கபட நாடக விரகிக ளசடிகள்
கெடுவி யாதிக ளடைவுடை உடலினர் விரகாலே
கிருபை வேறுறு அணைமிசை தழுவிகள்
முழுது நாறிக ளிதமொழி வசனிகள்
கிடையின் மேல்மன முருகிடு சருவிகள் பொருளாலே
பரிவி லாமயல் கொடுசமர் புரிபவர்
அதிக மாயொரு பொருள்தரு பவரொடு
பழைய பேரென இதமுற அணைபவர் விழியாலே

பகழி போல்விடு விழிகவர் திருடிகள்
தமையெ ணுவகை உறுகதி பெறும்வகை
பகர மாமயில் மிசைவர நினைவது மொருநாளே
அரிய ராதியர் மலரய னிமையவர்
நிலைபெ றுதிடர் படவுடன் முடுகியெ
அசுரர் தூள்பட அயில்தொடு மறுமுக இளையோனே
அரிய கானக முறைகுற மகளுடை
கணவ னாகிய அறிவுள விதரண
அமரர் நாயக சரவண பவதிறல் உடையோனே
தரும நீதியர் மறையுளர் பொறையுளர்
சரிவு றுநிலை பெறுதவ முடையவர்
தளர்வி லாமன முடையவ ரறிவினர் பரராஜர்
சகல லோகமு முடையவர் நினைபவர்
பரவு தாமரை மலரடி யினிதுறு
தணிகை மாமலை மணிமுடி அழகியல் பெருமாளே.

507. கிறிமொழிக் கிருதரைப் பொறிவழிச் செறிஞரைக்
கெடுபிறப் பறவிழிக் கிறபார்வைக்
கெடுமடக் குருடரைத் திருடரைச் சமயதர்க்
கிகள்தமைச் செறிதலுற் றறிவேதும்
அறிதலற் றயர்தலுற் றவிழ்தலற் றருகலுற்
றறவுநெக் கழிகருக் கடலூடே
அமிழ்தலற் றெழுதலுற் றுணர்நலத் துயர்தலுற்
றடியிணைக் கணுகிடப் பெறுவேனோ
பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப் பறிதலைப்
பொறியிலிச் சமணரைத் தனைபேரும்
பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் புலவோனே
தறிவளைத் துறநகைப் பொறியெழப் புரமெரித்
தவர்திருப் புதல்வநற் சுனைமேவுந்
தனிமணக் குவளைநித் தமுமலர்த் தருதிருத்
தணியினிற் சரவணப் பெருமாளே.

508. கீதவி நோதமெச்சு குரலாலே
கீறுமை யார்முடித்த குழலாலே
நீதியி லாதழித்து முழலாதே
நீமயி லேறியுற்று வரவேணும்
சூதமர் சூரருட்க வருசூரா
சோணகி ரீயிலுற்ற குமரேசா
ஆதியர் காதொருச்சொ லருள்வோனே
ஆனைமு கார்கனிட்ட பெருமாளே.

509. குகர மேவுமெய்த் துறவினின் மறவாக்
கும்பிட் டுந்தித் தடமூழ்கிக்
குமுத வாயின்முற் றமுதினை நுகராக்
கொண்டற் கொண்டைக் குழலாரோ
டகரு தூளிகர்ப் புரதன இருகோட்
டன்புற் றின்பக் கடலூடே
அமிழு வேனைமெத் தெனவொரு கரைசேர்த்
தம்பொற் றண்டைக் கழல்தாராய்
ககன கோளகைக் கணவிரு மளவாக்
கங்கைத் துங்கப் புனலாடும்
கமல வாதனற் களவிட முடியாக்
கம்பர்க் கொன்றைப் புகல்வோனே
சிகர கோபுரத் தினுமதி லினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்
தெருவி லேயுநித் திலமெறி அலைவாய்ச்
செந்திற் கந்தப் பெருமாளே.

510. குகனெ குருபர னேயென நெஞ்சிற்
புகழ அருள்கொடு நாவினி லின்பக்
குமிழி சிவவமு தூறுக வுந்திப் பசியாறிக்
கொடிய இருவினை மூலமும் வஞ்சக்
கலிகள் பிணியிவை வேரொடு சிந்திக்
குலைய நமசிவ யோமென கொஞ்சிக் களிகூரப்

பகலு மிரவுமி லாவெளி யின்புக்
குறுகி யிணையிலி நாடக செம்பொற்
பரம கதியிது வாமென சிந்தித் தழகாகப்
பவள மனதிரு மேனியு டன்பொற்
சரண அடியவ ரார்மன வம்பொற்
றருண சரண்மயி லேறியு னம்பொற் கழல்தாராய்
தகுட தகுதகு தாதக தந்தத்
திகுட திகுதிகு தீதக தொந்தத்
தடுடு டுடுடுடு டாடக டிங்குட் டியல்தாளம்
தபலை திமிலைகள் பூரிகை பம்பைக்
கரடி தமருகம் வீணைகள் பொங்கத்
தடிய மூனவுக மாருத சண்டச் சமரேறிக்
ககன மறைபட ஆடிய செம்புட்
பசிகள் தணிவுற சூரர்கள் மங்கக்
கடல்க ளெறிபட நாகமு மஞ்சத் தொடும்வேலா
கயிலை மலைதனி லாடிய தந்தைக்
குருக மனமுன நாடிய கொஞ்சிக்
கனக சபைதனில் மேவிய கந்தப் பெருமாளே.

511. குகையில்நவ நாதருஞ் சிறந்த
முகைவனச சாதனுந் தயங்கு
குணமுமசு ரேசருந் தரங்க முழல்வேதக்
குரகதபு ராரியும் ப்ரசண்ட
மரகதமு ராரியுஞ் செயங்கொள்
குலிசகைவ லாரியுங் கொடுங்கண் அறநாலும்
அகலியபு ராணமும் ப்ரபஞ்ச
சகலகலை நூல்களும் பரந்த
அருமறைய நேகமுங் குவிந்தும் அறியாத
அறிவுமறி யாமையுங் கடந்த
அறிவுதிரு மேனியென் றுணர்ந்துன்
அருணசர ணாரவிந் தமென்று அடைவேனோ

பகைகொள் துரி யோதனன் பிறந்து
படைபொருத பாரதந் தெரிந்து
பரியதொரு கோடுகொண் டுசண்ட வரைமீதே

பழுதறவி யாசனன் றியம்ப
எழுதியவி நாயகன் சிவந்த
பவளமத யானைபின் புவந்த முருகோனே

மிகுதமர சாகரங் கலங்க
எழுசிகர பூதரங் குலுங்க
விபரிதநி சாசரன் தியங்க அமராடி

விபுதர்குல வேழமங் கைதுங்க
பரிமளப டீரகும் பவிம்ப
ம்ருகமதப யோதரம் புணர்ந்த பெருமாளே.

512. குங்கும கற்பூர நாவியிமசல
சந்தன கத்தூரி லேபபரிமள
கொங்கைத னைக்கோவி நீடுமுகபட நகரேகை

கொண்டைத னைக்கோதி வாரிவகைவகை
துங்கமு டித்தால காலமெனவடல்
கொண்டவி டப்பார்வை காதினெதிர்பொரும் அமுதேயாம்

அங்குள நிட்டூர மாயவிழிகொடு
வஞ்சம னத்தாசை கூறியெவரையு
மன்புடை மெய்க்கோல ராகவிரகினில் உறவாடி

அன்றள வுக்கான காசுபொருள்கவர்
மங்கையர் பொய்க்காதல் மோகவலைவிழ
லன்றியு னைப்பாடி வீடுபுகுவதும் ஒருநாளே

சங்கத சக்ரீவ னோடுசொலவள
மிண்டுசெ யப்போன வாயுசுதனொடு
சம்பவ சுக்ரீவ னுதியெழுபது வெளமாகச்

சண்டக விச்சேனை யால்முனைகடல்
குன்றில டைத்தேறி மோசநிசிசரர்
தங்கிளை கெட்டோட ஏவுசரபதி மருகோனே

எங்குநி னைப்போர்கள் நேசசரவண
சிந்துர கற்பூர ஆறுமுககுக
எந்தனு டைச்சாமி நாதவயலியில் உறைவேலா
இன்புறு பொற்கூட மாடநவமணி
மண்டப விஸ்தார வீதிபுடைவளர்
இஞ்சிகு டிப்பார்வ தீசரருளிய பெருமாளே.

513. குசமாகி ஆருமலை மரைமாநு ணூலினிடை
குடிலான ஆல்வயிறு குழையூடே
குறிபோகு மீனவிழி மதிமாமு காருமலர்
குழல்கார தானகுண மிலிமாதர்
புசவாசை யால்மனது உனைநாடி டாதபடி
புலையேனு லாவிமிகு புணர்வாகிப்
புகழான பூமிமிசை மடிவா யிருதவகை
பொலிவான பாதமலர் அருள்வாயே
நிசநாத ஜோதிதிரு மருகாவு லாசமிகு
நிகழ்போத மானபர முருகோனே
நிதிஞான போதமர னிருகாதி லேயுதவு
நிபுணாநி சாசரர்கள் குலகாலா
திசைமாமு காழியரி மகவான்மு னோர்கள்பணி
சிவநாத ராலமயில் அமுதேசர்
திகழ்பால மாகமுற மணிமாட மேடையுயர்
திருவான்மி யூர்மருவு பெருமாளே.

514. குடங்கள் நிரைத்தேறு தடங்கள் குறித்தார
வடங்கள் அசைத்தார செயநீலங்
குதம்பை யிடத்தேறு வடிந்த குழைக்காது
குளிர்ந்த முகப்பார்வை வலையாலே
உடம்பு மறக்கூனி நடந்து மிகச்சாறி
யுலந்து மிகக்கோலு மகலாதே
உறங்கி விழிப்பாய பிறந்த பிறப்பேனு
முறங்கொ ளபொற்பாத மருள்வாயே
விடங்கள் கதுப்பேறு படங்க ணடித்தாட
விதங்கொள் முதற்பாய லுறைமாயன்

விலங்கை முறித்தோடி யிடங்கள் வளைத்தேறு
விளங்கு முகிற்கான மருகோனே
தடங்கொள் வரைச்சாரல் நளுங்கு மயிற்பேடை
தழங்கு மியற்பாடி யளிசூழத்
தயங்கு வயற்சாரல் குரங்கு குதித்தாடு
*தலங்க ளிசைப்பான பெருமாளே.

515. குடத்தாமரை யாமென வேயிரு
தனத்தார்மதி வாணுத லாரிருள்
குழற்காடின மாமுகில் போல்முது கலைமோதக்
குலக்கார்மயி லாமென வேகயல்
விழித்தார்கர மேல்கொடு மாமுலை
குடத்தியாழ்கிளி யாமென வேகுயில் குரலோசை
படித்தார்மயி லாமென வேநடை
நெளித்தார்பல காமுகர் வார்கலை
பழிப்பாரவ ராசையை மேல்கொடு விலைமாதர்
படிக்கார்மின லாமென வேநகை
புரித்தார்பலர் வாயிதழ் சேர்பொருள்
பறிப்பார்பழி காரிகள் நாரிகள் உறவாமோ
அடைத்தார்கட லோர்வலி ராவண
குலத்தோடரி யோர்சர ணார்சின
மழித்தார்முகி லேய்நிற ராகவர் மருகோனே
அறுத்தாரய னார்தலை யேபுர
மெரித்தாரதி லேபுல னாருயி
ரளித்தாருடல் பாதியி லேயுமை அருள்பாலா
விடத்தாரசு ரார்பதி வேரற
அடித்தாய்கதிர் வேல்கொடு சேவகம்
விளைத்தாய்குடி வாழம ரோர்சிறை மிடிதீர
விழித்தாமரை போலழ காகுற
மகட்கானவ னேஎன தாயுறை
விருத்தாசலம் வாழ்மயில் வாகன பெருமாளே.

---

*தடங்கதலிக்கான பெருமாளே.

516. குடத்தைத் தகர்த்துக் களிற்றைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்
குலத்தைக் குமைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத் துவத்துத் தவர்சோரப்
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட் டகச்சுத் தனமாதர்
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
புரித்துப் பதத்தைத் தருவாயே
கடத்துப் புனத்துக் குறத்திக் குமெத்தக்
கருத்திச் சையுற்றுப் பரிவாகக்
கனக்கப் ப்ரியப்பட் டகப்பட் டுமைக்கட்
கடைப்பட் டுநிற்கைக் குரியோனே
தடத்துற் பவித்துச் சுவர்க்கத் தலத்தைத்
தழைப்பித் தகொற்றத் தனிவேலா
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்செய்ப் பதிக்குத்
*தருக்கற் குடிக்குப் பெருமாளே.

517. குடமென ஒத்தகொங்கை குயில்மொழி ஒத்த இன்சொல்
குறமகள் வைத்த நண்பை நினைவோனே
வடவரை யுற்று றைந்த மகதெவர் பெற்ற கந்த
மதசல முற்ற தந்தி இளையோனே
இடமுடன் வைத்த சிந்தை நினைவற முத்தி தந்து
இசையறி வித்து வந்து எனையாள்வாய்
தடவரை வெற்பி னின்று சரவண முற்றெழுந்து
சமர்கள வெற்றி கொண்ட பெருமாளே.

518. குடரு நீர்க்கொழு மலமு மீத்தொரு
குறைவி லாப்பல என்பினுனும்
கொடிய நோய்க்கிட மெனவு நாட்டிய
குடிவி லேற்றுயி ரென்றுகூறும்
வடிவி லாப்புல மதனை நோக்கிய
மறலி யாட்பொர வந்திடாமுன்

*தளுக்கைக் குடிக்குட் பெருமாளே.

மதியு மூத்துன தடிக ளேத்திட
  மறுவி லாப்பொருள் தந்திடாயோ
கடிய காட்டக முறையும் வேட்டுவர்
  கருதொ ணுப்பரு வெங்கையாகிக்
கழைசெய் தோட்குற மயிலை வேட்டியர்
  களவி னற்புணர் கந்தவேளே
முடுகி மேற்பொரு மசுர ரார்ப்பெழ
  முடிய வேற்கொடு வென்றவீரா
முடிவி லாத்திரு வடிவை நோக்கிய
  முதிய மூர்த்திகள் தம்பிரானே.

519. குடருமல சலமுமிடை இடைதடியு முடையளவு
  கொழுவுமுதி ரமும்வெளிற ளறுமாகக்
கொளகொளென அளவில்புழு நெளுநெளென விளைகுருதி
  குமுகுமென இடைவழியில் வரநாறும்
உடலின்மண மலிபுழுகு தடவியணி கலமிலக
  உலகமரு ளுறவருமரிவையாரன்
பொழியவினை ஒழியமன மொழியவிரு ளொழிய என
  தொழிலிலக லறிவையருள் புரிவாயே
வடகனக சயிலமுத லியசயில மெனநெடிய
  வடிவுகொளு நெடியவிறல் மருவாரை
வகிருமொரு திகிரியென மதிமுதிய பணிலமென
  மகரசல நிதிமுழுகி விளையாடிக்
கடலுலகை அளவுசெய வளருமுகி லெனவகில
  ககனமுக டுறநிமிரு முழுநீலக்
கலபமயில் மிசையசுரர் கடகமுட னமர்பொருது
  கயிலைமலை தனின்மருவு பெருமாளே.

520. குடர்நிண மென்பு சலமல மண்டு
  குருதிந ரம்பு சீயூன்பொதிதோல்
குலவுகு ரம்பை முருடுசு மந்து
  குனகிம கிழ்ந்து நாயேன்தளரா
அடர்மத னம்பை அனையக ருங்கண்
  அரிவையர் தங்கள் தோடோய்ந்தயரா

அறிவழிகின்ற குணமற உன்றன்
அடியிணை தந்து நீயாண்டருள்வாய்
தடவியல் செந்தி விறையவ நண்பு
தருகுற மங்கை வாழ்வாம்புயனே
சரவண கந்த முருகக டம்ப
தனிமயில் கொண்டு பார்சூழ்ந்தவனே
சுடர்படர் குன்று தொளைபட அண்டர்
தொழுமொரு செங்கை வேல்வாங்கியவா
துரிதப தங்க இரதப்ர சண்ட
சொரிகடல் நின்ற சூராந்தகனே.

521. குடவிடை நீறு திடையிடை பீறிக்
குலவிய தோலத் தியினூடே
குருதியி லேசுக் கிலமது கூடிக்
குவலயம் வானப் பெரிகாலாய்
உடலெழு மாயப் பிறவியி லாவித்
துறுபிணி நோயுற் றுழலாதே
உரையடி யேனுக் கொளிமிகு நீபத்
துண திரு தாளைத் தரவேணும்
கடலிடை சூரப் படைபொடி யாகக்
கருதல ரோடப் பொரும்வேலா
கதிர்விடு வேலைக் கதிரினில் மேவிக்
கலைபல தேர்முத் தமிழ்நாடா
சடையினர் நாடப் படர்மலை யோடித்
தனிவிளை யாடித் திரிவோனே
தனிமட மானைப் பரிவுட னாத்
தழுவும்வி னோதப் பெருமாளே.

522. குடல்நிண மென்புபு லால்கமழ்
குருதிந ரம்பிவை தோலிடை
குளுகுளெ னுப்படி மூடிய மலமாசு
குதிகொளு மொன்பது வாசலை
உடையகு ரம்பையை நீரெழு
குமிழியி னுங்கடி தாகியெ அழிமாய

அடலையு டம்பைய வாவியெ
அநவர தஞ்சில சாரமில்
அவுடத மும்பல யோகமு முயலாநின்
றலமரு சிந்தையி னுங்குலம்
அலமலம் என்றினி யானுநின்
அழகிய தண்டைவி டாமலர் அடைவேனோ
இடமற மண்டுநி சாசர
ரடையம டிந்தெழு பூதரம்
இடிபட இன்பம கோததி வறிதாக
இமையவ ருஞ்சிறை போயவர்
பதியுளி லங்கவி டாதர
எழில்பட மொன்றுமொ ராயிர முகமான
விடதர கஞ்சுகி மேருவில்
வளைவதன் முன்புர நீறெழ
வெயில்நகை தந்தபு ராரிம தனகோபர்
விழியினில் வந்துப கீரதி
மிசைவள ருஞ்சிறு வாவட
விஜயபு ரந்தனில் மேவிய பெருமாளே.

523. குடிமைமனை யாட்டியும் அடிமையொடு கூட்டமும்
குலமுமிரு மாப்புமி குதியான
கொடியபெரு வாழ்க்கையி லினியபொரு ளீட்டியெ
குருடுபடு மோட்டென உடல்வீழில்
அடைவுடைவி டாச்சிறு பழையதுணி போர்த்தியெ
அரிடசுடு காட்டிடை இடுகாயம்
அழியுமள வாட்டிலுன் அமலமலர் மாப்பத
அருணசர ணாஸ்பதம் அருள்வாயே
அடியிநெடு மாத்தரு மொளமொளமொ ளாச்செ
அலறிவிழ வேர்க்குல மொடுசாய
அவுணர்படை தோற்பெழ அருவரைக ளார்ப்பெழ
அயிலலகு சேப்பெழ மறைநாலும்

உடையமுனி ஆட்பட முடுகவுணர் கீழ்ப்பட
உயரமரர் மேற்பட வடியாத
உததிகம ராப்பிள முதுகுலிச பார்த்திபன்
உலககுகுடி ஏற்றிய பெருமாளே.

**524.** குடிவாழ்க்கை அன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்ப்ர சன்ன மொழியார்கள்
குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை உணராதே
இடைநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி
இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு
னிருதாட்கள் தம்மை உணர்வேனோ
வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயிலூக்க வல்ல குமரேசா
வடிவாட்டி வள்ளி *அடிபோற்றி வள்ளி
மலைகாத்த நல்ல மணவாளா
அடிநாட்கள் செய்த பிழைநீக்கி என்னை
அருள்போற்றும் வண்மை தருவாழ்வே
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

**525.** குதலை மொழியினர் நிதிக்கொள் வாரணி
முலையை விலைசெய்வார் தமக்கு மாமயல்
கெர்ந்து கொடிததால் வருத்த மாயுறு துயராலே
குறுகி குறுகியே மிகுத்த வாவொடு
பெரிய பிரபுமா ரிடத்தி லேபதி
குலைய அடிமையா யிருத்த லாகிய ஒருபாவி
மதலை மறுகிவா விபத்தி லேவெகு
பதகர் கொடியவா ளிடத்தி லேமிக
வறுமை புகல்வதே எனக்கு மோவினி முடியாதே

*அடியேத்தி தில்லை நகர்காக்க வல்ல முருகோனே.

மருவு புலவனூர் கவிக்கு ளேசிறு
வழுவ தறைமகா சபைக்கு ளேகியெ
வகைய பெயரதா விலக்க ணுவிதி மொழிவோனே
முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்
மடிய அயிலையே விடுத்த வாகரு
முகிலை அனையதா நிறத்த மால்திரு மருகோனே
முளரி மலரானூர் சிறைக்கு ளேபுக
நிறுவி பரமனூர் செவிக்கு ளேமனு
முடிவ துணருமா றுரைத்த வாவளி மணவாளா
கதறும் அடியரார் தமக்கெ ணுளுமெ
உதவ விரைவிலே செலுத்து மாபல
கனக மயுரவா கனத்து லாவிய புயவீரா
கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
இசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலைமகா நகர்க்குள் மேவிய பெருமாளே.

526. குதறுகுர லறிவுகொடு பதறியெதிர் கதறிமிகு
குமுதமிடு பரசமயம் ஒருகோடி
குருடர்தெரி வரியதொரு பொருடெரிய நிகழ்மனது
கொடியவிரு வினையெனுமை ளறுபோக
உதறிவிசி றியகரண மரணமற விரணமற
உருகியுரை பருகியனு தினஞானம்
உணர்வுகதி பெறவுனது மிருகமத வெழினளின
உபயபத முணரும்வகை அருள்வாயே
சிதறிவெளி முழுதுமொளி திகழுமுடு படலமவை
சிறுபொறிக ளெனவுரக பிலமேழுஞ்
செகதலமு முருகசிக ரிகள்குலவு கஜபுயக
திசையுமுட னுருகவரு கடைநாளிற்
கதறுமெழு கடல்பருகி வடவைவிடு கரியபுகை
எனமுடிவில் ககனமுக டதிலோடும்
கலபமயில் மிசையசுரர் கலகமற அமர்பொருது
கயிலைமலை தனில்மருவு பெருமாளே.

527. குதிபாய்ந்தி ரத்தம் வடிதுளைத்தொக்
கிந்த்ரியக் குரம்பை வினைகூர்துர்
குணபாண்ட முற்ற கிலமெனக்கைக்
கொண்டிளைத் தயர்ந்து சுழலாதே
உதிதாம்ப ரத்தை உயிர்கெடப்பொற்
கிண்கிணிச் சதங்கை விதகீத
உபயாம்பு யப்பு ணையையினிப்பற்
றுங்கருத் தைஎன்று தருவாயோ
கதைசார்ங்க கட்கம் வளையடற்சக்
ரந்தரித் தகொண்டல் மருகோனே
கருணுஞ்ச னக்க மலவிழிப்பொற்
பைம்புனக் கரும்பின் மணவாளா
மதனுந்த கர்க்கு மகவெனப்பத்
மந்தனிற் பிறந்த குமரேசா
மதுராந்த கத்து வடதிருச்சிற்
றம்பலத் தமர்ந்த பெருமாளே.

528. குமர குருபர குணதர நிசிசர
திமிர தினகர சரவண பவகிரி
குமரி சுதபகி ரதிசுத சுரபதி குலமானுங்
குறவர் சிறுமியை மருவிய திரள்புய
முருக சரணென உருகுதல் சிறிதுமில்
கொடிய வினையனை அவலனை அசடனை அதிமோகக்
கமரில் விழவிடு மழகுடை அரிவையர்
களவி னொடுபொரு ளளவற வருளிய
கலவிஅளறிடைதுவளுறும்வெளிறனை இனிதாளக்
கருணை அடியரொ டருணையி லொருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே
தமர மிகுதிரை எறிவளை கடல்குடல்
மறுகி அலைபட விடநதி உமிழ்வன
சமுக முககண பணபணி பதிநெடு வடமாகச்

சகல உலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தரவெகு காமலர்
தளர வினியதொ ரமுதினை ஒருதனி கடையாநின்
றமரர் பசிகெட வுதவிய க்ருபைமுகில்
அகில புவனமு மளவிடு குறியவன்
அளவு நெடியவ னளவிட அரியவன் மருகோனே
அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே.

529. குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனந லுரையுதவு மியலா எனத்தினமும்
உருகாதே
குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலனை வரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்களுடைமைமன முடனேபறிப்பவர்கள்
அணைவோரும்
தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீ திநிற்பவர்கள்
தனமலியர் மனமுறிய நழுவா உழப்பியர்கண்
வலையாலே
சதிசெய்தவ ருளமகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி அவரடிமை எனமா தரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்தவருள்
தருவாயே
சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருகொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள ரணதூள் படுத்திவிடு
செருமீதே
தவனமொடு மலகைநட மிடவீர பத்திரர்கள்
அதிரநிண மொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழவிடுபேய் நிரைத்திரள்கள்
பலகோடி

திமிதமிட நரிகொடிகள் கழுகா டாத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரவமரர் பதிவாழ் வுபெற்றுலவு
முருகோனே
திருமருவு புயனயனெ டயிரா வதக்குரிசில்
அடிபரவு பழநிமலை கதிர்கா மமுற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவே ரகத்திலுறை
பெருமாளே.

530. குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு மணியேயென்
றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதினம் உனையோதும்
அமலை அடியவர் கொடிய வினைகொடும்
அபய மிடுகுரல் அறியாயோ
திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா
நமனை உயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் குருநாதா
நளின குருமலை மருவி அமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே.

531. குமுத வாச்சியர் அமுத வாக்கினர்
கோலே வேலே சேலே போலே அழகான
குழைகள் தாக்கிய விழிக ளாற்களி
கூரா வீரா தீரா மாலா யவரோடே
உமது தோட்களி லெமது வேட்கையை
ஓரீர் பாரீர் வாரீர் சேரீர் எனநீரென்
றுடைதொ டாப்பண மிடைபொ ருத்தன
மூடே வீழ்வே னீடே றாதே உழல்வேனோ

தமர வாக்கிய அமரர் வாழ்த்திய
தாதா வேமா ஞாதா வேதோ கையிலேறிச்
சயில நாட்டியர் வயலி நாட்டுறை
நாதா நோவா சாவா மூவா இளையோனே
திமிர ராக்கதர் சமர வேற்கர
தீரா வீரா நேரா தாரா உமைபாலா
திரிசி ராப்பளி மலையின் மேற்றிகழ்
தேவே கோவே வேளே வானோர் பெருமாளே.

532. கும்ப கோணமொ டாரூர்சி தம்பரம்
உம்பர் வாழ்வுறு சீகாழி நின்றிடு
கொன்றை வேணியர் மாயூர மம்பெறு சிவகாசி
கொந்து லாவிய ராமேசு ரந்தனி
வந்து பூஜைசெய் நால்வேத தந்திரர்
கும்பு கூடிய வேளூர்ப ரங்கிரி தனில்வாழ்வே
செம்பு கேசுர மாடானை யின்புறு
செந்தி லேடகம் வாழ்சோலை யங்கிரி
தென்றன் மாகிரி நாடாள வந்தவ செகநாதஞ்
செஞ்சொ லேரக மாவாவி னன்குடி
குன்று தோறுடன் மூதூர்வி ரிஞ்சைநல்
செம்பொன் மேனிய சோணாடு வஞ்சியில் வருதேவே
கம்பை மாவடி மீதேய சுந்தர
கம்பு லாவிய காவேரி சங்கமு
கஞ்சி ராமலை வாழ்தேவ தந்திர வயலூரா
கந்த மேவிய போரூர்க டம்புரி
தென்சி வாயமு மேயாய கம்படு
கண்டி யூர்வரு சாமீக டம்பணி மணிமார்பா
எம்பி ரானொடு வாதாடு மங்கைய
ரும்பர் வாணிபொ னீள்மால்ச வுந்தரி
எந்த நாள்தொறு மேர்பாக நின்றுறு துதியோதும்
இந்தி ராணிதன் மாதோடு நன்குற
மங்கை மானையு மாலாய்ம ணந்துல
கெங்கு மேவிய தேவால யந்தொறு பெருமாளே.

533. கும்பமு நிகர்த்த கொங்கையை வளர்த்த
கொஞ்சுகி ளியொத்த மொழிமாதர்
குங்கும பணிக்குள் வண்புழு குவிட்ட
கொந்தள கம்வைத்த மடவார்பால்
வம்புகள் விளைத்து நண்புகள் கொடுத்து
மங்கிந ரகத்தில் மெலியாமல்
வண்கயி லைசுற்றி வந்திடு பதத்தை
வந்தனை செய்புத்தி தருவாயே
பம்புந தியுற்ற பங்கொரு சமர்த்தி
பண்டுள தவத்தில் அருள்சேயே
பைம்புய லுடுத்த தண்டலை மிகுத்த
பந்தணை நகர்க்குள் உறைவோனே
சம்புநி ழலுக்குள் வந்தவ தரித்த
சங்கரர் தமக்கும் இறையோனே
சங்கணி கரத்த ரும்பர்ப யமுற்ற
சஞ்சல மறுத்த பெருமாளே.

534. குயிலொன் றுமொழிக் குயினின் றலையக்
கொலையின் பமலர்க் கணையாலே
குளிருந் தவளக் குலசந்த் ரவொளிக்
கொடிகொங் கையின்முத் தனலாலே
புயல்வந் தெறியக் கடனின் றலறப்
பொருமங் கையருக் கலராலே
புயமொன் றமிகத் தளர்கின் றதனிப்
புயம்வந் தணையக் கிடையாதோ
சயிலங் குலையத் தடமுந் தகரச்
சமனின் றலையப் பொரும்வீரா
தருமங் கைவனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றுமணித் திருமார்பா
பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் பதிவாழ்வே
பரமன் பணியப் பொருளன் றருளிற்
பகர்செங் கழுநிப் பெருமாளே.

535. குயிலோமொழி அயிலோவிழிகொடியோவிடைபிடியோநடை
குறியீர்தனி செறியீரினி என்றுபாடிக்
குனகாவடி பிடியாவிதழ் கடியாநகம் வகிராவுடை
குலையாவல்குல் அளையாவிரு கொங்கைமீதிற்
பயிலாமன மகிழ்மோகித சுகசாகர மடமாதர்கள்
பகையேயென நினையாதுற நண்புகூரும்
பசுபாசமு மகிலாதிக பரிபூரண புரணாகர
பதிநேருநி னருளால்மெயு ணர்ந்திடேனோ
வெயில்வீசிய கதிராயிர வருணோதய விருணாசன
விசையேழ்பரி ரவிசேயெனும் அங்கராசன்
விசிகாகவ மயில்பேடிகை படுபோதுசன்னிதியானவன்
விதிதேடிய திருவாளிய ரன்குமாரா
அயனூருறை மயிலாபல கலைமானுழை புலிதோலரி
அகிலாரம தெறிகாவிரி வண்டல்மேவும்
அதிமோகர வயனூர்மிசை திரிசேவக முருகேசுர
அமராபதி அதில்வாழ்பவர் தம்பிரானே.

536. குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலக்
குடின்பு குதுமவ ரவர்கடு கொடுமைய
ரிடும்ப ரொருவழி யிணையிலர் கசடர்கள்
குரங்க ரறிவிலர் நெறியிலர் மிருகனை விறலான
சரம்ப ருறவினை நரகனை துரகனை
யிரங்கு கலியனை பரிவுறு சடலனை
சவுந்த ரிகமுக சரவண பதமொடு மயிலேறித்
தழைந்த சிவசுடர் தனையென மனதினி
லழுந்த வுரைசெய வருமுக நகையொளி
தழைந்த நயனமு மிருமலர் சரணமு மறவேனே
இரும்பை வகுளமொ டியைபல முகில்பொழி
லுறைந்த குயிலளி யொலிபர விடமயி
லிசைந்து நடமிடு மிணையிலி புலிநகர் வளநாடா

இருண்ட குவடிடி பொடிபட வெகுமுக
டெரிந்து மகரமொ டிசைகரி குமுறுக
இரைந்த வசுரரொ டிபபரி யமபுரம் விடும்வேளே

சிரம்பொ னயனொடு முநிவர்க ளமரர்க
ளரம்பை மகளிரொ டரகர சிவசிவ
செயம்பு வெனநட மிடுபத மழகியர் குருநாதா

செழும்ப வளவொளி நகைமுக மதிநகு
சிறந்த குறமக ளிணைமுலை புதைபட
செயங்கொ டணைகுக சிவமலை மருவிய பெருமாளே.

**537.** குரவநறு மளகக்குழல் கோதிக் காட்டியெ
குலவுமிரு கயல்கள்விழி மோதித் தாக்கியெ
குமுதமல ரொளிபவள வாயைக் காட்டியெ குழையாத

குணமுறுக இனிதுபயில் கூறிக் காட்டியெ
குலையஇரு கலைநெகிழ வீசிக் காட்டியெ
குடவியிடு மரிவையர்க ளாசைப் பாட்டிலெ
கொடியேன்யான்

பொருளிளமை கலைமனமு மேகப் போக்கிய
புலையனிவ னெனவுலக மேசப் போக்கென
பொறிவழியி லறிவழிய பூதச் சேட்டைகள் பெருகாதே

புதுமலர்கள் மருவுமிரு பாதத் தாற்றியெ
பொதுவகையி லருணைநிலை நீள்கார்த் தாத்தென
புகழடிமை தனையுனது பார்வைக் காத்திட நினையாதோ

அரவமுட னறுகுமதி யார்மத் தாக்கமு
மணியுமொரு சடைமவுலி நாதர்க் கேற்கவெ
அறிவரியவொருபொருளைபோதத்தேற்றியஅறிவோனே

அழகுசெறி குழலியர்கள் வானத் தாட்டியர்
தருமமுது சரவணையில் வாவித் தேக்கியெ
அறுசிறுவ ரொருவுடல மாகித் தோற்றிய இளையோனே

சுரருலவ அசுரர்கள மாளத் தூட்பட
துயவுமுட லயிலைவிடு மாவுக் ராக்ரம
சுவறியெழு கடலுமுறை யாகக் கூப்பிட முனிவோனே

துடிமுழவு மறவரிட சேவற் காட்டினில்
துணைமலரி னணுகிதினை காவற் காத்தனை
சுரியகுழல் குறமகளை வேளைக் காத்தணை பெருமாளே.

538. குருதி கிருமிகள் சலமல மயிர்தசை
மருவு முருவமும் அலமலம் அழகொடு
குலவு பலபணி பரிமள மறுசுவை மடைபாயல்
குளிரி லறையக மிவைகளும் அலமலம்
மனைவி மகவனை அநுசர்கள் முறைமுறை
குனகு கிளைஞர்க ளிவர்களும் அலமலம் ஒருநாளு
சுருதி வழிமொழி சிவகலை யலதினி
உலக கலைகளும் அலமலம் இலகிய
தொலைவி லுனைநினை பவருறவலதினி அயலார்பால்
சுழல்வ தினிதென வசமுடன் வழிபடு
முறவும் அலமலம் மருளலை கடல்கழி
துறைசெ லறிவினை எனதுள மகிழ்வுற அருள்வாயே
விருது முரசுகள் மொகுமொகு மொகுவென
முகுற ககபதி முகில்திகழ் முகடதில்
விகட இறகுகள் பறையிட அலகைகள் நடமாட
விபுத ராகர சிவசிவ சரணென
விரவு கதிர்முதி ரிமகரன் வலம்வர
வினைகொள் நிசிசரர் பொடிபட அடல்செயும் வடிவேலா
மருது நெறுநெறு நெறுவென முறிபட
உருளு முரலொடு தவழரி மருகசெ
வனச மலர்சுனை புலிநுழை முழையுடை யவிராலி
மலையி லுறைகிற அறுமுக குருபர
கயலு மயிலையு மகரமு முகள்செநெல்
வயலி நகரியி லிறையவ அருள்தரு பெருமாளே.

539. குருதிசலந் தோலுங் குடலுடனென் பாலுங்
குலவியெழுங் கோலந் தனில்மாயக்
கொடுமையுடன் கோபங் கடுவிரகஞ் சேருங்
குணவுயிர்கொண் டேகும் படிகாலன்

கருதிநெடும் பாசங் கொடுவரநின் றாயுங்
கதறமறந் தேனென் றகலாமுன்
கமலமலர்ந் தேறுங் குகனெனவும் போதுன்
கருணைமகிழ்ந் தோதுங் கலைதாராய்
நிருதர்தளஞ் சூழும் பெரியநெடுஞ் சூரன்
நினைவுமழிந் தோடும் படிவேலால்
நிகரிலதம் பாரோன் றிமையவர்நெஞ் சால்நின்
நிலைதொழநின் றேமுன் பொருவீரா
பருதியுடன் சோமன் படியையிடந் தானும்
பரவவிடந் தானுண் டெழுபாரும்
பயமறநின் றாடும் பரமருளங் கூரும்
பழமறையன் றோதும் பெருமாளே.

540. குருதி தோலி னூல்மேவு குடிலி லேத மாமாவி
குலைய ஏம னூலேவி விடுகாலன்
கொடிய பாச மோர்சூல படையி னோடு கூசாத
கொடுமை நோய்கொ டேகோலி எதிராமுன்
பருதி சோமன் வானாடர் படியு ளோர்கள் பாலாழி
பயமு றாமல் வேல்வேவும் இளையோனே
பழுது றாத பாவாண ரெழுதொ ணாத தோள்வீர
பரிவி னோடு தாள்பாட அருள்தாராய்
மருது நீற தாய்வீழ வலிசெய் மாயன் வேயூதி
மடுவி லானை தான்மூலம் எனவோடி
வருமு ராரி கோபாலர் மகளிர் கேள்வன் மாதாவின்
வசன மோம றாமாயன் மருகோனே
கருதொ ணாத ஞானாதி எருதி லேறு காபாலி
கடிய பேயி னோடாடி கருதார்வெங்
கனவில் மூழ்க வேகாடி புதல்வ கார ணாதீத
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

541. குருதிபு லாலென்பு தோன ரம்புகள்
கிருமிகள் மாலம்பி சீத மண்டிய
குடர்நிணம் ரோமங்கள் மூளை யென்பன பொதிகாயக்

குடிவிடை யோரைந்து வேட ரைம்புல
அடவியி லோடுந்து ராசை வஞ்சகர்
கொடியவர் மாபஞ்ச பாத கஞ்செய அதனாலே
சுருதிபு ராணங்க ளாக மம்பகர்
சரியைக்ரி யாவண்டர் பூசை வந்தனை
துதியொடு நாடுந்தி யான மொன்றையு முயலாதே
சுமடம தாய்வம்பு மால்கொ ளுந்திய
திமிரரொ டேபந்த மாய்வ ருந்திய
துரிசற ஆநந்த வீடு கண்டிட அருள்வாயே
ஒருதனி வேல்கொண்டு நீள்க்ர வுஞ்சமும்
நிருதரு மாவுங்க லோல சிந்துவும்
உடைபட மோதுங்கு மார பங்கய கரவீரா
உயர்தவர் மாவும்ப ரான அண்டர்கள்
அடிதொழு தேமன்ப ராவு தொண்டர்கள்
உளமதில் நாளுங்கு லாவி யின்புற உறைவோனே
கருதிய ஆறங்க வேள்வி யந்தணர்
அரிகரி கோவிந்த கேச வென்றிரு
கழல்தொழு சீரங்க ராச ரன்புறு மருகோனே
கமலனு மாகண்ட லாதி யண்டரு
மெமதுபி ரானென்று தாள்வ ணங்கிய
கரிவனம் வாழ்சம்பு நாதர் தந்தருள் பெருமாளே.

542. குருதி மலசல மொழுகு நரகுட
லரிய புழுவது நெளியு முடல்மத
குருபி நிணசதை விளையு முளைசளி யுடனூடே
குடிக ளெனபல குடிகை வலிகொடு
குமர வலிதலை வயிறு வலியென
கொடுமை யெனபிணி கலக மிடுமிதை யடல்பேணி
மருவி மதனனுள் கரிய புளகித
மணிய சலபல கவடி மலர்புனை
மதன கலைகொடு குவடு மலைதனில் மயலாகா
மனது துயரற வினைகள் சிதறிட
மதன பிணியொடு கலைகள் சிதறிட
மனது பதமுற வெனது தலைபத மருள்வாயே

நிருதர் பொடிபட அமரர் பதிபெற
நிசித அரவளை முடிகள் சிதறிட
நெறிய கிரிகட லெரிய வுருவிய கதிர்வேலா
நிறைய மலர்பொழி யமரர் முநிவரும்
நிருப குருபர குமர சரணென
நெடிய முகிலுடல் கிழிய வருபரி மயிலோனே
பருதி மதிகனல் விழிய சிவனிட
மருவு மொருமலை யரையர் திருமகள்
படிவ முகிலன அரியி னிளையவ ளருள்பாலா
பரம கணபதி யயலின் மதகரி
வடிவு கொடுவர விரவு குறமக
ளபய மெனவணை பழநி மருவிய பெருமாளே.

543. குருதிமூளை ஊனூறு மலமருத தோல்மூடு
குடிசைகோழை மாசூறு குழிநீர்மேற்
குமிழிபோல நோராகி அழியுமாயை ஆதார
குறடுபோறு நாய்கூளி பலகாகம்
பருகுகாய மேபேணி அறிவிலாம லேவீணில்
படியின்மூழ்கி யேபோது தளிர்வீசிப்
பாவுநாட காசார கிரியையாளர் காணாத
பரமஞான வீடேது புகல்வாயே
எரியின்மேனி நீறுடு பாமர் பாவில் வாழ்வான
இமயமாது மாசூலி தருபாலா
எழுமை யீறு காணாதர் முனிவரோடு வானாட
ரிசைகளோடு பாராட மகிழ்வோனே
அரவினோடு மாமேரு மகரவாரி பூலோக
மதிரநாக மோரேழு பொடியாக
அலகைபூத மாகாளி சமரபூமி மீதாட
அசுரர்மாள வேலேவு பெருமாளே.

544. குருதி யொழுகி அழுகு மவல குடிலை இனிது புகலாலே
குலவு மினிய கலவி மகளிர் கொடிய கடிய விழியாலே
கருது மெனது விரக முழுது கலக மறவி அழியாமுன்
கனக மயிலி னழகு பொழியகருணைமருவி வரவேணும்

பரிதி சுழல மருவு கிரியை பகிர எறிசெய் பணிவேலா
பணில உததி அதனி லசுரர் பதியை முடுக வரும்வீரா
இரதிபதியை எரிசெய் தருளுமிறைவர்குமர முருகோனே
இலகுகமலமுகமுமழகுமெழுத அரிய பெருமாளே.

545. குருவி எனப்பல கழுகு நரித்திரள்
அரிய வனத்திடை மிருக மெனப்புழு
குறளை எனக்கரி மாமு மெனத்திரி உறவாகா
குமரி கலித்துறை முழுகி மனத்துயர்
கொடுமை எனப்பிணி கலக மிடத்திரி
குலைய னெனப்புலை கலிய னெனப்பலர் நகையாமல்
மருவு புயத்திடை பணிக ளணப்பல
கரிப ரிசுற்றமெய் கலைகள் தரித்தொரு
மதன சரக்கென கனகபலக்குட னதுதேடேன்
வரிய பதத்தினி னருவி இருப்பிடம்
அமையு மெனக்கிட முனது பதச்சரண்
மருவு திருப்புக ழருள எனக்கினி அருள்வாயே
விருது தனத்தன தனன தனத்தன
விதமி திமித்திமி திமித திமித்திமி
விகிர்த டடுட்டுடு ரிரிரி எனக்குகு வெகுதாளம்
வெருவ முகிழ்த்திசை உரகன் முடித்தலை
நெறுநெ றெனத்திசை அதிர அடைத்திட
மிகுதி கெடப்பொரு மசுரர் தெறித்திட விடும்வேலா
அரிய திரிப்புர மெரிய விழித்தவன்
அயனை முடித்தலை அரியு மழுக்கையன்
அகில மனைத்தையு முயிரு மளித்தவன் அருள்சேயே
அமண ருடற்கெட வசியி லழுத்திவிண்
அமரர் கொடுத்திடு மரிவை குறத்தியொ
டழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமாளே.

546. குருவு மடியவ ரடியவ ரடிமையு
மருண மணியணி கணபண விதகர
குடில செடிலினு நிகரென வழிபடு குணசீலர்

குழுவி லொழுகுதல் தொழுகுதல் விழுகுத
லழுகு தலுமிலி நலமிலி பொறையிலி
குசல கலையிலி தலையிலி நிலையிலி விலைமாதர்
மருவு முலையெனு மலையினி லிடறியு
மளக மெனவளர் ரடவியில் மறுகியு
மகர மெறியிரு கடலினில் முழுகியு முழலாமே
வயலி நகரியி லருள்பெற மயில்மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே
உருவு பெருகயல் கரியதொர் முகிலெனு
மருது நெறிபட முறைபட வரைதனி
லுரலி னொடுதவழ் விரகுள இளமையு மிகமாரி
உமிழ நிரைகளி னிடர்கெட வடர்கிரி
கவிகை யிடவல மதுகையு நிலைகெட
வுலவில் நிலவறை யுருவிய வருமையு மொருநூறு
நிருப ரணமுக வரசர்கள் வலிதப
விசயன் ரதமுதல் நடவிய வெளிமையு
நிகில செகதல முரைசெயு மரிதிரு மருகோனே
நிலவு சொரிவளை வயல்களு நெடுகிய
குடக தமனியு நளினமு மருவிய
நெருவை நகருறை திருவுரு வழகிய பெருமாளே.

547. குரைகட லுலகினில் உயிர்கொடு
போந்து கூத்தாடு கின்ற குடில்பேணிக்
குகையிட மருவிய கருவிழி
மாந்தர் கோட்டாலை இன்றி யவிரோதம்
வரவிரு வினையற உணர்வொடு
தூங்கு வார்க்கேவி ளங்கு மநுபூதி
வடிவினை உனதழ கியதிரு
வார்ந்த வாக்கால்மொ ழிந்த ருளவேணும்
திரள்வரை பகமிகு குருகுல
வேந்து தேர்ப்பாகன் மைந்தன் மறையோடு

தெருமா நிசிசரர் மனைவியர்
சேர்ந்து தீப்பாய இந்த்ர — புரிவாழ
விரிதிரை எரியெழ முதலுற
வாங்கு வேற்கார கந்த — புவியேழும்
மிடிகெட விளைவன வளவயல்
சூழ்ந்த வேப்பூர மர்ந்த — பெருமாளே.

548. குலைத்துமயிர்க் கலைத்துவளைக்
கழுத்துமணித் தனத்தின்மிசைக்
குறித்தவிழிக் கயற்சுழலப் — பிறைபோலக்
குனித்தநுதற் புரட்டிநகைத்
துருக்கிமயற் கொளுத்தியிணைக்
குழைச்செவியிற் றழைப்பமணத் — தனபாரப்
பொலிப்புமதத் தெடுத்தகரிக்
குவட்டுமுலைப் பசப்புமிகப்
புனைத்ததுகிற் பிடித்தவிடைப் — பொதுமாதர்
புயத்தில்வளைப் பிலுக்கில்நடைக்
குலுக்கிலறப் பசப்பிமயற்
புகட்டிவிடத் தழிப்பவருக் — குறவாமோ
தலத்தனுவைக் குனித்தொருமுப்
புரத்தைவிழக் கொளுத்திமழுத்
தரித்துவலிக் கரித்துகிலைப் — பரமாகத்
தரித்துதவச் சுரர்க்குலமுற்
பிழைக்கமிடற் றடக்குவிடச்
சடைக்கடவுட் கினித்தபொருட் — பகர்வோனே
சிலுத்தசுரர்க் கெலித்துமிகக்
கொளுத்திமறைத் துதிக்கவதிற்
செழிக்கவருட் கொடுத்தமணிக் — கதிர்வேலா
தினைப்புனமிற் குறத்திமகட்
டனத்தின்மயற் குளித்துமகிழ்த்
திருத்தணியிற் றரித்தபுகழ்ப் — பெருமாளே.

549. குலையமயி ரோதி குவியவிழி வீறு
குருகினிசை பாடி முகமீதே
குறுவியர்வு லாவ அமுதினினி தான
குதலையுமொ ராறு படவேதான்
பலவிதவி னோத முடனுபய பாத
பரிபுரமு மாட அணைமீதே
பரிவுதரு மாசை விடமனமொ வாத
பதகனையு மாள நினைவாயே
சிலைமலைய தான பரமர்தரு பால
சிகிபரிய தான குமரேசா
திருமதுரை மேவு மமணர்குல மான
திருடர்கழு வேற வருவோனே
கலின்வடிவ மான அகலிகைபெ ணான
கமலபத மாயன் மருகோனே
கழனிநெடு வாழை கமுகொடிய மோது
கரபுரியில் வீறு பெருமாளே.

550. குவலய மல்கு தவலிகள் முல்லை
குளிர்நகை சொல்லு முதுபாகு
குழையிள வள்ளை இடைசிறு வல்லி
குயமுலை கொள்ளை விலைமேவி
கவலைசெய் வல்ல தவலரு முள்ள
கலவியில் தெள்ளு கவிமாலை
கடிமல ரைய அணிவன செய்ய
கழலிணை பைய அருள்வாயே
தவநெறி உள்ளு சிவமுனி துள்ளு
தனியுழை புள்ளி உடனடித்
தருபுன வள்ளி மலைமற வள்ளி
தருதினை மெள்ள நுகர்வோனே
அவநெறி சொல்லு மவரவை கொல்லு
மழகிய வெள்ளி நகர்வாழ்வே
அடையலர் செல்வ மளறிடை செல்ல
அமர்செய வல்ல பெருமாளே.

551. குவளைக் கணைதொட் டவனுக் குமுடிக்
குடையிட் டகுறைப் பிறையாலே
குறுகுற் றவலர்த் தெரிவைக் குமொழிக்
குயிலுக் குமினித் தளராதே
இவளைத் துவளக் கலவிக் குநயத்
திறுகத் தழுவிப் புயமீதே
இணையற் றழகிற் புனையக் கருணைக்
கினிமைத் தொடையைத் தரவேணும்
கவளக் கரடக் கரியெட் டலறக்
கனகக் கிரியைப் பொரும்வேலா
கருதிச் செயலைப் புயனுக் குருகிக்
கலவிக் கணயத் தெழுமார்பா
பவளத் தரளத் திரளக் குவைவெற்
பவையொப் புவயற் புறமீதே
பணிலத் திரள்மொய்த் ததிருத் தணிகைப்
பதியிற் குமரப் பெருமாளே.

552. குவளை பூசல்வி ளைத்திடு மங்கயல்
கடுவ தாமெனு மைக்கண்ம டந்தையர்
குமுத மூறமு தத்தைநு கர்ந்திசை பொருகாடை
குயில்பு றமயில் குக்கில்சு ரும்பினம்
வனப தாயுத மொக்குமெ னும்படி
குரல்வி டாவிரு பொற்குட மும்புள கிதமாகப்
பவள ரேகைப டைத்தத ரங்குறி
உறவி யாளப டத்தைஅ ணைந்துகை
பரிச தாடன மெய்க்கர ணங்களின் மதநூலின்
படியி லேசெய்து ருக்கிமு யங்கியெ
அவச மாய்வட பத்ரநெ டுஞ்சுழி
படியு மோகச முத்ரமு ழுந்துதல் ஒழிவேனோ
தவள ரூபச ரச்வதி இந்திரை
ரதிபு லோமசைக் ருத்திகை ரம்பையர்
சமுக சேவித துர்க்கைப யங்கரி புவனேசை

சகல காரணி சத்திப ரம்பரி
இமய பார்வதி ருத்ரிணி ரஞ்சனி
சமய நாயகி நிட்களி குண்டலி எமதாயி
சிவைம நோன்மணி சிற்சுக சுந்தரி
கௌரி வேதவி தக்ஷிணி அம்பிகை
த்ரிபுரை யாமளை சிற்பரி தந்தருள் முருகோனே
சிகர கோபுர சித்திர மண்டப
மகர தோரண ரத்நவ லங்க்ருத
திரிசி ராமலை அப்பர்வ ணங்கிய பெருமாளே.

**553.** குவளை பொருதிரு குழையை முடுகிய
கோல வேல்விழி மடவார்தங்
கொடிய ம்ருகமத புளக தனகிரி
கூடி நாடொறு மயலாகித்
துவள உருகிய சரச விதமது
சோர வாரிதி அலையூடே
சுழலு மெனதுயிர் மவுன பரமசு
கோம கோததி படியாதோ
கவள கரதல கரட விகடக
போல பூதர முகமான
கடவுள் கணபதி பிறகு வருமொரு
கார ணாகதிர் வடிவேலா
பவள மாகத கனக வயிரக
பாட கோபுர அரிதேரின்
பரியு மிடறிய *புரிசை தழுவிய
பாகை மேவிய பெருமாளே.

**554.** குழல டவிமுகில் பொழில்வி ரவினுதல்
குமுத வதரமு றுவலாரம்
குழைம கரம்வளை மொழிகு யிலமுது
குயமு ளரிமுகை கிரிசூது

*பழநி மலைவரு பாவ லோர்புகழ் பெருமாளே.

விழிக யலயில்ப கழிவ ருணிகரு
விளைகு வளைவிடம் எனநாயேன்
மிகவ ரிவையரை அவநெ றிகள்சொலி
வெறிது ளம்விதனம் உறலாமோ
கழல்ப ணியவினை கழல்ப ணியையணி
கழல்ப ணியவருள் மயில்வீரா
கமலை திருமரு கமலை நிருதரு
கமலை தொளைசெய்த கதிர்வேலா
பழனி மலைவரு பழநி மலைதரு
பழநி மலைமுருகவிசாகா
பரவு பரவுகொல் பரவை வணஅரி
பரவு மிமையவர் பெருமாளே.

555. குழவியுமாய் மோகமோகித குமரனுமாய் வீடுகாதலிக்
கொழுநனுமாய் நாடுகாடொடு தடுமாறிக்
குணமொடுகூ னீடுமாகிய கிழவனுமா யாவிபோய்விட
விறகுடனே தூளியாவதும் அறியாதாய்
பழையசடா தாரமேனிகழ் கழியுடல்கா ணநிராதர
பரிவிலிவா ஞலைநாடொறு மடைமாறிப்
பலபலவாம் யோகசாதக உடல்கொடுமா யாதபோதக
பதியழியா வீடுபோயினி அடைவேனோ
எழுகடல்தீ மூளமேருவு மிடிபடவே தாவும்வேதமு
மிரவியும்வாய் பாறியோடிட முதுசேடன்
இருளறுபா தாளலோகமு மிமையமுநீ ருகவாள்கிரி
இருபிளவாய் வீழுமாதிர மலைசாய
அழகியமா பாகசாதன னமாருமூர் பூதமாறுசெய்
அவுணர்தமா சேனைதூளெழ விளையாடி
அமரினமே வாதசூரரை அமர்செயும்வே லாயுதாவுயர்
*அருணையில்வாழ் வாகமேவிய பெருமாளே.

556. குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தின்சந் தநற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே

*தணிகையில் வாழ்வாக மேவிய பெருமாளே.

குழைங்குஞ்செங் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் தழைக்குஞ்சிங் கியாலே

உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டுடற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே

உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக்கொன்றுஞ் சிவக்குந்தண்
டியர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்

தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தாத்தஞ்செம் புயத்தொன்றும் பெருமானர்

தனிப்பங்கின் புறத்தின்செம்
பாத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே

கழைக்குங்குஞ் சரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதித்தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்திண் புயவேளே

கறுக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பிளிற்றங்கும் பெருமாளே.

557\. குறித்தநெஞ் சாசை விரகிகள்
நவிற்றுசங் கீத மிடறிகள்
குதித்தரங் கேறு நடனிகள் எவரோடும்

குறைப்படுங் காதல் குனகிகள்
அரைப்பணங் கூறு விலையினர்
கொலைக்கொடும் பார்வை நயனிகள் நகரேகை

பொறித்தசிங் கார முலையினர்
வடுப்படுங் கோவை யிதழிகள்
பொருட்டினந் தேடு கபடிகள் வழிசோரப்

புறப்படும் பாவ சொருபிகள்
உருக்குசம் போக சாசிகள்
புணர்ச்சிகொண் டாடு மருளது தவிர்வேனோ
நெறித்திரண் டாறு கரமலர்
மணத்தபைங் கோதை வளைகுழல்
நிரைத்திடுஞ் சோதி வனசரி மணவாளா
நெருக்குமிந்த்ராதி யமரர்கள்
வளப்பெருஞ் சேனை யுடையவர்
நினைக்குமென் போலு மடியவர் பெருவாழ்வே
செறித்தமந் தாரை மகிழ்புனை
மிகுத்ததண் சோலை வகைவகை
தியக்கியம் பேறு நதியது பலவாறும்
திரைக்கரங் கோலி நவமணி
கொழித்திடுஞ் சாலி வயல்மிகு
திருக்குரங் காடு துறையுறை பெருமாளே.

558. குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே
குதட்டியிதழ்க் கடித்துதவிக்
கயற்கடையிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துநகக் குறியாலே
பொறித்ததனத் தனைத்துமனச்
செருக்கினர்கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்
புலைத்தலையிற் செலுத்துமனப்
ப்ரமத்தையறப் ப்ரசித்தமுறப்
புரித்தருளித் திருக்கழலைத் தருவாயே
பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் திருநீறு

பரப்புமனத் திருப்பதிகக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் கவிராசா

செறித்தசடைச் சசித்தரியத்
தகப்பன்மதித் துகப்பனெனச்
சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே

திகழ்ப்படுசெய்ப் பதிக்குளெனைத்
தடுத்தடிமைப் படுத்தவருட்
டிருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே.

559. குறிப்பரிய குழற்குமதி நுதற்புருவ விலுக்குமிரு
குழைக்கும்வடு விழிக்குமெழு குமிழாலும்
கொடிப்பவள இதழ்க்குமிகு சுடர்த்தரள நகைக்குமமு
தினுக்குமிக உறத்தழுவு குறியாலும்
அறப்பெரிய தனக்குமன னடைக்குமினி னிடைக்குமல
ரடிக்குமிள நகைக்குமுளம் அயராதே
அகத்தியனொ டுரைத்தபொரு ளளித்தருளி அரிப்பிரம
ரளப்பரிய பதக்கமலம் அருள்வாயே
கறுத்தடரு மரக்கரணி கருக்குலைய நெருக்கியொரு
கணத்திலவர் நிணத்தகுடல் கதிர்வேலாற்
கறுத்தருளி அலக்கணுறு சுரர்க்கவர்கள் பதிக்குரிமை
அளித்திடரை அறுத்தருளும் அயில்வீரா
செறுத்துவரு கரித்திரள்கள் திடுக்கிடவல் மருப்பையரி
சினத்தினொடு பறித்தமர்செய் பெருகானிற்
செலக்கருதி அறக்கொடிய சிலைக்குறவர் கொடித்தனது
சிமிழ்த்தனமு னுறத்தழுவு பெருமாளே.

560. குறைவதின்றி மிக்க சலமெலும்பு துற்ற
குடிலிலொன்றி நிற்கும் உயிர்மாயம்
குலைகுலைந்து தெர்ப்பை இடைநினைந்து நிற்ப
கொடியகொண்ட லொத்த உருவாகி
மறலிவந்து துட்ட வினைகள்கொண்டலைத்து
மரணமென்ற துக்க மணுகாமுன்

மனமிடைஞ்ச லற்று னடிநினைந்து நிற்க
மயிலில்வந்து முத்தி தரவேணும்
அறுகுமிந்து மத்த மலையெறிந்த அப்பு
மணிசிறந்த புட்பம் அதுசூடி
அருநடஞ்செ யப்ப ரருளிரங்கு கைக்கு
மரியவின்சொல் செப்பு முருகோனே
சிறுகுலந்த னக்கு ளறிவுவந்து தித்த
சிறுமிதன்த னத்தை அணைமார்பா
திசைமுகன்தி கைக்க அசுரரன்ற டைத்த
சிறைதிறந்து விட்ட பெருமாளே.

561. குனகியொரு மயில்போல வாராம னோலீலை
விளையவினை நினையாம லேயேகி மீளாத
கொடியமன தநியாய மாபாத காபோதி எனஆசைக்
கொளுவஅதில் மயலாகி வீறோடு போய்நீள
மலரமளி தனிலேறி யாமாறு போமாறு
குலவிநல மொழிகூறி வாரேறு பூணார முலைமூழ்கி
மனமுருக மதராஜ கோலாடு மாபூசல்
விளையவிழி சுழலாடி மேலோதி போய்மீள
மதிவதன மொளிவீச நீராள மாய்மேவி அநுராக
வகைவகையி லதிமோக வாராழி ஊடான
பொருளளவ தள்வாக யாரோடு மாலான
வனிதையர்கள் வசமாகு நாயேனு மீடேற அருள்வாயே
எனதுமொழி வழுவாமல் நீயேகு கான்மீதி
லெனவிரகு குலையாத மாதாவு நேரோத
இசையுமொழி தவறாம லேயேகி மாமாதும்
இளையோனும்
இனிமையொடு வருமாய மாரீச மானைவி
குலையவரு கரதூஷ ணாவீரர் போர்மாள
இறுகிநெடு மரமேழு தூளாக வேவாலி உயிர்சீறி
அநுமனொடு கவிகூட வாராக நீராழி
அடைசெய்தணை தனிலேறி மாபாவி ஊர்மேவி
அவுணர்கிளை கெடநூறி ஆலால மாகோப நிருதேசன்

அருணமணி திகழ்பார வீராக ரர்மோலி
ஒருபதுமொர் கணைவீழ வேமோது போராளி
அடல்மருக குமரேச மேலாய வானோர்கள் பெருமாளே.

**562.** குன்றுங் குன்றுஞ் செண்டுங் கன்றும்
படிவளர் முலையினில் ம்ருகமத மொழுகியர்
இந்துஞ் சந்தந் தங்குந் தண்செங்
கமலமு மெனவொளிர் தருமுக வநிதையர்
கொஞ்சுங் கெஞ்சுஞ் செஞ்சும் வஞ்சஞ்
சமரச முறவொரு தொழில்வினை புரிபவர் விரகாலும்

கும்பும் பம்புஞ் சொம்புந் தெம்புங்
குடியென வளர்தரு கொடியவர் கடியவர்
எங்கெங் கெம்பங் கென்றென் றென்றுந்
தனதுரி மையதென நலமுட னணைபவர்
கொஞ்சந் தங்கின் பந்தந் தென்றன்
பொருளுள தெவைகளு நயமொடு கவர்பவர் மயலாலும்

என்றென் றுங்கன் றுந்துன் புங்கொண்
டுனதிரு மலரடி பாவிட மனதினில்
நன்றென் றுங்கொண் டென்றுஞ் சென்றுந்
தொழுமகி மையினிலை உணர்வினி னருள்பெற
இன்பும் பண்புந் தெம்புஞ் சம்பந்
தமுமிக வருள்பெற விடைதரு விதமினி அருள்வாயே

எங்குங் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறு மலகையை
வென்றுங் கொன்றுந் துண்டந் துண்டஞ்
செயுமரி யொருமுறை இரணிய வலனுயிர்
நுங்குஞ் சிங்கம் வங்கந் தன்கண்
துயில்பவ னெகினனை உதவிய கருமுகில் மருகோனே

ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்றுந்
தொளைபட மதகரி முகனுடல் நெரிபட
டுண்டுண் டுண்டுண் டிண்டிண் டிண்டிண்
டிடியென விழுமெழு படிகளு மதிர்பட

ஓண்சங் கஞ்சஞ் சஞ்சஞ் சஞ்சென்
றொலிசெய மகபதி துதிசெய அசுரரை அடுவோனே
உன்றன் தஞ்சந் தஞ்சந் தஞ்சஞ்
சிவனருள் குருபர எனமுநி வரர்பணி
யுந்தொந் தந்தொந் தந்தொந் தந்தென்
றொலிபட நடமிடு பரனரு ளறுமுக
உண்கண் வண்டுங் கொண்டுந் தங்கும்
விரைபடு குரவல ரலர்தரு மெழில்புனை புயவீரா
அன்றென் றுென்றுங் கொண்டன் பின்றங்
கடியவர் தமையிகழ் சமணர்கள் கழுவினில்
அங்கஞ் சிந்தும் பங்கந் துஞ்சும்
படியொரு தொகுதியி னுரைநதி எதிர்பட
அன்பின் பண்பெங் குங்கண் டென்பின்
அரிவையை எதிர்வர விடுகவி புகல்தரு திறலோனே
அண்டங் கண்டும் பண்டுண் டும்பொங்
கமர்தனில் விஜயவ னிரதமை நடவிய
துங்கன் வஞ்சன் சங்கன் தங்கைக்
கொருமகன் முனிதழல் வருதகர் இவர்வல
அங்கங் கஞ்சஞ் சங்கம் பொங்குங்
கயனிறை வளமுறு சிவகிரி மருவிய பெருமாளே.

563. கூசா தேபா ரேசா தேமால்
கூறு நூல்கற் றுளம்வேறு
கோடா தேவேல் பாடா தேமால்
கூர்கூ தாளத் தொடைதோளில்
வீசா தேபேர் பேசா தேசீர்
வேதா தீதக் கழல்மீதே
வீழா தேபோய் நாயேன் வாணாள்
வீணே போகத் தகுமோதான்
நேசா வானோ ரீசா வாமா
நீபா கானப் புனமானை
நேர்வா யார்வாய் சூர்வாய் சார்வாய்
நீள்கார் சூழ்கற் பகசாலத்

தேசா தீனு தீனு ரீசா
சீரா ரூரிற் பெருவாழ்வே
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

**564.** கூந்தல விழ்த்துமு டித்துமி னுக்கிகள்
பாய்ந்தவி ழிக்குழை இட்டுமி ரட்டிகள்
கோம்புப டைத்தமொ ழிச்சொல்ப ரத்தையர் புயமீதே
கோங்குப டைத்தத னத்தைய ழுத்திகள்
வாஞ்சைஉ றத்தழு விச்சிலு கிட்டவர்
கூன்பிறை ஒத்தந கக்குறி வைப்பவர் பலநாளும்
ஈந்தபொ ருட்பெற இச்சை உரைப்பவர்
ஆந்துணை அற்றழு கைக்குர லிட்டவர்
ஈங்கிசைஉற்றவலக்குணமட்டைகள் பொருள்தீரில்
ஏங்கிஇ டைக்கடை யிற்றளி வைப்பவர்
பாங்குக லக்கரு ணைக்கழல் பெற்றிட
ஈந்திலை எப்படி நற்கதி புக்கிடல் அருள்வாயே
காந்தள்ம லர்த்தொடை இட்டெதிர் விட்டொரு
வேந்துகு ரக்கர ணத்தொடு மட்டிடு
காண்டிப அச்சுத னுத்தமசற்குணன் மருகோனே
காங்கிசை மிக்கம றக்கொடி வெற்றியில்
வாங்கிய முக்கனி சர்க்கரை மொக்கிய
கான்கனி முற்கியல் கற்பக மைக்கரி இளையோனே
தேந்தினை வித்தின ருற்றிட வெற்றிலை
வேங்கைம ரத்தெழி லைக்கொடு நிற்பவ
தேன்சொ லியைப்புண ரப்புன முற்றுறை குவைவானத்
தீண்டுக ழைத்திர ளுற்றது றற்றிடு
வேங்கைத னிற்குவ ளைச்சுனை சுற்றலர்
சேர்ந்ததி ருத்தணி கைப்பதி வெற்புறை பெருமாளே.

**565.** கூந்த லாழவி ரிந்து சரிந்திட
காந்து மாலைகு லைந்து பளிங்கிட
கூர்ந்த வாள்விழி கெண்டை கலங்கிட கொங்கையாகும்

கோங்க மாமுகை பொங்கக லம்பெறு
காந்தள் மேனிம ருங்குது வண்டிட
கூர்ந்த ஆடைகு லைந்து புரண்டிர சங்கள்பாயச்
சாந்து வேர்வின ழிந்தும ணந்தப
மோங்க வாவில்க லந்து முகங்கொடு
தான்ப லாசுளை யின்சுவைகண்டித ழூண்டுமோகம்
தாம்பு றுமயி லின்குரல் கொஞ்சிட
வாஞ்சை மாதருடன் புளகங்கொடு
சார்ந்து நாயென ழிந்துவிழுந்துடல் மங்குவேனோ
தீந்த தோதக தந்தன திந்திமி
ஆண்ட பேரிகை துந்துமி சங்கொடு
சேர்ந்த பூரிகை பம்பைதவண்டைகள் பொங்குசூரைச்
சேண்கு லாமகு டம்பொடி தம்பட
வோங்க வேழ்கட லுஞ்சுவ றங்கையில்
சேர்ந்த வேலது கொண்டுநடம்பயில் கந்தவேளே
மாந்த ளிறுவ னங்குயில் கொஞ்சிட
தேங்கு வாழைக ரும்புகள் விஞ்சிடு
வான்கு லாவுசி தம்பரம் வந்தமர் செங்கைவேலா
மாண்ப்ர காசத னங்கிரி சுந்தர
மேய்ந்த நாயகி சம்பைம ருங்குபொன்
வார்ந்த ரூபிகு றம்பெண் வணங்கிய தம்பிரானே.

566. கூரிய கடைக்க ணாலு மேருநிக ரொப்ப தான
கோடத னில்மெத்த வீறு முலையாலும்
கோபவ தரத்தி னாலு மேவிடு விதத்து ளால
கோலவு தரத்தி னாலு மொழியாலும்
சீரிய வளைக்கை யாலு மேகலை நெகிழ்ச்சி யேசெய்
சீருறு நுசுப்பி னாலும் விலைமாதர்
சேறுத னினித்த மூழ்கி நாளவ மிறைத்து மாயை
சேர்தரு முளத்த னாகி யுழல்வேனோ
தாரணி தனக்குள் வீறி யேசம ரதுட்ட னான
ராவணன் மிகுத்த தானை பொடியாகச்

சாடுமு வணப்ப தாகை நீடுமு கிலொத்த மேனி
தாதுறை புயத்து மாயன் மருகோனே
வாரண முரித்து மாதர் மேகலை வளைக்கை நாண
மாபலி முதற்கொ ணுதன் முருகோனே
வாருறு தனத்தி னார்கள் சேருமதி ளுப்ப ரிகை
வாகுள குறட்டி மேவு பெருமாளே.

567. கூர்வாய் நாராய் வாராய் போனார்
கூடா ரேசற் றலவாவி
கோதா னென்மா தாமா றானாள்
கோளே கேள்மற் றிளவாடை
ஈர்வாள் போலே மேலே வீசா
ஏறா வேறிட் டதுதீயின்
ஈயா வாழ்வோர் பேரே பாடா
ஈடே றாரிற் கெடலாமோ
சூர்வா ழாதே மாறா தேவாழ்
சூழ்வா னோர்கட் கருள்கூரும்
தோலா வேலா வீறா ரூர்வாழ்
சோதீ பாகத் துமையூடே
சேர்வாய் நீதி வானோர் வீரா
சேரா ரூரைச் சுடுவார்தம்
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

568. கூர்வேல் பழித்தவிழி யாலே மருட்டிமுலைக்
கோடா லழைத்துமலர் அணைமீதே
கோபா விதழ்ப்பருக மார்போ டணைத்துகலை
கோல்போல் சுழற்றியிடை உடைநாணக்
கார்போல் குழற்சரிய வேவா யதட்டியிரு
காதோ லைஇற்றுவிழ விளையாடுங்
காமா மயக்கியர்க ளூடே களித்துநம
கானா றுறைக்கலகம் ஒழியாதோ

வீரா ணம்வெற்றிமுர சோடே தவிற்றிமிலை
  வேதா கமத்தொலிகள் கடல்போல
 வீறுய் முழக்கவரு சூரா ரிறக்கவிடும்
  வேலா திருத்தணியில் உறைவோனே
மாரோ னிறக்கவிழி தாதா திருச்செவியில்
  மாபோ தகத்தையருள் குருநாதா
 மாலோ னளித்தவளி யார்மால் களிப்பவெகு
  மாலோ டணைத்துமகிழ் பெருமாளே.

569. கூறு மார வேளார வாரக் கடலாலே
  கோப மீது மாருத கானக் குயிலாலே
மாறு போலு மாதாவின் வார்மைப் பகையாலே
  மாது போத மாலாகி வாடத் தகுமோதான்
ஏறு தோகை மீதேறி யாலித் திடும்வீரா
  ஏழு லோகம் வாழ்வான சேவற் கொடியோனே
சீறு சூரர் நீறுக மோதிப் பொரும்வேலா
  தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே.

570. கெண்டைகள்பொ ருங்கண்மங் கையர்மலர்க்
  கொண்டைகள்கு லுங்கநின் றருகினிற்
  கெஞ்சுபலு டன்குழைந் தமளியிற் கொடுபோய்வண்
 கெந்தபொடி யும்புனைந் துறவணைத்
  தின்பவச னந்தருந் தொழிலடுக்
  கின்றமய லின்படுந் துயரறப் ப்ரபைவீசும்
தண்டைகள்க லின்கலின் கலினெனக்
  கிண்கிணிகி ணின்கிணின் கிணினெனத்
  தண்கொலுசு டன்சிலம் பசையவுட் பரிவாகிச்
 சந்ததமும் வந்திரும் பரிமளப்
  பங்கயப தங்களென் கொடுவினைச்
  சஞ்சலம லங்கெடும் படியருட் புரிவாயே
தொண்டர்கள்ச ரண்சரண் சரணெனக்
  கொம்புகள்கு குங்குகுங் குகுமெனத்
  துந்திமிதி மிந்திமிந் திமினெனக் குறுமோசை

சுந்தரிம ணஞ்செயுஞ் சவுரியக்
கந்தகுற வஞ்சிதங் கருவனத்
துங்கமலை யும்புரந் தமரருக் கிடர்கூரும்
பண்டர்கள்பு யங்களும் பொடிபடக்
கண்டவப்ர சண்டகுஞ் சரியெழிற்
பைந்தருவ னம்புரந் தகமெழிற் புடைசூழும்
பந்திவரு மந்திசெண் பகமகிற்
சந்துசெறி கொன்றைதுன் றியவனப்
பந்தணையில் வந்திடுஞ் சரவணப் பெருமாளே.

571\. கெண்டைநேரொத்தவிழி மங்கைமோ கக்கலவை
கெந்தவா சப்புழுகு மணநாறும்
கிம்புரீ சக்களப கொங்கையா ளைச்சிறிது
கிஞ்சுவா யைப்பருகி அடியேனும்
மண்டிநே சக்கலவி கொண்டுகா மித்துருகி
வண்டனு கப்புவியில் உழலாமல்
வந்துஞா னப்பொருளி லொன்றுபோ தித்துனது
மஞ்சுதா ளைத்தினமும் அருள்வாயே
அண்டர்வா ழப்பிரபை சண்டமே ருக்கிரிய
ளைந்துவீ ழப்பொருத கதிர்வேலா
அஞ்சுவா யிற்பரனை நெஞ்சிலூ றித்தவசி
னன்புளா ரைச்சிறையி டசுரோரைக்
கொண்டுபோய் வைத்தகழு நெஞ்சிலே றக்கழுகு
கொந்தியா டத்தலையை அரிவோனே
கொண்டல்சூ ழக்கழனி சங்குலா விப்பரவு
கும்பகோ ணத்திலுறை பெருமாளே.

572\. கெஜநடை மடவார் வசமதி லுருகா
கிலெசம தறுபாழ் வினையாலே
கெதிபெற நினையா துதிதனை அறியா
கெடுசுக மதிலாழ் மதியாலே
தசையது மருவீ வசையுட லுடனே
தரணியில் மிகவே உலைவேனோ

சததள மலர்வார் புணைநின கழலார்
தருநிழல் புகவே தருவாயே
திசைமுக வனைநீள் சிறையுற விடுவாய்
திருநெடு கருமால் மருகோனே
திரிபுர தகனு ரிடமதில் மகிழ்வார்
திரிபுரை அருள்சீர் முருகோனே
நிசிசர ருறைமா கிரியிரு பிளவா
நிறையயில் முடுகா விடுவோனே
நிலமிசை புகழார் தலமெனு மருணை
நெடுமதில் வடசார் பெருமாளே.

573. கேசர வாச முற்ற கீதவி நோத முற்ற
தேனளி சூழ மொய்த்த மலராலே
சீறும ராவெ யிற்றி லூறிய காள மிட்ட
சீதநி லாவெ றிக்கும் அனலாலே
போதனை நீதி யற்ற வேதனை வாளி தொட்ட
போர்மத ராஜ னுக்கும் அழியாதே
போகமெ லாநி றைத்த மோகவி டாய்மி குத்த
பூவையை நீய ணைக்க வரவேணும்
மாதினை வேணி வைத்த நாதனு மோது பச்சை
மாயனு மாச ரிக்கு மயில்வீரா
வானவர் சேனை முற்றும் வாழும ராப திக்குள்
வாரண மான தத்தை மணவாளா
மேதினி யோர்த மைக்க வேயரு ணாச லத்து
வீதியில் மேவி நிற்கு முருகோனே
மேருவை நீறெழுப்பி நான்முகன் மார்ப கத்துள்
வேலடை யாள மிட்ட பெருமாளே.

574. கேதகைய பூமுடித்த மாதர்தம யாலினுற்று
கேவலம தானஅற்ப நினைவாலே
கேள்வியதி லாதிருக்கு மூழ்வினையி னால்மிகுத்த
கேடுபெற வேநினைக்கும் வினையாலே
வேதனையி லேமிகுத்த பாதகனு மாயவத்தில்
மேதினியெ லாமுழற்று மடியேனை

வீடுதவி யாளவெற்றி வேல்கரம தேயெடுத்து
வீறுமயில் மீதிலுற்று வருவாயே
நீதிநெறி யேயழித்த தாருகனை வேரறுத்து
நீடுபுகழ் தேவர்கள் குடியேற
நீடருளி னுல்விடுத்த பாலகும ராசெழித்த
நீலநிற மால்தனக்கு மருகோனே
சோதியன லாவுதித்த சோணகிரி மாமலைக்குள்
சோலைவட கோபுரத்தில் உறைவோனே
சோனைமழை போலெதிர்த்த தானவர்கள் மாளவெற்றி
தோளின்மிசை வேலெடுத்த பெருமாளே.

575. கைத்தருண சோதி யத்திமுக வேத
கற்பகச கோத்ரப் பெருமாள்காண்
கற்புசிவ காமி நித்யகலி யாணி
கத்தர்குரு நாதப் பெருமாள்காண்
வித்துருப ராம ருக்குமரு கான
வெற்றியயில் பாணிப் பெருமாள்காண்
வெற்புளக டாக முட்குதிர வீசு
வெற்றிமயில் வாகப் பெருமாள்காண்
சித்ரமுக மாறு முத்துமணி மார்பு
திக்கினிலா தப் பெருமாள்காண்
தித்திமிதி தீதெ ஞெத்திவிளை யாடு
சித்திரகு மாரப் பெருமாள்காண்
சுத்தவிர சூரர் பட்டுவிழ வேலை
தொட்டகவி ராஜப் பெருமாள்காண்
துப்புவளி யோடு மப்புலியுர் மேவு
சுத்தசிவ ஞானப் பெருமாளே.

576. கைத்தல நிறைகனி (110 - வது பக்கம் பார்க்க)

577. கையொத்து வாழு மிந்த மெய்யொத்த வாழ்வி கந்து
பொய்யொத்த வாழ்வு கண்டு மயலாகிக்
கல்லுக்கு நேரும் வஞ்ச உள்ளத்தர் மேல்வி ழுந்து
கள்ளப்ப யோத ரங்கள் உடன்மேவி

உய்யப்ப டாமல் வெய்ய கையர்க்கு பாய மல்ல
பொய்யர்க்கு மெய்ய ராகி உடலுமேயன்
உள்ளப் பெருக நின்று தொய்யப்ப டாமலென்று
முள்ளத்தின் மாய்வ தொன்றை மொழியாயோ
ஐயப்ப டாத ஐந்து பொய்யற்ற சோலை தங்கு
தெய்வத்தி யானை கொங்கை புணர்வோனே
அல்லைப்பொ ருமு ழங்கு சொல்லுக்ர சேவ லொன்று
வெல்லப்ப தாகை கொண்ட திறல்வேலா
வையத்தை ஓடி யைந்து கையர்க்கு வீசு தந்தை
மெய்யொத்த நீதி கண்ட பெரியோனே
வள்ளிக்கு ழாம டர்ந்த வள்ளிக்கல் மீது சென்று
வள்ளிக்கு வேளை கண்ட பெருமாளே.

578. கொக்குக் கொக்கத் தலையிற் பற்றுச் சிக்கத் தளகக்
கொத்துற் றுக்குப் பிணியுற் றவனுகிக்
குக்கிக் கக்கிக் கடையிற் பற்றத் துற்றுக் கழலக்
கொத்தைச் சொற்கற் றுலகிற் பலபாஷை
திக்கித் திக்கிக் குளறிச் செப்பித் தப்பிக் கொடுபொய்ச்
செற்றைச் சட்டைக் குடிலைச் சுமைபேணும்
சிக்கற் றுட்குக் கருணைச் சுத்தச் சித்தித் தமிழைத்
திட்டத் துக்குப் புகலப் பெறுவேனே
அக்கிட் டிக்கிட் டமருக் கொட்டிக் கிட்டிட் டெதிரிட்
டத்ரத் தெற்றிக் கடுகப் பொருசூரன்
அச்சுக் கெட்டுப் படைவிட் டச்சப் பட்டுக் கடலுட்
புக்குப் பட்டுத் துருமத் தடைவாகத்
தக்குத் திக்குத் தறுகட் டொக்குத் தொக்குற் றதுகட்
கைக்கொட் டிட்டிட் டுடல்சிற் கணமாடிச்
சத்திக் குத்தித் துடியிற் சத்திக் கக்கைச் சமர்செய்ச்
சத்திக் கச்சிக் குமரப் பெருமாளே.

579. கொங்கு லாவிய குழலினு நிழலினு
நஞ்ச ளாவிய விழியினு மிரணிய
குன்று போல்வளர் முலையினு நிலையினு மடமாதர்

கொம்பு சேர்வன இடையினு நடையினு
மன்பு கூர்வன மொழியினு மெழில்குடி
கொண்ட சேயித ழமுதினு நகையினு மனதாய

சங்கை யாளியை அணுவிடை பிளவள
வின்சொல் வாசக மொழிவன இவையில
சம்ப்ர தாயனை அவலனை யொளிதிகழ் இசைகூரும்

தண்டை நூபுர மணுகிய விருகழல்
கண்டு நாளவ மிகையற விழியருள்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே

வங்க வாரிதி முறையிட நிசிசரர்
துங்க மாமுடி பொடிபட வடவனல்
மங்கி நீறெழ அலகைகள் நடமிட மயிலேறி

வஞ்ச வேல்கொடு முனிபவ அழகிய
சண்பை மாநக ருறைபுமொ ரறுமுக
வந்த வானவர் மனதினி விடர்கெட நினைவோனே

பங்க வீரியர் பறிதலை விரகினர்
மிஞ்சு பாதக ரறநெறி பயிலிலர்
பந்த மேவிய பகடிகள் கபடிகள் நிலைகேடர்

பண்பி லாதவர் கொலைசெயு மனதின
ரிங்கெ ணுயிர ருயரிய கழுமிசை
பஞ்ச பாதகர் முனைகெட அருளிய பெருமாளே.

580. கொங்கைகள்கு லுங்கவளை செங்கையில்வி ளங்கஇருள்
கொண்டலைய டைந்தகுழல் வண்டுபாடக்
கொஞ்சியவ னங்குயில்கள் பஞ்சநல்வ னங்கிளிகள்
கொஞ்சியதெ னுங்குரல்கள் கெந்துபாயும்

வெங்கயல்மி ரண்டவிழி அம்புலிய டைந்தநுதல்
விஞ்சையர்கள் தங்கள்மயல் கொண்டுமேலாய்
வெம்பிணியு முன்றபவ சிந்தனைநி னைந்துனது
மின்சரண பைங்கழலொ டண்டஆளாய்

சங்கமுர சந்திமிலை துந்துமித தும்பவளை
தந்தன தனந்தவென வந்தசூரர்

சங்கைகெட மண்டிதிகை எங்கணுமு டிந்திடவொர்
தண்கடல்கொ ளுந்தநகை கொண்டவேலா
சங்கரனு கந்தபரி வின்குருவெ னுஞ்சுருதி
தங்களின்ம கிழ்ந்துருகு மெங்கள்கோவே
சந்திரமு கஞ்செயல்கொள் சுந்தரகு றம்பெணொடு
சம்புபுகழ் செந்தில்மகிழ் தம்பிரானே.

581. கொங்கைப் பணையிற் செம்பொற் செறிவிற்
கொண்டற் குழலிற் கொடிதான
கொன்றைக் கணையொப் பந்தக் கயலிற்
கொஞ்சுக் கிளியுற் றுறவான
சங்கத் தொனியிற் சென்றிற் கடையிற்
சந்திப் பவரைச் சருவாதே
சந்தப் படியுற் றென்றற் றலையிற்
சந்தப் பதம்வைத் தருள்வாயே
அங்கப் படைவிட் டன்றைப் படுகைக்
கந்திக் கடலிற் கடிதோடா
அந்தப் பொழிலிற் சந்துத் தலையுற்
றஞ்சப் பொருதுற் றொழியாதே
செங்கைக் கதிருற் றொன்றக் கடலிற்
சென்றுற் றவர்தற் பொருளானாய்
சிந்தைக் கனிவைத் தந்தப் பொழிலிற்
செந்திற் குமரப் பெருமாளே.

582. கொடாதவனை யேபு கழ்ந்து
குபேரனென வேமொ ழிந்து
குலாவியவ மேதி ரிந்து புவிமீதே
எடாதசுமை யேசு மந்து
எணாதகவி யால்மெ லிந்து
எலாவறுமை தீர அன்று னருள்பேணேன்
சடாதனை மான கொங்கை
களாவிதய மேம யங்கி
சுகாதரம தாமெயா ழுங்கி லொழுகாமல்

கெடாததவ மேம றைந்து
கிலேசமது வேமி குந்து
கிலாதவுட லாவி நொந்து மடியாமுன்
தொடாய்மறலி யேநி யென்ற
சொலாகியது னைவ ருங்கொல்
சொலேழுலக மீனு மம்பை யருள்பாலா
நடாதசுழி மூல விந்து
நளாவிவிளை ஞான நம்ப
நபோமணிச மான துங்க வடிவேலா
படாதகுளிர் சோலை யண்ட
மளாவியுயர் வாய்வ ளர்ந்து
பசேலெனவு மேத ழைந்து தினமேதான்
விடாதுமழை மாரி சிந்த
அநேகமலர் வாவி பொங்கு
விராலிமலை மீது கந்த பெருமாளே.

583. கொடியமத வேள்கைக் கணையாலே
குரைகடல்நி நீலக் கடலாலே
நெடியபுகழ் சோலைக் குயிலாலே
நிலைமைகெடு மானைத் தழுவாயே
கடியரவு பூணர்க் கினியோனே
கலைகள்தெரி மாமெய்ப் புலவோனே
அடியவர்கள் நேசத் துறைவேலா
அறுமுகவி நோதப் பெருமாளே.

584. கொடிய மறலியு மவனது கடகமு
மடிய வொருதின மிருபதம் வழிபடு
குதலை அடியவ னினதருள் கொடுபொரும் அமர்காணக்
குறவர் மகள்புணர் புயகிரி சமுகமும்
அறுமு கமும்வெகு நயனமும் ரவியுமிழ்
கொடியு மகிலமும் வெளிபட இருதிசை இருநாலும்
படியு நெடியன எழுபுண ரியுமுது
திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறிப்

பழைய அடியவ ருடனிமை யவர்கண
மிருபு டையுமுது தமிழ்கொடு மறைகொடு
பரவ வருமதி லருணையி லொருவிசை வரவேணும்
சடில தரவிட தரபணி தரதர
பரசு தரசசி தரசுசி தரவித
தமரு கமிருக தரவனி தரசிர தாபாரத்
தாணி தரதனு தரவெகு முககுல
தடினி தரசிவ சுதகுண தரபணி
சயில விதரண தருபுர சசிதரு மயில்வாழ்வே
நெடிய உடலுரு இருளெழ நிலவெழ
எயிறு சுழல்விழி தழலெழ எழுகிரி
நெரிய அதிர்குரல் புகையெழ இடியெழ கெடுவானும்
நிலனும் வெருவர வருநிசி சரர்தள
நிகில சகலமு மடியவொர் படைதொடு
நிருப குருபர சுரபதி பரவிய பெருமாளே.

585. கொடியன பிணிகொடு விக்கிக் கக்கிக்
கூன்போந் தசடாகும்
குடிலுற வருமொரு வித்தைச் சித்தக்
கோண்டீர்ந் தமையாதே
பொடியன பாசம யத்துத் தப்பிப்
போந்தேன் தரைமேலே
பொருளது பெறவினி நட்புச் சற்றுப்
பூண்டாண் டருள்வாயே
துடிபட அலகைகள் கைக்கொட் டிட்டுச்
சூழ்ந்தாங் குடனடத்
தொகுதொகு திகுதிகு தொக்குத் திக்குத்
தீதாந்தாந் திடுதாளம்
படிதரு பதிவ்ரதை ஒப்பச் சுத்தப்
பாழ்ங்கான் தனிலாடும்
பழநியுள் குமரகு றத்தத் தைக்குப்
பாங்காம் பெருமாளே.

586. கொடியனைய இடைதுவள அங்கமும் பொங்கஅங்
குமுதஅமு திதழ்பருகி இன்புறுஞ் சங்கையன்
குலவியணை முகிலளக முஞ்சரிந் தன்பினின்
பண்புலாவக்
கொடியவிரல் நகநுதிசெய் புண்படுஞ் சஞ்சலன்
குறுகியவ ருடனினிது சம்ப்ரமங் கொண்டுளங்
குரலழிய அவசமுறு குங்குணன் கொங்கவிழ்ந்
தொன்றுபாய்மேல்
விடமனைய விழிமகளிர் கொங்கையின் பம்பெறும்
வினையனியல் பரவுமுயிர் வெந்தழிந் தங்கமும்
மிதமொழிய அறிவில்நெறி பண்பிலண் டுஞ்சகன்
செஞ்செநீடும்
வெகுகனக ஒளிகுலவும் அந்தமன் செந்திலென்
றவிழஉள முருகிவரு மன்பிலன் தந்திலன்
விரவுமிரு சிறுகமல பங்கயந் தந்துகந் தன்புறுமேதா
படமிலகு மாவினுட லங்கமும் பங்கிடந்
துதறுமொரு கலபிமிசை வந்தெழுந் தண்டர்தம்
பகையசுர ரனைவருடல் சந்துசந் துங்கதஞ்
சிந்தும்வேலா
படியவரு மிமையவரும் நின்றிறைஞ் செண்குணன்
பழையஇறை உருவமிலி அன்பர்பங் கன்பெரும்
பருவரல்செய் புரமெரிய விண்டிடுஞ் செங்கணன்
கங்கைமான்வாழ்
சடிலமிசை அழகுபுனை கொன்றையும் பண்புறும்
தருணமதி யினகுறைசெய் துண்டமுஞ் செங்கையொண்
சகலபுவ னமுமொழிக தங்குறங் கங்கியும் பொங்கிநீடும்
சடமருவு விடையாவர் துங்கஅம் பங்கினின்
றுலகுதரு கவுரியுமை கொங்கைதந் தன்புறும்
தமிழ்விரக உயர்பரம சங்கரன் கும்பிடுந் தம்பிரானே.

587. கொண்டாடிக் கொஞ்சு மொழிகொடு
கண்டாரைச் சிந்து விழிகொடு
கொந்தாரச் சென்ற குழல்கொடு வடமேருக்

குன்றேடொப் பென்ற முலைகொடு
நின்றேலக் கஞ்செய் நிலைகொடு
கொம்பாயெய்ப் புண்ட விடைகொடு பலரோடும்
பண்டாடச் சிங்கி இடுமவர்
விண்டாலிக் கின்ற மயிலென
பண்பாலிட் டஞ்செல் மருளது விடுமாறு
பண்டேசொற் றந்த பழமறை
கொண்டேதர்க் கங்க ளறவுமை
பங்காளற் கன்று பகர்பொருள் அருள்வாயே
வண்டாடத் தென்றல் தடமிசை
தண்டாதப் புண்ட ரிகமலர்
மங்காமற் சென்று மதுவைசெய் வயலூரா
வன்காளக் கொண்டல் வடிவொரு
சங்க்ராமக் கஞ்சன் விழவுதை
மன்ருடிக் கன்பு தருதிரு மருகோனே
திண்டாடச் சிந்து நிசிசரர்
தொண்டாடக் கண்ட அமர்பொரு
செஞ்சேவற் செங்கை உடையசண் முகதேவே
சிங்காரச் செம்பொன் மதிலத
லங்காரச் சந்த்ர கலைதவழ்
தென்சேரிக் குன்றி லினிதுறை பெருமாளே.

588. கொத்தார் பற்கா லற்றே கப்பாழ்
குப்பா யத்திற் செயல்மாறிக்
கொக்கா கிக்கூ னிக்கோல் தொட்டே
கொட்டா விக்குப் புறவாசித்
தித்தா நிற்றூர் செத்தார் கெட்டேன்
அஆஉஊ எனவேகேள்
செற்றே சுட்டே விட்டே றிப்போ
மப்போ துத்துக் கமறுதோ
நித்தா வித்தா ரத்தோ கைக்கே
நிற்பாய் கச்சிக் குமரேசா

நிட்டூ ரச்சூர் கெட்டோ டப்போர்
நெட்டோ தத்திற் பொருதோனே
மூத்தா ரத்தோ ளிற்கோ டற்பூ
முட்டா திட்டத் தணிவோனே
மூற்றூ நித்தா அத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

589. கொந்த ரங்குழ விந்து வண்புரு
வங்கள் கண்கய லுஞ்ச ரங்கணை
கொண்ட ரம்பைய ரந்த முஞ்சசி துண்டமாதர்
கொந்த ளங்கதி ரின்கு லங்களி
னுஞ்சு ழன்றிர சம்ப லங்கனி
கொண்ட நண்பித ழின்சு கங்குயி லின்சொல்மேவும்
தந்த வந்தர ளஞ்சி றந்தெழு
கந்த ரங்கமு கென்ப சைங்கழை
தண்பு யந்தளி ரின்கு டங்கையர் அம்பொனாரம்
தந்தி யின்குவ டின்த னங்களி
ரண்டை யுங்குலை கொண்டு விண்டவர்
தங்க டம்படி யுங்க வண்டிய சிந்தையாமோ
மந்த ரங்கட லுஞ்சு ழன்றமிர்
தங்க டைந்தவ னஞ்சு மங்குலி
மந்தி ரஞ்செல்வ முஞ்சு கம்பெற எந்தவாழ்வும்
வந்த ரம்பையெ னும்ப கிர்ந்தந
டங்கொ ளுந்திரு மங்கை பங்கினன்
வண்டர் லங்கையு ளன்சிரம்பொடி கண்டமாயன்
உந்தி யின்புவ னங்க ளெங்கும
டங்க வுண்டகு டங்கை யன்புக
ழொண்பு ரம்பொடி கண்ட எந்தையர் பங்கின்மேவும்
உம்ப லின்கலை மங்கை சங்கரி
மைந்த னென்றய னும்பு கழ்ந்திட
வொண்ப ரந்திரு வம்ப லந்திகழ் தம்பிரானே.

590. கொந்தள ஓலை குலுங்கிட வாளிச்
சங்குட ஞாழி கழன்றிட மேகக்
கொண்டைகள் மாலை பரிந்திட வாகப் பனிநீர்சேர்

கொங்கைகள் மார்பு குழைந்திட வாளிக்
கண்கயல் மேனி சிவந்திட கோவைக்
கொஞ்சிய வாயி ரசங்கொடு மோகக் கடலூடே

சந்திர ஆர மழிந்திட நூலிற்
பங்கிடை ஆடை துவண்டிட நேசந்
தந்திட மார்பு ததும்பியு மூழ்குற் றிடுபோதுன்

சந்திர மேனி முகங்களும் நீல
மந்தர மேல்கொ டமர்ந்திடு பாதச்
சுந்தர மான சதங்கையு மேசற் றருள்வாயே

சுந்தரர் பாட லுகந்திரு தாளைக்
கொண்டுநல் தூது நடந்தவ ராகத்
தொந்தமொ டாடி இருந்தவள் ஞானச் சிவகாமி

தொண்டர்க ளாக மமர்ந்தவள் நீலச்
சங்கரி மோக சவுந்தரி கோலச்
சுந்தரி காளி பயந்தரு ளானைக் கிளையோனே

இந்திர தேவர் பயங்கெட சூரைச்
சிந்திட வேல்கொ டெறிந்துநல் தோகைக்
கின்புற மேவி இருந்திடு வேதப் பொருளோனே

எண்புன மேவி இருந்தவள் மோகப்
பெண்திரு வாளை மணந்திய லார்சொற்
கெஞ்சிய ளாவு மிலஞ்சிவி சாகப் பெருமாளே.

591. கொந்தளம்புழு கந்தவண்பனி
ரம்பசம்ப்ரம ணிந்தமந்தர
கொங்கைவெண்கரி கொம்பிணங்கிய மடமாதர்

கொந்தணங்குழ லின்பமஞ்சள
ணிந்துசண்பக வஞ்சிளங்கொடி
கொஞ்சுபைங்கிளி யன்பெனுங்குயில் மயில்போலே

வந்துபஞ்சணை யின்பமுங்கொடு
 கொங்கையும்புய முந்தழும்புற
 மஞ்சுவொண்கலை யுங்குலைந்தவர் மயல்மேலாய்

வஞ்சினங்கள்தி ரண்டுகண்செவி
 யுஞ்சுகங்கள்தி ரும்பிமுன்செய்த
 வஞ்சினங்களு டன்கிடந்துடல் அழிவேனோ

தந்தனந்தன தந்தனந்தன
 திந்திமிந்திமி திந்திமிந்திமி
 சங்குவெண்கல கொம்புதுந்துமி பலபேரி

சஞ்சலஞ்சல கொஞ்சுகிண்கிணி
 தங்குடுண்டுடு டுண்டுடன்பல
 சந்திரம்பறை பொங்குவஞ்சகர் அங்கமீதே

சிந்தவெண்கழு கொங்குபொங்கெழு
 செம்புளங்கரு டன்பருந்துகள்
 செங்களந்திகை யெங்குமண்டிட விடும்வேலா

திங்களிந்திரன் உம்பரந்தர
 ருப்புகழ்ந்தரு கும்பான்சபை
 செம்பொனம்பல மங்கொளன்பர்கள் பெருமாளே.

592\. கொந்தள வோலைக ளாடப்பண்
 சங்கொளி போல்நகை வீசித்தண்
 கொங்கைகள் மார்பினி லாடக்கொண் டையென்மேகம்

கொங்கெழு தோள்வளை யாடக்கண்
 செங்கயல் வாளிகள் போலப்பண்
 கொஞ்சிய கோகில மாகப்பொன் பறிகாரர்

தந்திர மாமென வேகிப்பொன்
 தொங்கலொ டாரமு மாடச்செந்
 தம்பல வாயொடு பேசிக்கொண் டுறவாடிச்

சம்பள மீதென வோதிப்பின்
 பஞ்சணை மேல்மய லாடச்சஞ்
 சங்கையில் மூளியர் பால்வைக்குஞ் செயல்தீராய்

அந்தக னுருயிர் போகப்போன்
திண்புர மோடெரி பாயப்பண்
டங்கச னுருடல் வேகக்கண் டழல்மேவி
அண்டர்க ளோடட லார்தக்கன்
சந்திர சூரியர் வீழச்சென்
றம்பல மீதினி லாடத்தன் குருநாதா
சிந்துர மோடரி தேர்வர்க்கம்
பொங்கமோ டேழ்கடல் சூர்பத்மன்
சிந்திட வேல்விடு வாகைத்திண் புயவேளே
செங்குற மாதுமி னுளக்கண்
டிங்கித மாயுற வாடிப்பண்
செந்தமிழ் வாழ்புலி யூர்நத்தும் பெருமாளே.

593. கொந்தார் மைக்குழ லிந்தார் சர்க்கரை
யென்றே செப்பிய மொழிமாதர்
கொங்கார் முத்தவ டந்தா னிட்டத
னந்தா னித்தரை மலைபோலே
வந்தே சுற்றிவ ளைந்தா லற்பம
னந்தா னிப்படி உழலாமல்
மங்கா நற்பொரு ளிந்தா வற்புத
மென்றே யிப்படி அருள்வாயே
இந்தோ டக்கதிர் கண்டோ டக்கட
மண்டா நற்றவர் குடியோட
எங்கே யக்கிரி எங்கே யிக்கிரி
யென்றே திக்கென வருசூரைப்
பந்தா டித்தலை விண்டோ டக்களம்
வந்தோ ரைச்சில ரணகாளி
பங்கா கத்தரு கந்தா மிக்கப
னந்தா ளுற்றருள் பெருமாளே.

594. கொந்துத் தருகுழ லிருளோ புயலோ
விந்தைத் திருநுதல் சிலையோ பிறையோ
கொஞ்சிப் பயில்மொழி அமுதோ கனியோ விழிவேலோ

கொங்கைக் குடமிரு கரியோ கிரியோ
வஞ்சிக் கொடியிடை துடியோ பிடியோ
கொங்குற் றுயரல்கு லரவோ ரதமோ எனுமாதர்
திந்தித் திமிதிமி திமிதா திமிதோ
தந்தித் திரிகிட கிடதா எனவே
சிந்திப் படிபயில் நடமா டியபா விகள்பாலே
சிந்தைத் தயவுகள் புரிவே னெனையே
வந்தித் தருள்தரு மிருசே வடியே
சிந்தித் திடமிகு மறையா கியசீர் அருள்வாயே
வெந்திப் புடன்வரு மவுணே சனையே
துண்டித் திடுமொரு கதிர்வே லுடையாய்
வென்றிக் கொருமலை எனவாழ் மலையே தவவாழ்வே
விஞ்சைக் குடையவர் தொழுவே வருவாய்
கஞ்சத் தயனுடன் அமரே சனுமே
விந்தைப் பணிவிடை புரிபோ தவர்மேல் அருள்கூர்வாய்
தொந்திக் கணபதி மகிழ்சோ தரனே
செங்கட் கருமுகில் மருகா குகனே
சொந்தக் குறமகள் கணவா திறல்சேர் கதிர்காமா
சொம்பிற் பலவள முதிர்சோ லைகள்சூழ்
இஞ்சித் திருமதில் புடைசூ ழருள்சேர்
துங்கப் பழநியில் முருகா இமையோர் பெருமாளே.

595. கொந்து வார்குர வடியினு மடியவர்
சிந்தை வாரிச நடுவினு நெறிபல
கொண்ட வேதநன் முடியினி லருணையில்
முனிவோர்வாழ்
கொங்கி லேரக பழநியி லலைசெறி
செந்தில் மாநகர் தனிலுயர் தணியல்செய்
குன்றில் மேவியு மொழிதரு மறுசம யவிரோத
தந்த்ர வாதிகள் பெறவரி யதுபிறர்
சந்தி யாதது தனதென வருமொரு
சம்ப்ர தாயமு மிதுவென உரைசெய்து விரைநீபச்

சஞ்ச ரீகரி காமுரல் தமனிய
கிண்கி ணீமுக விதபத யுகமலர்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே

சிந்து வாரமு மிதழியு மிளநவ
சந்த்ர ரேகையு மரவமு மணிதரு
செஞ்ச டாதரர் திருமக வெனவரு முருகோனே

செண்ப காடவி யினுமித ணினுமுயர்
சந்த னாடவி யினுமுறை குறமகள்
செம்பொ னூபுர கமலமும் வளையணி புயமேவும்

இந்து வாண்முக வனசமு ம்ருகமத
குங்கு மாசல யுகளமு மதுரித
இந்த ளாம்ருத வசனமு முறுவலும் அபிராம

இந்த்ர கோபமு மரகத வடிவமு
மிந்த்ர சாபமு மிருகுழை யொடுபொரு
மிந்த்ர நீலமு மடலிடை எழுதிய பெருமாளே.

596\. கொம்பனை யார்காது மோதிரு
கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு

கொங்கையில் நீராவி மேல்வளர்
செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி லாதார சோபையில் மருளாதே

உம்பர்கள் சாமீந மோநம
எம்பெரு மானேந மோநம
ஒண்டொடி மோகாந மோநம எனநாளும்

உன்புக ழேபாடி நானினி
அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே

பம்பர மேபோல ஆடிய
சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி

பங்கமி லாநீலி மோடிப
யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்

டெம்புதல் வாவாழி வாழியெ
னும்படி வீரான வேல்தர
என்றுமு ளானேன மனோகர வயலூரா

இன்சொல்வி சாகாக்ரு பாகர
செந்திலில் வாழ்வாகி யேஅடி
யென்றனை ஈடேற வாழ்வருள் பெருமாளே.

597. கொலைகொண்ட போர்விழி கோலோ வாளோ
விடமிஞ்சு பாதக வேலோ சேலோ
குழைகொண்டு லாவிய மீனோ மானோ எனுமானார்

குயில்தங்கு மாமொழி யாலே நேரே
இழைதங்கு நூலிடை யாலே மீதூர்
குளிர்கொங்கை மேருவி னாலே நானு விதமாகி

உலைகொண்ட மாமெழு காயே மோகா
அலையம்பு ராசியி னூடே மூழ்கா
உடல்பஞ்ச பாதக மாயா நோயால் அழிவேனோ

உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனையண்டி யேநம னார்தூ தானோர்
உயிர்கொண்டு போய்விடும் நாள்நீ மீதா அருள்வாயே

அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூர்
அணியஞ்ச ராசனம் வேறாய் நீறா யிடவேதான்

அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீர்
அனலங்கை வேல்விடும் வீரா தீரா
அருமந்த ரூபக ஏகா வேரோர் வடிவாகி

மலைகொண்ட வேடுவர் காணா டேபோய்க்
குறமங்கை யாளுட னேமா லாயே
மயல்கொண்டு லாயவள் தாள்மீ தேவீழ் குமரேசா

மதிமிஞ்சு போதக வேலா ஆளா
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமானே

598. கொலைமத கரியன ம்ருகமத மொழுகிய
கும்பத் தனமானார்
குமுதவ முதவிதழ் பருகியு ருகிமயல்
கொண்டுற் றிடுநாயேன்
நிலையழி கவலைகள் கெடவுன தருள்வழி
நின்றுற் றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற
நின்பற் றடைவேனோ
சிலையென வடமலை உடையவ ரருளிய
செஞ்சொற் சிறுபாலா
திரைகட லிடைவரு மசுரனை வதைசெய்த
செந்திற் பதிவேலா
விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி
ரும்பிப் புணர்வோனே
விருதணி மாகத மயில்வரு குமரவி
டங்கப் பெருமாளே.

599. கொலையிலே மெத்த விரகிலே கற்ற
குவளையோர் மைக்கண் விழிமானார்
குழையிலே எய்த்த நடையிலே நெய்த்த
குழலிலே பற்கள் தனிலேமா
முலையிலே அற்ப இடையிலே பத்ம
முகநிலா வட்ட மதின்மீதே
முதுகிலே பொட்டு நுதலிலே தத்தை
மொழியிலே சித்தம் விடலாமோ
கலையனே உக்ர முருகனே துட்டர்
கலகனே மெத்த இளையோனே
கனகனே பித்தர் புதல்வனே மெச்சு
கடவுளே பச்சை மயிலோனே

உலகனே முத்தி முதல்வனே சித்தி
உடையனே விட்ணு மருகோனே
ஒருவனே செச்சை மருவுநேர் சித்ர
உருவனே மிக்க பெருமாளே.

600. கொலைவிழி சுழலச் சுழலச்
சிலைநுதல் குவியக் குவியக்
கொடியிடை துவளத் துவளத் தனபாரக்
குவடணி சிதறச் சிதறக்
காவளை கதறக் கதறக்
குயில்மொழி பதறப் பதறப் ப்ரியமோகக்
கலவியி லொருமித் தொருமித்
திலவிதழ் பருகிப் பருகிக்
கரமொடு தழுவித் தழுவிச் சிலநாளிற்
கையிலுள பொருள்கெட் டருள்கெட்
டனைவரும் விடுசிச் சியெனக்
கவலைகள் பலபெற் றுலகிற் றிரிவேனோ
சலநிதி சுவறச் சுவறத்
திசைநிலை பெயரப் பெயரத்
தடவரை பிதிரப் பிதிரத் திடமேருத்
தமனிய நெடுவெற் பதிரக்
கணபண சிரம்விட் டகலச்
சமனுடல் கிழியக் கிழியப் பொருசூரன்
பெலமது குறையக் குறையக்
கருவிகள் பறையப் பறையப்
பெருநரி தொடரத் தொடரத் திரள்கூகை
பெடையொடு குழறக் குழறச்
சுரபதி பரவப் பரவப்
பிரபல பழநிக் குமரப் பெருமாளே.

601. கொள்ளை யாசைக் காரிகள் பாதக
வல்ல மாயக் காரிகள் சூறைகள்
கொள்ளும் ஆயக் காரிகள் வீணிகள் விழியாலே

கொல்லும் லீலைக் காரிகள் யாரையும்
வெல்லு மோகக் காரிகள் சூதுசொல்
கொவ்வை வாய்நிட் டூரிகள் மேல்விழு மவர்போல
உள்ள நோவைத் தேயுற வாடியர்
அல்லை நேரொப் பாமன தோஷிகள்
உள்வி ரோதக் காரிகள் மாயையில் உழல்நாயேன்
உய்ய வேபொற் றூள்களும் ஆறிரு
கையும் நீபத் தார்முக மாறுமுன்
உள்ள ஞானப் போதமும் நீதர வருவாயே
கள்ள மாயத் தாருகன் மாமுடி
துள்ள நீலத் தோகையின் மீதொரு
கையின் வேல்தொட் டேவிய சேவக முருகோனே
கல்வி லேபொற் றூள்பட வேயது
நல்ல ரூபத் தேவர காணிடை
கௌவை தீரப் போகுமி ராகவன் மருகோனே
தெள்ளி யேமுற் றீரமு ளோதிய
சொல்வ ழாமற் றூனொரு வாளுறு
செல்வி மார்பிற் பூஷண மாயணை மணவாளா
தெள்ளு மேனற் சூழ்புன மேவிய
வள்ளி வேளைக் காரம னோகர
தில்லை மேலைக் கோபுர மேவிய பெருமாளே.

602. கோக னகமு கிழ்த்த போக புளகி தத்த
கோடு தலைகு லைத்த முலையாலே
கூட வரவ ழைக்கு மாடு குழைய டர்த்த
நீடி யகுவ ளைக்கண் மடமாதர்
ஆக முறவ ணைத்துக் காசை அபக ரித்து
மீள இதழ்க டிப்ப தறியாதே
ஆசை அதுகொ ளுத்து மால மதுகு டித்த
சேலில் பரித விப்ப தினியேனோ
மாக நதிம திப்ர தாப மவுலி யர்க்கு
சாவி யதுவொ ரர்த்த மொழிவோனே

வாகு வலைய சித்ர ஆறி ருபுய வெற்பில்
வாழ்வு பெறுகு றத்தி மணவாளா
வேக உரக ரத்ந நாக சயன சக்ர
மேவு மரக தத்தின் மருகோனே
வீசு திரைய லைத்த வேலை சுவற வெற்றி
வேலை உருவ விட்ட பெருமாளே.

603. கோங்க முகையு மெலிய வீங்கு புளக களப
மேந்து குவடு குழையும் படிகாதல்
கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய
தேங்கு கலவி அமுதுண் டியல்மாதர்
வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்
வாய்ந்த துயிலை மிகவும் தணியாத
வாஞ்சை உடைய அடிமை நீண்ட பிறவி அலையை
நீந்தி அமல அடிவந் தடைவேனோ
ஓங்க லனைய பெரிய சோங்கு தகர மகர
மோங்கு ததியின் முழுகும் பொருசூரும்
ஓய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயில துலவுந் தனிவேலா
வேங்கை அடவி மறவர் ஏங்க வனிதை உருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா
வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி னுதவும் பெருமாளே.

604. கோங்கிள நீரளவு வீங்குப யோதரமும்
வாங்கிய வேல்விழியும் இருள்கூரும்
கூந்தலும் நீள்வளைகொள் காந்தளு நூலிடையும்
மாந்தளிர் போல்வடிவும் மிகநாடிப்
பூங்கொடி யார்கலவி நீங்கரி தாகிமிகு
தீங்குட னேயுழலும் உயிர்வாழ்வு
பூண்டடி யேனெறியில் மாண்டவ மேகரகில்
வீழ்ந்தலை யாமலருள் புரிவாயே
பாங்கியும் வேடுவரும் ஏங்கிட மாமுனியும்
வேங்கையு மாய்மறமின் உடன்வாழ்வாய்

பாண்டவர் தேர்கடவும் நீண்டபி ரான்மருக
பாண்டிய னீறணிய மொழிவோனே
வேங்கையும் வாரணமும் வேங்கையும் மானும்வளர்
வேங்கட மாமலையில் உறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டிய வாறுதவும் பெருமாளே.

605. கோடான மடவார்கள் முலைமீதே
கூர்வேலை இணையான விழியூடே
ஊடாடி யவரோடும் உழலாதே
ஓர்போது திகழ்பாதம் அருள்வாயே
நீடாழி சுழல்தேசம் வலமாக
நீடோடி மயில்மீது வருவோனே
சூடான தொருசோதி மலைமேவு
சோணாடு புகழ்தேவர் பெருமாளே.

606. கோடான மேருமலைத் தனமானார்
கோமாள மானவலைக் குழலாதே
நாடோறு மேன்மைபடைத் திடவேதான்
நாயேனை ஆளநினைத் திடொணாதோ
ஈடேற ஞானமுரைத் தருள்வோனே
ஈராறு தோள்கள்படைத் திடுவோனே
மாடேறு மீசர்தமக் கினியோனே
மாதானை ஆறுமுகப் பெருமாளே.

607. கோடுசெறி மத்த கக்கை வீசுகரி யைப்ப குத்த
கூறுசெய்த ழித்து ரித்து நடைமாணூர்
கோளுலவு முப்பு ரத்தை வாளெரிகொ ளுத்தி விட்ட
கோபநுத லத்த ரத்தர் குருநாதா
நீடுகன கத்த லத்தை ஊடுருவி மற்ற வெற்பு
நீறெழுமி தித்த நித்த மனதாலே
நீபமலர் பத்தி மெத்த ஓதுமவர் சித்த மெத்த
நீலமயில் தத்த விட்டு வரவேணும்

ஆடலணி பொற்சி லைக்கை வேடுவர்பு னக்கு றத்தி
ஆரமது மெத்து சித்ர முலைமீதே
ஆதரவு பற்றி மெத்த மாமணிநி றைத்த வெற்றி
ஆறிருதி ருப்புயத்தில் அணைவீரா
தேடிமைமையோர் புத்தி மெத்த நீடுறநி னைத்த பத்தி
சீருறவு ளத்தெ ரித்த சிவவேளே
தேறருணை யிற்ற ரித்த சேண்முகடி டத்த டர்த்த
தேவர்சிறை வெட்டி விட்ட பெருமாளே.

608. கோதிக் கோதிக் கூந்தலி லேமலர்
பாவித் தாகச் சாந்தணி வார்முலை
கோடுத் தானைத் தேன்அவர் வாய்மொழி குயில்போலக்
கூவிக் கூவிக் காண்டிசை போலவெ
நாணிக் கூனிப் பாய்ந்திடு வார்சிலர்
கூடித் தேறிச் சூழ்ந்திடு வார்பொருள் வருமோவென்
றோதித் தோளிற் பூந்துகி லால்முலை
மூடிச் சூதிற் றூங்கமி லார்தெரு
வோடித் தேடிச் சோம்பிடு வார்சில விலைமாதர்
ஓருச் சேரச் சேர்ந்திடு வார்கலி
சூளைக் காரச் சாங்கமி லார்சில
வோரைச் சாகத் தீம்பிடு வார்செயல் உறவாமோ
வேதத் தோனைக் காந்தள்கை யால்தலை
மேல்குட் டாடிப் பாந்தள்ச தாமுடி
வீரிட் டாடக் காய்ந்தசு ரார்கள்மெல் விடும்வேலா
வேளைச் சீறித் தூங்கலொ டேவய
மாவைத் தோலைச் சேர்ந்தணி வாரிட
மீதுற் றுள்பொற் சாம்பவி மாதுமை தருசேயே
நாதத் தோசைக் காண்டுணை யேசுடர்
மூலத் தோனைத் தூண்டிட வேயுயிர்
நாடிக் காலிற் சேர்ந்திட வேயருள் சுரமானை
ஞானப் பால்முத் தேன்மொழி வாய்வளி
மாதைக் கானிற் சேர்ந்தணை வாய்சிவ
ஞானப் பூமித் தேன்புலி யூர்மகிழ் பெருமாளே.

609. கோதி முடித்துக் கனத்த கொண்டையர்
சூது விதத்துக் கிதத்து மங்கையர்
கூடி யவற்பச் சுகத்தை நெஞ்சினில் நினையாதே
கோழை மனத்தைக் கெடுத்து வன்புல
ஞான குணத்தைக் கொடுத்து முன்செயல்
கூறு மிடத்துக் கிதத்து நின்றருள் புரிவாயே
நாத நிலைக்குட் கருத்து கந்தருள்
போத கமற்றெறச் சகத்தை யுந்தரு
நான்மு கனுக்குக் கிளத்து தந்தையின் மருகோனே
நாடு மகத்தெற் கிடுக்கண் வந்தது
தீரி டுதற்குப் பதத்தை யுந்தரு
நாய கர்புத்ரக் குருக்க ளென்றருள். வடிவேலா
தோதி மிதித்தித் திமித்த டிங்குகு
டீகு குடிக்குட் டிகுக்கு டிண்டிமி
தோதி மிதித்தித் தனத்த தந்தவெ னிசையோடே
சூழ நடித்துச் சடத்தில் நின்றுயி
ரான துறத்தற் கிரக்க முஞ்சுப
சோப னமுய்க்கக் கருத்தும் வந்தருள் புரிவோனே
ஓதவெ ழுத்துக் கடக்க முஞ்சிவ
கார ணபத்தர்க் கிரக்க முந்தகு
ஓமெ னெழுத்துக் குயிர்ப்பு மென்சுட ரொளியோனே
ஓதி இணர்த்திக் குகைக்கி டுங்கன
காப ரணத்திற் பொருட்ப யன்தரு
ஊதி கிரிக்குட் கருத்து கந்தருள் பெருமாளே.

610. கோமள வெற்பினை ஒத்தத னத்தியர்
காமனை ஒப்பவர் சித்தம யக்கிகள்
கோவையி தழ்க்கனி நித்தமும் விற்பவர் மயில்காடை
கோகில நற்புற வத்தொடு குக்குட
ஆரணி யப்புள்வ கைக்குரல் கற்றவர்
கோலவி ழிக்கடை இட்டும ருட்டிகள் விரகாலே
தூமம லர்ப்பளி மெத்தைப டுப்பவர்
யாரையு மெத்திம னக்குளழைப்பவர்
சோலைவ னக்கிளி ஒத்தமொ ழிச்சியர் நெறிகூடா

தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
காசுப றிக்கம றித்துமு யக்கிகள்
தோதக வித்தைப டித்துந டிப்பவர் உறவாமோ

மாமர மொத்துவ ரிக்குள்நெ ருக்கிய
சூரனை வெட்டிநி ணக்குடலைக்கொடி
வாரண மெச்சவ ளித்தவ யிற்குக கதிர்காம

மாமலை யிற்பழ நிப்பதி யிற்றனி
மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பர
மாகிரி யிற்றிரை நித்தில முற்றருள் அலைவாயில்

ஏமவெ யிற்பல வெற்பினி னற்பதி
ஞாலக கத்தினி லுற்றுறு பத்தர்கள்
ஏதுநி னைத்தது மெச்சிய ளித்தருள் இளையோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி மெச்சிய சித்தவி
ராஜத லக்ஷண உத்தமி பெற்றருள் பெருமாளே.

611. கோலகா லத்தைவிட் டாசுபா டக்கொடிக்
கோவைபா டக்கொடிக் கொடிவாதிற்

கோடிகூ ளக்கவிச் சேனைசா டக்கெடிக்
கூறுகா ளக்கவிப் புலவோன்யான்

சீலகா லப்புயற் பாரிசா தத்தருத்
யாகமே ருப்பொருப் பெனவோதும்

சீதரா சித்ரவித் தாரமே செப்பிடக்
கேளொணு நிற்பதைத் தவிர்வேனோ

ஆலகா லப்பணிப் பாயல்நீ ளப்படுத்
தாரவா ரக்கடற் கிடைசாயும்

ஆழிமா லுக்குநற் சாமவே தற்குமெட்
டாதரூ பத்தினிற் சுடராய

காலகா லப்ரபுச் சாலுமா லுற்றுமைக்
காகவே ளைப்புகக் கழுநீராற்

காதும்வே ழச்சிலைப் பாரமீ னக்கொடிக்
காமவேள் மைத்துனப் பெருமாளே.

612. கோல குங்கும கற்புர மெட்டொன்
றுன சந்தன வித்துரு மத்தின்
கோவை செண்பக தட்பம கிழ்ச்செங் கழுநீரின்
கோதை சங்கிலி உற்றக ழுத்தும்.
பூஷ ணம்பல ஒப்பனை மெச்சுங்
கூறு கொண்டப ணைத்தனம் விற்கும் பொதுமாதர்
பாலு டன்கனி சர்க்கரை சுத்தந்
தேனெ னும்படி மெத்தரு சிக்கும்
பாத கம்பகர் சொற்களி லிட்டம் பயிலாமே
பாத பங்கய முற்றிட உட்கொண்
டோது கின்றதி ருப்புகழ் நித்தம்
பாடு மன்பது செய்ப்பதி யிற்றந் தவனீயே
தால முன்புப டைத்தப்ர புச்சந்
தேக மின்றிம திக்கவ திர்க்குஞ்
சாக ரஞ்சுவ றக்கிரி எட்டுந் தலைசாய
சாடு குன்றது பொட்டெழ மற்றுஞ்
சூர னும்பொடி பட்டிட யுத்தஞ்
சாத கஞ்செய்தி ருக்கைவி திர்க்குந் தனிவேலா
ஆல முண்டக ழுத்தினி லக்குந்
தேவ ரென்புந்நி ரைத்தெரி யிற்சென்
றுடு கின்றத கப்பனு கக்குங் குருநாதா
ஆட கம்புனை பொற்குடம் வைக்குங்
கோபு ரங்களி னுச்சியு டுத்துங்
காவி னன்குடி வெற்பினில் நிற்கும் பெருமாளே.

613. கோலக்காதிற் குழையாலே கோதிச்சேர்மைக் குழலாலே
ஞாலத்தாரைத் துயரேசெய் நாரிக்காசைப் படலாமோ
மேலைத்தேவர்க் கரியோனே வீரச்சேவற் கொடியோனே
காலப்பாசத் துயர்தீராய் கானப்பேரிற் பெருமாளே.

614. கோல மதிவதனம் வேர்வு தரவளக
பாரம் நெகிழவிழி வேல்கள் சுழலநுவல்
கோவை இதழ்வெளிற வாய்மை பதறியிள
முலையான

கோக னகவுபய மேரு மூலயசைய
நூலி னிடைதுவள வீறு பறவைவகை
கூற இனியகள மோல மிடவளைகள் கரமீதே
காலி னணிகனக நூபு ரமுமொலிகள்
ஓல மிடவதிக போக மதுமருவு
காலை வெகுசரச லீலை அளவுசெய மடமானார்
காதல் புரியுமநு போக நதியினிடை
வீழு கினுமடிமை மோச மறவுனது
காமர் கழலிணைக ளான வொருசிறிது மறவேனே
ஞால முழுதுமம ரோர்கள் புரியுமிக
லாக வருமவுணர் சேர உததியிடை
நாச முறவமர்செய் வீர தாகுமா முருகோனே
நாடி ஒருகுறமின் மேவு தினைசெய்புன
மீதி லியலகல்கல் நீழ லிடைநிலவி
நாணம் வரவிரக மோது மொருசதுர புரிவேலா
மேலை அமரர்தொழு மானை முகாரனை
ஓடி வலம்வருமுன் மோது திரைமகர
வேலை உலகைவல மாக வருதுரக மயில்வீரா
வீறு கவிசைவரு சேவ கனதிதய
மேவு முதல்வவயல் வாவி புடைமருவு
வீரை வருபழநி ஞான மலையில்வளர் பெருமாளே.

**615.** கோலமறை யொத்த மாலைதனி லுற்ற
கோரமதன் விட்ட கணையாலே
கோதலர் தருக்கள் மேவுபொழி லுற்ற
கோகிலமி குத்த குரலாலே
ஆலமென விட்டு வீசுகலை பற்றி
ஆரழலி றைக்கு நிலவாலே
ஆவிதளர் வுற்று வாடுமெனை நித்த
மாசைகொட ணைக்க வரவேணும்
நாலுமறை கற்ற நான்முகனு தித்த
நாரணனு மெச்சு மருகோனே

நாவலர்ம திக்க வேல்தனையெ டுத்து
நாகமறவிட்ட மயில்வீரா
சேலெனும் விழிச்சி வேடுவர் சிறுக்கி
சீரணி தனத்தில் அணைவோனே
*சீதவயல் சுற்று நாவல்தனி லுற்ற
தேவர்சிறை விட்ட பெருமாளே.

616. கோவைச் சுத்தத் துப்பத ரத்துக் கொடியார்தம்
கோலக் கச்சுக் கட்டிய முத்தத் தனமேவிப்
பாவத் துக்குத் தக்கவை பற்றித் திரியாதே
பாடப் பத்திச் சித்தமெ னக்குத் தரவேணும்
மாவைக் குத்திக் கர்ச்சித முற்றுப் பொரும்வேலா
மாணிக் கச்சொர்க் கத்தொரு தத்தைக் கினியோனே
சேவற் பொற்கைக் கொற்றவ கச்சிப் பதியோனே
தேவச் சொர்க்கச் சக்கர வர்த்திப் பெருமாளே.

617. கோவை வாயி தழுக்குந் தாக போக மளிக்குங்
கோதை மாதர் முலைக்குங் குறியாலும்
கோல மாலை வளைக்குந் தோளி னாலு மணத்தங்
கோதி வாரி முடிக்குங் குழலாலும்
ஆவி கோடி அவிக்குஞ் சேலி னாலு மயக்குண்
டாசை யாயி னுநித்தந் தளராதே
ஆசி லாத மறைக்குந் தேடொ ணாதொ ருவர்க்கொன்
றூடல் தாள்க ளெனக்கின் றருள்வாயே
சேவி லேறு நிருத்தன் தோகை பாக னளிக்குந்
த்யாக சீல குணத்தன் திருமாலும்
தேடொ ணாத பதத்தன் தீதி லாத மனத்தன்
தேயு வான நிறத்தன் புதல்வோனே
காவி டாத திருச்செங் கோடு நாடு தனக்குங்
காவி சூழ்வ யலிக்கும் ப்ரியமானாய்
காதி மோதி எதிர்க்குஞ் சூர ராவி கலக்குங்
கால னூடல் தவிர்க்கும் பெருமாளே.

---

*சீலமுமிகுத்த சோலைவளர்வெற்பில் தேவர்கள் துதித்த பெருமாளே.

618. சகசம்பக் குடைசூழ் சிவிகைமெல்
மதவின்பத் துடனே பலபணி
தனிதம்பட் டுடையோ டிகல்மூர சொலிவீணை
தவளந்தப் புடனே கிடுகிடு
நடைதம்பட் டமிடோல் பலவொலி
சதளம்பொற் றடிகா ரருமிவை புடைசூழ
வெகுகும்பத் துடனே பலபடை
கரகஞ்சுற் றிடவே வரவிசை
வெகுசம்பத் துடனே யழகுட னிதமேவும்
விருமஞ்சித் திரமா மிதுநொடி
மறையும்பொய்ப் பவுஷோ டுழல்வது
விடவும்பர்க் கரிதா மிணையடி தருவாயோ
திகுதந்தித் திகுதோ திகுதிகு
தகுதந்தித் தகுதோ தகுதகு
திகுர்தஞ்செச் செகசே செககண எனபேரி
திமிர்தங்கற் குவடோ டெழுகட
லொலிகொண்டற் றருவோ டலறிட
திரள்சண்டத் தவுணோர் பொடிபட விடும்வேலா
அகரம்பச் சுருவோ டொளியுறை
படிகம்பொற் செயலா ளரனரி
அயனண்டர்க் கரியா ளுமையருள் முருகோனே
அமிர்தம்பொற் குவடோ டிணைமுலை
மதிதுண்டப் புகழ்மான் மகளொடும்
அருள்செம்பொற் புலியூர் மருவிய பெருமாளே.

619. சகடத்திற் குழைவிட் டெற்றிக்
குழலுக்குச் சரம்வைத் தெற்றிப்
புளகித்துக் குவளைக் கட்பொற்
கணையொத்திட் டுழலச் சுத்தித்
தரளப்பற் பவளத் தொட்டக்
களபப்பொட் டுதவிட் டத்திக் குவடான
தனதுத்திப் படிகப் பொற்பிட்
டசையப்பெட் பசளைத் துப்புக்

கொடியொத் திட்டிடையிற் பட்டைத்
தகையிற்றொட் டுகளப் பச்சைச்
சரணத்துக் கியலச் சுற்றிச்
சுழலிட்டுக் கடனைப் பற்றிக் கொளுமாதர்

சுகமுற்றுக் கவலைப் பட்டுப்
பொருள்கெட்டுக் கடைகெட் டுச்சொற்
குளறிட்டுத் தடிதொட் டெற்றிப்
பிணியுற்றுக் கசதிப் பட்டுச்
சுகதுக்கத் திடர்கெட் டுற்றுத்
தளர்பட்டுக் கிடைபட் டுப்பிக் கிடைநாளில்

சுழலச்சக் கிரியைச் சுற்றிட்
டிறுகக்கட் டுயிரைப் பற்றிக்
கொளுகப்பற் பலரைக் கட்டிக்
கரம்வைத்துத் தலையிற் குத்திச்
சுடுகட்டைச் சுடலைக் கட்டைக்
கிரையிட்டுப் பொடிபட் டுக்கிச் சடமாமோ

திகுடத்திக் குகுடட் டுட்டுட்
டமடட்டட் டமடட் டிக்குட்
டிமிடிட்டிட் டிமிடிட் டிக்குத்
தொகுதொக்குத் தொகுதத் தொக்குச்
செகணக்கச் செகணச் செக்குத்
தகுடத்தத் தகுடத் தட்டுட் டிடிபேரி

திமிலைக்கைத் துடிதட் டெக்கைப்
பகடிட்டுப் பறையொத் தக்கட்
டிகையெட்டுக் கடல்வற் றித்தித்
தரவுக்கக் கிரியெட் டுத்தைத்
தியருக்குச் சிரமிற் றுட்கச்
சுரர்பொற்புச் சொரியக் கைத்தொட் டிடும்வேலா

பகலைப்பற் சொரியத் தக்கற்
பதிபுக்கட் டழலிட் டுத்திட்
புரமட்கிக் கழைவிற் புட்பச்
சரனைச்சுட் டயனைக் கொத்திப்

பரிவுக்கொட் பரமர்க் குச்சற்
குருவொத்துப் பொருளைக் கற்பித் தருள்வோனே
பவளப்பொற் கிரிதுத் திப்பொற்
றனகொச்சைக் கிளிசொற் பற்றிப்
பரிவுற்றுக் கமலப் புட்பத்
திகழ்பற்றிப் புணர்சித் ரப்பொற்
படிகத்துப் பவளப் பச்சைப்
பதமுத்துப் பழநிச் சொக்கப் பெருமாளே.

620. சகமாயை உற்ற நகைவாழ்வில் வைத்த
திருமாது கர்ப்பம் உடலூறித்
தசமாத முற்றி வடிவாய்நி லத்தில்
திறமாய ளித்த பொருளாகி
மகவாவி னுச்சி விழியான னத்தில்
மலைநேர்பு யத்தில் உறவாடி
மடிமீத டுத்து விளையாடி நித்த
மணிவாயின் முத்தி தரவேணும்
முகமாய மிட்ட குறமாதி னுக்கு
முலைமேல ணைக்க வருநீதா
முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்குள்
மொழியேயு ரைத்த குருநாதா
தகையாதெ னக்கு னடிகாண வைத்த
தனியேர கத்தில் முருகோனே
தருகாவி ரிக்கு வடபாரி சத்தில்
சமர்வேலெ டுத்த பெருமாளே.

621. சருகுடமுந்துங் கடலடைந்துங்
குளமகிழ்ந்துந் தோய்சங்கம்
கமுகடைந்தண் டமுதகண்டந்
தாளகந்தந் தேர்கஞ்சம்
சரமெனுங்கண் குமிழதுண்டம்
புருவெனுஞ்செஞ் சாபம்பொன் திகழ்மாதர்

சலசகெந்தம் புழுகுடன்சண்
பகமணங்கொண் டேய்ரண்டந்
தனகனம்பொன் கிரிவணங்கும்
பொறிபடுஞ்செம் பேர்வந்தண்
சலனசம்பொன் றிடைபணங்கின்
கடிதடங்கொண் டாரம்பொன் — தொடர்பார்வை
புகலல்கண்டஞ் சரிகரம்பொன்
சரணபந்தந் தோதிந்தம்
புரமுடன்கிண் கிணிசிலம்பும்
பொலியலம்புந் தாள்ரங்கம்
புணர்வணைந்தண் டுவரொடுந்தொண்
டிடர்கிடந்துண் டேர்கொஞ்சுங் — கடைநாயேன்
புகழுடைந்துன் கழல்பணிந்தொண்
பொடியணிந்தங் காநந்தம்
புனல்படிந்துண் டவசமிஞ்சுந்
தவசர்சந்தம் போலுந்திண்
புவனிகண்டின் றடிவணங்குஞ்
செயல்கொளஞ்செஞ் சீர்செம்பொன் கழல்தாராய்
திகுடதிந்திந் தகுடதந்தந்
திகுடதிந்திந் தோதிந்தம்
டகுடடண்டண் டிகுடடிண்டிண்
டகுடடண்டண் டோடிண்டிண்
டிமுடடிண்டிண் டுமுடடுண்டுண்
டிமுடடிண்டென் றேசங்கம் — பலபேரி
செககணஞ்சஞ் சலிகைபஞ்சம்
பறைமுழங்கும் போரண்டஞ்
சிலையிடிந்துங் கடல்வடிந்தும்
பொடிபறந்துண் டோர்சங்கஞ்
சிரமுடைந்தண் டவுணரங்கம்
பிணமலைந்தன் றூடுஞ்செங் — கதிர்வேலா
அகிலவண்டஞ் சுழலவெங்கும்
பவுரிகொண்டங் காடுங்கொன்
புகழ்விளங்குங் கவுரிபங்கன்

குருவெனுஞ்சிங் காரங்கொண்
டறுமுகம்பொன் சதிதுலங்கும்
திருபதங்கந் தாவென்றென் றமரோர்பால்
அலர்பொழிந்தங் கரமுகிழ்ந்தொண்
சரணமுங்கொண் டோதந்தம்
புனைகுறம்பெண் சிறுமியங்கம்
புணர்செயங்கொண் டேயம்பொன்
அமைவிளங்கும் புலிசரம்பொன்
திருநடங்கொண் டார்கந்தம் பெருமாளே.

622. சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவானில்
தங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுத் துலகோரைத்
துங்கவேள் செங்கைபொற் கொண்டல்நீ என்றுசொற்
கொண்டுதாய் நின்றுரைத் துழலாதே
துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினு லொன்றுரைக் கருள்வாயே
வெங்கண்வ்யா ளங்கொதித் தெங்குமேவ மென்றெடுத்
துண்டுமே லண்டருக் கமுதாக
விண்டநா தன்திருக் கொண்டல்பா கன்செருக்
குண்டுபே ரம்பலத் தினிலாடி
செங்கண்மால் பங்கயக் கண்பெரு தந்தரத்
தின்கணு டுந்திறற் கதிராழித்
திங்கள்வா ழுஞ்சடைத் தம்பிரா னன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

623. சங்குவார்முடி பொற்கழல் பொங்குசாமரை கத்திகை
தண்டுமாகரி பெற்றவன் வெகுகோடிச்
சந்தபாஷைகள் கற்றவன் மந்த்ரவாதிச துர்க்கவி
சண்டமாருத மற்றுள கவிராஜப்
பங்கிபாலச ரச்வதி சங்கநூல்கள்வி தித்தப்ர
பந்தபோதமு ரைத்திடு புலவோன்யான்

பண்டை மூவெழு வர்க்கெதிர் கண்டநீயுமெ னச்சில
பஞ்சபாதக ரைத்துதி செயலாமோ
வெங்கையானை வனத்திடை துங்கமாமுத லைக்குவெ
ருண்டுமூலமெ னக்கரு டனிலேறி
விண்பராவவ டுக்கிய மண்பராவவ தற்குவி
தம்பராவவ டுப்பவன் மருகோனே
கொங்கணுதித ரப்பெறு கொங்கினூடுசெ கித்திடு
கொங்கின்வீரக ணப்ரிய குமாரபொற்
கொங்குலாவுகு றக்கொடி கொங்கையேதழு விச்செறி
கொங்குராஜபு ரத்துறை பெருமாளே.

624. சங்கைக்கத் தோடு சிலுகிடு
சங்கிச்சட் கோல சமயிகள்
சங்கற்பித் தோதும் வெகுவித கலைஞானச்
சண்டைக்குட் கேள்வி அலமலம்
அண்டர்க்குப் பூசை யிடுமவர்
சம்பத்துக் கேள்வி அலமலம் இமவானின்
மங்கைக்குப் பாக னிருடிக
ளெங்கட்குச் சாமி எனவடி
வந்திக்கப் பேசி அருளிய சிவநூலின்
மந்த்ரப்ரஸ் தார தரிசன
யந்த்ரத்துக் கேள்வி அலமலம்
வம்பிற்சுற் றாது பரகதி அருள்வாயே
வெங்கைச்சுக் ரீபர் படையயி
லங்கைக்குப் போக விடவல
வென்றிச்சக் ரேசன் மிகமகிழ் மருகோனே
வெண்பட்டுப் பூணல் வனகமு
கெண்பட்டுப் பாளை விரிபொழில்
விஞ்சிட்டுச் சூழ வெயில்மறை வயலூரா
கொங்கைக்கொப் பாகும் வடகிரி
செங்கைக்கொப் பாகும் நறுமலர்
கொண்டைக்கொப் பாகும் முகிலென வனமாதைக்

கும்பிட்டுக் காதல் குனகிய
இன்பச்சொற் பாடும் இளையவ
கொங்கிற்பட் டாலி நகருறை பெருமாளே.

625. சங்கைதா னென்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்
சந்தோடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா னந்தமாயன்
மங்கைமார் கொங்கைசேர் அங்கமோ கங்களால்
வம்பிலே துன்புறாமே
வண்குகா நின்சொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ அன்பிலாள்வாய்
கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா
கம்பியா திந்த்ரலோ கங்கள்கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா
செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா
செங்கண்மால் பங்கஜா னன்தொழா னந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே.

626. சஞ்சரியு கந்து நின்றுமுரல் கின்ற
தண்குவளை யுந்து குழலாலும்
தண்டரள தங்க மங்கமணி கின்ற
சண்டவித கும்ப கிரியாலும்
நஞ்சவிழி யொன்றி தஞ்சமென வந்து
நம்பிவிட நங்கை யுடனாசை
நண்புறனை யின்று நன்றில்வினை கொன்று
நன்றுமயில் துன்றி வரவேணும்
கஞ்சமலர் கொன்றை தும்பைமகிழ் விஞ்சி
கந்திகமழ் கின்ற கழலோனே
கன்றிடுபி ணங்கள் தின்றிடுக ணங்கள்
கண்டுபொரு கின்ற கதிர்வேலா

செஞ்சொல்புனை கின்ற எங்கள்குற மங்கை
திண்புயம ணைந்த திருமார்பா
செண்பகமி லங்கு மின்பொழில்சி றந்த
சிங்கையில மர்ந்த பெருமாளே.

627. சஞ்சல சரீரமலை நாட்டர்கள்
மந்திரி குமாரர்படை யாட்சிகள்
சங்கட மகிபர்தொழ ஆக்கினை முடிசூடித்
தண்டிகை களிறுபரி மேற்றனி
வெண்குடை நிழலிலுல வாக்கன
சம்ப்ரம விபவசவு பாக்கிய முடையோராய்க்
குஞ்சமும் விசிறவிரு மாப்பொடு
பஞ்சணை மிசையிலிசை யாத்திரள்
கொம்புகள் குழல்கள்வெகு வாத்தியம் இயல்கீதம்
கொங்கண மகளிர்பெரு நாட்டிய
நன்றென மனதுமகிழ் பாத்திபர்
கொண்டய னெழுதும்யம கோட்டியை உணராரே
பஞ்சவர் கொடியவினை நூற்றுவர்
வென்றிட சகுனிகவ றுற்பொருள்
பங்குடை யவனிபதி தோற்றிட வனமேபோய்ப்
பண்டையில் விதியெனினை யாப்பனி
ரண்டுடை வருஷமுறை யாப்பல
பண்புடன் மறைவின்முறை யாற்றிரு வருளாலே
வஞ்சனை நழுவிநிரை மீட்சியில்
முந்துத முடையமனை வாழ்க்கையின்
வந்தபி னுரிமையது கேட்டிட இசையாநாள்
மண்கொள விசையன்விடு தேர்ப்பரி
உந்தினன் மருகவய லூர்க்குக
வஞ்சியி லமரர்சிறை மீட்டருள் பெருமாளே.

628. சதங்கைமணி வீரச் சிலம்பினிசை பாடச்
சரங்களொளி வீசப் புயமீதே
தனங்கள்குவ டாடப் படர்ந்தபொறி மால்பொற்
சரங்கண்மறி காதிற் குழையாட

இதங்கொள் மயிலேலொரோத் துகந்தகைகை பேசுற்
றிரம்பையழ கார்மைக் குழலாரோ
டிழைந்தமளி யோடுற் றழுந்துமெனை நீசற்
றிரங்கியிரு தாளைத் தருவாயே
சிதம்பரகு மாரக் கடம்புதொடை யாடச்
சிறந்தமயில் மேலுற் றிடுவோனே
சிவந்தகழு காடப் பிணங்கள்மலை சாயச்
சினந்தசுரர் வேரைக் களைவோனே
பொதும்பையெழு கோலச் செயங்கொள்சிவ காமிப்
ப்ரசண்டஅபி ராமிக் கொருபாலா
பெரும்புனம தேகிக் குறம்பெணொடு கூடிப்
பெரும்புலியூர் வாழ்பொற் பெருமாளே.

**629.** சதுரத்தரை நோக்கிய பூவொடு
கதிரொத்திட ஆக்கிய கோளகை
தழையச்சிவ பாக்கிய நாடக அநுபூதி
சரணக்கழல் காட்டியெ னாணவ
மலமற்றிட வாட்டிய ஆறிரு
சயிலக்குல மீட்டிய தோளொடு முகமாறும்
கதிர்சுற்றுற நோக்கிய பாதமு
மயில்விற்புற நோக்கிய னாமென
கருணைக்கடல் காட்டிய கோலமும் அடியேனைக்
கனகத்தினு நோக்கினி தாயடி
யவர்முத்தமி ழாற்புக வேபர
கதிபெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே
சிதறத்தரை நாற்றிசை பூதரம்
நெரியப்பறை மூர்க்கர்கள் மாமுடி
சிதறக்கட லார்ப்புற வேவயில் விடுவோனே
சிவபத்தினி கூற்றினை மோதிய
பதசத்தினி மூத்தவி நாயகி
செகமிப்படி தோற்றிய பார்வதி அருள்பாலா

விதுரற்கும ராக்கொடி யானையும்
விகடத்தற வாக்கிய மாதவன்
விசையற்குயர் தேர்ப்பரி யூர்பவன் மருகோனே

வெளியெட்டிசை சூர்ப்பொரு தாடிய
கொடிகைக்கொடு கீர்த்தியு லாவிய
விறல்மெய்த்திரு வேட்கள மேவிய பெருமாளே.

630. சத்தமிகு மேழுகட லைத்தேனை
உற்றமது தோடுகணை யைப்போர்கொள்
சத்திதனை மாவின்வடு வைக்காவி தனைமீறு

தக்கமணம் வீசுகம லப்பூவை
மிக்கவிளை வானகடு வைச்சீறு
தத்துகளும் வாளையடு மைப்பாவு விழிமாதர்

மத்தகிரி போலுமொளிர் வித்தார
முத்துவட மேவுமெழில் மிக்கான
வச்சிரகி ரீடநிகர் செப்பான தனமீதே

வைத்தகொடி தானமயல் விட்டான
பத்திசெய ஏழையடி மைக்காக
வஜ்ரமயில் மீதிலினி எப்போது வருவாயே

சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள்பனு வற்கார
திக்கினும்ந டாவுபுர விக்கார குறமாது

சித்தஅநு ராககல விக்கார
துட்டஅசு ரேசர்கல கக்கார
சிட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்

முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவனி தைக்கார
முச்சகர்ப ராவுசர ணக்கார இனிதான

முத்தமிழை ஆயும்வரி சைக்கார
பச்சைமுகில் தாவுபுரி சைக்கார
முத்தலவு வேலைநகர் முத்தேவர் பெருமாளே.

631\. சத்தி பாணீ நமோநம முத்தி ஞானீ நமோநம
தத்வ வாதீ நமோநம விந்துநாத
சத்து ரூபா நமோநம ரத்ந தீபா நமோநம
தற்பர தாபா நமோநம என்றுபாடும்
பத்தி பூணா மலையுல கத்தின் மானார் சவாதகில
பச்சை பாடீ ரபூஷித கொங்கைமேல்வீழ்
பட்டி மாடா னநாளுனை விட்டி ராமே உலோகித
பத்ம சீபா தநீயினி வந்துதாராய்
அத்ர தேவா யுதாசுர ருக்ர சேனா பதீசுசி
யர்க்ய சோமா சியாகுரு சம்ப்ரதாயா
அர்ச்ச னாவா கனாவய விக்குள் வாழ்நா யகாபுய
அட்ச மாலா தாராகுற மங்கைகோவே
சித்ர கோலா கலாவிர லக்ஷ்மி சாதா ரதாபல
திக்கு பாலா சிவாகம தந்த்ரபோதா
சிட்ட நாதா சிராமலை அப்பர் சாமீ மகாவ்ருத
தெர்ப்பை ஆசா ரவேதியர் தம்பிரானே.

632\. சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ
தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே.

633\. சந்தம் புனைந்து சந்தஞ் சிறந்த
தண்கொங்கை வஞ்சி மனையாளும்
தஞ்சம் பயின்று கொஞ்சுஞ் சதங்கை
தங்கும் பதங்கள் இளைஞோரும்
எந்தந் தனங்க ளென்றென்று நெஞ்சி
லென்றும் புகழ்ந்து மிகவாழும்
இன்பங் களைந்து துன்பங்கள் மங்க
இன்றுன் பதங்கள் தரவேணும்

கொந்தின் கடம்பு செந்தண் புயங்கள்
கொண்டங் கிலஞ்சி உறைவோனே
கொங்கின் புனஞ்செய் மின்கண்ட கந்த
குன்றம் பிளந்த கதிர்வேலா
ஐந்திந் த்ரியங்கள் வென்றொன்று மன்ப
ரங்கம் பொருந்தும் அழகோனே
அண்டம் பிளந்து வொன்றும் பரங்குன்
றன்பின் சிறந்த பெருமாளே.

634. சந்தனங் கலந்த குங்கு
மம்புனைந் தணிந்த கொங்கை
சந்திரந் ததும்ப சைந்து தெருவூடே
சங்கினங் குலுங்க செங்கை
எங்கிலும் பணிந்து டம்பு
சந்தனந் துவண்ட சைந்து வருமாபோல்
கொந்தளங் குலுங்க வஞ்சி
லம்புபொங் கவின்சு கங்கள்
கொஞ்சிபொன் தொடர்ந்தி டும்பொன் மடவார்தோள்
கொங்கைபைங் கரம்பு ணர்ந்த
ழிந்துணங் கலுந்த விர்ந்து
கொஞ்சுநின் சரண்க ளண்ட அருள்தாராய்
தந்தனந் தசெஞ்சி லம்பு
கிணிகிணின்கு லங்கள் கொஞ்ச
தண்டையம் பதம்பு லம்ப வருவோனே
சந்தனம் புனைந்த கொங்கை
கண்களுஞ் சிவந்து பொங்க
சண்பகம் புனங்கு றம்பொன் அணைமார்பா
வந்தநஞ் சுகந்த மைந்த
கந்தரன் புணர்ந்த வஞ்சி
மந்தரம் பொதிந்த கொங்கை உமையீனும்
மைந்தனென் றுகந்து விஞ்சு
மன்பணிந் தசிந்த அன்பர்
மங்கலின் றுளம்பு குந்த பெருமாளே.

635. சந்தனச வாது நிறைகற் பூர
குங்குமப டீர விரைகத் தூரி
தண்புழுக வாவு களபச் சீத வெகுவாசச்
சண்பகக லார வகுளத் தாம
வம்புதுகி லார வயிரக் கோவை
தங்கியக டோர தாவித் தார பரிதான
மந்தரம தான தனமிக் காசை
கொண்டுபொருள் தேடு மதிநிட் டூர
வஞ்சகவி சார இதயப் பூவை அனையார்கள்
வந்தியிடு மாய விரகப் பார்வை
அம்பிலுளம் வாடு மறிவற் றேனை
வந்தடிமை யாள இனியெப் போது நினைவாயே
இந்த்ரபுரி காவல் முதன்மைக் கார
சம்ப்ரமம யூர துரகக் கார
என்றுமக லாத இளமைக் கார குறமாதின்
இன்பஅனு போக சரசக் கார
வந்தஅசு ரேசர் கலகக் கார
எங்களுமை சேயெ னருமைக் கார மிகுபாவின்
செந்தமிழ்சொல் நாலு கவிதைக் கார
குன்றெறியும் வேலின் வலிமைக் கார
செஞ்சொலடி யார்கள் எளிமைக் கார எழில்மேவும்
திங்கள்முடி நாதர் சமயக் கார
மந்த்ரஉப தேச மகிமைக் கார
செந்தில்நகர் வாழும் அருமைத் தேவர் பெருமாளே.

636. சந்தனந் திமிர்ந்த ணைந்து
குங்குமங் கடம்பி லங்கு
சண்பகஞ் செறிந்தி லங்கு திரடோளும்
தண்டையஞ் சிலம்ப லம்ப
வெண்டையஞ் சலஞ்ச லென்று
சந்ததஞ் சதங்கை கொஞ்ச மயிலேறி

திந்திமிந் திமிந்தி மிந்தி
தந்தனந் தனந்த னென்று
சென்றசைந் துகந்து வந்து க்ருபையோடே
சிந்தையங் குலம்பு குந்து
சந்ததம் புகழ்ந்து ணர்ந்து
செம்பதம் பணிந்தி ரென்று மொழிவாயே
அந்தமந் திகொண்டி லங்கை
வெந்தழிந் திடும்ப கண்டன்
அங்கமுங் குலைந்த ரங்கொள் பொடியாக
அம்பகும் பனுங்க லங்க
வெஞ்சினம் புரிந்து நின்று
அம்புகொண் டுவென்ற கொண்டல் மருகோனே
இந்துவுங் கரந்த தும்பை
கொன்றையுஞ் சலம்பு னைந்தி
டும்பரன்*சிலம்ப மர்ந்த குமரேசா
இந்திரன் பதம்பெ றண்டர்
தம்பயங் கடிந்து பின்பு
†எங்கணன் கமர்ந்தி ருந்த பெருமாளே.

637. சந்த னம்பரி மளபுழு கொடுபுனை
கொங்கை வஞ்சியர் சரியொடு கொடுவளை
தங்கு செங்கையர் அனமென வருநடை மடமாதர்
சந்த தம்பொலி வழகுள வடிவினர்
வஞ்ச கம்பொதி மனதின ரனுகினர்
தங்கள் நெஞ்சக மகிழ்வுற நிதிதரில் அவர்மீதே
சிந்தை வஞ்சக நயமொடு பொருள்கவர்
தந்த்ர மந்த்ரிகள் தரணியி லணைபவர்
செம்பொ னிங்கினி யிலையெனில் மிகுதியு முனிவாகித்
திங்க ளொன்றினில் நெனல்பொரு ளுதவில
னென்று சண்டைகள் புரிதரு மயலியர்
சிங்கியுங்கொடு மிடிமையு மகலநின் அருள்கூர்வாய்

*தனன்பில் வந்த. †எண்கணங்.

மந்த ரங்குடை யெனநிரை யுறுதுயர்
சிந்த அன்றடர் மழைதனி லுதவிய
மஞ்செ னும்படி வடிவுறு மரிபுகழ் மருகோனே
மங்கை யம்பிகை மகிழ்சர வணபவ
துங்க வெங்கய முகன்மகிழ் துணைவநல்
வஞ்சி தண்குற மகள்பத மலர்பணி மணவாளா
தந்த னந்தன தனதன தனவென
வண்டு விண்டிசை முரல்தரு மணமலர்
தங்கு சண்பக முகிலள வுயர்தரு பொழில்மீதே
சங்கு நன்குமிழ் தரளமு மெழில்பெறு
துங்க வொண்பணி மணிகளும் வெயில்விடு
சண்பை யம்பதி மருவிய அமரர்கள் பெருமாளே.

638. சந்திதொறு நாண மின்றியகம் வாடி
உந்திபொரு ளாக அலைவேனோ
சங்கைபெற நாளு மங்கமுள மாதர்
தங்கள்வச மாகி அலையாமற்
சுந்தரம தாக எந்தன்வினை யேக
சிந்தைகளி கூர அருள்வாயே
தொங்குசடை மீது திங்களணி நாதர்
மங்கைரண காளி தலைசாயத்
தொந்திதிமி தோதி தந்திதிமி தாதி
என்றுநட மாடு மவர்பாலா
துங்கமுள வேடர் தங்கள்குல மாதை
மங்களம தாக அணைவோனே
கந்தமுரு கேச மிண்டசுரர் மாள
அந்தமுனை வேல்கொ டெறிவோனே
கம்பர்கயி லாசர் மைந்தவடி வேல
சிங்கைநகர் மேவு பெருமாளே

639. சந்திர வோலைகு லாவ கொங்கைகள்
மந்தர மாலந னீர்த தும்பநல்
சண்பக மாலைகு லாவி ளங்குழல் மஞ்சுபோலத்

தண்கயல் வாளிக ளூரி ளம்பிறை
விண்புரு வாரிதழ் கோவை யின்கனி
தன்செய லார்நகை சோதி யின்கதிர் சங்குமேவும்

கந்தரா தேமனு மார்ப ரம்பநல்
சந்தன சேறுட னூர்க வின்பெறு
கஞ்சுக மாமிட றேதை கொஞ்சிய ரம்பையாரைக்

கண்களி கூரவெ காசை கொண்டவர்
பஞ்சணை மீதுகு லாவி னுந்திரு
கண்களி ராறுமி ராறு திண்புய முங்கொள்வேனே

இந்திர லோகமு ளாரி தம்பெற
சந்திரர் சூரியர் தேர்ந டந்திட
எண்கிரி சூரர்கு ழாமி றந்திட கண்டவேலா

இந்திரை கேள்வர்பி தாம கன்கதி
ரிந்துச டாதரன் வாச வன்தொழு
தின்புற வேமனு நூல்வி ளம்பிய கந்தவேளே

சிந்துர மால்குவ டார்த னஞ்சிறு
பெண்கள்சி காமணி மோக வஞ்சியர்
செந்தினை வாழ்வளி நாய கொண்குக அன்பரோது

செந்தமிழ் ஞானத டாக மென்சிவ
கங்கைய ளாவும காசி தம்பர
திண்சபை மேவும னூச வுந்தர தம்பிரானே.

640. சமயபத்தி வ்ருதாத்தனை நினையாதே
சரணபத்ம சிவார்ச்சனை தனைநாடி
அமையசற்கு ருசாத்திர மொழிநூலால்
அருளெனக்கி னிமேற்றுணை தருவாயே
உமைமுலைத்த ருபாற்கொடு அருள்கூறி
உரியமெய்த்த வமாக்கிநல் உபதேசத்
தமிழ்தனைக்க ரைகாட்டிய திறலோனே
சமணரைக்க ழுவேற்றிய பெருமாளே.

641. சமரமுக வேலொத்த விழிபுரள வாரிட்ட
தனமசைய வீதிக்குள் மயில்போலு லாவியே
சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்ரு பாசுத்தர்
தமையுணர ராகத்தின் வசமாகமேவியே
உமதடியு ளுருக்கு மனுமரண மாயைக்கு
முரியவர்ம காதத்தை எனுமாயமாதரார்
ஒளிரமளி பீடத்தி லமடுபடு வேனுக்கு
முனதருள்க்ரு பாசித்தம் அருள்கூரவேணுமே
இமகிரிகு மாரத்தி அநுபவைப ராசத்தி
எழுதரிய காயத்ரி உமையாள்குமாரனே
எயினர்மட மானுக்கு மடலெழுதி மோகித்து
இதணருகு சேவிக்கு முருகாவிசாகனே
அமரர்சிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு
மதிகவித சாமர்த்ய கவிராஜராஜனே
அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த
அரியகதிர் காமத்தில் உரியாபிராமனே.

642. சயிலாங்க னைக்கு ருகியிடப்பக்
கங்கொடுத் தகம்பர் வெகுசாரி
சதிதாண்ட வத்தர் சடையிடத்துக்
கங்கைவைத் தநம்பர் உரைமாளச்
செயல்மாண்டு சித்த மவிழநித்தத்
த்வம்பெறப் பகர்ந்த உபதேசம்
சிறியேன்த னக்கு முரைசெயிற்சற்
றுங்குருத் துவங்கு றையுமோதான்
அயில்வாங்கி எற்றி உததியிற்கொக்
கன்தனைப் பிளந்து சுரர்வாழ
அகிலாண்ட முற்று நொடியினிற்சுற்
றுந்திறற் ப்ரசண்ட முழுநீல
மயில்தாண்ட விட்டு முதுகுலப்பொற்
குன்றிடித் தசங்க்ர மவிநோதா
மதுராந்த கத்து வடதிருச்சிற்
றம்பலத் தமர்ந்த பெருமாளே.

643. சரக்கே றித்தப் பதிவாழ் தொந்தப்
பரிக்கா யத்திற் பரிவோ டைந்துச்
சதிக்கா ரர்ப்புக் குலைமே விந்தச் செயல்மேவிச்
சலித்தே மெத்தச் சமுசா ரம்போற்
சுகித்தே சுற்றத் தவரோ டின்பத்
தழைத்தே மெச்சத் தயவோ டிந்தக் குடிபேணிக்
குரக்கோ ணத்திற் கழுநா யுண்பக்
குழிக்கே வைத்துச் சவமாய் நந்திக்
குடிற்கே நத்திப் பழுதாய் மங்கப் படுவேனைக்
குறித்தே முத்திக் குமரு வின்பத்
தடத்தே பற்றிச் சகமா யம்போய்க்
குலக்கால் வற்றச் சிவஞா னம்போற் கழல்தாராய்
புரக்கா டற்றுப் பொடியாய் மங்கக்
கழைச்சா பத்தைச் சடலா னுங்கப்
புகைத்தீ பற்றப் புரிவோ ரன்புற் றருள்வோனே
புடைத்தே எட்டுத் திசையோ ரஞ்சத்
தனிக்கோ லத்துப் புகுசூர் மங்கப்
புகழ்ப்போர் சத்திக்கிரையா நந்தத் தருள்வோனே
திருக்கா னத்திற் பரிவோ டந்தக்
குறக்கோ லத்துச் செயலா ளஞ்சத்
திகழ்ச்சீ ரத்திக் கழல்வா வென்பப் புணர்வோனே
சிவப்பே றுக்குக் கடையேன் வந்துட்
புகச்சீர் வைத்துக் கொளும்ஞா னம்போற்
றிருக்கா ளத்திப் பதிவாழ் கந்தப் பெருமாளே.

644. சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத
சடகசட மூட மட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ
கருணைபுரி யாதி ருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே
கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்ப மணிவோனே

தருணமிதை யாமி குத்த கனமதுறு நீள்ச வுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞான முத்தி பரகதியு நீகொ டுத்து
தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா
அருணதள பாத பத்ம மதுநினமு மேது திக்க
அரியதமிழ் தான ளித்த மயில்வீரா
அதிசயம நேகமுற்ற பழநிமலை மீது தித்த
அழகதிரு வேர கத்தின் முருகோனே.

645. சரத்தே உதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா எதிர்த்தே வருசூரைச்
சரிப்போ னமட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்றான் இருகூறாச்
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்
சிறைச்சே வல்பெற்றாய் வலக்கா ரமுற்றாய்
திருத்தா மரைத்தாள் அருள்வாயே
புரத்தார் வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தார் பரித்தார் சிரித்தார் எரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் மருத்தூர் மதனைக்
கரிக்கோ லமிட்டார் கனுக்கா னமுத்தே
கதிர்க்கா மமுற்றார் முருகோனே.

646. சரம்வெற் றிக்கய லாமெனும் வேல்விழி
சிலைவட் டப்புரு வார்குழல் கார்முகில்
தனமுத் துக்கிரி யாமெனு நூலிடை மடவார்கள்
சனுமெத் தப்பரி வாகிய மாமய
லிடும்உத் தித்திகழ் மால்கொடு பாவையர்
தகுதத் தக்கிட தோதகு தீதென விளையாடும்

விரகத் தூர்க்குண வேசைய ராசையர்
பணமெத் தப்பறி காரிகள் மாறிகள்
விதமெத் தக்கொடு மேவிகள் பாவிகள் அதிபோக

மெலிவுற் றுக்குறி நாறிகள் பீறிகள்
கலகத் தைச்செயு மோடிகள் பீடிகள்
விருதிட் டுக்குடி கேடிகள் சேடிகள் உறவாமோ

பொருவெற் றிக்கழை வார்சிலை யானுட
லெரிபட் டுச்சரு காய்விழ வேநகை
புகுவித் தப்பிறை வாழ்சடை யானிடம் ஒருமாது

புகழ்சத் திச்சிறு காவண மீதுறை
சிவபத் திப்பர மேஸ்வரி யாள்திரி
புவனத் தைப்பரி வாய்முத வீனுமை அருள்பாலா

திரையிற் பொற்கிரி யாடவும் வாசுகி
புணைவித் தூத்தலை நாளமு தார்சுவை
சிவபத் தர்க்கிது வாமென வேபகிர் அரிராமர்

திருவுற் றுப்பணி யாதிவ ராகர்தம்
மகளைப் பொற்றன வாசையொ டாடிய
திருமுட் டப்பதி வாழ்முரு காசுரர் பெருமாளே.

647. சரவண பவநிதி அறுமுக குருபர
சரவண பவநிதி அறுமுக குருபர
சரவண பவநிதி அறுமுக குருபர எனவோது

தமிழினி லுருகிய அடியவ ரிடமுறு
சனனம ரணமதை ஒழிவற சிவமுற
தருபிணி துளவர மெமதுயிர் சுகமுற அருள்வாயே

கருணைய விழிபொழி யொருதனி முதலென
வருகரி திருமுகர் துணைகொளு மிளையவ
கவிதைய முதமொழி தருபவ ருயிர்பெற அருள்நேயா

கடலுல கினில்வரு முயிர்படு மதிகன
கலகமி னையதுள கழியவும் நிலைபெற
கதியுமு னதுதிரு வடிநிழல் தருவதும் ஒருநாளே

திரிபுர மெரிசெயு மிறையவ ரருளிய
குமரச மரபுரி தணிகையு மிகுமுயர்
சிவகிரி யிலும்வட மலையிலு முலவிய வடிவேலா
தினமுமு னதுதுதி பரவிய அடியவர்
மனதுகு டியுமிரு பொருளிலு மிலகுவ
திமிரம லமொழிய தினகர னெனவரு பெருவாழ்வே
அரவணை மிசைதுயில் நரகரி நெடியவர்
மருகனெ னவெவரு மதிசய முடையவ
அமலிவி மலிபரை உமையவ ளருளிய முருகோனே
அதலவி தலமுதல் கிடுகிடு கிடுவென
வருமயி லினிதொளிர் ஷடுமையில் நடுவுற
அழகினு டனமரு மரகர சிவசிவ பெருமாளே.

648. சரவண ஜாதா நமோநம கருணைய தீதா நமோநம
சததள பாதா நமோநம அபிராம
தருணச காயா நமோநம நிருபகல் வீரா நமோநம
சமதள ஊரா நமோநம சகதீச
பரமசொ ரூபா நமோநம சுரபதி பூபா நமோநம
பரிமள நீபா நமோநம உமைகாளி
பகவதி பாலா நமோநம இகபர மூலா நமோநம
பவுருஷ சீலா நமோநம அருள்தாராய்
இரவியு மாகா சபூமியும் மதியமும் வாழ்வா கவானவ
ரெவர்களு மீடே றவேழ்கடல் முறையோவென்
றிடர்பட மாமே ருபூதர மிடிபட வேதா ணிசாசர
ரிகல்கெட மாசே னைமேலயில் விடுவோனே
மரகத ஆகா ரவாயனு மிரணிய ஆகா ரவேதனும்
வசுவெனு மாகா ரவீசனும் அடிபேண
மயிலுறை வாழ்வே விநாயக மலையுறை வேலா மகீதர
வனசர ராதா ரமாகிய பெருமாளே.

649. சரியு மவல யாக்கையு ளரியு முரிய தீப்பசி
தணிகை பொருடி ராப்பகல் தடுமாறுஞ்
சகல சமய தார்க்கிகர் கலக மொழிய நாக்கொடு
சரண கமல மேத்திய வழிபாடற்

நீரிய துரிய மேற்படு கருவி கரண நீத்ததொ
ரறிவின் வடிவ மாய்ப்புள கிதமாகி
அவச கவச மூச்சற அமரு மமலர் மேற்சில
ரதிப திவிடு பூக்கணை படுமோதான்
விரியு முதய பாஸ்கர கிரண மறைய வார்ப்பெழ
மிடையு மலகில் தேர்ப்படை ஒடுசூழும்
விகட மகுட பார்த்திப ரணவ ருடனு நூற்றுவர்
விசைய னொருவ னூற்பட ஒருநூது
திரியு மொருப ராக்ரம அரியின் மருக பார்ப்பதி
சிறுவ தறுகண் வேட்டுவர் கொடிகோவே
திமிர உததி கூப்பிட அவுணர் மடிய வேற்கொடு
சிகரி தகர வீக்கிய பெருமாளே.

650. சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய
சமயபே தத்தினுக் கணுகொணு மெய்ப்பொருட்
டருபரா சத்தியுட் சிவமாகித்
துரியமே லற்புதப் பரமஞா னத்தினிற்
சுடர்வியா பித்தநற் பதிநீடு
துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரூ பத்தையுற் றடைவேனோ
புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்தியப்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்
புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே
கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்
கதலிசூழ் தெற்றிசைப் பயிலுமீ ழத்தினிற்
கதிரகா மக்கிரிப் பெருமாளே.

651. சரியையிது வீறு கிரியையிது யோக
தவசுமிகு ஞான மெனவோதுஞ்
சதுருவித மான நெறிகள் தவறாத
தலைமையடியார்கள் அடிபேணி

உரியதவநெறிசேவல் மனதுவிசுவாச
மொடுசெயடியார்கள் பதசேவை
ஒருபொழுதுதானு மிடைவிடலிலாம
லுவகையுடனேசெய் திடுவேனோ
திரிபுரமும்நீறு படநகைசெயாதி
திருமுருகனூர குமரேசா
செகதலமொரேழு மடையவுணுமாயர்
திகழ்மருகனாக வருவோனே
கரமுமிருநாலு முகமுமொருநாலு
கமலர்சிறையாக முனிவோனே
கழனிநெடுவாளை கழுகொடியமோது
காபுரியில்வீறு பெருமாளே.

652\. சருவிய சாத்திரத் திரளான
சடுதிக மூரஸ்பதத் தமையாத
அருமறை யாற்பெறற் கரிதாய
அனிதய வார்த்தையைப் பெறுவேனோ
நிருதரை மூக்கறுத் தெழுபார
நெடுதிரை யார்ப்பெழப் பொருதோனே
பொருளடி யாற்பெறக் கவிபாடும்
புலவரு சாத்துணைப் பெருமாளே.

653\. சருவிபி கழ்ந்தும ருண்டுவெ குண்டுறு
சமயமு மொன்றிலை யென்றவ ரும்பறி
தலையரு நின்றுக லங்கவி ரும்பிய தமிழ்கூறும்
சவிதையு நன்றியும் வென்றியு மங்கள
பெருமைக ளுங்கன முங்குண மும்பயில்
சரவண மும்பொறை யும்புக ழுந்திகழ் தனிவேலும்
விருதுது லங்கசி கண்டியி லண்டரு
முருகிவ ணங்கவ ரும்பத மும்பல
விதரண முந்திற முந்தர முந்தினை புனமானின்

மிருகமத குங்கும கொங்கையில் நொந்தடி
வருடிம ணந்துபு ணர்ந்தது வும்பல
விஜயமு மன்பின்மொ ழிந்துமொ ழிந்தியல் மறவேனே
கருதியி லங்கைய ழிந்துவி டும்படி
அவுணர டங்கம டிந்துவி ழும்படி
கதிரவ னிந்துவி ளங்கிவ ரும்படி விடுமாயன்
கடகரி யஞ்சிந டுங்கிவ ருந்திடு
மடுவினில் வந்துத வும்புய லிந்திரை
கணவன ரங்கமு குந்தன்வ ருஞ்சக டறமோதி
மருதகு லுங்கிந லங்கமு னிந்திடு
வரதன லங்கல்பு னைந்தரு ளுங்குறள்
வடிவனெ டுங்கடல் மங்கவொ ரம்புகை தொடுமீளி
மருகபு ரந்தர னுந்தவ மொன்றிய
பிரமபு ரந்தனி லுங்கிரி யெங்கணும்
வழிபடுமன்பர்ம னந்தனி லும்உறை பெருமாளே.

654. சருவும்படி வந்தன னிங்கித
மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர் கண்களில் வசமாகிச்
சயிலங்கொளு மன்றல்பொ ருந்திய
பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
தடவஞ்சனை துன்றியெ ழுந்திடு திறமான
இரவும்பக லந்தியு நின்றிடு
குயில்வந்திசை தெந்தென வென்றிட
இருகண்கள்து யின்றிட லின்றியும் அயர்வாகி
இவணெஞ்சுப தன்பத னென்றிட
மயல்கொண்டுவ ருந்திய வஞ்சகன்
இனியுன்றன்ம லர்ந்தில கும்பதம் அடைவேனோ
திருவொன்றிவி ளங்கிய அண்டர்கள்
மனையின்தயி ருண்டவ னெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன் வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் மஞ்சுநி றம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
செயதுங்கமு குந்தன்ம கிழ்ந்தருள் மருகோனே

மருவுங்கடல் துந்துமி யுங்குட
முழவங்கள்கு மின்குமி னென்றிட
வளமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே
மதியுங்கதி ரும்புய லுந்தின
மறுகும்படி அண்டமி லங்கிட
வளர்கின்றப ரங்கிரி வந்தருள் பெருமாளே.

655. சலமல மசுத்த மிக்க தசைகுரு தியத்தி மொய்த்த
தடியுடல் தனக்கு ளூற்று மிகுமாயம்
சகலமு மியற்றி மத்த மிகுமிரு தடக்கை யத்தி
தனிலுரு மிகுத்து மக்க ளொடுதாரம்
கலனணி துகிற்கள் கற்பி னொடுகுல மனைத்து முற்றி
கருவழி அவத்தி லுற்று மகிழ்வாகிக்
கலைபல பிடித்து நித்த மலைபடு மநர்த்த முற்ற
கடுவினை தனக்குள் நிற்ப தொழியாதோ
மலைமக ளிடத்து வைத்து மதிபுனல் சடைக்குள் வைத்து
மழுவனல் கரத்துள் வைத்து மருவார்கள்
மடிவுற நினைத்து வெற்பை வரிசிலை இடக்கை வைத்து
மறைதொழ நகைத்த அத்தர் பெருவாழ்வே
பலதிசை நடுக்கமுற்று நிலைகெட அடற்கை உற்ற
படையது பொருப்பில் விட்ட முருகோனே
பழுதறு தவத்தி லுற்று வழிமொழி உரைத்த பத்தர்
பலருய அருட்கண் வைத்த பெருமாளே.

656. சலமலம் விட்டத் தடம்பெ ருங்குடில்
சகலவி னைக்கொத் திருந்தி டும்படி
சதிரவு றுப்புச் சமைந்து வந்தொரு தந்தைதாயும்
தரவரு பொய்க்குட் கிடந்த கந்தலில்
உறையுமு யிர்ப்பைச் சமன்து ரந்தொரு
தனியிலி ழுக்கப் படுந்த ரங்கமும் வந்திடாமுன்
பலவுரு வத்தைப் பொருந்தி யன்றுயர்
படியுநெ ளிக்கப் படர்ந்த வன்கணை
படமயில் புக்குத் துரந்து கொண்டிகல் வென்றிவேலா

பரிமள மிக்கச் சிவந்த நின்கழல்
பழுதற நற்சொற் றெரிந்து மன்பொடு
பகர்வதி னிச்சற் றுகந்து தந்திட வந்திடாயோ
சிலையுமெ னப்பொற் சிலம்பை முன்கொடு
சிவமய மற்றுத் திடங்கு லைந்தவர்
திரிபுர மத்தைச் சுடுந்தி னந்தரி திண்கையாளி
திருமகள் கச்சுப் பொருந்தி டுந்தன
தெரிவையி ரக்கத் துடன்பி றந்தவள்
திசைகளி லொக்கப் படர்ந்தி டம்பொரு கின்றஞானக்
கலைகள ணைக்கொத் தடர்ந்து வம்பலர்
நதிகொள கத்திற் பயந்து கம்பர்மெய்
கருகஇ டத்திற் கலந்தி ருந்தவள் கஞ்சபாதம்
கருணைமி குத்துக் கசிந்து ளங்கொடு
கருதும வர்க்குப் பதங்கள் தந்தருள்
கவுரிதி ருக்கொட் டமர்ந்த இந்திரர் தம்பிரானே.

657. சாகர மாதவ சாகர மாபிறவி
யாகிய சாகர மதின்மூழ்கி
சாவது மேபிற சாவது மாமிவை
சாதக மானவை ஒழியாமல்
ஆகர மாய்உழல் ஆகர மாகர
ராவச மாமன மருளாதே
* * *
* * * * *
சேகர சேவித போதவி தாகர
சேடச யாபதி மருகோனே
சேய சராசெக சேவல தாகர
சேடவ னுபதி உறைவோனே
லோக தயாநிதி லோகப யோததி
லோகவ னுபதி உறைவோனே
லோல சராசர லோகமி யாவையு
லோதிக மாயருள் பெருமாளே.

658. சாங்கரி பாடியிட வோங்கிய ஞானசுக
தாண்டவ மாடியவர் வடிவான
சாந்தம தீதமுணர் கூந்தம சாதியவர்
தாங்களு ஞானமுற அடியேனும்
தூங்கிய பார்வையொடு தாங்கிய வாயுவொடு
தோன்றிய சோதியொடு சிவயோகம்
தூண்டிய சீவனொடு வேண்டிய காலமொடு
சோம்பினில் வாழும்வகை அருளாயோ
வாங்கைகை யானையென வின்குலை வாழைவளர்
வான்பொழில் சூழும்வய லயலேறி
மாங்கனி தேனொழுக வேங்கையின் மேலரிகள்
மாந்திய வாரணிய மலைமீதிற்
பூங்கொடி போலுமிடை ஏங்கிட வாரமணி
பூண்பன பாரியன தனபாரப்
பூங்குற மாதினுட னுங்குற வாடியிருள்
பூம்பொழில் மேவிவளர் பெருமாளே.

659. சாந்தமில் மோகவெறி காந்திய வாவநில
மூண்டவி யாதசம யவிரோத
சாங்கலை வாரிதியை நீந்தவொ ணாதுலகர்
தாந்துணை யாவரென மடவார்மேல்
ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பினொடு
தோய்ந்துரு காவறிவு தடுமாறி
ஏங்கிட ஆருயிரை வாங்கிய காலன்வசம்
யான்தனி போய்விடுவ தியல்போதான்
காந்திள ரூபபுன மான்தரு கானமயில்
காந்தவி சாகசர வணவேளே
காண்டகு தேவர்பதி ஆண்டவ னேசுருதி
ஆண்டகை யேயிபமின் மணவாளா
வேந்தகு மாரகுக சேந்தம யூரவட
வேங்கட மாமலையில் உறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டிய வாறுதவும் பெருமாளே.

660. சாந்துட னேபுழுகு தோய்ந்தழ கார்குழலை
மோந்துப யோதரம தனையாகச்
சாய்ந்துப்ர தாபமுடன் வாழ்ந்தனு ராகசுக
காந்தமொ டேசியென மடவார்பால்
கூர்ந்தக்ரு பாமனது போந்துன தாள்குறுகி
ஓர்ந்துண ராவுணர்வி லடிநாயேன்
கூம்பவிழ் கோகனக பூம்பத கோதிலிணை
பூண்டுற வாடுதின முளதோதான்
பாந்தளின் மீதினிதி னேங்குக ணேதுயில்கொள்
நீண்டிடு மாலொடயன் அறியாது
பாம்புரு வானமுநி வாம்புலி யானபதன்
ஏய்ந்தெதிர் காணநட மிடுபாதர்
பூந்துணர் பாதிமதி வேய்ந்தச டாமகுட
மாங்கன காபுரியில் அமர்வாழ்வே
பூங்கமு கார்வுசெறி யூங்கன காபுரிசை
சூழ்ம்புலி யூரிலுறை பெருமாளே.

661. சாலநெடு நாள்மடந்தை காயமதி லேயலைந்து
சாமளவ தாகவந்து புவிமீதே
சாதகமு மானபின்பு சீறியழு தேகிடந்து
தாரணியி லேதவழ்ந்து விளையாடிப்
பாலனென வேமொழிந்து பாகுமொழி மாதர்தங்கள்
பாரதன மீதணைந்து பொருள்தேடிப்
பார்மிசையி லேயுழன்று பாழ்நரகெய் தாமலுன்றன்
பாதமலர் சேரவன்பு தருவாயே
ஆலமமு தாகவுண்ட ஆறுசடை நாதர்திங்கள்
ஆடரவு பூண்டஅண்ணல் அருள்பாலா
ஆனைமடு வாயு மூன்று ஓலமென மூலமென்ற
ஆதிமுதல் நாரணன்றன் மருகோனே

கோலமலர் வாவிளங்கு மேவுபுனம் வாழ்மடந்தை
 கோவையித ழூறலுண்ட குமரேச
கூடிவரு சூரடங்க மாளவடி வேலெறிந்த
 *கோடைநகர் வாழ வந்த பெருமாளே.

662. சாவா மூவா வேளே போல்வாய்
 தாளா வேனுக் கருள்கூரும்
தாதா வேனா தாவே கோவே
 சார்பா னோர்கட் குயிர்போல்வாய்
ஏவால் மாலே போல்வாய் காரே
 போல்வா யீதற் கெனையாள்கென்
றேயா பாடா வாழ்வோர் பாலே
 யான்வீ ணேகத் திடலாமோ
பாவா நாவாய் வாணீ சார்வார்
 பாரா வாரத் தரகேசப்
பாய்மீ தேசாய் வார்கா ணூதே
 பாதா ளாழத் துறுபாதச்
சேவா மாவூர் கோமான் வாழ்வே
 சீமா னேசெச் சையமார்பா
சேயே வேளே பூவே கோவே
 தேவே தேவப் பெருமாளே.

663. சிகர மருந்த வாழ்வது சிவஞானம்
 சிதறி யலைந்து போவது செயலாசை
மகர நெருங்க வீழ்வது மகமாய
 மருவி நினைந்தி டாவருள் புரிவாயே
அகர நெருங்கி னுமைய முறவாகி
 அவச மொடுங்கை யாறொடு முனமேகிக்
ககன மிசைந்த சூரியர் புகமாயை
 கருணை பொழிந்து மேவிய பெருமாளே.

---

*கூடல் நகர் வாழ வந்த பெருமாளே.

664. சிகரிக ளிடிய நடநவில் கலவி
செவ்வி மலர்க்க டம்பு சிறுவாள்வேல்
திருமுக சமுக சததள முளரி
திவ்ய கரத்தி ணங்கு பொருசேவல்
அகிலடி பறிய எறிதிரை யருவி
ஐவன வெற்பில் வஞ்சி கணவாஎன்
றகிலமு முணர மொழிதரு மொழியி
னல்லது பொற்ப தங்கள் பெறலாமோ
நிகரிட அரிய சிவசுத பரம
நிர்வச னப்ர சங்க குருநாதா
நிரைதிகழ் பொதுவர் நெறிபடு பழைய
நெல்லி மரத்த மர்ந்த அபிராம
வெகுமுக ககன நதிமதி யிதழி
வில்வ முடித்த நம்பர் பெருவாழ்வே
விகசித கமல பரிமள கமல
வெள்ளி கரத்த மர்ந்த பெருமாளே.

665. சித்தி ரத்திலுமி குத்த பொற்பவள
மொத்த மெத்தஅழ குற்ற குத்துமுலை
சிற்ப சிற்பமயி ரொத்த சிற்றிடைய வஞ்சிமாதர்
சித்த மத்தனையு முற்ற ளப்பகடல்
மொய்த்த சிற்றுமண லுக்கு மெட்டியது
சிக்கு மைக்குழல்கள் கத்து ரிப்பரிம ளங்கள்வீசப்
பத்தி ரத்திலுமி குத்த கட்கயல்கள்
வித்து ருத்தநுவ ளைத்த நெற்றிவனை
பற்க ளைப்பளிரெ னச்சி ரித்துமயல் விஞ்சைபேசிப்
பச்சை ரத்நமயி லைப்பொ லத்தெருவி
லத்தி யொத்தமத மொத்து நிற்பர்வலை
பட்டு ழைத்துகுழி யுற்ற அத்திஎன மங்குவேனோ
தத்த னத்தனன தத்த னத்தனன
தித்தி மித்திமிதி மித்தி மித்திமித
தக்கு டுக்குடுடு டுக்கு டுக்குடென சங்குபேரி

சத்த முற்றுகடல் திக்கு ளக்கிரிகள்
நெக்கு விட்டுமுகி லுக்கு ஸர்ப்பமுடி
சக்கி முக்கிவிட கட்க துட்டசுர ரங்கமாள
வெற்றி யுற்றகதிர் பத்தி ரத்தையரு
ளிச்சு ரர்க்கதிப திப்ப தத்தையுறு
வித்த ளித்துமதி பெற்ற தத்தைமண முண்டவேலா
வெட்கி டப்பிரம னைப்பி டித்துமுடி
யைக்கு லைத்து *நட லைச்செ ருக்கையழி
வித்த ரத்தர்புகழ் கச்சி யுற்றுமகிழ் தம்பிரானே.

666. சிந்துர கூரம ருப்புச் செஞ்சரி
செங்கைகு லாவந டித்துத் தென்புற
செண்பக மாலைமு டித்துப் பண்புள தெருவூடே
சிந்துகள் பாடிமு ழக்கிச் செங்கயல்
அம்புகள் போலவி ழித்துச் சிங்கிடை
செம்பவ ளாடைது லக்கிப் பொன்பறி விலைமாதர்
வந்தவ ராரென ழைத்துக் கொங்கையை
அன்புற மூடிநெ கிழ்த்திக் கண்பட
மஞ்சணி ராடிமி னுக்கிப் பஞ்சணை தனிலேறி
மந்திர மோகமெ ழுப்பிக் கெஞ்சிட
முன்றலை வாயில டைத்துச் சிங்கிகொள்
மங்கைய ராசைவி லக்கிப் பொன்பதம் அருள்வாயே
இந்திர நீலவ னத்திற் செம்புவி
அண்டக டாகம ளித்திட் டண்டர்கள்
எண்படு சூரைய ழித்துக் கொண்டருள் ஒருபேடி
இன்கனை தேரைந டத்திச் செங்குரு
மண்டல நாடும ளித்துப் பஞ்சவர்
இன்புறு தோழ்மையு டைக்கத் தன்திரு மருகோனே
சந்திர சூரியர் திக்கெட் டும்புகழ்
அந்தமில் வாழ்வது பெற்றுத் தங்கிய
சங்கர னார்செவி புக்கப் பண்பருள் குருநாதா

*சிறை வைத்து முத்தர்புகழ் விற்கு டிப்பதியி விச்சை யுற்று மகிழ் தம்பிரானே.

சம்ப்ரம மானகு றத்திக் கின்புறு
கொங்கையின் மேவுச மர்த்தச் சுந்தர
தண்டமிழ் சேர்பழ நிக்குட் டங்கிய பெருமாளே.

667. சிந்துற்றெழு மாமதி அங்கித் திரளாலே
தென்றற்றரு வாசமி குந்துற் றெழலாலே
அந்திப்பொழு தாகிய கங்குற் றிரளாலே
அன்புற்றெழு பேதைம யங்கித் தனியானள்
நந்துற்றிடு வாரியை மங்கத் திகழாயே
நஞ்சொத்தொளிர் வேலினை யுந்திப் பொருவேளே
சந்தக்கவி நூலினர் தஞ்சொற் கினியோனே
சண்பைப்பதி மேவிய கந்தப் பெருமாளே.

668. சிரத்தானத் திற் பணியாதே
செகத்தோர் பற்றைக் குறியாதே
வருத்தா மற்றொப் பிலதான
மலர்த்தாள் வைத்தெத் தனைஆள்வாய்
நிருத்தா கர்த்தத் துவநேசா
நினைத்தார் சித்தத் துறைவோனே
திருத்தாள் முத்தர்க் கருள்வோனே
திருக்கா ளத்திப் பெருமாளே.

669. சிரமங்க மங்கைகண் செவிவஞ்ச நெஞ்சுசெஞ்
சலமென்பு திண்பொருந் திடுமாயம்
சிலதுன்ப மின்பமொன் றிறவந்து பின்புசெந்
தழலின்கண் வெந்துசிந் திடஆவி
விரைவின்க ணந்தகன் பொரவந்த தென்றுவெந்
துயர்கொண்ட லைந்துலைந் தழியாமுன்
வினையொன்று மின்றிநன் றியலொன்றி நின்பதம்
வினவென்று ளன்புதந் தருள்வாயே
அரவின்கண் முன்துயின் றருள்கொண்ட லண்டர்கண்
டமரஞ்ச மண்டிவந் திடுசூரன்
அகலம்பி ளந்தணைந் தகிலம்ப ரந்திரங்
கிடவன்று டன்றுகொன் றிடும்வேலா

மரைவெங்க யம்பொருந் திடவண்டி னங்குவிந்
திசையொன்ற மந்திசந் துடனாடும்
வரையின்கண் வந்துவண் குறமங்கை பங்கயம்
வாநின்று கும்பிடும் பெருமாளே.

670. சிரித்துச் சங்கொளி யாமின லாமென
உருக்கிக் கொங்கையி னூலுற மேல்விழு
க்ஷணத்திற் சம்பள மேபறி காரிகள் பலபேரைச்
சிமிட்டிக் கண்களி னூலுற வேமயல்
புகட்டிச் செந்துகி லால்வெளி யாயிடை
திருத்திப் பண்குழ லேய்முகி லோவிய மயில்போலே
அருக்கிப் பண்புற வேகலை யால்முலை
மறைத்துச் செந்துவர் வாயமு தூறல்க
ளளித்துப் பொன்குயி லாமென வேகுரல் மிடறோசை
அசைத்துக் கொந்தள வோலைக ளார்பணி
மினுக்கிச் சந்தன வாசனை சேறுட
னமைத்துப் பஞ்சணை மீதணை மாதர்கள் உறவாமோ
இரைத்துப் பண்டம ராவதி வானவ
ரொளித்துக் கந்தசு வாமிப ராபர
மெனப்பட் டெண்கிரி ஏழ்கடல் தூள்பட அசுரார்கள்
இறக்கச் சிங்கம தேர்பரி யானையொ
டுறுப்பிற் செங்கழு கோரிகள் கூளியொ
டிரத்தச் சங்கம தாடிட வேல்விடு மயில்வீரா
சிரித்திட் டம்புர மேமத னுருட
லெரித்துக் கண்டக பாலியர் பாலுறை
திகழ்ப்பொற் சுந்தரி யாள்சிவ காமிநல் கியசேயே
திருச்சித் தந்தனி லேகுற மானினை
யிருத்திக் கண்களி கூர்திக ழாடக
திருச்சிற் றம்பல மேவியு லாவிய பெருமாளே.

671. சிலைநுதல் வைத்துச் சிறந்த குங்கும
திலகமு மிட்டுக் குளிர்ந்த பங்கய
திருமுக வட்டத் தமர்ந்த மென்குமிழ் தனிலேறிச்

செழுமணி ரத்னத் திலங்கு பைங்குழை
தனைமுனி வுற்றுச் சிவந்து நஞ்சணி
செயலினை ஒத்துத் தயங்கு வஞ்சக விழிசீறிப்
புலவியி குத்திட் டிருந்த வஞ்சியர்
பதமல ருக்குட் பணிந்த ணிந்தணி
புரிவளை கைக்குட் கலின்க லென்றிட அநுராகம்
புகழ்நல மெத்தப் புரிந்து கொங்கையி
லுருகிய ணைத்துப் பெரும்ப்ரி யங்கொடு
புணரினும் நிற்பொற் பதந்தினந்தொறு மறவேனே
கலைமதி வைத்துப் புனைந்த செஞ்சடை
மலைமகள் பக்கத் தமர்ந்தி ருந்திட
கனைகழ லிட்டுக் கணின்க ணென்றிட நடமாடும்
கருணையர் செக்கர்த் ரியம்ப கன்தரு
முருகபு னத்திற் றிரிந்த மென்கொடி
கனதன வெற்பிற் கலந்த ணைந்தருள் புயவேளே
அலைகடல் புக்குப் பொரும்பெ ரும்படை
அவுணரை வெட்டிக் களைந்து வென்றுயர்
அமரர்தொ ழப்பொற் சதங்கை கொஞ்சிட
வருவோனே
அடியவ ரச்சத் தழுங்கி டுந்துயர்
தனையொழி வித்துப் பெரும் ப்ரியந்தரு
அருணகி ரிக்குட் சிறந்த மர்ந்தருள் பெருமாளே.

672. சிவஞான புண்டரிக மலர்மாது டன்கலவி
சிவபோக மன்பருக அறியாமல்
செகமீது மூன்றுமல வடிவாயி ருந்துபொது
திகழ்மாதர் பின்செருமி அழிவேனோ
தவமாத வங்கள்பயில் அடியார்க ணங்களொடு
தயவாய்ம கிழ்ந்துதினம் விளையாடத்
தமியேன்ம லங்களிரு வினைநோயி டிந்தலற
தநிநாளும் வந்தநிதன்முன் வரவேணும்
உவகாரி அன்பர்பணி கலியாணி எந்தையிட
முறைநாய கங்கவுரி சிவகாமி

ஒளிராணை யின்கரமில் மகிழ்மாது ளங்கனியை
ஒருநாள்ப கிர்ந்தவுமை அருள்பாலா
அவமேபி றந்தஎனை இறவாம லன்பர்புகு
மழுதால யம்பதவி அருள்வோனே
அழகாந கம்பொலியு மயிலாகு றிஞ்சிமகிழ்
அயிலாபு கழ்ந்தவர்கள் பெருமாளே.

673. சிவமா துடனே அநுபோ கமதாய்
சிவஞா னமுதே பசியாறித்
திகழ்வோ டிருவோ ரொருரூ பமதாய்த்
திசைலோ கமெலாம் அநுபோகி
இவனே எனமா லயனோ டமரோ
ரிளையோ னெனவே மறையோத
இறையோ னிடமாய் விளையா டுகவே
யியல்வே லுடன்மா அருள்வாயே
தவலோ கமெலா முறையோ எனவே
தழல்வேல் கொடுபோ யசுராரைத்
தலைதூள் படவேழ் கடல்தூள் படமா
தவம்வாழ் வுறவே விடுவோனே
கவர்பூ வடிவாழ் குறமா துடன்மால்
கடனு மெனவே அணைமார்பா
கடையேன் மிடிதூள் படநோய் விடவே
கனல்மால் வரைசேர் பெருமாளே.

674. சிவனார்ம னங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாதா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியுளம் நினையாமல்
அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலும்
அடியேனை அஞ்சலென வரவேணும்
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே
நவநீத முந்திருடி உரலோடெ ஒன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே

நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே
தெவயானை அங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே.

675. சிறுபறைய முரசுதுடி சத்தக் கணப்பறைய
மொகுமொகென அதிரவுட னெட்டிப் பிடித்துமுடி
சிறுகயிறு நெடிதுகொடு கட்டிட் டிழுக்கவினி
அணுகாதே
சிலதமர்க ளுறவுகிளை கத்திப் பிதற்றியெடு
சுடலைதனி லிடுகனலை இட்டுக் கொளுத்துபுனல்
திரைகடலில் முழுகெனவு ரைக்கப் பவக்குடிலை
ஒழியாதே
மறைமுறையி னிறுதினிலை முத்திக் கிசைத்தபடி
உடலுயிர்கள் கரணவெளி பட்டுக் குணத்திரயம்
வழிபடவும் நினதடிமை இச்சைப் படுத்துவதும்
ஒருநாளே
வருதுரக மயில்மணிகள் சத்திக்க நிர்த்தமிட
ஒருபதுட னிருபுயமு மட்டுத் தொடைக்கிசைய
மனமகிழ இனியமொழி செப்பிச் சிவத்தபதம்
அருள்வாயே
நறையிதழி அறுகுபல புட்பத் திரட்களொடு
சிறுபிறைய மரவுமெழி லப்புத் திருத்தலையில்
நளினமுற அணிசடையர் மெச்சிப் ரியப்படவு
மயிலேறி
நவநதிகள் குமுகுமென வெற்புத் திரட்சுழல
அகிலமுத லெழுபுவன மெத்தத் திடுக்கிடவும்
நவமணிகள் உரகனுடல் கக்கத் துரத்திவரு
முருகோனே

குறவர்முனை கெடமனது வெட்கப் படக்குடிலில்
மலையிலெழு தினையிதணில் வைத்துச் சிறுக்கியிரு
குவிமுலையு மணியிடையு மெச்சிப் புணர்ச்சிசெயு
மணவாளா

குறுமுநிவ னிருபொழுது மர்ச்சித்து முத்திபெற
அறிவுநெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய
குருகுமர பழநிவளர் வெற்புத் தனிற்றிகழு
பெருமாளே.

676. சிற்றாயக் கூட்டத் தெரிவையர்
வித்தாரச் சூழ்ச்சிக் கயல்விழி
சற்றேறப் பார்த்துச் சிலபணி விடையேவிச்
சிற்றூபத் தாக்கைப் பொருள்கொடு
பித்தேறிக் கூப்பிட் டவர்பரி
செட்டாமற் றார்த்தத் தலைபடு சிறுகாலை
உற்றார்பெற் றார்க்குப் பெரிதொரு
பற்றாயப் பூட்டுக் கயிறுகொ
டுச்சாயத் தாக்கைத் தொழிலொடு தடுமாறி
உக்காரித் தேக்கற் றுயிர்நழு
விக்காயத் தீப்பட் டெரியுட
லுக்கேன்மெய்க் காட்டைத் தவிர்வதும் ஒருநாளே
வற்றாமுற் றூப்பச் சிளமுலை
யிற்பால்கைப் பார்த்துத் தருமொரு
மைக்காமக் கோட்டக் குலமயில் தருபாலா
மத்தோசைப் போக்கிற் றயிருறி
நெய்ப்பாலுக் காய்ச்சிக் கிருபதம்
வைத்தாடிக் காட்டிப் பருகரி மருகோனே
கற்றாவிற் காட்டிக் கரைதுறை
நற்றூயிற் காட்டிப் புகழ்கலை
கற்றார்சொற் கேட்கத் தனிவழி வருவோனே
கைச்சூலக் கூற்றைக் கடிபது
மத்தாளர்க் கேற்பக் கனல்பொழி
கற்றாவுக் கோட்டுக் குருகிய பெருமாளே.

677. சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவ ருயிர்க்கும் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்
நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்
தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் தனபேரி
தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்கும்
தளத்துட னடக்குங் கொடுசூரர்
சினத்தையு முடற்சங் கரித்தமலை முற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெழுந்
திருத்தணி யிருக்கும் பெருமாளே.

678. சினத்தி லத்தினை சிறுமண் ளவுடல்
செறித்த தெத்தனை சிலைகட லினிலுயிர்
செனித்த தெத்தனை திரள்கய லெனபல வதுபோதா
செனித்த தெத்தனை மலைசுனை உலகிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
செடத்தி லெத்தனை நமனுயிர் பறிகொள்வ தளவேதோ
மனத்தி லெத்தனை நினைகவ டுகள்குடி
கெடுத்த தெத்தனை மிருகம தெனவுயிர்
வதைத்த தெத்தனை அளவில விதிகரம் ஒழியாமல்
வருத்த தெத்தனை மசகனை முருடனை
மடைக்கு லத்தனை மதியழி விரகனை
மலர்ப்ப தத்தினி லுருகவு மினியருள் புரிவாயே
தனத்த தத்தன தனதன தனதன
திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
தகுத்த தத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ

தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டுடுடு டுடுடு
தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்

சினத்த மர்க்கள செருதிகழ் குருதிய
திமிழ்த்தி டக்கரி அசுரர்கள் பரிசிலை
தெறித்த டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா

செழிக்கு முத்தம சிவசர ணர்கள்தவ
முநிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
திருத்த ணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே.

679. சினத்துச் சீறிய வழிகாணச்
சிரித்துப் பேசியு மயல்பூணக்
கனத்துப் போர்செயு முலைதோணக்
கலைக்குட் பாதியு மறைவாக
மனத்துக் காறுதல் வருமாறு
மலைப்பப் பேணியு மிகவாய
தனத்தைச் சூறைகொள் மடவார்தம்
சதிக்குப் போம்வழி தவிர்வேனோ
தெனத்தத் தாதென எனவேபண்
திருத்தத் தோடளி யிசைபாடும்
புனத்துக் காவல்கொள் குறமாதின்
புணர்ச்சிக் கேயொரு வழிதேடி
இனத்துக் காவல ரறியாமல்
இணக்கித் தோகையை மகிழ்வோயென்
றெனக்குத் தாளிணை யருள்வாய்சூர்
இறக்கப் போர்செய்த பெருமாளே.

680. சினமுடுவல் நரிகழுகு டன்பருந் தின்கணங்
கொடிகெருடன் அலகைபுழு வுண்டுகண் டின்புறுஞ்
செடமளறு மலசலமொ டென்புதுன் றுங்கலந்
துன்புமேவு

செனனவலை மரணவலை ரண்டுமுன் பின்தொடர்ந்
தணுகுமுட லநெகவடி விங்கடைந் தம்பரஞ்
சிறுமணலை அளவிடினு மங்குயர்ந் திங்குலந்
தொன்றுநாயேன்
கனகபுவி நிழல்மருவி அன்புறுந் தொண்டர்பங்
குறுகவினி அருள்கிருபை வந்துதந் தென்றுமுன்
கடனெனது உடலுயிரு முன்பரந் தொண்டுகொண்
டன்பரோடே
கலவிநல மருவிவடி வஞ்சிறந் துன்பதம்
புணர்கரண மயில்புறமொ டின்புகொண் டண்டருங்
கனகமலர் பொழியவுன தன்புகந் தின்றுமுன்
சிந்தியாதோ
தனனதன தனனதன தந்தனந் தந்தனம்
தகுகுகுகு குகுகுகுகு டங்குடங் குந்தடந்
தவில்முரசு பறைதிமிலை டிங்குடிங் குந்தடந்
தண்டர்பேரி
தடுடுடுடு டுடுடுடுடு டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிடமிட டகுர்திகுகு சங்கவெண் கொம்புதிண்
கடையுகமொ டொலியகட லஞ்சவஞ் சன்குலஞ்
சிந்திமாளச்
சினமுடுகி அயிலருளி யும்பரந் தம்பரந்
திகையுரகர் புவியுளது மந்தரம் பங்கயன்
செகமுழுது மகிழவரி அம்புயன் தொண்டுகொண்
டஞ்சல்பாடத்
திருமுறுவ லருளியுய ரெந்தையின் பங்குறுங்
கவுரிமன முருகவொரு கங்கைகண் டன்புறுந்
திருவருண கிரிமருவு சங்கரன் கும்பிடுந் தம்பிரானே.

681\. சீசி முப்புரக் காடு நீறெழச்
சாடி நித்திரைக் கோசம் வேரறச்
சீவன் முத்தியிற் கூட வேகளித் தநுபூதி
சேர அற்புதக் கோல மாமெனச்
சூரி யப்புவிக் கேறி யாடுகச்
சீலம் வைத்தருட் டேறி யேயிருக் கறியாமற்

பாசம் விட்டுவிட் டோடிப் போனது
போது மிப்படிக் காகி லேனினிப்
பாழ்வ ழிக்கடைக் காம லேபிடித் தடியேனைப்
பாரடை க்கலக் கோல மாமெனத்
தாப ரித்துநித் தார மீதெனப்
பாத பத்மநற் போதை யேயெனக் கருள்வாயே
தேசில் துட்டநிட் டூர கோதுடைச்
சூரை வெட்டியெட் டாசை யேழ்புவித்
தேவர் முத்தர்கட் கேத மேதவிர்த் தருள்வோனே
சீர்ப டைத்தழல் சூல மான்மழுப்
பாணி வித்துருப் பாத னோர்புறச்
சீர்தி கழ்ப்புகழ்ப் பாவை யீனுபொற் குருநாதா
காசி முத்தமிழ்க் கூட லேழ்மலைக்
கோவ லத்தியிற் கான நான்மறைக்
காடு பொற்கிரிக் காழி யாரூர்பொற் புலிவேளூர்
காள அத்தியப் பால்சி ராமலைத்
தேச முற்றுறப் பூசை மேவிநற்
*காம கச்சிகச் சாலை மேவுபொற் பெருமாளே.

682. சீத மதிய மெறிக்குங் கனலாலே
சீறி மதனன் வளைக்குஞ் சிலையாலே
ஓத மருவி யலைக்குங் கடலாலே
ஊழி யிரவு தொலைக்கும் படியாமோ
†மாது புகழை வளர்க்குந் திருவாரூர்
வாழு மயிலி லிருக்குங் குமரேசா
காத லடியர் கருத்தின் பெருவாழ்வே
காலன் முதுகை விரிக்கும் பெருமாளே.

683. சீதமலம் வெப்பு வாதமிகு பித்த
மானபிணி சுற்றி உடனூடே
சேருமுயிர் தப்பி ஏகும்வண மிக்க
தீதுவிளை விக்க வருபோதில்

---

*காம கச்சிகுற் றால மேவுபொற் பெருமாளே.

†மாதர் புகழை வளர்க்கும் திருவாரூர்.

தாதையொடு மக்கள் நீதியொடு துக்க
சாகரம தற்குள் அழியாமுன்
தாரணி தனக்கு ளாரண முரைத்த
தாள்தர நினைத்து வரவேணும்
மாதர்மய லுற்று வாடவடி வுற்று
மாமயிலில் நித்தம் வருவோனே
மாலுமய னொப்பி லாதபடி பற்றி
மாலுழலு மற்ற மறையோர்முன்
வேதமொழி மெச்சு சோலைவளர் வெற்பின்
மேவி மகிழ்வுற்ற வடிவேலா
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே.

684. சீத வாசனைம லர்க்குழல்பி லுக்கிமுக
மாய வேல்விழிபு ரட்டிநகை முத்தமெழ
தேமல் மார்பிணிள பொற்கிரிப ளப்பளென
தொங்கலாரஞ்
சேரு மோவியமெ னச்சடமி னுக்கிவெகு
வாசை நேசமும்வி ளைத்துவிடை உற்றவரி
சேலை காலில்விழ விட்டுநடை இட்டுமயி லின்கலாபச்
சாதி யாமெனவெ ருட்டிநட மிட்டுவலை
யான பேர்தமையி ரக்கவகை இட்டுகொடி
தாக நோய்பிணிகொ டுத்திடர்ப டுத்துவர்கள்
பங்கினூடே
தாவி மூழ்கிமதி கெட்டவல முற்றவனை
பாவ மானபிற விக்கடலு ழப்பவனை
தாரு லாவுபத பத்தியிலி ருத்துவதும் எந்தநாளோ
வாத வூரனைம தித்தொருகு ருக்களென
ஞான பாதம்வெளி இட்டுநரி யிற்குழுவை
வாசி யாமெனந டத்துவகை உற்றாசன் அன்புகாண
மாடை ஆடைதர பற்றிமுன கைத்துவைகை
யாறின் மீதுநட மிட்டுமெண டுத்துமகிழ்
மாது வாணிதரு பிட்டுநுகர் பித்தனருள் கந்தவேளே

வேத லோகர்பொனி லத்தர்தவ சித்தாதி
பார சீலமுனி வர்க்கமுறை இட்டலற
வேலை ஏவியவு ணக்குலமி றக்கநகை கொண்டசீலா
வேத மீனுகம லக்கணர்மெய் பச்சைரகு
ராம ரீனுமயி லொக்கமது சைப்பதியில்
மேவி வாழுமரர் முத்தர்சிவ பத்தர்பணி தம்பிரானே.

685: சீதள வாரிஜ பாதாந மோநம
நாரத கீதவி நோதாந மோநம
சேவல மாமயில் ப்ரீதாந மோநம மறைதேடுஞ்
சேகர மானப்ர தாபாந மோநம
ஆகம சாரசொ ரூபாந மோநம
தேவர்கள் சேனைம கீபாந மோநம கதிதோயப்
பாதக நீவுகு டாரர்ந மோநம
மாவசு ரேசக டோராந மோநம
பாரினி லேஜய வீராந மோநம மலைமாது
பார்வதி யாள்தரு பாலாந மோநம
நாவல ஞானம னோலாந மோநம
பாலகு மாரசு வாமீந மோநம அருள்தாராய்
போதக மாமுக னேரான சோதர
நீறணி வேணியர் நேயாப்ர பாகர
பூமக ளார்மரு கேசாம கோததி யிகல்சூரா
போதக மாமறை ஞானாத யாகர
தேனவிழ் நீபந றுவாறு மார்பக
பூரண மாமதி போலாறு மாமுக முருகேசா
மாதவர் தேவர்க ளோடேமு ராரியு
மாமலர் மீதுறை வேதாவு மேபுகழ்
மாநில மேழினு மேலான நாயக வடிவேலா
வானவ ரூரினும் வீறாகி வீறள
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வேசு ராதிபர் பெருமாளே.

686. சீயுதிர மெங்கு மேய்புழுநி ரம்பு
மாயமல பிண்ட நோயிடுகு ரம்பை
தீநரிகள் கங்கு காகமிவை தின்ப தொழியாதே

தீதுளகு ணங்க ளேபெருகு தொந்த
மாயையில்வ ளர்ந்த தோல்தசையெ லும்பு
சேரிடுந ரம்பு தாளிவைபொ திந்து நிலைகாணா

ஆயதுந மன்கை போகவுயி ரந்த
நாழிகையில் விஞ்ச ஊசிடுமி டும்பை
ஆகியவு டம்பு பேணிநிலை என்று மடவார்பால்

ஆசையைவி ரும்பி யேவிரக சிங்கி
தானுமிக வந்து மேவிடம யங்கும்
ஆழ்துயர்வி ழுந்து மாளுமெனை அன்பு புரிவாயே

மாயைவல கஞ்ச னால்விடவெ குண்டு
பார்முழுது மண்ட கோளமுந டுங்க
வாய்பிளிறி நின்று மேகநிகர் தன்கை அதனாலே

வாரியுற அண்டி வீறுடுமு ழங்கு
நீரைநுகர் கின்ற கோபமொடெ திர்ந்த
வாரணவி ரண்டு கோடொடிய வென்ற நெடியோனும்

வேயினிசை கொண்டு கோநிரைபு ரந்து
மேயல்புரி செங்கண் மால்மருக துங்க
வேலகிர வுஞ்ச மால்வரையி டிந்து பொடியாக

வேலைவிடு கந்த காவிரிவி ளங்கு
கார்கலிசை வந்த சேவகன்வ ணங்க
வீரைநகர் வந்து வாழ்பழநி அண்டர் பெருமாளே.

687. சீரான கோல கால நவமணி
மாலாபி ஷேக பார வெகுவித
தேவாதி தேவர் சேவை செயுமுக மலாறும்

சீராடு வீர மாது மருவிய
ஈராறு தோளும் நீளும் வரியளி
சீராக மோது நீப பரிமள இருதாளும்

ஆராத காதல் வேடர் மடமகள்
சீமூத மூர்வ லாரி மடமகள்
ஆதார பூத மாக வலமிட முறைவாழ்வும்

ஆராயும் நீதி வேலு மயிலுமெய்
ஞானாபி ராம சோதி வடிவமும்
ஆபாத னேனும் நாளும் நினைவது பெறவேணும்

ஏராரு மாட கூட மதுரையில்
மீதேறி மாறி யாடு மிறையவர்
ஏழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்

ஈடாய ஊமர் போல வணிகரி
லூடாடி ஆல வாயில் விதிசெய்த
லீலாவி சார தீர வரதர குருநாதா

கூராழி யால்முன் வீய நினைபவ
னீடேறு மாறு பானு மறைவுசெய்
கோபால ராய னேய முளதிரு மருகோனே

கோடாம லார வார அலையெறி
காவேரி யாறு பாயும் வயலியில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே.

688. சீருலாவிய வோதிம மானமாநடை மாமயில்
சேயசாயல்க லாமதி முகமானூர்

தேனுலாவிய மாமொழி மேருநேரிள மாமுலை
சேலுலாவிய கூர்விழி குமிழ்நாசி

தாருலாவிய நீள்குழல் வேயளாவிய தோளியர்
சார்பிலேதிரி வேனைநின் அருளாலே

சாமவேதியர் வானவ ரோதிநாண்மலர் தூவிய
தாளில்வீழவி னைமிக அருள்வாயே

காருலாவிய நீள்புன வேடர்மால்வரை மீதுறை
காவல்மாதினொ டாவல்செய் தணைவோனே

காணவாகம வேதபு ராணநூல்பல ஓதிய
காரணாகரு ணாகர முருகோனே

போருலாவிய சூரனை வாரிசேறெழ வேல்விடு
பூபசேவக மாமயில் மிசையோனே

போதன் மாதவன் மாதுமை பாதியாதியு மேதொழு
போரிமாநகர் மேவிய பெருமாளே.

689. சீர்சி றக்கு மேனி பசேல் பசேலென
நூபு ரத்தி னோசை கலீர் கலீரென
சேர விட்ட தாள்கள் சிவேல் சிவேலென
வருமானார்

சேக ரத்தின் வாலை சிலோர் சிலோர்களும்
நூறு லக்ஷ கோடி மயால் மயால்கொடு
தேடி ஓக்க வாடி ஐயோ ஐயோவென மடமாதர்

மார்ப டைத்த கோடு பளீர் பளீரென
ஏம லித்தெ ணுவி பகீர் பகீரென
மாம சக்கி லாசை உளோ முளோமென நினைவோடி

வாடை பற்று வேளை அடா அடாவென
நீம யக்க மேது சொலாய் சொலாயென
வாரம் வைத்த பாத மிதோ இதோவென அருள்வாயே

பார தத்தை மேரு வெளீ வெளீதிகழ்
கோடொ டித்த நாளில் வரை வரைபவர்
பாணி றக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே

பாடல் முக்ய மாது தமீழ் தமீழிறை
மாமு நிக்கு காதி லுணர் உணர்விடு
பாச மற்ற வேத குரு குருபர குமரேசா

போர்மி குத்த சூரன் விடோம் விடோமென
நேரெ திர்க்க வேலை படர் படரென
போய றுத்த போது குபீர் குபீரென வெகுசோரி

பூமி உக்க வீசு குகா குகாதிகழ்
சோலை வெற்பின் மேவு தெய்வா தெய்வானைதோள்
பூணி இச்சை ஆறு புயா புயாறுள பெருமாளே.

690. சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக என்று தெருவூடே
வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்
வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழுமென்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே
சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழு மிஞ்சி
சேணிலவு தாவு செம்பொன் மணிமேடை
சேருமம ரேசர் தங்கள் ஊரிதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா
ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி ஈசர் தந்தை களிகூர
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே.

691. சீற லசடன்வினை காரன் முறைமையிலி
தீமை புரிபடிறன் பலநோயே
தேடு பரிசிகன நீதி நெறிமுறைமை
சீர்மை சிறிதுமிலி எவரோடுங்
கூறு மொழியதுபொ யான கொடுமையுள
கோள னறிவிலியுன் அடிபேணுக்
கூள னெனினுமெனை நீயு னடியரொடு
கூடும் வகைமையருள் புரிவாயே
மாறு படுமவுணர் மாள அமர்பொருது
வாகை உளமவுலி புனைவோனே
மாக முகடதிர வீசு சிறைமயிலை
வாசி எனவுடைய முருகோனே
வீறு கலிசைவரு சேவ கனதிதய
மேவு மொருபெருமை உடையோனே
வீரை உறைகுமர தீர தரபழநி
வேல இமையவர்கள் பெருமாளே.

692. சீறிட்டு லாவுகண்கள் மாதர்க்கு நாள்மருண்டு
சேவித்து மாசைகொண்டும் உழல்வேனைச்
சீரிட்ட மாகநின்ற காசைக்கொ டாதபின்பு
சீறற்று வாழுமின்பம் நலியாதே
ஆறெட்டு மாய்விரிந்து மாறெட்டு மாகிநின்று
மாருக்கு மேவிளம்ப அறியாதே
ஆகத்து ளேமகிழ்ந்த ஜோதிப்ர காசவின்பம்
ஆவிக்கு ளேதுலங்க அருள்வாயே
மாறிட்டு வானடுங்க மேலிட்டு மேலகண்டம்
வாய்விட்டு மாதிரங்கள் பிளவாக
வாள்தொட்டு நேர்நடந்த சூர்வஜ்ர மார்புநெஞ்சும்
வான்முட்ட வீறுசெம்பொன் வரையோடு
கூறிட்ட வேலபங்க வீரர்க்கு வீரகந்த
கோதற்ற வேடர்தங்கள் புனம்வாழும்
கோலப்பெண் வாகுகண்டு மாலுற்று வேளைகொண்டு
கூடிக்கு லாவிநின்ற பெருமாளே.

693. சுக்கி லச்சுரோணி தத்தி லுற்றநளி
னத்தி லப்புவென ரத்த முற்றிசுக
சுக்கி லக்குளிகை யொத்து கெர்ப்பகுகை வந்துகோலத்
தொப்பை யிட்டவயி றிப்பெ ருத்துமிக
வட்ட மிட்டடல வெப்ப முற்றுமதி
சொற்ற பத்தின்மறி யக்ஷ ரத்தினிடை விஞ்சையாலே
கக்க நற்புவியி லுற்ற ரற்றிமுலை
யைக்கொ டுக்கவமிர் தைப்பு சித்துவளர்
கைக்க சத்தியொடு மைத்து தத்துநடை அந்தமேவிக்
கற்று வெற்றறிவு பெற்று பச்சைமயி
லொத்த மக்கள்மய லிற்கு ளித்துநெறி
கட்டி யிப்படிபி றப்பி லுற்றுடல மங்குவேனோ
தெற்க ரக்கர்பவி ஷைக்கு லைத்துவிட
ணற்கு நத்தரச ளித்து முத்திகொடு
சித்தி ரத்திருவு ரத்த சக்கிரிதன் மருகோனே

செக்க ரத்தின்மலை முப்பு ரத்திலெரி
யிட்ட சத்திசிவ னூற்று நத்தமிகு
சித்த னைத்தையும்வி ழித்த சத்தியுமை தந்தபாலா
தார்க்க மிட்டசுர ரைக்கெ லித்துமலை
யுக்கெ ழுக்கடல்கொ ளுத்தி அட்டதிசை
தட்ட முட்டையடை யக்கொ டிப்புகையின்
மண்டும்வேலா
தத்தை வித்ருமநி றத்தி முத்தணிகு
றத்தி கற்பகவ னத்தி சித்தமவை
தக்கு நத்தஅரு ணைக்கி ரிக்குள்மகிழ் தம்பிரானே.

**694.** சுடரனைய திருமேனி யுடையழகு முதுஞான
சொருபகிரி யிடமேவு முகமாறும்
சுரர்தெரிய லளிபாட மழலைகதி நறைபாய
துகிரிதழின் மொழிவேத மணம்வீச
அடர்பவள வொளிபாய அரியபரி புரமாட
அயில்கரமொ டெழில்தோகை மயிலேறி
அடியனிரு வினைநீறு படவமரி திதுபூசை
அதிசயமெ னருள்பாட வரவேணும்
விடைபரவி அயன்மாலொ டமரர்முனி கணமோட
மிடறடைய விடம்வாரி யருள்நாதன்
மினலனைய விடைமாது இடமருவு குருநாதன்
மிகமகிழ அநுபூதி அருள்வோனே
இடர்கலிகள் பிணியோட எனையுமருள் குறமாதி
னிணையிளகிர் முலைமார்பின் அணைமார்பா
இனியமுது புலிபாத னுடனரவு சதகோடி
இருடியர்கள் புகழ்ஞான பெருமாளே.

**695.** சுடரொளி கதிரவ னுற்றுப் பற்றிச்
சூழ்ந்தோங் கிடுபாரில்
துயரிரு வினைபல சுற்றப் பட்டுச்
சோர்ந்தோய்ந் திடநாளும்
கடுகென எடுமெனு டற்பற் றற்றுக்
கான்போந் துறவோரும்

கனவிடை விதியிடு தத்துக் கத்தைக்
காய்ந்தாண் டருளாயோ
தடமுடை வயிரவர் தற்கித் தொக்கத்
தாந்தோய்ந் திருபாலும்
தமருக வொலிசெவு தத்திற் றத்தத்
தாழ்ந்தூர்ந் திடநாகம்
படிநெடி யவர்கர மொத்தக் கெத்துப்
பாய்ந்தாய்ந் துயர்கானம்
பயில்பவர் புதல்வகு றத்தத் தைக்குப்
பாங்காம் பெருமாளே.

696. சுட்டதுபோ லாசை விட்டுலகா சார
துக்கமிலா ஞான சுகமேவிச்
சொற்கரணு தீத நிர்க்குணமூ டாடு
சுத்தநிரா தார வெளிகாண
மொட்டலர்வா ரீச சக்ரசடா தார
முட்டவுமீ தேறி மதிமீதாய்
முப்பதுமா றாறு முப்பதுவே றான
முத்திரையா மோனம் அடைவேனோ
எட்டவொணு வேத னத்தொடுகோ கோவெ
னப்பிரமா ஓட வரைசாய
எற்றியவ ழாழி வற்றிடமா றாய
எத்தனையோ கோடி அசுரேசர்
பட்டொருசூர் மாள விக்ரமவே லேவு
பத்திருதோள் வீர தினைகாவல்
பத்தினிதோள் தோயு முத்தமமா றாது
பத்திசெய்வா ருடர் பெருமாளே.

697. சுத்தச் சித்தத் தொற்பத் தர்க்குச்
சுத்தப் பட்டிட் டமுறுதே
தொக்கப் பொக்கச் சிற்கட் சிக்குச்
சொற்குற் றத்துத் துறைநாடிப்
பித்தத் தைப்பற் றித்தைத் தற்றுற்
றுத்துக் கித்துப் பிணிமாதர்

பெட்டிற் கட்டுத் தட்டுப் பட்டுப்
பிறபட் டிட்டுத் தளர்வேனோ
அத்தத் தத்திக் கத்தற் கெய்த்தத்
தத்திக் கத்துப் பலமீவாய்
அர்ச்சித் துப்பொற் செக்கொச் சைத்தத்
தைக்குச் செச்சைத் தொடைசூழ்வாய்
கத்தத் தித்தத் தத்திற் கொக்கைக்
கைத்தச் சத்திப் படையேவும்
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக்
கச்சிச் சொக்கப் பெருமாளே.

698. சுத்திய நரப்புடனெ லும்புறு தசைக்குடலொ
டப்புடனி ணச்சளிவ லிப்புடனி ரத்தகுகை
சுக்கிலம்வி ளைப்புழுவொ டக்கையும யக்குமயிர்
சங்குமூளை

துக்கம்விளை வித்தபிணை யற்கறைமு ளைப்பெருகு
குட்டமொடு விப்புருதி புற்றெழுதல் முட்டுவலி
துச்சிபிள வைப்பொருமல் பித்தமொடு றக்கமிக
அங்கமூடே

எத்தனைநி னைப்பையும்வி ளைப்பையும யக்கமுறல்
எத்தனைச லிப்பொடுக லிப்பையுமி டற்பெருமை
எத்தனைக சத்தையும லத்தையும டைத்தகுடில்
பஞ்சபூதம்

எத்தனைகு லுக்கையுமி லுக்கையும னக்கவலை
எத்தனைக வட்டையுந டக்கையுமு யிர்க்குவரும்
எத்தனைபி றப்பையுமி றப்பையுமெ டுத்துலகில்
மங்குவேனோ

தத்தனத னத்தனத னத்தனவெ னத்திமிலை
ஒத்தமுர சத்துடியி டக்கைமுழ வுப்பறைகள்
சத்தமறை யத்தொகுதி ஓத்தசெனி ரத்தவெள
மண்டியோடச்

சக்கிரிநெ ளிப்பவவு ணப்பிணமி தப்பமரர்
 கைத்தலமி ரித்தரஹ ரச்சிவபி ழைத்தமென
 சக்கிரகி ரிச்சுவர்க ளக்கணமெ பக்குவிட
 வென்றவேலா

சித்தமதி லெத்தனைசெ கத்தலம்வி தித்துடன
 ழித்துகம லத்தனைம ணிக்குடுமி பற்றிமலர்
 சித்திரக ரத்தலம்வ லிப்பமிசை குட்டிநட
 னங்கொள்வேளே

செட்டிவடி வைக்கொடுதி னைப்புனம திற்சிறுகு
 றப்பெணம ளிக்குள்மகிழ் செட்டிகுரு வெற்பிலுறை
 சிற்பரம ருக்கொருகு ருக்களென முத்தர்புகழ்
 தம்பிரானே.

699. சுருதிமறைக ளிருநாலு திசையிலதிபர் முநிவோர்கள்
 துகளிலிருடி எழுபேர்கள் சுடர்மூவர்
 சொலவில்முடிவில் வெகுரூப பகுதிபுருடர் நவநாதர்
 தொலைவிலுடுவி னுலகோர்கள் மறையோர்கள்
 அரியசமய மொருகோடி அமரர்சரணர் சதகோடி
 அரியுமயனும் வெகுகோடி இவர்கூடி
 அறியவறிய அறியாத அடிகளறிய அடியேனும்
 அறிவுளறியு மறிவூற அருள்வாயே
 வரைகள்தவிடு பொடியாக நிருதர்பதியும் அழிவாக
 மகரசலதி அளறாக முதுசூரும்
 மடியவலகை நடமாட விஜயவனிதை மகிழ்வாக
 மவுலிசிதறி இரைதேடி வருநாய்கள்
 நரிகள்கொடிகள் பசியாற உதிரநதிக ளலைமோத
 நமனும்வெருவி அடிபேண மயிலேறி
 *நளினவுபய கரவேலை முடுகுமுருக வடமேரு
 நகரியுறையு மிமையோர்கள் பெருமாளே.

---

*நளின வுபயகர மாயன் மருக முருக புலியூர் நன்னகரின் மருவு மிமை யோர்கள் பெருமாளே.

700. சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளிய தாய்நின்ற நிட்களசொ ரூபமுத
லொருவாழ்வே
துரியநிலை யேகண்ட முத்தரித யாகமல
மதனில்விளை யாநின்ற அற்புதசு போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபத மேவடைய உணராதே
கருவிலுரு வேதங்கு சுக்கிலநி தானவளி
பொருமவதி லேகொண்ட முக்குணவி பாகநிலை
கருதவறி யாவஞ்ச கக்கபட மூடியுடல் வினைதானே
கலகமிட வேபொங்கு குப்பைமல வாழ்வுநிச
மெனவுழலு மாயஞ்செ னித்தகுகை யேயுறுதி
கருதசுழ மாமிந்த மட்டைதனை யாளவுன தருள்தாராய்
ஒருநியம மேவிண்ட சட்சமய வேதவடி
முடிநடுவு மாயண்ட முட்டைவெளி யாகியுயிர்
உடலுணர்வ தாயெங்கு மூற்பனம தாகவம ருளவோனே
உததரிச மாமின்ப புத்தமிர்த போகசுகம்
உதவுமம லாநந்த சத்திகர மேவுணர
உருபிரண மாமந்த்ர கர்த்தவிய மாகவரு குருநாதா
பருதிகதி ரேகொஞ்ச நற்சரண நூபுரம
தசையநிறை பேரண்ட மொக்கநட மாடுகன
பதகெருவி தாதுங்கவெற்றிமயிலேறுமொரு திறலோனே
பணியுமடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவணப வாவொன்று வற்காமு மாகிவளர்
பழநிமலை மேனின்ற சுப்ரமணி யாவமரர்
பெருமாளே.

701. சுருதி யாயிய லாயியல் நீடிய
தொகுதி யாய்வெகு வாய்வெகு பாஷைகொள்
தொடர்பு மாயடி யாய்நடு வாய்மிகு துணையாய்மேல்
துறவு மாயற மாய்நெறி யாய்மிகு
விரிவு மாய்விளை வாயருள் ஞானிகள்
சுகமு மாய்முகி லாய்மழை யாயெழு சுடர்வீசும்

பருதி யாய்மதி யாய்நிறை தாரகை
பலவு மாய்வெளி யாயொளி யாயெழு
பகலி ராவிலை யாய்நிலை யாய்மிகு பரமாகும்

பரம மாயையி னேர்மையை யாவரு
மறியொ ணாததை நீகுரு வாயிது
பகரு மாறுசெய் தாய்முதல் நாலுறு பயனோதான்

கருது மாறிரு தோள்மயில் வேலிவை
கருதொ ணாவகை யோரர சாய்வரு
கவுணி யோர்குல வேதிய னுயுமை கனபாரக்

களப பூண்முலை யூறிய பாலுணு
மதலை யாய்மிகு பாடலின் மீறிய
கவிஞ னாய்விளை யாடிபொய் வாதிகள் கழுவேறக்

குருதி யாறெழ வீதியெ லாமலர்
நிறைவ தாய்விட நீறிட வேசெய்து
கொடிய மாறன்மெய் கூனிமி ராமுனை குலையாவான்

குடிபு கீரென மாமது ராபுரி
இயலை யாரண வூரென நேர்செய்து
குடசை மாநகர் வாழ்வுற மேவிய பெருமாளே.

702. சுருதி யூடு கேளாது சரியை யாளர் காணாது
துரிய மீது சாராது எவராலும்

தொடரொ ணாது மாமாயை இடைபு காது ஆறாத
சுகம கோத தீயாகி ஒழியாது

பருதி காயில் வாடாது வடவை மூளில் வேகாது
பவனம் வீசில் வீழாது சலியாது

பரவை சூழி லாழாது படைகள் மோதில் மாயாது
பரம ஞான வீடேது புகல்வாயே

நிருதர் பூமி பாழாக மகர பூமி தீமூள
நிபிட தாரு காபூமி குடியேற

நிகர பார நீகார சிகர மீது வேலேவு
நிருப வேத ஆசாரி யனுமாலும்

கருது மாக மாசாரி கனக கார்மு காசாரி
ககன சாரி பூசாரி வெகுசாரி
கயிலை நாட காசாரி சகல சாரி வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

703. சுருதி வெகுமுகபு ராண கோடிகள்
சரியை கிரியைமக யோக மோகிகள்
துரித பரசமய பேத வாதிகள் என்றுமோடித்
தொடர உணர்வரி தாய தூரிய
பொருளை அணுகியது போக மானவை
தொலைய இனியஒரு ஸ்வாமி யாகிய நின்ப்ரகாசம்
கருதி உருகியவி ரோதி யாயருள்
பெருகு பரமசுக மாம கோததி
கருணை அடியரொடு கூடி ஆடிம கிழ்ந்துநீபக்
கனக மணிவயிர நூபு ராரிய
கிரண சரணஅபி ராம கோமள
கமல உகளமற வாது பாடநி னைந்திடாயோ
மருது நெறுநெறன மோதி வேரொடு
கருது மலகைமுலை கோதி வீதியில்
மதுகை ஒடுதறுக ணானை வீரிட வென்றுதாளால்
வலிய சகடிடறி மாய மாய்மடி
படிய நடைபழகி ஆயர் பாடியில்
வளரு முகில்மருக வேல்வி நோதசி கண்டிவீரா
விருதர் நிருதர்குல சேனை சாடிய
விஜய கடதடக போல வாரண
விபுதை புளகதன பார பூஷண அங்கிராத
விமலை நகிலருணை வாகு பூதர
விபுத கடககிரி மேரு பூதர
விகட சமரசத கோடி வானவர் தம்பிரானே.

704. சுரும்பணி கொண்டல் நெடுங்குழல் கண்டு
துரந்தெறி கின்ற விழிவேலால்
சுழன்றுசு ழன்று துவண்டுது வண்டு
சுருண்டும யங்கி மடவார்தோள்

விரும்பி வரம்பு கடந்து நடந்து
மெலிந்து தளர்ந்து மடியாதே
யிலங்கு கடம்பு விளங்க ணிதண்டை
விதங்கொள் சதங்கை அடிதாராய்
பொருந்த லமைந்து சிதம்பெ றநின்ற
பொலங்கி ரியொன்றை எறிவோனே
புகழ்ந்து மகிழ்ந்து வணங்கு குணங்கொள்
புரந்த ரன்வஞ்சி மணவாளா
இரும்பு னமங்கை பெரும்பு ளகஞ்செய்
குரும்பை யணைந்த மணிமார்பா
*இலஞ்சி யில்வந்த இலஞ்சி யமென்று
இலஞ்சி யமர்ந்த பெருமாளே.

705. சுரும்புற்ற பொழில்தோறும் விரும்புற்ற குயில்கூவ
துரந்துற்ற குளிர்வாடை அதனாலும்
துலங்குற்ற மருவாளி விரைந்துற்ற படியால
தொடர்ந்துற்று வருமாதர் வசையாலும்
அரும்புற்ற மலர்மேவு செழுங்கொற்ற அணையாலு
மடைந்திட்ட விடைமேவு மணியாலும்
அழிந்துற்ற மடமானை யறிந்தற்ற மதுபேணி
அசைந்துற்ற மதுமாலை தரவேணும்
கருங்கொற்ற மதவேழ முனிந்துற்ற கலைமேவி
கரந்துற்ற மடமானி னுடனேசார்
கரும்புற்ற வயல்சூழும் பெரும்பற்ற புலியூரில்
களம்பற்றி நடமாடு மான்வாழ்வே
இருந்துற்று மலர்பேணி யிடும்பத்தர் துயர்தீர
இதம்பெற்ற மயிலேறி வருகோவே
இனந்துற்ற வருசூர னுருண்டிட்டு விழவேல்கொ
டெறிந்திட்டு விளையாடு பெருமாளே.

---

*எழுந்து வளர்ந்த பாங்கி ரிதங்கி யிருந்த ருள்கின்ற பெருமாளே.

**706.** சுருளளக பார கொங்கை
மகளிர்வச மாயி சைந்து
சுரதவகை யால்வி ளங்கு மதனாலே
சுருதியென வேநி னைந்து
அறிவிலிக ளோடி ணங்கு
தொழிலுடைய யானு மிங்குன் அடியார்போல்
அருமறைக ளேநி னைந்து
மனுநெறியி லேந டந்து
அறிவையறி வால றிந்து நிறைவாகி
அகிலபுவ னாதி எங்கும்
வெளியுறமெய்ஞ் ஞான இன்ப
அமுதையொழி யாத ருந்த அருள்வாயே
பருதிமகன் வாசல் மந்த்ரி
அநுமனொடு நேர்ப ணிந்து
பரிவினழை யாமுன் வந்து பரிவாலே
பரவியவி பீஷ ணன்பொன்
மகுடமுடி சூட நின்ற
படைஞரொடு ராவ ணன்றன் உறவோடே
எரிபுகுத மாறி லண்டர்
குடிபுகுத மாறு கொண்ட
ரகுபதியி ராம சந்த்ரன் மருகோனே
இளையகுற மாது பங்க
பழநிமலை நாத கந்த
இமயவள்த னால்ம கிழ்ந்த பெருமாளே.

**707.** சுற்றகப டோடுபல சூதுவினை யானபல
கற்றகள வோடுபழி காரர்கொலை காரர்சலி
சுற்றவிழ லானபவி ஷோடுகடல் மூழ்கிவரு
துயர்மேவித்
துக்கசமு சாரவலை மீனதென கூழில்விழு
செத்தையென மூளுமொரு தீயில்மெழு கானவுடல்
சுத்தமறி யாதபறி காயமதில் மேவிவரு பொறியாலே

சற்றுமதி யாதகலி காலன்வரு நேரமதில்
தத்துஅறி யாமலொடி யாடிவரு சூதரைவர்
சத்தபரி சானமண ரூபாச மானபொய்மை விளையாடித்
தக்கமட வார்மனையை நாடியவ ரோடுபல
சித்துவிளை யாடுவினை சீசியிது நாறவுடல்
தத்திமுடி வாகிவிடு வேனுமுடி யாதபத மருள்வாயே
தித்திமித தீதிமித தீதிமித தீமிதத
தத்ததன தானதன தானனன தானனன
திக்குடுடு டீடமட டாடமட டுடுடுடு எனதாளம்
திக்குமுகி லாடஅரி யாடஅய னாடசிவ
னொத்துவிளை யாடபரை யாடவர ராடபல
திக்கசுரர் வாடசுரர் பாடமறை பாடஎதிர் களமீதே
எத்திசையு நாடியம னார்நிணமொ டாடபல
மிக்கநரி யாடகழு தாடகொடி யாடசமர்
எற்றிவருபூதகண மாடவொளியாடவிடு வடிவேலா
எத்தியொரு மானைதினை காவல்வல பூவைதனை
சித்தமலை காமுககு காநமசி வாயனொடு
ரத்நகிரி வாழ்முருக னேயிளைய வாஅமரர்
பெருமாளே.

708. சுற்றத் தவர்களு மக்களு மிதமுள
சொற்குற் றரிவையும் விட்டது சலமிது
சுத்தச் சலமினி சற்றிது கிடைபடும் எனமாழ்கித்
துக்கத் தொடுகொடி தொட்டியெ அழுதழல்
சுட்டக் குடமொடு சுட்டெரி கனலொடு
தொக்குத் தொகுதொகு தொக்கென இடுபறை
பிணமூடச்
சற்றெப் புளதொரு சச்சையு மெழுமுடல்
சட்டப் படவுயிர் சற்றுடன் விசியது
தப்பிற் றவறுறு மத்திப நடையென உரையாடிச்
சத்திப் பொடுகரம் வைத்திடர் தலைமிசை
தப்பிற் றிதுபிழை எப்படி எனுமொழி
தத்தச்சடம்விடுமப்பொழுதிருசரண் அருள்வாயே

சிற்றிற் கிரிமகள் கொத்தலர் புரிகுழல்
சித்ரப் ரபைபுனை பொற்பினள் இளமயில்
செற்கட் சிவகதி உத்தமி களிதர முதுபேய்கள்
திக்குச் செககெண தித்தரி திகுதிகு
செச்செச் செணக்ருத டொட்டரி செணக்ருத
டெட்டெட் டுடுடுடு தத்தரி தரியென நடமாடும்
கொற்றப் புலியதள் சுற்றிய அரனருள்
குட்டிக் கரிமுக னிக்கவ லமுதுசெய்
கொச்சைக் கணபதி முக்கண னிளையவ களமீதே
குப்புற் றுடனெழு கச்சரி முழவியல்
கொட்டச் சுரர்பதி மெய்த்திட நிசிசரர்
கொத்துக் கிளையுடல் பட்டுக அமர்செய்த பெருமாளே.

709. சூதிநுண வாசைதனி லேசுழலு மீனதென
தூசுவழ கானவடி வதனாலே
சூதமுட னேருமென மாதர்நகை தேடுபொரு
ளாசைதமி லேசுழல வருகாலன்
ஆதிவிதி யோடுபிற மாதவகை தேடியென
தாவிதனை யேகுறுகி வருபோது
ஆதிமுரு காதிமுரு காதிமுரு காஎனவு
மாதிமுரு காநினைவு தருவாயே
ஓதமுகி லாடுகிரி யேறுபட வாழசுரர்
ஓலமிட வேயயில்கொ டமராடி
ஓநமசி வாயகுரு பாதமதி லேபணியும்
யோகமயி லாவமலை மகிழ்பாலா
நாதரகு ராமஅரி மாயன்மரு காபுவன
நாடுமடி யார்கள்மன துறைவோனே
ஞானசுர வானைகண வாமுருக னேயமரர்
நாடுபெற வாழவருள் பெருமாளே.

710. சூதுகொலை கார ராசைபண மாதர்
தூவையர்கள் சோகை முகநீலர்
சூலைவலி வாத மோடனைவர் பாவர்
தூமையர்கள் கோளர் தெருவூடே

சாதனைகள் பேசி வாருமென நாழி
    தாழிவிலை கூறி தெனவோதி
 சாயவெகு மாய தூளியுற வாக
    தாடியிடு வோர்கள் உறவாமோ
வேதமுநி வோர்கள் பாலகர்கள் மாதர்
    வேதியர்கள் பூச லெனவேகி
 வீறசுரர் பாறி வீழவலை ஏழு
    வேலையள றாக விடும்வேலா
நாதரிட மேவு மாதுசிவ காமி
    நாரியபி ராமி அருள்பாலா
 நாரணசு வாமி ஈனுமக ளோடு
    ஞானமலை மேவு பெருமாளே.

711. சூலமென வோடுசர்ப்ப வாயுவைவி டாதடக்கி
    தூயவொளி காணமுத்தி விதமாகச்
 சூழுமிருள் பாவகத்தை வீழவழ லூடெரித்து
    சோதிமணி பீடமிட்ட மடமேவி
மேலைவெளி யாயிரத்து நாலிருப ராபரத்தின்
    மேவியரு ணாசலத்தி னுடன்மூழ்கி
 வேனுமயில் வாகனப்ர காசமதி லேதரித்து
    வீடுமது வேசிறக்க அருள்தாராய்
ஓலசுர ராழியெட்டு வாளகிரி மாயவெற்பு
    மூடுருவ வேல்தொடுத்த மயில்வீரா
 ஓதுகுற மான்மனத்தில் மேவியவள் கால்பிடித்து
    ளோமெனுப தேசவித்தொ டணைவோனே
காலனொடு மேதிமட்க வூழிபுவி மேல்கிடத்து
    காலனிட மேவுசத்தி அருள்பாலா
 காலமுதல் வாழ்புவிக்க தாரநகர் கோபுரத்துள்
    கானமயில் மேல்தரித்த பெருமாளே.

712. சூழும்வி னைக்கட் டுன்பநெ டும்பிணி கழிகாமஞ்
    சோரமி தற்குச் சிந்தைநி னைந்துறு துணையாதோ
ஏழைய னித்துக் கங்களு டன்தினம் உழல்வேனோ
    ஏதம கற்றிச் செம்பத சிந்தனை தருவாயே

ஆழிய டைத்துத் தங்கையி லங்கையை எழுநாளே
 ஆண்மைசெ லுத்திக் கொண்டகரும்புயல் மருகோனே
வேழமு கற்குத் தம்பியெ னுந்திரு முருகோனே
 வேதவ னத்திற் சங்கரர் தந்தருள் பெருமாளே.

**713.** சூழ்ந்தேன்ற துக்கவினை சேர்ந்தூன்று மப்பில்வளர்
 தூண்போன்ற இக்குடிலும் உலகூடே
சோர்ந்தாய்ந்து மக்கினியில் நூண்சாம்பல் பட்டுவிடு
 தோம்பாங்கை யுட்பெரிது முணராமே
வீழ்ந்தீண்டி நற்கலைகள் தான்தோண்டி மிக்கபொருள்
 வேண்டுங்கை யிட்டுவர குழுவார்போல்
வேம்பாங்கு மற்றுவினை யாம்பாங்கு மற்றுவினை
 வாம்பாங்கில் நற்கழல்கள் தொழஆளாய்
வாழ்ந்தான்ற கற்புடைமை வாய்ந்தாய்ந்த நற்றவர்கள்
 வான்தோன்று மற்றவரும் அடிபேண
மான்போன்ற பொற்றொடிகள் தான்தோய்ந்தநற்புயமும்
 வான்தீண்ட உற்றமயில் மிசையேறித்
தாழ்ந்தாழ்ந்த மிக்ககடல் வீழ்ந்தீண்டு வெற்பசுரர்
 சாய்ந்தேங்க உற்றமர்செய் வடிவேலா
தான்தோன்றி யப்பர்குடி வாழ்ந்தீன்ற நற்புதல்வ
 தான்தோன்றி நிற்கவல பெருமாளே.

**714.** செக்கர்வா னப்பிறைக் கிக்குமா ரற்கலத்
 தெற்கிலூ தைக்கனற் றணியாத
சித்ரவீ ணைக்கலர்ப் பெற்றதா யர்க்கவச்
 சித்தம்வா டிக்கனக் கவிபாடிக்
கைக்கபோ லக்கிரிப் பொற்கொள்ரா சிக்கொடைக்
 கற்பதா ருச்செகத் ரயபானு
கற்றபேர் வைப்பெனச் செத்தையோ கத்தினர்க்
 கைக்குணுன் வெட்கிநிற் பதுபாராய்
சக்ரபா ணிக்குமப் பத்மயோ னிக்குநித்
 தப்ரதா பர்க்குமெட் டரிதாய
தத்வவே தத்தினுற் பத்திபோ தித்தவத்
 தத்வரூ பக்கிரிப் புரைசாடிக்

கொக்கிலே புக்கொளித் திட்டசூர் பொட்டெழக்
குத்தும்ரா வுத்தபொற் குமரோனே
கொற்றவா வுற்பலச் செச்சைமா லைப்புயக்
கொச்சைவாழ் முத்தமிழ்ப் பெருமாளே.

715. செங்கலச முலையார்பால் சிந்தைநிலை தடுமாறி
அங்கமிக மெலியாதே அன்புருக அருள்வாயே
செங்கைபிடி கொடியோனே செஞ்சொல்தெரி புலவோனே
மங்கையுமை தருசேயே மன்றுள்வளர் பெருமாளே.

716. செங்கனற்புகை யோமாதிகள்
குண்டமிட்டெழு சோமாசிகள்
தெண்டெனத்துணை தாள்மேல்விழ அமராடிச்
சிந்தனைப்படு மோகாதியி
யிந்த்ரியத்தினி லோடாசில
திண்டிறற்றவ வாள்வீரரொ டிகலாநின்
றங்கம்வெட்டிய கூர்வாள்விழி
மங்கையர்க்கற மாலாய்மன
மந்திபட்டிருள் மூடாவகை அவிரோத
அந்தநிர்க்குண ஞானோதய
சுந்தரச்சுட ராராயந
லன்புவைத்தரு ளாமோர்கழல் அருளாயோ
கொங்கடுத்தகு ராமாலிகை
தண்கடுக்கைது ழாய்தாதகி
கும்பிடத்தகு பாகீரதி மதிமீது
கொண்டசித்ரக லாசூடிகை
யிண்டெருக்கணி காகோதர
குண்டலத்தர்பி னாகாயுத ருடனேயச்
சங்குசக்ரக தாபாணியு
மெங்களுக்கொரு வாழ்வேசுரர்
தங்களைச்சிறை மீளாயென அசுரேசன்
தஞ்சமற்றிட வேதாகர
னஞ்சவெற்புக வீராகர
சண்டவிக்ரம வேலேவிய பெருமாளே.

717\. செஞ்சொற் பண்பெற் றிடுகுட மாமலை
குசும்பத் தந்திக் குவடென வாலிய
தெந்தப் பந்தித் தாளம தாமென விடாவி
சிந்திக் கந்திக் திடுகளை யாமுன
தங்கத் தம்பொற் பெதுவென வோதுவ
திண்டுப் புந்தித் திடுகனி தானமு னிதழாமோ
மஞ்சொக் குங்கொத் தளகமெ னுமிடை
கஞ்சத் தின்புற் றிடுதிரு வேயிள
வஞ்சிக்கொம்பொப்பெனுமயிலேயென முறையேய
வந்தித் திந்தப் படிமட வாரொடு
கொஞ்சிக் கெஞ்சித் தினமவர் தாடொழு
மந்தப் புத்திக் கசடனெ னாளுன தடிசேர்வேன்
நஞ்சைக் கண்டத் திடுபவ ராரொடு
திங்கட் பிஞ்சக் கரவணி வேணியர்
நம்பர்ச் செம்பொற் பெயரசு ரேசனை யுகிராலே
நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வர
நந்திக் கம்பத் தெழுநர கேசரி
நஞ்சக் குண்டைக் கொருவழி யேதென மிகநாடி
வெஞ்சச் சிம்புட் சொருபம தானவர்
பங்கிற் பெண்கற் புடையபெ ணாயகி
விந்தைச் செங்கைப் பொலிசுத வேடுவர் புனமீதே
வெண்டித் தங்கித் திரிகிழ வாஅதி
துங்கத் துங்கக் கிரிஅரு ணாபுரி
வெங்கட் சிங்கத் தடிமயி லேறிய பெருமாளே.

718\. செடியுடம் பத்தித் தெற்றிபி ரத்தஞ்
செறிநரம் பிட்டுக் கட்டிய சட்டஞ்
சிறைதிரண் டொக்கத் தொக்கவி னைப்பந் தவிகாரம்
திமிர துங் கத்தத் துத்திரை யெற்றுஞ்
செனனபங் கத்துத் துக்கக டற்கண்
திருகுறும் பைப்பட் டுச்சுழல் தெப்பங் காணுதி

குடிபுகும் பொக்கப் புக்கிலி றப்பின்
    குடிலம்வெந் தொக்குக் கொட்டில்ம லத்தின்
    குகைசுமந் தெட்டுத் திக்கிலு முற்றுந் தடுமாறும்

குவலயங் கற்றுக் கத்தியி ளைக்குஞ்
    சமயசங் கத்தைத் தப்பியி ருக்குங்
    குணமடைந் துட்பட் டொக்கவி ருக்கும் படிபாராய்

படிதருங் கற்புக் கற்பக முக்கண்
    கொடிபசுஞ் சித்ரக் குத்தர முத்தம்
    பணிநிதம் பத்துச் சத்தி யுகக்குங் குமரேசா

பரவசங் கெட்டெட் டக்கர நித்தம்
    பரவுமன் பர்க்குச் சித்திய ளிக்கும்
    பரமர்வந் திக்கத் தக்கப தத்தன் குருநாதா

தொடியிடும் பத்மக் கைக்குமி டைக்குஞ்
    சுருள்படும் பத்திப் பட்டகு ழற்குந்
    துகிர்கடைந் தொப்பித் திட்டவி தழ்க்குங் குறமானின்

சுடர்படுங் கச்சுக் கட்டுமு லைக்குந்
    துவளுநெஞ் சத்தச் சுத்தவி ருக்குஞ்
    சுரரும்வந் திக்கக் கச்சியில் நிற்கும் பெருமாளே.

719. செட்டா கத்தே னைப்போ லச்சீ
    ரைத்தே டித்திட் பமதாகத்

திக்கா மற்பா டற்று ரிற்சீ
    ருற்று ருக்குச் சிலபாடல்

பெட்டா கக்கூ றிப்போ தத்தா
    ரைப்போல் வப்புற் றுழலாதே

பெற்று ரிற்சார் வுற்றுய் நற்றாள்
    சற்றே தப்பெற் றிடுவேனோ

எட்டா நெட்டா கத்தோ கைக்கே
    புக்கோ லத்திட் டிமையோர்வா

ழிற்பா ரிற்கு ழச்சூ ரைத்தா
    னெட்டா வெட்டிப் பொரும்வேலா

முட்டா மற்று ளைச்சே விப்பார்
முற்பா வத்தைக் களைவோனே
முத்தா முத்தி யத்தா சுத்தா
மூத்தா முத்திப் பெருமாளே.

720. செழுந்தாது பார்மாது மரும்பாதி ரூபோடு
சிறந்தியாதி லூரமாசை ஒழியாத
திறம்பூத வேதாள னரும்பாவ மேகோடி
செயுங்காய நோயாளன் நரகேழில்
விழுந்தாழ வேழுழ்க இடுங்காலன் மேயாவி
விடுங்கால மேநாயென் வினைபாவம்
விரைந்தேக வேவாசி துரந்தோடி யேஞான
விளம்போசை யேபேசி வரவேணும்
அழுங்கோடி தேவர்க ளமர்ந்தார வானீடி
அழன்றேகி மாசீத நெடுவேலை
அதிர்ந்தோட வேகாலன் விழுந்தோட வேகூர
அலங்கார வேலேவு முருகோனே
கொழுங்கானி லேமாதர் செழுஞ்சேலை யேகோடு
குருந்தேறு மால்மாயன் மருகோனே
குறம்பாடு வார்சேரி புகுந்தாசை மாதோடு
குணங்கூடி யேவாழு பெருமாளே.

721. செறிதரும் செப்பத் துற்பல வெற்பும்
பிறிதுயங் கத்தைக் குற்றவி ருப்புஞ்
சிகரிதுண் டிக்கக் கற்றத னிச்செஞ் சுடர்வேலும்
திரள்புயங் கொத்துப் பட்டவ னைத்துந்
தெளியநெஞ் சத்துப் புற்றும யக்கம்
திகழ்ப்ரபஞ் சத்தைப் புற்புத மொக்கும் படிநாடும்
அறிவறிந் தத்தற் கற்றது செப்புங்
கடவுளன் பத்தர்க் கச்சம றுத்தன்
பருள்பவன் பொற்புக் கச்சியுள் நிற்கும் பெருமானென்
றவிழுமன் புற்றுக் கற்றும னத்தின்
செயலொழிந் தெட்டப் பட்டத னைச்சென்
றடைதரும் பக்வத் தைத்தமி யெற்கென் றருள்வாயே

குறியவன் செப்பப் பட்டள வர்க்கும்
பெரியவன் கற்பிக் கப்படு சுக்ரன்
குலகுலந் துட்கச் சத்யமி ழற்றுஞ் சிறுபாலன்

குதலையின் சொற்குத் தர்க்கமு ரைக்குங்
கனகனங் கத்திற் குத்திநி ணச்செங்
குடர்பிடுங் கித்திக் குற்றமு கச்சிங் கமுராரி

பொறிவிடுந் துத்திக் கட்செவி யிற்கண்
துயில்கொளுஞ் சக்ரக் கைக்கிரி சுத்தம்
புயலெனும் பொற்புப் பெற்றநி றத்தன் சகதாதை

புனிதசங் கத்துக் கைத்தல நிர்த்தன்
பழையசங் கத்தைப் பெற்றம டப்பெண்
புகலுகொண் டற்குச் சித்திய ளிக்கும் பெருமாளே.

722. செனித்தி டுஞ்சல சாழலு மூழலும்
விளைத்தி டுங்குடல் பீறிபு மீறிய
செருக்கொ டுஞ்சதை பீளையு மீளையும் உடனூடே

தெளித்தி டும்பல சாதியும் வாதியும்
இரைத்தி டுங்குல மேசில கால்படர்
சினத்தி டும்பவ நோயென வேயிதை யனைவோரும்

கனைத்தி டுங்கலி காலமி தோவென
வெடுத்தி டுஞ்சுடு காடுபு காவென
கவிழ்த்தி டுஞ்சட மோபொடி யாய்விடும் உடல்பேணிக்

கடுக்க னுஞ்சில பூடண மாடைகள்
இறுக்கி டுங்கலை யேபல வாசைகள்
கழித்தி டுஞ்சிவ யோகமு ஞானமும் அருள்வாயே

தனத்த னந்தன தானன தானன
திமித்தி திந்திமி தீதக தோதக
தகுத்து துந்துமி தாரைவி ராணமொ டடல்பேரி

சமர்த்த மொன்றிய தானவர் சேனையை
வளைத்து வெஞ்சின வேல்விடு சேவக
சமித்து ணர்ந்திடு மாதவர் பாலருள் புரிவோனே

தினைப்பு னந்தனி லேமய லாலொரு
  மயிற்ப தந்தனி லேசா ணாெனன
  திருப்பு யந்தரு மோகன மானினை அணைவோனே
 சிவக்கொ ழுஞ்சுட ரேபர ணாகிய
  தவத்தில் வந்தருள் பாலக்ரு பாகர
  திருக்கு டந்தையில் வாழ்முருகாசுரர் பெருமாளே.

723. சேமக் கோமள பாதத் தாமரை
  சேர்தற் கோதும — நந்தவேதா
 தீதத் தேயவி ரோதத் தேகுண
  சீலத் தேமிக — அன்புறாதே
காமக் ரோதவு லோபப் பூதவி
  காரத் தேயழி — கின்றமாயா
 காயத் தேபசு பாசத் தேசிலர்
  காமுற் றேயும — தென்கொலோதான்
நேமிச் சூரொடு மேருத் தூளெழ
  நீளக் காளபு — யங்ககால
 நீலக் ரீபக லாபத் தேர்விடு
  நீபச் சேவக — செந்தில்வாழ்வே
ஓமத் தீவழு வார்கட் கூர்சிவ
  லோகத் தேதரு — மங்கைபாலா
 யோகத் தாறுப தேசத் தேசிக
  ஊமைத் தேவர்கள் — தம்பிரானே.

724. சேலாலமொன் றுசெங்கண் வேலாலும்வென் றுமைந்தர்
  சீர்வாழ்வு சிந்தைபொன்ற — முதல்நாடி
 தேன்மேவுசெஞ்சொலின்சொல் தானேதிவந்தணைந்து
  தீராத துன்பவின்பம் — உறுமாதர்
கோலாகலங்கள் கண்டு மாலாகிநின் றனன்பு
  கூராமல் மங்கியங்கம் — அழியாதே
 கோள்கோடிபொன் றவென்று நாடோறுநின் றியங்கு
  கூர்வாய்மை கொண்டிறைஞ்ச — அருள்தாராய்

மாலாலுழன் றணங்கை யார்மாமதன் கரும்பின்
வாகோட ழிந்தொடுங்க செயல்நாடி
வாழ்வானகந்தமுந்த மாறுகிவந்தடர்ந்த
மாசூரர் குன்றவென்றி மயிலேறி
மேலாகுமொன் றமைந்த மேனாடர்நின் றிரங்க
வேலாலெ றிந்துகுன்றை மலைவோனே
வேய்போலவுந்திரண்ட தோள்மாதர்வந் திறைஞ்சு
*வேலூர்வி ளங்கவந்த பெருமாளே.

725. சேலுமயி லுந்த ரித்த வாளையட ருங்க டைக்கண்
மாதரைவ சம்ப டைத்த வசமாகிச்
சீலமமை யும்பணத்தி லாசையிலை யென்ற வத்தை
வேலையுமு டன்கி டக்கும் அவர்போலே
காலுமயி ரும்பி டித்து மேவுசிலு கும்பி ணக்கும்
நாளுமிக நின்ற லைத்த விரகாலே
காமகல கம்பி ணித்த தோதகமெ னுந்து வக்கி
லேயடிமை யுங்க லக்கம் உறலாமோ
ஏலமில வங்க வர்க்க நாகம்வகு ளம்ப டப்பை
பூகமரு தந்த ழைத்த காவிரம்
யாவுமலை கொண்டு கைத்த காவிரிபு றம்பு சுற்றும்
ஏரகம மர்ந்த பச்சை மயில்வீரா
சூலமடல் கொண்டு சக்ர மால்வரைய ரிந்த வஜ்ர
பாணியர்தொ ழுந்தி ருக்கை வடிவேலா
சூர்முதிர்க்ர வுஞ்ச வெற்பும் வேலையும்நி லம்ப தைக்க
சூரனுட லுந்து ணித்த பெருமாளே.

726. சேலையடர்த் தாலமிகுத் தேயுழையைச் சீறுவிதித்
தூறுசிவப் பேறுவிழிக் கணையாலே
தேனிரதத் தேமுழுகிப் பாகுநிகர்த் தாரமுதத்
தேறலெனக் கூறுமொழிச் செயலாலே
ஆலிலையைப் போலும்வயிற் றாலளகத் தாலதரத்
தாலிரதத் தாலும்வளைப் பிடுவோர்மேல்

*வேளூர்வி ளங்கவந்த பெருமாளே.

ஆசையினைத் தூரவிடுத் தேபுகழ்வுற் றேப்ரியநற்
றாளிணையைச் சேரவெனக் கருள்வாயே
காலனைமெய்ப் பாதமெடுத் தேயுதைபிட் டேமதனைக்
காயவெரித் தேவிதியிற் றலையூடே
காசினியிற் காணவிரப் போன்மதியைச் சூடியெருத்
தேறிவிரித் தூருதிரைக் கடல்மீதில்
ஆலமிடற் றானையுரித் தோலையுடுத் தீமமதுற்
றாடியிடத் தேயுமைபெற் றருள்வாழ்வே
ஆழியினைச்சூரனைவெற்பேழயில்தொட் டாவிதுணித்
தாதிதிருச் சோலைமலைப் பெருமாளே.

727. சேலையு டுத்துந டந்து மாலைய விழ்த்துமு டிந்து
சீதவ ரிக்குழல் கிண்டி யமுதூடே
தேனிலி னிக்கமொ ழிந்து காமுக ரைச்சிறை கொண்டு
தேசம னைத்தையும் வென்ற விழிமானார்
மாலைம யக்கில்வி ழுந்து காமக லைக்குளு ளைந்து
மாவில கப்பட நொந்து திரிவேனோ
வாளிர விக்கிர ணங்க ளாமென வுற்றப தங்கள்
மாதவ முற்றிட உன்றன் அருள்தாராய்
பாலைவ னத்தில்ந டந்து நீலவ ரக்கியை வென்று
பாரம லைக்குள கன்று கணையாலேழ்
பாரம ரத்திரள் மங்க வாலியு ரத்தைபி டந்து
பால்வரு ணத்தலை வன்சொல் வழியாலே
வேலைய டைத்துவ ரங்கள் சாடிய ரக்கரி லங்கை
வீடண ருக்கருள் கொண்டல் மருகோனே
மேவுதி ருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளு கந்து
வேதவ னத்தில மர்ந்த பெருமாளே.

728. சைவமுதற் குருவாயே சமணர்களைத் தெறுவோனே
பொய்யருளத் தணுகானே புனிதஅருட் புரிவாயே
கையின்மிசைக் கதிர்வேலா கடிகமழற் புதநீபா
தெய்வதசற் குருநாதா திருமதுரைப் பெருமாளே.

**729.** சொக்குப்போட் டெத்திக் கைப்பொரு
ளோக்கெத்திற் பற்றிச் சிக்கொடு
சுற்றுப்பட் டெற்றித் தெட்டிகள் முலைமீதே
சுற்றுப்பொற் பட்டுக் கச்சினர்
முற்றிக்குத் தத்தைக் கொப்பெனச்
சொற்பித்துக் கற்பிற் செப்பிய துயராலே
சிக்குட்பட் டுக்கிப் பற்கொடு
வெற்றிக்கைக் குத்துப் பட்டிதழ்
தித்திப்பிற் கொத்துப் பித்துயர் கொடுநாயேன்
திக்குக்கெட் டொட்டுச் சிட்டென
பட்டத்துற் புத்திக் கட்டற
செப்பத்துற் பற்றற் கற்புதம் அருள்வாயே
தக்குத்தக் குக்குக் குக்குட
தட்டுட்டுட் டுட்டுட் டுட்டென
தக்குத்திக் கெட்டுப் பொட்டெழ விருதோதை
தத்தித்தித் தித்தித் தித்தென
தெற்றுத்துட் டக்கட் டர்ப்படை
சத்திக்கொற் றத்திற் குத்திய முருகோனே
துக்கித்திட் டத்தித் துக்கக
நெக்குப்பட் டெக்கித் துட்டறு
சுத்தப்பொற் பத்தர்க் குப்பொருள் அருள்வேலா
துற்றப்பொற் பச்சைக் கட்கல
பச்சித்ரப் பக்ஷிக் கொற்றவ
சொக்கர்க்கர்த் தத்தைச் சுட்டிய பெருமாளே.

**730.** சொரியுங்கலை யின்கணத் தொகையாலே
துளையமிடுஞ் சந்தனத் தழலாலே
விரியுநில வின் [கதிர்ச்] சுடராலே
மெழுகிலம ருந்தனத் துயரானீர்
கரியதுரி யம்பிகை யணிவாரே
கருணைபெரு குங்கடைக் கண்ணூரே
அரியதொரு [வெ]ங்தொழிற் கரியாரே
அருணைய திரங்கழற் பெருமாளே.

731. சொரியு மாமுகி லோஇரு ளோகுழல்
சுடர்கொள் வாளிணை யோபிணை யோவிழி
சுரர்த மாரமு தோகுயி லோமொழி இதழ்கோவை
துவர தோஇல வோதெரி யாவிடை
துகளி லாவன மோபிடி யோநடை
துணைகொள்மாமலையோமுலைதானென உரையாடிப்
பரிவி னுடலிணை யாளுக மாமொரு
பழுதி லேனென வாணுத லாரொடு
பகடி யேபடி யாவொழி யாவிடர் படுமாயப்
பரவை மீதழி யாவகை ஞானிகள்
பரவு நீள்புக ழேயது வாமிரு
பரம வீடது சேர்வது மாள்வதும் ஒருநாளே
கரிய மேனிய னிரை யாள்பவன்
அரிய ராவணை மேல்வளர் மாமுகில்
கனகன் மார்பது பீறிய வாளரி கனமாயக்
கபடன் மாமுடி யாறுட னுலுமோர்
கணையி னல்நில மீதுற நூறிய
கருணை மால்கவி கோபக்ரு பாகரன் மருகோனே
திரிபு ராதிகள் தூளெழ வானவர்
திகழ வேமுனி யாவருள் கூர்பவர்
தெரிவை பாதியர் சாதியி லாதவர் தருசேயே
சிகர பூதரம் நீறுசெய் வேலவ
திமிர மோகர வீரதி வாகர
திருவை யாறுறை தேவக்ரு பாகர பெருமாளே.

732. சொரியு முகிலைப் பதும நிதியைச்
சுரபி தருவைச் சமமாகச்
சொலியு மனமெட் டனையு நெகிழ்விற்
சுமட ருருகுற் றியல்வாணர்
தெரியு மருமைப் பழைய மொழியைத்
திருடி நெருடிக் கவிபாடித்
திரியு மருள்விட் டுனது குவளைச்
சிகரி பகரப் பெறுவேனோ

கரிய புருவச் சிலையும் வளையக்
கடையில் விடமெத் தியநீலக்
கடிய கணைபட் டுருவ வெருவிக்
கலைகள் பலபட் டனகானிற்
குரிய குமரிக் கபய மெனநெக்
குபய சரணத் தினில்வீழ
உழையின் மகளைத் தழுவ மயலுற்
றுருகு முருகப் பெருமாளே.

733. சொருபப்பிர காசவிசு வருபப்பிர மாகநிச
சுகவிப்பிர தேசரச சுபமாயா
துலியப்பிர காசமத சொலியற்றர சாசவித
தொகைவிக்ரம மாதர்வயி றிடையூறு
கருவிற்பிற வாதபடி யுருவிற்பிர மோதவடி
களைஎத்திட ராகவகை அதின்மீறிக்
கருணைப்பிர காசவுன தருளுற்றிட ஆசில்சிவ
கதிபெற்றிட ரானவையை ஒழிவேனோ
குருகுக்குட வாரகொடி செருவுக்கிர ஆதபயில்
பிடிகைத்தல ஆதியரி மருகோனே
குமரப்பிர தாபகுக சிவசுப்பிர மாமணிய
குணமுட்டர வாவசுரர் குலகாலா
திருவொற்றியு ளுமருவு நகரொற்றியுர் வாரிதிரை
அருகுற்றிடு மாதிசிவன் அருள்பாலா
திகழுற்றிடு யோகதவ மிகுமுக்கிய மாதவர்க
ளிதயத்திட மேமருவு பெருமாளே.

734. சொற்பிழை வராம லுனைக்கனக் கத்துதித்து
நிற்பதுவ ராத பவக்கடத் திற்சுழற்றி
சுக்கிலவ தார வழிக்கிணக் கிக்களித்து விலைமாதர்
துப்பிறைய தான இதழ்க்கனிக் குக்கருத்தை
வைத்துமய லாகி மனத்தைவிட் டுக்கடுத்த
துற்சனம காத கரைப்புவிக் குட்டழைத்த நிதிமேவு

கற்பக இராச னெனப்படைக் குப்பெருத்த
அர்ச்சுனந ராதி யெனக்கவிக் குட்பதித்து
கற்றறிவி னுவை யெடுத்தடுத் துப்படித்து மிகையாகக்
கத்திடுமெ யாக வலிக்கலிப் பைத்தொலைத்து
கைப்பொருளி லாமை யெனைக்கலக் கப்படுத்து
கற்பனைவி டாம லலைத்திருக் கச்சலிக்க விடலாமோ
எற்பணிய ராவை மிதித்துவெட் டித்துவைத்து
பற்றியக ராவை யிழுத்துரக் கக்கிழித்து
எட்கரிப டாம விதத்தபுத் திக்கதிக்கு நிலையோதி
எத்தியப சாசின் முலைக்குடத் தைக்குடித்து
முற்றுயிரி லாம லடக்கிவிட் டுச்சிரித்த
இற்கணையி ராமர் சுகித்திருக் கச்சினத்த திறல்வீரா
வெற்பனம தாணி நிறுத்துருக் கிச்சமைத்து
வர்க்கமணி யாக வடித்திருத் தித்தகட்டின்
மெய்க்குலமதாக மலைக்கைமுத் தைப்பதித்து வெகுகோடி
விட்கதிர தாக நிகர்த்தொளிக் கச்சிவத்த
ரத்தினப டாக மயிற்பரிக் குத்தரித்து
மிக்கதிரு வாவ டுதற்றுறைக் குட்செழித்த பெருமாளே.

735. சோதி மந்திரம் போத கம்பரவு
ஞான கம்பரந் தேயி ருந்தவெளி
தோட லர்ந்தபொன் பூவி ருந்தவிட முங்கொளாமல்
சூது பந்தயம் பேசி யஞ்சுவகை
சாதி விண்பரிந் தோடு கண்டர்மிகு
தோக தம்பரிந் தாடு சிந்துபரி கந்துபாயும்
வீதி மண்டலம் பூண மர்ந்துகழி
கோல மண்டியின் றூடி யின்பவகை
வேணு மென்றுகண் சோர ஐம்புலனொ டுங்குபோதில்
வேதி யன்புரிந் தேடு கண்டளவி
லோடி வெஞ்சுடுங் காட ணைந்துசுட
வீழ்கி வெந்துகுந் தீடு மிந்தஇடர் என்றுபோமோ
ஆதி மண்டலஞ் சேர வும்பரம
சோம மண்டலங் கூட வும்பதும
வாளன் மண்டலஞ் சார வுஞ்சுழிப டர்ந்ததோகை

ஆழி மண்டலந் தாவி யண்டமுத
லான மண்டலந் தேடியொன் றதொமு
கான மண்டலஞ் சேட னங்கணயில் கொண்டுலாவிச்

சூதர் மண்டலந் தூளெ ழுந்துபொடி
யாகி விண்பறந் தோட மண்டியொரு
சூரியன் திரண் டோட கண்டுநகை கொண்டவேலா

சோலை கொண்டுளங் கான மங்கைமய
லாடி இந்திரன் தேவர் வந்துதொழ
சோழ மண்டலஞ் சாரு மம்பர்வளர் தம்பிரானே.

736. சோதி மாமதி போல்முக முங்கிளர்
மேரு லாவிய மாமுலை யுங்கொடு
தூர வேவரு மாடவர் தங்கள்முன் எதிராயே

சோலி பேசிமு னிலி ணங்கிய
மாதர் போலிரு தோளில்வி ழுந்தொரு
சூதி னுல்வர வேமனை கொண்டவ ரொடுமேவி

மோதி யேகனி வாயத ரந்தரு
நாளி லேபொருள் சூறைகள் கொண்டுபின்
மோன மாயவ மேசில சண்டைக ளுடனேசி

மோச மேதரு தோதக வம்பியர்
மீதி லேமய லாகிம னந்தளர்
மோட னாகிய பாதக னுங்கதி பெறுவேனோ

ஆதி யேயெனும் வானவர் தம்பகை
யான சூரனை மோதிய ரும்பொடி
யாக வேமயி லேறிமு னிந்திடு நெடுவேலா

ஆயர் வாழ்பதி தோறுமு கந்தர
லேறி யேயுறி மீதனை யுங்கள
வாக வேகொடு போதநு கர்ந்தவன் மருகோனே

வாதி னுல்வரு காளியை வென்றிடு
மாதி நாயகர் வீறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு நடபாதர்

வாச மாமல ராளொடு செந்திரு
மார்பில் வீறிய மாயவ னும்பணி
மாசி லாமணி ஈசர்ம கிழ்ந்தருள் பெருமாளே.

737. ஞால மெங்கும் வளைத்தரற்று கடலாலே
நாளும் வஞ்சி யருற்றுரைக்கும் வசையாலே
ஆல முந்து மதித்தழற்கும் அழியாதே
ஆறி ரண்டு புயத்தணைக்க வருவாயே
கோல மொன்று குறத்தியைத்த ழுவுமார்பா
கோடை யம்ப தியுற்றுநிற்கு மயில்வீரா
கால னஞ்ச வரைத்துளைத்து முதல்வானோர்
கால்வி லங்கு களைத்தறித்த பெருமாளே.

738. ஞாலமோ டொப்பமக் காளொ நற்சொலைத்
தீதெ நற்றவத் தணைவோர்தம்
நாதமோ டட்கருத் தோடவே தர்க்கமிட்
டோயுநா யொப்பவர்க் கிளையாதே
நீலமே னிக்குலத் தோகைமே லுற்றுநிட்
டூரசூர் கெட்டுகப் பொரும்வேலா
நேசமாய் நித்தநிற் றூளநீ ளச்சமற்
றேறுதநீ திப்பொருட் டாவேணும்
கோலவா ரிக்கிடைக் கோபரா விற்படுத்
தானும்வே தக்குலத் தயனும்
கூறும்வா னப்புவிக் கூறுதீ ரக்குறிப்
போதுரு நிற்பவக் கொடிதான
காலன்மார் புற்றுதைத் தானுமோர் கற்புடைக்
கோதைகா மக்கடற் கிடைமூழ்கக்
காவிசேர் கொத்தலர்ப் பாணமேய் வித்தகக்
காமவேள் மைத்துனப் பெருமாளே.

739. ஞானங்கொள் பொறிகள் கூடி வானிந்து கதிரி லாத
நாடண்டி நமசி வாய வரையேறி
நாவின்ப ரசம தான ஆநந்த அருவி பாய
நாதங்க ளொடுகு லாவி விளையாடி

ஊனங்க ளுயிர்கள் மோக நானென்ப தறிவி லாமல்
ஓமங்கி உருவ மாகி இருவோரும்
ஓர்ந்த மருவி ஞான மாவிஞ்சை முதுகி னேறி
லோகங்கள் வலம தாட அருள்தாராய்
தேனங்கொ ளிதழி தாகி தாரிந்து சலில வேணி
சீரங்க னெனது தாதை ஒருமாது
சேர்பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுன சோதி
சேர்பங்கி னமல நாதன் அருள்பாலா
கானங்கள் வரைகள் தீவு ஓதங்கள் பொடிய நீல
காடந்த மயிலி லேறு முருகோனே
காமன்கை மலர்கள் நாண வேடம்பெ ணமளி சேர்வை
காணங்கள் பழநி மேவு பெருமாளே.

740. தகர நறுமலர் பொதுளிய குழலியர்
கலக கெருவித விழிவலை படவிதி
தலையி லெழுதியு மனைவயி னுறவிடு அதனாலே
தனயர் அனைதமர் மனைவியர் சினெகிதர்
சுரபி திரவிய வகையென நினைவுறு
தவன சலதியின் முழுகியெ இடர்படு துயர்தீர
அகர முதலுள பொருளினை அருளிட
இருகை குவிசெய்து ளுருகிட உருகியெ
அரக ரெனவல னிடமுற எழிலுன திருபாதம்
அருள அருளுடன் மருளற இருளற
கிரண அயில்கொடு குருகணி கொடியொடு
அழகு பெறமர கதமயில் மிசைவர இசைவாயே
சிகர குடையினி னிரைவர இசைதெரி
சதுரன் விதுரனில் வருபவன் அளையது
திருடி அடிபடு சிறியவ னெடியவன் மதுசூதன்
திகிரி வளைகதை வசிதனு உடையவன்
எழிலி வடிவினன் அரவுபொன் முடிமிசை
திமித திமிதிமி எனநட மிடுமரி மருகோனே

பகர புகர்முக மதகரி உமைதரு
வனிதை வெருவமுன் வரஅருள் புரிகுக
பரம குருபர இமகிரி தருமயில் புதல்வோனே

பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய
நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்
பழநி மலைவரு புரவல அமரர்கள் பெருமாளே.

741. தகரநறை பூண்ட விந்தைக்
குழலியர்கள் தேய்ந்த இன்பத்
தளருமிடை ஏந்து தங்கத் தனமானார்

தமைமனதில் வாஞ்சை பொங்கக்
கலவியொடு சேர்ந்து மந்த்ரச்
சமயசெப நீங்கி இந்தப் படிநாளும்

புகலரிய தாந்த்ரி சங்கத்
தமிழ்பனுவ லாய்ந்து கொஞ்சிப்
புவியதனில் வாய்ந்து வஞ்சித் துழல்மூடர்

புனிதமிலி மாந்தர் தங்கட்
புகழ்பகர்தல் நீங்கி நின்பொற்
புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ

தகுடதகு தாந்த தந்தத்
திகுடதிகு தீந்த திந்தித்
தகுகணக தாங்க ணங்கத் தனதான

தனனதன தாந்த தந்தத்
தெனநடன மார்ந்த துங்கத்
தனிமயிலை ஊர்ந்த சந்தத் திருமார்பா

திகையசுரர் மாண்ட மூந்தத்
திறலயிலை வாங்கு சங்கத்
திமையவரை ஈன்ற மங்கைக் . கொருபால

திகழ்வயிர மேந்து கொங்கைக்
குறவனிதை காந்த சுந்த்ரச்
சிகரமுகி லோங்கு செந்திற் பெருமாளே.

742. தகைமைத் தனியிற் பகைகற் றுறுகைத்
தநுமுட் டவளைப் பவனாலே
தரளத் திரளிற் புரளக் காளத்
தமரத் திமிரக் கடலாலே
உகைமுத் தமிகுத் ததெனப் பகல்புக்
கொளிமட் குமிகைப் பொழுதாலே
உரையற் றுணர்வற் றுயிரெய்த் ததொடிக்
குனநற் பிணையற் றரவேணும்
திகைபத் துமுகக் கமலத் தனைமுற்
சிறைபட் டபகைத் திறல்வீரா
திகழ்கற் பகமிட் டவனக் கனகத்
திருவுக் குருகிக் குழைமார்பா
பகலக் கிரணப் பரணச் சடிலப்
பரமற் கொருசொற் பகர்வோனே
*பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமானே.

743. தசைதுறுந் தொக்குக் கட்டளை சட்டஞ்
சரியவெண் கொக்குக் கொக்கநரைத்தந்
தலையுடம் பெய்த்தெற் புத்தளை செக்கிந் த்ரியமாறித்
தடிகொடுந் திக்குத் தப்பநடக்கும்
தளர்வுறுஞ் சுத்தப் பித்தவி ருத்தன்
தகைபெறும் பற்கொத் துக்களை வைத்துங் கழலாமின்
றசல்ருஞ் செச்செச் செச்செயெனச்சந்
ததிகளும் சிச்சிச் சிச்சியெனத்தங்
கரிவையும் துத்துத் துத்துவெனக்கண் டுமியாமல்
எவருநிந் திக்கத் தக்கபிறப்பிங்
கலமலஞ் செச்சைச் சித்ரம ணித்தண்
டையரவிந் தத்திற் புக்கடை தற்கென் றருள்வாயே

*பழனப் பொழில்சுற் றுறுபொற் றணிகைப் பதியிற் குமரப் பெருமானே.

குசைமுடிந் தொக்கப் பக்கரை யிட்டெண்
டிசையினுந் தத்தப் புத்தியை நத்துங்
குரகதங் கட்டிக் கிட்டிந டத்தும் கதிர்நேமிக்
குலரதம் புக்கொற் றைக்கணை யிட்டெண்
டிரிபுரஞ் சுட்டுக் கொட்டைய ரப்புங்
குரிசில்வந் திக்கக் கச்சியில் நிற்குங் கதிர்வேலா
திசைமுகன் தட்டுப் பட்டெழ வற்குஞ்
சிகரியுங் குத்துப் பட்டுவி ழத்தெண்
டிரையலங் கத்துப் புக்குல விச்சென் றெதிரேறிச்
சிரமதுங் கப்பொற் கட்டிகை யிட்டன்
றவுணர்நெஞ் சிற்குத் திக்கறை கட்கஞ்
சிதறிமின் றெட்டிப் பொட்டெழ வெட்டும் பெருமாளே.

**744.** தசையா கியகற் றையினால் முடியத்
தலைகா லளவொப் பனையாயே
தடுமா றுதல்சற் றொருநா ளுலகிற்
றவிரா வுடலத் தினைநாயேன்
பசுபா சமும்விட் டறிவா லறியப்
படுபூ ரணநிட் களமான
பதிபா வனையுற் றநுபூ தியிலப்
படியே யடைவித் தருள்வாயே
அசலே சுரர்புத் திரனே குணதிக்
கருணோ தயமுத் தமிழோனே
அகிலா கமவித் தகனே துகளற்
றவர்வாழ் வயலித் திருநாடா
கசிவா ரிதயத் தமிர்தே மதுபக்
கமலா லயன்மைத் துனவேளே
கருணா கரசற் குருவே குடகிற்
கருவூ ரழகப் பெருமாளே.

**745.** தசையு முதிரமு நிணமொடு செருமிய
கருமகி ருமிகளொ ழுகிய பழகிய
சடல உடல்கடை சுடலையி லிடுசிறு குடில்பேணும்

சகல கருமிகள் சருவிய சமயிகள்
சரியை கிரியைகள் தவமெனு மவர்சிலர்
சவலை யறிவினர் நெறியினை விடஇனி அடியேனுக்
கிசைய இதுபொரு ளெனவறி வுறவொரு
வசன முறவிரு வினையற மலமற
இரவு பகலற எனதற நினதற அநுபூதி
இனிமை தருமொரு தனிமையை மறைகளி
னிறுதி அறுதியி டவரிய பெறுதியை
இருமைஒருமையில்பெருமையைவெளிபட மொழிவாயே
அசல குலபதி தருமொரு திருமகள்
அமலை விமலைக ளெழுவரும் வழிபட
அருளி அருணையி லுறைதரு மிறையவள் அபிராமி
அநகை அநுபவை அநுதயை அபிநவை
அதல முதலெழு தலமிவை முறைமுறை
அடைய அருளிய பழையவ ளருளிய சிறியோனே
வசுவ பசுபதி மகிழ்தர வொருமொழி
மவுன மருளிய மகிமையு மிமையவர்
மரபில் வனிதையும் வனசரர் புதல்வியும் வடிவேலும்
மயிலு மியலறி புலமையு முபநிட
மதுர கவிதையும் விதரண கருணையும்
வடிவு மிளமையும் வளமையு மழகிய பெருமாளே.

746. தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டல்தண்
தமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தனையூசற்
கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே
படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்

பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பாதத்தைக் கொண்டிடுந் தனிவேலா
குடக்குத் தென்பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே.

747. தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்
தண்டார் மஞ்சுக் குழல்மாதர்
தம்பா லன்பார் நெஞ்சே கொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்
மண்டோ யந்தீ மென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வேறாய்
வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்
கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்றாய் வென்றிக் குமரேசா
கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்றா மன்றற் கிரியோனே
கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா கந்தப் புயவேளே
கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா செந்திற் பெருமாளே.

748. தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையும்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்
தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்
கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களும்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்
கண்களுமு கங்களுஞ் சந்திரநி றங்களும்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ
புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கிஎழ வெங்களங் கொண்டபோது

பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கணும் வளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்
கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே
கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுநி கும்பிடுந் தம்பிரானே..

749. தத்த னமுமடிமை சுற்ற மொடுபுதல்வர்
தக்க மனையினமு மனைவாழ்வும்
தப்பு நிலைமையணு கைக்குவர விரகு
தைக்கு மயல்நினைவு குறுகாமுன்
பத்தி உடனுருகி நித்த முனதடிகள்
பற்று மருள்நினைவு தருவாயே
பத்து முடியுருள வித்த பகழியினர்
பச்சை நிறமுகிலின் மருகோனே
அத்தி முகவனழ குற்ற பெழைவயிற
னப்ப மவரைபொரி அவல்தேனும்
அப்பி அமுதுசெயு மொய்ப்ப னுதவஅட
விக்குள் மறமகளை அணைவோனே
முத்தி தருமுதல்வர் முக்க ணிறைவரொடு
முற்று மறைமொழியை மொழிவோனே
முட்ட வசுரர்களை கெட்டு முறியமுதல்
வெட்டி அமர்பொருத பெருமாளே..

750. தத்தித் தத்திக் கட்டப் பட்டுச்
சத்தப் படுமைக் கடலாலே
சர்ப்பத் தத்திற் பட்டுக் கெட்டுத்
தட்டுப் படுமப் பிறையாலே
சித்தத் துக்குப் பித்துற் றுச்சச்
சித்ரக் கொடியுற் றழியாதே
செப்பக் கொற்றச் சிற்பப் பத்திச்
செச்சைத் தொடையைத் தரவேணும்
கொத்துத் திக்குப் பத்துட் புக்குக்
குத்திக் கிரியைப் பொரும்வேலா

கொச்சைப் பொச்சைப் பொற்பிற் பச்சைக்
கொச்சைக் குறவிக் கினியோனே
சுத்தப் பத்தத் தர்க்குச் சித்தத்
துக்கத் தையொழித் திடும்வீரா
சொர்க்கத் துக்கொப் புற்றக் கச்சிச்
*சொக்கப் பதியிற் பெருமாளே.

751. தத்துவத் துச்செயலொ டொட்டில்பட் டக்குருகு
சத்துவிட் டப்படிபொ லடியேனும்
சச்சிலுற் றுப்படியில் விட்டுவிட் டுக்குளறி
சத்துவத் தைப்பிரிய விடும்வேளை
சுத்தமுத் தப்பதவி பெற்றநற் பத்தரொடு
தொக்குசற் றுக்கடையன் மிடிதீரத்
துப்புமுத் துச்சரண பச்சைவெற் றிப்புரவி
சுற்றவிட் டுக்கடுகி வரவேணும்
வித்தகத் திப்பவள தொப்பையப் பற்கிளைய
வெற்றிசத் திக்கரக முருகோனே
வெற்புமெட் டுத்திசையும் வட்டமிட் டுச்சுழல
விட்டபச் சைச்சரண மயில்வீரா
கத்தர்கொட் டைச்சடையர் முக்கணக் கக்கடவுள்
கச்சியப் பர்க்கருள்செய் குருநாதா
கற்பதத் தைக்குருகி உற்பதத் துக்குறவர்
கற்பினுக் குற்றுபுணர் பெருமாளே.

752. தத்தைமயில் போலுமியல் பேசிபல மோகநகை
யிட்டுமுட னணிமுலை மீதுதுகில் மூடியவர்
சற்றவிடம் வீடுமினி வாருமென வோடிமடி பிடிபோல
தைச்சரச மோடுறவெ யாடியக மேகொடுபொ
யெத்தியணை மீதிலிது காலமெனிர் போவதென
தட்டுபுழு கோடுபனி நீர்பலச வாதையவர் உடல்பூசி

*இப்பாடலுக்குள் வேறொரு பாடல் அமைந்துள்ளது. மேலே 334, 409 எண்ணுள்ள பாடல்களைப் பார்க்கவும்.

வைத்துமுக மோடிரச வாயிதழி னூறல்பெரு
கக்குழல ளாவசுழல் வாள்விழிக ளேபதற
வட்டமுலை மார்புதைய வேர்வைதர தோளிறுகி
யுடைசோர
மச்சவிழி பூசலிட வாய்புலியு லாசமுட
னெப்பியிரு வோருமயல் மூழ்கியபின் ஆபரணம்
வைத்தடகு தேடுபொருள் சூறைகொளு வார்கலவி
செயலாமோ
சத்திசர சோதிதிரு மாதுவெகு ரூபிசுக
நித்தியகல் யாணியெனை யீணமலை மாதுசிவை
தற்பரனொ டாடுமபி ராமசிவ காமியுமை அருள்பாலா
சக்ரகிரி சூரிமக மேருகடல் தூளிபட
ரத்நமயி லேறிவிளை யாடியசு ராரைவிழ
சத்தியினை யேவிஅம ரோர்கள்சிறை மீளநடம்
இடுவோனே
துத்திதன பாரவெகு மோகசுக வாரிமிகு
சித்ரமுக ரூபியென தாயிவளி நாயகியை
சுத்தவனை யூடுவட மாமுலைவி டாதகர மணிமார்பா
சுத்தவம காதவசி காமணியெ னேதுவமர்
சித்தமதி லேகுடிய தாவுறையும் ஆறுமுக
சுப்ரமணி யாபுலியுர் மேவியுறை தேவர்புகழ்
பெருமாளே.

753. தத்தையென் றெப்பிடுந் தோகைநட் டங்கொளுவர்
பத்திரங் கட்கயங் காரியொப் புங்குழல்கள்
சச்சையங் கெச்சையுந் தாளவொத் தும்பதுமை
என்பநீலச்
சக்கரம் பொற்குடம் பாலிருக் குந்தனமொ
டொற்றிநன் சித்திரம் போலவெத் தும்பறியர்
சக்களஞ் சக்கடம் சாதிதுக் கங்கொலையர் சங்கமாதர்
சுத்திடும் பித்திடும் சூதுகற் குஞ்சதியர்
முற்பணங் கைக்கொடுந் தாருமிட் டங்கொளுவர்
சொக்கிடும் புக்கடன் சேருமட் டுந்தனகும்
விஞ்சையோர்பால்

தொக்கிடுங் கக்கலுஞ் சூலைபக் கம்பிளவை
விக்கலுந் துக்கமுஞ் சீதபித் தங்கள்கொடு
துப்படங் கிப்படுஞ் சோரனுக் கும்பதவி எந்தநாளோ
குத்திரங் கற்றசண் டாளர்சத் தங்குவடு
பொட்டெழுந் திட்டுநின் றூடஎட் டந்திகையர்
கொற்றமுங் கட்டியம் பாடநிர்த் தம்பவுரி
கொண்டவேலா
கொற்றர்பங் குற்றசிந் தாமணிச் செங்குமரி
பத்தரன் புற்றஎந் தாயெழிற் கொஞ்சுகிளி
கொட்புரந் தொக்கவெந் தாடவிட் டங்கிவிழி
மங்கைபாலா
சித்திரம் பொற்குறம் பாவைபக் கம்புணர
செட்டியென் றெத்திவந் தாடிநிர்த் தங்கள்புரி
சிற்சிதம் பொற்புயஞ் சேரமுற் றும்புணரு
மெங்கள்கோவே
சிற்பரன் தற்பரன் சீர்திகழ்த் தென்புலியூர்
ருத்திரன் பத்திரஞ் சூலகர்த் தன்சபையில்
தித்தியென் றொத்துநின் றூடுசிற் றம்பலவர்
தம்பிரானே.

754. தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்
தம்பி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்
மைந்தர் மனைவியர்க டும்பு கடனுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா
வந்து தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க ஒருமகிட மிசையேறி
அந்த கனுமெனைய டர்ந்து வருகையினில்
அஞ்ச லெனவலிய மயில்மேல்நீ
அந்த மறலியொடு கந்த மனிதனம
தன்ப னெனமொழிய வருவாயே

சிந்தை மகிழுமலை மங்கை நகிலிணைகள்
சிந்து பயமயிலு மயில்வீரா
திங்க ளரவுநதி துன்று சடிலரருள்
செந்தி னகரிலுறை பெருமாளே.

755. தந்தமுந் துன்பமெஞ் சிந்தைகொண் டந்தகன்
தண்டமொன் றுன்றுடுங் கிடுமாவி
தஞ்சமென் றும்பரிந் தின்சொல்வஞ் சந்தெரிந்
தன்றுமென் றுந்தனந் தனைநாடி
நின்றனன் பென்பதொன் றின்றிநன் றென்றுநெஞ்
சின்கணன் பொன்றில்மங் கையர்நேசம்
நின்றளந் துஞ்சளங் கொண்டிடும் புன்கணந்
தின்பமொன் றின்றியிங் குழல்வேனோ
சுந்தரன் பந்தமுஞ் சிந்தவந் தன்புடன்
தொண்டனென் றன்றுகொண் டிடுமாதி
தும்பைசெம் பொன்சொரிந் துந்தருங் கொன்றைதன்
பங்கடிந் தென்பொடுந் தொலையாநீர்
அந்தமுந் திந்துவுங் கெந்தமிஞ் சுங்கொழுந்
தன்றுமின் றும்புனைந் திடுவேணி
அன்பர்நெஞ் சின்புறுஞ் செஞ்சொலன் கந்தனென்
றண்டரண் டந்தொழும் பெருமாளே.

756. தமரகு ரங்களும் காரிருட்பி ழம்பு
மெழுதிய அங்கமும் பார்வையிற்கொ ழுந்து
தழலுமிழ் கண்களுங் காளமொத்த கொம்பும்
உளகதக் கடமாமேல்
தனிவரு மந்தகன் பாசம்விட்டெ றிந்து
விடவரு மென்றுசிந் தாகுலத்தி ருந்து
தமரிளை மைந்தருஞ் சோகமுற்றி ரங்க
மரணபக் குவமாநாள்
கமலமு கங்களுங் கோமளத்தி லங்கு
நகையுநெ டுங்கணுங் காதினிற்று லங்கு
கனககு தம்பையுந் தோடும்வஜ்ர அங்க
தமுமடற் சுடர்வேலும்

கடிதுல கெங்கணுந் தாடியிட்டு வந்த
மயிலுமி லங்கலங் காரபொற்ச தங்கை
கழலொலி தண்டையங் காலுமொக்க வந்து
வரமெனக் கருள்கூராய்
இமகிரி வந்தபொன் பாவைபச்சை வஞ்சி
அகிலத லம்பெறும் பூவைசத்தி யம்பை
இளமுலை யின்செழும் பால்குடித்தி லங்கு
மியல்நிமிர்த் திடுவோனே
இறைவரி றைஞ்சநின் றுகமப்ர சங்க
முரைசெய்தி டும்ப்ரசண் டாவிசித்து நின்ற
ரணமுக துங்கவெஞ் சூருடற்பி ளந்த
அயிலுடைக் கதிர்வேலா
அமணர டங்கலுங் கூடலிற்றி ரண்டு
கழுவிலு தைந்துதைந் தேறவிட்டு நின்ற
அபிநவ துங்ககங் காநதிக்கு மைந்த
அடியவர்க் கெளியோனே
அமரர்வ ணங்குகந் தாகுறத்தி கொங்கை
தனில்முழு குங்கடம் பாமிகுத்த செஞ்சொ
லருணைநெ டுந்தடங் கோபுரத்த மர்ந்த அறுமுகப்
பெருமாளே.

757. தமரு மமரு மனையு மினிய
தனமு மரசும் அயலாகத்
தறுகண் மறலி முறுகு கயிறு
தலையை வளைய எறியாதே
கமல விமல மரக தமணி
கனக மருவும் இருபாதம்
கருத அருளி எனது தனிமை
கழிய அறிவு தரவேணும்
குமர சமர முருக பரம
குலவு பழநி மலையோனே
கொடிய பகடு முடிய முடுகு
குறவர் சிறுமி மணவாளா

அமா ரிடரும் அவுண ருடலும்
அழிய அமர்செய் தருள்வோனே
அறமு நிறமும் அயிலு மியலும்
அழகு முடைய பெருமாளே.

758. தமிழோதிய குயிலோமயி லாண்டலை யாம்புறவங்
கிளிகாடையி னணிலேரளி யாங்குரல் வாய்த்ததிசெந்
தருமாமிட றுலியாரித ழாஞ்சுளை தேன்கனியின்
சுவைசேருந்

தனபாரமு மலையாமென வோங்கிட மாம்பொறிசிந்
திடவேல்விழி நுதலோசிலைவான்பிறைமாந்தளிரின்
சரிரார்குழ லிருளார்நகை யோங்கிய வான்கதிரின்
சுடர்பாயக்

குமிழ்நாசியின் முகமோமதி யாங்குளிர் செங்கமலஞ்
சரிதோடிணை செவியாடுச லாங்கள பூங்கமுகங்
கொடிநூலிடை யுடையாரன மாம்ப்ரியர் மாண்புரியின்
கொடிமாதர்

குணமோடம ளியிணுடினு மோங்கிய பூங்கமலஞ்
சரணூபுர குரலோசையு மேந்திடு மாண்டலையின்
கொடியோடெழு தரிதாம்வடி வோங்கிய பாங்கையுமன்
தகையேனே

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கெணதோந்
தகுதோதகு தகுதோதகு டாங்குட டீங்கடதோந்
திகுடோடிமி டிமிடோடிமி டாங்குட டீந்தகமென்
றியல்பேரி

திசைமூடுக கடலேழ்பொடி யாம்படி யோங்கியவெங்
கரிதேர்பரி யசுரார்கள மாண்டிட நீண்டரவின்
சிரமீள்படகுவடோதுகள்வான்பெறவாங்கியவண்
கதிர்வேலா

கமழ்மாவிதழ் சடையாரடி யேன்துயர் தீர்ந்திடவெண்
தழல்மாபொடி யருள்வோரடல் மான்துடி தாங்கியவண்
கரர்மாடரு ளுமையாளுமை யீன்றவ ளீன்றருள்மென்
குரவோனே

கடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண்
சுகமோகினி வளிநாயகி பாங்கனெ னும்பகர்மின்
கலைநூலுடை முருகாஅழ லோங்கிய வோங்கலின்கண்
பெருமாளே.

759. தாங்க வார்குழற் றநுநுதல் விழியாலம்
தகைந்த மாமுலைத் துடியிடை மடமாதர்
பாந்த மாலிருட் படுகுழி வசமாகிப்
பயந்து காலனுக் குயிர்கொடு தவியாமல்
வரந்த ராவிடிற் பிறரெவர் தருவாரே
மகிழ்ந்து தோகையிற் புவிவலம் வருவோனே
குரும்பை மாமுலைக் குறமகள் மணவாளா
குளந்தை மாநகர்த் தளியுறை பெருமாளே.

760. தரணிமிசை அனையினிட உந்தியின் வந்துகுந்
துளிபயறு கழலினிய அண்டமுங் கொண்டதின்
தசையுதிர நிணநிறைய அங்கமுந் தங்கவொன் பதுவாயுந்
தருகரமொ டினியபத முங்கொடங் கொன்பதும்
பெருகிஒரு பதினவணி வந்துகண் டன்புடன்
தனயனென நடைபழகி மங்கைதன் சிங்கியின் வசமாகித்
திருகியுடல் வளையநடை தண்டுடன் சென்றுபின்
கிடையெனவு மருவிமனை முந்திவந் தந்தகன்
சிதறஉயிர்பிணமெனவெ மைந்தரும்பந் துவும் அயர்வாகிச்
செடமிதனை எடுமெடுமி னென்றுகொண் டன்புடன்
சுடலைமிசை எரியினிட வெந்துபின் சிந்திடுஞ்
செனனமிது தவிரவிரு தண்டையுங் கொண்டபைங்
கழல்தாராய்
செருவெதிரு மசுரர்கிளை மங்கவெங் கெங்கணும்
கழுகருட னயனமிது கண்டுகொண் டம்பரந்
திரியமிகு அலகையுடன் வெங்கணந் தங்கியுண்
மகிழ்வாகிச்
சினவசுர ருடலமது தின்றுதின் றின்புடன்
டுமுடுமுட டுமுடுமுட டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிலைபறை முழவுதுடி பம்பையுஞ் சங்கமுந் தவமோதச்

சரவரிசை விடுகுமா அண்டர்தம் பண்டுறுஞ்
சிறையைவிட வருமுருக என்றுவந் திந்திரன்
சதுமுகனு மடிபரவ மண்டுவெஞ் சம்பொருங்
கதிர்வேலா
சகமுழுது மடையவமு துண்டிடுங் கொண்டலுந்
தெரிவரிய முடியினர வங்களுந் திங்களுஞ்
சலமிதழி அணியுமொரு சங்கரன் தந்திடும்
பெருமாளே.

**761.** தரிக்குங்கலை நெகிழ்க்கும்பர
தவிக்குங்கொடி மதனைவில்
தகைக்குந்தனி திகைக்குஞ்சிறு
தமிழ்த்தென்றலி னுடனேநின்
றெரிக்கும்பிறை எனப்புண்படு
மெனப்புன்கவி சிலபாடி
இருக்குஞ்சிலர் திருச்செந்திலை
யுரைத்துய்ந்திட அறியாரே
அரிக்குஞ்சதுர் மறைக்கும்பிர
மனுக்குந்தெரி வரிதான
அடிச்செஞ்சடை முடிக்கொண்டிடு
மாற்கும்புரி தவபாரக்
கிரிக்கும்பநன் முநிக்குங்க்ருபை
வரிக்குங்குரு பரவாழ்வே
கிளைக்குந்திற லரக்கன்கிளை
கெடக்கன்றிய பெருமாளே.

**762.** தருணமணி வானி லத்தி லருணமணி யால மிட்ட
தழலமளி மீதெ றிக்கு நிலவாலே
தலைமைதவி ராம னத்தி னிலைமையறி யாதெ திர்த்த
தறுகண்மத வேள்தொ டுத்த கணையாலே
வருணமட மாதர் கற்ற வசையுமிசை யேசு முற்று
மருவுமென தாவி சற்றும் அழியாதே
மகுடமணி வாரி சைக்கும் விகடமணி வாசி சித்ர
மயிலின்மிசை ஏறி நித்தம் வரவேணும்

கருணையக லாவி ழிச்சி களபமழி யாமு லைச்சி
 கலவிதொலை யாம றத்தி மணவாளா
கடுவுடைய மாமிடற்றர் சடைமுடியின் மீதுவைத்த
 கடியமல ரேத ரித்த கழல்வீரா
அருணமணி யால மைத்த கிரணமணி சூழும் வெற்றி
 அருணைநகர் கோபு ரத்தில் உறைவோனே
அசுரர்குலம் வேர றுத்து வடவனலை மீதெ ழுப்பி
 அமரர்சிறை மீள விட்ட பெருமாளே.

763. தருவரிவ ராகு மென்று பொருணசையி னாடி வண்டு
 தனைவிடுசொல் தூது தண்ட முதலான
சரசகவி மாலை சிந்து கலிதுறைக ளேச லின்ப
 தருமுதல தான செஞ்சொல் வகைபாடி
மருவுகைபு மோதி நொந்து அடிகள்முடி யேதெ ரிந்து
 வரினுமிவர் வீத மெங்கள் இடமாக
வருகுமது போது மென்று ஒருபணமு தாசி னஞ்சொல்
 மடையரிட மேந டந்து மனம்வேறாய்
உருகிமிக ஆகம் வெந்து கவிதைசொலி யேதி ரிந்து
 உழல்வதுவு மேத விர்ந்து விடவேநல்
உபயபத மால்வி ளங்கி இகபரமு மேவ இன்பம்
 உதவியெனை யாள அன்பு தருவாயே
குருகினொடு நாரை அன்றில் இரைகள்மிக நாடி டங்கள்
 குதிகொளிள வாளை கண்டு பயமாகக்
குரைகடல்க ளேய திர்ந்து வருவதென வேவி ளங்கு
 குருமலையின் மேல மர்ந்த பெருமாளே.

764. தருவூரிசை யாரமு தார்நிகர்
 குயிலார்மொழி தோதக மாதர்கள்
 தணியாமய லாழியி லாழவும் அமிழாதே
தழைசேலொழி கோரவி லோசன
 மெறிபாசம காமுனை சூலமுள்
 சமனார்முகில் மேனிக டாவினில் அணுகாதே

கருவூறிய நாளுமு நூடுறமு
மலதேகமு மாவலு மாசைசக
படமாகிய பாதக தீதற மிடிதீரக்

கனிவீறிய போதமெய்ஞ் ஞானமு
மியலார்சிவ னேசமு மேவர
கழல்சேரணி நூபுர தாளிணை நிழல்தாராய்

புருகூதன்மி னாளொரு பாலுற
சிலைவேடுவர் மாதொரு பாலுற
புதுமாமயில் மீதணை யாவரும் அழகோனே

புழுகார்பனிர் பூசிய வாசனை
புரகாலணி கோலமென் மாலைய
புரிநூலுமு லாவுது வாதச புயவீரா

மருவூர்குளிர் வாவிகள் சோலைகள்
செழிசாலிகு லாவிய கார்வயல்
மகதாபத சீலமு மேபுனை வளமூதூர்

மகதேவர்பு ராரிச தாசிவர்
சுதராகிய தேவசி காமணி
வழுவூரில்நி லாவிநல் வாழ்வருள் பெருமாளே.

765. தரையினில் வெகுவழி சார்ந்த மூடனை
வெறியனை நிறைபொறை வேண்டி டாமத
சடலனை மகிமைகள் தாழ்ந்த வீணனை மிகுகேள்வி

தவநெறி தனைவிடு தாண்டு காலியை
யவமதி யதனில்பொ லாங்கு தீமைசெய்
சமடனை வலியவ சாங்க மாகிய தமியேனை

விரைசெறி குழலியர் வீம்பு நாரியர்
மதிமுக வனிதையர் வாஞ்சை மோகியர்
விழிவலை மகளிரொ டாங்கு கூடிய வினையேனை

வெகுமல ரதுகொடு வேண்டி யாகிலு
மொருமல ரிலைகொடு மோர்ந்து யானுனை
விதமுறு பரிவொடு வீழ்ந்து தாடொழ அருள்வாயே

ஒருபது சிரமிசை போந்த ராவண
னிருபது புயமுட னேந்து மேதிப
மொருகணை தனிலற வாங்கு மாயவன் மருகோனே
உனதடி யவர்புக ழாய்ந்த நூலின
ரமரர்கள் முனிவர்க ளீந்த பாலகர்
உயர்கதி பெறவரு ளோங்கு மாமயில் உறைவோனே
குரைகழல் பணிவொடு கூம்பி டார்பொரு
களமிசை யறமது தீர்ந்த சூரர்கள்
குலமுழு தனைவரு மாய்ந்து தூளெழ முனிவோனே
கொடுவிட மதுதனை வாங்கி யேதிரு
மிடறினி லிருவென வேந்து மீசரர்
குருபர னெனவரு கூந்த லூருறை பெருமாளே.

**766.** தலங்களில் வருங்கன இலங்கொடு மடந்தையர்
தழைந்தவு தாந்திகழ் தசமாதஞ்
சுமைந்தனர் பிறந்தனர் கிடந்தன ரிருந்தனர்
தவழ்ந்தனர் நடந்தனர் சிலகாலம்
துலங்குந லபெண்களை முயங்கினர் மயங்கினர்
தொடுந்தொழி லுடன்தம க்ரகபாரஞ்
சுமந்தன ரமைந்தனர் குறைந்தன ரிறந்தனர்
சுடும்பிணை எனும்பவம் ஒழியேனோ
இலங்கையி லிலங்கிய இலங்கரு ளிலங்கரு
ளிலெங்கணு மிலங்கென முறையோதி
இடுங்கனல் குரங்கொடு நெடுங்கடல் நடுங்கிட
எழுந்தருள் முகுந்தனன் மருகோனே
பெலங்கொடு விலங்கலு நலங்கவ யில்கொண்டெறி
ப்ரசண்டக ரதண்டமிழ் வயலூரா
பெரும்பொழில் கரும்புக ளரம்பைகள் நிரம்பிய
பெருங்குடி மருங்குறை பெருமாளே.

**767.** தலைநா ளிற்பத மேத்தி யன்புற
உபதே சப்பொரு ளூட்டி மந்திர
தவஞா னக்கட லாட்டி யென்றனை அருளாலுன்

சதுரா கத்தொடு கூட்டி யண்டர்க
ளறியா முத்தமி ழூட்டி முண்டக
தளிர்வே தத்துறை காட்டி மண்டலம் வலமேவும்
கலைசோ திக்கதிர் காட்டி நன்சுட
ரொளிநா தப்பர மேற்றி முன்சுழி
கமழ்வா சற்படி நாட்ட முங்கொள விதிதாவிக்
கமலா லைப்பதி சேர்த்து முன்பதி
வெளியா கப்புக வேற்றி யன்பொடு
கதிர்தோ கைப்பரி மேற்கொ ளுஞ்செயல் மறவேனே
சிலைவீ ழக்கடல் கூட்ட முங்கெட
அவுணோ ரைத்தலை வாட்டி யம்பர
சிரமா லைப்புக வேற்ற வுந்தொடு கதிர்வேலா
சிவகாமிக் கொரு தூர்த்த ரெந்தையர்
வரிநா கத்துடை யார்க்கு கந்தொரு
சிவஞா னப்பொரு ளூட்டு முண்டக அழகோனே
மலைமே வித்தினை காக்கு மொண்கிளி
அமுதா கத்தன வாட்டி யிந்துள
மலர்மா லைக்குழ லாட்ட ணங்கிதன் மணவாளா
வரிகோ ழிக்கொடி மீக்கொ ளும்படி
நடமா டிச்சுரர் போற்று தண்பொழில்
வழுவூர் நற்பதி வீற்றிருந்தருள் பெருமாளே.

768\. தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி இட்டுத் தடுமாறித்
தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் சத்திெய டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்
சிலதயி லத்திட் டொக்கவெ ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி இட்டுத்
தெளியவ டித்துற் றுய்த்துடல் செத்துட்டு யிர்போமுன்

சிலபுகழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பிர பத்திக் கருள்தாராய்
கலணைவி சித்துப் பக்கரை இட்டுப்
புரவிசெ லுத்திக் கைக்கொடு வெற்பைக்
கடுகந டத்தித் திட்டென எட்டிப் பொருசூரன்
கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களிமயி லைச்சித் ரத்தில்ந டத்திப் பொருகோவே
குலிசன்ம கட்குப் பொற்புய முற்றுக்
குறவர்ம கட்குச் சித்தமு முற்றுக்
குளிர்புன முற்றுத் தத்துபு னத்திற் றிரிவோனே
கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
*குலகிரி யிற்புக் குற்றுறை உக்ரப் பெருமாளே.

769. தலையை மழித்துச் சிவந்த துணியை யரைக்குப் புனைந்து
சடையை வளர்த்துப் பிணைந்து புலியாடை
சதிரொ டுவப்பப் புனைந்து விரகொ டுகற்கப் புகுந்து
தவமொ ருசத்தத் தறிந்து திருநீறு
கலையை மிகுத்திட் டணிந்து கரண வலைக்குட் புகுந்து
கதறு நிலைக்கைக் கமர்ந்த எழிலோடே
கனக மியற்றித் திரிந்து துவளு மெனைச்சுற் றறிந்து
கவலை யொழித்தற் கிரங்கி யருள்வாயே
அலைக டலிற்கொக் கரிந்து மருவ ரையைப்பொட் டெறிந்து
யமரு லகத்திற் புகுந்து மிபமாதை
அருளொ டுகைப்பற் றிவந்து மருண கிரிப்புக் கிருந்து
மறிவு ளபத்தர்க் கிரங்கு மிளையோனே
மலையை வளைத்துப் பறந்து மருவு புரத்தைச் சிவந்து
வறிது நகைத்திட் டிருந்த சிவனார்தம்
மதலை புனத்திற் புகுந்து நரவ டிவுற்றுத் திரிந்து
மறமயி லைச்சுற் றிவந்த பெருமாளே.

*குருகிரி யிற்சித் தத்தொடி ருக்கும் பெருமாளே.

770. தலைவலயத் துத் தரம்பெ றும்பல
புலவர்ம திக்கச் சிகண்டி குன்றெறி
தருமயில் செச்சைப் புயங்க யங்குற வஞ்சியோடு
தமனிய முத்துச் சதங்கை கிண்கிணி
தழுவிய செக்கச் சிவந்த பங்கய
சரணமும் வைத்துப் பெரும்ப்ர பந்தம்வி ளம்புகாளப்
புலவனெ னத்தத் துவந்த ரந்தெரி
தலைவனெ னத்தக் கறஞ்செ யுங்குண
புருஷனெ னப்பொற் பதந்த ருஞ்சன னம்பெறுதோ
பொறையனெ னப்பொய்ப் ப்ரபஞ்ச மஞ்சிய
துறவனெ னத்திக் கியம்பு கின்றது
புதுமைய லச்சிற் பரம்பொ ருந்துகை தந்திடாதோ
குலசயி லத்துப் பிறந்த பெண்கொடி
உலகடை யப்பெற் றவுந்தி யந்தணி
குறைவற முப்பத் திரண்ட றம்புரி கின்றபேதை
குணதரி சக்ரப் ரசண்ட சங்கரி
கணபண ரத்நப் புயங்க கங்கணி
குவடுகு னித்துப் புரஞ்சு டுஞ்சின வஞ்சிநீலி
கலபவி சித்ரச் சிகண்டி சுந்தரி
கடியவி டத்தைப் பொதிந்த கந்தரி
கருணைவி ழிக்கற் பகந்தி கம்பரி எங்களாயி
கருதிய பத்தர்க் கிரங்கு மம்பிகை
சுருதிது திக்கப் படுந்த்ரி யம்பகி
கவுரிதி ருக்கொட் டமர்ந்த இந்திரர் தம்பிரானே.

771. தலைவலைய போகமுஞ் சலனமிகு மோகமுந்
தவறுதரு காமமுங் கனல்போலும்
தணிவரிய கோபமுந் துணிவரிய லோபமுஞ்
சமயவெகு ரூபமும் பிறிதேதும்
அலமலமெ னவெழுந் தவர்களறு பூதிகொண்
டறியுமொரு காரணந் தனைநாடா
ததிமதபு ராணமுஞ் சுருதிகளு மாகிநின்
றபரிமித மாய்விளம் புவதோதான்

கலகவிரு பாணமுந் திலகவொரு சாபமுங்
களபமொழி யாதகொங் கையுமாகிக்
கவருமவ தாரமுங் கொடியபரி தாபமுங்
கருதியிது வேளையென் றுகிராத
குலதிலக மானுடன் கலவிபுரி வாய்பொருங்
குலிசகர வாசவன் திருநாடு
குடிபுகநி சாசரன் பொடிபடம கிதான்
குலையநெடு வேல்விடும் பெருமாளே.

772\. தலைவலி மருத்திடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி அணுகாதே
தலமிசை அதற்கான பேரோடு கூறியிது
பரிகரி எனக்காது கேளாது போலுமவர்
சரியும்வய தக்கேது தாரீர்சொ லீரெனவும் விதியாதே
உலைவற விருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை எடுத்தேதொ டாமாலி காபரணம்
உனதடி யினிற்சூட வேநாடு மாதவர்கள் இருபாதம்
உளமது தரித்தேதவி ரூவோடு பாடியருள்
வழிபட எனக்கேத யாவோடு வாழ்வருள்
உரகம தெடுத்தாடு மோகார வாசிமிசை வரவேணும்
அலைகட லடைத்தேம காகோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேயான சானகியை
அடர்சிறை விடுத்தேகொள் மாயோனை மாமனெனு மருகோனே
அறுகினை முடித்தோனை ஆதார மானவனை
மழுவுழை பிடித்தோனை மாகாளி நாணமுனம்
அவைதனில் நடித்தோனை மாதாதை யேயெனவும் வருவோனே
பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை
இருசர ணவித்தார வேலாயு தாவுயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவ மோகமுறு மணவாளா

பதுமவ யலிற்பூக மீதேவ ரால்கள்குதி
வருபுனல் பெருக்காறு காவேரி சூழவரு
பழநிவ ளர்கற்பூர கோலாக லாவமரர் பெருமாளே.

773. தவநெறி தவறிய குருடுகள்
தலைபறி கதறிய பரபாதத்
தருமிகள் கருமிகள் வெகுவித
சமயிக ளவரொடு சருவாநின்
றவனிவ னுவனுட னவளிவ
ளுவளது இதுஉது எனுமாறற்
றருஉரு ஒழிதரு உருவுடை
அதுபதி தமியனும் உணர்வேனோ
குவலய முழுவது மதிர்பட
வடகுவ டிடிபட உரகேசன்
கொடுமுடி பலநெரி தரநெடு
முதுகுரை கடல்புனல் வறிதாகத்
துவல்கொடு முறையிடு சுரர்பதி
துயரது கெடநிசி சார்சேனை
துகளெழ நடநவில் மரகத
துரகதம் வரவல பெருமாளே.

774. தவப்ரியங் கொளுமுனி வரர்வானோர்
தழைக்கவந் தருள்புரி முருகோனே
உவப்புறுங் குறமகள் மணவாளா
ஒருத்தலின் சுதைபுணர் திருமார்பா
அவத்தனென் றெனைவிட லழகாமோ
அசட்டுமங் கையர்மயல் தவிராயோ
சிவப்பரம் பொருளுத வியபாலா
திருப்பெருந் துறையுறை பெருமாளே.

775. தவர்வாட் டோமர சூலந்
தரியாக் காதிய சூரும்
தனியாச் சாகர மேழுங் கிரியேழும்

சருகாக் காய்கதிர் வேலும்
பொருகாற் சேவலு நீலந்
தரிகூத் தாடிய மாவுந் திணைகாவல்

துவர்வாய்க் கானவர் மானுஞ்
சுரநாட் டாளொரு தேனுந்
துணையாத் தாழ்வற வாழும் பெரியோனே

துணையாய்க் காவல்செய் வாயென்
றுணராப் பாவிகள் பாலுந்
தொலையாப் பாடலை யானும் புகழ்வேனோ

பவமாய்த் தாணது வாகும்
பனைகாய்த் தேமண நாறும்
பழமாய்ப் பார்மிசை வீழும் படிவேதம்

படியாப் பாதகர் பாயன்
றியுடாப் பேதைகள் கேசம்
பறிகோப் பாளிகள் யாருங் கழுவேறச்

சிவமாய்த் தேனமு தூறுந்
திருவாக் காலொளி சேர்வெண்
டிருநீற் றாலம ராடுஞ் சிறியோனே

செழுநீர்ச் சேய்நதி யாரங்
கொழியாக் கோமளம் வீசுந்
திருவோத் தூர்தனில் மேவும் பெருமாளே.

776. தவள மதிய மெறிக்குந் தணலாலே
சரச மதனன் விடுக்குங் கணையாலே
கவன மிகவு முரைக்குங் குயிலாலே
கருதி மிகவு மயக்கம் படவோநான்
பவள நிகரு மிதழ்ப்பைங் குறமானின்
பரிய வரையை நிகர்க்குந் தனமேவுந்
திவளு மணிகள் கிடக்குந் திருமார்பா
திகழு மயிலின் மலைக்கண் பெருமாளே.

777. தறுகணன் மறலி முறுகிய கயிறு
தலைகொடு விசிறீக் கொடுபோகும்
சளமது தவிர அளவிடு சுருதி
கலைகொடு பலசாத் திரமோதி
அறுவகை சமய முறைமுறை சருவி
யலைபடு தலைமுச் சினையாகும்
அருவரு வொழிய வடிவுள பொருளை
அலம்வர அடியேற் கருள்வாயே
நறுமல ரிறைவி யரிதிரு மருக
நகமுத வியபார்ப் பதிவாழ்வே
நதிமதி யிதழி பணியணி கடவுள்
நடமிடு புலியூர்க் குமரேசா
கறுவிய நிருதர் கீறிதிரை பரவு
கடலிடை பொடியாப் பொருதோனே
கழலிணை பணியு மவருடன் முனிவு
கனவிலு மறியாப் பெருமாளே.

778. தறையின் மானுட ராசையி னால்மடல்
எழுது மாலருள் மாதர்கள் தோதக
சரச மாய்மல ரோதியி னலிரு கொங்கையாலும்
சதிசெய் நூலிடை யாலுடை யால்நடை
அழகி னல்மொழி யால்விழி யால்மருள்
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ
பறவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிகள்
அணுகொ ணுவகை நீடுமி ராசிய
பவன பூரக ரேசக மாகிய விந்துநாதம்
பகரொ ணுதது சேரவொ ணுதது
நினையொ ணுதது வானத யாபர
பதிய தானச மாதிம னேலயம் வந்துதாராய்
சிறைவி டாதநி சாசரர் சேனைகள்
மடிய நீலக லாபம தேறிய
திறல்வி நோதச மேளத யாபர அம்புராசி

திரைகள் போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூடிய
திரிசி ராமலை மேலுறை வீரகு றிஞ்சிவாழும்
மறவர் நாயக ஆதிவி நாயகர்
இளைய நாயக காவிரி நாயக
வடிவி னாயக ஆனைத னாயக எங்கள்மானின்
மகிழ்நா யகதேவர்கள் நாயக
கவுரி நாயக னார்குரு நாயக
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே.

779. தனஞ்சற் றுக் குலுங்கப்பொற்
கலன்கட்பட் டிலங்கப்பொற்
சதங்கைக்கற் சிலம்பொத்திக் கையில்வீணை
ததும்பக்கைக் குழந்தைச்சொற்
பரிந்தற்புக் கிரங்கப்பொற்
சாஞ்சுற்றிட் டிணங்கக்கட் சரவேலால்
தினம்பித்திட் டிணங்கிச்சொற்
காங்கட்டிப் புணர்ந்திட்டுத்
தினந்தெட்டிக் கடன்பற்றிக் கொளுமாதர்
சிலம்பத்திற் றிரிந்துற்றிட்
டவம்புக்கக் குணஞ்செற்றுச்
சிவம்பெற்றுத் தவம்பற்றக் கழல்தாராய்
தனந்தத்தத் தனந்தத்தத்
தடுண்டுட்டுட் டிடிண்டிட்டிட்
டடண்டட்டட் டிமிண்டுட்டுட் டியல்தாளந்
தகுந்தொத்தித் திமிந்தித்தித்
தவண்டைக்குட் கயர்ந்துக்கத்
தகண்டத்தார்க் குடன்பட்டுற் றசுராரைச்
சினந்தத்திக் கொளுந்தக்கைச்
சாந்தொட்டுச் சதம்பொற்பைச்
சிரந்தத்தப் பிளந்துட்கக் கிரிதூளாச்
செகந்திக்குச் சுபம்பெற்றுத்
துலங்கப் போர்க்களம்புக்குச்
செயம்பற்றிக் கொளுஞ்சொக்கப் பெருமாளே.

780. தனத்திற்குங் குமத்தைச்சந்
தனத்தைக்கொண் டணைத்துச்சங்
கிலிக்கொத்தும் பிலுக்குப்பொன்
தனிற்கொத்துந் தரித்துச்சுந்
தரத்திற்பண் பழித்துக்கண்
சுழற்றிச்சண் பகப்புட்பங் குழல்மேவித்

தரத்தைக்கொண் டசைத்துப்பொன்
தகைப்பட்டுந் தரித்துப்பின்
சிரித்துக்கொண் டழைத்துக்கொந்
தளத்தைத்தண் குலுக்கிச்சங்
கலப்புத்தங் கரத்துக்கொண்
டணைத்துச்சம் ப்ரமித்துக்கொண் டுறவாடிப்

புனிதப்பஞ் சணைக்கட்டின்
படுத்துச்சந் தனப்பொட்டுங்
குலைத்துப்பின் புயத்தைக்கொண்
டணைத்துப்பின் சுகித்திட்டின்
புகட்டிப்பொன் சரக்கொத்துஞ்
சிதைப்பப்பொன் தரப்பற்றும் பொதுமாதர்

புணர்ப்பித்தும் பிடித்துப்பொன்
கொடுத்துப்பின் பிதிர்ச்சித்தன்
திணிக்கட்டுஞ் சிதைத்துக்கண்
சிறுப்பப்புண் பிடித்தப்புண்
புடைத்துக்கண் பழுத்துக்கண்
டவர்க்குக்கண் புதைப்பச்சென் றுழல்வேனோ

சினத்துக்கண் சிவப்பச்சங்
கொலிப்பத்திண் கவட்டுச்செங்
குவட்டைச்சென் றிடித்துச்சென்
டரைத்துக்கம் பிடிக்கப்பண்
சிரத்தைப்பந் தடித்துக்கொண்
டிறைத்துத்தெண் கடற்றிட்டுங் கொளைபோகச்

செழித்துப்பொன் சுரர்ச்சுற்றங்
களித்துக்கொண் டளிப்புட்பஞ்

சிறக்கப்பண் சிரத்திற்கொண்
டிறைத்துச்செம் பதத்திற்கண்
திளைப்பத்தந் தலைத்தழ்த்தம்
புகழ்ச்செப்புஞ் சயத்துத்திண் புயவேளே
பணித்துட்கங் கசற்குக்கண்
பாப்பித்தன் சினத்திற்றிண்
புரத்தைக்கண் டெரித்துப்பண்
கயத்தைப்பண் டுரித்துப்பன்
பகைத்தக்கன் தவத்தைச்சென்
றழித்துக்கொன் றடற்பித்தன் தருவாழ்வே
படைத்துப்பொன் றுடைத்திட்பன்
தனைக்குட்டும் படுத்திப்பண்
கடிப்பூட்பங் களைச்சுற்றும்
பதத்தப்பண் புறச்சிற்றம்
பலத்திற்கண் களித்தப்பைம்
புனத்திற்செங் குறத்திப்பெண் பெருமாளே.

781\. தனத்துக் காக விலைபேசும்
சமர்த்துக் கார மடமாதர்
இனத்துக் காக மதிமாறி
இரக்கத் தாவி அலைவேனோ
சினத்துக் கால னணுகாமுன்
திருத்திப் பாத மருள்வாயே
வனத்துக் ராத குலமாது
மணத்துக் கான பெருமாளே.

782\. தனுநுதல் வெயர்வெழ விழிகுழி தரவளை
சத்திக் கச்சில தித்திக் கப்படும் அன்புபேசித்
தழுவிய மகளிர்த முகிழ்முலை யுரமிசை
தைக்கச் சர்க்கரை கைக்கப் பட்டன தொண்டையூறல்
கனவிலு நுகர்தரு கலவியின் வலையிடை
கட்டுப் பட்டுயிர் தட்டுப் பட்டழி கின்றதோதான்

கதிபெற விதியிலி மதியிலி யுனதிரு
கச்சுற் றச்சிறு செச்சைப் பத்மப தம்பெறேனோ
முனைமலி குலிசைதன் ம்ருகமத புளகித
முத்தச் சித்ர தனத்துக் கிச்சித அம்புராசி
முறையிட முதுநிசி சரர்திரள் முதுகிட
முட்டப் பொட்டெழ வெட்டிக் குத்தும டங்கல்வீரா
அநுபவ மளிதரு நிகழ்தரு மொருபொருள்
அப்பர்க் கப்படி யொப்பித் தர்ச்சனை கொண்டநாதா
அகிலமு மழியினு நிலைபெறு திரிபுவ
னத்துப் பொற்புறு சித்திச் சித்தர்கள் தம்பிரானே.

783. தாக்கம ருக்கொரு சாரையை வேறொரு
சாக்ஷிய றப்பசி யாறியை நீறிடு
சாஸ்த்ரவ ழிக்கதி தூரனை யோதிடு தவமூழ்கும்
தாற்பர்ய மற்றுழல் பாவியை நாவலர்
போற்பரி வுற்றுனை யேகரு தாதிகல்
சாற்றுத மிழ்க்குறை ஞானியை நாள்வரை தடுமாறிப்
போக்கிட மற்றவ்ரு தாவனை ஞானிகள்
போற்றுத லற்றது ரோகியை மாமருள்
பூத்தம லத்ரய பூரியை நேரிய புலையேனைப்
போக்கிவி டக்கட னோநர கோகதி
போய்ப்பெறு கைக்கிலை யோகதி யானது
போர்ச்சுடர் வஜ்ரவை வேல்மயில் பாடுதல் அருள்வாயே
மூக்கறை மட்டைம காபல காரணி
சூர்ப்பந கைப்படு மூளியு தாசனி
மூர்க்ககு லத்திவி பீஷணர் சோதரி முழுமோடி
மூத்தவ ரக்கனி ராவண னுடையல்
போற்றிவி டக்கம லாலய சீதையை
மோட்டன்வ னத்தொரு தேர்மிசை யேகொடு
முகிலேபோய்
மாக்கன சித்திர கோபுர நீள்படை
வீட்டிலி ருத்திய நாளவன் வேரற
மார்க்கமு டித்தவி லாளிகள் நாயகன் மருகோனே

38

வாச்சிய மத்தள பேரிகை போல்மறை
வாழ்த்தம லர்க்கழு நீர்தரு நீள்சுனை
வாய்த்ததி ருத்தணி மாமலை மேவிய பெருமாளே.

**784.** தாது மாமலர் முடியா லேபத
ரூத நூபுர அடியா லேகர
தாள மாகிய நொடியா லேமடி பிடியாலே
சாடை பேசிய வகையா லேமிகு
வாடை பூசிய நகையா லேபல
தாறு மாறுசொல் மிகையா லேயன நடையாலே
மோதி மீறிய முலையா லேமுலை
மீதி லேறிய கலையா லேவெகு
மோடி நாணய விலையா லேமயல் தருமாதர்
மோக வாரிதி தனிலே நாடொறு
மூழ்கு வேனுன தடியா ராகிய
மோன ஞானிக ளுடனே சேரவும் அருள்வாயே
காத லாயருள் புரிவாய் நான்மறை
மூல மேயென வுடனே மாகரி
காண நேர்வரு திருமால் நாரணன் மருகோனே
காதல் மாதவர் வலமே சூழ்சபை
நாத னார்தம திடமே வாழ்சிவ
காம நாயகி தருபா லாபுலி சையில்வாழ்வே
வேத நூன்முறை வழுவா மேதினம்
வேள்வி யாலெழில் புனைமூ வாயிர
மேன்மை வேதியர் மிகவே பூசனை புரிகோவே
வீறு சேர்வரை யரசாய் மேவிய
மேரு மால்வரை யெனநீள் கோபுர
மேலை வாயிலின் மயில்மீ தேறிய பெருமாளே.

**785.** தாமரையின் மட்டு வாசமல ரொத்த
தாளிணைநி னைப்பில் அடியேனைத்
தாதவிழ்க டுக்கை நாகமகிழ் கற்ப
தாருவென மெத்தி யவிராலி

மாமலையி னிற்ப நீகருதி யுற்று
வாவெனஅ ழைத்தென் மனதாசை
மாசினைய றுத்து ஞானமுத ளித்த
வாரமினி நித்த மறவேனே
காமனையெ ரித்த தீநயன நெற்றி
காதியசு வர்க்க நதிவேணி
கானிலுறை புற்றி லாடுபணி யிட்ட
காதுடைய அப்பர் குருநாதா
சோமனொடு ருக்கன் மீனுலவு மிக்க
சோலையுடை சுற்று வயலூரா
சூடியத டக்கை வேல்கொடுவி டுத்து
சூர்தலைது ணித்த பெருமாளே.

786. தாமா தாமா லாபா லோகா தாரா தாரத் தரணீசா
தானு சாரோ பாவா பாவோ நாசா பாசத் தபராத
யாமா யாமா தேசா ரூடா யாரா யாபத் தெனதாவி
யாமா காவாய் தீயே னீர்வா யாதே ஈமத் துகலாமோ
காமா காமா தீனா நீணா காவாய் காளக் கிரியாய்கங்
காளா லீலா பாலா நீபா காமா மோதக் குறமானின்
தேமார் தேமா காமீ பாகீ தேசா தேசத் தவரோதுஞ்
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே.

787. தாரகாசு ரன்சரிந்து சூதம்வேரு டன்பறிந்து
சாதிபூத ரங்குலுங்க முதுமீனச்
சாகரோதை யுங்குழம்பி நீடுதீகொ ளுந்தஅன்று
தாரைவேல்தொ டுங்கடம்ப மததாரை
ஆரவார உம்பர்கும்ப வாரணாச லம்பொருந்து
மானையாளு நின்றகுன்ற மறமானும்
ஆசைகூரு நண்பஎன்றும் மாமயூர கந்தஎன்றும்
ஆவல்தீர என்றுநின்று புகழ்வேனோ
பாரமார்த ழும்பர்செம்பொன் மேனியாளர் கங்கைவெண்க
பாலமாலை கொன்றைதும்பை சிறுதாளி
பாரமாசு ணங்கள்சிந்து வாரவார மென்படப்பு
பானல்கூவி ளங்கரந்தை அறுகோடே

சேரவேம ணந்தநம்ப ரீசனரி டஞ்சிறந்த
சீதளார விந்தவஞ்சி பெருவாழ்வே
தேவர்யாவ ருந்திரண்டு பாரின்மீது வந்திறைஞ்சு
தேவனூர்வி ளங்கவந்த பெருமாளே.

788. தார ணிக்கதி பாவி யாய்வெகு
சூது மெத்திய மூட னாய்மன
சாத னைக்கள வாணி யாயுறும் அதிமோக
தாப மிக்குள வீண னாயிரு
வேல்வி ழிச்சிய ராகு மாதர்கள்
தாமு யக்கிடு வேலை நேடிய நினைவாகிப்
பூர ணச்சிவ ஞான காவிய
மோது தற்குணர் வான நேயர்கள்
பூசு மெய்த்திரு நீறி டாஇரு வினையேனைப்
பூசி மெய்ப்பத மான சேவடி
காண வைத்தருள் ஞான மாகிய
போத கத்தினை ஏயு மாறருள் புரிவாயே
வார ணத்தினை யேக ராவுமு
னேவ ளைத்திடு போது மேவிய
மாய வற்கித மாய சீரிய மருகோனே
வாழு முப்புர வீற தானது
நீறெ ழப்புகை யாக வேநகை
மாம திப்பிறை வேணி யாருள் புதல்வோனே
கார ணக்குறி யான நீதிய
ரான வர்க்குமு னாக வேநெறி
காவி யச்சிவ நூலை யோதிய கதிர்வேலா
கான கக்குற மாதை மேவிய
ஞான சொற்கும ராப ராபர
காசி யிற்பிர தாப மாயுறை பெருமாளே.

789. திடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான
செயலிலிமெய்த் தவமிலிநற் செபமிலிசொர்க் கமுமீதே
இடமிலிகைக்கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட
இருபதமுற் றிருவினையற் றியல்கதியைத் தரவேணும்

கெடுமதியுற் றிடுமசுரக் கிளைமடியப் பொரும்வேலா
கிரணபிறைப் புனலறுகுக் கிதழ்மலர்கொக் கிறகோடே
படர்சடையிற் புனைநடனப் பரமர்தமக் கொருபாலா
பலவயலிற் றரளநிறைப் பழநிமலைப் பெருமாளே.

790. திடமுடை யசுரர் மணிமுடி சிதற
அயில்தனை முடுகி விடுவோனே
திரிபுர மதனை ஒருநொடி யதனில்
எரியெழ நகைசெய் சிவன்வாழ்வே
படவரை யதனை உருவிட எறியும்
அறுமுக முடைய வடிவேலா
பசலைகொ டணையும் இளமுலை மகளிர்
படர்விழி யதனில் இடலாமோ
கடகரி முகமோ டிடவயி றுடைய
கணபதி பிறகு வருவோனே
கனதன முடைய குறவர்கள் சிறுமி
கருணையொ டணையும் மணிமார்பா
அரவணை யுடைய அரிதிரு மருக
அவனியை முழுதும் உடையோனே
அடியவர் வினையும் அமரர்கள் துயரும்
அறமன முடைய பெருமாளே.

791. திட்டெ னப்பல செப்பைய டிப்பன
பொற்கு டத்தையு டைப்பன வுத்தர
திக்கி னிற்பெரு வெற்பைவி டுப்பன அதின்மேலே
செப்ப வத்திம ருப்பையொ டிப்பன
புற்பு தத்தையி மைப்பி லழிப்பன
செய்த்த லைக்கம லத்தைய லைப்பன திறமேய
புட்ட லைக்கக னத்தில்வி டுப்பன
சித்த முற்பொர விட்டுமு றிப்பன
புட்ப இக்கன்மு டிக்குறி யுய்ப்பன இளநீரைப்
புக்கு டைப்பன முத்திரை யிட்டத
னத்தை விற்பவர் பொய்க்கல விக்குழல்
புத்தி யுற்றமை யற்றி டஎப்பொழு தருள்வாயே

துட்ட நிக்ரக சத்தித ரப்ரப
லப்ர சித்தச மர்த்தத மிழ்த்ரய
சொற்சு வைக்கவி தைப்புக லிக்கர செனுநாமச்
சொற்க ணிக்கசு லட்சண தக்கிண
குத்தி ரத்தில கத்திய னுக்கருள்
சொற்கு ருத்வம கத்துவ சத்வசண் முகநாதா
தட்ட றச்சம யத்தைவ ளர்ப்பவ
ளத்தன் முற்புகழ் செப்பவ நக்ரக
தத்து வத்தைய ளித்திடு செப்பதி மயிலேறி
சட்ப தத்திரள் மொய்த்தம ணப்பொழில்
மிக்க ரத்நம திற்புடை சுற்றிய
சக்க ரப்பளி முக்கணர் பெற்றருள் பெருமாளே.

792. திதலையு லாத்துபொற் களபம்வி டாப்புகுத்
த்ரிவிதக டாக்களிற் றுரகோடு
சிகரம காப்ரபைக் குவடென வாய்த்துநற்
சுரர்குடி யேற்றிவிட் டிளநீரை
மதனவி டாய்த்தனத் திளைஞரை வாட்டுசெப்
பிணைமுலை மாத்தவக் கொடிபோல்வார்
வலையிலி ராப்பகற் பொழுதுகள் போக்குமற்
றெனையுனை வாழ்த்தவைத் தருள்வாயே
சததள பார்த்திபற் கரிபுரு ஷோத்தமற்
கெரிகன லேற்றவற் குணராதோர்
சகலச மார்த்தசத் தியவன சூட்சமுக்
கியபர மார்த்தமுற் புகல்வோனே
கதிர்மணி நீர்க்கடற் சுழிபுகு ராட்சதக்
கலகப ராக்ரமக் கதிர்வேலா
கருதிய பாட்டினிற் றலைதெரி மாக்ஷணக்
கவிஞரு சாத்துணைப் பெருமாளே.

793. தித்தித்த மொழிச்சிகள் மாவரை
ஒத்தொத்த தனத்திகள் காமிய
சித்ரத்தை நிகர்த்திகள் காசுள பலபேர்கள்

சித்தத்தை மயக்கிகள் யாரையு
மிச்சித்து முயக்கிகள் மோகமெ
சிச்சிச்சி சிறுக்கிகள் தோதக வசமாகி
முத்தத்து முயற்சிக ளாடிய
பித்தத்து மெனக்குநி நீடிய
முத்துய்த்த பதத்திணை யேதர வருவாயே
முற்பட்ட இலக்கண நூலிடை
தப்புற்ற கவிக்கென வேஅவை
முற்பட்டு புதுத்துறை மாறிய புலவோனே
சத்தித்த சமுத்திர மேயென
யுத்தத்து ளரக்கர்கள் மாளவெ
தத்வத்து மிகுத்தயி லேவிடு புயவீரா
தத்தித்தொ மெனப்புரி மாநட
னத்தத்த னருட்செவி ஓதிய
தற்கித்த வயற்சிர மோதிய குருநாதா
பத்தெத்து முடித்தலை ராவணன்
வத்தித்து நிலத்தி லிராவணம்
பத்தத்து வதைத்திடு ராகவன் மருகோனே
பக்கத்து பதத்தர்க ளூடவெ
சொக்கத்து சுயப்பொரு ளாகவெ
பட்சத்து திருத்தணி மேவிய பெருமாளே.

794. திமிர உததி யனைய நரக
செனன மதனில் விடுவாயேல்
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியும் அணுகாதே
அமரர் வடிவு மதிக குலமு
மறிவு நிறையும் வரவேநின்
அருள தருளி எனையு மனதொ
டடிமை கொளவும் வரவேணும்
சமர முகவெ லசுரர் தமது
தலைக ளுருள மிகவேநீள்

சலதி அலற நெடிய பதலை
 தகர அயிலை விடுவோனே
வெமர வணையி லினிது துயிலும்
 விழிகள் நளினன் மருகோனே
மிடறு கரியர் குமர பழநி
 விரவும் அமரர் பெருமாளே.

795. திமிர மாமன மாமட மடமை யேனிட ராணவ
 திமிர மேயரி சூரிய திரிலோக
தினக ராசிவ காரண பனக பூஷண ஆரண
 சிவசு தாவரி நாரணன் மருகோனே
குமரி சாமளை மாதுமை அமலி யாமளை பூரணி
 குணக லாநிதி நாரணி தருகோவே
குருகு காகும ரேசுர சரவ ணாசக ளேசுர
 குறவர் மாமக ளாசைகொள் மணியேசம்
பமர பாரப்ர பாருண படல தாரக மாசுக
 பசுர பாடன பாளித பகளேச
பசித பாரண வாரண துவச வேடக மாமயில்
 பரவு பாணித பாவல பரயோக
சமப ராமத சாதல சமய மாறிரு தேவத
 சமய நாயக மாமயில் முதுவீர
சகல லோகமு மாசறு சகல வேதமு மேதொழு
 சமர மாபுரி மேவிய பெருமாளே.

796. தியங்குஞ்சஞ் சலந்துன்பங்
 கடந்தொந்தஞ் செறிந்தைந்திந்
 த்ரியம்பந்தந் தருந்துன்பம் படுமேழை
திதம்பண்பொன் றிலன்பண்டன்
 தலன்குண்டன் சலன்கண்டன்
 தெளிந்துன்றன் பழந்தொண்டென் றுயர்வாகப்
புயங்கந்திங் களின்துண்டங்
 குருந்தின்கொந் தயன்தன்கம்
 பொருந்துங்கங் கலந்தஞ்செஞ் சடைசூடிப்

புகழ்ந்துங்கண் டுகந்துங்கும்
பிடுஞ்செம்பொன் சிலம்பென்றும்
புலம்பும்பங் கயந்தந்தென் குறைதீராய்
இயம்புஞ்சம் புகந்துன்றுஞ்
சுணங்கன்செம் பருந்தங்கங்
கிணங்குஞ்செந் தடங்கண்டுங் களிகூர
இடும்பைங்கண் சிரங்கண்டம்
பதந்தந்தங் காஞ்சந்தொன்
றெலும்புஞ்சிந் திடும்பங்கஞ் செயும்வேலா
தயங்கும்பைஞ் சுரும்பெங்குந்
தனந்தந்தந் தனந்தந்தந்
தடந்தண்பங் கயங்கொஞ்சுஞ் சிறுகூரா
தவங்கொண்டுஞ் செபங்கொண்டுஞ்
சிவங்கொண்டும் ப்ரியங்கொண்டுந்
தலந்துன்றம் பலந்தங்கும் பெருமாளே.

797. திரிபுர மதனை ஒருநொடி அதனி
லெரிசெய்த ருளிய சிவன்வாழ்வே
சினமுடை யசுரர் மனமது வெருவ
அயிலது முடுகி விடுவோனே
பருவரை அதனை உருவிட எறியு
மறுமுக முடைய வடிவேலா
பசலையொ டணையு மிளமுலை மகளிர்
மதன்விடு பகழி தொடலாமோ
கரிதிரு முகமு மிடமுடை வயிறு
முடையவர் பிறகு வருவோனே
கனதன முடைய குறவர்த மகளை
கருணையொ டணையு மணிமார்பா
அரவணை துயிலு மரிதிரு மருக
அருணையி லுறையும் முருகோனே
அடியவர் வினையு மமரர்கள் துயரும்
அறவரு ளுதவு பெருமாளே.

798. திருகுசெ றிந்த குழலைவ கிர்ந்து
முடிமலர் கொண்டொ ரழகாகச்
செயவரு துங்க முகமும்வி ளங்க
முலைகள்கு லுங்க வருமோக
அரிவையர் தங்கள் வலையில்வி ழுந்து
அறிவுமெ லிந்து தளராதே
அமரர்ம கிழ்ந்து தொழுதுவ ணங்கு
னடியிணை யன்பொ டருள்வாயே
வரையமு னிந்து விழவெக டிந்து
வடிவெலெ றிந்த திறலோனே
மதுரித செஞ்சொல் குறமட மங்கை
நகிலது பொங்க வரும்வேலா
விரைசெறி கொன்றை யறுகுபு னைந்த
விடையரர் தந்த முருகோனே
விரைமிகு சந்து பொழில்கள்து லங்கு
விசுவைவி ளங்கு பெருமாளே.

799. திருடிக ளிணக்கிச் சம்ப ளம்பறி
நடுவிகள் மயக்கிச் சங்க மம்புரி
சிதடிகள் முலைக்கச் சும்பல் கண்டிகள் சதிகாரர்
செவிடிகள் மதப்பட் டுங்கு குண்டிகள்
அசடிகள் பிணக்கிட் டும்பு றம்பிகள்
செழுமிக ளழைத்திச் சங்கொ ளுஞ்செயல்
வெகுமோகக்
குருடிகள் நகைத்திட் டம்பு லம்புக
ளுதடிகள் கணக்கிட் டும்பி ணங்கிகள்
குசலிகள் மருத்திட் டுங்கொ டுங்குணர் விழியாலே
கொளுவிகள் மினுக்குச் சங்கி ரங்கிகள்
நடனமு நடித்திட் டொங்கு சண்டிகள்
குணமதில்முழுப்பொய்ப்பங்கமந்திகள் உறவாமோ
இருடிய ரினத்துற் றும்ப தங்கொளு
மறையவ னிலத்தொக் குஞ்சு கம்பெறு
மிமையவ ரினக்கட் டுங்கு லைந்திட வருசூரர்

இபமொடு கொதித்தச் சிங்க மும்பல
இரதமொ டெதிர்த்திக் கும்பி ளந்திட
இவுளியி ரதத்துற் றங்க மங்கிட விடும்வேலா
அரிகரி யுரித்திட் டங்க சன்புர
மெரிதர நகைத்துப் பங்க யன்சிர
மளவொடு மறுத்துப் பண்ட ணிந்தவர் அருள்கோனே
அமரர்த மகட்கிட் டம்பு ரிந்துநல்
குறவர்த மகட்பக் கஞ்சி றந்துற
அழகிய திருச்சிற் றம்ப லம்புகு பெருமாளே.

800. திருட்டு நாரிகள் பப்பர மட்டைகள்
வறட்டு மோடியி னித்தந டிப்பவர்
சிறக்க மேனியு லுக்கிம டக்குகண் வலையாலே
திகைத்து ளாவிக ரைத்தும னத்தினி
விதத்தை யோடவி டுத்தும யக்கிடு
சிமிட்டு காமவி தத்திலு முட்பட அலைவேனோ
தரித்து நீறுபி தற்றிடு பித்தனு
மிதத்து மாகுடி லைப்பொருள் சொற்றிடு
சமர்த்த பாலஎ னப்புகழ் பெற்றிடு முருகோனே
சமப்ர வீணம தித்திடு புத்தியி
லிரக்க மாய்வரு தற்பர சிற்பர
சதத்ர யோகவி தக்ஷண தெக்ஷிண குருநாதா
வெருட்டு சூரனை வெட்டிர ணப்பலி
களத்தி லேகழு துக்கிரை யிட்டிடர்
விடுத்த கூளிகள் தித்திகு தித்தென விளையாட
விதித்த வீரச மர்க்கள ரத்தமு
மிறற்றி யோடவெ குப்ரள யத்தினில்
விலக்கி வேல்செரு கிட்டுயிர் மொக்கிய மறவோனே
பெருக்க மோடுசெ ரித்திடு மச்சமு
முளத்தின் மாமகிழ் பெற்றிட வுற்றிடு
பிளப்பு வாயிடை முப்பொழு தத்துமொர் கழுநீரின்

பிணித்த போதுவெ டித்துர சத்துளி
கொடுக்கு மோடைமி குத்தருதி ருத்தணி
பிறக்க மேவுற அத்தல முற்றுறை பெருமாளே.

801. திருட்டு வாணிப விக்ரம துட்டிகள்
மதத்த ரூபிகள் துர்ச்சன பொட்டிகள்
செகத்து நீலிகள் கெட்டப ரத்தைகள் மிகநாணுர்
சிலைக்கு நேர்புரு வப்பிறை நெற்றிகள்
எடுப்பு மார்பிக ளெச்சிலு தட்டிகள்
சிரித்து மாறுடர் சித்தமு ருக்கிகள் விழியாலே
வெருட்டி மேல்விழு பப்பர மட்டைகள்
மிகுத்த பாவிகள் வட்டமு கத்தினை
மினுக்கி ஓலைகள் பித்தளை யிற்பணி மிகநீறுல்
விளக்கி யேகுழை இட்டபு ரட்டிகள்
தமக்கு மால்கொடு நிற்கும ருட்டனை
விடுத்து நாமொரு மெய்த்திரு பொற்கழல் பணிவேனே
தரித்த தோகண தக்கண செக்கண
குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு
தகுத்த தீதிகு தக்குகு திக்குகு என தாளம்
தடக்கை யாளிகள் கொட்டிய மத்தள
மிடக்கை தாளமு மொக்கந டித்தொனி
தரித்த கூளிகள் நிர்த்தமி டப்பல கணபூதம்
அருக்க னொளி யிற்பரை உற்றிடு
மிரத்ன மாமுடி யைக்கொடு கக்கழல்
அடித்து மாடிநி ணத்தையெ டுத்துண அறவேதான்
அரக்கர் சேனைகள் பட்டுவி ழச்செறி
திருக்கை வேல்தனை விட்டரு ளிப்பொரும்
அருட்கு காவருணைப்பதி உற்றருள் பெருமாளே.

802. திருநில மருவிக் காலி னிருவழி அடைபட் டோடி
சிவவழி உடனுற் றேக பரமீதே
சிவசுட ரதனைப் பாவை மணமென மருவிக் கோல
திரிபுர மெரியத் தீயில் நகைமேவி

இருவினை பொரியக் கோல திருவரு ளுருவத் தேகி
　　இருள்கதி ரிலிபொற் பூமி　　　　　தவரூடே
　இருவரு முருகிக் காய நிலையென மருவித் தேவர்
　　இளையவ னெனவித் தாரம்　　　　　அருள்வாயே
பரிபுர கழலெட் டாசை செவிடுகள் படமுத் தேவர்
　　பழமறை பணியச் சூல　　　　　மழுமானும்
　பரிவொடு சுழலச் சேடன் முடிநெறு நெறெனக் கோவு
　　பரியினை மலர்விட் டாடி　　　　　அடியோர்கள்
அரஹர வுருகிச் சேசெ எனதிரு நடனக் கோலம்
　　அருள்செயு முமைநற் பாகர்　　　　　அருள்பாலா
　அலரணி குழல்பொற் பாவை திருமக ளமளிப் போரோ
　　டடியவர் கயிலைக் கான　　　　　பெருமாளே.

803. திருமகளு லாவு மிருபுயமு ராரி
　　திருமருக நாமப்　　　　　பெருமாள்காண்
　செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
　　தெரிதருகு மாரப்　　　　　பெருமாள்காண்
மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு
　　மரகதம யூரப்　　　　　பெருமாள்காண்
　மணிதரளம் வீசி அணியருவி சூழ
　　மருவுகதிர் காமப்　　　　　பெருமாள்காண்
அருவரைகள் நீறு படவசுரர் மாள
　　அமர்பொருத வீரப்　　　　　பெருமாள்காண்
　அறுகுபிறை வாரி விரவுசடை யீசர்
　　அருள்செய்குரு நாதப்　　　　　பெருமாள்காண்
இருவினையி லாத திருவினைவி டாத
　　இமையவர்கு லேசப்　　　　　பெருமாள்காண்
　இலகுசிலை வேடர் கொடியினதி பார
　　இருதனவி நோதப்　　　　　பெருமாளே.

804. திருமொழி யுரைபெற அரனுன துழிபணி
　　செயமுன மருளிய　　　　　குளவோனே
　திறலுயர் மதுரையி லமணரை யுயிர்கழு
　　தெறிபட மறுகிட்　　　　　விடுவோனே

ஒருவரு முனதருள் பரிவில ரவர்களி
    னுறுபட ருறுமெனை யருள்வாயோ
உலகினி லனைவர்கள் புகழ்வுற அருணையில்
    ஒருநொடி தனில்வரு மயில்வீரா
கருவரி யுறுபொரு கணைவிழி குறமகள்
    கணினெதிர் தருமெவ னுனமாளுய்
கருமுகில் பொருநிற அரிதிரு மருமக
    கருணையில் மொழிதரு முதல்வோனே
முருகலர் தருவுறை யமரர்கள் சிறைவிட
    முரணுறு மசுரனை முனிவோனே
முடிபவர் வடிவறு சுசிகர முறைதமிழ்
    முதுகிரி வலம்வரு பெருமாளே.

805. திருவுருப நேராக அழகதான மாமாய
    திமிரமோக மானார்கள் கலைமூடுஞ்
சிகரியூடு தேமாலை யடவியூடு போயாவி
    செருகுமால னுசார வினையேனைக்
கருவிழாது சீரோதி யடிமைபூண லாமாறு
    கனவிலாள்சு வாமீநின் மயில்வாழ்வும்
கருணைவாரி கூரேக முகமும்வீர மாருத
    கழலுநீப வேல்வாகு மறவேனே
சருவதேவ தேவாதி நமசிவாய நாமாதி
    சயிலநாரி பாகாதி புதல்வோனே
சதமகீவல் போர்மேவு குலிசபாணி மால்யானை
    சகசமான சாரீசெய் இளையோனே
மருவுலோக மீரேழு மளவிடாவொ ணுவான
    வரையில்வீசு தாள்மாயன் மருகோனே
மருநியாய சோணாடு தலைமையாக வேமேலை
    வயலிமீது வாழ்தேவர் பெருமாளே.

806. திரைவஞ்ச இருவினைகள் நரையங்க மலமழிய
    சிவகங்கை தனில்முழுகி விளையாடிச்
சிவம்வந்து குதிகொளக வடிவுன்றன் வடிவமென
    திகழண்டர் முனிவர்கணம் அயன்மாலும்

அரன்மைந்த னெனகளிறு முகனெம்பி எனமகிழ
அடியென்க ணளிபரவ மயிலேறி
அயில்கொண்டு திருநடன மெனதந்தை உடன்மருவி
அருமந்த பொருளையினி அருள்வாயே
பரியென்ப நரிகள்தமை நடனங்கொ டொருவழுதி
பரிதுஞ்ச வருமதுரை நடராஜன்
பழியஞ்சி எனதருகி லுறைபுண்ட ரிகவடிவ
பவளஞ்சொ லுமைகொழுநன் அருள்பாலா
இருள்வஞ்ச கிரியவுண ருடனெங்க ளிருவினையு
மெரியுண்டு பொடியவயில் விடுவோனே
எனதன்பி லுறைசயில மகிழ்வஞ்சி குறமகளொ
டெணுபஞ்ச ணையின்மருவு பெருமாளே.

807\. திரைவார் கடல்சூழ்புவி தனிலே உலகோரொடு
திரிவே னுனையோதுதல் திகழாமே
தினநா ளுமுனேதுதி மனதா ரபினேசிவ
சுதனே திரிதேவர்கள் தலைவாமால்
வரைமா துமையாள்தரு மணியே குகனேயென
அறையா அடியேனுமுன் அடியாரும்
வழிபா டுறுவாரொடு அருளா தரமாயிடு
மகநா ளுளதோசொல அருள்வாயே
இறைவா ரணதேவனு மிமையோ ரவரேவரு
மிழிவா கிமுனேயியல் இலராகி
இருளா மனதேயுற அசுரே சர்களேமிக
இடரே செயவேயவர் இடர்தீர
மறமா அயிலேகொடு உடலே இருகூறெழ
மதமா மிகுசூரனை மடிவாக
வதையே செயுமாவலி உடையா யழகாகிய
மயிலா புரிமேவிய பெருமாளே.

808\. தினமணி சார்ங்கபாணி யெனமதி தீண்டுசாள
ரகனக மேய்ந்தமாளி கையிலாரஞ்
செழுமணி சேர்ந்தபீடி கையிலிசை வாய்ந்தபாடல்
வயிரியர் சேர்ந்துபாட இருபாலும்

இனவளை பூண்கையார்க வரியிட வேந்துமாலை
புழுககில் சாந்துபூசி அரசாகி
இனிதிரு மாந்துவாழு மிருவினை நீண்டகாய
மொருபிடி சாம்பலாகி விடலாமோ
வனசர ரேங்கவான முகடுற வோங்கிவாச
மயிலொடு பாங்கிமாரும் வளைசோர
மயல்கொள மான்கள்சூழ வளவரி வேங்கையாகி
மலைமிசை தோன்றுமாய வடிவோனே
கனசமண் மூங்கர்கோடி கழுமிசை தூங்கநீறு
கருணைகொள் பாண்டிநாடு பெறவேதக்
கவிதரு காங்கைபால கழுமல பூந்தராய
கவுணியர் வேந்ததேவர் பெருமாளே.

809. தீதுற் றேயெழு திங்களாலே
தீயைத் தூவிய தென்றலாலே
போதுற் றுடும நங்கனாலே
போதப் பேதைந லங்கலாமோ
வேதத் தோனைமு னிந்தகோவே
வேடப் பாவைவி ரும்புமார்பா
ஓதக்கூடல மர்ந்ததேவே
ஊமைத் தேவர்கள் தம்பிரானே.

810. தீயும் பவனமும் நீருந் தரணியும்
வானுஞ் செறிதரு பசுபாசத்
தேகந் தனைநிலை யேயென் றிருவினை
தீருந் திறல்வினை அறியாதே
ஓயும் படியறு நூறும் பதினறுந்
நூறும் பதினிரு பதுநூறும்
ஓடுஞ் சிறுவுயிர் மீளும் படிநல
யோகம் புரிவது கிடையாதோ
வேயுங் கணியும்வி ளாவும் படுபுன
மேவுஞ் சிறுமிதன் மணவாளா
மீனம் படுகடலேழுந் தழல்பட
வேதங் கதறிய ஒருநாலு

வாயுங் குலகிரி பாலுந் தளைபட
மாகந் தரமதில் மறைசூரன்
மார்புந் துணையுறு தோளுந் துணிபட
வாள்கொண் டமர்செய்த பெருமாளே.

811. தீயூதை தாத்ரி பானீய மேற்ற
வானீதி யாற்றி கழுமாசைச்
சேறூறு தோற்பை யாளுகை நோக்கு
மாமாயை தீர்க்க அறியாதே
பேய்பூத மூத்த பாரேரி காக்கை
பீறுவி ழூத்தின் உடல்பேணிப்
பேயோன டாத்து கோமாளி வாழ்க்கை
போமாறு பேர்த்துன் அடிதாராய்
வேயூரு சீர்க்கை வேல்வேடர் காட்டி
லேய்வாளை வேட்க உருமாறி
மீளாது வேட்கை மீதூர வாய்த்த
வேலோடு வேய்த்த இளையோனே
மாயூர வேற்றின் மீதேபு காப்பொன்
மாமேரு வேர்ப்ப றியமோதி
மாறான மாக்கள் நீறாக ஓட்டி
வானாடு காத்த பெருமாளே.

812. தீராப் பிணிதீர சீவாத் துமஞான
ஊராட் சியதான ஓர்வாக் கருள்வாயே
பாரோர்க் கிறைசேயே பாலாக் கிரிராச
பேராற் பெரியோனே பேரூர்ப் பெருமாளே.

813. துகிலு ம்ருகமத பரிமள அளகமும்
நெகிழ இருதன கிரியசை தரவிடை
துவள மணிதரு மமாரு முநிவரு முடனேடித்
தொடர வனமணி மகரமி லகுகுழை
அடரு வனவிட மிளிர்வன ரதிபதி
சுருதி மொழிவன கயல்விழி புரள்தர நடுவாக

வகிரு மதிபுரை தநுநுதல் பணிவர
வனச பதயுக பரிபுர மொலிபட
மறுகு தொறுமுல வியினிய கலவியை விலைகூறும்
வரைவி லரிவையர் தருசுக சலதியி
லலையு மெனதுயி ரநுதின நெறிதரு
மவுன சிவசுக சலதியில் முழுகுவ தொருநாளே
முகிலு மதியமும் ரவியெழு புரவியும்
நெடிய குலைமிட றிடறமு துககன
முகடு கிழிபட வளர்வன கமுகினம் பிசைவாளை
முடுகு கயலுகள் வயல்களு முருகவிழ்
தடமு முளரிய அகழியு மதில்களு
முழுது முடையதொ ருருணையி லுறைதரு மிளையோனே
அகிலு மருதமு முகுளித வகுளமும்
அமுத கதலியும் அருணமும் வருடையும்
அபரி மிதமத கரிகளு மரிகளும் உடனேகொண்
டருவி இழிதரு மருவரை தனிலொரு
சவர வனிதையை முனிதரு புனிதையை
அவச முடன்மல ரடிதொழு துருகிய பெருமாளே.

**814.** துஞ்சு கோட்டிச் சுழற்கண் காட்டிக்
கொங்கை நோக்கப் பலர்க்குங் காட்டிக்
கொண்ட ணுப்பித் துலக்கஞ் சேர்த்துத் திரிமாதர்
தொண்டை வாய்ப்பொற் கருப்பஞ் சாற்றைத்
தந்து சேர்த்துக் கலக்குந் தூர்த்தத்
துன்ப வாழ்க்கைத் தொழிற்பண் டாட்டத் துழலாதே
கஞ்சம் வாய்த்திட் டவர்க்குங் கூட்டிக்
கன்று மேய்த்திட் டவர்க்குங் கூற்றைக்
கன்ற மாய்த்திட் டவர்க்குந் தோற்றக் கிடையாநீ
கண்டு வேட்டுப் பொருட்கொண் டாட்டத்
தின்ப வாக்யத் தெனக்குங் கேட்கத்
தந்து காத்துத் திருக்கண் சாத்தப் பெறுவேனோ
வஞ்ச மாய்ப்புக் கொளிக்குஞ் சூற்கைத்
துன்று சூர்ப்பொட் டெழச்சென் றேட்டிப்
பண்டு வாட்குட் களிக்குந் தோட்கொத் துடையோனே

வண்டு பாட்டுற் றிசைக்குந் தோட்டத்
தண்கு ராப்பொற் புரக்கும் பேற்றித்
தொண்டர் கூட்டத் திருக்குந் தோற்றத் திளையோனே
கொஞ்சு வார்த்தைக் கிளித்தண் சேற்கட்
குன்ற வேட்டிச் சியைக்கண் காட்டிக்
கொண்டு வேட்டுப் புனப்பைங் காட்டிற் புணர்வோனே
கொங்கு லாத்தித் தழைக்குங் காப்பொற்
கொண்ட லாத்துச் சிறக்குங் காட்சிக்
கொங்கு நாட்டுத் திருச்செங் கோட்டுப் பெருமாளே.

815. துடிகொ ணோய்க ளோடு வற்றி
தருண மேனி கோழை துற்ற
இருமல் ஈளை வாத பித்த மணுகாமல்
துறைக ளோடு வாழ்வு விட்டு
உலக நூல்கள் வாதை யற்று
சுகமு ளாறு பூதி பெற்று மகிழாமே
உடல்செய் கோர பாழ்வ யிற்றை
நிதமு மூணி னாலு யர்த்தி
யுயிரி னீடு யோக சித்தி பெறலாமே
உருவி லாத பாழில் வெட்ட
வெளியி லாடு நாத நிர்த்த
உனது ஞான பாத பத்ம முறுவேனோ
கடிது லாவு வாயு பெற்ற
மகனும் வாலி சேயு மிக்க
மலைகள் போட ஆழி கட்டி யிகலூர்போய்க்
களமு ருளை தேர்நு றுக்கி
தலைக ளாறு நாலு பெற்ற
அவனை வாளி யால டத்தன் மருகோனே
முடுகு வீர சூர பத்மர்
தலையின் மூளை நீறு பட்டு
முடிவ தாக ஆடு நிர்த்த மயில்வீரா

முநிவர் தேவர் ஞான முற்ற
புநித சோலை மாம லைக்குள்
முருக வேல த்யாகர் பெற்ற பெருமாளே.

816. துடித்தெதிர் வடித்தெழு குதர்க்கச மயத்தவர்
சுழற்கொரு கொடிக்கொடி எதிர்கூறித்
துகைப்பன கிதத்தலை அறுப்பன யில்விட்டுடல்
துணிப்பன கணித்தலை மிசைபார
முடித்தலை விழுப்பன முழுக்கவ டிமைப்பட
முறைப்படு மறைத்திரள் அறியாத
முதற்பொருள் புலப்பட உணர்த்துவ னெனக்கொரு
மொழிப்பொருள் பழிப்பற அருள்வாயே
குடிப்பன முகப்பன நெடிப்பன நடிப்பன
கொழுத்தகு ருதிக்கடல் இடையூடே
குதிப்பன மதிப்பன குளிப்பன களிப்பன
குவட்டினை இடிப்பன சிலபாடல்
படிப்பன திருப்புக ழெடுப்பன முடிப்பன
பயிற்றிய லகைக்குலம் விளையாடப்
பகைத்தெழு மாக்கரை இமைப்பொழு தினிற்பொடி
படப்பொரு துழக்கிய பெருமாளே.

817. துத்தி நச்ச ராவிளம் பிச்சி நொச்சி கூவிளஞ்
சுக்கி லக்க லாமிர்தப் பிறைசூதம்
சுத்த ரத்த பாடலம் பொற்க டுக்கை ஏடலஞ்
சுத்த சொற்ப கீரதித் திரைநீலம்
புத்தெ ருக்கு பாழிகங் கொத்தெ டுத்த தாளிதண்
பொற்பு மத்தை வேணியர்க் கருள்கூரும்
புத்தி சித்தி வாய்கனஞ் சுத்த சத்ய வாசகம்
புற்பு தப்பி ராணனுக் கருள்வாயே
பத்தி உற்ற தோகையம் பச்சை வெற்றி வாகனம்
பக்க மிட்டு லாவியச் சுரர்மாளப்
பக்க விட்டு வாய்நிணங் கக்க வெட்டி வாய்தரும்
பத்ம சிட்ட னேடமுத் தெறிமீனக்

கைத்த லைப்ர வாகையுந் தத்த ளிக்க மாமுறிந்
துட்க முத்து வாரணச் சதகோடி
கைக்க ளிற்று வாரணம் புக்கொ ளிக்க வாரணங்
கைப்பி டித்த சேவகப் பெருமாளே.

818. துத்தி பொற்றன மேரு வாமென
ஒற்றை பத்திர வாள்கு லாவிழி
துப்பு முத்தொடு மார்பி னுடிட மயில்போலே
சுக்கை மைக்குழ லாட நூலிடை
பட்டு விட்டவிர் காமனு ரல்குல்
சுற்று வித்துறு வாழை சேர்தொடை விலைமாதர்
தத்தை புட்குர லோசை நூபுர
மொத்த நட்டமொ டாடி மார்முலை
சற்ற சைத்துகு லாவும் வேசியர் அவரோடே
தர்க்க மிட்டுற வாடி யீளைநோய்
கக்கல் விக்கல்கொ டீளை நாயென
சிச்சி சிச்சியெ னுல்வர் கூறிட உழல்வேனோ
தித்தி மித்திமி தீத தோதக
தத்த னத்தன தான தீதிமி
திக்கு முக்கிட மூரி பேரிகை தவில்பாடச்
சித்ர வித்தைய ராட வானவர்
பொற்பு விட்டிடு ஜேஜெ ஜேயென
செக்கு விட்டசு ரோர்கள் தூள்பட விடும்வேலா
செத்தி டச்சம ணர்க டாபட
அற்று தைத்தசு வாமி யாரிட
சித்தி ரச்சிவ காமி யாரருள் முருகோனே
தெற்க ரக்கர்கள் தீவு நீறிட
விட்ட அச்சுத ரீனு மாளெடு
சித்தி ரப்புலி யூரில் மேவிய பெருமாளே.

819. துப்பா ரப்பா டற்றீ மொய்க்கால்
சொற்பா வெளிமுக் குணமோகம்
துற்று யப்பீ றற்றோ விட்டே
சுற்று மதனப் பிணிதோயும்

இப்பா வக்கா யத்தா சைப்பா
டெற்றே உலகிற் பிறவாதே
எத்தார் வித்தா ரத்தே கிட்டா
எட்டா அருளைத் தரவேணும்
தப்பா மற்பா டிச்சே விப்பார்
தத்தாம் வினையைக் களைவோனே
தற்கா ழிச்சூர் செற்றாய் மெய்ப்போ
தத்தாய் தணிகைத் தனிவேலா
அப்பா கைப்பா லைப்போற் சொற்கா
வற்பா வைதனத் தணைவோனே
அத்தா நித்தா முத்தா சித்தா
அப்பா குமரப் பெருமாளே.

820. தும்பிமுகத் தானையனைக் கொம்படுதனத் தாவிமயற்
றுருந்தமெனப் பாயுமுலைக் கனமாதர்
தும்பிமலர்ச் சோலைமுகிற் கங்குலிருட் காரினிறத்
தொங்கல்மயிற் சாயலெனக் குழல்மேவிச்
செம்பொனுருக் கானமொழிச் சங்கினொளிக் காமநகைச்
செங்கயலைப் போலும்விழிக் கணையாலே
சிந்தைதகர்த் தாளுமிதச் சந்த்ரமுகப் பாவையர்தித்
திந்திமெனுற றுடுமவர்க் குழல்வேனோ
தம்பிவரச் சானகிபொற் கொம்புவரக் கூடவனச்
சந்தமயிற் றாய்விலகிச் சிறைபோகச்
சண்டர்முடித் தூள்கள்படச் சிந்தியரக் கோர்கள்விழத்
தங்கநிறத் தாள்சிறையைத் தவிர்மாயோன்
கொம்புகுறிக் காளமடுத் திந்தமெனுற் றாடிநிரைக்
கொண்டுவளைத் தேமகிழச் சுதனீணக்
கொஞ்சுசுகப் பாவையிணைக் கொங்கைதனிற் றாவிமகிழ்க்
கும்பகோணத் தாறுமுகப் பெருமாளே.

821. துயர மறுநின் வறுமை தொலையு
மொழியு மமிர்த சுரபானம்
சுரபி குளிகை யெளிது பெறுக
துவளு மெமது பசிதீரத்

தயிரு மமுது மமையு மிடுக
சவடி கடக நெளிகாறை
தருக தகடொ டுறுக எனுமி
விரகு தவிர்வ தொருநாளே
உயரு நிகரில் கிகரி மிடறு
முடலு மவுணர் நெடுமார்பும்
உருவ மகர முகர திமிர
உததி உதரம் அதுபீற
அயரு மமரர் சரண நிகள
முறிய எறியும் அயில்வீரா
அறிவு முரமு மறமு நிறமு
மழகு முடைய பெருமாளே.

822. துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே
செய்யகும ரேசத் திறலோனே
வள்ளல்தொழு ஞானக் கழலோனே
வள்ளிமண வாளப் பெருமாளே.

823. துன்பங்கொண் டங்க மெலிந்தற
நொந்தன்பும் பண்பு மறந்தொளி
துஞ்சிப்பெண் சஞ்ச லமென்பதில் அணுகாதே
இன்பந்தந் தும்பர் தொழும்பத
கஞ்சந்தஞ் சஞ்ச மெனும்வழி
என்றென்றுந் தொண்டு செயும்படி அருள்வாயே
நின்பங்கொன் றுங்கு றமின்சர
ணங்கண்டுந் தஞ்ச மெனும்படி
நின்றன்பின் றன்ப டிகும்பிடும் இளையோனே
பைம்பொன்சிந் தின்று றைதங்கிய
குன்றெங்குஞ் சங்கு வலம்புரி
பம்புந்தென் செந்திலில் வந்தருள் பெருமாளே.

824. தெரியலஞ் செச்சைக் கொத்து முடிக்கும்
பரிதிகந் தத்தைச் சுற்ற நடத்துஞ்
சிறைவிடுஞ் சொர்க்கத் துச்சுர ரைக்கங் கையில்வாழும்
சிறுவனென் றிச்சைப் பட்டு பஜிக்கும்
படிபெறும் பத்திச் சித்ர கவித்வஞ்
சிறிதுமின் றிச்சித் தப்பரி சுத்தம் பிறவாதே
பரிகாஞ் சுற்றத் தக்கப்ர புத்வம்
பதறியங் கட்டப் பட்டனர் தத்வம்
பலவையுங் கற்றுத் தர்க்க மதத்வம் பழியாதே
பாபதம் பற்றப் பெற்ற எவர்க்கும்
பரவசம் பற்றிப் பற்றற நிற்கும்
பரவ்ர தம்பற்றப் பெற்றிலன்மற்றென் துயர்போமோ
சரியுடன் துத்திப் பத்திமு டிச்செம்
பணதரங் கைக்குக் கட்டிய கெட்டன்
தணிசிவன் பக்கத் தற்புதை பற்பந் திரிசூலம்
தரிகரும் பொக்கத் தக்கமொ ழிச்சுந்
தரியரும் பிக்கப் பித்தத னத்தந்
தரிசுரும் பிக்குப் பத்ரைபெ வர்க்குந் தெரியாத
பெரியபண் டத்தைச் சத்திய பித்தன்
பிரிதியுண் கற்புப் பச்சையெ றிக்கும்
ப்ரபையள் தண் டிற்கைப் பத்மம டப்பெண்
கொடிவாழ்வே
பிரமாண் டத்தைத் தொட்டதொர் வெற்பும்
பிளவிடுஞ் சத்திக் கைத்தல நித்தம்
பெருமிதம் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமானே.

825. தெரிவை மக்கள் செல்வ முரிமை மிக்க உண்மை
தெரிவ தற்கு உள்ள முணராமுன்
சினமி குத்த திண்ணர் தனிவ ளைத்து வெய்ய
சிலுகு தைத்து வன்மை சிதையாமுன்
பரவை புக்கு தொய்யு மரவ ணைக்குள் வைகு
பரம னுக்கு நல்ல மருகோனே

பழுதில் நிற்சொல் சொல்லி எழுதி நித்த முண்மை
பகர்வ தற்கு நன்மை தருவாயே
இருகி ரிக்க ளுள்ள வரைத டிக்கு மின்னு
மிடியு மொய்த்த தென்ன எழுகூரை
எழுக டற்கு ளுள்ளு முழுகு வித்து விண்ணு
ளிமைய வர்க்கு வன்மை தருவோனே
அரிவை பக்க முய்ய உருகி வைக்கு மைய
ரறிய மிக்க உண்மை அருள்வோனே
அறிவி னுக்கு ளென்னை நெறியில் வைக்க வல்ல
அடிய வர்க்கு நல்ல பெருமாளே.

826. தெருப்பு றத்துத் துவக்கியாய்
முலைக்கு வட்டைக் குலுக்கியாய்ச்
சிரித்து ருக்கித் தருக்கியே பண்டைகூளமெனவாழ்
சிறுக்கி ரட்சைக் கிதக்கியாய்
மனத்தை வைத்துக் கனத்தபேர்
தியக்க முற்றுத் தவிக்கவே கண்டுபேசியுடனே
இருப்ப கத்துத் தளத்துமேல்
விளக்கெ டுத்துப் படுத்துமேல்
இருத்தி வைத்துப் பசப்பியே கொண்டுகாசுதணியா
திதுக்க துக்குக் கடப்படா
மெனக்கை கக்கக் கழற்றியே
இளக்க விட்டுத் துரத்துவார் தங்கள்சேர்வைதவிராய்
பொருப்பை ஒக்கப் பணைத்ததோர்
இரட்டி பத்துப் புயத்தினல்
பொறுத்த பத்துச் சிரத்தினே மண்டுகோபமுடனே
பொரப்பொ ருப்பிற் கதித்தபோர்
அரக்கர் பட்டுப் பதைக்கவே
புடைத்து முட்டத் துணித்தமால் அன்புகூருமருகா
வரப்பை எட்டிக் குதித்துமேல்
இடத்தில் வட்டத் தளத்திலே
மதர்த்த முத்தைக் குவட்டியே நின்றுசேலினினம்வாழ்

வயற்பு றத்துப் புவிக்குணீள்
திருத்த ணிக்குட் சிறப்பில்வாழ்
வயத்த நித்தத் துவத்தனே செந்தில்மேவுகுகனே.

827. தெருவினில் நடவா மடவார்
திரண்டொ றுக்கும் வசையாலே
தினகர னெனவே லையிலே
சிவந்து திக்கும் மதியாலே
பொருசிலை வளையா இளையா
மதன்தொ டுக்குங் கணையாலே
புளகித முலையா லலையா
மனஞ்ச லித்தும் விடலாமோ
ஒருமலை இருகூ றெழவே
யுதம் புரிசித்ர வடிவேலா
ஒளிவளர் திருவே ரகமே
உகந்து நிற்கும் முருகோனே
அருமறை தமிழ்நூ லடைவே
தெரிந்து ரைக்கும் புலவோனே
அரியரி பிரமா தியர்கால்
விலங்க விழ்க்கும் பெருமாளே.

828. தென்றலு மன்றி இன்றலை பொங்கு
திண்கட லொன்று மிகமோதச்
செந்தழ லென்று வெந்தழல் சிந்து
திங்களும் வந்து துணையேய
அன்றிலு மன்றி துன்றுச ரங்க
ளாந்துமெ னெஞ்சை அழியாதே
அந்தியி லென்றன் வெந்துய ரஞ்ச
அன்பொட லங்கல் தரவேணும்
வென்றிவி ளங்கு குன்றவர் வஞ்சி
விஞ்சிய கொங்கை புணர்மார்பா
வெண்டர ளங்கள் தண்டைச தங்கை
மின்கொடி லங்கு கழலோனே

கொன்றைய ணிந்த சங்கர ரன்று
குய்பிட வந்த குமரேசா
குன்றிய அண்டர் தம்பகை வென்று
குன்றம மர்ந்த பெருமாளே.

829. தேனி யல்சொற் கனிமாதர் சேவை தனைக் கருதாதே
யானெ னதற் றிடுபோதம் யான றிதற் கருள்வாயே
வான வருக் கரசான வாச வனுக் கினியோனே
ஆனை முகற் கிளையோனே ஆறு முகப் பெருமாளே.

830. தேனிருந் தவித ழார்பளிங் குநகை
யார்குளிர்ந் தமொழி யார்சரங் கள்விழி
சீர்சிறந் தமுக வாரிளம் பிறைய தென்புருவர்
தேனமர்ந் தகுழ லார்களங் கமுகி
னார்புயங் கழையி னார்தனங் குவடு
சேர்சிவந் தவடி வார்துவண் டவிடை புண்டரீகம்
சூனியங் கொள்செய லாரரம் பைதொடை
யார்சரண் கமல நேரிளம் பருவ
தோகைசந் தமணி வாருடன் கலவி இன்பமூடே
சோகமுண் டுவினை யாடினுங் கமல
பாதமும் புயமி ராறுமிந் துளபல்
தோடலங் கலணி மார்பமும் பரிவு எங்கொள்வேனே
ஓகமந் தசிவ ரூபியஞ் சுமுக
நீலிகண் டிகலி யாணிவிந் துவொளி
ஓசைதங் குமபி ராமியம் பிகைப யந்தவேளே
ஓலமென் றவுணர் சேனைமங் கையர்கள்
சேறுடன் குருதி யோடவெண் டிசையும்
ஓதுகெந் தருவர் பாடநின் றுநட னங்கொள்வேலா
ஏனல்மங் கைசுசி ஞானரம் பையென
தாபிசந் த்ரமுக பாவைவஞ் சிகுற
மாதெனும் பர்தரு மானணைந் தழகி லங்குமார்பா
ஏர்கரந் தையறு கோடுகொன் றைமதி
ஆறணிந் தசடை யார்விளங் குமெழி
லீறில்பந் தணைந லூரமர்ந் துவளர் தம்பிரானே.

831. தேனுந்து முக்கனிகள் பால்செங்க ருப்பிளநிர்
சீரும்ப ழித்தசிவம் அருளூறத்
தீதும்பி டித்தவினை ஏதும்பொ டித்துவிழ
சீவன்சி வச்சொருபம் எனநாடி
நானென்ப தற்றுயி ரூனென்ப தற்றுவெளி
நாதம்ப ரப்பிரம வெளிமீதே
ஞானஞ்சு ரப்பமகி ழாநந்த சத்தியொடெங்
நாளுங்க ளிக்குபதம் அருள்வாயே
வானந் தழைக்கவடி யேனுஞ்செ ழிக்கவயன்
மாலும்பி ழைக்கவலை விடமாள
வாருங்க ரத்தனைமை ஆளுந்த கப்பன்மழு
மானின்க ரத்தனருள் முருகோனே
தானந்த னத்ததன னவண்டு சுற்றிமது
தானுண்க டப்பமலர் அணிமார்பா
தாளுங்கு றித்தஎமை யாளுந்தி ருக்கயிலை
சாருங்கு றத்திமகிழ் பெருமாளே.

832. தேனைவ டித்துச் சொரிந்த தோகொதி
பாலுடன் ஒக்கக் கலந்த தோநல
சீனியில் விட்டுப் பிசைந்த தோபல கனிதானோ
தேடியெ டுத்துப் பிழிந்த தோநிறை
பாகுப தத்திற் சமைந்த தோஇவை
சேரவு ருட்டித் திரண்ட தோநவ ரசமீதோ
ஞானமு ளைத்துப் படர்ந்த தோஅதி
லேயெழு புட்பச் சுகந்த மோஇது
நாமகள் வித்தைப் ரசங்க மோவென உரைநாவால்
நாவலர் மெச்சிப் பணிந்து தாழவும்
நீயது மெச்சித் தணிந்து பேசவும்
நானுனை மெச்சிப் புகழ்ந்து பாடவும் அருள்தாராய்
யானைம தப்பட் டெழுந்த தாமென
வேயிரு பத்மச் சதங்கை யோலிட
ஆறுமு கத்துக் குழந்தை யாயருள் அனையார்பால்

ஆறுமு கற்குச் சொரிந்த பாற்குளம்
ஆறுமு லைக்குப் பிரிந்த பால்நிறை
வாரம லைக்குச் சிறைந்த போதிலும் அமையாதோ
சோணம லைக்குட் டிரிந்து லாவிய
சூீரச முத்தத் தரங்க மேலெழு
சூரிய னுக்கத் திரிந்து லாவிய புதல்வோனே
சோலைம லைக்குக் கடம்பு போல்வளர்
விராலிம லைக்குக் கொழுந்து போலுயர்
சுவாமிம லைக்குக் கரும்பு போல்வரு முருகோனே.

833. தொக்கறுக் குடில சுத்தமேற் றசுக
துக்கமாற் கடமு மலமாயை
துற்றகாற் பதலை சொற்படாக் குதலை
துப்பிலாப் பலச மயநூலைக்
கைக்கொளாக் கதறு கைக்கொளாக் கையவ
லப்புலாற் றசைகு ருதியாலே
கட்டுகூட் டுருவ ருப்புவேட் டுழல
சட்டவாக் கழிவ தொருநாளே
அக்கராப் பொடியின் மெய்க்கிடாக் குறவர்
அர்ச்சியாய்த் தொழுமு நிவனுய
அப்பபோர்ப் பனிரு வெற்பபூத் தணியல்
வெற்பபார்ப் பதிந திருமாரா
இக்கனுக் கலணி யொத்தநோக் குறுத
வத்தினோர்க் குதவும் இளையோனே
எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
டெத்தினார்க் கெளிய பெருமாளே.

834. தொக்கைகழு விப்பொற் றகுமுடை
சுற்றிக்கல னிட்டுக் கடிதரு
சொக்குப்புலி யப்பிப் புகழுறு களியாலே
சுத்தத்தைய கற்றிப் பெரியவர்
சொற்றப்பிய கத்தைப் புரிபல
சுற்றத்துட னுற்றிப் புவியிடை அலையாமல்

முக்குற்றம கற்றிப் பலகலை
கற்றுப்பிழை யற்றுத் தனையுணர்
முத்தர்க்கடி மைப்பட் டிலகிய அறிவாலே
முத்தித்தவ சுற்றுக் கதியுறு
சத்தைத்தெரி சித்துக் கரையகல்
முத்திப்புண ரிக்குட் புகவரம் அருள்வாயே
திக்கெட்டும டக்கிக் கடவுள
ருக்குப்பணி கற்பித் தருளறு
சித்தத்தொட டுத்துப் படைகொடு பொருசூரர்
செச்சைப்புய மற்றுப் புகவொரு
சத்திப்படை விட்டுச் சுரர்பதி
சித்தத்துயர் கெட்டுப் பதிபெற அருள்வோனே
அக்கைப்புனை கொச்சைக் குறமக
ளச்சத்தையொ ழித்துக் கரிவரும்
அத்தத்தில மைத்துப் பரிவுடன் அணைவோனே
அப்பைப்பிறை யைக்கட் டியசடை
அத்தர்க்கரு மைப்புத் திரவிரி
அத்திக்கரை யிச்சித் துறைதரு பெருமாளே.

835. தொடத்து ளக்கிகள் அபகட நினைவிகள்
குருட்டு மட்டைகள் குமரிகள் கமரிகள்
சுதைச்சி றுக்கிகள் குசலிக ளிசலிகள் முழுமோசம்
துறுத்த மட்டைகள் அசடிகள் கசடிகள்
முழுப்பு ரட்டிகள் நழுவிகள் மழுவிகள்
துமித்த மித்திரர் விலைமுலை இனவலை புகுதாமல்
அடைத்த வர்க்கியல் சரசிகள் விரசிகள்
தரித்த வித்ரும நிறமென வரவுடன்
அழைத்து சக்கர கிரிவளை படிகொடு விளையாடி
அவத்தை தத்துவ மழிபட இருளறை
விலக்கு வித்தொரு சுடரொளி பாவகல்
அருட்பு கட்டியு னடியிணை அருளுவ தொருநாளே
படைத்த னைத்தையும் வினையுற நடனொடு
துடைத்த பத்தினி மரகத சொருபியொர்
பாத்தி னுச்சியி னடநவி லுமையருள் இளையோனே

பகைத்த ரக்கர்கள் யமனுல குறவமர்
தொடுத்த சக்கர வளைகர மழகியர்
படிக்க டத்தையும் வயிறடை நெடியவர் மருகோனே

திடுக்கி டக்கட லசுரர்கள் முறிபட
கொளுத்தி சக்கிரி பொடிபட சுடரயில்
திருத்தி விட்டொரு கொடியினில் வலம்வரு மயில்வீரா

தினைப்பு னத்திரு தனகிரி குமரிநல்
குறத்தி முத்தொடு சசிமக ளொடுபுகழ்
திருத்த ணிப்பதி மலைமிசை நிலைபெறு பெருமாளே.

836. தொடரிய மன்போற் றுங்கப்
படையவ ளேந்தோட் டுந்துட்
டரையிள குந்தோட் கொங்கைக் கிடுமாயத்

துகில்விழ வுஞ்சேர்த் தங்கத்
துளைவிர குஞ்சூழ்த் தண்டித்
துயர்விளை யுஞ்சூட் டின்பத் தொடுபாயற்

கிடைகொடு சென்றீட் டும்பொற்
பணியரை மென்றேற் றங்கற்
றனையென இன்றூட் டென்றற் கிடுமாதர்க்

கினிமையி லொன்றாய்ச் சென்றுட்
படுமன முன்றாட் கன்புற்
றியலிசை கொண்டேத் தென்றுட் டருவாயே

நெடிதுத வங்கூர்க் குஞ்சற்
புருடரும் நைந்தேக் கம்பெற்
றயர்வுற நின்றூர்த் தங்கட் கணையேவும்

நிகரில்ம தன்தேர்க் குன்றற்
றெரியில்வி ழுந்தோர்ப் பொன்றச்
சிறிதுநி னைந்தாட் டங்கற் றிடுவார்முன்

திடமுறு மன்பாற் சிந்தைக்
கறிவிட முஞ்சேர்த் தும்பர்க்
கிடர்களை யும்போர்ச் செங்கைத் திறல்வேலா

தினவரி வண்டார்த் தின்புற்
றிசைகொடு வந்தேத் திஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே.

837. தொடவ டாது நேராக வடிவு காண வாராது
சுருதி கூறு வாராலும் எதிர்கூறத்
துறையி லாத தோராசை இறைவ னாகி யோரேக
துரிய மாகி வேறாகி அறிவாகி
நெடிய கால்கை யோடாடு முடலின் மேவி நீநானு
மெனவு நேர்மை நூல்கூறி நிறைமாயம்
நிகரில் கால னாரேவ முகரி யான தூதாளி
நினைவொ டேகு மோர்நீதி மொழியாயோ
அடல்கெ டாத சூர்கோடி மடிய வாகை வேலேவி
அமர்செய் வீர வீராறு புயவேளே
அழகி னோடு மானீனு மரிவை காத லாவேதன்
அரியும் வாழ வானாளும் அதிரேகா
கடுவி டாக ளாரூப நடவி நோத தாடாளர்
கருதி டார்கள் தீமூள முதல்நாடும்
கடவு ளேறு மீதேறி புதல்வ கார ணாவேத
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

838. தொடுத்த நாள்முதல் மருவிய இளைஞனும்
இருக்க வேறொரு பெயர்தம திடமது
துவட்சி யேபெறி லவருடன் மருவிடு பொதுமாதர்
துவக்கி லேயடி படநறு மலரயன்
விதித்த தோதக வினையுறு தகவது
துறக்க நீறிட அரகர வெனவுளம் அமையாதே
அடுத்த பேர்மனை துணைவியர் தமர்பொருள்
பெருத்த வாழ்விது சதமென மகிழ்வுறு
மசட்ட னாதுலன் அவமது தவிரநின் அடியாரோ
டமர்த்தி மாமலர் கொடுவழி படவெனை
இருத்தி யேபர கதிபெற மயில்மிசை
அரத்த மாமணி யணிகழ லிணைதொழ அருள்தாராய்

எடுத்த வேல்பிழை புகலரி தெனவெதிர்
விடுத்த ராவணன் மணிமுடி துணிபட
எதிர்த்து மோர்கணை விடுமொரு காதலன் மருகோனே

எருக்கு மாலிகை குவளையி னறுமலர்
கடுக்கை மாலிகை பகிரதி சிறுபிறை
யெலும்பு மாலிகை புனைசடி லவனருள் புதல்வோனே

வடுத்த மாவென நிலைபெறு நிருதனை
அடக்க வேழ்கட லெழுவரை துகளெழ
வடித்த வேல்விடு காதல ஜெயஜெய புயவேளே

வனத்தில் வாழ்குற மகள்முலை முழுகிய
கடப்ப மாலிகை யணிபுய வமரர்கள்
மதித்த சேவக வலிவல நகருறை பெருமாளே.

839. தொடுத்த வாளென விழித்து மார்முலை
அசைத்து மேகலை மறைத்து மூடிகள்
துடித்து நேர்கலை நெகிழ்த்து மாவியல் கொளுமாதர்

சுகித்த ஹாவென நகைத்து மேல்விழ
முடித்த வார்குழல் விரித்து மேவிதழ
துவர்த்த வாய்சுரு ளடக்கி மால்கொடு வழியேபோய்ப்

படுத்து பாயலி லணைத்து மாமுலை
பிடித்து மார்பொடு மழுத்தி வாயிதழ்
கடித்து நாணம தழித்த பாவிகள் வலையாலே

பலித்து நோய்பிணி கிடத்து பாய்மிசை
வெளுத்து வாய்களு மலத்தி னுமென
பசித்து தாகமு மெடுத்தி டாவுயிர் உழல்வேனோ

வெடுத்த தாடகை சினத்தை ஓர்கணை
விடுத்து யாகமும் நடத்தி யேயொரு
மிகுத்த வார்சிலை முறித்த மாயவன் மருகோனே

விதித்து ஞாலம தளித்த வேதனை
அதிர்த்து மோர்முடி காத்தி லாயனல்
விழித்து மாரனை எரித்த தாதையர் குருநாதா

அடுத்த ஆயிர விடப்ப ணாமுடி
நடுக்க மாமலை பிளக்க வேகவ
டாக்கர் மாமுடி பதைக்க வேபொரு மயில்வீரா
அறத்தில் வாழுமை சிறக்க வேயறு
முகத்தி னோடணி குறத்தி யானையொ
டருக்கொ ணாமலை தருக்கு லாவிய பெருமாளே.

840. தொந்தி சரிய மயிரே வெளிறநிரை
தந்த மசைய முதுகே வளையஇதழ்
தொங்க ஒருகை தடிமேல் வரமகளிர் நகையாடித்
தொண்டு கிழவ னிவனா ரெனஇருமல்
கிண்கி ணெனமு னுரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு செவியாகி
வந்த பிணியு மதிலே மிடையுமொரு
பண்டி தனுமெ யுறுவே தனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடுகு துயர்மேவி
மங்கை அழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே ஒழுகவுயிர்
மங்கு பொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்
எந்தை வருக ரகுநா யகவருக
மைந்த வருக மகனே இனிவருக
என்கண் வருக எனதா ருயிர்வருக அபிராம
இங்கு வருக அரசே வருகமுலை
உண்க வருக மலர்சூ டிடவருக
என்று பரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்
சிந்தை மகிழு மருகா குறவரிள
வஞ்சி மருவு மழகா அமரர்சிறை
சிந்த அசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா
திங்க ளரவு நதிசூ டியபரமர்
தந்த குமர அலையே கரைபொருத
செந்தி னகரி லினிதே மருவிவளர் பெருமாளே.

841. தொய்யில் செய்யில் நொய்யர் கையர்
தொய்யு மைய இடையாலும்
துள்ளி வள்ளை தள்ளி உள்ளல்
சொல்லு கள்ள விழியாலும்
மைய செவ்வி மவ்வல் முல்லை
மல்கு நல்ல குழலாலும்
மையல் கொள்ள எள்ளல் செய்யும்
வல்லி சொல்லை மகிழ்வேனோ
செய்ய துய்ய புள்ளி நவ்வி
செல்வி கல்வ ரையிலேனல்
தெய்வ வள்ளி மையல் கொளு
செல்வ பிள்ளை முருகோனே
மெய்யர் மெய்ய பொய்யர் பொய்ய
வெள்ளை வெள்ளி நகர்வாழ்வே
வெய்ய சைய வில்லி சொல்லை
வெல்ல வல்ல பெருமாளே.

842. தொல்லைமுதல் தானென்று மெல்லியிரு பேதங்கள்
சொல்லுகுண மூவந்த மெனவாகித்
துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னோரைந்து
தொய்யுபொரு ளாறங்க மெனமேவும்
பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானொன்றி இசையாகிப்
பல்லுயிரு மாயந்த மில்லசொரு பாநந்த
பௌவமுற வேநின்ற தருள்வாயே
கல்லுருக வேயின்கண் அல்லல்படு கோவம்பு
கல்வருக வேநின்று குழலூதுங்
கையன்மரு காஉம்பன் நொய்யசடை யோனெந்தை
கைதொழமெய்ஞ் ஞானஞ்சொல் கதிர்வேலா
கொல்லைமிசை வாழ்கின்ற வள்ளிபுன மேசென்று
கொள்ளைகொளு மாரன்கை அலராலே
கொய்துதழை யேகொண்டு செல்லுமழ வாகந்த
கொல்லிமலை மேல்நின்ற பெருமாளே.

843. தோகைமயி லேகமல மானேயு லாசமிகு
காமதுரை யானமத வேள்பூவை யேயினிமை
தோயுமநு போகசுக லீலாவி நோதமுழு
துணர்தேனே
சூதனைய சீதஇள நீரான பாரமுலை
மீதணைய வாருமிதழ் தாரீரெ னுணைமொழி
சோர்வதிலை யானடிமை யாவேனு மானைமிக
மயலானேன்
ஆகமுற வேநகம தாலேவி டாதவடை
யாளமிட வாருமென வேமாத ரார்களுடன்
ஆசைசொலி யேயுழலு மாபாத னீதியிலி
உனையோதேன்
ஆமுனது நேயவடி யாரோடு கூடுகிலன்
நீறுநுதல் மீதிடலி லாமூட னேதுமிலி
ஆயினுமி யானடிமை ஈடேற வேகழல்கள் தருவாயே
மாகமுக டோடகில பாதாள மேருவுட
னேசுழல வாரியது வேதாழி யாவமரர்
வாலிமுத லானவர்க ளோடோர்க ளாலமுது கடைநாளில்
வாருமென வேயொருவர் நோகாம லாலவிடம்
ஈசர்பெற மாறுதவி யேதேவர் யாவர்களும்
வாழவமு தேபகிரு மாமாய னரினிய மருகோனே
மேகநிக ரானகொடை மானைய காதிபதி
வாரிகலி மாருதக ரோபாரி மாமதன
வேள்கலிசை வாழவரு காவேரி சேவகன துளமேவும்
வீரவதி சூரர்கிளை வேர்மாள வேபொருத
தீரகும ராகுவளை சேரோடை சூழ்கழனி
வீரைநகர் வாழ்பழநி வேலாயு தாவமரர் பெருமாளே.

844. தோடப் பாமற் றேய்தப் பாணிச்
சூழ்துற் றூர்துற் றழுவாருந்
தூரப் போகக் கோரப் பாரச்
சூலப் பாசச் சமனாரும்
பாடைக் கூடத் தீயிற் றேறிப்
பாழ்பட் டேபட் டழியாதே

பாசத் தேனைத் தேசுற் ரூர்பொற்
பாதத் தேவைத் தருள்வாயே
ஆடற் சூர்கெட் டோடத் தோயத்
தாரச் சீறிப் பொரும்வேலா
ஆனைச் சேனைக் கானிற் றேனுக்
காரத் தாரைத் தரும்வீரா
கூடற் பாடிக் கோவைப் பாவைக்
கூடப் பாடித் திரிவோனே
கோலச் சாலிச் சோலைச் சீலக்
கோடைத் தேவப் பெருமாளே.

845. தோடுபொரு மைக்க ணுடைவடி வுற்ற
தோர்தனம சைத்து இளைஞோர்தம்
தோள்வலிம னத்து வாள்வலியு மக்கு
தோகையர்ம யக்கில் உழலாதே
பாடலிசை மிக்க ஆடல்கொடு பத்தி
யோடுநினை பத்தர் பெருவாழ்வே
பாவவினை யற்று ஞமநினை புத்தி
பாரிலருள் கைக்கு வரவேணும்
ஆடலழ கொக்க ஆடுமயி லெற்றி
ஆண்மையுட னிற்கு முருகோனே
ஆதியா னுக்கு வேதமொழி முற்றி
யார்வம்விளை வித்த அறிவோனே
வேடைமய லுற்று வேடர்மக ளுக்கு
வேளையென நிற்கும் விறல்வீரா
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே.

846. தோடு மென்குழை யூடே போரிடு
வாணெ டுங்கயல் போலே யாருயிர்
சூறை கொண்டிடு வேல்போ லேதொடர் விழிமானர்
சூத கந்தனி லேமா லாயவ
ரோது மன்றறி யாதே யூழ்வினை
சூழும் வெந்துய ராலே தானுயிர் சுழலாதே

ஆடு வெம்பண காகோ தாசன
மூறு கண்டிட மேல்வீழ் தோகையி
லாரும் வண்குமரேசா ஆறிரு புயவேளே
ஆரு நின்றருளாலே தாடொழ
ஆண்மை தந்தருள் வாழ்வே தாழ்வற
ஆதி தந்தவ நாயேன் வாழ்வுற அருள்வாயே
ஓடு வெங்கதி ரோடே சோமனு
மூழி யண்டமும் லோகா லோகமு
மூரு மந்தர நாணு தேவரு மடிபேண
ஊழி டம்புயன் வேலா வாலய
மூடு தங்கிய மாலா ராதர
வோத வெண்டிரை சூர்மார் பூடுற விடும்வேலா
வேடு கொண்டுள வேடா வேடைய
வேழ வெம்புலி போலே வேடர்கள்
மேவு திண்புன மீதே மாதொடு மிகமாலாய்
மேக மென்குழ லாய்நீ கேளினி
வேறு தஞ்சமு நீயே யாமென
வீறு செந்திலின் மீதே மேவிய பெருமாளே.

847. தோடு வெண்குழை யாலே கோல்வளை
சூடு செங்கைக ளாலே யாழ்தரு
கீத மென்குர லாலே தூமணி நகையாலே
தூப மென்குழ லாலே யூறிய
தேனி லங்கித ழாலே யாலவி
லோச னங்களி னாலே சோபித அழகாலே
பாட கம்புனை தாளா லேமிக
வீசு தண்பனி நீரா லேவளர்
பார கொங்கைக ளாலே கோலிய விலைமாதர்
பாவ கங்களி னாலே யான்மயல்
மூழ்கி நின்றய ராதே நூபுர
பாத பங்கய மீதே யாள்வது கருதாயோ

நாட ருஞ்சுடர் தானு வோதுசி
வாக மங்களி னுறு பேதவ
நாத தந்த்ரக லாமா போதக வடிவாகி
நால்வி தந்தரு வேதா வேதமும்
நாடி நின்றதொர் மாயா தீதம
னோல யந்தரு நாதா ஆறிரு புயவேளே
வாட யங்கிய வேலா லேபொரு
சூர்த டிந்தருள் வீரா மாமயி
லேறு கந்தவி னோதா கூறென அரனார்முன்
*வாச கம்பிற வாதோர் ஞானசு
கோத யம்புகல் வாசா தேசிக
மாடை யம்பதி வாழ்வே தேவர்கள் பெருமாளே.

848\. தோடுற்ற காதொக்க நீடுற்ற போருற்ற
தோய்மைக்க ணால்மிக்க நுதலாலே
தோள்வெற்பி னால்விற்கை வேளுக்கு மேன்மக்கள்
சோர்கைக்கு மால்விற்கு மடவார்தம்
மேடைக்கு ளேபுக்கு வாடிக்க லாமிக்க
வேசிக்கு நேசித்திங் குழலாதே
ஊன்பெற்ற காளத்தி வாழ்முத்த னேபத்தி
ஓதற்கு நீசற்றும் அருளாயோ
வேடர்க்கும் நீள்சொர்க்கம் வாழ்விக்க வோர்வெற்பின்
மீதுற்ற பேதைக்கொர் மணவாளா
வேழத்தி னுபத்தை மீள்வித்த மாலொக்க
வேதத்தி லேநிற்கும் அயனாரும்
தேடற்கொ ணாநிற்கும் வேடத்தர் தாம்வைத்த
சேமத்தி னாமத்தை மொழிவோனே
தீதற்ற நீதிக்கு ளேய்பத்தி கூர்பத்தர்
சேவிக்க வாழ்வித்த பெருமாளே.

---

*வாசகந்தவ ருதேயோது பதேசகன்குரு வானுய்வானுயர் மாப ரங்கிரி மீதேமேவிய பெருமாளே.

849. தோடுற்றுக் காதள வோடிய
வேலுக்குத் தானிக ராயெழு
சூதத்திற் காமணி ராசத விழியாலே
சோடுற்றத் தாமரை மாமுகை
போலக்கற் பூரம ணாவிய
தோல்முத்துக் கோடென வீறிய முலைமானார்
கூடச்சிக் காயவ ரூழிய
மேபற்றிக் காதலி னோடிய
கூளச்சித் தாளனை மூளனை வினையேனைக்
கோபித்துத் தாயென நீயொரு
போதத்தைப் பேசவ தாலருள்
கோடித்துத் தானடி யேனடி பெறவேணும்
வேடிக்கைக் காரவு தாரகு
ணபத்மத் தாரணி காரண
வீரச்சுத் தாமகு டாசமர் அடுதீரா
வேலைக்கட் டாணிம கார்த
சூரற்குச் சூரனை வேல்விடு
வேழத்திற் சீரரு ளூறிய இளையோனே
ஆடத்தக் காருமை பாதியர்
வேதப்பொற் கோவண வாடையர்
ஆவித்துத் தாமரு ளூறிய முருகோனே
ஆடப்பொற் கோபுர மேவிய
ஆடிக்கொப் பாமதிள் சூழ்பழை
யாறைப்பொற் கோயிலின் மேவிய பெருமாளே.

850. தோத கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
தோகை யர்க்கு நெஞ்சம் அழியாதே
சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
சூழ்பி ணிக்க ணங்கள் அணுகாதே
பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
பாசம் விட்டெ றிந்து பிடியாதே
பாவ லர்க்கி ரங்கி நாவி னுக்கி சைந்த
பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்

வேத மிக்க விந்து நாத மெய்க்க டம்ப
 வீர பத்ர கந்த முருகோனே
மேரு வைப்பி ளந்து சூர னைக்க டிந்து
 வேலை யிற்று ளைந்த கதிர்வேலா
கோதை பொற்கு றிஞ்சி மாது கச்ச ணிந்த
 கோம ளக்கு ரும்பை புணர்வோனே
கோல முற்றி லங்கு சோண வெற்பு யர்ந்த
 கோபு ரத்த மர்ந்த பெருமாளே.

851\. தோதகமி குத்த பூதமருள் பக்க
 சூலைவலி வெப்பு மதநீர்தோய்
சூழ்பெருவ யிற்று நோயிருமல் குற்று
 சோகைபல குட்டம் அவைதீரா
வாதமொடு பித்த மூலமுடன் மற்று
 மாயபிணி சற்றும் அணுகாதே
வாடுமெனை முத்தி நீடியப தத்தில்
 வாழுமிக வைத்து அருள்வாயே
காதல்மிக வுற்று மாதினைவி ளைத்த
 கானககு றத்தி மணவாளா
காசினிய னைத்து மோடியள விட்ட
 கால்நெடிய பச்சை மயில்வீரா
வேதமொழி மெத்த வோதிவரு பத்தர்
 வேதனைத விர்க்கு முருகோனே
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
 மீளவிடு வித்த பெருமாளே.

852\. தோரண கனக வாசலின் முழவு
 தோன்முர சதிர முதிராத
தோகையர் கவரி வீசிட விறலி
 தோள்வலி புகழ மதகோப
வாரண ரதப தாகினி துரக
 மாதிர நிறைய அரசாகி
வாழினும் வறுமை கூரினு முனது
 வார்கழ லிணைகள் மறவேனே

பூரண புவன காரண சவரி
பூதர களப தனபார
பூஷண நிருதர் தூஷண விபுதர்
பூபதி நகரி குடியேற
ஆரண வாத னீரிரு குடுமி
ஆனனன் வெருவ மயிலேறும்
ஆரிய பழநி வாழ்குக அழகும்
ஆண்மையு முடைய பெருமாளே.

853. தோலத்தி யாலப்பி னூலொப்பி லாதுற்ற
தோளுக்கை காலுற்ற குடிலூடே
சோர்வற்று வாழ்வுற்ற கால்பற்றி யேகைக்கு
வேதித்த சூலத்தன் அணுகாமுன்
கோலத்தை வேலைக்கு ளேவிட்ட சூர்கொத்தொ
டேபட்டு வீழ்வித்த கொலைவேலா
கோதற்ற பாதத்தி லேபத்தி கூர்புத்தி
கூர்கைக்கு நீகொற்ற அருள்தாராய்
ஆலத்தை ஞாலத்து ளோர்திக்கு வானத்த
ராவிக்கள் மாள்வித்து மடியாதே
ஆலித்து மூலத்தொ டேயுட்கொ ளாதிக்கு
மாம்வித்தை யாமத்தை அருள்வோனே
சேலொத்த வேலொத்த நீலத்து மேலிட்ட
தோதக்கண் மானுக்கு மணவாளா
தீதற்ற நீதிக்கு ளேய்பத்தி கூர்பத்தர்
சேவிக்க வாழ்வித்த பெருமாளே.

854. தோலெலும்பு சீநரம்பு பீளைதுன்று கோழைபொங்கு
சோரிபிண்ட மாயுருண்டு வடிவான
தூலபங்க காயம்வம்பி லேசுமந்து நான்மெலிந்து
சோருமிந்த நோயகன்று துயராற
ஆலமுண்ட கோனகண்ட லோகமுண்ட மால்விரிஞ்ச
னாரணங்க ளாகமங்கள் புகழ்தாளும்
ஆனனங்கள் மூவிரண்டு மாறிரண்டு தோளுமங்கை
ஆடல்வென்றி வேலுமென்று நினைவேனோ

வாலசந்த்ர சூடிசந்த வேதமந்த்ர ரூபியம்பை
வாணிபஞ்ச பாணிதந்த முருகோனே
மாயையைந்து வேகமைந்து பூதமைந்து நாதமைந்து
வாழ்பெருஞ்ச ராசரங்கள் உறைவோனே
வேலையன்பு கூரவந்த ஏகதந்த யானைகண்டு
வேடர்மங்கை ஓடியஞ்ச அணைவோனே
வீரமங்கை வாரிமங்கை பாரின்மங்கை மேவுகின்ற
மேருமங்கை ஆளவந்த பெருமாளே.

855. தோலொடு மூடிய கூரையை நம்பிப்
பாவையர் தோதக லீலைநி ரம்பிச்
சூழ்பொருள் தேடிட ஓடிவ ருந்திப் புதிதான
தூசொடு நான்மணி மாலைப்ர பந்தக்
கோவையு லாமடல் கூறிய மூந்தித்
தோமுறு காளையர் வாசல்தொ றும்புக் கலமாருங்
காலனை வீணனை நீதிகெ டும்பொய்க்
கோளனை மானமி லாவழி நெஞ்சக்
காதக லோபவ்ரு தாவனை நிந்தைப் புலையேனைக்
காரண காரிய லோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற நம்பிற்
காசறு வாரிமெய்ஞ் ஞான தவஞ்சற் றருளாதோ
பாலன மீதும ருன்முக செம்பொற்
பாலனை மோதப யாதன பண்டப்
பாரிய மாருதி தோள்மிசை கொண்டுற் றமராடிப்
பாவிய ராவண னார்தலை சிந்திச்
சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்
பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக் கினியோனே
சீலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக் கிரிதோய்வாய்
சேலொடு வாளைவ ரால்கள்கி ளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே.

856. தோழமை கொண்டுச லஞ்செய் குண்டர்கள்
ஓதிய நன்றிம றந்த குண்டர்கள்
சூழ்விர தங்கள்க டிந்த குண்டர்கள் பெரியோரைத்
தூஷண நிந்தைப கர்ந்த குண்டர்கள்
ஈவது கண்டுத கைந்த குண்டர்கள்
சூளுற வெண்பொழிந்த குண்டர்கள் தொலையாமல்
வாழநி னைந்துவ ருந்து குண்டர்கள்
நீதிய றங்கள்சி தைந்த குண்டர்கள்
மானம் கந்தைமி குந்த குண்டர்கள் வலையாலே
மாயையில் நின்றுவ ருந்து குண்டர்கள்
தேவர்கள் சொங்கள்க வர்ந்த குண்டர்கள்
வாதைந மன்றன்வ ருந்தி டுங்குழி விழுவாரே
ஏழும ரங்களும் வன்கு ரங்கெனும்
வாலியு மம்பர மும்ப ரம்பரை
ராவண னுஞ்சது ரங்க லங்கையு மடைவேமுன்
ஈடழி யும்படி சந்த்ர னுஞ்சிவ
சூரிய னுஞ்சுரா ரும்ப தம்பெற
ஏகச ரந்தொடு புங்க வன்திரு மருகோனே
கோழிசி லம்பந லம்ப யின்றக
லாப நடஞ்செய மஞ்சு தங்கிய
கோபுர மெங்குழ்வி ளங்கு மங்கல வயலூரா
கோமள அண்டர்கள் தொண்டர் மண்டலர்
வேலனெ னும்பெய ரன்பு டன்புகழ்
கோடை எனும்பதி வந்த இந்திரர் பெருமாளே.

857. நகைத்து உருக்கி விழித்து மிரட்டி
நடித்து விதத்தில் அதிமோகம்
நடத்து சமத்தி முகத்தை மினுக்கி
நலத்தி லணைத்து மொழியாலும்
திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை
திரட்டி எடுத்து வரவேசெய்
திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்
தெவிட்டு கலைக்குள் விழுவேனோ

பகைத்த அரக்கர் சிரத்தை அறுத்து
படர்ச்சி கறுத்த மயிலேறிப்
பணைத்த கரத்த குணத்த மணத்த
பதத்த கனத்த தனமாதை
மிகைத்த புனத்தி விருத்தி அணைத்து
வெளுத்த பொருப்பில் உறைநாதா
விரித்த சடைக்கு ளொருத்தி இருக்க
ம்ருகக்கை கொளத்தர் பெருமாளே.

858. நகையா லெத்திகள் வாயிற்றம்
பலமோ டெத்திகள் நாணற்றின்
நயனு லெத்திகள் நாறற்புண் தொடைமாதர்
நடையா லெத்திக ளாரக்கொங்
கையினு லெத்திகள் மோகத்தின்
நவிலா லெத்திகள் தோகைப்பைங் குழல்மேகச்
சிகையா லெத்திக ளாசைச்சங்
கடியா லெத்திகள் பாடிப்பண்
திறனு லெத்திகள் பாரத்தின் தெருவூடே
சிலர்கூ டிக்கொடு ஆடிக்கொண்
டுழல்வா ருக்குழல் நாயெற்குன்
செயலா லற்புத ஞானத்தின் கழல்தாராய்
பகையா ருட்கிட வேலைக்கொண்
டுவரா ழிக்கிரி நாகத்தின்
படமோ டிற்றிட சூரைச்சங் கரிசூரா
பணநா கத்திடை சேர்முத்தின்
சிவகா மிக்கொரு பாகத்தன்
பரிவால் சத்துப தேசிக்குங் குருவோனே
சுகஞா னக்கடல் மூழ்கத்தங்
தடியே னுக்கருள் பாலிக்குஞ்
சுடர்பா தக்குக னேமுத்தின் கழல்வீரா
சுகரே சத்தன பாரச்செங்
குறமா தைக்கள வால்நித்தஞ்
சுகமூழ் கிப்புலி யூர்நத்தும் பெருமாளே.

859. நசையொடு தோலுந் தசையொடு நீரும்
நடுநடு வேயென் புறுகீலும்
நலமுற வேயொன் றிடஇரு காலும்
மிடையுரு வாயும் புவிமீதே
விசையுறு கால்மண் புனலுற வாய்வெங்
கனலுறு வேடந் தரியாதே
விழுமடி யார்முன் பழுதற வேள்கந்
தனுமென வோதுஞ் செயல்தாராய்
இசையுற வேயன் றசைவற வோதும்
எழிலுறு வேழம் எனையாளென்
றிடர்கெட மூலம் வரவெதிர் கூவும்
இடமிமை யாமுன் வருமாயன்
திசைமுக னுருந் திசைபுவி வானும்
*திரிதர வாழுஞ் சிவன்மூதூர்
தெரிவையர் தாம்வந் தருநட மாடுந்
திருவல மேவும் பெருமாளே.

860. நச்சரவ மென்று நச்சரவ மென்று
நச்சுமிழ் களங்க மதியாலும்
நத்தொடு முழங்க னத்தொடு முழங்கு
நத்திரை வழங்கு கடலாலும்
இச்சையுணர் வின்றி யிச்சைமென வந்த
இச்சிறுமி நொந்து மெலியாதே
எத்தனையு நெஞ்சில் எத்தன முயங்கி
இத்தனையி லஞ்சல் எனவேணும்
பச்சைமயில் கொண்டு பச்சைமற மங்கை
பச்சைமலை யெங்கும் உறைவோனே
பத்தியுட னின்று பத்திசெயு மன்பர்
பத்திர மணிந்த கழலோனே

---

*செயலுறவேவவந் தடிபேணும், சிவனருள்கூர்தென் றிசையிலு லாவுஞ் சிவபுரமேவும் பெருமாளே.

கச்சிவர் குரும்பை கச்சவர் விரும்பு
கச்சியில மர்ந்த கதிர்வேலா
கற்பக வனங்கொள் கற்பகவி சும்பர்
கைத்தளை களைந்த பெருமாளே.

861. நச்சுவாள் விழிக்கொ டெற்றியே தனத்தை
நத்துவார் சுகத்தில் நலமாக
நட்டமா மனத்தை இட்டமே கொடுத்து
நத்துவாழ் கடற்குள் அலைபோலே
கச்சமே செலுத்தி அச்சமே படுத்து
கட்டவேழ் பிறப்பு விடவேதான்
கற்றநூ லுகக்க வெட்கமே செறித்த
கட்டனே னினைப்ப தொருநாளே
இச்சையே செலுத்தி உச்சிதாள் பலிக்கு
மிட்டமா லவற்கு மருகோனே
எற்றுவா ரிதிக்குள் முற்றிநீள் பொருப்பை
எக்கிநேர் மடித்த இளையோனே
மெச்சவே புடைத்த முத்தமார் தனத்தி
மிக்கவாள் படைத்த விழியாலே
வெட்டுமா மறத்தி ஒக்கவே இருக்க
வெற்றிவே லெடுத்த பெருமாளே.

862. நஞ்சினைப் போலுமன வஞ்சகக் கோளர்களை
நம்புதற் றீதெனநி னைந்துநாயேன்
நண்புகப் பாதமதி லன்புறத் தேடியுனை
நங்களப் பாசரண மென்றுகூறல்
உன்செவிக் கேறலைகொல் பெண்கள்மெற் பார்வையைகொல்
உன்சொலைத் தாழ்வுசெய்து மிஞ்சுவாரார்
உன்றனக் கேபரமும் என்றனக் கார்துணைவர்
உம்பருக் காவதினின் வந்துதோணாய்
கஞ்சனைத் தாவிமுடி முன்புகுட் டேயமிகு
கண்களிப் பாகவிடு செங்கையோனே
கண்கயற் பாவைகுற மங்கைபொற் றோடுழுவு
கஞ்சுகப் பான்மைபுனை பொன்செய்தோளாய்

அஞ்சவெற் பேழுகடல் மங்கநிட் டூர்குலம்
அந்தரத் தேறவிடு கந்தவேளே
அண்டமுற் பார்புகழு மெந்தைபொற் பூர்புலிசை
அம்பலத் தாடுமவர் தம்பிரானே.

863. நடையுடையி லேயுருக்கி நெடியதொரு வீதியிற்குள்
நயனமத னல்மருட்டி வருவாரை
நணுகிமய லேவிளைத்து முலையைவிலை கூறிவிற்று
நளினமுட னேபசப்பி உறவாடி
வடிவுதிகழ் வீடுபுக்கு மலரணையின் மீதிருத்தி
மதனனுடை யாகமத்தின் அடைவாக
மருவியுள மேயுருக்கி நிதியுளதெ லாம்பறிக்கும்
வனிதையர்க ளாசைபற்றி உழல்வேனோ
இடையர்மனை தோறுநித்த முறிதயிர்நெய் பால்குடிக்க
இருகையுற வேபிடித்து உரலோடே
இறுகிடவ சோதைகட்ட அடிபடுகோ பாலக்ருஷ்ண
னெழில்மருக னேகுறத்தி மணவாளா
அடலெழுது மேடுமெத்த வருபுனலி லேறவிட்டு
அரியதமிழ் வாதுவெற்றி கொளும்வேலா
அமணர்குலம் வேரறுத்து மதுரைநகர் வாழவைத்த
அறுமுகவ வீரமுற்ற பெருமாளே.

864. நரையொடு பற்க ழன்றுதோல் வற்றி
நடையற மெத்த நொந்துகா லெய்த்து
நயனமி ருட்டி நின்றுகோ லுற்று நடைதோயா
நழுவும்வி டக்கை ஒன்றுபோல் வைத்து
நமனென மெத்த வந்தவாழ் வுற்று
நடலைப டுத்து மிந்தமா யத்தை நகையாதே
விரையொடு பற்றி வண்டுபா டுற்ற
ம்ருகமத மப்பி வந்தவோ திக்கு
மிளிருமை யைச்செ றிந்தவேல் கட்கும் வினையோடு
மிகுகவி னிட்டு நின்றமா தர்க்கு
மிடைபடு சித்த மொன்றுவே னுற்றுன்
விழுமிய பொற்ப தங்கள்பா டற்கு வினவாதோ

உரையொடு சொற்றெ ரிந்தமூ வர்க்கு
மொளிபெற நற்ப தங்கள்போ தித்து
மொருபுடை பச்சை நங்கையோ டுற்றும் உலகூடே
உறுபலி பிச்சை கொண்டுபோ யுற்று
முவரிவி டத்தை உண்டுசா தித்து
முலவிய முப்பு ரங்கள்வே வித்து முறநாகம்
அரையொடு கட்டி யந்தமாய் வைத்து
மவிர்சடை வைத்த கங்கையோ டொக்க
அழகுதி ருத்தி இந்துமேல் வைத்தும் அரவோடே
அறுகொடு நொச்சி தும்பைமேல் வைத்த
அரியய னித்தம் வந்துபூ சிக்கும்
அரநிம லர்க்கு நன்றிபோ தித்த பெருமாளே.

865. நற்குணமு ளார்தமைப்பொல் மைக்குழலி லேசிறக்க
நற்பரிம ளாதிதுற்ற மலர்சூடி
நச்சுவிழி யால்மயக்கி இச்சைபல பேசியுற்று
நற்பொருள வாமனத்தர் வசமாகி
வெற்பனைய மாதனத்தை பொற்புறவு ருவணைத்து
மெத்தமய லாகிநித்த மெலியாதே
வெட்சிகமழ் நீபபுட்ப வெற்றிசிறு பாதபத்ம
மெய்க்கிருபை நீயளிப்ப தொருநாளே
ரத்தினபூ ஷணநிருத்தன் மெச்சுதனு நாடுமிக்க
லட்சணகு மாரசுப்ர மணியோனே
நற்றிசையு மேறியிட்ட பொய்ச்சமணை வேரறுத்து
நற்றிருநி றேபரப்பி விளையாடும்
சற்சனகு மாரவ்ருத்தி அற்புதசி வாயனுக்கொர்
சற்குருவி நோதசித்ர மயில்வீரா
சக்ரதரன் மார்பகத்தி லுக்ரமுட னேதரித்த
சத்தியடை யாளமிட்ட பெருமாளே.

866. நாகாங்க ரோமங் காட்டி
வாரேந்து நாகங் காட்டி
நாமேந்து பாலங் காட்டி அபிராம

நாணுங்க ராகங் காட்டி
நாகேந்த்ர நீலங் காட்டி
நாயேன்ப்ர காசங் காட்டி மடலூர
மேகாங்க கேசங் காட்டி
வாயாம்பல் வாசங் காட்டி
மீதூர்ந்த போகங் காட்டி உயிரீர்வார்
மேல்வீழ்ந்து தோயுந் தூர்த்தன்
மோகாந்த காரந் தீர்க்க
வேதாந்த தீபங் காட்டி அருள்வாயே
ஏகாந்த வீரம் போற்றி
நீலாங்க யானம் போற்றி
ஏடார்ந்த நீபம் போற்றி முகில்தாவி
ஏருங்க லேழுஞ் சாய்த்த
நான்மூன்று தோளும் போற்றி
யார்வேண்டி னாலுங் கேட்ட பொருளீயும்
த்யாகாங்க சீலம் போற்றி
வாயோய்ந்தி டாதன் றூர்த்து
தேசாங்க சூரன் தோற்க மயிலேறிச்
சேவேந்தி தேசம் பார்க்க
வேலேந்தி மீனம் பூத்த
தேவேந்த்ர லோகங் காத்த பெருமாளே.

867. நாசர்தங் கடையதனில் விரவிநான்
மெத்த நொந்து தடுமாறி
ஞானமுங் கெடவடைய வழுவியா
மூத்த மூந்தி மெலியாதே
மாசகந் தொழுமுனது புகழினோர்
சொற்ப கர்ந்து சுகமேவி
மாமணங் கமழுமிரு கமலபா
தத்தை நின்று பணிவேனோ
வாசகம் புகலவொரு பரமர்தா
மெச்சு கின்ற குருநாதா

வாசகன் தருதிருவை ஒருதெய்வா
 னைக்கி ரங்கு மணவாளா
கீசகஞ் சுரர்தருவு மகிழுமா
 வத்தி சந்து புடைசூழும்
கேசவன் பாவுகுரு மலையில்யோ
 கந்த மர்ந்த பெருமாளே.

868. நாடா பிறப்புமுடி யாதோ வெனக்கருதி
 நாயே மாற்றுமொழி வினையாயின்
நாதா திருச்சபையி னேறு துசித்தமென
 நாலா வகைக்குமென தருள்பேசி
வாடா மலர்ப்பதவி தாதா எனக்குழறி
 வாய்பா றிநிற்குமடி யவரோடு
வாராய் மனக்கவலை தீராய் எனத்தொழுது
 வாரே னெனக்குமெதிர் வரவேணும்
சூடா மணிப்பிரபை ரூபா கனத்தவரி
 சூழா சலத்தியுமை யருள்பாலா
தூயா துதித்தவர்கள் நேயா வெமக்கமிர்த
 தோழா கடப்பமல ரணிவோனே
ஏடார் குழற்சுருபி ஞான தனத்திமிகு
 மேரான் குறத்திதிரு மணவாளா
ஈசா தனிப்புலிசை வாழ்வே சுரத்திரளை
 ஈடே றவைத்தபுகழ் பெருமாளே.

869. நாடித் தேடித் தொழுவார்பால்
 நானத் தாகத் திரிவேனோ
மாடக் கூடற் பதிஞான
 வாழ்வைச் சேரத் தருவாயே
பாடக் காதற் புரிவோர்க்குப்
 பாதத் தேனைத் தருவோனே
ஆடற் றோகைக் கினியோனே
 ஆனைக் காவிற் பெருமாளே.

**870.** நாட்டந் தங்கிக் கொங்கைக் குவடிற் படியாதே
நாட்டுந் தொண்டர்க் கண்டக் கமலப் பதமீவாய்
வாட்டங் கண்டுற் றண்டத் தமரப் படைமீதே
மாற்றந் தந்துப் பந்திச் சமருக் கெதிரானோர்
கூட்டங் கந்திச் சிந்திச் சிதறப் பொருவோனே
கூற்றன் பந்திச் சிந்தைக் குணமொத் தொளிர்வேலா
வேட்டந் தொந்தித் தந்திப் பரனுக் கிளையோனே
வேப்பஞ் சந்திக் கந்தக் குமரப் பெருமாளே.

**871.** நாத விந்துக லாதீந மோநம
வேத மந்த்ரசொ ரூபாந மோநம
ஞான பண்டித சாமீந மோநம வெகுகோடி
நாம சம்புகு மாராந மோநம
போக அந்தரி பாலாந மோநம
நாக பந்தம யூராந மோநம பரசூரர்
சேத தண்டவி நோதாந மோநம
கீத கிண்கிணி பாதாந மோநம
தீர சம்ப்ரம வீராந மோநம கிரிராஜ
தீப மங்கள ஜோதீந மோநம
தூய அம்பல லீலாந மோநம
தேவ குஞ்சரி பாகாந மோநம அருள்தாராய்
ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவேனே
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதேம னோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா
ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதி அந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

872. நாமேவு குயிலாலு மாமார னயிலாலு
நாடோறு மதிகாயும் வெயிலாலும்
நார்மாதர் வசையாலும் வேயூது மிசையாலும்
நாடாசை தருமோக வலையூடே
ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி
லேவாடி விழிமாதர் துயரூடே
ஏகாம லழியாத மேலான பதமீதி
லேகியு னுடன்மேவ அருள்தாராய்
தாமோக முடனூறு பால்தேடி உரலூடு
தானேறி விளையாடும் ஒருபோதில்
தாயாக வருசோதை காணாது களவாடு
தாமோத ரமுராரி மருகோனே
மாமாது வனமாது கார்மேவு சிலைமாது
மாலாகி விளையாடு புயவீரா
வாணாடு புகழ்நாடு தேனூறு புடைசூழு
மாயூர கிரிமேவு பெருமாளே.

873. நாரா லேதோல் நீரா லேயாம்
நாலு வாசற் குடிலூடே
ஞாதா வாயே வாழ்கா லேகாய்
நாய்பேய் சூழ்கைக் கிடமாமுன்
தாரா ரார்தோ வீரா ருனே
சாவா னோர்நற் பெருவாழ்வே
தாழா தேநா யேனு வாலே
தாள்பா டாண்மைத் திறல்தாராய்
பாரே ழோர்தா ளாலே யாள்வோர்
பாவார் வேதத் தயனாரும்
பாழே டேவா னூடே பாரு
டேயூர் பாதத் தினைநாடாச்
சீரார் மாதோ டேவாழ் வார்கீள்
சேவூர் வார்பொற் சடையீசர்
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

**874.** நாரியர்க ளாசையைக் கருதாதே
நானுனிரு பாதபத் மமுநாட
ஆரமுத மானசர்க் கரைதேனே
ஆனவநு பூதியைத் தருவாயே
காரணம தானஉத் தமசீலா
கானகுற மாதினைப் புணர்வோனே
சூரர்கிளை தூளெழப் பொரும்வேலா
தோகைமயில் வாகனப் பெருமாளே.

**875.** நாவி ரண்டித ழாலே கோலிய
ஞால முண்டக மேலே தானிள
ஞாயி றென்றுறு கோலா காலனும் அதின்மேலே
ஞால முண்டபி ராணு தாரனும்
மூல மந்திர யோகா தாரனும்
நாடி நின்றப்ர பாவா காரணு நடுவாக
மேலி ருந்தகி ரீடா பீடமும்
நூல றிந்தம ணீமா மாடமும்
மேத கும்ப்ரபை கோடா கோடியும் இடமாக
வீசி நின்றுள தூபா தீபவி
சால மண்டப மீதே ஏறிய
வீர பண்டித வீரா சாரிய வினைதீராய்
ஆல கந்தரி மோடா மோடிகு
மாரி பிங்கலை நாணு தேசிய
மோகி மங்கலை லோகா லோகியெ உயிர்மேலும்
ஆன சம்ப்ரமி மாதா மாதவி
ஆதி அம்பிகை ஞாதா வானவ
ராட மன்றினி லாடா நாடிய அபிராமி
கால சங்கரி சீலா சீலித்ரி
சூலி மந்த்ரசு பாஷா பாஷணி
காள கண்டிக பாலீ மாலினி கலியாணி
காம தந்திர லீலா லோகினி
வாம தந்திர நூலாய் வாள்சிவ
காம சுந்தரி வாழ்வே தேவர்கள் பெருமாளே.

876. நாலி லங்கதின் மேல்வி நாயகன்
மூவி ரண்டினில் மேவு பூமக
னாத னுந்தச மீது மாலிரு சடமீதே
நாம சங்கர னார்து வாதச
நாலி லங்கதி சேரனு *
* கண்டமிலாட மாயதி நெறிபோய
* * *
* * *
* * * *

மூது ணர்ந்ததி யான பூரண
ஞான முண்டக மீதி லேறிய
மோன சுந்தர யோக நாயக னையாள்வாய்
கால கண்டக லோக பாரண
தாரு கன்பொடி யாக மால்வரை
கால றுந்திட வீறு மாகள முதுபேய்கள்
காக ளங்கட டாரி பேரிகை
தாரை பம்பைம லாரி யாகுளி
காய வண்டமெ லாமு லாவிட விளையாடி
ஆல சுந்தரி காளி யோகினி
பூத சங்கமொ டாட மாதிரை
ஆழி வெந்திட நீடு வேல்விடு முருகோனே
ஆசை கொண்டொரு வேட மோகினி
பாத பங்கய மீது வீழ்தரு
ஆவி னன்குடி மேவு தேவர்கள் பெருமாளே.

877. நாலுசது ரத்த பஞ்சறை மூலகம லத்தி லங்கியை
நாடியின டத்தி மந்திர பந்தியாலே
நாரணபு ரத்தி விந்துவி னூடுறவி ணக்கி நன்சுடர்
நாறிசைந டத்தி மண்டல சந்தியாறில்
கோலமுமு திப்ப கண்டுள நாலிணைம றித்தி தம்பெறு
கோவெனமு ழக்கு சங்கொலி விந்துநாதம்
கூடியமு கப்பி லிந்திர வானவமு தத்தை யுண்டொரு
கோடிநட னப்ப தஞ்சபை என்றுசேர்வேன்

ஆலமல ருற்ற சம்பவி வேரிலிகு லக்கொ ழுந்திலி
ஆரணர்த லைக்க லங்கொளி செம்பொன்வாசி
ஆணவம யக்க முங்கலி காமியம கற்றி யென்றனை
ஆளுமைப ரத்தி சுந்தரி தந்தசேயே
வேலைதையெ டுத்து மிந்திரர் மால்விதிபி ழைக்க வஞ்சகர்
வீடெரிகொ ளுத்தி யெண்கடல் உண்டவேலா
வேதசது ரத்தர் தென்புலி யூருறைமெயா ருத்தி பங்கினர்
வீறுநட னர்க்கி சைந்தருள் தம்பிரானே.

878. நாலு மைந்து வாசல் கீறு
தூறு டம்பு கால்கை யாகி
நாரி யென்பி லாகு மாக மதனூடே
நாத மொன்ற ஆதி வாயில்
நாட கங்க ளான ஆடி
நாட றிந்தி டாம லேக வளராமுன்
நூல நந்த கோடி தேடி
மால்மி குந்து பாரு ளோரை
நூறு செஞ்சொல் கூறி மாறி விளைதீமை
நோய்க லந்த வாழ்வு றாமல்
நீக லந்து ளாகு ஞான
நூல டங்க வோத வாழ்வு தருவாயே
காலன் வந்து பால ணுகி
காய வென்று பாசம் வீசு
காலம் வந்த ஓல மோல மெனுமாதி
காம னைந்து பாண மோடு
வேமி னென்று காணு மோனர்
காள கண்ட ரோடு வேத மொழிவோனே
ஆல மொன்று வேலை யாகி
ஆனை அஞ்சல் திரு மூல
ஆழி அங்கை ஆயன் மாயன் மருகோனே
ஆர ணங்கள் தாளை நாட
வார ணங்கை மேவு மாதி
ஆன செந்தில் வாழ்வ தான பெருமானே.

879. நாவேறு பாம ணத்த பாதார மேனி னைத்து
நாலாறு நாலு பற்று வகையான
நாலாரு மாக மத்தி னூலாய ஞான முத்தி
நாடோறு நான்நி னைத்து நெறியாக
நீவேறெ னாதி ருக்க நான்வேறெ னாதி ருக்க
நேராக வாழ்வ தற்குன் அருள்கூர
நீடார்ஷ டாத ரத்தின் மீதேப ராப ரத்தை
நீகாணெ னாவ னைச்சொல் அருள்வாயே
சேவேறு மீசர் சுற்ற மாஞான போத புத்தி
சீராக வேயு ரைத்த குருநாதா
தேரார்கள் நாடு சுட்ட சூரார்கள் மாள வெட்டு
தீராகு காகு றத்தி மணவாளா
காவேரி நேர்வ டக்கி லேலவாவி பூம ணத்த
காவார்சு வாமி வெற்பின் முருகோனே
கார்போலு மேனி பெற்ற மாகாளி வாலை சத்தி
காமாரி வாமி பெற்ற பெருமாளே.

880. நாளு மிகுத்த கசிவாகி ஞான நிருத்த மதைநாடும்
ஏழை தனக்கும் அநுபூதி ராசி தழைக்க அருள்வாயே
பூளை எருக்கு மதிநாக பூண ரளித்த சிறியோனே
வேளை தனக்கு சிதமாக வேழ மழைத்த பெருமாளே.

881. நிகமமெனி லொன்று மற்று நாடோறு
நெருடுகவி கொண்டு வித்தை பேசிய
நிழலர்சிறு புன்சொல் கற்று வீறுள பெயர்கூறு
நெளியமுது தண்டு சத்ர சாமரம்
நிபிடமிட வந்து கைக்கு மோதிரம்
நெடுகியதி குண்ட லப்ர தாபமும் உடையோராய்
முகமுமொரு சம்ப மிக்க நூல்களும்
முதுமொழியும் வந்தி ருக்கு மோவெனில்
முடிவிலவை ஒன்று மற்று வேறொரு நிறமாகி
முறியுமவர் தங்கள் வித்தை தானிது
முடியவுனை நின்று பத்தி யால்மிக
மொழியும்வளர் செஞ்சொல் வர்க்க மேவா அருள்வாயே

திகுதிகென மண்ட விட்ட தீயொரு
செழியனுடல் சென்று பற்றி யாருகர்
திகையினமண் வந்து விட்ட போதினும் அமையாது
சிறியகர பங்க யத்து நீறொரு
திணையளவு சென்று பட்ட போதினில்
தெளியவுடன் வென்றி விட்ட மோழைகள் கழுவேற
மகிதலம ணைந்த அத்த மாதரை
வரைவறம ணந்து நித்த நீடருள்
வகைதனைய கன்றி ருக்கு மூடனை மலரூபம்
வரவரம ணந்தி கைத்த பாவியை
வழியடிமை கொண்டு மிக்க மாதவர்
வளர்பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே.

882. நிகரில்பஞ்ச பூதமு நினையுநெஞ்சு மாவியு
நெகிழவந்து நேர்படு மவிரோதம்
நிகழ்தரும்ப்ர பாகர நிரவயம்ப ராபர
நிருபவங்கு மாரவெ ளனவேதம்
சகரசங்க சாகர மெனமுழங்கு வாதிகள்
சமயபஞ்ச பாதகர் அறியாத
தனிமைகண்ட தானகிண் கிணியதண்டை சூழ்வன
சரணபுண்ட ரீகம தருள்வாயே
மகரவிம்ப சீகர முகரவங்க வாரிதி
மறுகிவெந்து வாய்விட நெடுவான
வழிதிறந்து சேனையு மெதிர்மலைந்த சூரனு
மடியவிந்தி ராதிபர் குடியேறச்
சிகரதுங்க மால்வரை தகரவென்றி வேல்விடு
சிறுவசந்த்ர சேகரர் பெருவாழ்வே
திசைதொறும்ப்ர பூபதி திசைமுகன்ப ராவிய
திருவிரிஞ்சை மேவிய பெருமாளே.

883. நிணமொடு குருதி நரம்பு மாறிய
தசைகுடல் மிடையு மெலும்பு தோலிவை
நிரைநிரை செறியு முடம்பு நோய்படு முதுகாயம்

நிலைநிலை யுருவ மலங்க ளாவது
நவவொரு யுடைய குரம்பை யாமிதில்
நிகழ்தரு பொழுதில் முயன்று மாதவ முயல்வோரும்
உணர்விலி செபமு தலொன்று தானிலி
நிறையிலி முறையி லியன்பு தானிலி
உயர்விலி யெனினு மெனெஞ்சு தானினை வழியாமுன்
ஒருதிரு மரக ததுங்க மாமிசை
யறுமுக மொளிவி டவந்து நான்மறை
யுபநிட தமதை விளங்க நீயருள் புரிவாயே
புணரியில் விரவி யெழுந்த ஞாயிறு
விலகிய புரிசை யிலங்கை வாழ்பதி
பொலமணி மகுட சிரங்கள் தாமொரு பதுமாறிப்
புவியிடை யுருள முனிந்து கூர்கணை
யுறுசிலை வளைய வலிந்து காடிய
புயலதி விறல ரிவிண்டு மால்திரு மருகோனே
அணிதரு கயிலை நடுங்க வோரெழு
குலகிரி யடைய இடிந்து தூளெழ
அலையெறி யுததி குழம்ப வேல்விடு முருகோனே
அமலைமு னரிய தவஞ்செய் பாடல
வளநகர் மருவி யமர்ந்த தேசிக
அறுமுக குறமக ளன்ப மாதவர் பெருமாளே.

884. நிதிக்குப் பிங்கலன் பதத்துக் கிந்திரன்
நிறத்திற் கந்தனென் றினைவோரை
நிலத்திற் றன்பெரும் பசிக்குத் தஞ்சமென்
றாற்றித் துன்பநெஞ் சினில்நாளும்
புதுச்சொற் சங்கமொன் றுரைத்துச் சங்கடம்
புகட்டிக் கொண்டிடம் பழிமாயும்
புலத்திற் சஞ்சலங் குலைத்திட் டுன்பதம்
புணர்க்கைக் கன்புதந் தருள்வாயே
மதித்துத் திண்புரம் சிரித்துக் கொன்றிடும்
மறத்திற் றந்தைமன் றினிலாடி

மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றுவண்
டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே
குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பொனுங்
கொழித்துக் கொண்டசெந் திலின்வாழ்வே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே.

885. நித்தப் பிணிகொடு மேவிய காயமி
தப்புப் பிருதிவி வாயுவு தேயுவு
நிற்பொற் ககனமொ டாமிவை பூதக லவைமேவி
நிற்கப் படுமுல காளவு மாகரி
டத்தைக் கொளவுமெ நாடிடு மோடிடு
நெட்டுப் பணிகலை பூணிடு நானெனு மடவாண்மை
எத்தித் திரியுமி தேதுபொ யாதென
உற்றுத் தெளிவுண ராதுமெய்ஞ் ஞானமொ
டிச்சைப் படவறி யாதுபொய் மாயையில் உழல்வேனை
எத்திற் கொடுநின தாரடி யாரொடு
முய்த்திட் டுனதரு ளாலுயர் ஞானமு
திட்டுத் திருவடி யாமுயர் வாழ்வுற இனிதாள்வாய்
தத்தத் தனதன தானன தானன
தித்தித் திமிதிமி தீதக தோதக
டத்தக் குடகுகு தாகுட டீகுட வெனபேரிச்
சத்தத் தொலிதிகை தாவிட வானவர்
திக்குக் கெடவரு சூரர்கள் தூள்பட
சர்ப்பச் சதமுடி நாணிட வேலதை எறிவோனே
வெற்றிப் பொடியணி மேனியர் கோகுல
சத்திக் கிடமருள் தாதகி வேணியர்
வெற்புப் புரமது நீறெழ காணியர் அருள்பாலா
வெற்புத் தடமுலை யாள்வளி நாயகி
சித்தத் தமர்கும ராவெனை யாள்கொள
வெற்றிப் புகழ்கரு வூர்தனில் மேவிய பெருமாளே.

886. நித்தமுற் றுனைநினைத்து மிகநாடி
 நிட்டைபெற் றியல்கருத்தர் துணையாக
நத்தியுத் தமதவத்தி னெறியாலே
 லக்யலக் கணநிருத்தம் அருள்வாயே
வெற்றிவிக் ரமவரக்கர் கிளைமாள
 விட்டநத் துகரனுக்கு மருகோனே
குற்றமற் றவருளத்தில் உறைவோனே
 குக்குடக் கொடிதரித்த பெருமாளே.

887. நிமிர்ந்தமுது குங்குனிந்து சிறந்தமுக முந்திரங்கி
 நிறைந்தவயி றுஞ்சரிந்து தடியூணி
நெகிழ்ந்துசட லந்தளர்ந்து விளங்குவிழி யங்கிருண்டு
 நினைந்தமதி யுங்கலங்கி மனையாள்கண்
டுமிழ்ந்துபல ருங்கடிந்து சிறந்தவிய லும்பெயர்ந்து
 உறைந்தஉயி ருங்கழன்று விடுநாள்முன்
உகந்துமன முங்குளிர்ந்து பயன்கொள்தரு மம்புரிந்து
 ஒடுங்கிநினை யும்பணிந்து மகிழ்வேனோ
திமிந்திமென வெங்கணங்கள் குணங்கர்பல வுங்குழும்பி
 திரண்டசதி யும்புரிந்து முதுசூரன்
சிரங்கைமுழு துங்குடைந்து நிணங்கொள்குட லுந்தொளைந்து
 சினங்கழுகொ டும்பெருங்கு ருதிமூழ்கி
அமிழ்ந்திமிக வும்பிணங்கள் அயின்றுமகிழ் கொண்டுமண்ட
 அடர்ந்தஅயில் முன்துரந்து பொருவேளே
அலங்கலென வெண்கடம்பு புனைந்துபுண ருங்குறிஞ்சி
 அணங்கைமண முன்புணர்ந்த பெருமாளே.

888. நிராமய புராதன பராபர வராம்ருத
 நிராகுல சிராதிகப் ப்ரபையாகி
நிராசசி வராஜத வராஜர்கள் பராவிய
 நிராயுத புராரியச் சுதன்வேதா
சுராலய தராதல சராசர பிராணிகள்
 சொரூபமி வராதியைக் குறியாமே
துராலபு பராதின கராவுள பராமுக
 துரோகரை மிகாசையுற் றடைவேனோ

இராகவ இராமன்முன் இராவண இராவண
இராவண இராஜனுட் குடன்மாய்வென்
றிராகன்ம லராணிஜ புராணர்கு மராகலை
இராஜசொ லவாரணர்க் கிளையோனே
விராகவ சுராதிப பொராதுத விராதடு
விராயண பராயணச் செருவூரா
விராவிய குராவகில் பாரைமு திர்வளர்
விராலிம லைராஜதப் பெருமாளே.

889. நிருத ரார்க்கொரு காலா ஜெஜய
சுரர்க ளேத்திடு வேலா ஜெஜய
நிமல னார்க்கொரு பாலா ஜெஜய விறலான
நெடிய வேற்படை யானே ஜெஜய
எனவி ராப்பகல் தானே நான்மிக
நினது தாட்டொழு மாறே தானினி உடனேதான்
தரையி னாழ்த்திரை ஏழே போலெழு
பிறவி மாக்கட லூடே நானுறு
சவலை தீர்த்தன தாளே சூடியுன் அடியார்வாழ்
சபையி னேற்றிமெய்ஞ் ஞான போதமு
மருளி யாட்கொளு மாறே தானது
தமிய னேற்குமு னேநீ மேவுவ தொருநாளே
தருவி னூட்டர சாள்வான் வேணுவி
னுருவ மாய்ப்பல நாளே தானுறு
தவசி னாற்சிவ னீபோய் வானவர் சிறைதீரச்
சகல லோக்கிய மேதா னூறுறு
மசுர பார்த்திப னோடே சேயவர்
தமரை வேற்கொடு நீறு யேபட விழமோதென்
றருள வுற்றம ரோடே போயவ
ருறைபு மாக்கிரி யோடே தானையு
மழிய வீழ்த்தெதிர் சூரோ டேயமர் அடலாகி
அமரில் வீட்டியும் வானோர் தானுறு
சிறையை மீட்டா னார்பால் மேவிய
அதிப ராக்ரம வேளோர் போயமர் பெருமாளே.

890. நிரைதரு மணியணி ஆர்ந்த பூஷித
ம்ருகமத களபகில் சாந்து சேரிய
இளமுலை உரமிசை தோய்ந்து மாமலர் அணைமீதே
நெகிழ்தர அரைதுகில் வீழ்ந்து மாமதி
முகம்வெயர் வெழவிழி பாய்ந்து வார்குழை
யொடுபொர இருகர மேந்து நீள்வளை ஒலிகூர
விரைமலர் செறிகுழல் சாய்ந்து நூபுர
மிசைதர இலவிதழ் மோந்து வாயமு
தியல்பொடு பெருகிய வாஞ்சை யேதக வியல்நாடும்
வினையனை இருவினை ஈண்டு மாழ்கடல்
இடர்படு சுழியிடை தாழ்ந்து போமதி
இருகதி பெறவருள் சேர்ந்து வாழ்வது மொருநாளே
பரையபி னவைசிவை சாம்ப வீயுமை
அகிலமு மருளரு ளேய்ந்த கோமளி
பயிரவி திரிபுரை ஆய்ந்த நூல்மறை சதகோடி
பகவதி இருசுட ரேந்து காரணி
மலைமகள் கவுரிவி தார்ந்த மோகினி
படர்சடை யவனிட நீங்கு ருதவள் தருகோவே
குரைகடல் மறுகிட மூண்ட சூர்க
ளணிகெட நெடுவரை சாய்ந்து தூளெழ
முடுகிய மயில்மிசை ஊர்ந்து வேல்விடு முருகோனே
*குலநறை மலரளி சூழ்ந்து லாவிய
மயிலையி லுறைதரு சேந்த சேவக
குகசர வணபவ வாய்ந்த தேவர்கள் பெருமாளே.

891. நிரைத்த நித்தில நீள்மணி மாலைகள்
பொறுத்த வெற்பிணை மார்முலை மேலணி
நெறித்த நெய்க்குழல் வாள்விழி மாமதி முகமானார்
நெளித்த சிற்றிடை மேல்கலை யாடையை
யுடுத்தி யத்தமு ளோர்தமை யேமயல்
நிரப்பி நித்தமும் வீதியில் நேருறு நெறியாலே

---

*குலநல மலரணி சூழ்ந்து வானள வியபொழி லளிஇசை
கூர்ந்து பாடிய பொழிதமிழ் திகழ்திரு வாஞ்சி மேவிய பெருமாளே.

கரைத்தி தக்குயில் போல்மொழி மாதர்கள்
வலைக்கு ளிற்சுழ லாவகை யேயுன
கழற்று தித்திடு வாழ்வது தான்மன துறமேவிக்
கதித்த பத்திமை சாலடி யார்சபை
மிகுத்தி ழிக்குண பாதக னேனுயர்
கதிக்க டுத்துயர் வாகவு மேயருள் உரையாயோ
வரைத்த நுக்கரர் மாதவ மேவின
ரகத்தி டத்தினில் வாழ்சிவ ஞர்திரு
மணிச்செ விக்குள்மெய்ஞ் ஞானம தோதிய வடிவேலா
மதித்த முத்தமி ழாய்வினர் மேலவ
ருரைத்து ளத்திரு வாசக மானது
மனத்து ளெத்தழ கார்புகழ் வீசிய மணிமாடத்
திரைக்க டற்பொரு காவிரி மாநதி
பெருக்கெ டுத்துமெ பாய்வள நீர்பொலி
செழித்த நெற்செநெல் வாரிக ளேகுவை குவையாகச்
செருக்கு செய்ப்பதி வாழ்முரு காவறம்
வளர்த்த நித்யகல் யாணிக்ரு பாகரி
திருத்த வத்துறை மாநகர் தானுறை பெருமாளே.

892. நிலவில் மார னேறாதை அசைய வீச மாராம
நிழலில் மாட மாமாளி கையின்மேலாம்
நிலையில் வாச மாருத அணையில் மாத ராரோடு
நியதி யாக வாயார வயிறூர
இலவி னூறு தேனூறல் பருகி யார வாமீறி
இளகி ஏறு பாடீர தனபாரம்
எனது மார்பி லேமூழ்க இறுக மேவி மால்கூரு
கினுமு னீப சீபாத மறவேனே
குலவி யோம பாகீர திமிலை நாதர் மாதேவர்
குழைய மாலி காநாக மொடுதாவிக்
குடில கோம ளாகார சடில மோலி மீதேறு
குமர வேட மாதோடு பிரியாது

கல்வி கூறு மீராறு கனக வாகு வேசூரர்
கடகவாரி தூளாக அமராடுங்
கடக போல மால்யானை வனிதை பாக வேல்வீர
கருணைமேரு வேதேவர் பெருமாளே.

**893.** நிலவினி லேதி ரிந்து வகைமல ரேதெ ரிந்து
நிறைகுழல் மீத ணிந்து குழைதாவும்
நிகராறு வேவி னங்கள் வரிதர வாச கங்கள்
நினைவற வேமொ ழிந்து மதனூலின்
கலபம னேக ரங்க ளளவற வேபு ரிந்து
கனியித ழேய ருந்தி அநுராகக்
கலவியி லேமு யங்கி வனிதையர் பால்ம யங்கு
கபடனை யாள உன்றன் அருள்கூராய்
உலகமொ ரேழு மண்டர் உலகமும் ஈசர் தங்கு
முயர்கயி லாய மும்பொன் வரைதானும்
உயிரொடு பூத மைந்து மொருமுத லாகி நின்ற
உமையரு ளால்வ ளர்ந்த குமரேசா
கொலைபுரி சூர னங்க மழிபட வேலெ றிந்த
குமரக டோர வெங்கண் மயில்வீரா
கொடுமுடி யாய்வ ளர்ந்து புயனிலை மீது யர்ந்த
குருமலை மீத மர்ந்த பெருமாளே.

**894.** நிலையாத சமுத்திர மான
சமுசார துறைக்கணின் மூழ்கி
நிசமான தெனப்பல பேசி அதனூடே
நெடுநாளு முழைப்புள தாகிப்
பெரியோர்க ளிடைக்கர வாகி
நினைவால்நி னடித்தொழில் பேணித் துதியாமல்
தலையான உடற்பிணி ஊறிப்
பவநோயி னலைப்பல வேகிச்
சலமான பயித்திய மாகித் தடுமாறித்
தவியாது பிறப்பையு நாடி
அதன்வேரை அறுத்துனை ஓதித்
தலமீது பிழைத்திட வேநின் அருள்தாராய்

கலியாண சுபுத்திர னாகக்
குறமாது தனக்கு விநோதக்
கவினாரு புயத்தினு லாவி விளையாடிக்
களிகூரு முனைத்துணை தேடு
மடியேனு னருட்பெற வேவை
கடனாகு முனக்கரு ளான முருகோனே
பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாது திருப்புகழ் கூறிப்
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே
பதியான திருத்தணி மேவு
சிவலோக மெனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத பெருமாளே.

895\. நிலையாப் பொருளை உடலாக் கருதி
நெடுநாட் பொழுதும் அவமேபோய்
நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள் தடுமாறி
மலநீர்ச் சயன மிசையாய்ப் பெருகி
மடிவேற் குரிய நெறியாக
மறைபோற் றரிய ஒளியாய்ப் பரவு
மலர்தாட் கமலம் அருள்வாயே
கொலைகாட் டவுணர் கெடமாச் சலதி
குளமாய்ச் சுவற முதுசூதம்
குறிபோய்ப் பிளவு படமேற் கதுவு
கொதிவேற் படையை விடுவோனே
அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
அழியாப் புநித வடிவாகும்
அரனார்க் கினிய பொருள்காட் டதிப
அடியார்க் கெளிய பெருமாளே.

896\. நிறுக்குஞ் சூதன மெய்த்தன முண்டைகள்
கருப்பஞ் சாறொடு ரைத்தவு ளுண்டைகள்
நிழற்கண் காணவு ணக்கிம ணம்பல தடவாமேல்

நெருக்கும் பாயலில் வெற்றிலை யின்புறம்
ஒளித்தன் பாகஅ ளித்தபி னிங்கெனை
நினைக்கின் றீரிலை மெச்சலி தஞ்சொலி யெனவோதி
உறக்கண் டாசைவ லைக்குள ழுந்திட
விடுக்கும் பாவிகள் பொட்டிகள் சிந்தனை
யுருக்குந் தூவைகள் செட்டைகு ணந்தனி லுழலாமே
உலப்பின் றூறெனு மக்கர முங்கமழ்
கடப்பந் தாருமு கப்பவை யுந்தினம்
உளத்தின் பார்வையி டத்தினி னைந்திட அருள்வாயே
கறுக்குந் தூயமி டற்றன ருஞ்சிலை
யெடுக்குந் தோளனி றத்தம ரெண்கரி
கடக்குந் தானவ னைக்கொல ரும்புயன் மருகோனே
கனத்தஞ் சாபுரி சிக்கல்வ லஞ்சுழி
திருச்செங் கோடுஇ டைக்கழி தண்டலை
களர்ச்செங் காடுகு றுக்கைபு றம்பயம் அமர்வோனே
சிறுக்கண் கூர்மத அத்திச யிந்தவ
நடக்குந் தேரணி கப்படை கொண்டமர்
செலுத்தும் பாதகன் அக்ரமன் வஞ்சனை யுருவானோன்
செருக்குஞ் சூரக லத்தையி டந்துயிர்
குடிக்குங் கூரிய சத்திய மர்ந்தருள்
திருச்செந் தூர்நக ரிக்குள்வி ளங்கிய பெருமாளே.

897. நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்த ரித்தக ளாலால நேரென
நெடுஞ்சு ருட்குழல் சீமூத நேரென நெஞ்சின்மேலே
நெருங்கு பொற்றன மாமேரு நேரென
மருங்கு நிட்கள ஆகாச நேரென
நிதம்ப முக்கணர் பூணார நேரென நைந்துசீவன்
குறைந்தி தப்பட வாய்பாடி யாதர
வழிந்த ழைத்தணை மேல்வீழு மாலொடு
குமண்டை யிட்டிடை சோராவி டாயில மைந்துநாபி
குடைந்தி ளைப்புறு மாமாய வாழ்வருள்
மடந்தை யர்க்கொரு கோமாள மாகிய
குரங்கைபொத்தழல்வேனோமேனேலபமென்றுசேர்வேன்

மறந்த சுக்ரிப மாநீசன் வாசலி
விருந்து லுத்தநி யோராத தேதுசொல்
மனங்க ளித்திட லாமோது ரோகியுன் முன்புவாலி
வதஞ்செய் விக்ரம சீராம னுனில
மறிந்த திச்சர மோகோகெ டாதினி
வரும்ப டிக்குரை யாய்பார்ப லாகவம் என்றுபேசி
அறந்த ழைத்தநு மானோடு மாகடல்
வரம்ப டைத்ததின் மேலேறி ராவண
னரண்கு லைத்தெதிர் போராடு நாரணன் மைந்தனுன
அநங்கன் மைத்துன வேளேக லாபியின்
விளங்கு செய்ப்பதி *வேலாயு தாவிய
னலங்க யப்பதி வாழ்வான தேவர்கள் தம்பிரானே.

898. நிறைமதி முகமெனும் ஒளியாலே
நெறிவிழி கணைபுரி நிகராலே
உறவுகொள் மடவர்கள் உறவாமோ
உனதிரு வடியினி அருள்வாயே
மறைபயி லரிதிரு மருகோனே
மருவல ரசுரர்கள் குலகாலா
குறமகள் தனைமணம் அருள்வோனே
குருமலை மருவிய பெருமாளே.

899. நினது திருவடி (112-ம் பக்கம் பார்க்க.)

900. நினைத்த தெத்தனையில் தவறாமல்
நிலைத்த புத்திதனைப் பிரியாமல்
கனத்த தத்துவமுற் றழியாமல்
கதித்த நித்தியசித் தருள்வாயே
மனித்தர் பத்தர்தமக் கெளியோனே
மதித்த முத்தமிழிற் பெரியோனே
செனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்த ணிப்பதியிற் பெருமாளே.

*வேலாயு தாவழ கனிந்த பொற்பெரு வேளூரின் மேவிய தம்பிரானே.

**901.** நீதத் துவமாகி நேமத்துணையாகிப்
பூதத் தயவான போதைத்தருவாயே
நாதத் தொனியோனே ஞானக்கடலோனே
கோதற் றமுதான கூடற்பெருமாளே.

**902.** நீதானெத் தனையாலும் நீடூழி க்ருபையாகி
மாதானத் தனமாக மாஞானக் கழல்தாராய்
வேதாமைத் துனவேளே வீராசற் குணசீலா
ஆதாரத் தொளியானே ஆரூரிற் பெருமாளே.

**903.** நீரிழிவு குட்டமீளை வாதமொடு பித்தமூல
நீள்குளிர்வெ துப்புவேறு முளநோய்கள்
நேருறுபு மூக்கள்கூடு நான்முகனெ டுத்தவீடு
நீடியவி ரத்தமூளை தசைதோல்சீ
பாரியந வத்துவார நாறுமும லத்திலாறு
பாய்பிணியி யற்றுபாவை நரிநாய்பேய்
பாருடக ழுக்கள்கூகை தாமிவைபு சிப்பதான
பாழுடலெ டுத்துவீணில் உழல்வேனோ
காரணிய றத்திநாரி ஆறுசம யத்திபூத
நாயகரி டத்துவாமி மகமாயி
நாடகந டத்திகோல நீலவரு ணத்திவேத
நாயகியு மைச்சிநீலி திரிசூலி
வாரணிமு லைச்சிஞான பூரணிக லைச்சிநாக
வாணுதல ளித்தவீர மயிலோனே
மாடமதில் முத்துமேடை கோபுரம ணத்தசோலை
வாகுளகு றட்டிமேவு பெருமாளே.

**904.** நீருநில மண்டாத தாமரைப டர்ந்தோடி
நீளமக லஞ்சோதி வடிவான
நேசமல ரும்பூவை மாதின்மண மும்போல
நேர்மருவி உண்காதல் உடன்மேவிச்
சூரியனு டன்சோம னீழலிவை அண்டாத
சோதிமரு வும்பூமி அவையூடே

தோகைமயி லின்பாக ணுமெனம கிழ்ந்தாட
சோதியயி லுந்தாரும் அருள்வாயே
வாரியகி லங்கூச ஆயிரப ணஞ்சேடன்
வாய்விடவொ டெண்பாலு முடுபோல
வார்மணியு திர்ந்தோட வேகவினி றைந்தாட
மாமயில்வி டுஞ்சேவல் கொடியோனே
ஆரியன வன்தாதை தேடியின மும்பாடு
மாடலரு ணஞ்சோதி அருள்பாலா
ஆனைமுக வன்தேடி யோடியெய ணங்காத
லாசைமரு வுஞ்சோதி பெருமாளே.

905. நீரு மென்பு தோலி னாலு
மாவ தென்கை கால்க ளோடு
நீளு மங்க மாகி மாய உயிரூறி
நேச மொன்று தாதை தாய
ராசை கொண்ட போதில் மேவி
நீதி ஒன்று பால னாகி அழிவாய்வந்
தூரு மின்ப வாழ்வு மாகி
ஊன மொன்றி லாது மாத
ரோடு சிந்தை வேடை கூர உறவாகி
ஊழி யைந்த கால மேதி
யோனும் வந்து பாசம் வீச
ஊனு டம்பு மாயு மாயம் ஒழியாதோ
சூர னண்ட லோக மேன்மை
சூறை கொண்டு போய்வி டாது
தோகை யின்கண் மேவி வேலை விடும்வீரா
தோளி லென்பு மாலை வேணி
மீது கங்கை சூடி யாடு
தோகை பங்க ரோடு சூது மொழிவோனே
பாரை உண்ட மாயன் வேயை
ஊதி பண்டு பாவ லோர்கள்
பாடல் கண்டு ஏகு மாலின் மருகோனே

பாத கங்கள் வேறி நூறி
நீதி யின்சொல் வேத வாய்மை
பாடு மன்பர் வாழ்வ தான பெருமாளே.

906. நீலக்குழ லார்முத்தணி வாய்சர்க்கரை யார்தைப்பிறை
நீளச்சசி யார்பொட்டணி நுதல்மாதர்
நீலக்கய லார்பத்திர வேலொப்பிடு வார்நற்கணி
நேமித்தெழு தாசித்திர வடிவோர்தோள்
ஆலக்கழை யார்துத்திகொ ளாரக்குவ டார்கட்டளை
யாகத்தமி யேனித்தமும் உழல்வேனோ
ஆசைப்பத மேல்புத்திமெய்ஞ் ஞானத்துட னேபத்திர
மாகக்கொள வேமுத்தியை அருள்வாயே
மாலைக்குழ லாளற்புத வேதச்சொரு பாளக்கினி
மார்பிற்பிர காசக்கிரி தனபார
வாசக்குயி லாள்நற்சிவ காமச்செய லாள்பத்தினி
மாணிக்கமி னாள்நிட்கள உமைபாகர்
சூலக்கையி னாக்கினி மேனிப்பர னுக்கொரு
சோதிப்பொருள் கேள்விக்கிடு முருகோனே
சோதிப்பிர காசச்செய லாள்முத்தமிழ் மானைப்புணர்
சோதிப்புலி யூர்நத்திய பெருமாளே.

907. நீலங்கொள் மேகத்தின் சிகிமீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் கடிநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலங்க வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே.

908. நீலநி றத்தொடு நிற்பா ராமதி
ராநிரு பத்தையெ டுப்பா ராமதை
நீளவி ரிப்பது ரைப்பா ராமுரை பகர்வாராம்

நீதிநி கழ்த்திய பைப்பா ராமுயி
ராதனை யுட்புக விற்பா ராமதை
நீள்கென வெற்றிய மைப்பா ராமெழு நடைமேலே

சாலவ ளற்றிலெ டுப்பா ராம்வடி
வாளைவி ரித்துவ ளைப்பா ராமிருள்
சாரும னத்திலொ ளிப்பா ராமய லெமலோகஞ்

சார்புரு வத்துநெ ரிப்பா ராமதி
மேலபுக விட்டுதி ணிப்பா ராமது
தாமது விட்டது தப்பா தேபடர் கொடுபோனற்

காலனெ ருத்தனி ருப்பா னுமிரு
பேருயி ரெட்டைவ ளைப்பா ராமவர்
காணும்வ ழக்கையு ரைப்பா ராமிவன் வெகுபாவி

தானென மெத்தந டப்பா ராமொரு
சூலமெ டுத்துபி டிப்பா ராமிரு
காலைமு றித்துவ டிப்பா ராமுழு கைக்கூடே

ஓலமெ னக்கத மிட்டே பாதகன்
ஆவிப தைக்கவ ருத்தா தேதமிழ்
ஓதிம முத்திய னக்கா ளாகநின் அருள்தாராய்

ஓதிம மெத்தவ னத்தால் மோதிய
தாமரை யொத்தக ரத்தார் வாழ்வளை
யூர்பழ நிப்பதி பெற்றா னேதிரு முருகோனே.

909. நீலமஞ் சானகுழல் மாலைவண் டோடுகதி
நீடுபந் தாடுவிழி யார்பளிங் கானநகை
நீலபொன் சாபநுத லாசையின் தோடசையு
நீள்முகந் தாமரையி னூர்மொழிந் தாரமொழி
நேர்சுகம் பூகமட லானகந் தாரர்புய
நேர்சுணங் காவிகிளை ஏர்சிறந் தார்மலையி ரண்டுபோல

நீளிபங் கோடிளநிர் தேனிருந் தாரமுலை
நீடலங் காரசர மோடடைந் தார்மருவி
நீள்மணஞ் சாறுபொழி மாவளம் போதிவையி
னீலவண் டேவிபநல் காமனங் காரநிறை

நேசசந் தானவல்குல் காமபண் டாரமுதை
நெருசம் போகரிடை நூலொளிர்ந் தாசையுயிர்
சம்பையாரம்

சாலுபொன் தோகையமை பாளிதஞ் சூழ்சரண
தாள்சிலம் போலமிட வேகடந் தானநடை
சாதிசந் தானெனை மார்பரந் தோகையென
தானெழூங் கோலவிலை மாதரின் பார்கலவி
தாவுகொண் டேகலிய நோய்கள்கொண் டேபிறவி
தானடைந் தாழுமடி யேனிடஞ் சாலும்வினை
அஞ்சியோடத்

தார்கடம் பாடுகழல் பாதசெந் தாமரைகள்
தாழ்பெரும் பாதைவழி யேபடிந் தேவருகு
தாபம்விண் டேயமுத வாரியுண் டேபசிகள்
தாபமுந் தீரதுகிர் போல்நிறங் காழ்கொளுரு
சாரவுஞ் சோதிமுரு காவெனுங் காதல்கொடு
தானிருந் தோதஇரு ஓரகம் பேறுபெற
விஞ்சைதாராய்

சூலியெந் தாய்கவுரி மோகசங் காரிகுழை
தோடுகொண் டாடுசிவ காமசுந் தரிநல
ஆளணைந் தாளிநிரு வாணியங் காளிகலை
தோகைசெந் தாமரையின் மாதுநின் றேதுதிசெய்
தூயஅம் பாகழைகொள் தோளிபங் காகிருபை
தோய்பரன் சேயெனவு மேபெரும் பார்புகழும்
விந்தையோனே

சூரசங் காரசுரர் லோகபங் காவறுவர்
தோகைமைந் தாகுமர வேள்கடம் பாரதொடை
தோளகண் டாபரம தேசிகந் தாவமரர்
தோகைபங் காவெனவெ தாகமஞ் சூழ்சுருதி
தோதகம் பாடமலை ஏழுதுண் டாயெழுவர்
சோரிகொண் டாறுவர வேலெறிந் தேதடன
முங்கொள்வேலா

மாலியன் பாறவொரு ஆடகன் சாகமிகு
வாலியும் பாழிமர மோடுகும் பாகனனும்
ஆழியுங் கோரவலி ராவணன் பாறவிடும்
ஆசுகன் கோலமுகி லோனுகந் தோதிடையர்
மாதுடன் கூடிவிளை யாடுசம் போகதிரு
மார்பகன் காணமுடி யோனணங் கானமதி
ஒன்றுமானை

மார்புடன் கோடுதன பாரமுஞ் சேரஇடை
வார்துவண் டாடமுக மோடுகந் தீரரச
வாயிதங் கோதிமணி நூபுரம் பாடமண
வாசைகொண் டாடுமயி லாளிதுங் காகுறவர்
மாதுபங் காமறைகு லாவுசெங் கோடைநகர்
வாழவந் தாய்கரிய மாலயன் தேவர்புகழ்
தம்பிரானே.

910. நீலமயில் சேருமந்தி மாலைநிக ராகியந்த
காரமிக வேகிறைந்த குழலாலும்
நீடுமதி ரேகவின்ப மாகியச லாபசந்த்ர
னேர்தருமு காரவிந்த மதனாலும்
ஆலினிக ரானவுந்தி யாலுமட வார்கள்தங்கள்
ஆசைவலை வீசுகெண்டை விழியாலும்
ஆரமணி பூணணிந்த மார்பின்முலை யாலுநெஞ்சு
ளாகிமயல் நாளுழன்று திரிவேனோ
கோலவுரு வாயெழுந்து பாரதனை யேயிடந்து
கூவிடுமு ராரிவிண்டு திருமார்பன்
கூடமுறை நீடுசெம்பொன் மாமதலை யூடெழுந்த
கோபவரி நாரசிங்கன் மருகோனே
பீலிமயில் மீதுறைந்து சூரர்தமை யேசெயங்கொள்
பேர்பெரிய வேல்கொள்செங்கை முருகோனே
பேடைமட வோதிமங்கள் கூடிவிளை யாடுகின்ற
பேறைநகர் வாழவந்த பெருமாளே.

911. நீல மாமுகில் போலும் வார்குழ
லார்கள் மாலைகு லாவ வேல்கணை
நீள வாள்விழி பார்வை காதிரு குழையாட
நீடு மார்பணி யாட வோடிய
கோடு போலிணை யாட நூலிடை
நேச பாளித சோலை மாமயில் எனவேகிக்
காலி னூபுர வோசை கோவென
ஆடி மால்கொடு நாணி யேவியர்
காய மோடணு பாகு பால்மொழி விலைமாதர்
காத லாயவ ரோடு பாழ்வினை
மூழ்கி யேழ்நர காழு மூடனை
காவ ரோதய மாசி வாபதம் அருள்வாயே
கோல மாமயி லேறி வார்குழை
யாட வேல்கொடு வீர வார்கழல்
கோடி கோடிடி யோசை போல்வட வரைதூளாய்க்
கோகொ கோவென ஆழி பாடுகள்
தீவு தாடசு ரார்கு ழாமொடு
கூள மாகவி ணோர்கள் வாழ்வுற விடும்வேலா
நாலு வேதமு டாடு வேதனை
யீண கேசவ னார்ச கோதரி
நாதர் பாகம்வி டாள்சி காமணி உமைபாலா
ஞான பூமிய தான போர்புவி
யூரில் வாழ்தெய்வ யானை மாதொடு
நாலு கோபுர வாசல் மேவிய பெருமாளே.

912. நீலமுகி லானகுழ லானமட வார்கள்தன
நேயமதி லேதினமு முழலாமல்
நீடுபுவி யாசைபொரு ளாசைமரு ளாகியலை
நீரிலுழல் மீனதென முயலாமற்
காலனது நாவரவ வாயில்விடு தேரையென
காயமரு வாவிவிழ அணுகாமுன்
காதலுட னோதுமடி யார்களுட னடியொரு
கால்முருக வேளெனவு மருள்தாராய்

சோலைபரண் மீதுநிழ லாகதினை காவல்புரி
தோகைகுற மாதினுட னுறவாடிச்
சோரனென நாடிவரு வார்கள்வன வேடர்விழ
சோதிகதிர் வேலுருவு மயில்வீரா
கோலவழல் நீறுபுனை யாதிசரு வேசரொடு
கூடிவிளை யாடுமுமை தருசேயே
கோடுமுக வானைபிற கானதுணை *வாகுழகர்
கோடிநகர் மேவிவளர் பெருமாளே.

913. நீள்புயற் குழல்மாதர் பேரினிற் க்ருபையாகி
நேசமுற் றடியேனும் நெறிகேடாய்
நேமியிற் பொருள்தேடி ஓடியெய்த் துளம்வாடி
நீதியிற் சிவவாழ்வை நினையாதே
பாழினுக் கிரையாய நாமம்வைத் தொருகோடி
பாடலுற் றிடவேசெய் திடுமோச
பாவியெப் படிவாழ்வ னேயர்கட் குளதான
பார்வைசற் றருளோடு பணியாயோ
ஆழியிற் றுயில்வோனு மாமலர்ப் பிரமாவு
மாகமப் பொருளோரும் அனைவோரும்
ஆனைமத் தகவோனும் ஞானமுற் றியல்வோரும்
ஆயிரத் திருநூறு மறையோரும்
†வாழுமுத் தரமேரூர் மேவியற் புதமாக
வாகுசித் திரதோகை மயிலேறி
மாறெனப் பொருசூர னீறெழப் பொரும்வேல
மான்மகட் குளனான பெருமாளே.

914. நூலினை யொத்தம ருங்குல்
தேரினை யொத்தநி தம்பம்
நூபுர மொய்த்தப தங்கள் இவையாலும்

*வாசுருதி கூர்திருநெல் வேலியுறை பெருமாளே.
†வாழுமெய்த் தவர்சூழ்வி ராலிவெற் பினமேவு.

நூறிசை பெற்றப தங்கொள்
மேருவை யொத்தத னங்கள்
நூல்வல்ம லர்ப்பொரு துண்டம் அவையாலும்

சேலினை யொத்திடு கண்க
ளாலும ழைத்திடு பெண்கள்
தேனிதழ் பற்றுமொ ரின்ப வலைமூழ்கிச்

சீலம னைத்துமொ ழிந்து
காமவி தத்தில ழுந்தி
தேறுத வத்தையி ழந்து திரிவேனோ

வாலஇ ளப்பிறை தும்பை
ஆறுக டுக்கைக ரந்தை
வாசுகி யைப்புனை நம்பர் தருசேயே

மாவலி யைச்சிறை மண்ட
ஓரடி யொட்டிய ளந்து
வாளிப ரப்பிஇ லங்கை அரசானோன்

மேல்முடி பத்தும ரிந்து
தோளிரு பத்தும ரிந்து
வீரமி குத்தமு குந்தன் மருகோனே

மேவுதி ருத்தணி செந்தில்
நீள்பழ நிக்குளு கந்து
வேதவ னத்தில மர்ந்த பெருமாளே.

915. நெடிய வடகுவ டிடியவு மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவுமுது பணிபதி
நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்

நிகரில் கலபியும் ரவியுமிழ் துவசமும்
நினது கருணையு முறைதரு பெருமையும்
நிறமு மிளமையும் வளமையு மிருசர ணமுநீப

முடியு மபிநவ வனசரர் கொடியிடை
தளர வளர்வன ம்ருகமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்

மொகுமொ கெனமது காமுரல் குரவணி
முருக னறுமுக னெனவரு வனபெயர்
முழுது மியல்கொடு பழுதற மொழிவதும் ஒருநாளே
கொடிய படுகொலை நிசிசர ருரமொடு
குமுகு மெனவிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குதிகொள விதியோடக்
குமுறு கடல்குடல் கிழிபட வடுமா
மொளுமொ ளெனஅடி யொடலறி விழவுயர்
குருகு பெயரிய வரைதொளை படவிடு சுடர்வேலா
இடியு முழுமலி குலிசமு மிலகிடு
கவள தவளவி கடதட கனகட
இபமு மிரணிய தரணியு முடையதொர் தனியானைக்
கிறைவ குருபர சரவண வெகுமுக
சுகன புனிதையும் வனிதைய ரறுவரும்
எமது மகவென உமைதரு மிமையவர் பெருமாளே.

916. நெய்ச்சிற் றுற்று மைக்கொப் புற்று
நித்தச் சிக்கத் துச்செப் பொத்து
நெறிதரு குழல்மலர் சொருகிடு பரிமள
நிரைநிரை மதுகர நெடிதாடி
நெற்றிச் சுட்டிப் பொட்டுப் பற்றித்
தொட்டுக் கட்டிக் கைக்கட் டிட்டு
நிரைவளை கலகல வெனவரு தெரிவையர்
நெறிதனை மனதினின் மிகநாடி
இச்சைப் பட்டுக் கைக்குட் சிக்கி
எச்சிற் பட்டப் பைக்குட் டொக்கி
இரவொடு பகலொடு இலவிதழ் பருகியும்
இதுதொழி லெனவெதிர் திரிவேனை
எத்திப் புத்திப் பத்திச் சொக்கிட்
டிட்டுக் கட்டிக் கட்டித் தெட்டித்
தெளியிது படியிது வுதவிய குருவென
மருமல ரடியிணை அருள்வாயே

நச்சுக் கட்டித் துப்புக் கொத்து
நச்சத் தத்தைக் கற்பித் திட்டு
நககண தககண செககண செககண
நககண எனவே நடமாடி
நத்தைச் சக்ரத் தைக்கைப் பற்றி
நட்புப் பெற்றுக் கொட்புற் றுற்று
நாகிரி யாகிரி சிவகிரி யெனுமவர்
நறைபெலி யிடவே நலவாசி
வச்ரப் பச்சைக் கற்கட் டிட்டு
வட்டப் பொட்டுக் குட்பொட் டிட்டு
வகைவகை சிலசில மறுவறு துகில்கொடு
வளமது பெறவே நெடுமாடை
வட்டிக் கிட்டுக் கட்டித் தக்க
மக்கட் பெற்றுக் கைக்குட் பற்றி
வாவா வாவா மிகவா மருளிய
வடமலை மருவிய பெருமாளே.

**917.** நெய்த்த சுரிகுழ லறலோ முகிலோ
பத்ம நறுநுதல் சிலையோ பிறையோ
நெட்டை யிணைவிழி கணையோ பிணையோ இனிதூறும்
நெக்க அமுதிதழ் கனியோ துவரோ
சுத்த மிடறது வளையோ கமுகோ
நிற்கு மிளமுலை குடமோ மலையோ அறவேதேய்ந்
தெய்த்த இடையது கொடியோ துடியோ
மிக்க திருவரை அரவோ ரதமோ
இப்பொ னடியிணை மலரோ தளிரோ எனமாலாய்
இச்சை விரகுடன் மடவா ருடனே
செப்ப மருளுட னவமே திரிவேன்
ரத்ந பரிபுர இருகா லொருகால் மறவேனே
புத்த ரமணர்கள் மிகவே கெடவே
தெற்கு நரபதி திருநீ றிடவே
புக்க அனல்புனல் திருவே டிடவே உமையாள்தன்

புத்ர னெனவுரை பகர்வோன் மறைநூல்
கற்ற தவமுனி பிரமா புரம்வாழ்
பொற்பு கவுணியர் பெருமா னுருவாய் வருவோனே

சத்த முடையசண் முகனே குகனே
வெற்பி லெறிசுட ரயிலா மயிலா
சத்தி கணபதி இளையா யுளையாய் ஒளிகூரும்

சக்ர தரஅரி மருகா முருகா
உக்ர இறையவர் புதல்வா முதல்வா
தட்ப முளதட வயலூ ரியலூர் பெருமாளே.

918. நெறித்துப் பொருப்புக் கொத்த
முலைக்குத் தனத்தைக் கொட்டி
நிறைத்துச் சுகித்துச் சிக்கி வெகுநாளாய்

நினைத்துக் கொடுத்துக் கத்தை
அவத்தைக் கடுக்கைப் பெற்று
நிசத்திற் சுழுத்திப் பட்ட அடியேனை

இறுக்கிப் பிடித்துக் கட்டி
உதைத்துத் துடிக்கப் பற்றி
இழுத்துத் துவைத்துச் சுற்றி யமதூதர்

எனக்குக் கணக்குக் கட்டு
விரித்துத் தொகைக்குட் பட்ட
இலக்கப் படிக்குத் தக்க படியேதான்

முறுக்கித் திருப்பிச் சுட்டு
மலத்திற் புகட்டித் திட்டி
முழுக்கக் கலக்கப் பட்டு அலையாமல்

மொழிக்குத் தரத்துக் குற்ற
தமிழ்க்குச் சரித்துச் சித்தி
முகத்திற் களிப்புப் பெற்று மயிலேறி

உறுக்கிச் சினத்துச் சத்தி
அயிற்குத் தரத்தைக் கைக்குள்
உதிக்கப் பணித்துப் பக்கல் வருவாயே

உனைச்சொற் றுதிக்கத் தக்க
கருத்தைக் கொடுத்துச் சித்தி
உடைக்கற் குடிக்குட் பத்தர் பெருமாளே.

919. செற்றிவெ யர்த்துளி துளிக்க வேயிரு
குத்துமு லைக்குட மசைத்து வீதியில்
நிற்பவர் மைப்படர் விழிக்க லாபியர் மொழியாலே
நித்தம யக்கிகள் மணத்த பூமலர்
மெத்தையில் வைத்ததி விதத்தி லேயுடல்
நெட்டிவ ரத்தொழில்கொடுத்து மேவியும் உறவாடி
உற்றவ கைப்படி பொருட்கள் யாவையு
மெத்தவு நட்பொடு பறித்து நாடொறும்
உற்பன வித்தைகள் தொடுக்கு மாதர்கள் உறவாமோ
உச்சித மெய்ப்புற அனைத்த யாவுடன்
மெய்ப்படு பத்தியி னிணக்க மேபெற
உட்குளிர் புத்தியை எனக்கு நீதர வருவாயே
கற்றத மிழ்ப்புல வனுக்கு மேமகிழ்
வுற்றொரு பொற்கொடி களிக்க வேபொரு
கற்பனை நெற்பல அளித்த காரணன் அருள்பாலா
கற்பக கர்க்களி றளித்த மாதனை
பொற்புய மைப்புயல் நிறத்த வானவர்
கட்கிறை உட்கிட அருட்க்ரு பாகர எனநாளும்
நற்றவ ரர்ச்சனை இடத்த யாபர
வத்துவெ னப்புவி இடத்தி லேவளர்
நத்தணி செக்கரன் மகிழ்ச்சி கூர்தரு மருகோனே
நட்டுவர் மத்தள மிலக்க மாமென
மைக்குல மெத்தவு முழக்க மேதரு
நற்பழ நிப்பதி செழிக்க மேவிய பெருமாளே.

920. நேசா சாரா டம்பர மட்டைகள்
பேசா தேயே சுங்கள மட்டைகள்
நீசா ளோடே யும்பழ கிக்கவர் பொருளாலே

நீயே நாளே என்றொரு சத்தியம்
வாய்கூ சாதோ துங்கப டத்திகள்
நோராலேதா னின்றுபி லுக்கிகள் எவர்மேலும்

ஆசாபாசா தொந்தரை இட்டவர்
மேல்வீழ் வார்பால் சண்டிகள் கட்டழ
காயேமீதோ லெங்குமி னுக்கிகள் வெகுமோகம்

ஆகா தாவே சந்தரு திப்பொழு
தோகோ வாவா வென்றுப கட்டிக
ளாகா மோகா வம்பிகள் கிட்டிலும் உறவாமோ

பேசா தேபோய் நின்றுறி யிற்றயிர்
வாயா வாவா வென்றுகு டித்தருள்
போரா லேநீள் கஞ்சன்வி டுத்தெதிர் வருதூது

பேய்வாழ் வேதா ளம்பக டைப்பகு
வாய்நீள் மாறு ளுஞ்சா ளத்தொடு
பேயோ டேபோர் வென்றெதி ரிட்டவன் மருகோனே

மாகூ டாடா டும்பகை யைப்பகை
சூரா ளோடே வன்செரு வைச்செறு
மாகூ ராபா ரெங்கும ருட்பொலி முருகோனே

வாளு டேழ்நா டும்புகழ் பெற்றிடு
தேனு றேசூழ் துங்கம லைப்பதி
மாயூ ராவாழ் குன்றைத லைத்தருள் பெருமாளே.

**921.** பகரு முத்தமிழ்ப் பொருளு மெய்த்தவப்
பயனு மிப்படிப் பலவாழ்வும்

பழைய முத்தியிற் பதமு நட்புறப்
பரவுகற்பகத் தருவாழ்வும்

புகரில் புத்தியுற் றரசு பெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்

புலன கற்றிடப் பலவி தத்தினை
புகழ்ப லத்தினைத் தரவேணும்

தகரி லற்றகைத் தலம்வி டப்பிணைச்
சரவ ணத்தினிற் பயில்வோனே

தனிவ னத்தினிற் புனம றத்தியைத்
கழுவுபொற்புயத் திருமார்பா
சிகர வெற்பினைப் பகிரும் வித்தகத்
திறல யிற்சுடர்க் குமரேசா
செழும லர்ப்பொழிற் குரவ முற்றபொற்
றிருவி டைக்கழிப் பெருமாளே.

922. பகர்தற்கரி தான செந்தமி
ழிசையிற்சில பாட லன்பொடு
பயிலப்பல காவி யங்களை உணராதே
பவளத்தினை வீழி யின்கனி
அதனைப்பொரு வாய்ம டந்தையர்
பசலைத்தன மேபெ றும்படி விரகாலே
சகரக்கடல் சூழு மம்புவி
மிசையிப்படி யேதி ரிந்துழல்
சருகொத்துள மேய யர்ந்துடல் மெலியாமுன்
தகதித்திமி தாகி ணங்கிண
எனவுற்றெழு தோகை யம்பரி
தனிலற்புத மாக வந்தருள் புரிவாயே
நுகர்வித்தக மாகு மென்றுமை
மொழியிற்பொழி பாலை யுண்டிடு
நுவல்மெய்ப்புள பால னென்றிடும் இளையோனே
நுதிவைத்தக ராம லைந்திடு
களிறுக்கரு ளேபு ரிந்திட
கொடியிற்பரி வாக வந்தவன் மருகோனே
அகரப்பொரு ளாகி யொன்றிடு
முதலக்கர மான தின்பொருள்
அரனுக்கினி தாமொ ழிந்திடு குருநாதா
அமரர்க்கிறை யேவ ணங்கிய
பழநித்திரு வாவி னன்குடி
அதனிற்குடி யாயி ருந்தருள் பெருமாளே.

923. பகலவ னொக்குங் கனவிய ரத்நம்
பவளவெண் முத்தந் திரமாகப்
பயிலுமு லக்குன் றுடையவர் சுற்றம்
பரிவென வைக்கும் பணவாசை
அகமகிழ் துட்டன் பகிடிம ருட்கொண்
டழியும வத்தன் குணவீனன்
அறிவிலி சற்றும் பொறையிலி பெற்றுண்
டலைதலொ ழித்தென் றருள்வாயே
சகலரு மெச்சும் பரிமள பத்மந்
தருணப தத்தின் சுரலோகத்
தலைவர்ம கட்குங் குறவர்ம கட்குந்
தழுவஅ ணைக்குந் திருமார்பா
செகதல மெச்சும் புகழ்வய லிக்குந்
திகுதிகெ னப்பொங் கியவோசை
திமிலைத விற்றுந் துமிகள்மு ழக்குஞ்
சிரகிரி நிற்கும் பெருமாளே.

924. பகலி ரவினிற் றடுமாறு
பதிகு ருவெனத் தெளிபோத
ரகசி யமுரைத் தநுபூதி
ரதநி லைதனைத் தருவாயே
இகப ரமதற் கிறையோனே
இயலி சையின்முத் தமிழோனே
சகசி ரகிரிப் பதிவேளே
சரவ ணபவப் பெருமாளே.

925. பகலி ராவினுங் கருவி யால்மனம்
பருகும் ஆவிகொண் டுடல்பேணிப்
பழைய வேதமும் புதிய நூல்களும்
பலபு ராணமுஞ் சிலவோதி
அகல நீளமென் றளவு கூறரும்
பொருளி லேயமைந் தடைவோரை
அசடர் மூடரென் றவல மேமொழிந்
தறிவி லேனழிந் திடலாமோ

சகல லோகமும் புகல நாடொறுஞ்
சறுகி லாதசெங் கழுநீரும்
தளவு நீபமும் புனையு மார்பசெந்
தணிகை மேவுசெங் கதிர்வேலா
சிகர பூதரந் தகர நான்முகன்
சிறுகு வாசவன் சிறைமீளத்
திமிர சாகரங் கதற மாமரஞ்
சிதற வேல்விடும் பெருமாளே.

926\. பகல்மட்கச் செக்கர்ப் ரபைவிடு
நவரத்நப் பத்தித் தொடைநக
நுதிபட்டிட் டற்றுச் சிதறிட இதழூறல்
பருகித்தித் திக்கப் படுமொழி
பதறக்கைப் பத்மத் தொளிவளை
பதறிச்சத் திக்கப் புளகித தனபாரம்
அகலத்திற் றைக்கப் பரிமள
அமளிக்குட் சிக்கிச் சிறுகென
இறுகக்கைப் பற்றித் தழுவிய அநுராக
அவசத்திற் சித்தத் தறிவையு
மிகவைத்துப் பற்றித் தெரிவையர்
வசம்விட்டார்ச் சிக்கைக் கொருபொழு துணர்வேனோ
இகல்வெற்றிச் சத்திக் கிரணமு
முரணிர்த்தப் பச்சைப் புரவியு
மிரவிக்கைக் குக்டத் துவசமு மறமாதும்
இடைவைத்துச் சித்ரத் தமிழ்கொடு
கவிமெத்தச் செப்பிப்பழுதற
எழுதிக்கற் பித்துத் திரிபவர் பெருவாழ்வே
புகலிற்றர்க் கிட்டுப் ரமையுறு
கலகச்செற் றச்சட் சமயிகள்
புகலற்குப் பற்றற் கரியதொ ருபதேசப்
பொருளைக்கற் பித்துக் குருமலை
வருமுக்கட் செக்கர்ச் சடைபுனை
புனிதப்பார்க் கொப்பித் தருளிய பெருமாளே.

927. பகிர நினைவொரு தினையள விலுமிலி
கருணை யிலியுன தருணையொ டுதணியல்
பழநி மலைகுரு மலைபணி மலைபல மலைபாடிப்
பரவு மிடறிலி படிறுகொ டிடறுசொல்
பழகி யழகிலி குலமிலி நலமிலி
பதிமை யிலிபவு ஷதுமிலி மகிமையி லிகுலாலன்
திகிரி வருமொரு செலவினி லெழுபது
செலவு வருமன பவுரிகொ டலமரு
திருக னுருகுத லழுகுதல் தொழுகுதல் நினையாத
திமிர னியல்பிலி யருளிலி பொருளிலி
திருடன் மதியிலி கதியிலி விதியிலி
செயலி லுணர்விலி சிவபத மடைவதும் ஒருநாளே
மகர சலநிதி முறையிட நிசிசரன்
மகுட மொருபது மிருபது திரள்புய
வரையு மறவொரு கணைதெரி புயல்குரு ந்ருபதூதன்
மடுவில் மதகரி முதலென உதவிய
வரத னிருதிறல் மருதொடு பொருதவன்
மதலை குதலையின் மறைமொழி யிகழிர ணியனுகம்
உகிரி னுதிகொடு வகிருமொ ரடலரி
திகிரி தரமர கதகிரி எரியுமிழ்
உரக சுடிகையில் நடநவி லரிதிரு மருகோனே
உருகு மடியவ ரிருவினை இருள்பொரு
முதிய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே.

928. பக்கமுற நேரான மக்களுட னேமாதர்
பத்தியுடன் மேல்மூடி இனிதான
பட்டினுட னேமாலை யிட்டுநெடி தோர்பாடை
பற்றியணை வோர்கூவி அலைநீரிற்
புக்குமுழு காநீடு துக்கமது போய்வேறு
பொற்றியிட வேயாவி பிரியாமுன்
பொற்கழலை நாடோறு முட்பரிவி னாலோது
புத்திநெடி தாம்வாழ்வு புரிவாயே

இக்கனுக வேநாடு முக்கணார்ம காதேவ
　　ரெப்பொருளு மாமீசர் 　　　　　　பெருவாழ்வே
எட்டவரி தோர்வேலை வற்றமுது சூர்மாள
　　எட்டியெதி ரேயேறு 　　　　　　மிகல்வேலா
மக்களொடு வானுடர் திக்கில்முனி வோர்சூழ
　　மத்தமயில் மீதேறி 　　　　　　வருவோனே
வைத்தநிதி போல்நாடி நித்தமடி யார்வாழ
　　வைத்தபடி மாறுத 　　　　　　பெருமாளே.

929. பக்கரை விசித்ரமணி (111-ம் பக்கம் பார்க்க)*

930. பக்குவ வாசார லட்சண சாகாதி
　　பட்சண மாமோன 　　　　　　சிவயோகர்
பத்தியி லாறுறு தத்துவ மேல்வீடு
　　பற்றுநி ராதார 　　　　　　நிலையாக
அக்கண மேமாய துர்க்குணம் வேறாக
　　அற்புத மாஞான 　　　　　　உபதேசம்
அக்கற வாய்பேசு சற்குரு நாதாவுன்
　　அற்புத சீபாத 　　　　　　மறவேனே
உக்கிர வீராறு மெய்ப்புய னேநீல
　　உற்பல வீராசி 　　　　　　மணநாற
ஒத்தநி லாவீசு நித்தில நீராவி
　　உற்பல நீர்வாவி 　　　　　　வயலூரா
பொக்கமி லாவீர விக்ரம மாமேனி
　　பொற்ப்ரபை யாகார 　　　　　　அவிநாசிப்
பொய்க்கலி போமாறு மெய்க்கருள் சீரான
　　புக்கொளி யூர்மேவு 　　　　　　பெருமாளே.

---

*இப்பாடலின் கடைசி மூன்று வரிகட்குப் பதிலாக "விக்கினச மர்த்தன்மகி ழிளையோனே விற்கதிர்ம திச்சடில அப்பரும திக்கவரு வித்தகநற் கொச்சைவளர் பெருமாளே" என்ற பாடங்கொண்டு இப் பாடலைச் சீகாழி முருகன் துதியாகக் கொள்வதுமுண்டு.

931. பங்கமே வும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறி
பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்
தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கைமால் கொண்டிளைத் தயராதே
தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ அன்புவைத் தருள்வாயே
அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்
அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே
திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா பஞ்சரத் துறுதோகை
சிந்தையேய் தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

932. பங்கய னார்பெற் றிடுஞ்ச ராசர
அண்டம தாயுற் றிருந்த பார்மிசை
பஞ்சவர் கூடித் திரண்ட தோர்நர உருவாயே
பந்தம தாகப் பிணிந்த ஆசையில்
இங்கித மாகத் திரிந்து மாதர்கள்
பண்பொழி சூதைக் கடந்தி டாதுழல் படிறுயே
சங்கட னாகித் தளர்ந்து நோய்வினை
வந்துடல் மூடக் கலங்கி டாமதி
தந்தடி யேனைப் புரந்தி டாயுன தருளாலே
சங்கரர் வாமத் திருந்த நூபுர
சுந்தரி யாதித் தருஞ்சு தாபத
தண்டைய னேகுக் குடம்ப தாகையின் முருகோனே
திங்களு லாவப் பணிந்த வேணியர்
பொங்கர வாடப் புனைந்த மார்பினர்
திண்சிலை சூலத் தழுந்து பாணியர் கெடிதாழ்வார்

சிந்துவி லேயுற் றெழுந்த காளவி
டங்கள மீதிற் சிறந்த சோதியர்
திண்புய மீதிற் றவழ்ந்து வீறிய குருநாதா
சிங்கம தாகத் திரிந்த மால்கெரு
வம்பொடி யாகப் பறந்து சீறிய
சிம்புள தாகச் சிறந்த காவென வருகோமுன்
செங்கதி ரோனைக் கடிந்த தீவினை
துஞ்சிட வேநற் றவஞ்செய் தேறிய
தென்கயி லாயத் தமர்ந்து வாழ்வருள் பெருமாளே.

933. பசையற்ற வுடல்வற்ற வினைமுற்றி நடைநெட்டி
பறியக்கை சொறியப்பல் வெளியாகிப்
படலைக்கு விழிகெட்ட குருடுற்று மிகநெக்க
பழமுற்று நரைகொக்கி னிறமாகி
விசைபெற்று வருபித்தம் வளியைக்க ணிலைகெட்டு
மெலிவுற்று விரல்பற்று தடியோடே
வெளிநிற்கும் விதமுற்ற இடர்பெற்ற ஜனனத்தை
விடுவித்து னருள்வைப்ப தொருநாளே
அசைவற்ற நிருதர்க்கு மடிவுற்ற பிரியத்தி
னடல்வஜ்ர கரன்மற்று முளவானோர்
அளவற்ற மலர்விட்டு நிலமுற்று மறையச்செய்
அதுலச்ச மரவெற்றி யுடையோனே
வசையற்று முடிவற்று வனர்பற்றி னளவற்ற
வடிவுற்ற முகில்கிட்ணன் மருகோனே
மதுரச்செ மொழிசெப்பி யருள்பெற்ற சிவபத்தர்
வளர்விர்த்த கிரியுற்ற பெருமாளே.

934. பச்சிலை இட்டுமு கத்தைமி னுக்கிகள்
குத்திர வித்தைமி குத்தச மர்த்திகள்
பப்பா மட்டைகள் கைப்பொருள் பற்றிட நினைவோர்கள்
பத்திநி ரைத்தவ ளத்தர ளத்தினை
ஒத்தந கைப்பில்வி ழிப்பில்ம யக்கிகள்
பட்சமி குத்திட முக்கனி சர்க்கரை இதழூறல்

எச்சி லளிப்பவர் கச்சணி மெத்தையில்
இச்சக மெத்தவு ரைத்தந யத்தொடும்
எத்திய ழைத்துவ ணைத்தும யக்கிடு மடமாதர்
இச்சையி லிப்படி நித்தம னத்துயர்
பெற்றுல கத்தவர் சிச்சியெ னத்திரி
இத்தொழி லிக்குணம் விட்டிட நற்பதம் அருள்வாயே
நச்சர விற்றுயில் பச்சைமு கிற்கரு
ணைக்கடல் பத்மம லர்த்திரு வைப்புணர்
நத்துத ரித்தக ரத்தர்தி ருத்துள வணிமார்பர்
நட்டந டுக்கட லிற்பெரு வெற்பினை
நட்டர வப்பணி சுற்றிம தித்துளம்
நத்தமு தத்தையெ டுப்பிய ளித்தவர் மருகோனே
கொச்சைமொ ழிச்சிக றுத்தவி ழிச்சிசி
றுத்தவி டைச்சிபெ ருத்தத னத்திகு
றத்தித னக்கும னப்பிரிய முற்றிடு குமரேசா
*கொத்தவிழ் பத்மம லர்ப்பழ னத்தொடு
குற்றம றக்கடி கைப்புனல் சுற்றிய
கொட்புள நற்றிரு வக்கரை யுற்றுறை பெருமாளே.

935. பச்சை யொண்கிரி போலிரு மாதன
முற்றி தம்பொறி சேர்குழல் வாளயில்
பற்று புண்டரி காமென ஏய்கயல் விழிஞான
பத்தி வெண்டர ளாமெனும் வாணகை
வித்ரு மஞ்சிலை போல்நுத லாரிதழ்
பத்ம செண்பக மாமனு பூதியின் அழகாளென்
றிச்சையந்தரி பார்வதி மோகினி
தத்தைபொன் கவி ளைவிலை போல்வயி
றிற்ப சுங்கிளி யானமி னாலிடை அபிராமி
எக்கு லங்குடி லோடுல கியாவையு
மிற்ப திந்திரு நாழிநெ லாலற
மெப்பொ தும்பகிர் வாள்கும ராவென உருகேனோ

*கொக்கும ரிக்கும யிற்படை விட்டருள் கொற்றவ சத்திகி ரிப்புனல் சுற்றிய கொட்புள நற்பழ நிப்பதி யுற்றிடு பெருமாளே.

கச்சை யுந்திரு வாளுமி ராறுடை
  பொற்புயங்களும் வேலுமி ராறுள
  கட்சி வங்கம லாமுக மாறுள முருகோனே

கற்ப கந்திரு நாடுயர் வாழ்வுற
  சித்தர்விஞ்சையர் மாகர்ச பாசென
  கட்ட வெங்கொடு சூர்கிளை வேரற விடும்வேலா

நச்சு வெண்பட மீதணை வார்முகில்
  பச்சை வண்புய னார்கரு டாசனர்
  நற்க ரந்தனு கோல்வளை நேமியர் மருகோனே

நற்பு னந்தனில் வாழ்வளி நாயகி
  இச்சை கொண்டொரு வாரண மாதொடு
  நத்தி வந்துந ளாறுறை தேவர்கள் பெருமாளே.

936. பஞ்ச பாதக முறுபிறை எயிறெரி
  குஞ்சி கூர்விட மதர்விழி பிலவக
  பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்

பஞ்ச பாசமு மருவிய கரதல
  மிஞ்சி நீடிய கருமுகி லுருவொடு
  பண்பி லாதொரு பகடது முதுகினில் யமராஜன்

அஞ்ச வேவரு மவதர மதிலொரு
  தஞ்ச மாகியெ வழிவழி அருள்பெறும்
  அன்பி னாலுன தடிபுக ழடிமையென் எதிரேநீ

அண்ட கோளகை வெடிபட இடிபட
  எண்டி சாமுக மடமட நடமிடும்
  அந்த மோகர மயிலினி லியலுடன் வரவேணும்

மஞ்சு போல்வள ரளகமு மிளகிய
  ரஞ்சி தாம்ருத வசனமு நிலவென
  வந்த தூயவெண் முறுவலு மிருகுழை யளவோடும்

மன்றல் நீலமு மழகிய நெடுகிய
  குன்ற வேடுவர் மடமகள் இளமுலை
  மந்த ராசல மிசைதுயி லழகிய மணவாளா

செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை சகலமு மிகல்செய்து
திங்கள் வேணியர் பலதளி தொழுதுயர் மகமேரு
செண்டு மோதின ராசரு ளதிபதி
தொண்ட ராதியும் வழிவழி நெறிபெறு
செந்தில் மாநக ரினிதுறை அமரர்கள் பெருமாளே.

937. பஞ்ச பாதகன் பாவிமுழு மூடன்வெகு
வஞ்ச லோபியன் சூதுகொலை காரன்மதி
பண்கொ ளாதவன் பாவகட லூடுநுழை பவுஷாசா
பங்கன் மோகியம் பாழ்நரகில் வீழவுறு
பெண்டிர் வீடுபொன் தேடிநொடி மீதில்மறை
பஞ்ச மாமலம் பாசமொடு கூடிவெகு சதிகாரர்
அஞ்சு பூதமுண் டாகடிய கோரரிவர்
தங்கள் வாணிபங் காரியம லாமலருள்
அன்பர் பாலுடன் கூடியறி யாதபுகழ் அடியேனை
அண்டர் மாலயன் தேடியறி யாதவொளி
சந்த்ர சேகரன் பாவைவிளை யாடுபடி
கந்த நாடுடன் கூடிவிளை யாடஅருள் புரிவாயே
வஞ்ச மாசுரன் சேனைகட லோடுகுவ
டுண்க வேயினன் போலவொளிர் வேலைவிடு
வண்கை யாடகம் பேடுதொடை யாடுமுடி முருகோனே
மங்கை மோகசிங் காரரகு ராமரிட
தங்கை சூலியங் காளியெமை ஈனுபுகழ்
மங்க ளாயிசங் தானசிவ காமியுமை அருள்பாலா
கொஞ்சு மாசுகம் போலமொழி நீலவிழி
பெண்கள் நாயகந் தோகைமயில் போலிரச
கொங்கை மால்குறம் பாவையவல் தீரவா அணைவோனே
கொண்டல் சூழுமஞ் சோலைமலர் வாவிகயல்
கந்து பாயநின் றுடுதுவர் பாகையுதிர்
கந்தி யோடகஞ் சேர்பழநி வாழ்குமர பெருமாளே.

938. பஞ்சபுல னும்பழைய ரண்டுவினை யும்பிணிகள்
பஞ்செனஎ ரிந்துபொடி யங்கமாகிப்
பண்டறவு டன்பழைய தொண்டர்களு டன்பழகி
பஞ்சவர்வி யன்பதியு டன்குலாவக்
குஞ்சரமு கன்குணமொ டந்தவனம் வந்துலவ
கொஞ்சியசி லம்புகழல் விந்துநாதம்
கொஞ்சமயி லின்புறமேல் வந்தருளி யென்கவலை
கொன்றருள்நி றைந்தகழல் இன்றுதாராய்
எஞ்சியிடை யுஞ்சுழல அம்புவிழி யுஞ்சுழல
இன்பரச கொங்கைகர முங்கொளாமல்
எந்தவுடை சிந்தபல மிஞ்சியமு தம்புரள
இந்துநுத லும்புரள கங்குல்மேகம்
அஞ்சுமள கம்புரள மென்குழைக ளும்புரள
அம்பொனுரு மங்கைமண முண்டபாலா
அன்பர்குல வுந்திருநெ டுங்களவ ளம்பதியி
லண்டரய னும்பரவு தம்பிரானே.

939. பஞ்சுசேர் நிர்த்தப் பதமாதர்
பங்கமார் தொக்கிற் படியாமல்
செஞ்சொல்சேர் சித்ரத் தமிழாலுன்
செம்பொனூ ரத்தைப் பெறுவேனோ
பஞ்சபா ணத்தற் பொருதேவர்
பங்கில்வாழ் சத்திக் குமரேசா
குஞ்சரீ வெற்புத் தனநேயா
கும்பகோ ணத்திற் பெருமாளே.

940. படர்புவியின் மீது மீறி வஞ்சர்கள்
வியனினுரை பானு வாய்வி யந்துரை
பழுதில்பெரு சீல நூல்க ளுந்தெரி சங்கபாடல்
பனுவல்கதை காவி யாதியெ ணெண்கலை
திருவளுவ தேவர் நாலடி என்கிற
பழமொழிகள் ஓதி யேயு ணர்ந்துபல் சந்தமாலை

மடல்பரணி கோவை தூதுக லம்பக
முதலியவ நேக கோடிப்ர பந்தமும்
வகைவகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு

மதுரகவி ராச னூனென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொடு லாவு மால கந்தைத விர்ந்திடாதோ

அடல்பொருது பூச லேவி ளைந்திட
எதிர்பொருவொ ணாம லேக சங்கர
அரகரசி வாம காதே வென்றுனி அன்றுசேவித்

தவனிவெகு கால மாய்வ ணங்கியுள்
உருகிவெகு பாச கோச சம்ப்ரம
அதிபலக டோர மாச லந்தர னொந்துவீழ

உடல்தடியு மாழி தாவெ னம்புய
மலர்கள்தச நூறு தாளி டும்பொழு
தொருமலரி லாம லோர்க ணிடந்திடு செங்கண்மாலுக்

குதவியம கேசர் பால இந்திரன்
மகளைமண மேவி வீறு செந்திலில்
உரியஅடி யேனை ஆள வந்தருள் தம்பிரானே.

941. படிதனி லுறவெனு மனைவர்கள் பரிவொடு
பக்கத் திற்பல கத்திட் டுத்துயர் கொண்டுசாரப்

புனைமர விறகிட அழலிடை உடலது
பற்றக் கொட்டுகள் தட்டிச் சுற்றிடு துன்பமேவிக்

கடிசம னுயிர்தனை இருவிழி அனலது
கக்கச் சிக்கென முட்டிக் கட்டியு டைந்துபோமுன்

சுதிதரு முருகனு மெனநினை பவரொடு
கற்பிற் புக்கறி வொக்கக் கற்பது தந்திடாயோ

வடகிரி தொளைபட அலைகடல் சுவறிட
மற்றெத் திக்கினு மெட்டுத் திக்கினும் வென்றிவாழ

வலியுட னெதிர்பொரு மசுரர்கள் பொடிபட
வட்டத் திட்டியர் வெற்பைக் குத்திம லைந்தவேலா

அடர்சடை மிசைமதி அலைசல மதுபுனை
அத்தற் குப்பொருள் கற்பித் துத்தரு செந்தில்வாழ்வே
அடிமுதன் முடியினும் வடிவொடு தொழுமவு
னத்திற் பத்திகொள் நித்தச் சுத்தர்கள் தம்பிரானே.

942. படிபுனல்நெ ருப்படற் பவனம்வெளி பொய்க்கருப்
பவமுறைய வத்தைமுக் குணநீடு
பயில்பிணிகள் மச்சைசுக் கிலமுதிர மத்திமெய்ப்
பசிபடுநி ணச்சடக் குடில்பேணும்
உடலதுபொ றுத்தறக் கடைபெறுபி றப்பினுக்
குணர்வுடைய சித்தமற் றடிநாயேன்
உழலுமது கற்பலக் கழலிணையெ னக்களித்
துனதுதம ரொக்கவைத் தருள்வாயே
கொடியவொரு குக்குடக் கொடியவடி விற்புனக்
கொடிபடர்பு யக்கிரிக் கதிர்வேலா
குமரசம ரச்சினக் குமரவணி யத்தன்மெய்க்
குமரமகிழ் முத்தமிழ்ப் புலவோனே
தடவிகட மத்தகத் தடவரைய ரத்தர்நத்
தடலனுச வித்தகத் துறையோனே
தருமருவு மெத்தலத் தருமருவ முத்தியைத்
தருதிருவி டைக்கழிப் பெருமாளே.

943. படியையள விடுநெடிய கொண்டலுஞ் சண்டனும்
தமரசது மறையமரர் சங்கமுஞ் சம்புவும்
பரவரிய நிருபன்விர கன்சுடுஞ் சம்பனன்
செம்பொன்மேனிப்
பரமனெழில் புனையுமர வங்களுங் கங்கையுந்
திருவளரு முளரியொடு திங்களுங் கொன்றையும்
பரியகுமி ழறுகுகன தும்பையுஞ் செம்பையுந்
துன்றுமேலைச்
சடைமுடியி லணியுநல சங்கரன் கும்பிடுங்
குமரனறு முகவன்மது ரந்தருஞ் செஞ்சொலன்
சரவணையில் வருமுதலி கொந்தகன் கந்தனென்
றுய்ந்துபாடித்

தணியவொலி புகலும்வித மொன்றிலுஞ் சென்றிலன்
பகிரவொரு தினையளவு பண்புகொண் டண்டிலன்
தவநெறியி லொழுகிவழி பண்படுங் கங்கணஞ்
சிந்தியாதோ

கடுகுபொடி தவிடுபட மந்திரந் தந்திரம்
பயிலவரு நிருதருட லம்பிளந் தம்பரங்
கதறிவெகு குருதிநதி பொங்கிடுஞ் சம்ப்ரமங் கண்டுசேரக்
கழுகுநரி கொடிகருட னங்கெழுந் தெங்குநின்
றலகைபல திமிலைகொடு தந்தனந் தந்தனங்
கருதியிசைபொசியுநசைகண்டுகண்டின்புறுந் துங்கவேலா

அடல்புனையு மிடைமருதில் வந்திலங் குங்குணம்
பெரியகுரு பரகுமர சிந்துரஞ் சென்றடங்
கடவிதனி லுறைகுமரி சந்திலங் குந்தனந் தங்குமார்பா
அருணமணி வெயிலிலகு தண்டையம் பங்கயம்
கருணைபொழி வனகழலி லந்தமுந் தம்பமென்
றழகுபெறநெறிவருடியண்டருந்தொண்டுறுந்தம்பிரானே.

**944.** படிறொ ழுக்கமு மடம னத்துள
படிப ரித்துட னெடிபேசும்
பகடி கட்குள மகிழ மெய்ப்பொருள்
பலகொ டுத்தற உயிர்வாடா
மிடியெ னப்பெரு வடவை சுட்டிட
விதன முற்றிட மிகவாழும்
விரகு கெட்டரு நரகு விட்டிரு
வினைய றப்பதம் அருள்வாயே
கொடியி டைக்குற வடிவி யைப்புணர்
குமர கச்சியில் அமர்வோனே
குரவு செச்சைவெண் முளரி புத்தலர்
குவளை முத்தணி திருமார்பா
பொடிப லப்பட நெடிய விற்கொடு
புரமெ ரித்தவர் குருநாதா
பொருதி ரைக்கடல் நிருத ரைப்படை
பொருது வெற்றிகொள் பெருமாளே.

945. படுகொலை யேமிகுந்து ம்ருகமத பாளிதங்கொள்
பணைமுலை மாதர் தங்கள் மயலாலே
பழியொடு பாவமென்ப தறிவுகொ ளாதுயங்கு
பதகனை யாளவின்று வரவேணும்
கடுவர வேயுளஞ்சி அடிதொழு தோதுமும்பர்
கவலைகொ ளாதிருண்ட களநாதர்
கயிலையில் மேவுகின்ற பரமத யாளநம்பர்
கருதவொர் வாசகஞ்சொல் குருநாதா
கொடுமுடி மேருவஞ்சி அலரிட வேயொர்செண்டு
கொடுபுடை யாவெகுண்ட கரமாறு
குடநிரை வாடல்கண்டு குலகிரி யேவிரிந்த
குடையென மேவுகொண்டல் மருகோனே
திடுதிடெ னுமுழங்கும் அருவிக ளேமிகுந்த
திருமலை வாழ்வுகந்த முருகோனே
திறல்மிகு சூரனஞ்ச வடியயி லாலெறிந்து
செயவணி மார்பணிந்த பெருமாளே.

946. பட்டா டைக்கே பச்சோ லைக்கா
துக்கே பத்தித் தனமாகும்
பக்கே நிட்டூ ரப்பார் வைக்கே
பட்டா சைப்பட் டுறவாடி
ஒட்டார் நட்டார் வட்டா ரத்தே
சுற்றே முற்றத் தடுமாறும்
ஒட்டா ரப்பா விக்கே மிக்கா
முற்றாள் கிட்டத் தகுமோதான்
கட்டா விப்போ துட்டா விப்பூ
கக்கா விற்புக் களிபாடும்
கற்பூர் நச்சா ரக்கா ழித்தோய்
கத்தா சத்தித் தகவோடே
முட்டா கக்கூ ரிட்டே னற்றாள்
முற்றா மற்கொட் குமரேசா
மூத்தா மூத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

947. பட்டுப்ப டாத மதனாலும்
பக்கத்து மாதர் வசையாலும்
சுட்டுச்சு டாத நிலவாலும்
துக்கத்தி லாழ்வ தியல்போதான்
தட்டுப்ப டாத திறல்வீரா
தர்க்கித்த சூரர் குலகாலா
மட்டுப்ப டாத மயிலோனே
மற்றொப்பி லாத பெருமாளே.

948. பட்டுமணிக் கச்சிறுகக்
கட்டியவிழ்த் துத்தரியப்
பத்தியின்முத் துச்செறிவெற் பிணையாமென்
பற்பமுகைக் குத்துமுலைத்
தத்தையர்கைப் புக்குவசப்
பட்டுருகிக் கெட்டவினைத் தொழிலாலே
துட்டனெனக் கட்டனெனப்
பித்தனெனப் ப்ரட்டனெனச்
சுற்றுமறச் சித்தனெனத் திரிவேனைத்
துக்கமறத் துக்கமலப்
பொற்பதம்வைத் துப்பதவிச்
சுத்தியணைப் பத்தரில்வைத் தருள்வாயே
சுட்டபொருட் கட்டியின்மெய்ச்
செக்கமலப் பொற்கொடியைத்
துக்கமுறச் சொர்க்கமுறக் கொடியாழார்
சுத்தாதத் திற்கொடுபுக்
குக்கடுகித் தெற்கடைசிச்
சுற்றுவனத் திற்சிறைவைத் திடுதீரன்
கொட்டமறப் புற்றரவச்
செற்றமறச் சத்தமறக்
குற்றமறச் சுற்றமறப் பலதோளின்
கொற்றமறப் பத்துமுடிக்
கொத்துமறத் திட்டதிறற்
கொற்றர்பணிக் கொட்டைநகர்ப் பெருமாளே.

949. பணிகள் பணமு மணிகொள் துகில்கள்
பழைய அடிமை யொடுமாதும்
பகரி லொருவர் வருக அரிய
பயண மதனில் உயிர்போகக்
குணமு மனமு முடைய கிளைஞர்
குறுகி விறகில் உடல்போடாக்
கொடுமை இடுமு னடிமை அடிகள்
குளிர மொழிவ தருள்வாயே
இணையி லருணை பழநி கிழவ
இளைய இறைவ முருகோனே
எயினர் வயினின் முயலு மயிலை
இருகை தொழுது புணர்மார்பா
அணியொ டமரர் பணிய அசுரர்
அடைய மடிய விடும்வேலா
அறிவு முரமு மறமு நிறமு
மழகு முடைய பெருமாளே.

950. பதித்தசெஞ் சந்தப் பொற்குட நித்தம்
பருத்துயர்ந் தண்டத் திற்றலை முட்டும்
பருப்பதந் தந்தச் செப்பவை யொக்குந் தனபாரம்
படப்புயங் கம்பற் கக்குக டுப்பண்
செருக்குவண் டம்பப் பிற்கய லொக்கும்
பருத்தகண் கொண்டைக் கொக்குமி ருட்டென்
றிளைஞோர்கள்
துதித்துமுன் கும்பிட் டுற்றது நைத்தன்
புவக்கநெஞ் சஞ்சச் சிற்றிடை சுற்றுந்
துகிற்களைந் தின்பத் துர்க்கம ளிக்குங் கொடியார்பால்
துவக்குணும் பங்கப் பித்தன வத்தன்
புவிக்குளென் சிந்தைப் புத்திம யக்கந்
துறக்கநின் தண்டைப் பத்மமெ னக்கென் றருள்வாயே
குதித்துவெண் சங்கத் தைச்சுற வெற்றுங்
கடற்கரந் தஞ்சிப் புக்கவ ரக்கன்
குடற்சரிந் தெஞ்சக் குத்திவி திர்க்குங் கதிர்வேலா

குலக்கரும் பின்சொற் றத்தையி பப்பெண்
தனக்குவஞ் சித்துப் பொச்சையி டைக்குங்
குகுக்குகுங் குங்குக் குக்குகு குக்குங் குகுகூகூ
திதித்திதிந் திந்தித் திந்தியெ னக்கொம்
பதிர்த்துவெண் சண்டக் கட்கம்வி திர்த்துந்
திரட்குவிந் தங்கட் பொட்டெழ வெட்டுங் கொலைவேடர்
தினைப்புனஞ் சென்றிச் சித்தபெ ணைக்கண்
டுருக்கரந் தங்குக் கிட்டிய ணைத்தொண்
திருப்பரங் குன்றிற் புக்குளி ருக்கும் பெருமாளே.

951. பதும விருசாண் கும்பிட் டின்பக்
கலவி நலமிகுந் துங்கக் கொங்கைப்
பகடு புளகிதந் துன்றக் கன்றிக் கயல்போலும்
பரிய கரியகண் செம்பொற் கம்பிக்
குழைகள் பொரமருண் டின்சொற் கொஞ்சிப்
பதற விதமுறுங் கந்தக் கொந்துக் குழல்சாயப்
புதுமை நுதிநகம் பங்கத் தங்கத்
தினிது வரையவெண் சந்தத் திந்துப்
புருவ வெயர்வுடன் பொங்கக் கங்கைச் சடைதாரி
பொடிசெய் தருள்மதன் தந்த்ரப் பந்திக்
கறிவை இழவிடும் பண்புத் துன்பப்
பொருளின் மகளிர்தம் மன்புப் பண்ணைத் தவிரேனோ
திதிதி தததததந் திந்தித் தந்தட்
டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத்
தெனன தனதனந் தெந்தத் தந்தத் தெனனான
திகுர்தி தகிர்ததிந் திந்தித் திந்தித்
திரிரி தரரவென் றெண்டுரப் பின்றித்
திமிலை பறையறைந் தெண்டிக் கண்டச் சுவர்சோரச்
சதியில் வருபெருஞ் சங்கத் தொங்கற்
புயவ சுரர்வெகுண் டஞ்சிக் குஞ்சித்
தலைகொ டடிபணிந் தெங்கட் குன்கட் க்ருபைதாவென்
சமர குமரகஞ் சஞ்சுற் றுஞ்செய்ப்
பதியில் முருகமுன் பொங்கித் தங்கிச்
சலதி அலைபொருஞ் செந்திற் கந்தப் பெருமாளே.

952. பத்தர்க ணப்ரிய நிர்த்தந டித்திடு
பட்சிந டத்திய குகபூர்வ
பச்சிம தக்ஷிண உத்தர திக்குள
பத்தர்க ளற்புத மெனவோதும்
சித்ர மிக்குள சத்திர ரித்தநி
ருப்புக ழைச்சிறி தடியேனைச்
செப்பென வைத்துல கிற்பர ணைத்தெரி
சித்தவ நுக்ரக மறவேனே
சத்தியி லத்திவ னத்தில்மி கக்கிளி
கற்கவ ணிட்டெறி திணைகாவல்
கற்கநி றத்தகு றத்தித னத்தினை
கட்டிய ணைத்தப னிருதோளா
சத்தியை யொக்கவி டத்தினில் வைத்தத
கப்பனு மெச்சிட மறைநூலின்
தத்துவ தற்பர முற்றுமு ணர்த்திய
சர்ப்பகி ரிச்சுரர் பெருமாளே.

953. பத்தித்தர ளக்கொத் தொளிர்வரி
பட்டப்புள கச்செப் பிளமுலை
பட்டிட்டெதிர் கட்டுப் பரதவர் உயர்தாளப்
பத்மத்திய ரற்புக் கடுகடு
கட்சத்தியர் மெத்தத் திரவிய
பட்சத்திய ரிக்குச் சிலையுரு விலிசேருஞ்
சித்தத்தரு ணர்க்குக் கனியத
ரப்புத்தமு தத்தைத் தருமவர்
சித்ரக்கிர ணப்பொட் டிடுபிறை நுதலார்தந்
தெட்டிற்படு கட்டக் கனவிய
பட்சத்தரு ளற்றுற் றுனதடி
சிக்கிட்டிடை புக்கிட் டலைவது தவிராதோ
மத்தப்பிர மத்தக் கயமுக
னைக்குத்திமி தித்துக் கழுதுகள்
மட்டிட்டஇ ரத்தக் குருதியில் விளையாட

மற்றைப்பதி னெட்டுக் கணவகை
சத்திக்கந டிக்கப் பலபல
வர்க்கத்தலை தத்தப் பொருபடை உடையோனே
முத்திப்பர மத்தைக் கருதிய
சித்தத்தினில் முற்றத் தவமுனி
முற்பட்டுமை பெற்றுத் தருகுற மகள்மேல்மால்
முற்றித்திரி வெற்றிக் குருபர
முற்பட்டமு ரட்டுப்புலவனை
முட்டைப்பெயர் செப்பிக் கவிபெறு பெருமாளே.

954. பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே.

955. பத்தே ழெட்டு ரெட்டேழ் ரட்டால்
வைத்தே பத்திப் படவேயும்
பைப்பீ றற்கூ ரைப்பா சத்தா
சற்கா ரத்துக் கிரைதேடி
எத்தே சத்தோ டித்தே சத்தோ
டொத்தேய் சப்தத் திலுமோடி
எய்த்தே நத்தா பற்றா மற்றா
திற்றே முக்கக் கடவேனோ
சத்தே முற்றா யத்தா னைச்சூர்
கற்சா டிக்கற் பணிதேசா
சட்சோ திப்பூ திப்பா லத்தா
அக்கோ டற்செச் சையமார்ப

முத்தா பத்தா ரெட்டா வைப்பா
வித்தா முத்தர்க் கிறையோனே
மூத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

956. பந்தப்பொற் பாரப யோதர
முந்தச்சிற் றுடைசெய் மேகலை
பண்புற்றுத் தாளொடு வீசிய துகிலோடே
பண்டெச்சிற் சேரியில் வீதியில்
கண்டிச்சித் தாரொடு மேவிடு
பங்குக்கைக் காசுகொள் வேசையர் பனிநீர்தோய்
கொந்துச்சிப் பூவணி கோதையர்
கந்தக்கைத் தாமரை யாலடி
கும்பிட்டுப் பாடிசை வீணையர் அநுராகங்
கொண்டுற்றுப் பாயலின் மூழ்கினும்
மண்டிச்சிச் சீயென வானவர்
குன்றப்பொற் பாதக்ரு பாநிதி அருள்வாயே
அந்தத்துக் காதியு மாகியு
மந்திக்குட் டானவ னானவ
னண்டத்தப் பாலுற மாமணி ஒளிவீசும்
அங்கத்தைப் பாவைசெய் தேயுயர்
சங்கத்திற் றேர்தமி ழோதிட
அண்டிக்கிட் டார்கழு வேறினர் ஒருகோடி
சந்தத்திக் காளுநி சாசரர்
வெந்துட்கத் தூளிப டாமெழ
சண்டைச்செற் றார்பட வேவயில் விடுவோனே
*தங்கச்சக் ராயுதர் வானவர்
வந்திக்கப் போரரு ளேதிகழ்
தம்பப்பொற் பூவண மேவிய பெருமாளே.

---

*தங்கச்செக் கோலசை சேவக கொங்கிற்றேக் காரவி நாசியில்
தண்டைச்சிக் காரயில் வேல்விடு பெருமாளே.

957. பந்தாடி அங்கை நொந்தார்ப ரிந்து
  பைந்தார்பு னைந்த குழல்மீதே
 பண்பார்சு ரும்பு பண்பாடு கின்ற
  பங்கேரு கங்கொள் முகமீதே
மந்தார மன்றல் சந்தார மொன்றி
  வன்பாத கஞ்செய் தனமீதே
 மண்டாசை கொண்டு விண்டாவி நைந்து
  மங்காம லுன்றன் அடிதாராய்
கந்தாஅ ரன்றன் மைந்தாவி ளங்கு
  கண்ணாமு குந்தன் மருகோனே
 கண்டோர்பு கழ்ந்த நன்கார்ம டந்தை
  கந்தாவ ரம்பை மணவாளா
செந்தாத டர்ந்த கொந்தார்க டம்பு
  திண்டோள்நி ரம்ப அணிவோனே
 திண்கோட டர்ந்த வெண்கோடு தங்கு
  *செங்கோட மர்ந்த பெருமாளே.

958. பாதவித புண்டரிக பாதத் தாட்டிகள்
  அமுதமொழி யுங்குழுத கீதப் பாட்டிகள்
  பலர்பொருள்க வர்ந்திடைக லாமிட் டோட்டிகள்
   கொடிதாய
 பழுதொழிய அன்புமுடை யாரைப் போற்றிறி
  தழுதழுது கண்பிசையு மாசைக் கூத்திகள்
  பகழியென வந்துபடு பார்வைக் கூற்றினர் ஒருகாம
விரகம்விளை கின்றகழு நீரைச் சேர்த்தகில்
  ம்ருகமதமி குந்தபனி நீரைத் தேக்கியெ
  விபுதர்பதி அங்கதல மேவிச் சாற்றிய தமிழ்நூலின்
 விததிகமழ் தென்றல்வர வீசிக் கோட்டிகள்
  முலைகளில்வி ழுந்துபரி தாபத் தாற்றினில்
  விடியளவு நைந்துருகு வேனைக் காப்பதும் ஒருநாளே

---

*செங்காட மர்ந்த பெருமாளே.

உரகபணை பந்தியபி ஷேகத் தாற்றிய
சகலவுல குந்தரும மோகப் பார்ப்பதி
உடனுருவு பங்குடைய நாகக் காப்பனும் உறிதாவும்
ஒருகளவு கண்டுதெனி கோபத் தாய்க்குல
மகளிர்சிறு தும்புகொடு மோதிச் சேர்த்திடும்
உரலொடுத வழ்ந்தநவ நீதக் கூற்றனும் அதிகோபக்
கரவிகட வெங்கடக போலப் போர்க்கிரி
கடவியபு ரந்தரனும் வேளைப் போற்றுகை
கருமமென வந்துதொழ வேதத் தாற்பர்யம் அறியாத
கடவுளமு னிந்தமர ரூரைக் காத்துயர்
கரவடக்ர வுஞ்சகிரி சாயத் தோற்றெழு
கடலெனவு டைந்தவுண ரோடத் தாக்கிய பெருமாளே.

959\. பரவரி தாகிய வரையென நீடிய
பணைமுலை மீதினி லுருவான
பணிகளு லாவிட இழையிடை சாய்தரு
பயிலிகள் வாள்விழி அயிலாலே
நிரவரி யோடியல் குழல்களி னுள்மலர்
நிரைதரு மூரலின் நகைமீது
நிலவியல் சேர்முக மதிலுயர் மாமயல்
நிலையெழ வேயலை வதுவாமோ
அரவணை யார்குழை பாசிவ ஆரண
அரனிட பாகம துறைசோதி
அமையுமை டாகினி திரிபுரை நாரணி
அழகிய மாதருள் புதல்வோனே
குரவணி பூஷண சரவண தேசிக
குககரு ணாநிதி அமரேசா
குறமக ளாணைமின் மருவிய பூரண
குருகிரி மேவிய பெருமாளே.

960\. பாவி உனதுபொற் காமு முகமுமுத்
தணியு முரமுமெய்ப் ரபையு மருமலர்ப்
பதமும் விரவுகுக் குடமு மயிலுமுட் பரிவாலே

படிய மனதில்வைத் துறுதி சிவமிருத்
தெவரு மகிழ்வுறத் தரும நெறியின்மெய்ப்
பசியில் வருமவர்க் கசன மொருபிடிப் படையாதே
சருவி இனியநட் புறவு சொலிமுகற்
பழகு மவரெனப் பதறி அருகினிற்
சரச விதமளித் துரிய பொருள்பறித் திடுமானர்
தமது ம்ருகமதக் களப புளகிதச்
சயில நிகர்தனத் திணையின் மகிழ்வுறத்
தழுவி அவசமுற் றுருகி மருளெனத் திரிவேனோ
கரிய நிறமுடைக் கொடிய அசுரரைக்
கெருவ மதமொழித் துடல்கள் துணிபடக்
கழுகு பசிகெடக் கடுகி அயில்விடுத் திடுதீரா
கமல அயனுமச் சுதனும் வருணனக்
கினியு நமனுமக் கரியி லுறையுமெய்க்
கணனு மமரரத் தனையு நிலைபெறப் புரிவோனே
இரையு முததியிற் கடுவை மிடறமைத்
துழுவை அதளுடுத் தரவு பணிதரித்
திலகு பெறநடிப் பவர்மு னருளுமுத் தமவேளே
இசையு மருமறைப் பொருள்கள் தினமுரைத்
தவனி தனிலெழிற் கரும முனிவருக்
கினிய கரபுரப் பதியி லறுமுகப் பெருமாளே.

961. பரவு நெடுங்கதி ருலகில் விரும்பிய
பவனி வரும்படி அதனாலே
பகர வளங்களு நிகர விளங்கிய
இருளை விடிந்தது நிலவாலே
வரையினி லெங்கணு முலவி நிறைந்தது
வரிசை தரும்பத மதுபாடி
வளமொடு செந்தமி முரைசெய அன்பரு
மகிழ வரங்களும் அருள்வாயே
அரகர சுந்தர அறுமுக என்றுனி
அடியர் பணிந்திட மகிழ்வோனே

அசலநெ டுங்கொடி உமையமை தன்சுத
குறமக ளிங்கித மணவாளா
கருதரு திண்புய சரவண குங்கும
களபம ணிந்திடு மணிமார்பா
கனக மிருங்பதி மதுரை வளம்பதி
அதனில் வளர்ந்தருள் பெருமாளே.

962. பரவுவரிக் கயல்குவியக்
குயில்கிளியொத் துரைபதறப்
பவளநிறத் ததரம்விளைத் தமுதூறல்
பருகிநிறத் தரளமணிக்
களபமுலைக் குவடசையப்
படைமதனைப் புடைகலவிப் பொதுமாதர்
சொரியுமழைக் குழல்சரியத்
தளர்வுறுசிற் றிடைதுவளத்
துகிலகலக் குபைவிளைவித் தநுராகம்
சொரிமலர்மட் டலரணைபுக்
கதிமதுரக் கலவிதனிற்
சுழலுமனக் கவலையொழித் தருள்வாயே
கருகுநிறத் தசுரன்முடித்
தலையொருபத் தறமுடுகிக்
கணைதொடுமச் சுதன்மருகக் குமரேசா
கயிலைமலைக் கிழவனிடக்
குமரிவிருப் பொடுகருதக்
கவிநிறையப் பெறும்வரிசைப் புலவோனே
திரள்கமுகிற் றலையிடறிப்
பலகதலிக் குலைசிதறிச்
செறிவயலிற் கதிரலையத் திரைமோதித்
திமிதிமெனப் பறையறையப்
பெருகுபுனற் கெடிலநதித்
திருவதிகைப் பதிமுருகப் பெருமாளே.

963. பாவைக் கெத்தனை விசைதூது
பகரற் குற்றவர் எனமாணுன்
மரபுக் குச்சித ப்ரபுவாக
வரமெத் தத்தர வருவாயே
கரடக் கற்பகன் இளையோனே
கலைவிற் கட்குற மகள்கேள்வா
அரனுக் குற்றது புகல்வோனே
அயனைக் குட்டிய பெருமாளே.

964. பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானார்
படையம படையென வஞ்சிக் குங்கட் கடையாலே
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே
மறுகிடு மருளனை இன்புற் றன்புற் றருள்வாயே
அரிதிரு மருகக டம்பத் தொங்கற் றிருமார்பா
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா
செயசெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே.

965. பரிமள மலர்தொடுத் தகில்மண முழுகிமெய்ப்
பாவிய ம்ருகமதக் குழல்மானார்
பருமணி வயிரமுத் திலகிய குழையினிற்
படைபொரு வனவிழிக் கயலாலே
எரியுறு மெழுகெனத் தனிமன மடையநெக்
கினிமையொ டுருகவிட் டவமேயான்
இருவினை நலியமெய்த் திறலுட னறிவுகெட்
டிடர்படு வதுகெடுத் தருள்வாயே
சொரிமத அருவிவிட் டொழுகிய புகர்முகத்
தொடுவளர் கணபதிக் கிளையோனே
துடியிடை ஒருகுறக் குலமயில் தனமணைத்
தருண்மிகு பழநியுற் றிடுவோனே
அரியய னமரருற் றிடுதுய ரறவுடுக்
கையுமொகு மொகுவெனச் சதகோடி
அலகையு முடனடித் திடவடி அயிலெடுத்
தமர்செயு மறுமுகப் பெருமாளே.

966. பரிமள மிகவுள சாந்து மாமத
முருகவிழ் வகைமலர் சேர்ந்து கூடிய
பலவரி அளிதுயில் கூர்ந்து வானுறு முகில்போலே
பரவிய இருள்செறி கூந்தல் மாதர்கள்
பரிபுர மலரடி வேண்டி ஏவிய
பணிவிடை களிலிறு மாந்த கூளனை நெறிபேணா
விரகனை அசடனை வீம்பு பேசிய
விழலனை உறுகலை யாய்ந்தி டாமுழு
வெகுளியை அறிவது போங்க பாடனை மலமாறா
வினையனை உரைமொழி சோர்ந்த பாவியை
விரிவுறு நரகிடை வீழ்ந்த மோடனை
வினவிமு னருள்செய்து பாங்கி னுள்வதும் ஒருநாளே
கருதலர் திரிபுர மாண்டு நீறெழ
மலைசிலை ஒருகையில் வாங்கு நாரணி
கழலணி மலைமகள் காஞ்சி மாநகர் உறைபேதை
களிமயில் சிவனுடன் வாழ்ந்த மோகினி
கடலுடை உலகினை ஈன்ற தாயுமை
கரிவன முறையகி லாண்ட நாயகி அருள்பாலா
முரணிய சமரினில் மூண்ட ராவண
னிடியென அலறிமு னேங்கி வாய்விட
முடிபல திருகிய நீண்ட மாயவன் மருகோனே
முதலொரு குறமகள் நேர்ந்த நூலிடை
இருதன கிரிமிசை தோய்ந்த காமுக
முதுபழ மறைமொழி ஆய்ந்த தேவர்கள் பெருமாளே.

967. பரியகைப் பாசம்விட் டெறியுமக் காலனுட்
பயனுயிர்ப் போயகப் படமோகப்
படியிலுற் றோரெனப் பலர்கள்பற் றுவடற்
படரெரிக் கூடுவிட் டலைநீறிற்
பிரியுமிப் பாதகப் பிறவியுற் றேமிகப்
பிணிகளுக் கேயிளைத் துழல்நாயேன்
பிழைபொறுத் தாயெனப் பழுதறுத் தாள்தனைப்
பிரியமுற் றோதிடப் பெறுவேனோ

கரியமெய்க் கோலமுற் றரியினற் றாமரைக்
கமைவபற் றூசையக் கழலோர்முன்
கலைவகுத் தோதிவெற் பதுதொளைத் தோனியற்
கடவுள்செச் சேவல்கைக் கொடியோனென்
றரியநற் பாடலைத் தெரியுமுற் றோர்கிளைக்
கருணையிற் கோபுரத் துறைவோனே
அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே.

968. பரிவுறு நாரற் றழல்மதி வீசச்
சிலைபொரு காலுற் றதனாலே
பணிபடு சோலைக் குயிலது கூவக்
குழல்தனி யோசைத் தரலாலே
மருவியல் மாதுக் கிருகயல் சோரத்
தனிமிக வாடித் தளராதே
மனமுற வாழத் திருமணி மார்பத்
தருள்முரு காவுற் றணைவாயே
கிரிதனில் வேல்விட் டிருதொளை யாகத்
தொடுகும ராமுத் தமிழோனே
கிளரொளி நாதர்க் கொருமக னாகித்
திருவளர் சேலத் தமர்வோனே
பொருகிரி சூரக் கிளையது மாளத்
தனிமயி லேறித் திரிவோனே
புகர்முக வேழக் கணபதி யாருக்
கிளையவி னோதப் பெருமாளே.

969. பருதி யாய்ப்பனி மதிய மாய்ப்படர்
பாராய் வானாய் நீர்தீ காலா யுடுசாலம்
பலவு மாய்ப்பல கிழமை யாய்ப்பதி
னாலா றேழா மேனா ளாயேழ் உலகாகிச்
சுருதி யாய்ச்சுரு திகளின் மேற்சுட
ராய்வே தாவாய் மாலாய் மேலே சிவமான
தொலைவி லாப்பொரு ளிருள்பு காக்கழல்
சூடா நாடா ஈடே றாதே சுழல்வேனோ

திருத ராட்டிர னுதவு நூற்றவர்
சேனு டாள்வா னுளோர் மூவா றினில்வீழத்
திலக பார்த்தனு முலகு காத்தருள்
சீரா மாறே தேரூர் கோமான் மருகோனே
குருதி வேற்கர நிருத ராக்ஷத
கோபா நீபா கூதா ளாமா மயில்வீரா
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே.

970. பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானார்
பரிக்குந்துற் சரக்கொன்றத்
தினைத்தங்குற் பலப்பண்பைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்
துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனைத்
துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய்
தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்
சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே
திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக்கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன்றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே
செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
திருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே.

971. பருத்தபற் சிரத்தினைக்
குருத்திறற் கரத்தினைப்
பரித்தவப் பதத்தினைப் பரிவோடே
படைத்தபொய்க் குடத்தினைப்
பழிப்பவத் திடத்தினைப்
பசிக்குடற் கடத்தினைப் பயமேவும்
பெருத்தபித் துருத்தனைக்
கருத்திமத் துருத்தியைப்
பிணித்தழுக் குறத்தொடைப் புலனாலும்
பிணித்தவிப் பிணிப்பையைப்
பொறுத்தமிழ்ப் பிறப்பறக்
குறிக்கருத் தெனக்களித் தருள்வாயே
கருத்திலுற் றுரைத்தபத்
தரைத்துணித் திருக்கறக்
கழித்தமெய்ப் பதத்தில்வைத் திடுவீரா
கதித்தநற் றினைப்புனக்
கதித்தநற் குறத்தியைக்
கதித்தநற் றிருப்புயத் தணைவோனே
செருத்தெறுத் தெதிர்த்தமுப்
புரத்துரத் தரக்கரைச்
சிரித்தெரித் தநித்தர்பொற் குமரேசா
சிறப்புறப் பிரித்தறத்
திறத்தமிழ்க் குயர்த்திசைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே.

972. பருவம் பணைத்தி ரண்டு
கரிகொம் பெனத்தி ரண்டு
பவளம் பதித்த செம்பொ னிறமார்பிற்
படரும் கனத்த கொங்கை
மினல்கொந் தளித்து சிந்த
பலவிஞ் சையைப்பு லம்பி அழகான

புருவஞ் சுழற்றி யிந்த்ர
தநுவந் துதித்த தென்று
புளகஞ் செலுத்தி ரண்டு கயல்மேவும்

பொறிகண் சுழற்றி ரம்ப
பரிசம் பயிற்றி மந்த்ர
பொடிகொண் டழிக்கும் வஞ்சர் உறவாமோ

உருவந் தரித்து கந்து
கரமும் பிடித்து வந்து
உறவும் பிடித்த ணங்கை வனமீதே

ஒளிர்கொம் பிணைச்ச வுந்த
ரியவும் பலைக்கொ ணர்ந்து
ஒளிர்வஞ் சியைப்பு ணர்ந்த மணிமார்பா

செருவெங் களத்தில் வந்த
அவுணன் தெறித்து மங்க
சிவமஞ் செழுத்தை முந்த விடுவோனே

தினமுங் களித்து செம்பொ
னுலகந் துதித்தி றைஞ்சு
திருவம் பலத்த மர்ந்த பெருமாளே.

973. பலகாதல் பெற்றிடவு மொருநாழி கைக்குளொரு
பலனேபெ றப்பரவு கயவாலே

பலபேரை மெச்சிவரு தொழிலேசெ லுத்தியுடல்
பதறாமல் வெட்கமறு வகைகூறி

விலகாத லச்சைதணி மலையாமு லைச்சியர்கள்
வினையேமி குத்தவர்கள் தொழிலாலே

விடமேகொ டுத்துவெகு பொருளேப றித்தருளும்
விலைமாதர் பொய்க்கலவி யினிதாமோ

மலையேயெ டுத்தருளு மொருவாள ரக்கனுடல்
வடமேரெ னத்தரையில் விழவேதான்

வகையாவி டுத்தகணை யுடையான்ம கிழ்ச்சிபெறு
மருகாக டப்பமல ரணிமார்பா

சிலகாவி யத்துறைக ளுணர்வோர்ப டித்ததமிழ்
செவியார வைத்தருளு முருகோனே
சிவனார்த மக்குரிய வுபதேச வித்தையருள்
திருவேர கத்தில்வரு பெருமாளே.

974. பலபல தத்துவ மதனையெ ரித்திருள்
பரையர ணப்படர் வடவன லுக்கிரை
படநட னச்சுடர் பெருவெளி யிற்கொள விடமேவிப்
பவனமொ ழித்திரு வழியைய டைத்தொரு
பருதிவ ழிப்பட விடல்கக னத்தொடு
பரிவுகொ ளச்சிவ மயமென முற்றிய பரமூடே
கலகலெ னக்கழல் பரிபுர பொற்பத
வொலிமலி யத்திரு நடனமி யற்றிய
கனகச பைக்குளி லுருகிநி றைக்கட லதின்மூழ்கிக்
கவுரிமி னற்சடை யரனொடு நித்தமொ
டனகச கத்துவம் வருதலு மிப்படி
கழியந லக்கினி நிறமென விற்றுடல் அருள்வாயே
புலையர்பொ டித்தளும் அமணரு டற்களை
நிரையில்க ழுக்களி லுறவிடு சித்திர
புலவனெ னச்சில விருதுப டைத்திடும் இளையோனே
புனமலை யிற்குற மகளய லுற்றொரு
கிழவனெ னச்சுனை தனிலவ ளைப்புய
புளகித முற்றிபம் வரவணை யப்புணர் மணிமார்பா
மலைசிலை பற்றிய கடவுளி டத்துறை
கிழவிய றச்சுக குமரித கப்பனை
மழுவொடு வெட்டிய நிமலிகை பெற்றருள் முருகோனே
மகிழ்பெணை யிற்கரை பொழில்முகில் சுற்றிய
திருவெணெய் நற்பதி புகழ்பெற அற்புத
மயிலின்மி சைக்கொடு திருநட மிட்டுறை பெருமாளே.

975. பவனியுள போது குருவைநினை யார்கள்
பர* * ரையாரே
பணிபவரை வாரு மெனவுமுரை யார்கள்
பழிகளனை கோடி கொலைசேர்வார்

தவசிகளை நூறு பழிமொழிசொல் வார்கள்
தருமவழி மா* * *
தமதிதம தான கவடுசொலி வாடு
தலையொழிய நாளுன் அருள்தாராய்
அவநெறிந டாத தவநெறிவி டாத
அருமுனிவ ராசு நொடிபோதே
அமரர்சிறை மீள அசுரர்கிளை மாள
அழகுபெற வேலை விடுவோனே
கவுரிதரு பால கருணையுள சீல
கபடர்குல கால மயிலோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதும்
கரபுரியில் வீறும் பெருமாளே.

976. பழமை செப்பிய ழைத்துமி தத்துடன்
முறைம சக்கிய ணைத்துந கக்குறி
படஅ ழுத்திமு கத்தைமு கத்துற உறவாடிப்
பதறி எச்சிலை இட்டும ருத்திடு
விரவு குத்திர வித்தைவி ளைப்பவர்
பலவி தத்திலு மற்பரெ னச்சொலு மடமாதர்
அழிதொ ழிற்குவி ழிப்பொடு நத்திய
அசட னைப்பழி உற்றஅ வத்தனை
அடைவு கெட்டபு ரட்டனை முட்டனை அடியேனை
அகில சத்தியு மெட்டுறு சித்தியு
மெளிதெ னப்பெரு வெட்டவெ ளிப்படும்
அருண பொற்பத முற்றிட வைப்பதும் ஒருநாளே
குழிவி ழிப்பெரு நெட்டலை கைத்திரள்
கரண மிட்டுந டித்தமி தப்படு
குலிவி இட்டக ளத்திலெ திர்த்திடும் ஒருசூரன்
குருதி கக்கிய திர்த்துவி ழப்பொரு
நிசிச ரப்படை பொட்டெழ விக்ரம
குலிச சத்தியை விட்டருள் கெர்ச்சித மயில்வீரா

தழையு டுத்தகு றத்திப தத்துணை
வருடி வட்டமு கத்தில தக்குறி
தடவி வெற்றிக தித்தமு லைக்குவ டதன்மீதே
தரள பொற்பணி கச்சுவி சித்திரு
குழைதி ருத்திய ருத்திமி குத்திடு
* தணிம லைச்சிக ரத்திடை உற்றருள் பெருமாளே.

977\. பழிப்பர் வாழ்த்துவர் சிலசில பெயர்தமை
ஒருத்தர் வாய்ச்சுரு ளொருவர்கை உதவுவர்
பணத்தை நோக்குவர் பிணமது தழுவுவர்
அளவளப் பதனாலே
படுக்கை வீட்டினு ளவுடத முதவுவர்
அணைப்பர் கார்த்திகை வருமெனு உறுபொருள்
பறிப்பர் மாத்தையி லொருவிசை வருகென
அவரவர்க் குறவாயே
அழைப்ப ராஸ்திகள் கருதுவ ரொருவரை
முடுக்கி ஓட்டுவ ரழிகுடி அரிவையர்
அலட்டி னாற்பிணை எருதென மயலெனு
நரகினிற் சுழல்வேனோ
அவத்த மாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கியு னடியவ ருடனெனை
அமர்த்தி யாட்கொள மனதினி லருள்செய்து
கதிதனைத் தருவாயே
தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போற்சிவ நெறிதனை அடைவொடு
தகப்ப னார்க்கொரு செவிதனி லுரைசெய்த
முருகவித் தகவேளே
சமர்த்தி னாற்புகழ் சனகியை நலிவுசெய்
திருட்டு ராக்கத னுடலது துணிசெய்து
சயித்த யோத்தியில் வருபவ னரிதிரு
மருமகப் பரிவோனே

---

* தலைமை பெற்றரு ணைப்பதி யிற்றிகழ் பெருமாளே.

செழித்த வேற்றனை அசுரர்க ளுடலது
பிளக்க ஓச்சிய பிறகம ரர்கள்பதி
செலுத்தி ஈட்டிய சுரபதி மகள்தனை
மணமதுற் றிடுவோனே
திறத்தி னுற்பல சமணரை எதிரெதிர்
கழுக்க ளேற்றிய புதுமையை இனிதொடு
திருத்த மாய்ப்புகழ் மதுரையி லுறைதரும்
அறுமுகப் பெருமாளே.

978. பழியுறுசட் டகமான குடிலையெடுத் திழிவான
பகரும்வினைச் செயல்மாதர் தருமாயப்
படுகுழிபுக் கினிதேறும் வழிதடவித் தெரியாது
பழமைபிதற் றிடுலோக முழுமூடர்
உழலும்விருப் புடனோது பலசவலைக் கலைதேடி
யொருபயனைத் தெளியாது விளியாமுன்
உனகமலப் பதநாடி உருகியுளத் தமுதூற
உனதுதிருப் புகழோத அருள்வாயே
தெழியுவரிச் சலராசி மொகுமொகெனப் பெருமேரு
திடுதிடெனப் பலபூதர் விதமாகத்
திமிதிமெனப் பொருசூர னெறுநெறெனப் பலதேவர்
செயசெயெனக் கொதிவேலை விடுவோனே
அழகுதரித் திடுநீப சரவணவுற் பவவேல
அடல்தருகெற் சிதநீல மயில்வீரா
அருணைதிருத் தணிநாக மலைபழநிப் பதிகோடை
அதிபஇடைக் கழிமேவு பெருமாளே.

979. பழுதற ஓதிக் கடந்து பகைவினை தீரத் துறந்து
பலபல யோகத் திருந்து மதராசன்
பரிமள பாணத் தயர்ந்து பனிமட லூர்தற் கிசைந்து
பரிதவி யாமெத் தநொந்து மயல்கூர
அழுதழு தாசைப் படுங்க ணபிநய மாதர்க் கிரங்கி
அவர்விழி பாணத் துநெஞ்சம் அறைபோய்நின்
றழிவது யான்முற் பயந்த விதிவச மோமற்றையுன்ற
னருள்வச மோஇப் ரமந்தெ ரிகிலேனே

எழுதரு வேதத் துமன்றி முழுதினு மாய்நிற் குமெந்தை
　　எனவொரு ஞானக் குருந்தர்　　　　உளமேவும்
இருவுரு வாகித் துலங்கி ஒருகன தூணிற் பிறந்து
　　இரணியன் மார்பைப் பிளந்த　　　　தனியாண்மை
பொழுதிசை யாவிக் ரமன்தன் மருகபு ராரிக் குமைந்த
　　புளகப டீரக் குரும்பை　　　　உடன்மேவும்
புயல்கரி வாழச் சிலம்பின் வனசர மானுக் குகந்து
　　புனமிசை ஓடிப் புகுந்த　　　　பெருமாளே.

980. பற்றநெட் டைப்படைத் துட்டிருட் டைத்தயிர்ப்
　　பத்தைமுட் டிப்படுத்　　　　தயில்மாதர்
பக்கமிட் டுப்பொருட் கொட்குமிட் டப்பரப்
　　பற்றுகெட் டுப்பயிர்க்　　　　களைபோலும்
கற்றகட் டுக்கவிக் கொட்டமொட் டிக்கணைத்
　　திட்டுகத் தத்தினுற்　　　　றகமாயும்
கட்டமற் றுக்கழற் பற்றிமுத் திக்கருத்
　　தொக்கநோக் குக்கணித்　　　　தருள்வாயே
வற்றவட் டக்கடற் கிட்டிவட் டித்துரத்
　　திட்டுமட் டுப்படப்　　　　பொருமாயன்
மற்றுமொப் புத்தரித் தெட்டஎட் டப்புறத்
　　துற்றஅத் தர்க்கருட்　　　　பெருவாழ்வே
செற்றமுற் றச்சினத் திட்டுநெட் டைப்பொருப்
　　பெட்டைமுட் டிச்செருச்　　　　செயும்வேலா
சித்தர்சித் தத்துறப் பற்றிமெத் தப்புகழ்ச்
　　செப்புமுத் தித்தமிழ்ப்　　　　பெருமாளே

981. பனகப் படமி சைந்த முழையிற் றரள நின்று
　　படர்பொற் பணிபு னைந்த　　　　முலைமீதிற்
பரிவற் றெரியு நெஞ்சில் முகிலிற் கரிய கொண்டை
　　படுபுட் பவன முன்றி　　　　லியலாரும்
அனமொத் திடுசி றந்த நடையிற் கிளியி னின்சொல்
　　அழகிற் றனித ளர்ந்து　　　　மதிமோக
மளவிப் புளக கொங்கை குழையத் தழுவி யின்ப
　　அலையிற் றிரிவ னென்று　　　　மறிவேனோ

தனனத் தனன தந்த தனனத் தனன தந்த
தனனத் தனன தந்த தனதானு
தகிடத் தகிட தந்த திமிதத் திமித வென்று
தனிமத் தளமு ழங்க வருவோனே
செநெனற் கழனி பொங்கி திமிலக் கமல மண்டி
செறிநற் கழைதி ரண்டு வளமேவித்
திருநற் சிகரி துங்க வரையைப் பொருவு கின்ற
தில்லைப் பதிய மர்ந்த பெருமாளே.

982. பனிபோ லத்துளி சலவா யுட்கரு
பதின்மா தத்திடை தலைகீழாய்ப்
படிமே விட்டுடல் தவழ்வார் தத்தடி
பயில்வா ருத்தியில் சிலநாள்போய்த்
தனமா தர்க்குழி விழுவார் தத்துவர்
சதிகா ரச்சமன் வருநாளில்
தரியா ரிற்சடம் விடுவா ரிப்படி
தளர்மா யத்துயர் ஒழியாதோ
வினைமா யக்கிரி பொடியா கக்கடல்
விகடா ருக்கிட விடும்வேலா
விதியோ னைச்சது முடிநால் பொட்டெழ
மிகவே குட்டிய குருநாதா
நினைவோர் சித்தமொ டகலா மற்புகு
நிழலாள் பத்தினி மணவாளா
நிதியா மிப்புவி புலியூ ருக்கொரு
நிறைவே பக்தர்கள் பெருமாளே.

983. பனியின் விந்துளி யாகவே கருவினூறும்
அளவி லங்கொரு சூசமாய் மிளகுதுவர்
பனைதெ னங்கனி போலவே பலகனியின் வயிறூகிப்
பருவ முந்தலை கீழதாய் நழுவிநில
மருவி ஒன்பது வாசல்சே ருருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறின் உடனுடி

மனவி தந்தெரி யாமலே மலசலமொ
டுடல்ந கர்ந்தழு தாறியே அணைமுலையின்
மயமயின்றொரு பாலனா யிகமுடைய செயல்மேவி
வடிவ முன்செய்த தீமையா லெயுமுனையும்
ஆறம றந்தக மீதுபோய் அறுதினமு
மனமழிந்துடல் நாறினே னினியுனது கழல்தாராய்
தனன தந்தன தானனா தனதனன
தினன திந்தன தீததோ திகுததிகு
தகுத குந்ததி தாகுதோ வெனமுழவு வளைபேரி
தவில்க ணம்பறை காளமோ டிமிலைதொனி
இனமு முங்கெழு வேலைபோ லதிரபொரு
சமர்மு கந்தனின் மேவியே விருதுசொலும்
அவுணோர்கள்
சினம ழிந்திட தேர்கள்தோ லரிபரிகள்
குருதி எண்டிசை மூடவே அலகைநரி
சிறையி னங்களி கூரவே நகையருளி விடும்வேலா
சிவன்ம கிழ்ந்தரு ளானைமா முகன்மருவி
மனம கிழ்ந்தருள் கூரவோர் கயிலைமகிழ்
திகழ்கு றிஞ்சியின் மாதுமால் மருவுபுகழ் பெருமாளே.

984. பாசத் தால்வலை கட்டிய பொட்டிகள்
நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்
பாரப் பூதர மொத்தத னத்திகள் மிகவேதான்
பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்
சீவிக் கோதிமு டித்தள கத்திகள்
பார்வைக் கேமய லைத்தரு துட்டிகள் ஒழியாத
மாசுற் றேறிய பித்தளை யிற்பணி
நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்
மார்பிற் காதினி லிட்டபி லுக்கிகள் அதிமோக
வாய்வித் தாரமு ரைக்கும பத்திகள்
நேசித் தாரையு மெத்திவ டிப்பவர்
மாயைக் கேமனம் வைத்தத னுட்டினம் அலைவேனோ

தேசிக் கானக முற்றதி னைப்புன
மேவிக் காவல்க வட்கல்சு ழற்றுவள்
சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள் மணவாளா

தேடிப் பாடிய சொற்புல வர்க்கித
மாகத் தூதுசெ லத்தரில் கற்பக
தேவர்க் காதிதி ருப்புக லிப்பதி வருவோனே

ஆசித் தார்மன திற்புகு முத்தம
கூடற் கேவைகை யிற்கரை கட்டிட
ஆளொப் பாயுதிர் பிட்டமு துக்கடி படுவாணே

டாரத் தோடகி லுற்றத ருக்குல
மேகத் தோடொரு மித்துநெ ருக்கிய
ஆதிச் சோலைம லைப்பதி யிற்றிகழ் பெருமாளே.

985. பாட கச்சிலம் போடு செச்சைமணி
கோவெ னக்கலந் தாடு பொற்சரணர்
பாவை சித்திரம் போல்வர் பட்டுடையின் இடைநூலார்

பார பொற்றனம் கோபு ரச்சிகர
மாமெ னப்படர்ந் தேம விப்பரித
பாகு நற்கரும் போடு சர்க்கரையின் மொழிமாதர்

ஏட கக்குலம் சேரு மைக்குழலொ
டாட ளிக்குலம் பாட நற்றெருவி
லேகி புட்குலம் போல பற்பலசொல் இசைபாடி

ஏறி யிச்சகம் பேசி யெத்தியிதம்
வாரு முற்பணம் தாரு மிட்டமென
ஏணி வைத்துவந் தேற விட்டிடுவர் செயலாமோ

சேட னுக்கசண் டாள ரக்கர்குல
மாள அட்டகுன் றேழ லைக்கடல்கள்
சேர வற்றநின் றூட யிற்கரமி ரறுதோள்மேல்

சேணி லத்தர்பொன் பூவை விட்டிருடி
யோர்கள் கட்டியம் பாட எட்டரசர்
சேசெ யொத்தசெந் தாம ரைக்கிழவி புகழ்வேலா

நாட கப்புனங் காவ லுற்றசுக
மோக னத்திமென் தோளி சித்ரவளி
நாய கிக்கிதம் பாடி நித்தமணி புனைவோனே

ஞான வெற்புகந் தாடு மத்தர்தையல்
நாய கிக்குநன் பாக ரக்கணியும்
நாதர் மெச்சவந் தாடு முத்தமருள் பெருமாளே.

986. பாட்டி லுருகிலை கேட்டு முருகிலை
கூற்று வருவழி பார்த்து முருகிலை
பாட்டை யநுதின மேற்று மறிகிலை தினமானம்

பாப்ப ணியனருள் வீட்டை விழைகிலை
நாக்கி னுனிகொடு ஏத்த அறிகிலை
பாழ்த்த பிறவியி லேற்ற மனதுநல் வழிபோக

மாட்ட மெனுகிறை கூட்டை விடுகிலை
யேட்டின் விதிவழி யோட்ட மறிகிலை
பார்த்து மினியொரு வார்த்தை அறைகுவ னிதுகேளாய்

வாக்கு முனதுள நோக்கு மருளுவ
னேத்த புகழடி யார்க்கு மெளியனை
வாழ்த்த இருவினை நீக்கு முருகனை மருவாயோ

ஆட்டி வடவரை வாட்டி யரவொடு
பூட்டி திரிபுர மூட்டி மறலியி
னோட்ட மறசர ணீட்டி மதனுடல் திருநீறாய்

ஆக்கி மகமதை வீட்டி யொருவனை
ஆட்டின் முகமதை நாட்டி மறைமக
ளார்க்கும் வடுவுற வாட்டு முமையவ னருள்பாலா

சீட்டை யெழுதிவை யாற்றி லெதிருற
ஓட்டி யழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொடுகழு வேற்ற அருளிய குருநாதா

தீர்த்த எனதக மேட்டை யுடனினை
வத்த அருளுடன் ஞெக்கி அருளுதி
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமாளே.

987. பாணமல ரதுதைக்கும் படியாலே
பாவிமதி யமெறிக்குங் கனலாலே
நாணமழி யவுரைக்குங் குயிலாலே
நாணுமய லிலிளைக்குந் தரமோதான்
சேணிலரி வையணைக்குந் திருமார்பா
தேவர்மகு டமணக்குங் கழல்வீரா
காணஅரு ணையில்நிற்குங் கதிர்வேலா
காலன்முது கைவிரிக்கும் பெருமாளே.

988. பாணிக்குட் படாது சாதகர்
காணச்சற் றொணாது வாதிகள்
பாஷிக்கத் தகாது பாதக பஞ்சபூத
பாசத்திற் படாது வேறொரு
பாயத்திற் புகாது பாவனை
பாவிக்கப் பெறாது வாதனை நெஞ்சமான
ஏணிக்கெட் டொணாது மீதுயர்
சேணுக்குச் சமான நூல்வழி
ஏறிப்பற் றொணாது நாடினர் தங்களாலும்
ஏதுச்செப் பொணாத தோர்பொருள்
சோரத்துக் கமாம கோததி
ஏறச்செச் சைநாறு தாளைவ ணங்குவேனோ.
ஆணிப்பொற் ப்ரதாப மேருவை
வேவிட்டுக் கடாவி வாசவன்
ஆபத்தைக் கெடாநி சாசரர் தம்ப்ரகாசம்
ஆழிச்சத் ரசாயை நீழலி
லாதித்தப் ரகாச நேர்தர
ஆழிச்சக் ரவாள மாள்தரும் எம்பிரானே
மாணிக்கப் ரவாள நீலம
தாணிப்பொற் கிராதை நூபுர
வாசப்பத் மபாத சேகர சம்புவேதா
வாசிக்கப் படாத வாசகம்
ஈசர்க்குச் சுவாமி யாய்முதல்
வாசிப்பித் ததேசி காசுரர் தம்பிரானே.

989. பாதக மான யாக்கை வாதுசெய் பாவி கோத்த
பாணமும் வாளு மேற்ற        இருபார்வை
பாரப டார மாப்ப யோதர மாதர் வாய்த்த
பாயலின் மீத ணைப்பி        இதமாடும்
சேதக மாய வார்த்தை போதக மாக நோக்கு
தூய்மையில் நாயி னேற்கும்        வினைதீரச்
சூழும ணாதி நீத்த யாமொடு தானி லாச்சு
கோதய ஞான வார்த்தை        அருள்வாயே
சாதன வேத நூற்பு ராதன பூண நூற்ப்ர
ஜாபதி ஆண்மை தோற்க        வரைசாடிச்
சாகர சூர வேட்டை யாடிய வீர வேற்ப்ர
தாபம கீப போற்றி        எனநேமி
மாதவன் மாது பூத்த பாகர னேக நாட்ட
வாசவ னோதி மீட்க        மறைநீப
மாமலர் தூவி வாழ்த்த யானையை மாலை சூட்டி
வானவர் சேனை காத்த        பெருமாளே.

990. பாத நூபுரம் பாடகஞ் சீர்கொள்நடை
யோதி மோகுலம் போலசம் போகமொடு
பாடி பாளிதங் காருகம் பாவையிடை        வஞ்சிபோலப்
பாகு பால்குடம் போலிரண் டானகுவ
டாட நீள்வடஞ் சேரலங் காரகுழல்
பாவ மேகபொன் சாபமிந் தேபொருவ ரந்தமீதே
மாதர் கோகிலம் போல்கரும் பானமொழி
தோகை வாகர்கண் டாரைகொண் டாடிதகை
வாரும் வீடெயென் றேதிதம் பாயல்மிசை
        யன்புளார்போல்
வாசபாசகஞ் சூதுபந் தாடஇழி
வேர்வை பாயசிந் தாகுகொஞ் சாரவிழி
வாகு தோள்காஞ் சேர்வைதந் தாடுமவர்        சந்தமாமோ
தீத தோதகந் தீதிந் தோதிதிமி
டுடு டுடுடுண் டுடுடுண் டுடுடுடு
டகு டகுகம் போலவொண் பேரிமுர சங்கள்வீறச்

சேடன் மேருவுஞ் சூரனுந் தாருகனும்
வீழ ஏழ்தடந் தூளிகொண் டாடமரர்
சேசெ சேசெயென் றூடநின் றூடிவிடு மங்கிவேலா

தாதை காதிலங் கோதுசிங் காரமுக
மாறும் வாகுவுங் கூரசந் தானசுக
தாரி மார்பலங் காரியென் பாவைவளி யெங்கள்மாதைத்

தாரு பாளிதஞ் சோரசிந் தாமணிக
ளாட வேபுணர்ந் தாடிவங் காரமொடு
தாழை வானுயர்ந் தாடுசெந் தூரிலுறை தம்பிரானே.

991. பாதாள மாதி லோக நிகிலமு
மாதார மான மேரு எனவளர்
பாடீர பார மான முலையிணை விலைகூறிப்

பாலோடு பாகு தேனெ னினியசொ
லாலேய நேக மோக மிடுபவர்
பாதாதி கேச மாக வகைவகை கவிபாடும்

வேதாள ஞான ஹீனன் விதரண
நாதானி லாத பாவி அநிஜவன்
வீணாள்ப டாத போத தவமிலி பசுபாச

வ்யாபார மூடன் யானு முனதிரு
சீபாத தூளி ஆகி நரகிடை
வீழாம லேசு வாமி திருவருள் புரிவாயே

தூதாள ரோடு காலன் வெருவிட
வேதாமு ராரி ஓட அடுபடை
சோராவ லாரி சேனை பொடிபட மறைவேள்விச்

சோமாசி மார்சி வாய நமவென
மாமாய வீர கோர முடனிகல்
சூர்மாள வேலை ஏவும் வயலியில் இளையோனே

கூதாள நீப நாக மலர்மிசை
சாதாரி தேசி நாம க்ரியைமுதல்
கோலால நாத கீத மதுகரம் அடர்சோலை

கூராரல் தேருநாரை மருவிய
காணுறு பாயுமேரி வயல்பயில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே.

992. பாதி மதிநதி போது மணிசடை
நாத னருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி அயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி அமரர்கள்
சூழ வலம்வரும் இளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.

993. பாரநறுங்குழல் சோரநெகிழ்ந்துப
டாத னம்புள கிதமாகப்
பாவைய ருந்தியில் மூழ்கிநெ டும்பரி
தாபமு டன்பரி மளவாயின்
ஆரமு துண்டணை மீதிலி ருந்தநு
ராகம்வி ளைந்திட விளையாடி
ஆகந கம்பட ஆரமு யங்கிய
ஆசைம றந்துனை உணர்வேனோ
நாரத னன்றுச காயமொ ழிந்திட
நாயகி பைம்புனம் அதுதேடி
நாணம ழிந்துரு மாறிய வஞ்சக
நாடிய பங்கய பதம்நோவ

மாரச ரம்பட மோகமு டன்குற
 வாணர்கு றிஞ்சியின் மிசையேகி
மானுத வுந்தனி மானைம ணந்துநெல்
 வாயில மர்ந்தருள் பெருமாளே.

994. பாரவித முத்தப்ப டீரபுள கப்பொற்ப
 யோதரநெ ருக்குற்ற இடையாலே
பாகளவு தித்தித்த கீதமொழி யிற்புட்ப
 பாணவிழி யிற்பொத்தி விடுமாதர்
காரணிகு ழற்கற்றை மேல்மகர மொப்பித்த
 காதில்முக வட்டத்தில் அதிமோக
காமுகன கப்பட்ட ஆசையைம றப்பித்த
 கால்கஙைம றக்கைக்கும் வருமோதான்
தேரிரவி உட்கிப்பு காமுதுபு ரத்திற்றெ
 சாசிரனை மர்த்தித்த அரிமாயன்
சீர்மருக அத்புக்ர யானைபடும் ரத்நத்ரி
 கோணசயி லத்துக்ர கதிர்காம
வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு
 மேகலையி டைக்கொத்தின் இருதாளின்
வேரிமழை யிற்பச்சை வேயிலரு ணக்கற்றை
 வேல்களில கப்பட்ட பெருமாளே.

995. பாரியான கொடைக்கொண்ட லேதிரு
 வாழ்விசால தொடைத்திண்பு யாவெழு
 பாருமேறு புகழ்க்கொண்ட நாயக அபிராம
பாவலோர்கள் கிளைக்கென் றும் வாழ்வருள்
 சீலஞால விளக்கின்ப சீவக
 பாகசாத னவுத்துங்க மானத எனவோதிச்
சீரதாக எடுத்தொன் று மாகவி
 பாடிநானு மிரக்கஞ்செ யாதுரை
 சீறுவார்க டையிற்சென் று தாமயர் வுறவீணே
சேயபாலை கையிற் கொண்டு போயறி
 யாமலேக மிரிற்சிந்து வார்சிலர்
 சேயனார்ம னதிற்சிந்தி யாரரு குறலாமோ

ஆருநீர்மை மடுக்கண்க ராநெடு
வாயினேர்ப டவுற்றன் றுமூலமென்
றோலவார மதத்தந்தி தானுய அருள்மாயன்
ஆதிநார ணனற்சங்க பாணியன்
ஓதுவார்க ளுளத்தன்பன் மாதவன்
ஆனநான்மு கனற்றந்தை சீதரன் மருகோனே
வீரசேவ கவுத்தண்ட தேவகு
மாரஆறி ருபொற்செங்கை நாயக
வீசுதோகை மயிற்றுங்க வாகனம் உடையோனே
வீறுகாவி ரியுட்கொண்ட சேகர
னைசேவ கனற்சிந்தை மேவிய
வீரைவாழ்ப ழநித்துங்க வானவர் பெருமாளே.

996\. பாலாய் நூலாய் தேனாய் நீளாய்
பாகாய் வாய்சொற் கொடியார்தாம்
பாடா வாடா வேடா வாலே
பாடா யீடற் றிடைபீறும்
தோலா லேகா லாலே யூனா
லேசூழ் பாசக் குடில்மாசு
தோயா மாயா வோயா நோயால்
சோர்வாய் மாளக் கடவேனோ
ஞாலா மேலா வேதா போதா
நாதா சோதிக் கிரியோனே
ஞானா சாரா வானாள் கோனே
நானா வேதப் பொருளோனே
வேலா பாலா சீலா காரா
வேளே வேடக் கொடிகோவே
வீரா தாரா ஆறா தாரா
வீரா வீரப் பெருமாளே.

997\. பாலோ தேனோ பலவுறு சுளையது
தானோ வானோர் அமுதுகொல் கழைரச
பாகோ வூனோ டுருகிய மகனுண வருஞ்ஞானப்

பாலோ வேறோ மொழியென அடுகொடு
வேலோ கோலோ விழியென முகமது
பானோ வானூர் நிலவுகொ லெனமகண் மகிழ்வேனே

நாலாம் ரூபா கமலஷண் முகவொளி
யேதோ மாதோம் எனதகம் வளரொளி
நானோ நீயோ படிகமொ டொளிரிட மதுசோதி

நாடோ வீடோ நடுமொழி யெனநடு
தூணேர் தோளா சுரமுக கனசபை
நாதா தாதா எனவுரு கிடஅருள் புரிவாயே

மாலாய் வானோர் மலர்மழை பொழியவ
தாரா சூரா எனமுநி வர்கள்புகழ்
மாயா ரூபா அரகர சிவசிவ எனவோதா

வாதா டூரா டவுணரொ டலைகடல்
கோகோ கோகோ எனமலை வெடிபட
வாளால் வேலால் மடிவுசெய் தருளிய முருகோனே

சூலாள் மாலாள் மலர்மகள் கலைமகள்
ஓதார் சீராள் கதிர்மதி குலவிய
தோடாள் கோடா ரிணைமுலை குமரிமுன் அருள்பாலா

தூயா ராயார் இதுசுக சிவபத
வாழ்வா மீனே வதிவமெ னுணர்வொடு
சூழ்சீ ராரூர் மருவிய இமையவர் பெருமாளே.

998. பாலோ தேனோ பாகோ வானோர்
பாரா வாரத் தமுதேயோ
பாரோர் சீரோ வேளேர் வாழ்வோ
பானோ வான்முத் தெனநீளத்
தாலோ தாலே லோபா டாதே
தாய்மார் நேசத் துனுசாரம்
தாரா தேபே ரீயா தேபே
சாதே யேசத் தகுமோதான்
ஆலோல் கேளா மேலோர் நாண்மா
லானோ தேனற் புனமேபோய்

ஆயாள் தாள்மேல் வீழா வாழா
ஆளா வேளைப் புகுவோனே
சேலோ டேசே ரால் சாலார்
சீரா ரூரிற் பெருவாழ்வே
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

999. பால்மொழி படித்துக் காட்டி
ஆடையை நெகிழ்த்துக் காட்டி
பாயலி லிருத்திக் காட்டி அநுராகம்
பாகிதழ் கொடுத்துக் காட்டி
நூல்களை விரித்துக் காட்டி
பார்வைகள் புரட்டிக் காட்டி உறவாகி
மேல்நக மழுத்திக் காட்டி
தோதக விதத்தைக் காட்டி
மேல்விழு நலத்தைக் காட்டு மடவார்பால்
மேவிடு மயக்கைத் தீர்த்து
சீபத நினைப்பைக் கூட்டு
மேன்மையை எனக்குக் காட்டி அருள்வாயே
காலனை உதைத்துக் காட்டி
ஆவியை வதைத்துக் காட்டி
காரணம் விளைத்துக் காட்டி ஒருகாலம்
கானினில் நடித்துக் காட்டி
ஆலமு மிடற்றிற் காட்டி
காமனை எரித்துக் காட்டி தருபாலா
மாலுற திறத்தைக் காட்டி
வேடுவர் புனத்திற் காட்டில்
வாலிபம் விளைத்துக் காட்டும் வயலூரா
மான்மகள் தனத்தைச் சூட்டி
ஏனென அழைத்துக் கேட்டு
வாழ்வுறு சமத்தைக் காட்டு பெருமாளே.

1000. பாவ நாரிகள் மாமட மாதர் வீணிக ளாணவ
பாவை யாரிள நீரன முலையாலும்
பார்வை யாமிரு கூரயி லாலு மாமணி யார்குழை
பார கார்ன வார்குழல் அதனாலும்
சாவ தாரவி தாரமு தார்த ராவித மூரலித
சாத மூரலி தாமதி முகமாலும்
சார்வ தாவடி யேனிடர் வீற மாலறி வேமிகு
சார மாயதி லேயுறல் ஒழிவேனோ
ஆவ வார்வன நான்மறை ஆதிமூலப ராவரி
யாதி காணரி தாகிய பரமேச
ஆதி யாரருள் மாமுருகேச மால்மருகேசுர
ஞாதி தேவர்க ளியாவர்கள் பணிபாத
கோவதாமறை யோர்மறை யோது மோதம்வி மூரவொலி
கோடி யாகம மாவொலி மிகவீறும்
கோவை மாநகர் மேவிய வீர வேலயி லாயுத
கோதையானையி னோடமர் பெருமாளே.

1001. பாற்றுக் கணங்கள் தின்று தேக்கிட் டிடுங்கு ரம்பை
நோக்கிச் சுமந்து கொண்டு பதிதோறும்
பார்த்துத் திரிந்து மூன்று ஆக்கத் தையுந்தெ ரிந்து
ஏக்கற்று நின்று நின்று தளராதே
வேற்றுப் புலன்க ளைந்து மோட்டிப் புகழ்ந்துகொண்டு
கீர்த்தித்து நின்ப தங்கள் அடியேனும்
வேட்டுக் கலந்தி ருந்து ஈட்டைக் கடந்து நின்ற
வீட்டிற் புகுந்தி ருந்து மகிழ்வேனோ
மாற்றற் றபொன்து லங்கு வாட்சக் கரந்தெ ரிந்து
வாய்ப்புற் றமைந்த சங்கு தடிசாப
மாற்பொற் கலந்து லங்க நாட்டச் சுதன்ப ணிந்து
வார்க்கைத் தலங்க ளென்று திரைமோதும்
யாற்சொற் றடம்பு குந்து வேற்கட் சினம்பொ ருந்து
பாய்க்குட் டுயின்ற வன்தன் மருகோனே
பாக்குக் கரும்பை கெண்டை தாக்கித் தடம்படிந்த
பாக்கத் தமர்ந்தி ருந்த பெருமாளே.

1002. பிரமனும் விரகொடு பிணிவினை இடர்கொடு
பேணிக் கரங்கொண் டிருகாலும்
பெறநிமிர் குடிலென உறவுயிர் புகமதி
பேதித் தளந்தம் புவியூடே
வரவிட வருமுட லெரியிடை புகுதரு
வாதைத் தரங்கம் பிறவாமுன்
மரகத மயில்மிசை வருமுரு கனுமென
வாழ்கைக் கொரன்புந் தருவாயே
அருவரை தொளைபட அலைகடல் சுவறிட
ஆலிப் புடன்சென் றசுரேசர்
அனைவரு மடிவுற அமர்பொரு தழகுட
னுண்மைத் தனங்கொண் டெழும்வேலா
இருவினை அகலிட எழிலுமை இடமுடை
ஈசர்க் கிடுஞ்செந் தமிழ்வாயா
இயல்பல கலைகொடு இசைமொழி பவரினும்
ஏழைக் கிரங்கும் பெருமாளே.

1003. பிறர்புக ழின்சொற் பயிலுமி ளக்கைப்
பருவம தன்கைச் சிலையாலே
பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றக் குணமேவிச்
சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்
செயலுமழிந்தற் பமதான
தெரிவையர் தங்கட் கயலைவி ரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ
கெறுவித வஞ்சக் கபடமொ டெண்டிக்
கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்
கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட அன்றிப் பொருதோனே
குறுமுநி இன்பப் பொருள்பெற அன்றுற்
பணமனு வுஞ்சொற் குருநாதா
குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமாளே.

1004. பிறவியலை ஆற்றினிற்
புகுதாதே
பிரகிருதி மார்க்கமுற்
றலையாதே
உறுதிகுரு வாக்கியப்
பொருளாலே
உனதுபத காட்சியைத்
தருவாயே
அறுசமய சாத்திரப்
பொருளோனே
அறிவுளறி வார்க்குணக்
கடலோனே
குறுமுனிவ னேத்துமுத்
தமிழோனே
குமரகுரு கார்த்திகைப்
பெருமாளே.

1005. பிறவி யான சடமி றங்கி வழியி லாத துறைசெ றிந்து
பிணிக ளான துயரு ழன்று
தடுமாறிப்
பெருகு தீய வினையி னொந்து கதிக டோறு மலைபொ ருந்தி
பிடிப டாத ஜனன நம்பி
யழியாதே
நறைவி ழாத மலர்மு கந்த வரிய மோன வழிதி றந்த
நளின பாத மெனது சிந்தை
யகலாதே
நரர்சு ராதி பரும்வ ணங்கு மினிய சேவை தனைவிரும்பி
நலன தாக அடிய னென்று
பெறுவேனோ
பொறிவ ழாத முனிவர் தங்கள் நெறிவ ழாத பிலனு ழன்று
பொருநி சாச ரனைநி னைந்து
வினைநாடிப்
பொருவிலாமலருள்புரிந்துமயிலினேறிநொடியில்வந்து
புளக மேவ தமிழ்பு னைந்த
முருகோனே
சிறுவ ராகி யிருவ ரந்த கரிப தாதி கொடுபொ ருஞ்சொல்
சிலையி ராம னுடனெ திர்ந்து
சமராடிச்
செயம தான நகர மர்ந்த அளகை போல வளமி குந்த
சிறுவை மேவி வரமி குந்த
பெருமாளே.

1006. புகரப் புங்கப் பகரக் குன்றிற்
புயலிற் றங்கிப்
பொலிவோனும்
பொருவிற் றஞ்சச் சுருதிச் சங்கப்
பொருளைப் பண்பிற்
புகல்வோனும்
திகிரிச் செங்கட் செவியிற் றுஞ்சத்
திகிரிச் செங்கைத்
திருமாலும்
திரியப் பொங்கித் திரையற் றுண்டுட்
டெளிதற் கொன்றைத்
தரவேணும்

தகரத் தந்தச் சிகரத் தொன்றித்
தடநற் கஞ்சத் துறைவோனே
தருணக் கொங்கைக் குறவிக் கின்பத்
தையளித் தன்புற் றருள்வோனே
பகரப் பைம்பொற் சிகரக் குன்றைப்
படியிற் சிந்தத் தொடும்வேலா
பவளத் துங்கப் புரிசைச் செந்திற்
பதியிற் கந்தப் பெருமாளே.

1007. புகரில் சேவல செங்கர சங்கம
நிருதர் கோபக்ர வுஞ்சநெ டுங்கிரி
பொருத சேவக குன்றவர் பெண்கொடி மணவாள
புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
புயசு பூதர என்றிரு கண்புனல்
பொழிய மீமிசை அன்புது ளும்பிய மனஞூகி
அகில பூதவு டம்புமு டம்பினில்
அமரு மாருயி ருங்கர ணங்களும்
மவுன வார்வமி குந்துதொ ழுந்தனி உணர்வாலே
அகில வாதிக ளுஞ்சம யங்களும்
அடைய ஆமெனஅன்றென நின்றதை
அறிவி லேனறி யும்படி என்றருள் புரிவாயே
மகர கேதன முந்திகழ் செந்தமிழ்
மலையின் மாருத மும்பல வும்பரி
மளசி லீமுக மும்பல மஞ்சரி வெறியாடும்
மதுக ராரவ சிஞ்சினி யுங்கன
மதுர கார்முக மும்பொர வந்தெழு
மதன ராசனும் வெந்துவி ழும்படி முனிபால
முகுள்வி லோசன முஞ்சிறு திங்களு
முதுப கீரதி யும்புனை யுஞ்சடை
முடியர் பாதியு டம்பில்வி ளங்கிய அபிராமி
முகர நூபுர பங்கய சங்கரி
கிரிகு மாரியெ னம்பிகை தந்தருள்
முருக னேவளர் செந்திலில் வந்தருள் பெருமாளே.

1008. புடவிக் கணிதுகி லெனவள ரந்தக்
கடலெட் டையுமற குடிமுநி எண்கட்
புநிதச் சததள நிலைகொள்ச யம்புச் சதுர்வேதன்
புரமெட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத் தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தாகர பரசிவ னிந்தத் தனிமூவர்
இடசித் தமுநிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்புற்
றிடவுற் பனமொழி உரைசெய்கு ழந்தைக் குருநாதா
எதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடம்வைத் திடவவர் குலமுழு தும்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்
பொடிபட் டுதிரவும் விரிவுறு வண்டச்
சுவர்விட் டதிரவு முகடுகி ழிந்தப்
புறமப் பரவெளி கிடுகிடெ னுஞ்சத் தமுமாகப்
பொருதுக் கையிலுள அயில்நிண முண்கக்
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப்
புரவிக் கனமயில் நடவிடும் விந்தைக் குமரேசா
படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரஅர னந்தப்
பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே
பரன்வெட் கிடவுள மிகவும்வெ குண்டக்
கனியைத் தரவிலை எனவருள் செந்திற்
பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே.

1009. புடைசெப் பெனமுத் தணிகச் சறவுட்
பொருமிக் கலசத் திணையாய
புளகக் களபக் கெருவத் தனமெய்ப்
புணரத் தலையிட் டமரேசெய்
அடைவிற் றினமுற் றவசப் படுமெற்
கறிவிற் பதடிக் கவமான
அசடற் குயர்வொப் பதில்நற் க்ருபையுற்
றடிமைக் கொருசொற் புகல்வாயே

குடமொத் தகடக் கரடக் கலுழிக்
    குணமெய்க் களிறுக் கிளையோனே
குடிபுக் கிடமிட் டசுரப் படையைக்
    குறுகித் தகரப் பொரும்வேலா
படலைச் செறிநற் கதலிக் குலையிற்
    பழமுற் றொழுகப் புனல்சேர்நீள்
பழனக் கரையிற் கழைமுத் துகுநற்
    பழநிக் குமரப் பெருமாளே.

**1010.** புணரியும னங்கனம் புஞ்சரும் புங்கருங்
    கயலினொடு கெண்டையுஞ் சண்டனுங் கஞ்சமும்
    புதுநிலவ ருந்தியுந் துஞ்சுநஞ் சும்பொருப்
        பெறிவேலும்
பொருவெனஇ கன்றகன் றங்குமிங் குஞ்சுழன்
    றிருகடைசி வந்துவஞ் சம்பொதிந் திங்கிதம்
    புவியிளைஞர் முன்பயின் றம்பொனின் கம்பிதக்
        குழைமோதிக்
குணலையொடு மிந்த்ரியஞ் சஞ்சலங் கண்டிடும்
    படியமர்பு ரிந்தருஞ் சங்கடஞ் சந்ததங்
    கொடுமைசெய்து சங்கொடுஞ் சிங்கிதங் குங்கடைக்
        கணினூர்பால்
குலவுபல செந்தனந் தந்துதந் தின்புறுந்
    த்ரிவிதகர ணங்களுங் கந்தநின் செம்பதங்
    குறுகும்வகை யந்தியுஞ் சந்தியுந் தொந்தமற்
        றமைவேனோ
துணர்விரிக டம்பமென் றொங்கலும் பம்புறும்
    புழுகுமச லம்பசுஞ் சந்தனங் குங்குமந்
    தொகுகளப முந்துதைந் தென்றுநன் கொன்றபத்
        திருதோளும்
தொலைவில்சண்மு கங்களுந் தந்த்ரமந்த் ரங்களும்
    பழநிமலை யும்பரங் குன்றமுஞ் செந்திலுந்
    துதிசெயுமெ யன்பர்தஞ் சிந்தையுஞ் சென்றுசெய்ப்
        பதிவாழ்வாய்

கணபணபு யங்கமுங் கங்கையுந் திங்களுங்
குரவுமறு குங்குறுந் தும்பையுங் கொன்றையுங்
கமழ்சடில சம்புவுங் கும்பிடும் பண்புடைக்
குருநாதா
கனகுடகில் நின்றகுன் றந்தருஞ் சங்கரன்
குறுமுனிக மண்டலங் கொண்டுமுன் கண்டிடுங்
கதிசெய்நதி வந்துறுந் தென்கடம் பந்துறைப்
பெருமாளே.

1011. புணர்முலை மடந்தை மாதர் வலையினி லுழன்ற நேக
பொறியுட லிறந்து போன தளவேதுன்
புகழ்மறை யறிந்து கூறு மினியென தகம்பொ ருவி
பொருளென நினைந்து நாயென் இடர்தீர
மணமுணர் மடந்தை மாரொ டொளிர்திரு முகங்க ளாறு
மணிமகு டமுங்கொள் பானு வெயிலாசை
வரைபர வனந்த கோடி முநிவர்கள் புகழ்ந்து போத
மயில்மிசை மகிழ்ந்து நாடி வரவேணும்
பணைமுலை யரம்பை மார்கள குயில்கிளி யினங்கள் போல
பரிவுகொ டுகந்து வேத மதுகூறப்
பறைமுர சனந்த பேரி முறைமுறை ததும்ப நீசர்
படைகட லிறந்து போக விடும்வேலா
அணிசுக நரம்பு வீணை குயில்புற வினங்கள் போல
அமளியில் களங்க ளோசை வளர்மாது
அரிமகள் மணங்கொ டேகி யெனதிட ரொரிந்து போக
அருணையின் விலங்கல் மேவு பெருமாளே.

1012. புத்தகத் தேட்டிற் றீட்டி முடியாது
பொற்புறக் கூட்டிக் காட்டி அருள்ஞான
வித்தகப் பேற்றைத் தேற்றி அருளாலே
மெத்தெனக் கூட்டிக் காக்க நினைவாயே
தத்தைபுக் கோட்டிக் காட்டில் உறைவாளைச்
சற்கரித் தேத்திக் கீர்த்தி பெறுவோனே
கைத்தலத் தீக்குப் பார்த்து நுழையாத
கற்பகத் தோப்புக் காத்த பெருமாளே.

1013. புமியதனிற் ப்ரபுவான புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே
சமரிலெதிர்த் தசுர்மாளத் தனியயில்விட் டருள்வோனே
நமசிவயப் பொருளானே ரசதகிரிப் பெருமாளே.

1014. புரக்க வந்தநங் குறக்க ரும்பைமென்
புனத்தி லன்றுசென் றறவாடிப்
புடைத்த லங்க்ருதம் படைத்தெ ழுந்ததண்
புதுக்கு ரும்பைதிண் புயமீதே
செருக்கு நெஞ்சகங் களிக்கு மன்புடன்
திளைக்கு நின்றிறம் புகழாதிந்
த்ரியக்க டஞ்சுமந் தலக்கண் மண்டுமென்
றியக்க மென்றொழிந் திடுவேனோ
குரக்கி னங்கொணர்ந் தரக்கர் தண்டமுங்
குவட்டி லங்கையுந் துகளாகக்
கொதித்து வெம்பியங் கதிர்த்து வந்துடன்
குதித்த கொண்டலின் மருகோனே
துரக்க வும்பரும் பரப்பு சண்டசிந்
தூரத்த னும்பிறந் திறவாத
சுகத்து ளன்பருந் துதித்த செந்தில்வந்
துதிக்கு மும்பர்தம் பெருமாளே.

1015. புருவச் செஞ்சிலை கொண்டிரு கணைவிழி
எறியக் கொங்கையி ரண்டெனு மதகரி
பொரமுத் தந்தரு மிங்கித நயவிதம் அதனாலே
புகலச் சங்கிசை கண்டம தனிலெழ
உருவச் செந்துவர் தந்தத ரமுமருள்
புதுமைத் தம்பல முஞ்சில தரவரு மதனாலே
பருகித் தின்றிட லஞ்சுக மெனமன
துருகிக் குங்கும சந்தன மதிவியர்
படியச் சம்ப்ரம ரஞ்சித மருள்கல வியினாலே
பலருக் குங்கடை யென்றெனை இகழவு
மயலைத் தந்தருள் மங்கையர் தமைவெகு
பலமிற் கொண்டிடு வண்டனு முனதடி பணிவேனோ

திருவைக் கொண்டொரு தண்டக வனமிசை
வரவச் சங்கொடு வந்திடு முழையுடல்
சிதறக் கண்டக வெங்கர னொடுதிரி சிரனோடு

திறமிற் றங்கிய கும்பக னொருபது
தலைபெற் றும்பரை வென்றிடு மவனொடு
சிலையிற் கொன் றமு குந்தன லகமகிழ் மருகோனே

மருவைத் துன்றிய பைங்குழ லுமையவள்
சிவனுக் கன்பரு ளம்பிகை கவுரிகை
மலையத் தன்தரு சங்கரி கருணைசெய் முருகோனே

வடவெற் பங்கய லன்றணி குகசர
வணையிற் றங்கிய பங்கய முகதமிழ்
மதுரைச் சங்கிலி மண்டப இமையவர் பெருமாளே.

1016. புருவத்தை நெறித்து விழிக்கயல்
பயில்விட்டு வெருட்டி மதித்திரு
புதுவட்டை மினுக்கி அளிக்குலம் இசைபாடும்

புயல்சற்று விரித்து நிரைத்தொளி
வளையிட்ட கரத்தை அசைத்தகில்
புனைமெத்தை படுத்த பளிக்கறை தனிலேறிச்

சரசத்தை விளைத்து முலைக்கிரி
புளகிக்க அணைத்து நகக்குறி
தனைவைத்து முகத்தை முகத்துடன் உறமேவித்

தணிவித்தி ரதத்த தரத்துமிழ்
அமுதத்தை அளித்து உருக்கிகள்
தருபித்தை அகற்றி உனைத்தொழ முயல்வேனோ

பரதத்தை அடக்கி நடிப்பவர்
த்ரிபுரத்தை எரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர்தோகைப்

பரையுற்ற கரத்தர் மிகப்பகி
ரதியுற்ற சிரத்தர் நிறத்துயர்
பரவத்தர் பொருப்பி விருப்பவர் உமையாளர்

சுரர்சுத்தர் மனத்துறை வித்தகர்
பணிபத்தர் பவத்தை அறுப்பவர்
சுடலைப்பொ டியைப்ப ரிசிப்பவர் விடையேறும்

துணையொத்த பதத்த ரெதிர்த்திடு
மதனைக்க டிமுத்தர் கருத்தமர்
தொலைவற்ற க்ருபைக்கு ளுதித்தருள் பெருமாளே.

1017. புருவநெ றித்துக் குறுவெயர் வுற்றுப்
புளகித வட்டத் தனமானார்
பொருவிழி யிற்பட் டவரொடு கட்டிப்
புரளும சட்டுப் புலையேனைக்
கருவழி உற்றுக் குருமொழி அற்றுக்
கதிதனை விட்டிட் டிடுதீயக்
கயவனை வெற்றிப் புகழ்திகழ் பத்மக்
கழல்கள்து திக்கக் கருதாயோ
செருவசு ரப்பொய்க் குலமது கெட்டுத்
திரைகட லுட்கப் பொரும்வேலா
தினைவன முற்றுக் குறவர் மடப்பைக்
கொடிதன வெற்பைப் புணர்மார்பா
பெருகிய நித்தச் சிறுபறை கொட்டிப்
பெரிகை முழக்கப் புவிமீதே
பிரபல சுத்தத் தணிமலை உற்றுப்
ப்ரியமிகு சொக்கப் பெருமாளே.

1018. புரைபடுஞ் செற்றக் குற்றம னத்தன்
தவமிலன் சுத்தச் சத்யஅ சத்யன்
புகலிலன் சுற்றச் செத்தையுள் நிற்குந் துரிசாளன்
பொறையிலன் கொத்துத் தத்வவி கற்பஞ்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொருளுடன் பற்றுச் சற்றுமில் வெற்றன்
கொடியேனின்

கரையறுஞ் சித்ரச் சொற்றமிழ் கற்குங்
கலையிலன் கட்டைப் புத்தியன் முட்டன்
கதியிலன் செச்சைப் பொற்புய வெற்புங்
கதிர்வேலும்.
கதிரையுஞ் சக்ரப் பொற்றையு மற்றும்
பதிகளும் பொற்புக் கச்சியு முற்றுங்
கனவிலுஞ் சித்தத் திற்கரு திக்கொண் டடைவேனோ.
குரைதருஞ் சுற்றுச் சத்தச முத்ராங்
கதறிவெந் துட்கக் கட்புர துட்டன்
குலமடங் கக்கெட் டொட்டொழியச்சென்
றொருநேமிக்
குவடொதுங் கச்சொர்க் கத்தரி டுக்கங்
கெடநடுங் கத்திக் கிற்கிரி வர்க்கங்
குலிசதுங் கக்கைக் கொற்றவ னத்தங் குடியேறத்
தரைவிசும் பைச்சிட் டித்தஇ ருக்கன்
சதுர்முகன் சிட்சைப் பட்டொழி யச்சந்
ததமுவந் திக்கப் பெற்றவர் தத்தம் பகையோடத்
தகையதண் டைப்பொற் சித்ரவி சித்ரந்
தருசதங் கைக்கொத் தொத்துமு ழக்குஞ்
சரணகஞ் சத்திற் பொற்கழல் கட்டும் பெருமாளே.

1019. புலவரை ரக்ஷிக் குந்தாரு வேமது
ரிதகுண வெற்பொக் கும்பூவை மார்முலை
பொருபுய திக்கெட் டும்போயு லாவிய புகழாளா
பொருவரு நட்புப் பண்பான வாய்மையி
லுலகிலு னக்கொப் புண்டோவெ னாநல
பொருள்கள்நி ரைத்துச் செம்பாக மாகிய கவிபாடி
விலையில்த மிழ்ச்சொற் குன்போலு தாரிக
ளெவரென மெத்தக் கொண்டாடி வாழ்வெனும்
வெறிகொளு லுத்தர்க் கென்பாடு கூறிடு மிடிதீர
மிகவறு மைப்பட் டுன்பாத தாமரை
சரணமெ னப்பற் றும்பேதை யேன்மிசை
விழியருள் வைத்துக் குன்றாத வாழ்வையும் அருள்வாயே

இலகிய வெட்சிச் செந்தாம மார்புய
சிலைநுதல் மைக்கட் சிந்தூர வாணுதல்
இமயமகட்குச் சந்தான மாகிய முருகோனே
இளையகொ டிச்சிக் கும்பாக சாதன
னுதவுமொ ருத்திக் குஞ்சீல நாயக
எழிலியெ ழிற்பற் றுங்காய மாயவன் மருகோனே
அலர்தரு புட்பத் துண்டாகும் வாசனை
திசைதொறு முப்பத் தெண்காதம் வீசிய
அணிபொழி லுக்குச் சஞ்சார மாமளி இசையாலே
அழகிய சிக்கற் சிங்கார வேலவ
சமரிடை மெத்தப் பொங்கார மாய்வரும்
அசுரரை வெட்டிச் சங்கார மாடிய பெருமாளே.

1020. புலைய னான மாவீணன் வினையி லேகு மாபாவி
பொறையி லாத கோபீகன் முழுமூடன்
புகழி லாத மாமூகன் அறிவி லாத காபோதி
பொறிக ளோடு போய்வீழு மதிசூதன்
நிலையி லாத கோமாளி கொடையி லாத ஊதாரி
நெறியி லாத வேமாளி குலபாதன்
நினது தாளை நாடோறு மனதி லாசை வீடாமல்
நினையு மாறு நீமேவி யருள்வாயே
சிலையில் வாளி தானேவி யெதிரி ராவ ணார்தோள்கள்
சிதையு மாறு போராடி ஒருசீதை
சிறையி லாம லேகூடி யவனி மீதி லேவீறு
திறல னான மாமாயன் மருகோனே
அலைய மேரு மாசூரர் பொடிய தாக வேலேவி
அமர தாடி யேதோகை மயிலேறி
அதிக தேவ ரேசூழ உலக மீதி லேகூறும்
அருணை மீதி லேமேவு பெருமாளே.

1021. புவனத் தொருபொற் றொடிசிற் றுதரக்
கருவிற் பவமுற் றுவிதிப் படியிற்
புணர்துக் கசுகப் பயில்வுற் றுமரித் திடலாவி

புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனவச் சம்விளைத் தலறப்
புரள்வித் துவருத் திமணற் சொரிவித் தனலூடே
தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்
தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்
தழுவப் பணிமுட் களில்முட் டியிசித் திடவாய்கண்
சலனப் படவெற் றியிறைச் சியறுத்
தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
தளையிட் டுவருத் துமியமப் ரகரத் துயர்தீராய்
பவனத் தையொடுக் குமனக் கவலைப்
ப்ரமையற் றைவகைப் புலனிற் கடிதிற்
படரிச் சையொழித் ததவச் சரியைக் க்ரியையோகர்
பரிபக் குவர்கிட் டைநிவிர்த் தியினிற்
பரிசுத் தர்விரத் தர்கருத் ததனிற்
பரவப் படுசெய்ப் பதியிற் பரமக் குருநாதா
சிவனுத் தமனித் தவுருத் திரன்முக்
கணனக் கன்மழுக் கரனுக் ரரணத்
த்ரிபுரத் தையெரித் தருள்சிற் குணமிர்க் குணஞெறி
செகவித் தனிசப் பொருள்சிற் பரனற்
புதனெப் பிலியுற் பவபத் மதடத்
த்ரிசிரப் புரவெற் புறைசற் குமரப் பெருமாளே.

1022. புவிக்குன் பாத மதைநினை பவர்க்குங் கால தரிசனை
புலக்கண் கூடு மதுதனை அறியாதே
புரட்டும் பாத சமயிகள் நெறிக்கண் பூது படிறரை
புழுக்கண் பாவ மதுகொளல் பிழையாதே
கவிக்கொண் டாடு புகழினை படிக்கும் பாடு திறமிலி
களைக்கும் பாவ சுழல்படு மடிநாயேன்
கலக்குண் டாகு புவிதனி லெனக்குண் டாகு பணிவிடை
கணக்குண் டாதல் திருவுளம் அறியாதோ
சிவத்தின் சாமி மயில்மிசை நடிக்குஞ் சாமி எமதுளை
சிறக்குஞ் சாமி சொருபமி தொளிகாணச்

செழிக்குஞ் சாமி பிறவியை ஒறுக்குஞ் சாமி பவமதை
தெறிக்குஞ் சாமி முனிவர்கள் இடமேவும்
தவத்தின் சாமி புரிபிழை பொறுக்குஞ் சாமி குடிநிலை
தரிக்குஞ் சாமி அசுரர்கள் பொடியாகச்
சதைக்குஞ் சாமி எமைபணி விதிக்குஞ் சாமி சரவண
தகப்பன் சாமி எனவரு பெருமாளே.

**1023.** புவிபுனல் காலுங் காட்டி சிகியொடு வானுஞ் சேர்த்தி
புதுமன மானும் பூட்டி யிடையூடே
பொறிபுல னீரைந் தாக்கி கருவிகள் நாலுங் காட்டி
புகல்வழி நாலந் தாக்கி வருகாயம்
பவவினை நூறுங் காட்டி சுவமதி தானுஞ் சூட்டி
பசுபதி பாசங் காட்டி புலமாயப்
படிமிசை போவென் றோட்டி அடிமையை நீவந் தேத்தி
பரகதி தானுங் காட்டி யருள்வாயே
சிவமய ஞானங் கேட்க தவமுநி வோரும் பார்க்க
திருநட மாடுங் கூத்தர் முருகோனே
திருவளர் மார்பன் போற்ற திசைமுக னூனும் போற்ற
ஜெகமொடு வானங் காக்க மயிலேறிக்
குவடொடு சூரன் தோற்க எழுகடல் சூதந் தாக்கி
குதர்வடி வேலங் கோட்டு குமரேசா
குவலயம் யாவும் போற்ற பழனியி லாலங் காட்டில்
குறமகள் பாதம் போற்று பெருமாளே.

**1024.** புழுககில் களப மொளிவிடு தாள
மணிபல செறிய வடமேருப்
பொருமிரு கலச முலையினை யரிவை
புனைதரு பொதுவின் மடமாதர்
அழகிய குவளை விழியினு மமுத
மொழியினு மவச அநுராக
அமளியின் மிசையி லவர்வச முருகி
அழியுநி னடிமை தனையாள்வாய்

குழலிசை அதுகொ டறவெருள் சுரபி
குறுநிரை அருளி அலைமோதும்
குரைசெறி உததி வரைதனில் விறுசு
குமுகுமு குமென உலகோடு
முழுமதி சுழல வரைநெறு நெறென
முடுகிய முகிலின் மருகோனே
மொகுமொகு மொமென ஞிமிறிசை பரவு
முளரியின் முதல்வர் பெருமாளே.

1025. புழுகொடுபனி நீர்சவாதுட
னிருகரமிகு மார்பிலேபன
புளகிதஅபி ராமபூஷித கொங்கையானை
பொதுவினில்விலை கூறுமாதர்கள்
மணியணிகுழை மீதுதாவடி
பொருவனகணை போல்விலோசன வந்தியாலே
மெழுகெனவுரு காவணர்தம
திதயகலக மோடுமோகன
வெகுவிதபரி தாபவாதனை கொண்டுநாயேன்
மிடைபடுமல மாயையால்மிக
கலவியஅறி வேகசாமிநின்
விதரணசிவ ஞானபோதகம் வந்துதாராய்
எழுகிரிநிலை யோடவாரிதி
மொகுமொகுவென வீசமேதினி
இடர்கெடஅசு ரேசர்சேனைமு றிந்துபோக
இமையவர்சிறை மீளநாய்நரி
கழுகுகள்கக ராசன்மேவிட
ரணமுககண பூதசேனைகள் நின்றுலாவச்
செழுமதகரி நீலகோமள
அபிநவமயி லேறுசேவக
செயசெயமுரு காகுகாவளர் கந்தவேளே
திரைபொருகரை மோதுகாவிரி
வருபுனல்வயல் வாவிசூழ்தரு
திருவிடைமரு தூரில்மேவிய தம்பிரானே.

**1026.** புற்புதமெ னும அற்பநிலை யாத
பொய்க்குடில்கு லாவு மனையாளும்
புத்திரரும் வீடு மித்திரரு மான
புத்திசலி யாத பெருவாழ்வு
நிற்பதொரு கோடி கற்பமென மாய
நிட்டையுடன் வாழு மடியேன்யான்
நித்தநின தாளில் வைத்ததொரு காதல்
நிற்கும்வகை ஓத நினைவாயே
சற்பகிரி நாத முத்தமிழ்வி நோத
சக்ரகதை பாணி மருகோனே
தர்க்கசமண் மூகர் மிக்ககழு வேற
வைத்தவொரு காழி மறையோனே
கற்புவழு வாது வெற்படியின் மேவு
கற்றைமற வாணர் கொடிகோவே
கைத்தஅசு ரேசர் மொய்த்தகுல கால
கற்பதரு நாடர் பெருமாளே.

**1027.** புனமடந் தைக்குத் தக்கபு யத்தன்
குமரனென் றெத்திப் பத்தர்து திக்கும்
பொருளைநெஞ் சத்துக் கற்பனை முற்றும் பிறிதேதும்
புகலுமெண் பத்தெட் டெட்டியல் தத்வம்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொதுவையென் றொக்கத்தக்கதொ ரத்தந் தனைநாளும்
சினமுடன் தர்க்கித் துச்சிலு கிக்கொண்
டறுவரும் கைக்குத் திட்டொரு வர்க்குந்
தெரிவரும் சத்யத் தைத்தெரி சித்துன் செயல்பாடித்
திசைதொறுங் கற்பிக் கைக்கினி யற்பந்
திருவுளம் பற்றிச் செச்சைம ணக்குஞ்
சிறுசதங் கைப்பொற் பத்மமெ னக்கென் றருள்வாயே
கனபெருந் தொப்பைக் கெட்பொரி யப்பம்
கனிகிழங் கிக்குச் சர்க்கரை முக்கண்
கடலைகண் டப்பிப் பிட்டொடு மொக்குந் திருவாயன்

கவளதுங் கக்கைக் கற்பக முக்கண்
திகழுநங் கொற்றத் தொற்றை மருப்பன்
கரிமுகன் சித்ரப் பொற்புகர் வெற்பன் தனையீனும்
பனவியொன் றெட்டுச் சக்ரத லப்பெண்
கவுரிசெம் பொற்பட் டுத்தரி யப்பெண்
பழையஅண்டத்தைப்பெற்றமடப்பெண் பணிவாரைப்
பவதரங் கத்தைத் தப்பநி றுத்தும்
பவதிகம் பர்க்குப் புக்கவள் பக்கம்
பயில்வரம் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமாளே

1028. பூசலிட் டுச்சரத்தை நேர்கழித் துப்பெருத்த
போர்விடத் தைக்கெடுத்து வடிகூர்வாள்
போலமுட் டிக்குழைக்கு ளோடிவெட் டித்துளைத்து
போகமிக் குப்பரிக்கும் விழியார்மேல்
ஆசைவைத் துக்கலக்க மோகமுற் றுத்துயர்க்கு
ளாகிமெத் தக்களைத்துள் அழியாமே
ஆரணத் துக்கணத்து ணும்மலர்ப் பொற்பதத்தை
யான்வழுத் திச்சுகிக்க அருள்வாயே
வாசமுற் றுத்தழைத்த தாளிணைப் பத்தரத்த
மாதர்சித் தச்சிறைக்குள் அழியாமே
வாழ்வுறப் புக்கிரத்ன ரேகையொக் கச்சிறக்கு
மாமயிற் பொற்கழுத்தில் வரும்வீரா
வீசுமுத் துத்தெறிக்க ஓலைபுக் குற்றிருக்கும்
வீறுடைப் பொற்குறத்தி கணவோனே
வேலெடுத் துக்கரத்தில் நீலவெற் பிற்றழைத்த
வேளெனச் சொற்கருத்தர் பெருமாளே.

1029. பூசல்த ருங்கய லும்பொ ருந்திய
வாசந றுங்குழ லுந்து லங்கிய
பூரண கும்பமெ னுந்த னங்களு மடமாதர்ப்
போகம டங்கலை யுப்பு ணர்ந்தநு
ராகம்வி ளைந்துவ ரும்பெ ரும்பிழை
போயக லும்படி ஒன்றை அன்புற நினையாதே

ஆசையெ னும்படி யுந்த னங்களு
மோகைந டந்திட வுந்தி னங்களும்
ஆருட னும்பகை கொண்டு நின்றுற நடமாடி
ஆடிய பம்பர மூன்சு மூன்றெதி
ரோடிவி ழும்படி கண்ட தொன்றுற
ஆவிய கன்றுவி டும்ப யங்கெட அருள்வாயே
வாசவ னன்புவி ளங்க நின்றசு
ரேசர்கு லங்கள டங்க லுங்கெட
வானவர் நின்றுதி யங்கு கின்றதொர் குறைதீர
வாரிய திர்ந்துப யந்து நின்றிட
மேருஅ டங்கஇ டிந்து சென்றிட
வாகைபு னைந்தொரு வென்றி கொண்டருள் இளையோனே
வீசிய தென்றலொ டந்தி யும்பகை
யாகமு யங்கவ நங்க னும்பொர
வேடையெ னும்படி சிந்தை நொந்திட அடைவாக
வேடர்செ ழும்புன வஞ்சி அஞ்சன
வேலினு ளங்கள்க லங்கி இன்புற
வேளையெ னும்படி சென்றி றைஞ்சிய பெருமாளே.

1030. பூசல் வந்திரு தோடார் காதொடு
மோதி டுங்கயல் மானார் மானமில்
போக மங்கையர் கோடா கோடிய மனதானர்
பூர குங்கும தூளா மோதப
டீர சண்பக மாலா லாளித
பூத ரங்களின் மீதே மூழ்கிய அநுராக
ஆசை என்கிற பாரா வாரமு
மேறு கின்றில ஞஞ் பேதஅ
நேக தந்த்ரக்ரி யாவே தாகம கலையாய
ஆழி யுங்கரை காணே னாபுர
பாத பங்கய மோதே னேசுள
ஞாயி னுங்குரு நாதா நீயருள் புரிவாயே

வாச வன்பதி பாழா காமல்நி
சாச ரன்குலம் வாழா தேயடி
மாள வன்கிரி கூறாய் நீறெழ நெடுநேமி
மாத வன்தரு வேதா வோடலை
மோது தெண்கடல் கோகோ கோவென
மாமு றிந்திட நீள்வே லேவிய இளையோனே
வீசு தென்றலும் வேள்பூ வாளியு
மீறு கின்றமை யாமோ காமவி
டாய்கெ டும்படி காவா ஆவியை எனஏனல்
மீது சென்றுற வாடா வேடுவர்
பேதை கொங்கையின் மீதே மால்கொடு
வேடை கொண்டபி ரானே வானவர் பெருமாளே.

1031. பூதக லாதிகள் கொண்டு யோகமு மாகம கிழ்ந்து
பூசைகள் யாதுநி கழ்ந்து பிழைகோடி
போம்வழி ஏதுதெ ரிந்து ஆதிய நாதியி ரண்டு
பூரணி காரணி விந்து வெளியான
நாதப ராபர மென்ற யோகியு லாசம றிந்து
ஞானசு வாசமு ணர்ந்துள் ஒளிகாண
நாடியொ ராயிரம் வந்த தாமரை மீதில மர்ந்த
நாயகர் பாதமி ரண்டும் அடைவேனோ
மாதுசர் வேச்வரி வஞ்சி காளிபி டாரிவி பஞ்சி
வாணிவ ராகிம டந்தை அபிராமி
வாழ்சிவ காமசு வுந்த்ரி யாலமெ லாமுக பஞ்ச
வாலைபு ராரிஇ டந்த குமையாயி
வேதபு ராணம்வி ளம்பி நீலமு ராரியர் தங்கை
மேலொடு கீழுல கங்கள் தருபேதை
வேடமெ லாமுக சங்க பாடலொ டாடல்ப யின்ற
வேணியர் நாயகி தந்த பெருமாளே.

1032. பூத்தார் சூடுங் கொத்தலர் குழலியர்
பார்த்தால் வேலுங் கட்கமு மதன்விடு
போர்க்கார் நீடுங் கட்சர மொடுநமன் விடுதூதும்

போற்றாய் நாளுங் கைப்பொரு ளுடையவர்
மேற்று ளார்தம் பற்றிடு ப்ரமையது
பூட்டா மாயங் கற்றமை விழியினர் அமுதூறல்

வாய்த்தார் பேதஞ் செப்புபொய் விரகியர்
நோற்றே நூலின் சிற்றிடை யிடைபட
வாட்டாய் வீசுங் கர்ப்புர ம்ருகமதம் அகிலாரும்

மாப்பூ ணாரங் கச்சணி முலையினர்
வேட்பூ ணாகங் கெட்டன னுனதுமெய்
வாக்கால் ஞானம் பெற்றினி வழிபட அருளாயோ

ஆத்தாள் மால்தங் கைச்சிக ணிகையுமை
கூத்தா டானந் தச்சிவை திரிபுரை
யாட்பேய் பூதஞ் சுற்றிய பயிரவி புவனேசை

ஆக்கா யாவும் பற்றியெ திரிபுற
நோக்கா எதுஞ் செற்றவள் திருவிளை
யாட்டா லீசன் பக்கம துறைபவள் பெறுசேயே

ஏத்தா நாளுந் தர்ப்பண செபமொடு
நீத்தார் ஞானம் பற்றிய குருபர
யாப்பா ராயுஞ் சொற்றமி ழருள்தரு முருகோனே

ஏற்போர் தாம்வந் திச்சையின் மகிழ்வொடு
வாய்ப்பாய் வீசும் பொற்ப்ரபை நெடுமதிள்
யாழ்ப்பா ணயன் பட்டின மருவிய பெருமாளே.

1033. பூமாதுர மேயணி மான்மறை
வாய்நாலுடை யோன்மலி வானவர்
கோமான்முனி வோர்முதல் யாருமி யம்புவேதம்

பூராயம தாய்மொழி நூல்களும்
ஆராய்வதி லாதட் லாசுரர்
போரால்மறை வாயுறு பீதியின் வந்துகூடி

நீமாறரு ளாயென ஈசனை
பாமாலைக ளால்தொழு தேதிரு
நீறூர்தரு மேனிய தேனியல் கொன்றையோடு

நீரோர்தரு சானவி மாமதி
காகோதர மாதுளை கூவிளை
நேரோடம்வி ளாமுத லார்சடை யெம்பிரானே

போமாறினி வேறெது வோதென
வேயாரரு ளாலவ ரீதரு
போர்வேலவ நீலக லாவியி வர்ந்துநீடு

பூலோகமொ டேயறு லோகமு
நேரோர்நொடி யேவரு வோய்சுர
சேனாபதி யாயவ னேயுனை யன்பினோடுங்

காமாவறு சோமஸ மானன
தாமாமண மார்தரு நீபசு
தாமாவென வேதுதி யாதுழல் வஞ்சனேனைக்

காவாயடி நாளசு ரேசரை
யேசாடிய கூர்வடி வேலவ
காரார்தரு காழியின் மேவிய தம்பிரானே.

**1034.** பூரண வார கும்ப சீதப டீர கொங்கை
மாதர்வி கார வஞ்ச லீலையி லேயு ழன்று
போதவ மேயி ழந்து போனது மான மென்ப தறியாத

பூரிய னாகி நெஞ்சு காவல்ப டாத பஞ்ச
பாதக னாய றஞ்செ யாதடி யோடி றந்து
போனவர் வாழ்வு கண்டு மாசையி லேயழுந்து மயல்தீரக்

காரண காரி யங்க ளானதெ லாமொ ழிந்து
யானெனு மேதை விண்டு பாவக மாயி ருந்து
காலுட னாடி அங்கி நாசியின் மீதி ரண்டு விழிபாயக்

காயமு நாவு நெஞ்சு மோர்வழி யாக அன்பு
காயம்வி டாம லுன்றன் நீடிய தாள்நி னைந்து
காணுதல் கூர்த வஞ்செய் யோகிக ளாய்வி ளங்க
அருள்வாயே

ஆரண சார மந்த்ர வேதமெ லாம்வி ளங்க
ஆதிரை யானு நின்று தாழ்வனெ னாவ ணங்கும்
ஆதர வால்வி ளங்கு பூரண ஞான மிஞ்சும் உபவோனே

ஆர்கலி ஊடெ டூர்ந்து மாவடி வாகி நின்ற
சூரனை மாள வென்று வானுல கானு மண்ட
ரானவர் கூ ரந்தை தீரமு னுள்ம கிழ்ந்த முருகேசா
வாரண மூலமென்ற போதினி லாழி கொண்டு
வாவியின் மாடி டங்கர் பாழ்பட வேயெ றிந்த
மாமுகில் போலி ருண்ட மேனிய னுமு குந்தன்
மருகோனே
வானுக மீது வண்ட லோடிய காலில் வந்து
சூல்நிறை வான சங்கு மாமணி ஈன உந்து
வாரிதி நீர்ப ரந்த சீரலை வாயு கந்த பெருமாளே.

1035. பெரியதோர் கரியிரு கொம்பு போலவெ
வடிவமார் புளகித கும்ப மாமுலை
பெருகியே ஒளிசெறி தங்க வாரமு மணியான
பிறையதோ வெனுநுதல் துங்க மீறுவை
அயிலதோ வெனுமிரு கண்க ளாரவெ
பிறகெலாம் விழுகுழல் கங்கு லாரவெ வருமானார்
உரியதோர் பொருள்கொடு வந்த பேர்களை
மனையிலே வினவியெ கொண்டு போகியெ
உளவிலே மருவிய வஞ்ச மாதர்கள் மயலாலே
உருகியே உடலற வெம்பி வாடியெ
வினையிலே மறுகியெ நொந்த பாதகன்
உனதுதாள் தொழுதிட இன்ப ஞானம தருள்வாயே
அரியதோ ரமரர்க ளண்ட மேறவெ
கொடியதோ ரசுரர்க ளங்க மாளவெ
அடலதோ டமர்புரி கின்ற கூரிய வடிவேலா
அரகரா எனமிக அன்பர் சூழவெ
கடியதோர் மயில்மிசை அன்றை ஏறியெ
அவனியோர் நொடிவரு கின்ற காரண முருகோனே
பரியதோர் கயிறனை கொண்டு வீசவெ
உறியதோய் தயிர்தனை உண்டு நாடியெ
பசியதோள் கெடவருகொண்ட மாயவன் மருகோனே

பரமமா நதிபுடை கொண்ட ணுவவெ
வனசமா மலரினில் வண்டு லாவவெ
பழநிமா மலைதனி லென்று மேவிய பெருமாளே

1036. பெருக்கச்சஞ் சலித்துக்கந்
தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குழைப்புற்றும் பொதுமாதர்
ப்ரியப்பட்டங் கழைத்துத்தங்
கலைக்குட்டங் கிடப்பட்சம்
பிணித்துத்தந் தனத்தைத்தந் தணையாதே
புரக்கைக்குன் பதத்தைத்தந்
தெனக்குத்தொண் டுறப்பற்றும்
புலத்துக்கண் செழிக்கச்செந் தமிழ்பாடும்
புலப்பட்டங் கொடுத்தற்குங்
கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குன் க்ருபைச்சித்தம் புரிவாயே
தருக்கிக்கண் களிக்கத்தெண்
டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே
சலிப்புற்றங் குரத்திற்சம்
ப்ரமித்துக்கொண் டலைத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்
சிரத்தைச்சென் றறுத்துப்பந்
தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்றங்குங் குமரேசா
சிறக்கற்கஞ் செழுத்தத்தந்
திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண் புறச்செப்பும் பெருமாளே.

1037. பெருக்க நெஞ்சுவந் துருக்கு மன்பிலன்
ப்ரபுத்த னங்கள்பண் பெணுநாணும்
பிழைக்க வொன்றிலன் சிலைக்கை மிண்டர்குன்
றமைத்த பெண்தனந் தணையாத்

திருக்கை கொண்டணைந் திடச்செல் கின்றநின்
திறத்தை அன்புடன் தெளியாதே
சினத்தில் மண்டிமிண் டுரைக்கும் வம்பனென்
திருக்கு மென்றொழிந் திடுவேனோ
தருக்கி யன்றுசென் றருட்க ணென்றரன்
தரித்த குன்றநின் றடியோடும்
தடக்கை கொண்டுவெந் தெடுத்த வன்சிரந்
தறித்த கண்டனெண் டிசையோரும்
சுருக்க மின்றிநின் றருக்க ணிந்திரன்
துணைச்செய் கின்றநின் பதமேவும்
சுகத்தி லன்பருஞ் செகத்ர யங்களுந்
துதிக்கு மும்பர்தம் பெருமாளே.

1038. பெருக்க மாகிய நிதியினர் வரின்மிக
நகைத்து வாமென அமளிய ருகுவிரல்
பிடித்து போயவர் தொடையொடு தொடைபட
உறவாடிப்
பிதற்றி யேயள விடுபண மதுதம
திடத்தி லேவரு மளவுந லுரைகொடு
பிலுக்கி யேவெகு சாசமொ டணைகுவர் கனமாலாய்
முருக்கி னேரித ழமுதுப ருகுமென
உரைத்து லீலைக ளதிவித மொடுமலை
முலைக்கு ளேதுயில் கொளமயல் புரிகுவர்
பொருள்தீரின்
முறுக்கி யேயுதை கொடுவசை யுரைதரு
மனத்து ரோகிக ளிடுதொழில் வினையற
முடுக்கி யேயுன திருகழல் மலர்தொழ அருள்தாராய்
நெருக்கி யேவரு மவுணர்கள் குலமற
உறுக்கி யேமயில் முதுகினில் விசைகொடு
நிலத்தி லேசமர் பொருதவ ருயிர்பலி கொளும்வேலா
நெகத்தி லேஅயன் முடிபறி யிறைதிரி
புரத்தி லேநகை புரிபா னடியவர்
நினைப்பி லேயருள் தருசிவ னுதவிய புதல்வோனே

செருக்கு வேடுவர் தருமொரு சிறுமியை
மருக்கு லாவிய மலரணை மிசைபுணர்
திருக்கை வேல்வடி வழகிய குருபர முருகோனே
சிறக்கு மாதவ முனிவரர் மகபதி
இருக்கு வேதனு மிமையவர் பரவிய
திருக்கு ராவடி நிழல்தனி லுலவிய பெருமாளே.

1039. பெருக்கவு பாயங் கருத்துடை யோர்தம்
பெருத்தன பாரங் கனிலேசம்
ப்ரமத்துட னூரும் ப்ரமித்துயிர் மூழ்கும்
ப்ரியக்கட லூடுந் தணியாமல்
கருக்கட லூடுங் கதற்றும நேகங்
கலைக்கட லூடுஞ் சுழலாதே
கடப்பலர் சேர்கிண் கிணிப்ரபை வீசுங்
கழற்புணை நீதந் தருள்வாயே
தருக்கிய வேதன் சிறைப்பட நாளுஞ்
சதுர்த்தச லோகங் களும்வாழச்
சமுத்திர மேழுங் குலக்கிரி ஏழுந்
தளப்படை யாவுந் தனிவீழத்
திருக்கையில் வேலொன் றெடுத்தம ராடுஞ்
செருக்கும யூரந் தனில்வாழ்வே
சிறப்பொடு ஞானம் தமிழ்த்ரய நீடும்
திருத்தணி மேவும் பெருமாளே.

1040. பெருங்கா ரியம்போல் வருங்கே டும்பால்
ப்ரியங்கூர வந்து கருவூறிப்
பிறந்தார் கிடந்தா ரிருந்தார் தவழ்ந்தார்
நடந்தார் தளர்ந்து பிணமானார்
அருங்கான் மருங்கே எடுங்கோள் சுடுங்கோள்
அலங்கார நன்றி தெனமூழ்கி
அகன்றூ சையும்போய் விழும்பா ழுடம்பால்
அலந்தேனை அஞ்சல் எனவேணும்

இருங்கா னகம்போ யிளங்கா ளைபின்போ
கவெங்கேம டந்தை எனவேகி
எழுந்தே குரங்கா லிலங்கா புரந்தீ
இடுங்காவ லன்றன் மருகோனே
பொருங்கார் முகம்பா ணிகொண்டே இறைஞ்சார்
புறஞ்சாய அம்பு தொடும்வேடர்
புனங்கா வலங்கோ தைபங்கா அபங்கா
புகழ்ந்தோது மண்டர் பெருமாளே.

1041. பேதகவி ரோதத் தோதகவி நோதப்
பேதையர்கு லாவைக் கண்டுமாலின்
பேதைமைய ருமற் றேதமக லாமற்
பேதவுடல் பேணித் தென்படாதே
சாதகவி காரச் சாதலவை போகத்
தாழ்விலுயி ராகச் சிந்தையாலுன்
தாளைவடி வேலைச் சேவல்தனை ஏனற்
சாரல்மற மானைச் சிந்தியேனோ
போதகம யூரப் போதககு டாமற்
போதருணை வீதிக் கந்தவேளே
போதகக லாபக் கோதைமுது வானிற்
போனசிறை மீளச் சென்றவேலா
பாதகப தாதிச் சூரன்முதல் வீழப்
பாருமிக வாழக் கண்டகோவே
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே.

1042. போ வாவ ருவாய்மை பேசற் கறியாமே
பேதை மாத ராரோடு கூடிப் பிணிமேவா
ஆர வார மாருத நூல்கற் றடிநாயேன்
ஆவி சாவி யாகாமல் நீசற் றருள்வாயே
சூர சூர சூராதி சூரர்க் கரியோனே
தோகை யாகு மாரா கிராதக் கொடிகேள்வா
தீர தீர தீராதி தீரப் பெரியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே.

1043. பையரவு போலு நொய்யஇடை மாதர்
பையவரு கோலந் தனைநாடிப்
பையலென ஓடி மையல்மிகு மோக
பவ்வமிசை வீழுந் தனிநாயேன்
உய்யவொரு கால மையவுப தேச
முள்ளுருக நாடும் படிபேசி
உள்ளதும் இலாதும் அல்லதவி ரோதம்
உல்லசவி னோதந் தருவாயே
வையமுழு தாளு மையகும ரேச
வள்ளிபடர் கானம் புடைசூழும்
வள்ளிமலை வாழும் வள்ளிமண வாள
மையுததி ஏழுங் கனல்மூள
வெய்யநிரு தேசர் சையமுடன் வீழ
எல்லையில் விநோதம் புரிவோனே
வெள்ளிமணி மாட மல்குதிரு வீதி
வெள்ளிநகர் மேவும் பெருமாளே.

1044. பொக்குப்பைக் கத்தத் தொக்குப்பைக் குத்துப்
பொய்த்தெத்துத் தத்துக் குடில்பேணிப்
பொச்சைப்பிச் சறபக் கொச்சைச்சொற் கற்றுப்
பொற்சித்ரக் கச்சுக் கிரியார்தோய்
துக்கத்துக் கத்திற் சிக்குப்பட் டிட்டுத்
துக்கித்துக் கெய்த்துச் சுழலாதே
சுத்தச்சித் தத்துப் பத்திப்பத் தர்க்கொத்
துச்சற்றுச் சிக்கப் பெறுவேனோ
திக்குத்திக் கற்றுப் பைத்தத்தத் திக்குச்
செற்பத்ரக் கொக்கைப் பொரும்வேலா
செப்பச்சொற் கத்துச் செப்பொற்றத் தைக்குச்
செச்சைக்கொத் தொப்பித் தணிவோனே
கக்கக்கைத் தக்கக் கக்கட்டுக் கக்கிக்
கட்கத்தத் தர்க்குப் பெரியோனே
கற்றைப்பொற் றெத்தப் பெற்றப்பொற் சிற்பக்
கச்சிக்குட் சொக்கப் பெருமாளே.

1045. பொங்குங் கொடிய கூற்றனு
நஞ்சும் பொதுவில் நோக்கிய
பொங்கும் புதிய நேத்திர வலைவீசிப்
பொன்கண் டிளகு கூத்திகள்
புன்கண் கலவி வேட்டுயிர்
புண்கொண் டுருகி யாட்படு மயல்தீரக்
கொங்கின் புசக கோத்திரி
பங்கன் கனையு மாய்க்குடி
கொங்கின் குவளை பூக்கிற கிரிசோண
குன்றங் கதிரை பூப்பர
முன்துன் றமரர் போற்றிய
குன்றம் பிறவும் வாழ்த்துவ தொருநாளே
எங்கும் பகர மாய்க்கெடி
விஞ்சும் பகழி வீக்கிய
வெஞ்சண் டதனு வேட்டுவர் சரணுர
விந்தம் பணிய வாய்த்தரு
ளந்தண் புவன நோற்பவை
மென்குங் குமகு யாத்திரி பிரியாதே
எங்குங் கலுழி யார்த்தெழ
எங்குஞ் சுருதி கூப்பிட
எங்குங் குருவி ஓச்சிய திருமானை
என்றென் றவச மாய்த்தொழு
தென்றும் புதிய கூட்டமொ
டென்றும் பொழுது போக்கிய பெருமாளே.

1046. பொதுவ தாய்த்தனி முதல தாய்ப்பக
விரவு போய்ப்புகல் கின்றவேதப்
பொருள தாய்ப்பொருள் முடிவ தாய்ப்பெரு
வெளிய தாய்ப்புதை வின்றியீறில்
கதிய தாய்க்கரு தரிய தாய்ப்பரு
கமுத மாய்ப்புலன் ஐந்துமாயக்
காரண மாய்த்தெனை மரண மாற்றிய
கருணை வார்த்தையி ருந்தவாறென்

உததி தீப்பட நிருத ரார்ப்பெழ
உலகு போற்றிட வெங்கலாப
ஒருப ராக்ரம துரக மோட்டிய
உரவ கோக்கிரி நண்பவானோர்
முதல்வ பார்ப்பதி புதல்வ கார்த்திகை
முலைகள் தேக்கிட உண்டவாழ்வே
முளரி பாற்கடல் சயில மேற்பயில்
முதிய மூர்த்திகள் தம்பிரானே.

1047. பொரியப் பொரியப் பொலிமுத் துவடத்
துகளிற் புதையத் தனமீதே
புரளப் புரளக் கறுவித் தறுகட்
பொருவிற் சுறவக் கோடிவேள்தோள்
தெரிவைக் கரிவைப் பரவைக் குருகிச்
செயலற் றனள்கற் பழியாதே
செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத்
தெரிவைக் குணர்வைத் தாவேணும்
சொரிகற் பகநற் பதியைத் தொழுகைச்
சூரருக் கருளைப் புரிவோனே
சுடர்பொற் கயிலைக் கடவுட் கிசையச்
சுருதிப் பொருளைப் பகர்வோனே
தரிகெட் டசுரப் படைகெட் டொழியத்
தனிநெட் டயிலைத் தொடும்வீரா
தவளப் பணிலத் தரளப் பழனத்
தணிகைக் குமரப் பெருமாளே.

1048. பொருத கயல்விழி புரட்டிக் காட்டுவர்
புளக தனவட மசைத்துக் காட்டுவர்
புயலி னளகமும் விரித்துக் காட்டுவர் பொதுமாதர்
புனித இதழ்மது நகைத்துக் காட்டுவர்
பொலிவி னிடைதுகில் குலைத்துக் காட்டுவர்
புதிய பரிபுர நடித்துக் காட்டுவர் இளைஞோரை

உருக அணை தனி லணைத்துக் காட்டுவர்
உடைமை அடையவெ பறித்துத் தாழ்க்கவெ
உததி அமுதென கிகழ்த்திக் கேட்பவர் பொடிமாயம்

உதார மெரிதர மருத்திட் டாட்டிக
ளுயிரி னிலைகளை விரித்துச் சேர்ப்பவ
ருறவு கலவியை விடுத்திட் டாட்கொள வினையாயோ

மருது பொடிபட உதைத்திட் டாய்ச்சேரி
மகளி ருறிகளை உடைத்துப் போட்டவர்
மறுக வொருகயி றடித்திட் டார்ப்புற அழுதாறும்

வளரு நெடுமுகி லெதிர்த்துக் காட்டென
வசட னிரணிய னுரத்தைப் பேர்த்தவன்
மழையி னிரைமலை எடுத்துக் காத்தவன் மருகோனே

விருது பலபல பிடித்துச் சூர்க்கிளை
விகட தடமுடி பறித்துத் தோட்களை
விழவு முறியவு மடித்துத் தாக்கிய அயில்வீரா

வெகுதி சலதியை எரித்துத் தூட்பட
வினைசெ யசுரர்கள் பதிக்குட் பாய்ச்சிய
விபுத மலரடி விரித்துப் போற்றினர் பெருமாளே.

1049. பொருப்புறுங் கொங்கையர் பொருட்கவர்ந் தொன்றிய
பிணக்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்

புயற்குழன் றங்கமழ் அறற்குலந் தங்கவிர்
முருக்குவண் செந்துவர் தந்துபோகம்

அருத்திடுஞ் சிங்கியர் தருக்கிடுஞ் செங்கயல்
அறச்சிவந் தங்கையில் அன்புமேவும்

அவர்க்குழன் றங்குழ மறத்தளர்ந் தென்பயன்
அருட்பதம் பங்கய மன்புறுதோ

மிருத்தணும் பங்கய னலர்க்கணன் சங்கரர்
விதித்தெனுங் கும்பிடு கந்தவேளே

மிகுத்திடும் வன்சம ணரைப்பெருக் திண்கழு
மிசைக்கிடுஞ் செந்தமிழ் அங்கவாயா

செருக்குதண் சண்பக வனத்திடங் கொங்கொடு
திறற்செழுஞ் சந்தகில் துன்றிநீடு
தினைப்புனம் பைங்கொடி தனத்துடன் சென்றணை
திருப்பரங் குன்றுறை தம்பிரானே.

1050. பொருவன கள்ள இருகயல் வள்ளை
புரிகுழை தள்ளி விளையாடும்
புளகித வல்லி இளகித வல்லி
புரியிள முல்லை நகைமீதே
உருகிட உள்ள விரகுடை உள்ள
முலகுயி ருள்ள பொழுதேநின்
றுமைதரு செல்வ னெனமிகு கல்வி
உணர்வொடு சொல்ல உணராதோ
மருவலர் வள்ளி புரமுள வள்ளி
மலைமற வள்ளி மணவாளா
வளர்புவி எல்லை அளவிடு தொல்லை
மரகத நல்ல மயில்வீரா
அருவரை விள்ள அயல்விடு மள்ள
அணிவயல் வெள்ளி நகர்வாழ்வே
அடையலர் செல்வ மளறிடை செல்ல
அமர்செய வல்ல பெருமாளே.

1051. பொருவிக் கந்தொடரச் செருவிக் கன்றுடுமிப்
புதுமைப் புண்டரிகக் கணையாலே
புளகக் கொங்கையிடத் திளகக் கொங்குதழற்
பொழியத் தென்றல்துரக் குதலாலே
தெருவிற் பெண்கள்மிகக் கறுவிச் சண்டையிடத்
திரியத் திங்களுதிப் பதனாலே
செயலற் றிங்கணையிற் றுயிலற் றஞ்சியயர்த்
தெரிவைக் குன்குரவைத் தரவேணும்
அருவிக் குன்றடையப் பாவிச் செந்தினைவித்
தருமைக் குன்றவருக் கெளியோனே
அசுரர்க் கங்கயல்பட் டமரர்க் கண்டமளித்
தயில்கைக் கொண்டதிறற் குமரேசா

தருவைக் கும்பதியிற் றிருவைச் சென்றணுகித்
தழுவிக் கொண்டபுயத் திருமார்பா
தாளச் சங்குவயற் றிரளிற் றங்குதிருத்
தணிகைச் செங்கழுநிப் பெருமாளே.

**1052.** பொருளின் மேற்ப்ரிய காமா காரிகள்
பரிவு போற்புணர் க்ரீடா பீடிகள்
புருஷர் கோட்டியில் நாணு மோடிகள் கொங்கைமேலே
புடவை போட்டிடு மாயா ரூபிகள்
மிடிய ராக்குமெபா லாமூ தேவிகள்
புலையர் மாட்டும ரூதே கூடிகள் நெஞ்சுமார்பும்
கருதொ ணுப்பல கோடா கோடிகள்
விரகி னூற்பலர் மேல்வீழ் வீணிகள்
கலவி சாத்திர நூலே ஓதிகள் தங்களாசைக்
கவிகள் கூப்பிடு மோயா மாரிகள்
அவச மாக்கிடு பேய்நீ ரூணிகள்
கருணை நோக்கமி லாமா பாவிகள் இன்பமாமோ
குருக டாக்ஷக லாவே தாகம
பரம வாக்கிய ஞான சாரிய
குறைவு தீர்த்தருள் சாமீ கார்முக அன்பரான
கொடிய வேட்டுவர் கோகோ கோவென
மடிய நீட்டிய கூர்வே லாயுத
குருகு க்ஷேத்ரபு ரேசா வாசுகி அஞ்சமாறும்
செருப ராக்ரம கேகே வாகன
சரவ ணேற்பவ மாலா லாளித
திரள்பு யாத்திரி ஈரா றாகிய கந்தவேளே
சிகர தீர்க்கம காசீ கோபுர
முகச டாக்கர சேனு டாக்ருத
திரிசி ராப்பளி வாழ்வே தேவர்கள் தம்பிரானே.

**1053.** பொருள்கவர் சிந்தை அரிவையர் தங்கள்
புழுககில் சந்து பனிநீர்தோய்
புளகித கொங்கை இளகவ டங்கள்
புரளம ருங்கில் உடைசோர

மருவளர் கொண்டை சரியநி தம்ப
வலைகளை றிந்து கரைமோத
திரிதலொ ழிந்து மனதுக சிந்துன்
இணையடி என்று புகழ்வேனோ
அருள்கொடு சென்று பரிவுட னன்று
மலையில்வி ளைந்த தினைகாவல்
மயிலைம ணந்த அயிலவ துங்க
வயலியில் வந்த முருகோனே
*தெருளுறு மன்பர் பரவவி ளங்கு
திரிசிர குன்றில் முதனாளில்
தெரியவி ருந்த பெரியவர் தந்த
சிறியவ அண்டர் பெருமாளே.

1054. பொற்குட மொத்தகு யத்தைய சைப்பவர்
கைப்பொருள்புக் கிடவேதான்
புட்குரல் விச்சைபி தற்றுமொ ழிச்சியர்
பொட்டணிநெற் றியாரோர்
அற்பவி டைக்கலை சுற்றிநெ கிழ்ப்பவர்
அற்பரமட் டைகள்பால்சென்
றக்கண்வ லைக்குள கப்படு புத்தியை
அற்றிடவைத் தருள்வாயே
கொக்கரை சச்சரி மத்தளி யொத்துவி
டக்கைமுழக் கொலியாலக்
கொக்கிற கக்கர மத்தம ணிக்கருள்
குத்ததணிக் குமரேசா
சர்க்கரை முப்பழ மொத்தமொ ழிச்சிகு
றத்திதனக் கிரிமேலே
தைக்கும னத்தச மர்த்தஅ ரக்கர்த
லைக்குலைகொத் தியவேளே.

---

*தெருளுறு மன்பர் பரியவி ளங்கு சிவன்மன மன்பு பெற வோதுந், திறமுள கந்த பழநியில் வந்து திகழ்பெற நின்ற பெருமாளே.

1055. பொற்கோ வைக்கே பற்கோ வைக்கே
    பொய்ப்போ கத்தைப் பகர்வார்தம்
  பொய்க்கே மெய்க்கே பித்தா கிப்போ
    கித்தே கைக்குப் பொருள்தேடித்
 தெற்கோ டிக்கா சிக்கோ டிக்கீழ்
    திக்கோ டிப்பச் சிமமான
  திக்கோ டிப்பா ணிக்கோ டித்தீ
    வுக்கோ டிக்கெட் டிடலாமோ
 தற்கோ லிப்பா விப்பார் நற்சீ
    ரைச்சா ரத்தற் பரமாஞய்
  தப்பா மூப்பா லைத்தே டித்தே
    சத்தோர் நிற்கத் தகையோடே
 முற்கா னப்பே தைக்கா கப்போய்
    முற்பால் வெற்பிற் கணியாஞய்
  மூத்தா முத்தீ யத்தா சுத்தா
    முத்தா முத்திப் பெருமாளே.

1056. பொற்சித்ரப் பச்சைப் பட்டுக்
    கச்சிட்டுக் கட்டிப் பத்மப்
    புட்பத்துக் கொப்பக் கற்பித் திளைஞோர்கள்
  புட்பட்டுச் செப்பத் துப்பற்
    கொத்தப்பொற் றித்தத் திட்பப்
    பொற்பிற்பெற் றுக்ரச் சக்ரத் தனமாஞர்
 கற்சித்தச் சுத்தப் பொய்ப்பித்
    தத்திற்புக் கிட்டப் பட்டுக்
    கைக்குத்திட் டிட்டுச் சுற்றித் திரியாமல்
  கற்றுற்றுச் சித்திக் கைக்குச்
    சித்திப்பப் பட்சத் திற்சொற்
    கற்பித்தொப் பித்துக் கொற்றக் கழல்தாராய்
 குற்சித்துக் கொட்டுக் கொட்டுத்
    துக்கச்சத் துக்குக் குக்குக்
    குக்குக்குக் குக்குக் குக்குக் கெனமாறுக்

குட்சிக்குப் பக்ஷிக் கைக்குக்
 கக்ஷத்திற் பட்சத் தத்தக்
 கொட்டிச்சுட் டிக்கொக் ரிக்குக் குடதாரி
சற்சித்துத் தொற்புத் திப்பட்
 சத்தர்க்கொப் பித்தட் சத்துச்
 சத்தத்தைச் சத்திக் கொச்சைப் பதிவாழ்வே
தக்ஷப்பற் றுக்கொற் பத்திற்
 செற்பற்றைச் செற்றிட் டுச்சச்
 சர்ப்பப்பொற் றைக்குட் சொக்கப் பெருமாளே.

1057. பொற்ப தத்தி னைத்து தித்து
 நற்ப தத்தி லுற்ற பத்தர்
 பொற்பு ரைத்து நெக்கு ருக்க அறியாதே
புத்த கப்பி தற்றை விட்டு
 வித்த கத்து னைத்து திக்க
 புத்தி யிற்க லக்க மற்று நினையாதே
முற்ப டத்த லத்து தித்து
 பிறப டைத்த கிர்த்ய முற்றி
 முற்க டைத்த வித்து நித்த முழல்வேனை
முட்ட விக்க டைப்பி றப்பி
 னுட்கி டப்ப தைத்த விர்த்து
 முத்தி சற்றெ னக்க ளிப்ப தொருநாளே
வெற்ப ளித்த தற்ப ரைக்கி
 டப்பு றத்தை உற்ற ளித்த
 வித்த கத்தர் பெற்ற கொற்ற மயில்வீரா
வித்தை தத்வ முத்த மிழ்ச்சொ
 லத்த சத்தம் வித்த ரிக்கு
 மெய்த்தி ருத்த ணிப்பொ ருப்பில் உறைவோனே
கற்ப கப்பு னக்கு றத்தி
 கச்ச டர்த்த சித்ர முற்ற
 கற்பு ரத்தி ருத்த னத்தில் அணைவோனே

கைத்த ரக்கர் கொத்த றுத்து
வஜ்ர கர்த்த னுக்க ளித்த
கைத்தொ ழுத்த றித்து விட்ட பெருமாளே.

1058. பொற்பூ வைச்சீ ரைப்போ லப்போ
தப்பே சிப்பொற் கனிவாயின்
பொய்க்கா மத்தே மெய்க்கா மப்பூ
ணைப்பூண் வெற்பிற் றுகில்சாயக்
கற்பா லெக்கா வுட்கோ லிக்கா
சுக்கே கைக்குத் திடுமாதர்
கட்கே பட்டே கெட்டா சைப்பா
டுற்றே கட்டப் படுவேனோ
சொற்கோ லத்தே நற்கா லைச்சே
விப்பார் சித்தத் துறைவோனே
தொக்கே கொக்கா கிச்சூ ழச்சூர்
விக்கா முக்கத் தொடும்வேலா
முற்கா லத்தே வெற்பேய் வுற்றார்
முத்தாள் முத்தச் சிறியோனே
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

1059. பொன்ற லைப்பொய்க் கும்பி றப்பைத்
தும்ப றுத்திட் டின்று நிற்கப்
புந்தி யிற்சற் றுங்கு றிக்கைக் கறியாமே
பொங்கி முக்கிச் சங்கை பற்றிச்
சிங்கி யொத்தச் சங்க டத்துப்
புண்ப டைத்துக் கஞ்ச மைக்கட் கொடியார்மேல்
துன்று மிச்சைப் பண்ட னுக்குப்
பண்ப ளித்துச் சம்ப்ர மித்துத்
தும்பி பட்சிக் கும்ப்ர சச்செய்ப் பதிமீதே
தொண்டு பட்டுத் தெண்ட னிட்டுக்
கண்டு பற்றத் தண்டை வர்க்கத்
துங்க ரத்தப் பங்க யத்தைத் தருவாயே

குன்றெ டுத்துப் பந்த டித்துக்
கண்சி வத்துச் சங்க ரித்துக்
கொண்ட லொத்திட் டிந்த்ர னுக்கிச் சுரலோகா
கொம்பு குத்திச் சம்ப ழுத்தித்
திண்ட லத்திற் றண்டு வெற்பைக்
கொண்ட ழுத்திச் சண்டை இட்டுப் பொரும்வேழம்
சென்று ரித்துச் சுந்த ரிக்கச்
சந்த விர்த்துக் கண்சு கித்துச்
சிந்தை யுட்பற் றின்றி நித்தக் களிகூரும்
செண்ப கத்துச் சம்பு வுக்குத்
தொம்ப தத்துப் பண்பு ரைத்துச்
செங்கு வட்டிற் றங்கு சொக்கப் பெருமாளே.

1060. பொன்றாமன் றாக்கும் புதல்வரும்
நன்றாமன் றார்க்கின் றுறுதுணை
பொன்றானென் றாட்டம் பெருகிய புவியூடே
பொங்காவெங் கூற்றம் பொதிதரு
சிங்காரஞ் சேர்த்திங் குயரிய
புன்கூடொன் றாய்க்கொண் டுறைதரு முயிர்கோல
நின்றாணின் றேத்தும் படிநினை
வுந்தானும் போச்சென் றுயர்வற
நிந்தாகும் பேச்சென் பதுபட நிகழாமுன்
நெஞ்சாலஞ் சாற்பொங் கியவினை
விஞ்சாதன் பாற்சென் றகலிட
நின்தாள்தந் தாட்கொண் டருள்தா நினைவாயே
குன்றால்விண் டாழ்க்குங் குடைகொடு
கன்றாமுன் காத்துங் குவலய
முண்டார்கொண் டாட்டம் பெருகிய மருகோனே
கொந்தார்பைந் தார்த்திண் குயகுற
மின்தாள்சிந் தாச்சிந் தையில்மயல்
கொண்டேசென் றாட்கொண் டருளென
மொழிவோனே

அன்றுலங் காட்டண் டருமுய
நின்றாடுங் கூத்தன் திருவருள்
அங்காகும் பாட்டின் பயனினை அருள்வாழ்வே
அன்பால்நின் தாட்கும் பிடுபவர்
தம்பாவம் தீர்த்தம் புவியிடை
அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே.

**1061.** பொன்னை விரும்பிய பொதுமாதர்
புன்மை விரும்பியெ தடுமாறும்
என்னை விரும்பிநி ஒருகால்நின்
எண்ணி விரும்பவும் அருள்வாயே
மின்னை விரும்பிய சடையாளர்
மெய்யின் விரும்பிய குருநாதா
அன்னை விரும்பிய குறமானை
அண்மி விரும்பிய பெருமாளே.

**1062.** போககற் பக்கடவுட் பூருகத் தைப்புயலைப்
பாரியைப் பொற்குவையுச் சிப்பொழு திலீயும்
போதுடைப் புத்திரரைப் போலவொப் பிட்டுலகத்
தோரைமெச் சிப்பிரியப் பட்டு மிடிபோகத்
த்யாகமெத் தத்தருதற் காசுநற் சித்திரவித்
தாரமுட் பட்டதிருட் டுக்க விகள்பாடித்
தேடியிட் டப்படுபொற் பாவையர்க் கிட்டவர்கட்
சேல்வலைப் பட்டடிமைப் பட்டு விடலாமோ
ஆகமப் பத்தருமற் றாரணச் சுத்தருமுற்
றாதரிக் கைக்கருணைத் துப்பு மதில்சூழும்
ஆடகச் சித்ரமணிக் கோபுரத் துத்தரதிக்
காகவெற் றிக்கலபக் கற்கி யமர்வோனே
தோகையைப் பெற்றஇடப் பாகரொற் றைப்பகழித்
தூணிமுட் டச்சுவறத் திக்கி லெழுபாரச்
சோதிவெற் பெட்டுமுதிர்த் தூளிதப் பட்டமிழச்
சூரனைப் பட்டுருவத் தொட்ட பெருமாளே.

**1063.** போத கந்தரு கோவே நமோநம
நீதி தங்கிய தேவா நமோநம
பூத லந்தனை யாள்வாய் நமோநம பணியாவும்

பூணு கின்றபி ரானே நமோநம
வேடர் தங்கொடி மாலா நமோநம
போத வன்புகழ் சாமீ நமோநம அரிதான

வேத மந்திர ரூபா நமோநம
ஞான பண்டித நாதா நமோநம
வீர கண்டைகொள் தாளா நமோநம அழகான

மேனி தங்கிய வேளே நமோநம
வான பைந்தொடி வாழ்வே நமோநம
வீறு கொண்டவி சாகா நமோநம அருள்தாராய்

பாத கஞ்செறி சூரா திமாளவெ
கூர்மை கொண்டயி லாலே பொராடியெ
பார அண்டர்கள் வானுடு சேர்தர அருள்வோனே

பாதி சந்திர னேசூ டும்வேணியர்
சூல சங்கர ஞானர்கி தநாயகர்
பார திண்புய மேசே ருசோதியர் கயிலாயர்

ஆதி சங்கர னார்பா கமாதுமை
கோல அம்பிகை மாதா மனோன்மணி
ஆயி சுந்தரி தாயா னநாரணி அபிராமி

ஆவல் கொண்டுவி ரூலே சிராடவெ
கோம ளம்பல சூழ்கோ யில்மீறிய
ஆவி னன்குடி வாழ்வா னதேவர்கள் பெருமாளே.

**1064.** போத நிர்க்குண போதா நமோநம
நாத நிஷ்கள நாதா நமோநம
பூர ணக்கலை சாரா நமோநம பஞ்சபாண

பூபன் மைத்துன பூபா நமோநம
நீப புஷ்பக தாளா நமோநம
போக சொர்க்கபு பாலா நமோநம சங்கமேறும்

மாத மிழ்த்ரய சேயே நமோநம
வேத னத்ரய வேளே நமோநம
வாழ்ஜ கத்ரய வாழ்வே நமோநம என்றுபாத

வாரி ஜத்திில்வி ழாதே மகோததி
ஏழ்பிறப்பினில் மூழ்கா மனோபவ
மாயை யிற்சுழி ஊடே விடாதுக லங்கலாமோ

கீத நிர்த்தவெ தாளா டவீநட
நாத புத்திர பாகீ ரதீகிரு
பாச முத்திர ஜீமூ தவாகனர் தங்கிபாகா

கேக யப்பிர தாபா மூலாதிப
மாவி கைக்கும ரேசா விசாகக்ரு
பாலு வித்ரும காரா ஷடானன புண்டரீகா

வேத வித்தக வேதா விநோதகி
ராத லக்ஷ்மிகி ரீடா மகாசல
வீர விக்ரம பாரா வதானவ கண்டசூர

வீர நிட்டுர வீராதி காரண
தீர நிர்ப்பய தீராபி ராமவி
நாய கப்ரிய வேலாயு தாசுரர் தம்பிரானே.

1065. போதிலி ருந்துவி டாச்சதுர்
வேதமொ ழிந்தவ னுற்புளி
னகமு கந்தவ னுற்றெறி வரிதான

போதுயர் செந்தழ லாப்பெரு
வானநி றைந்தவி டாப்புக
ழாளன ருஞ்சிவ கீர்த்தியன் நெறிகாண

ஆதர வின்பருள் மாக்குரு
நாதனெ னும்படி போற்றிட
ஆனப தங்களை நாக்கரு திடவேயென்

ஆசையெ னும்படி மேற்கவி
பாடுமி தம்பல பார்த்தடி
யேனும றிந்துனை ஏத்துவ தொருநாளே

காதட ரும்படி போய்ப்பல
பூசலி டுங்கய லாற்கனி
வாயித ழின்சுவை யாற்பயில் குறமாதின்

காரட ருங்குழ லாற்கிரி
ஆனத னங்களி னாற்கலை
மேவும ருங்கத னாற்செறி குழையோலை

சாதன மென்றுரை யாப்பரி
தாபமெ னும்படி வாய்த்தடு
மாறிம னந்தள ராத்தனி திரிவோனே

சாகர மன்றெறி யாக்கொடு
சூரரு கும்படி யாத்தினி
வேலையு ரம்பெற ஓட்டிய பெருமாளே.

1066. மகர குண்டல மீதே மோதவ
வருண பங்கய மோபூ வோடையில்
மருவு செங்கழு நீரோ நீவிடு வடிவேலோ

மதன்வி டுங்கணை யோவா ளோசில
கயல்கள் கெண்டைக ளோசே லோகொலை
மறலி யென்பவ னோமா னோமது நுகர்கீத

முகர வண்டின மோவான் மேலெழு
நிலவ ருந்துபு ளோமா தேவருண்
முதிய வெங்கடு வோதே மாவடு வகிரோபார்

முடிவெ னுங்கட லோயா தோவென
உலவு கண்கொடு நேரே சூறைகொள்
முறைய றிந்தப சாசே போல்பவர் உறவாமோ

நிகரில் வஞ்சக மாரீ சாதிகள்
தசமு கன்படை கோடா கோடிய
நிருத ரும்பட வோரே வேவிய அடுபோர்செய்

நெடிய னங்கனு மானோ டேயெழு
பதுவெ ளங்கவி சேனா சேவித
நிருப னம்பார் கோமான் ராகவன் மருகோனே

சிகர உம்பர்கள் பாகீ ரதிகள்
பிரபை யொன்றுபி ராசா தாதிகள்
சிவச டங்கமொ டிசா ணுதிகள் சிவமோனர்
தெளிய மந்த்ரக லாபா யோகிக
ளயல்வி ளங்குசு வாமீ காமரு
திருவ லஞ்சுழி வாழ்வே தேவர்கள் பெருமாளே.

1067. மகர கேத னத்த னுருவி லாென டுத்து
மதுர நாணி இட்டு நெறிசேர்வார்
மலைய வேவ ளைத்த சிலையி னூடொ ளித்த
வலிய சாய கக்கண் மடமாதர்
இகழ வாச முற்ற தலையெ லாம்வெ ளுத்து
இளமை போயொ ளித்து விடுமாறு
இடைவி டாதெ டுத்த பிறவி வேர றுத்துன்
இனிய தாள ளிப்ப தொருநாளே
அகில மேழு மெட்டு வரையின் மீது முட்ட
அதிர வேந டத்து மயில்வீரா
அசுரர் சேனை கெட்டு முறிய வான வர்க்கும்
அதிக வாழ்வ ளிக்கும் இளையோனே
மிகநி லாவெ றித்த அமுத வேணி பித்தர்
விழைசு வாமி வெற்பில் உறைவோனே
விரைய ஞான வித்தை அருள்செய் தாதை கற்க
வினவி ஓது வித்த பெருமாளே.

1068. மகரக்கு ழைக்குளுந்து நயனக்க டைக்கிலங்கு
வசியச்ச ரத்தியைந்த குறியாலே
வடவெற்ப தைத்துரந்து களபக்கு டத்தைவென்று
மதர்விற்ப ணைத்தெழுந்த முலைமீதே
உகமெய்ப்ப தைத்துநெஞ்சம் விரகக்க டற்பொதிந்த
உலைபட்ட லர்ச்சரங்கள் நலியாமல்
உலகப்பு கழ்ப்புலம்பு கலியற்று ணர்ச்சிகொண்டு
னுரிமைப்பு கழ்ப்பகர்ந்து திரிவேனோ
புகர்கைக்க ரிப்பொதிந்த முளரிக்கு ளத்திழிந்த
பொழுதிற்க ரத்தொடர்ந்து பிடிநாளில்

பொருமித்தி கைத்துநின்று வாதற்க டைக்கலங்கள்
புகுதக்க ணத்துவந்து கையிலாரும்.
திகிரிப்ப டைத்துரந்த வாதற்கு டற்பிறந்த
சிவைதற்ப ரைக்கிசைந்த புதல்வோனே
சிவபத்தர் முத்தரும்பர் தவசித்தர் சித்தமொன்று
திலதைப்ப திக்குகந்த பெருமாளே..

1069. மகரம துகெட இருகுமி ழடைசி
வாரார்ச ரங்க ளெனநீளும்
மதர்விழி வலைகொ டுலகினில் மனிதர்
வாணாள டங்க வருவார்தம்
பகர்தரு மொழியில் ம்ருகமத களப
பாடீர கும்ப மிசைவாவிப்
படிமன தனது பரிபுர சரண
பாதார விந்த நினையாதோ
நகமுக சமுக நிருதரு மடிய
நாலுவி லங்கல் பொடியாக
நதிபதி கதற ஒருகணை தெரியு
நாராய ணன்றன் மருகோனே
அகனக கனக சிவதல முழுது
மாராம பந்தி யவைதோறும்
அரியளி விததி முறைமுறை கருது
மாரூர மர்ந்த பெருமாளே.

1070. மகர மெறிகடல் விழியினு மொழியினு
மதுப முரல்குழல் வகையினு நகையினும்
வளமை இனுமுக நிலவினு மிலவினு நிறமூசும்
மதுர இதழினு மிடையினு நடையினும்
மகளிர் முகுளித முலையினு நிலையினும்
வனச பரிபுர மலரினு முலரினும் அவர்நாமம்
பகரு கினுமவர் பணிவிடை திரிகினு
முருகி நெறிமுறை தவறினு மவரொடு
பகடி இடுகினு மமளியி லவர்தரு மநுராகப்

பாவை படியினும் வசமழி யினுமுத
லருணை நகர்மிசை கருணையொ டருளிய
பரம வொருவச னமுமிரு சரணமு மறவேனே
ககன சுரபதி வழிபட எழுகிரி
கடக கிரியொடு மிதிபட வடகுல
கனக கனகுவ டடியொடு முறிபட முதுசூதங்
கதறு சுழிகட லிடைகிழி படமிகு
கலக நிசிசரர் பொடிபட நடவிய
கலப மரகத துரகத ந்ருபகிரி மயில்வாழ்வே
தகன கரதல சிவசுத கணபதி
சகச சரவண பரிமள சததள
சயன வனசரர் கதிபெற முனிபெறு புனமானின்
தரள முகபட நெறிபட நிமிர்வன
தருண புளகித ம்ருகமத தனகிரி
தழுவ மயல்கொடு தனிமட லெழுதிய பெருமாளே.

1071. மகரமொ டுறுகுழை யோலை காட்டியும்
மழைதவழ் வளைகுழல் மாலை காட்டியும்
வரவர வரஇத மூற லூட்டியும் வலைவீசும்
மகரவி ழிமகளிர் பாடல் வார்த்தையில்
வழிவழி யொழுகுமு பாய வாழ்க்கையில்
வளமையி லிளமையில் மாடை வேட்கையில்
மறுகாதே
இகலிய பிரமக பால பாத்திர
மெழில்பட இடுதிரு நீறு சேர்த்திறம்
இதழியை யழகிய வேணி யார்த்ததும் விருதாக
எழில்பட மழுவுடன் மானு மேற்றதும்
இசைபட இசைதரு ஆதி தோற்றமும்
இவையிவை யெனவுப தேச மேற்றுவ தொருநாளே
ஜகதல மதிலருள் ஞான வாட்கொடு
தலைபறி யமணர்ச மூக மாற்றிய
தவமுனி சகமுளர் பாடு பாட்டென மறைபாடி

தரிகிட தரிகிட தாகு டாத்திரி
கிடதரி கிடதரி தாவெ ணுச்சில
சபதமொ டெழுவன தாள வாச்சிய முடனேநீள்
அகுகுகு குகுவென ஆளி வாய்ப்பல
அலகைக ளடைவுட னுடு மாட்டமும்
அரனவ னுடனெழு காளி கூட்டமும் அகலாதே
அறிதுயில் சயனவி யாள மூர்த்தனும்
அணிதிகழ் மிருபுலி யூர்வி யாக்ர னும்
அரிதென முறைமுறை யாடல் காட்டிய பெருமாளே.

1072. மகளு மனைவி தாய்க்குல மனையு மனைவர் வாக்கினில்
மறுகி புறமு மார்த்திட உடலூடே
மருவு முயிரை நோக்கமு மெரியை உமிழ ஆர்ப்பவ
ருடனு மியமன் மாட்டிட அணுகாமுன்
உகமு முடிவு மாச்செலு முதய மதியி னோட்டமு
முளது மிலது மாச்சென உறைவோரும்
உருகு முரிமை காட்டிய முருக னெனவு நாக்கொடு
உனது கழல்கள் போற்றிட அருள்தாராய்
புகல வரிய போர்ச்சிலை விரக விசைய னுற்புக
ழுடைய திருத ராட்டிர புதல்வோர்தம்
புரவி கரிகள் தேர்ப்படை மடிய அரசை மாய்த்துயர்
புவியின் விதன மாற்றினர் மருகோனே
மிகவு மலைபு மாக்கடல் முழுது மடிய வேற்றுரு
வெனவு மருவி வேற்கொடு பொருசூரன்
விரைசெய் நெடிய தோட்கன அடலு முருவ வேற்படை
விசைய முறவும் வீக்கிய பெருமாளே.

1073. மருடக்கொப் பாடக் காதினில்
நுதலிற்பொட் டூரக் கோதிய
மயிரிற்சுற் றோலைப் பூவொடு வண்டுபாட
வகைமுத்துச் சோரச் சேர்நகை
இதழிற்சொற் சாதிப் பாரியல்
மதனச்சொற் பாடுக் கோகில ரம்பைமாதர்

பகடிச்சொற் கூறிப் போர்மயல்
முகவிச்சைப் பேசிச் சீரிடை
பவளப்பட்டாடைத் தோளிருகொங்கைமேலாய்

பணமெத்தப் பேசித் தூதிடு
மிதயச்சுத் தீனச் சோலிகள்
பலரெச்சிற் காசைக் காரிகள் சந்தமாமோ

தகுடத்தத் தானத் தானன
திகுடத்தித் தீதித் தோதிமி
தடுடுட்டுட் டாடப் பேரிகை சங்குவீணை

தடமிட்டுப் பாவக் கார்கிரி
பொடிபட்டுப் போகச் சூரர்கள்
தலையிற்றிட் டாடப் போர்புரி கின்றவேலா

திகிரிப்பொற் பாணிப் பாலனை
மறைகற்புத் தேளப் பூமனை
சினமுற்றுச் சேடிற் சாடிய கந்தவேளே

தினையுற்றுக் காவற் காரியை
மணமுற்றுத் தேவப் பூவொடு
திகழ்கச்சித் தேவக் கோன்மகிழ் தம்பிரானே.

**1074.** மக்கட்குக் கூறரி தானது
கற்றெட்டத் தான்முடி யாதது
மற்றொருப்புக் கியாதுமொவ் வாதது மனதாலே

மட்டிட்டுத் தேடவொ ணாதது
தத்வத்திற் கோவைப டாதது
மத்தப்பொற் போதுப கீரதி மதிசூடும்

முக்கட்பொற் பாளரு சாவிய
அர்த்தக்குப் போதக மானது
முத்திக்குக் காரண மானது பிரமாவும்

முட்டக்கெட் டாதது நான்மறை
எட்டிற்றெட் டாதென வேவரு
முற்பட்டப் பாலையி லாவது புரிவாயே

செக்கட்சக் ராயுத மாதுலன்
மெச்சப்புற் போதுப டாவிய
திக்குப்பொற் பூதர மேமுதல் வெகுரூபம்
சிட்டித்துப் பூதப சாலிகள்
கைக்கொட்டிட் டாடம கோததி
செற்றுக்ரச் சூரனை மார்பக முதுசோரி
கக்கக்கைத் தாமரை வேல்விடு
செச்சைக்கர்ப் பூரப் யாசல
கச்சுற்றப் பாரப யோதர முலையாள்முன்
கற்புத்தப் பாதுல கேழையு
மொக்கப்பெற் றுள்விளை யாடிய
கச்சிக்கச் சாலையில் மேவிய பெருமாளே.

**1075.** மக்கட் பிறப்புக்கு ளொக்கப் பிறப்புற்ற
மட்டுற் றசுற்றத்தர் மனையாளும்
மத்யத் தலத்துற்று நித்தப் பிணக்கிட்டு
வைத்தப் பொருட்பற்று மிகநாட
நிக்ரித் திடுத்துட்டன் மட்டித் துயிர்ப்பற்ற
நெட்டைக் கயிற்றிட்டு வளையாமுன்
நெக்குக் குருப்பத்தி மிக்குக் கழற்செப்ப
நிற்றத் துவச்சொற்கள் அருள்வாயே
திக்கப் புறத்துக்குள் நிற்கப் புகழ்ப்பித்த
சித்ராத் தமிழ்க்கொற்றம் உடையோனே
சிப்பக் குடிற்கட்டு மற்பக் குறத்திச்சொல்
தித்திப் பையிச்சிக்கு மணவாளா
முக்கட் சடைச்சித்த ருட்புக் கிருக்கைக்கு
முத்தித் துவக்குற்று மொழிவோனே
முட்டச் சினத்திட்டு முற்பட் டிணர்க்கொக்கை
முட்டித் தொளைத்திட்ட பெருமாளே.

**1076.** மக்களொக் கற்றெரிவை பக்கமிக் கத்துணைவர்
மற்றுமுற் றக்குரவர் அனைவோரும்
வைத்தசெப் பிற்பணமும் ரத்நமுத் திற்பணியும்
மட்டமெற் றுப்பெருகும் அடியாரும்

புக்குதுக் கித்தெரிகள் தத்தவைக் கப்புகுது
பொய்க்குமெய்க் குச்செயலும் உருகாதே
புட்பமிட் டுக்கருணை நற்பதத் தைப்பரவு
புத்திமெத் தத்தருவ தொருநாளே
செக்கர்கற் றைச்சடையில் மிக்ககொக் கிற்சிறகு
சிக்கவைத் துச்சலமு மதிசூடி
சித்தமுற் றுத்தெளிய மெத்தமெத் தத்திகழு
சித்தமுத் திச்சிவமும் அருள்வோனே
கொக்குறுப் புக்கொடுமை நிற்கும்வட் டத்தசுரை
கொட்டியொக் கக்கொலைசெய் வடிவேலா
கொற்றவெற் றிப்பரிசை ஒட்டியெட் டிச்சிறிது
குத்திவெட் டிப்பொருத பெருமாளே.

**1077.** மக்கள்தா யர்க்குமரு கர்க்குமா மர்க்குமனை
விக்கும்வாழ் நர்க்குமிக மனதூடே
மைத்தவே லைக்குநெடி துற்றமா யத்துயரம்
வைத்துவா டச்சமனும் உறமேவித்
திக்குநா டிக்கரிய மெய்க்கடா விற்றிருகு
திக்கநா விக்களவு தெரியாமுன்
சித்தமோ வித்துயிலு மற்றுவா ழச்சிறிது
சித்ரபா தக்கமலம் அருள்வாயே
இக்குவே ளைக்கருக முக்கணு டிக்கனலை
இட்டுயோ கத்தமரும் இறையோர்முன்
எச்சரா திக்குமுற நிற்குமா யற்குமுத
லெட்டொணு வித்தைதனை இனிதீவாய்
பக்கஆர் வத்துடனுள் நெக்குநா டிப்பரவு
பத்தர்பா டற்குருகு முருகோனே
பக்கம்யா னைத்திருவொ டொக்கவா ழக்குறவர்
பச்சைமா னுக்கினிய பெருமாளே.

**1078.** மங்கா திங் காக்குஞ் சிறுவரு
முண்டேயிங் காற்றுந் துணைவியும்
வம்பாருந் தேக்குண் டிடவறி தெணும்வாதை

வஞ்சேதபொன் தேட்டங் கொடுமன
நொந்தேயிங் காட்டம் பெரிதெழ
வண்போதன் றீட்டுந் தொடாது படியேமன்

சங்காரம் போர்ச்சங் கையிலுடல்
வெங்கானம் போய்த்தங் குயிர்கொள
சந்தேகந் தீர்க்குந் தனுவுடன் அணுகாமுன்

சந்தாரஞ் சாத்தும் புயவியல்
கந்தாவென் றேத்தும் படியென
சந்தாபந் தீர்த்தென் றடியிணை தருவாயே

கங்காளன் பார்த்தன் கையிலடி
உண்டேதிண் டாட்டங் கொளுநெடு
கன்சாபஞ் சார்த்துங் கரதலன் எருதேறி

கந்தாவஞ் சேர்த்தண் புதுமல
ரம்பான்வெந் தார்ப்பொன் றிடவிழி
கண்டான்வெங் காட்டங் கனலுற நடமாடி

அங்காலங் கோத்தெண் டிசைபுவி
மங்காதுண் டாற்கொன் றதிபதி
அந்தாபந் தீர்த்தம் பொருளிணை அருள்வோனே

அன்பாலந் தாட்கும் பிடுமவர்
தம்பாவந் தீர்த்தம் புவியிடை
அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே.

1079. மங்கைக் கணவனும் வாழ்சிவ னுமயல்
பங்கப் படமிசை யேபனி போல்மதம்
வந்துட் பெருகிட வேவிதி யானவன் அருள்மேவி

வண்டுத் தடிகைபோ லாகியெ நாள்பல
பந்துப் பனைபழ மோடிள நீர்குட
மண்டிப் பலபல வாய்வினை கோலும வழியாலே

திங்கட் பதுசெல வேதலை கீழுற
வந்திப் புவிதனி லேமத லாயென
சிந்தைக் குழவியெ னுவனை தாதையும் அருள்கூரச்

செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல
பண்புத் தவழ்நடை போய்வித மாய்பல
சிங்கிப் பெருவிழி யாரவ மாயதில் அழிவேனோ
அங்கைத் தரியென வேயொரு பாலக
னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை
அம்பற் கொடுஅரி யாயிரண் யாசுரன் உடல்பீறி
அண்டர்க் கருள்பெரு மான்முதி ராவணி
சங்குத் திகிரிக ரோனரி நாரவ
ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன் மருகோனே
கங்கைச் சடைமுடி யோனிட மேவிய
தங்கப் பவளொளி பால்மதி போல்முக
கங்குற் றரிகுழ லாள்பர மேஸ்வரி அருள்பாலா
கந்துப் பரிமயில் வாகன மீதிரு
கொங்கைக் குறமக ளாசையொ டேமகிழ்
கங்கைப் பதிநதி காசியில் மேவிய பெருமாளே.

1080. மங்கை சிறுவர் தங்கள் கிளைஞர்
வந்து கதற உடல்தீயின்
மண்டி எரிய விண்டு புனலில்
வஞ்ச மொழிய விழஆவி
வெங்கண் மறலி தன்கை மருவ
வெம்பி இடறும் ஒருபாச
விஞ்சை விளையு மன்று னடிமை
வென்றி அடிகள் தொழவாராய்
சிங்க முழுவை தங்கு மடவி
சென்று குறமி னுடன்வாழ்வாய்
சிந்தை மகிழ அன்பர் புகழு
செந்தி லுறையு முருகோனே
எங்கு மிலகு திங்கள் கமல
மென்று புகலு முகமாதர்
இன்பம் விளைய அன்பி னணையும்
என்று மிளைய பெருமாளே.

1081. மச்ச மெச்சு சூத்ரம் ரத்த பித்த மூத்ரம்
வைச்சி றைச்ச பாத்ரம் அநுபோகம்
மட்க விட்ட சேக்கை உட்பு ழுத்த வாழ்க்கை
மட்கு லப்ப தார்த்தம் மடிவீடு
எய்ச்சி ளைச்ச பேய்க்கு மெய்ச்சி ளைச்ச நாய்க்கு
மெய்ச்சி ளைச்ச ஈக்கு மிரையாகும்
இக்க டத்தை நீக்கி அக்க டத்து ளாக்கி
இப்ப டிக்கு மோக்ஷம் அருள்வாயே
பொய்ச்சி னத்தை மாற்றி மெய்ச்சி னத்தை யேற்றி
பொற்ப தத்து ளாக்கு புலியூரா
பொக்க ணத்து நீற்றை யிட்டொ ருத்த னுர்க்கு
புத்தி மெத்த காட்டு புனவேடன்
பச்சி லைக்கும் வாய்க்கு ளெச்சி லுக்கும் வீக்கு
பைச்சி லைக்கு மாட்கொள் அரன்வாழ்வே
பத்தி சித்தி காட்டி அத்தர் சித்த மீட்ட
பத்த ருக்கு வாய்த்த பெருமாளே.

1082. மஞ்செ னுங்குழ லும்பிறை அம்புரு
வங்க ளென்சிலை யுங்கணை அங்கயல்
வண்டு புண்டரி கங்களை யும்பழி சிந்துபார்வை
மண்ட லஞ்சுழ லுஞ்செவி அங்குழை
தங்க வெண்டர ளம்பதி யும்பலு
மண்ட லந்திக ழுங்கமு கஞ்சிறு கண்டமாதர்
கஞ்சு கங்குர லுங்கழை அம்புய
கொங்கை செங்கிரி யும்பவ ளம்பொறி
கந்த சந்தன மும்பொலி யுந்துகில் வஞ்சிசேருங்
கஞ்ச மண்டளி னின்றிர சம்புகு
கண்ப டர்ந்திட ரம்பையெ னுங்தொடை
கண்கை அஞ்சர ணஞ்செயல் வஞ்சரை நம்புவேனோ
சஞ்ச சஞ்சக ணஞ்சக டுண்டுடு
டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு
தந்த னந்தன திந்திமி சங்குகள் பொங்குதாரை

சம்பு வின்கும ரன்புல வன்பொரு
கந்த னென்றிடு துந்துமி யுந்துவ
சங்க ளங்கொளி ருங்குடை யுந்திசை விஞ்சவேகண்

டஞ்ச வஞ்சசு ரன்திர ளுங்குவ
டன்ற டங்கலும் வெந்துபொ ரிந்திட
அண்ட ரிந்திர னுஞ்சர ணம்புக வென்றவேளே

அம்பு யந்தண ரம்பைகு றிஞ்சியின்
மங்கை அங்குடில் மங்கையொ டன்புடன்
அண்ட ருந்தொழு செந்திலி லின்புறு தம்பிரானே.

1083. மடலவிழ்ச ரோருகத்து முகிழ்நகையி லேவளைத்து
ம்ருகமதமு லாவுசித்ர முலையாலே

மலரமளி மீதணைத்து மதுரவமு தாதரத்தை
மனமகிழ வேயளித்து மறவாதே

உடலுயிர தாயிருக்க உனதெனதெ னுமறிக்கை
ஒருபொழுதொ ழாதுசற்றும் எனவேதான்

உரைசெய்மட வாரளித்த கலவிதரு மோதகத்தை
ஒழியவொரு போதகத்தை அருள்வாயே

தடமகுட நாகரத்ந படநெளிய ஆடுபத்ம
சரணபுயன் மாயனுக்கு மருகோனே

சரவணமி தேயுதித்த குமரமுரு கேசசக்ர
சயிலம்வல மாய்நடத்து மயில்வீரா

அடல்மருவு வேல்கரத்தி லழகுபெற வேயிருத்தும்
அறுமுகவ ஞானதத்வ நெறிவாழ்வே

அசுரர்குல வேரைவெட்டி அபயமென ஓலமிட்ட
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே.

1084. மடவிய ரெச்சி லுண்டு கையில்முத லைக்க ளைந்து
வறுமைத னிற்சு ழன்று வடிவான

சடமிக வற்றி நொந்து கலவிசெ யத்து ணிந்து
தளர்வுறு தற்கு முந்தி எனையாள்வாய்

படவர விற்சி றந்த இடமிதெ னத்து யின்ற
பசுமுகி லுக்கு கந்த மருகோனே
குடமுனி கற்க அன்று தமிழ்செவி யிற்ப கர்ந்த
குமரகு றத்தி நம்பு பெருமாளே.

1085. மணத்துக் கடம்பு புனைதோளா
வலத்துற் றெதிர்ந்து பொருசூரர்
நிணத்திற் றுளைந்த வடிவேலா
நிலத்திற் பொலிந்த வயலூரா
வணத்திற் கிளர்ந்த மயில்வாகா
மனத்திற் புகுந்து க்ருபையீவாய்
குணத்திற் சிறந்த மகராசி
குறத்திக் கிசைந்த பெருமாளே.

1086. மதப்பட்ட காதல் மடவார்தம்
வசப்பட்டு நாளுந் தடுமாறி
பதப்பட்டி டாமல் அலையாது
பதிக்கெட்டு ஞானம் அருள்வாயே
மிதப்பட்ட சூரர் குலகாலா
மிகப்பெற்ற மூவர் முதலோனே
இதப்பட்ட கான மயிலேறி
எனக்குற்ற நாத பெருமாளே.

1087. மதப்பட்டவி சாலக போலமு
முகப்பிற்சன வாடையு மோடையு
மருக்கற்புர லேபன லாடமு மஞ்சைவாரி
வயிற்றுக்கிடு சீகர பாணியு
மிகற்செக்கர்வி லோசன வேகமு
மணிச்சத்தக டோரபு ரோசமும் ஒன்றுகோல
விதப்பட்டவெ ளானையி லேறியு
நிறைக்கற்பக நீழலு லாவியு
மினுக்குப்பெறு சூளிகை மாளிகை இந்த்ரலோகம்

விளக்கச்சுரர் சூழ்தர வாழ்தரு
ப்ரப்புத்வகு மாரசொ ரூபக
வெளிப்பட்டெனை யாள்வய லூரிலி ருந்தவாழ்வே
இதப்பட்டிட வேகம லாலய
வொருத்திக்கிசை வானபொ னுயிர
மியற்றப்பதி தோறுமு லாவிய தொண்டர்தாள
இசைக்கொக்கவி ராசத பாவனை
யுளப்பற்றொடு பாடிட வேடையில்
இளைப்புக்கிட வார்மறை யோனென வந்துகானில்
திதப்பட்டெதி ரேபொதி சோறினை
யவிழ்த்திட்டவி நாசியி லேவரு
திசைக்குற்றச காயனு மாகிம றைந்துபோமுன்
செறிப்பித்தக ராவதின் வாய்மக
வழைப்பித்தபு ராணக்ரு பாகர
திருப்புக்கொளி யூருடை யார்புகழ் தம்பிரானே.

1088. மதவெங் கரிக்கி ரண்டு வலுகொம் பெனத்தி ரண்டு
வளருந் தனத்த ணிந்த மணியாரம்
வளர்செங் கதிர்க்கு விந்து ஒளிகொண் டெனத்து லங்கி
வரருந் திகைத்தி ரங்க வருமானார்
இதமிங் கிதப்ரி யங்கொள் நகைகொஞ் சநற்கு ணங்கள்
இணையின் றெனக்க லங்கி விளையாடி
இடுசங் கையற்று ணர்ந்து வலம்வந் துனைப்பு கழ்ந்து
தொழவின்று பொற்ப தங்கள் தருவாயே
நதியுந் திருக்க ரந்தை மதியுஞ் சடைக்க ணிந்த
நடநம் பருற்றி ருந்த கயிலாய
நகமங் கையிற்பி டுங்கு மசுரன் சிரத்தொ டங்கம்
நவதுங் கரத்நமுந்து திரடோளுஞ்
சிதையும் படிக்கொர் ரம்பு தனைமுன் தொடுத்த கொண்டல்
திறல்செங் கணச்சு தன்றன் மருகோனே
தினமுங் கருத்து ணர்ந்து சுரர்வந் துறப்ப ணிந்த
திருவம் பலத்த மர்ந்த பெருமாளே

1089. மதனச்சொற் காரக் காரிகள்
பவளக்கொப் பாடச் சீறிகள்
மருளப்பட் டாடைக் காரிகள் அழகாக

மவுனச்சுட் டாடிச் சோலிகள்
இசலிப்பித் தாசைக் காரிகள்
வகைமுத்துச் சாரச் சூடிகள் விலைமாதர்

குதலைச்சொற் சாரப் பேசிகள்
நரகச்சிற் சாடிப் பீடிகள்
குசலைக்கொட் சூலைக் காலிகள் மயல்மேலாய்க்

கொளுவிக்கட் டாசைப் பாசனை
பவதுக்கக் காரச் சூதனை
குமுதப்பொற் பாதச் சேவையில் அருள்வாயே

கதறக்கற் சூரைக் கார்கட
லெரியத்திக் கூறிற் பாழ்பட
ககனக்கட் டாரிக் காயிரை இடும்வேலா

கதிர்சுற்றிட் டாசைப் பால்கிரி
யுறைபச்சைப் பாசக் கோகில
கவுரிப்பொற் சேர்வைச் சேகர முருகோனே

திதலைப்பொற் பாணிக் கார்குயி
லழகிற்பொற் றோகைப் பாவையைத்
தினமுற்றுச் சாரத் தோள்மிசை அணைவோனே

திலதப்பொட் டாசைச் சேர்முக
மயிலுற்றிட் டேறிக் காழியில்
சிவன்மெச்சக் காதுக் கோதிய பெருமாளே.

1090. மதன தனுநிக ரிடைக்கேமன
முருக வருபிடி நடைக்கேயிரு
வனச பரிபுர மலர்க்கேமது காம்வாழும்

வகுள ம்ருகமத மழைக்கேமணி
மகர மணிவன குழைக்கேமட
மகளிர் முகுளித முலைக்கேகடல் அமுதூறும்

அதர மதுரித மொழிக்கேகுழை
அளவு மளவிய விழிக்கேதள
வணைய தொருசிறு நகைக்கேபணி மதிபோலும்
அழகு திகழ்தரு நுதற்கேயந
வரத மவயவ மனைத்தூடினு
மவச முறுமயல் தவிர்த்தாள்வதும் ஒருநாளே
உததி புதைபட அடைத்தாதவன்
நிகரி விரதமும் விடுக்காநகர்
ஒருநொ டியில்வெயி லெழச்சானகி துயர்தீர
உபய ஒருபது வரைத்தோள்களு
நிசிச ரர்கள்பதி தசக்ரீவமு
முருள ஒருகணை தெரித்தானும வனஞானம்
இதமி லவுணர்த மிருப்பாகிய
புரமு மெரியெழ முதற்பூதர
திலத குலகிரி வளைத்தானுமொர் மகிழ்வான
அருண கிரிகுக தலச்சீகர
மகர சலமுறை இடச்சூரொடு
சிகர கிரிபொடி படச்சாடிய பெருமாளே.

1091. மதனிக் கதுகொடு பதுமப் புதுமலர்
மலையப் படவிடு வலியாலே
வனமுற் றினவளை இனநித் திலமலை
வலையத் துகள்வளை கடலாலே
விதனப் படுமதி வதனக் கொடியற
வெருவிப் பரிமள அணைமீதே
மெலியக் கலைதலை குலையத் தருமினி
விரையக் குரவலர் தரவேணும்
புதனைச் சதுமுக விதியச் சுதனெதிர்
புனைவித் தவர்தொழு கழல்வீரா
பொருகைச் சரிவரி பெருகச் செறிவுறு
புனமெய்க் குறமகள் மணவாளா

முதுநற் சரவண மதனிற் சததள
முளரிப் பதிதனில் உறைவோனே
முதுமைக் கடலட ரசுரப் படைகெட
முடுகிப் பொரவல பெருமாளே.

1092. மதனேவிய கணையாலிரு
விணையால்புவி கடல்சாரமும்
வடிவாயுடல் நடமாடுக முடியாதேன்
மனமாயையொ டிருகாழ்வினை
அறமூதுடை மலம்வேர
மகிழ்ஞானக அநுபூதியின் அருள்மேவிப்
பதமேவுமு னடியாருடன்
விளையாடுக அடியேன்முனெ
பரிபூரண கிருபாகரம் உடன்ஞான
பரிமேலழ குடனேறிவி
ணவர்பூமழை அடிமேல்விட
பலகோடிவெண் மதிபோலவெ வருவாயே
சதகோடிவெண் மடவார்கட
லெனசாமரை அசையாமுழு
சசிசூரியர் சுடராமென ஒருகோடிச்
சடைமாமுடி முனிவோர்சர
ணெனவேதியர் மறையோதுக
சதிநாடக மருள்வேணியன் அருள்பாலா
விதியானவ னிளையாளென
துளமேவிய வளிநாயகி
வெகுமாலுற தனமேலணை முருகோனே
வெளியாசையொ டடைபூவணர்
மருகாமணி முதிராடக
வெயில்வீசிய அழகாதமிழ் பெருமாளே.

1093. மதிக்கு நேரெ னும் வாண்முகம் வான்மக
நதிக்கு மேல்வரு சேலொடு நேர்விழி
மணத்த வார்குழல் மாமாத ராரிரு கொங்கைமூழ்கி

மதித்த பூதர மாமாம னேலயர்
செருக்கி மேல்விழ நாடோறு மேமிக
வடித்த தேன்மொழி வாயூற லேநுகர் பண்டாயேன்
பதித்த நூபுர சீபாத மாமலர்
படைக்குள் மேவிய சீராவொ டேகலை
பணைத்த தோள்களொ டாறாறு தோடுகள் தங்குகாதும்
பணிக்க லாபமும் வேலோடு சேவலும்
வடிக்கொள் சூலமும் வாள்வீச நீள்சிலை
படைத்த வாகையும் நாடாது பாழில்ம யங்கலாமோ
கதித்து மேல்வரு மாசூரர் சூழ்படை
நொறுக்கி மாவுயர் தேரோடு மேகரி
கலக்கி யூர்பதி தீமூள வேவிடும் வஞ்சவேலா
களித்த பேய்கண மாகாளி கூளிகள்
திரட்பி ரேதமெ லாமேவி மூளைகள்
கடித்த பூதமொ டேபாடி யாடுதல் கண்டவீரா
குதித்து வானர மேலேறு தாறுகள்
குலைத்து நீள்கமு கூடாடி வாழைகொள்
குலைக்கு மேல்விழ வேரேறு போகமும் வஞ்சிதோயும்
குளத்தி லூறிய தேனூறல் மாதுகள்
குடித்து லாவியெ சேலோடு மாணிகொள்
குழிக்குள் மேவிய வானோர்க ளேதொழு தம்பிரானே.

1094. மதியஞ் சத்திரு நிறைந்த மாமுக
மயிலஞ் சக்கிளி யினங்க ளாமென
மதுரஞ் செப்பிய மடந்தை மேனகை ரதிபோலே
மருவும் பொற்குட மெழுந்த மாமுலை
வளர்வஞ் சிக்கொடி நடந்த வாறென
வருதுங் கக்கட லணங்கு போல்பவர் தெருவூடே
நிதமிந் தப்படி இருந்து வாறவர்
பொருள்தங் சப்பணி கலந்து போய்வர
நெறிதந் திட்டவர் வசங்க ளாமென உழலாதே
நிதிபொங் கப்பல தவங்க ளாலுனை
மொழியும் புத்திகள் தெரிந்து நாலுனை
நிகர்சந் தத்தமிழ் சொரிந்து பாடவும் அருள்தாராய்

நதிமிஞ் சச்சடை விரிந்த நாயக
ஹுமையன் பிற்செயு மிகுந்த பூசனை
நலமென் றுட்குளிர் சிவன்ப ராபரன் அருள்பாலா
நவகங் கைக்கிணை பகர்ந்த மாமணி
நதிபங் கிற்குல வுகந்து காபுரி
நகர்பொங் கித்தழை யவந்து வாழ்வுறு முருகோனே
கெதிதங் கத்தகு கணங்கள் வானவ
ரரிகஞ் சத்தவர் முகுந்தர் நாவலர்
கிளைபொங் கக்ருபை புரிந்து வாழ்கென அருள்நாதா
கெருவம் பற்றிகல் விளைந்த சூரொடு
தளமஞ் சப்பொரு தெழுந்து தீயுகள்
கிரவுஞ் சக்கிரி வகிர்ந்த வேலுள பெருமாளே.

1095. மதியணு விலாத கோபி குருநெறி யிலாத பாவி
மனநிலை நிலாத பேயன் அவமாயை
வகையது விடாத பேடி தவநினை விலாத மோடி
வரும்வகை இதேது காயம் எனநாடும்
விதியிலி பொலாத லோபி சபைதனில் வாராத கோழை
வினையிகல் விடாத கூளன் எனைநீயும்
மிகுபர மதான ஞான நெறிதனை விசார மாக
மிகுமுன தூருப தானம் அருள்வாயே
எதிர்வரு முதார சூர னிருபிள வதாக வேலை
இயலொடு கடாவு தீர குமரேசா
இனியது சொல்கீர னோது தமிழினை யுநாடி யோதும்
எளியவர் கள்வார மான கதிர்வேலா
நதியுட னராவு பூணு பரமர்கு ருநாத னென
நடைபெறு கடூர மான மயில்வீரா
நகைமுக விநோதஞான குறமகள் தெய்வானையோடு
நளினபி ரமூரின் மேவு பெருமாளே.

1096. மதிய மண்குண மஞ்சு நால்முக
நகர முன்கலை கங்கை நால்குண
மகர முன்சிக ரங்கி மூணிடை தங்குகோண

மதன மூன்தரி சண்ட மாருத
மிருகு ணம்பெறி லஞ்செ லோர்தெரு
வகர மிஞ்சிய கன்ப டாகமொ ரொன்றுசேரும்
கதிர டங்கிய அண்ட கோளகை
யகர நின்றிடும் ரண்டு கால்மிசை
ககன மின்சுழி ரண்டு கால்பரி கந்துபாயும்
கருணை யிந்திரி யங்கள் சோதிய
அருணை சந்திர மண்ட லீகரர்
கதிகொள் யந்திர விந்து நாதமொ டென்றுசேர்வேன்
அதிர பம்பைகள் டங்கு டாடிக
முதிர அண்டமொ டைந்து பேரிகை
டகுட டண்டட தொந்த தோதக என்றுதாளம்
அதிக விஞ்சையர் தும்ப்ரு நாரதரொ
டிதவி தம்பெறு சிந்து பாடிட
அமரர் துந்துமி சங்கு தாரைகள் பொங்கவூடு
உதிர மண்டல மெங்கு மாயொளி
யெழுகு மண்டிய மூந்து சூரரை
யுயர்ந ரம்பொடெ லும்பு மாமுடி சிந்திவீழ
உறசி னங்கொடெ திர்ந்து சேவக
மழைபு குந்துய ரண்டம் வாழ்வுற
வுரக னும்புலி கண்ட வூர்மகிழ் தம்பிரானே.

1097. மதியால்வித் தகனாகி மனதாலுத் தமனாகிப்
பதிவாகிச் சிவஞான பரயோகத் தருள்வாயே
நிதியேநித் தியமேயென் நினைவேநற் பொருளாயோய்
கதியேசொற் பரவேளே கருவூரிற் பெருமாளே.

1098. மந்தக் கடைக்கண் காட்டுவர்
கந்தக் குழற்பின் காட்டுவர்
மஞ்சட் பிணிப்பொன் காட்டுவர் அநுராக
வஞ்சத் திரக்கங் காட்டுவர்
நெஞ்சிற் பொருத்தங் காட்டுவர்
வண்பற் றிருப்புங் காட்டுவர் தனபாரச்

சந்தப் பொருப்புங் காட்டுவர்
உந்திச் சுழிப்புங் காட்டுவர்
சங்கக் கழுத்துங் காட்டுவர் விரகாலே

சண்டைப் பிணக்குங் காட்டுவர்
பண்டிட் டொடுக்கங் காட்டுவர்
தங்கட் கிரக்கங் காட்டுவ தொழிவேனோ

பந்தித் தெருக்கந் தோட்டிணை
இந்துச் சடைக்கண் சூட்டுமை
பங்கிற் றகப்பன் தாட்டொழு குருநாதா

பைம்பொற் பதக்கம் பூட்டிய
அன்பற் கெதிர்க்குங் கூட்டலர்
பங்கப் படச்சென் றோட்டிய வயலூரா

கொந்திற் புனத்தின் பாட்டிய
லந்தக் குறப்பெண் டாட்டொடு
கும்பிட் டிடக்கொண் டாட்டமொ டணைவோனே

குன்றிற் கடப்பந் தோட்டலர்
மன்றற் ப்ரசித்தங் கோட்டிய
கொங்கிற் றிருச்செங் கோட்டுறை பெருமாளே.

1099. மந்தரம தெனவேசி றந்த
கும்பமுலை தனிலேபு னைந்த
மஞ்சள்மண மதுவேது லங்க வகைபேசி

மன்றுகமழ் தெருவீதி வந்து
நின்றவரை விழியால்வ ளைந்து
வந்தவரை யருகேய ணைந்து தொழில்கூறி

எந்தளவு மினிதாக நம்பு
தந்துபொருள் தனையேபி டுங்கி
யின்பமருள் விலைமாதர் தங்கள் மனைதேடி

எஞ்சிமன முழலாம லுன்றன்
அன்புடைமை மிகவேவ ழங்கி
என்றனையு மினிதாள இன்று வரவேணும்

விந்தையெனு முமைமாது தந்த
கந்தகுரு பரதேவ வங்க
மென்றவரை தனில்மேவு மெந்தை புதல்வோனே
மிஞ்சுமழ கினிலேசி றந்த
மங்கைகுற மடமாது கொங்கை
மென்கிரியி லிதமாய ணைந்த முருகோனே
சிந்தைமகிழ் புலவோர்கள் வந்து
வந்தனைசெய் சரணார விந்த
செந்தமிழி லுனையேவ ணங்கு குருநாதர்
தென்றல்வரை முனிநாத ரன்று
கும்பிடந லருளேபொ ழிந்த
தென்பழநி மலைமேலு கந்த பெருமாளே.

1100. மந்தார மென்குவ டார்த னங்களி
லாரம ழுந்திட வேம ணம்பெறு
சந்தன குங்கும சேறு டன்பனி
நீர்கள் கலந்திடு வார்மு கஞ்சசி
மஞ்சுறை யுங்குழ லார்ச ரங்கயல்
வாள்விழி செங்கழு நீர்த தும்பிய கொந்தளோலை
வண்சுழ லுஞ்செவி யார்நு டங்கிடை
வாடந டம்புரி வார்ம ருந்திடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
மோகன வஞ்சியர் போல கம்பெற
வந்தவ ரெந்தவுர் நீர றிந்தவர்
போலவி ருந்தனெ ளுமை யங்கிட இன்சொல்கூறிச்
சுந்தர வங்கண மாய்நெ ருங்கிநிர்
வாருமெ னும்படி யால கங்கொடு
பஞ்சர சங்கொள வேணு மென்றவர்
சேம வளந்துழ தேன ருந்திட
துன்றுபொ னங்கையின் மீது கண்டவ
ரோடு விழைந்துமெ கூடி யின்புறு மங்கையோரால்

துன்பமு டங்கழி நோய்சி ரங்கொடு
சீபுழு வுஞ்சல மோடி றங்கிய
புண்குட வன்கடி யோடி ளஞ்சனி
சூலைமி குந்திட வேப றந்துடல்
துஞ்சிய மன்பதி யேபு குந்துய
ராழிவி டும்படி சீப தம்பெறு விஞ்சைதாராய்

அந்தர துந்துமி யோடு டன்கண
நாதர் புகழ்ந்திட வேத விஞ்சைய
ரிந்திர சந்திரர் சூரி யன்கவி
வாணர் தவம்புலி யோர்ப தஞ்சலி
அம்புய னந்திரு மாலொ டிந்திரை
வாணி யணங்கவ ளோட ருந்தவர் தங்கள்மாதர்

அம்பர ரம்பைய ரோடு டன்திகழ்
மாவுர கன்புவி யோர்கள் மங்கையர்
அம்புவி மங்கைய ரோட ருந்ததி
மாதர் புகழ்ந்திட வேந டம்புரி
அம்புய செம்பதர் மாட கஞ்சிவ
காம சவுந்தரி யாள்ப யந்தருள் கந்தவேளே

திந்திமி திந்திமி தோதி திந்திமி
தீததி திந்ததி தீதி திந்திமி
தந்தன தந்தன னாதெ னந்தன
தானத னந்தன னாவெ னும்பறை
செந்தவில் சங்குட னேமு ழங்கசு
ரார்கள் சிரம்பொடி யாய்வி டுஞ்செயல் கண்டவேலா

செந்தினை யின்புன மேற்கு றிஞ்சியில்
வாழுமி ளங்கொடி யாள்ப தங்களில்
வந்துவ ணங்கிநி னேமு கம்பெறு
தாளழ கங்கையின் வேலு டன்புவி
செம்பொனி னம்பல மேல கம்பிர
கார்ச மந்திர மீதெ மர்ந்தருள் தம்பிரானே.

**1101.** மயலோது மந்த நிலையாலும் வஞ்ச
வசைபேசு கின்ற மொழியாலும்
மறிபோலு கின்ற விழிசேரு மந்தி
மதிநேரு கின்ற நுதலாலும்
அயிலேநி கர்ந்த விழியாலும் அஞ்ச
*நடையாலும் அங்கை வளையாலும்
அறிவேய ழிந்து அயர்வாகி நைந்து
அடியேன்ம யங்கி விடலாமோ
மயிலேறி யன்று நொடிபோதி லண்டம்
வலமாக வந்த குமரேசா
மறிதாவு செங்கை அரனாரி டங்கொள்
மலைமாது தந்த முருகேசா
நயவாறு யர்ந்த மணிமாட மும்பர்
நடுவேநி றைந்த மதிசூழ
நறைவீசு கும்ப குடமேவு கம்பை
நகர்மீத மர்ந்த பெருமாளே.

**1102.** மருக்குல மேவும் குழற்கனி வாய்வெண்
மதிப்பிள வாகும் நுதலார்தம்
மயக்கினி லேநண் புறப்படு வேனுன்
மலர்க்கழல் பாடுந் திறம்நாடாத்
தருக்கனு தாரந் துணுக்கிலி லோபன்
சமத்தறி யாவன் பிலிமூகன்
தலத்தினி லேவந் துறப்பணி யாதன்
தனக்கினி யார்தஞ் சபைதாராய்
குருக்குல ராஜன் தனக்கொரு தூதன்
குறட்பல மாயன் நவநீதம்
குறித்தயில் நேயன் திருப்பயில் மார்பன்
குணத்ரய நாதன் மருகோனே
திருக்குள நாளும் பலத்திசை மூளுஞ்
சிறப்பத ருளெண் டிசையோடும்
திரைக்கடல் சூழும் புவிக்குயி ராகுந்
திருத்தணி மேவும் பெருமாளே.

1103. மருக்கு லாவிய மலரணை கொதியாதே
வளர்த்த தாய்தமர் வசையது மொழியாதே
கருக்கு லாவிய அயலவர் பழியாதே
கடப்ப மாலையை யினிவர விடவேணும்
தருக்கு லாவிய கொடியிடை மணவாளா
சமர்த்த னேமணி மரகத மயில்வீரா
திருக்கு ராவடி நிழல்தனில் உறைவோனே
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே.

1104. மருமலரி னன்து ரந்து விடவினைய ருந்தி அந்தி
மதியொடுபி றந்து முன்பெய் வதையாலே
வகைதனைம றந்தெ ழுந்து முலைதனைய ருந்தி அந்த
மதலையென வந்து குன்றின் வடிவாகி
இருமயல்கொ டுந்து வண்டு பொதுவையர கம்பு குந்து
இரவுபகல் கொண்டொ டுங்கி அசடாகும்
இருவினைபொ திந்த இந்த ஜனனமர ணந்து றந்துன்
இணையடிவ ணங்க என்று பெறுவேனோ
திருவொடுபெ யர்ந்தி ருண்ட வனமிசைந டந்தி லங்கை
திகழெரியி டுங்கு ரங்கை நெகிழாத
திடமுளமு குந்தர் கஞ்சன் வரவிடுமெல் வஞ்ச கங்கள்
செறிவுடன றிந்து வென்ற பொறியாளர்
பரிவொடும கிழ்ந்தி றைஞ்சு மருதிடைத வழ்ந்து நின்ற
பரமபத நண்ப ரன்பின் மருகோனே
பதுமமிசை வண்ட லம்பு சுனைபலவி ளங்கு துங்க
பழநிமலை வந்த மர்ந்த பெருமாளே.

1105. மருமல்லி யார்குழலின் மடமாதர்
மருளுள்ளி நாயடியன் அலையாமல்
இருநல்ல வாகுமுன தடிபேண
இனவல்ல மானமன தருளாயோ
கருநெல்லி மேனியரி மருகோனே
கனவள்ளி யார்கணவ முருகேசா
திருவல்லி தாயமதில் உறைவோனே
திகழ்வல்ல மாதவர்கள் பெருமாளே.

1106. மருவரு வெற்றி மலர்தொடா விற்கை
வலிசெயா நிற்கு மதனாலும்
மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட
மதிசுடா நிற்கு மதனாலும்
இருகணால் முத்த முதிரயா மத்தி
னிரவினால் நித்த மெலியாதே
இடருறு மெத்த மயல்கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்
கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா
கனகமா ணிக்க வடிவனே மிக்க
கதிரகா மத்தில் உறைவோனே
முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா
முடுகிமே விட்ட கொடியசூர் கெட்டு
முறியவேல் தொட்ட பெருமாளே.

1107. மருவு கடல்முகி லனைய குழல்மதி
வதன நுதல்சிலை பிறைய தெனும்விழி
மச்சப் பொற்கணை முக்குப் பொற்குமி
ழொப்பக் கத்தரி யொத்திட் டச்செவி
குமுத மலரித ழமுத மொழிநிரை
தரள மெனுநகை மிடறு கமுகென
வைத்துப் பொற்புய பச்சைத் தட்டையொ
டொப்பிட் டுக்கம லக்கைப் பொற்றுகிர்
வகைய விரலொடு கிளிகள் முகநக
மெனவு மிகலிய குவடு மிணையென
வட்டத் துத்திமு கிழ்ப்பச் சக்கரம்
வைத்துப் பொற்குட மொத்திட் டெத்திகழ் முலைமேவும்
வடமு நிரைநிரை தரள பவளமொ
டசைய பழுமர இலைவ யிறுமயி
ரற்பத் திக்கிணை பொற்புத் தொப்புளும்
அப்புக் குட்சுழி யொத்துப் பொற்கொடி

மதன னுருதுடி யிடையு மினலென
அரிய கடிதட மகிர்த கழைரச
மட்டுப் பொற்கம லத்திற் சக்கிரி
துத்திப் பைக்கொரு மித்துப் பட்டுடை
மருவு தொடையிணை கதலி பாடுகொள்
கணையு முழுவென கமட மெழுதிய
வட்டப் புத்தக மொத்துப் பொற்சர
ணத்திற் பிற்புற மெத்துத் தத்தைகள் மயில்போலே

தெருவில் முலைவிலை யுரைசெய் தவரவர்
மயல்கொ டணைவர மருள்செய் தொழில்கொடு
தெட்டிப் பற்பல சொக்கிட் டுப்பொருள்
பற்றிக் கட்டில ணைக்கொப் பிப்புணர்
திலத மழிபட விழிகள் சுழலிட
மலர்க ளணைகுழ லிடைகொள் துகில்பட
தித்தித் துப்பிதழ் வைத்துக் கைக்கொடு
கட்டிக் குத்துமு லைக்குட் கைப்பட
திரையி லமுதென கழையில் ரசமென
பலவில் சுளையென வுருக வுயர்மயல்
சிக்குப் பட்டுடல் கெட்டுச் சித்தமும்
வெட்கித் துக்கமு முற்றுக் கொக்கென நரைமேவிச்

செவியொ டொளிர்விழி மறைய மலசல
மொழுக பலவுரை குழற தடிகொடு
தெத்திப் பித்தமு முற்றித் தற்செய
லற்றுச் சிச்சியெ னத்துக் கப்பட
சிலர்கள் முதுவுடல் வினவு பொழுதினி
லுவரி நிறமுடை நமனு முயிர்கொள
செப்பற் றுப்பிண மொப்பித் துப்பெய
ரிட்டுப் பொற்பறை கொட்டச் செப்பிடு
சென்ன மிதுவென அழுது முகமிசை
அறைய அணைபவ ரெடென சுடலையில்
சிற்றிக் குக்கிரை யிட்டிட் டிப்படி
நித்தத் துக்கமெ டுத்திட் டுச்சட முழல்வேனோ

குருவி னுருவென அருள்செய் துறையினில்
குதிரை கொளவரு நிறைத வசிதலை
கொற்றப் பொற்பதம் வைத்திட் டற்புத
மெற்றிப் பொற்பொரு ளிட்டுக் கைக்கொளு
முதல்வ ரிளகலை மதிய மடைசடை
அருண வுமைமழு மருவு திருபுயர்
கொட்டத் துப்புரர் கெட்டுப் பொட்டெழ
விட்டத் திக்கனை நக்கர்க் கற்புத
குமர னெனவிரு தொலியு முரசொடு
வளையு மெழுகட லதிர முழவொடு
கொட்டத் துட்டரை வெட்டித் தட்கட
லொப்பத் திக்கும டுத்துத் தத்திட அமர்மேவிக்

குருகு கொடிசிலை குடைகள் மிடைபட
மலைகள் பொடிபட வுடுக ளுதிரிட
கொத்திச் சக்கிரி பற்றப் பொற்பரி
எட்டத் திக்குமெ டுத்திட் டுக்ரால்
குமர குருபர குமர குருபர
குமர குருபர எனவொ தமரர்கள்
கொட்பப் புட்பமி றைத்துப் பொற்சர
ணத்திற் கைச்சிரம் வைத்துக் குப்பிட
குலவு நரிசிறை கழுகு கொடிபல
கருட னடமிட குருதி பருகிட
கொற்றப் பத்திர மிட்டுப் பொற்கக
னத்தைச் சித்தமி ரக்ஷித் துக்கொளு மயில்வீரா

சிரமொ டிரணிய னுடல்கி ழியவொரு
பொழுதி னுகிர்கொடு அரிய னடமிடு
சிற்பர்த் திட்பதம் வைத்துச் சக்கர
வர்த்திக் குச்சிறை யிட்டுச் சுக்கிரன்
அரிய விழிகெட இருப தமுமுல
கடைய நெடியவர் திருவு மழகியர்
தெற்குத் திக்கில ரக்கர்க் குச்சின
முற்றுப் பொற்றசர் தற்குப் புத்திர

செயமு மனவலி சிலைகை கொடுகர
மிருப துடைகிரி சிரமொர் பதும்விழ
திக்கெட் டைக்கக னத்தர்க் குக்கொடு
பச்சைப் பொற்புய லுக்குச் சித்திர மருகோனே

திலத மதிமுக அழகி மரகத
வடிவி பரிபுர நடனி மலர்பத
சித்தர்க் குக்குறி வைத்திட் டத்தன
முத்தப் பொற்கிரி யொத்தச் சித்திர
சிலைகொள் திருசர சுவதி வெகுவித
சொருபி முதுவிய கிழவி யியல்கொடு
செட்டிக் குச்சுக முற்றத் தத்துவ
சித்திற் சிற்பதம் வைத்தக் கற்புறு
திரையி லமுதென மொழிசெய் கவுரியி
னரிய மகனென புகழ்பு விநகரில்
செப்புப் பொற்றன முற்றப் பொற்குற
தத்தைக் குப்புள கித்திட் டொப்பிய பெருமாளே.

1108. மருவுமஞ்சு பூத முரிமைவந்தி டாது
மலமிதென்று போட அறியாது
மயல்கொளிந்த வாழ்வு அமையுமெந்த நாளும்
வகையில்வந்தி ராத அடியேனும்
உருகியன்பி னோடு உனைநினைந்து நாளும்
உலகமென்று பேச அறியாத
உருவமொன்றி லாத பருவம்வந்து சேர
உபயதுங்க பாத மருள்வாயே
அரிவிரிஞ்சர் தேட அரியதம்பி ரானும்
அடிபணிந்து பேசி மறைமூலம்
அருளுகென்ற போது பொருளிதென்று காண
அருளுமைந்த ஆதி குருநாதா
திரியுமும்பர் நீடு கிரிபிளந்து சூரர்
செருவடங்க வேலை விடுவோனே
செயலமைந்த வேத தொனிமுழங்கு வீதி
திருவிரிஞ்சை மேவு பெருமாளே.

**1109.** மருவு மடியவ ரடியவ ரடிமையு
மருண மணியணி கணபண விதகர
குடில செடிலினு நிகரென வழிபடு குணசீலா
குழுவி லொழுகுதல் தொழுகுதல் விழுகுத
லழுகு தலுமிலி நலமிலி பொறையிலி
குசல கலையிலி தலையிலி நிலையிலி விலைமாதர்
மருவு முலையெனு மலையினி லிடரியு
மளக மெனவள ரடவியில் மறுகியு
மகர மெறியிரு கடல்தனில் முழுகியு முழலாமே
வயலி நகரியி லருள்பெற மயில்மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே
உருவு பெருகயல் கரியதொர் முகிலெனு
மருது நெறிபட முறைபட வரைதனி
லுரலி னெடுதவழ் விரகுள விளமையு மிகமாறி
உமிழ நிரைகளி னிடர்கெட வடர்கிரி
கவிகை யிடவல மதுகையு நிலைகெட
உலவில் நிலவறை உருவிய வருமையு மொருநூறு
கிருப ரணமுக வரசர்கள் வலிதப
விசயன் ரதமுதல் நடவிய வெளிமையு
நிகில செகதல முறைசெயு மரிதிரு மருகோனே
நிலவு சொரிவளை வயல்களு நெடுகிய
குடக தமனியு நளினமு மருவிய
நெருவை நகருறை திருவுரு வழகிய பெருமாளே.

**1110.** மருவுமலர் வாச முறுகுழலி னாலும்
வரிவிழியி னாலு மதியாலும்
மலையினிக ரான இளமுலைக ளாலு
மயல்கள்தரு மாதர் வகையாலும்
கருதுபொரு ளாலு மனைவிமக வான
கடலலையில் மூழ்கி அலைவேனோ
கமலபத வாழ்வு தரமயிலின் மீது
கருணையுட னேமுன் வரவேணும்

அருமறைக ளோது பிரமன்முதல் மாலும்
அமரர்முனி ராசர் தொழுவோனே
அகிலதல மோது நதிமருவு சோலை
அழகுபெறு போக வளநாடா
பொருதவரு சூரர் கிரியுருவ வாரி
புனல்சுவற வேலை எறிவோனே
புகலரிய தான தமிழ்முனிவ ரோது
புகழிமலை மேவு பெருமாளே.

**1111.** மருவுமு கிலான வளக நீடு வளையிலே
புருவவி லாலான விழிக ளாடு மலையிலே
மதிமுக மாலான இணைய கோடு முலையிலே தடுமாறி
வதனம தாயாடை நொடிவ தான இடையிலே
விதவித மாபேடை அனமு நாண நடையிலே
வனிதைய ராமோடை உறவ தான கடையிலேமயலாகி
கருவினி லாபாச சனன மான நரகிலே
உருவெடு யானீச மணைய ரீன விரகிலே
கவலையி ஞனச வடிமை மான மாபிலே உழல்வேனோ
கலைமக ளாதார கருணை யான நிலையிலே
நிலையக மாதார வருண ஞான வழியிலே
கவிபுனை ஆதார திறமை பானு மொழியிலே
அருள்வாயே
பிரமனை ஓதாத வகையி லோரு சிறையிலே
இடுபவ னேதாத சிவனு மோரு நிறையிலே
பிரணவ மேதாத குருவ தாகு முறையிலே
புகல்வோனே
பிணையுற மாமோடி குறவி ஈயு திணையிலே
துணைபெற நீரோடி அருவி பாயு சுனையிலே
பெருமையி லேகூடி மருவு பூய நினைவிலே
வரவேணும்
தருமமு மேசில மவியு மாயர் மாபினோ
ரொருமனு வாவல மிலகு சேயர் கயமுனே
தயைபுரி கோபால தனத மாயர் மருகனே
மயில்வீரா

தகுமென வேநீடி வளரு மாறு முககுகா
மிகுவடி யாராடி மகிமை கூறு மரகரா
தமிழுட னேகோடி வரைக டோறு முறைபவா
பெருமாளே.

1112. மருவு லாவிடு மோதிகு லைப்பவர்
சமர வேலெனு நீடுவி ழிச்சியர்
மனதி லேகப டுருப ரத்தையர் அதிகேள்வர்
மதன னோடுறழ் பூசலி டைச்சிய
ரிளைஞ ராருயிர் தாவுமு லைச்சியர்
மதுர மாமொழி பேசுகு ணத்தியர் தெருமீதே
சருவி யாரையும் வாவென ழைப்பவர்
பொருளி லேவெகு ஆசைப ரப்பிகள்
சகல சூதக மாயைப டிப்பரை அணுகாதே
சலச மேவிய பாதநி னைத்துமு
னருணை நாடதி லோதுதி ருப்புகழ்
தணிய வோகையி லோத எனக்கருள் புரிவாயே
அரிய கானக மேவுகு றத்தித
னிதணி லேசில நாளும னத்துட
னடவி தோறுமெ வாழியல் பத்தினி மணவாளா
அசுரர் வீடுகள் நூறுபொ டிப்பட
உழவர் சாகர மோடியொ ளித்திட
அமரர் நாடுபொன் மாரிமி குத்திட விடுவோனே
*திருவின் மாமர மார்பழ னப்பதி
அயிலு சோறவை யாளுது றைப்பதி
திசையி னான்மறை தேடிய முற்குடி விதியாதிச்
சிரமு மாநிலம் வீழ்தரு மெய்ப்பதி
பதும நாயகன் வாழ்பதி நெய்ப்பதி
திருவை யாறுட னேழுதி ருப்பதி பெருமாளே.

---

*திருவின் மாநகர் வீறு திருப்பழ, னியினி லேரக மாகுர் திருத்தணி திசையி னான்மறை தேடரு ணைப்பதி யலைவாயில், நிகழ்மெய் கூடலிற் சோலை மலைப்பதி கதிரு காமகிரி ராமலை கச்சியில் திருவையாறுடன் மேவு தலத்துறை பெருமாளே.

**1113.** மருவேசெ றித்த குழலார்ம யக்கி
மதனாக மத்தின் விரகாலே
மயலேஎ ழுப்பி இதமேஅ ருத்தி
மலைபோல்மு லைக்குள் உறவாகிப்

பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்ச மறவாதே
பிழையேபொ றுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே

குருவாய ரற்கு முபதேசம் வைத்த
குகனேகு றத்தி மணவாளா
குளிர்கால்மி குத்த வளர்போத முற்ற
குடகாவி ரிக்கு வடபால்வாழ்

திருமால்த னக்கு மருகாஉ மைக்கொர்
சிறுவாக ரிக்கும் இளையோனே
திருவேர கத்தி லுறைவாய ரக்கர்
சிரமேது ணித்த பெருமாளே.

**1114.** மலடி வயிற்று மகன்போ லேஒரு
புதைய லெடுத்த தனம்போ லேஒளிர்
வயிர மடித்த களம்போ லேஇள முலைமாதர்

வலிய அணைத்த சுகம்போ லேகதிர்
ஒளிவி டுரத்ன வடம்போ லேஎழு
பரிம ளபுஷ்ப வனம்போ லேசுர நதிபோலே

அலைக டல்பெற்ற ருள்பெண்போ லேவரு
புதல்வர் தமக்கி ருகண்போ லேகரை
அருகி லெடுத்த சலம்போ லேஉன தழகாமோ

அமுது பொசித்த ரசம்போ லேதிரை
கடல்ம டைவிட்ட சலம்போ லேதினம்
அதிச யமுத்த மிழ்அன்பா யோதவுன் அருள்தாராய்

கலக லெனச்சொல் சிலம்பா சீர்பெறு
மலைம கள்பெற்ற குழந்தாய் மாமத
கரிமு கனுக்கொ ருதம்பீ கானவர் மகளாமோர்

கடிம லர்மொய்த்த சுரும்பே ஞானிகள்
மனதில் ருசித்த கரும்பே வானவர்
கவலை தணித்த ருள்பண்பே மாயவன் மருகோனே
குலிசன் மகட்கொரு நண்பே எழிசை
உரைகள் சுவைத்த கடம்பா போய்வரு
குரைக டலுக்கொ ருசம்பா ஷய்வரு வடிவேலா
கொடிய பிணிக்கு மருந்தே தாள்பணி
அடியர் தமக்கு விருந்தே கான்மயில்
குதிரை நடத்து துரங்கா ஏரக முருகோனே.

**1115.** மலந்தோற் சலம்போர்த் தெலும்பாற் கலந்தீட்
டிடுங்கூட் டினிற்றங் கிடுமாய
மயங்காத் தியங்காப் பயங்கோட் டிடுங்காற்
றுடன்போக் குறத்தந் தையுமாதும்
குலந்தாய்க் குடம்பாற் பிறந்தேற் றிடுங்கோத்
தடங்கூப் பிடத்தம் புவியாவும்
குலைந்தார்ப் பெழுங்காட் டிலந்தாட் களன்பாற்
குணங்காத் துணைக்கும் பிடஆளாய்
தலந்தாட் டொடண்டாத் தளர்ந்தார்க் கிளங்காத்
தடந்தாட் புடைத்தன் பினர்வாழத்
தருங்கூத் தரும்பார்த் துகந்தேத் திடஞ்சாத்
திரஞ்சாற் றிநிற்கும் பெருவாழ்வே
அலைந்தாற் றெழுங்கோச் சலந்தீக் கலந்தாட்
டரம்போச் செனக்கன் றிடும்வேலா
அறங்காத் தறங்காத் திறம்பார்த் திருந்தோர்க்
கயர்ந்தோர்க் களிக்கும் பெருமாளே.

**1116.** மலரணி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி இன்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுக மதியாலே
மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே

நிலவெறி அங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதிபறி அந்தப் பிலுக்கி லேசெயும் ஒயிலாலே

நிதமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்

அலையநி னைந்துற் பனத்தி லேயனு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
அறிவும ழிந்தற் பனத்தி லேநிதம் உலைவேனோ

அசடனை வஞ்சச் சமர்த்த னாகிய
கசடனை உன்சிற் கடைக்க ணாடியும்
அலர்கொடு நின்பொற் பதத்தை யேதொழ
அருள்தாராய்

பலபல பைம்பொற் பதக்க மாரமும்
அடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே

பதியினில் மங்கைக் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழநியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே.

**1117.** மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து வீழ
மணபரி மளங்கள் வேர்வை அதனோடே
வழிபட இடங்க ணாட பிறைநுதல் புரண்டு மாழ்க
வனகலை நெகிழ்ந்து போக இளநீரின்

முலையிணை ததும்ப நூலின் வகிரிடை சுழன்று வாட
முகமுக மொடொன்ற பாயல் அதனூடே
முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் அலங்க லாடு
முடிவடி வொடங்கை வேலு மறவேனே

சிலைநுத விளம்பெண் மோகி சடையழ கியெந்தை பாகி
திகழ்மர கதம்பொன் மேனி உமைபாலா
சிறுநகை புரிந்து சூரர் கிரிகட லெரிந்து போக
திகழயி லெறிந்த ஞான முருகோனே

கொலைமிக பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோளா
குணவலர் கடம்ப மாலை அணிமார்பா
கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான
குலகிரி மகிழ்ந்து மேவு பெருமாளே.

1118. மலைக்கனத் தெதன மார்பினி லேயிரு
முலைக்கனத் துற வேயிடை நூலென
வளைத் துகுப்பமை யார்குழல் தோளொடும் அலைமோத
மயிற்குலத்தவ ராமென நீள்கலை
நெகிழ்த்துவித் திரு வார்விழி வேல்கொடு
மயக்கிநத்தினர் மேல்மறு பாடும விழியேவி
விலைக்கெனத் தன மாயிர மாயிர
முலைக்களப்பினு மாசைபொ தாதென
வெறுப்பர்குத்திர காரியர் வேசையர் மயல்மேலாய்
வெடுக்கெடுத்தும காபிணி மேலிட
முடக்கிவெட்கும தாமத வீணனை
மினற்பொலிப்பத மோடுற வேயருள் புரிவாயே
அலைக்கடுத்தசு ரார்பதி கோவென
விடப்பணச்சிர மாயிர சேடனும்
அதிர்த்திடக்கதிர் வேல்விடு சேவக மயில்வீரா
அடைக்கலப்பொரு ளாமென நாயெனை
அழைத்துமுத்திய தாமரு பூதியெ
னருட்டிருப்புக ழோதுக வேல்மயி லருள்வோனே
சிலைக்கைமுப்புர நீறெழ வேதிரு
வுளத்திலற்பமெ ணுநினை தேசிகர்
சிறக்கமுத்தமி ழாலொரு பாவக மருள்பாலா
திருக்கடப்பலர் சூடிய வார்குழல்
குறத்திகற்புட னேவிளை யாடியொர்
திருத்துருத்தியில் வாழ்முரு காசுரர் பெருமாளே.

1119. மலைமுலைச்சியர் கயல்விழிச்சியர்
மதிமுகத்தியர் அழகான
மயில்நடைச்சியர் குயில்மொழிச்சியர்
மனதுருக்கியர் அணைமீதே

கலைநெகிழ்த் தியு ளுறவணைத்திடு
 கலவியிற்றுவள் பிணிதீராக்
கசடனைக்குண அசடனைப்புகல்
 கதியில்வைப்பதும் ஒருநாளே
குலகிரிக்குல முருவவிட்டமர்
 குலவுசித்திர முனைவேலா
குறவர்பெற்றிடு சிறுமியைப்புணர்
 குமரசற்குண மயில்வீரா
தலமதிற்புக ழமரரைச்சிறை
 தனையகற்றிய அருளாளா
தருநிரைத்தெழு *பொழில்மிகுத்திடு
 தணிமலைக் குயர் பெருமாளே.

1120. மழையளக பாரமுங் குலைந்து
 வரிபரவு நீலமுஞ் சிவந்து
 மதிமுகமும் வேர்வுவந் தரும்ப அணைமீதே
மருடதன பாரமுங் குலுங்க
 மணிகலைக ளேறவுந் திரைந்து
 வசமழிய வேபுணர்ந் தணைந்தி ருவராகங்
குழையஇத ழூறலுண் டழுந்தி
 குருகுமொழி வாய்மலர்ந் துகொஞ்ச
 குமுதபதி போகபோங் குகங்கை குதிபாயக்
குழியில்விழி யாவிதங் களொங்கு
 மதனகலை ஆகமங் கள்விஞ்சி
 குமரியர்க ளோடுழன் றுநைந்து விடலாமோ
எழுபடைகள் சூரவஞ் சரஞ்ச
 இரணகள மாகவன் றுசென்று
 எழுசிகர மாநிலங் குலுங்க விசையூடே
எழுகடலு மேருவுங் கலங்க
 விழிபடர்வு தோகைகொண் டதுங்க
 இயல்மயிலின் மாறுகொண் டமர்ந்த வடிவேலா

*குருமலைப்பதி தனின்மகிழ்ச்சிகொள் பெருமாளே.

ஒருகளவு நீறுகொண் டுசென்று
குறவர்மகள் காலினும் பணிந்து
ஒருவரறி யாமலுந் திரிந்து புனமீதே
உரியபரி தாபமுந் தணிந்து
புதியமட லேறவுந் துணிந்து
புளகிதப யோதரம்புணர்ந்த பெருமாளே.

1121. மறலி போற்சில நயன வேற்கொடு
மாயா தோயா வேயார் தோளார் மறையோதும்
வகையு மார்க்கமு மறமு மாய்த்திட
வாறு ராயா தேபோ மாறு இடதீர
விறலு மேற்பொலி அறிவு மாக்கமும்
வேறாய் நீரே றுதேர் மேடாய் வினையூடே
விழுவி னூற்களை எழும தாற்பெரு
வீரா பாராய் வீணே மேவா தெனையாளாய்
மறலி சாய்த்தவ ரிறைப ராக்ரம
மால்கா ணாதே மாதோ டேவாழ் பவர்சேயே
மறுவி லாத்திரு வடிகளுட் டொறும்
வாயார் நாவால் மாறா தேயோ தினர்வாழ்வே
குறவர் காற்புன அரிவை தோட்கன
கோடார் மார்பா கூர்வே லாலே அசுரேசர்
குலைய மாக்கட லதனி லோட்டிய
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே.

1122. மனக பாட பாடீர தனத ராத ராரூப
மதன ராச ராசிப சரகோப
வருண பாத காலோக தருண சோபி தாகார
மகளி ரோடு சீராடி இதமாடிக்
குனகு வேனை நாணாது தனகு வேனை வீணான
குறைய னேனை நாயேனை வினையேனைக்
கொடிய னேனை ஓதாத குதலை யேனை நாடாத
குருட னேனை நீயாள்வ தொருநாளே

அநக வாம னுகார முனிவ ராக மால்தேட
அரிய தாதை தானெவ மதுரேசன்
அரிய சார தாபீட மதனி லேறி யீடேற
அகில நாலு மாராயும் இளையோனே
கனக பாவ னுகார பவள கோம ளாகார
கலப சாம ளாகார மயிலேறும்
கடவு ளேக்ரு பாகார கமல வேத னுகார
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

**1123.** மனத்தி ரைந்தெழு மீளையு மேவிட
கறுத்த குஞ்சியு மேநரை யாயிட
மலர்க்க ணுண்டிரு ளாகியு மேநடை தடுமாறி
வருத்த முந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கிளை யோருடன் யாவரும்
வசைக்கு றுஞ்சொலி னுல்மிக வேதின நகையாட
எனைக்க டந்திடு பாசமு மேகொடு
சினத்து வந்தெதிர் சூலமு மேகையி
லெடுத்தெ திர்ந்தழல் வாய்விட வேபயம் உறவேதான்
இழுக்க வந்திடு தூதர்க ளானவர்
பிடிக்கு முன்புன தாள்மல ராகிய
இணைப்ப தந்தர வேமயில் மீதினில் வரவேணும்
கனத்த செந்தமி ழால்நினை யேதினம்
நினைக்க வுந்தரு வாயுன தாருள்
கருத்தி ருந்துறை வாயென தாருயிர் துணையாகக்
கடற்ச லந்தனி லேயொளி சூரனை
உடற்ப குந்திரு கூறென வேயது
கதித்தெ ழுந்தொரு சேவலு மாமயில் விடும்வேலா
அனத்த னுங்கம லாலய மீதுறை
திருக்க லந்திடு மாலடி தேடிய
அரற்க ரும்பொருள் தானுரை கூறிய குமரேசா
அறத்தை யுந்தரு வோர்கன பூசுரர்
நினைத்தி னந்தொழு வாரம ராய்புரி
யருட்செ றிந்தவி நாசியுள் மேவிய பெருமாளே.

**1124.** மனத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தென்றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்

மலர்ச்செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத்தங்கும் பலவோரும்

எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தின்கண் கணக்கென்றன்
றிளைத்தன்புங் கொடுத்தங்கங் கழியாமுன்

இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் ருெழிற்பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே

கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித்தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்துஞ் சிடுமாலும்

கதித்தோண்பங் கயத்தன்பண்
பனைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்

தினைக்குன்றந் தனிற்றங்குஞ்
சிறுப்பெண்குங் குமக்கும்பந்
திருச்செம்பொன் புயத்தென்றும் அணைவோனே

செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே.

**1125.** மனநினை சுத்தஞ் சூது வாதிகள்
மணிநகை தைக்குங் கூளி மூளிகள்
மதபல நித்தம் பாரி நாரிகள் அழகாக

வளைகுழை முத்தும் பூணும் வீணிகள்
விரகிகள் மெச்சுண் டாடி பாடிகள்
வாமிகு வெட்கம் போல ஓடிகள் தெருவூடே

குனகிகள் பட்சம் போல பேசிகள்
தனகிக ளிச்சம் பேசி கூசிகள்
குசலிகள் வர்க்கஞ் சூறை காரிகள் பொருளாசைக்
கொளுவிக ளிட்டம் பாறி வீழ்பட
அருளமு தத்தின் சேரு மோர்வழி
குறிதனி லுய்த்துன் பாதமேறிட அருள் தாராய்
தனதன தத்தந் தான தானன
டுடுடுடு டுட்டுண் டூடு டூடுடு
தகுதிகு தத்தந் தீத தோதக எனபேரி
தவில்முர சத்தந் தாரை பூரிகை
வளைதுடி பொற்கொம் பார சூரரை
சமர்தனில் முற்றும் பாறி நூறிட விடும்வேலா
தினைவன நித்தங் காவ லாளியள்
நகைமுறை முத்தின் பாவை மான்மகள்
திகழ்பெற நித்தங் கூடி ஆடிய முருகோனே
திரிபுர நக்கன் பாதி மாதுறை
அழகிய சொக்கன் காதி லோர்பொருள்
செலவரு ளித்தென் கூடல்மேவிய பெருமாளே.

1126. மனநூறு கோடிதுன்ப நொடிமீதி லேநினைந்து
மதனூட லேமுயங்கி அதிரூப
மடமாத ராசைகொண்டு புவிமீதி லேமயங்கி
மதிசீரெ லாமழிந்து கொடிதான
வினைமூடி யேதிரிந்து புவிமீதி லேயுழன்று
விரகான்மெ யேதளர்ந்து விடுநாளில்.
விசையான தோகைதுங்க மயிலேறி ஓடிவந்து
வெளிஞான வீடுதந்து அருள்வாயே
தினைவேடர் காவல்தங்கு மலைகாடெ லாமுழன்று
சிறுபேதை கால்பணிந்த குமரேசா
திரையாழி சேதுகண்டு பொருராவ ணாதிவென்ற
திருமால்மு ராரிதங்கை அருள்பாலா

முனிவோர்கள் தேவரும்பர் சிறையாக வேவளைந்த
முதுசூரர் தானைதங்கள் கிளையோடு
முடிகோடி தூளெழுந்து கழுகோடு பாறருந்த
முனைவேலி னுலெறிந்த பெருமாளே.

**1127.** மனமெ னும்பொருள் வானறை கால்கனல்
புன லு டன்புவி கூடிய தோருடல்
வடிவு கொண்டதி லேபதி மூணெழு வகையாலே
வருசு கந்துய ராசையி லேயுழல்
மதியை வென்றுப ராபர ஞானநல்
வழிபெ றும்படி நாயடி யேனைநின் அருள்சேராய்
செனனி சங்கரி யாரணி நாரணி
விமலி யெண்குண பூரணி காரணி
சிவைப ரம்பரை யாகிய பார்வதி அருள்பாலா
சிறைபு குஞ்சுரர் மாதவர் மேல்பெற
அசுரர் தங்கிளை யானது வேரற
சிவனு கந்தருள் கூர்தரு வேல்விடு முருகோனே
கனக னங்கையி னலறை தூணிடை
மனித சிங்கம தாய்வரை பார்திசை
கடல்க லங்கிட வேபொரு தேயுகிர் முனையாலே
கதற வென்றுடல் கீணவ னுருயி
ருதிர முஞ்சித ருதமு தாயுனு
கமல உந்திய னகிய மால்திரு மருகோனே
தினக ரன்சிலை வேளருள் மாதவர்
சுரர்க ளிந்திர னுருர காதிபர்
திசைமு கன்செமு மாமறை சீர்புகழ் அழகோனே
திரும டந்தையர் நாலிரு வோர்நிறை
அகமொ டம்பொனி னலய நீடிய
சிவபு ரந்தனில் வாழ்குரு நாயக பெருமாளே.

**1128.** மனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர்
வலிமைகுல நின்ற நிலையூர்பேர்
வளரிளமை தஞ்ச முனைபுனைவ ளங்கள்
வரிசைதம ரென்று வருமாயக்

கனவுநிலை இன்ப மதனையென தென்று
கருதிவிழி இன்ப மடவார்தம்
கலவிமயல் கொண்டு பலவுடல்பு ணர்ந்து
கருவில்விழு கின்ற தியல்போதான்
நினையுநின தன்பர் பழவினைக ளைந்து
நெடுவரைபி ளந்த கதிர்வேலா
நிலமுதல்வி ளங்கு நலமருவு செந்தில்
நிலைபெறஇ ருந்த முருகோனே
புனைமலர்பு னைந்த புனமறம டந்தை
புளகஇரு கொங்கை புணர்மார்பா
பொருதுடனெ திர்ந்த நிருதர்மகு டங்கள்
பொடிபடந டந்த பெருமாளே.

1129. மனைமக்கள் சுற்ற மெனுமாயா
வலையைக்க டக்க அறியாதே
வினையிற்செ ருக்கி அடிநாயேன்
விழலுக்கி றைத்து விடலாமோ
சுனையைக்க லக்கி விளையாடு
சொருபக்கு றத்தி மணவாளா
தினநற்ச ரித்ர முளதேவர்
சிறைவெட்டி விட்ட பெருமாளே.

1130. மனைமாண்சு த ரான சுணங்கரு
மனம்வேந்திணை ஆன தனங்களு
மடிவேன் றனை ஈன அணங்குறு வம்பராதி
மயமாம்பல வான கணங்குல
மெனப்ராந்தியும் யானென தென்றுறு
வனவாம்பிர மாத குணங்குறி இன்பசார
இனவாம்பரி தான்ய தனம்பதி
விடஏன்றெனை மோன தடம்பர
மிகுதாம்பதி காண கணங்கன உம்பரேசா
இடவார்ந்தன சானு நயம்பெறு
கடகாங்கர சோண வியம்பர
இடமாங்கன தாளரு ளும்படி என்றுதானோ

தன தாந்தன தான தனந்தன
தெனதோங்கிட தோன துனங்கிட
தனவாம்பர மான நடம்பயில் எம்பிரானுர்
தமதாஞ்சுத தாபர சங்கம
மெனவோம்புறு தாவன வம்படர்
தருதாம்பிர சேவிதாஞ்சித உம்பர்வாழ்வே
முனவாம்பத மூடிக வந்தன
முயல்வான்பிடி மாடிமை யைங்கரர்
முகதாம்பின மேவுறு சம்ப்ரம சங்கணூறு
முககாம்பிர மோடமர் சம்பன
மதுராந்தக மாநக ரந்திகழ்
முருகாந்திர மோடம ரும்பர்கள் தம்பிரானே.

**1131.** மனையவள் நகைக்க வூரி னனைவரு நகைக்க லோக
மகளிரு நகைக்க தாதை தமரோடும்
மனமது சலிப்ப நாய னுளமது சலிப்ப யாரும்
வசைமொழி பிதற்றி நாளும் அடியேனை
அனைவரு மிழிப்ப நாடு மனவிருள் மிகுத்து நாடி
அகமதை யெடுத்த சேமம் இதுவோவென்
றடியனு நினைத்து நாளு முடலுயிர் விடுத்த போது
மணுகிமு னளித்த பாதம் அருள்வாயே
தனதன தனத்த தான எனமுர சொலிப்ப வீணை
தமருக மறைக்கு ழாமும் அலைமோதத்
தடிநிக ரயிற்க டாவி அசுரர்க ளிறக்கு மாறு
சமரிடை விடுத்த சோதி முருகோனே
எனைமன முருக்கி யோக அநுபுதி அளித்த பாத
எழுதரி யபச்சை மேனி உமைபாலா
இமையவர் துதிப்ப ஞான மலையுறை குறத்தி பாக
இலகிய சசிப்பெண் மேவு பெருமாளே.

**1132.** மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந் தொண்டையமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்

ஒன்றஅம் பொன்றுவிழி கன்றஅங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை
உன்சிலம் புங்கனக தண்டையுங் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்
பன்றியங் கொம்புகம டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டைஎன் பங்கமணி பவர்சேயே
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா
சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே.

**1133.** மாகசஞ் சாரமுகில் தோற்ற குழல்கொடு
போகஇந்த் ராதிசிலை தோற்ற நுதல்கொடு
மாரன்வண் டேறுகணை தோற்றவிழிகொடு கண்டுபோல
மாலர்கொண் டாடுகனி தோற்ற இதழ்கொடு
சோலைசென் றாதுகுயில் தோற்ற இசைகொடு
வார்பொரும் பாரமலை தோற்ற முலைகொடு மன்றுளாடி
சீகரம் பேணுதுடி தோற்ற இடைகொடு
போகபண் டாரபணி தோற்ற அரைகொடு
தேனுகுஞ் சீர்கதலி தோற்ற தொடைகொடு வந்துகாசு
தேடுகின் றாரொடுமெய் தூர்த்த னெனவுற
வாடுகின் றேனைமலம் நீக்கி ஒளிதரு
சீவனொன் றானபர மார்த்த தெரிசனை வந்துதாராய்
வேகமுண் டாகியுமை சாற்று மளவினில்
ஆகமங் கூறுமதி தீர்க்க வடிவுடை
வீரனென் பானொருபாக்ர னெனவர அன்றுசோமன்
மேனியுந் தேயகதிர் தோற்ற எயிறுக
ஆனுகுந் தீகையற சேட்ட விதிதலை
வீழநன் பாரதியு மூக்கு நழுவிட வந்தமாயன்
ஏகநின் றாகியமர் தோற்று வதறிட
வேகவங் காரமொடு ஆர்க்க அலகைகள்
ஏறிவென் றாடுகள நீக்கி முநிவர் வந்துசேயென்

நீசனண் பானபுரு ஷார்த்த தெரிசனை
தாவெனுங் கேள்விநெறி கீர்த்தி மருவிய
ராஜகெம் பீரவள நாட்டு மலைவளர் தம்பிரானே.

1134. மாடமதிட் சுற்று மொக்க வைத்திட
வீடுகனக் கத்த னத்தி லச்சுறு
மாலிபமொத் துப்ர புத்த னத்தினில் அடைவாக

மாதர்பெருக் கத்த ருக்க மற்றவர்
சூழவிருக் கத்த ரிக்க விப்படி
வாழ்கையில்மத் தப்ர மத்த சித்திகொள் கடைநாளிற்

பாடையினிற் கட்டி விட்டு நட்டவர்
கூடஅரற் றிப்பு டைத்து றுப்புள
பாவையெடுத் துத்த ழற்கி ரைப்பட விடலாய

பாடுதொலைத் துக்க ழிக்க அக்குபை
தேடுமெனைத் தற்பு ரக்க உற்றிரு
பாதுகையைப் பற்றி நிற்க வைத்தெனை அருளாயோ

ஆடகவெற் பைப்பெ ருத்த மத்தென
நாகவடத் தைப்பி ணித்து ரத்தம
ரார்கள்பிடித் துத்தி ரித்தி டப்புகை அனலாக

ஆழிகொதித் துக்க தற்றி விட்டிமை
யோர்கள்ளொளிக் கக்க ளித்த உக்கிர
ஆலவிடத் தைத்த ரித்த அற்புதர் குமரேசா

வேடர்சிறுக் கிக்கி லச்சை அற்றெழு
பாரும்வெறுத் துச்சி ரிப்ப நட்பொடு
வேளையெனப் புக்கு நிற்கும் வித்தக இளையோனே

வேகமிகுத் துக்க திக்கும் விக்ரம
சூரர்சிரத் தைத்து ணித்த டக்குதல்
வீரமெனத் தத்து வத்து மெச்சிய பெருமாளே.

1135. மாண்டாரெ லும்பணி யுஞ்சடை
ஆண்டாரி றைஞ்சமொ ழிந்ததை
வான்பூத லம்பவ னங்கனல் புனலான

வான்பூத முங்கர ணங்களு
நான்போயொ டுங்கவ டங்கலு
மாய்ந்தால்வி ளங்குமதொன் றினை அருளாயேல்

வேண்டாமை யொன்றைய டைந்துள
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை உடையேனாய்

வேந்தாக டம்புபு னைந்தருள்
சேந்தாச ரண்சர ணென்பது
வீண்போமதொன் றல என்பதை உணராயோ

ஆண்டார்த லங்கள ளந்திட
நீண்டார்மு குந்தர்த டந்தனில்
ஆண்டாவி துஞ்சிய தென்றரு தலைவாயுற்

றுங்கோர்சி லம்புபு லம்பிட
ஞான்றாது துங்கச லஞ்சலம்
ஆம்பூமு ழங்கிய டங்கும ளவில்நேசம்

பூண்டாழி கொண்டுவ னங்களி
லேய்ந்தாள வென்றுவெ றுந்தனி
போந்தோல மென்றுத வும்புயல் மருகோனே

பூம்பாளை யெங்கும ணங்கமழ்
தேங்காவில் நின்றமொர் குன்றவர்
பூந்தோகை கொங்கைவி ரும்பிய பெருமாளே.

1136. மாதர் கொங்கையில் வித்தா ரத்திரு
மார்பி லங்கியல் முத்தா ரத்தினில்
வாச மென்குழ லிற்சே லைப்பொரும் விழிவேலில்

மாமை யொன்றும லர்த்தாள் வைப்பினில்
வாகு வஞ்சியில் மெய்த்தா மத்தினில்
வானி ளம்பிறை யைப்போல் நெற்றியில் மயலாகி

ஆத ரங்கொடு கெட்டே யிப்படி
ஆசை யின்கட லுக்கே மெத்தவும்
ஆகி நின்றுத வித்தே சித்தமும் அலைவேனோ

ஆறி ரண்டுப ணைத்தோ ளற்புத
ஆயி ரங்கலை கத்தா மத்திய
ஞாயு மூன்றலை கிற்பே னுக்கருள் புரிவாயே

சாத னங்கொடு தத்தா மெத்தென
வேக டந்துபொய் பித்தா உத்தர
மேதெ னும்படி. தற்காய் நிற்பவர் சபையூடே

தாழ்வில் சுந்தர னைத்தா னெற்றிகொள்
நீதி தந்திர நற்சார் புற்றருள்
சால நின்றுச மர்த்தா வெற்றிகொள் அரன்வாழ்வே

வேத முங்கிரி யைச்சூழ் நித்தமும்
வேள்வி யும்புவி யிற்று பித்தருள்
வேர்வி ழும்படி செய்த்தேர் மெய்த்தமிழ்
*மறையோர்வாழ்

மேரு மங்கையி லத்தா வித்தக
வேலொ டும்படை சூத்தா வொற்றிய
வேடர்மங்கைகொள் சித்தா பக்தர்கள் பெருமாளே.

1137. மாதர்மயல் தனிற்கலந்து காமபனி யெனப்புகுந்து
மாடவிய லெனச்சுழன்று கருவூறி

மாறிபல எனச்சுமந்து தேனுகுட மெனத்திரண்டு
மாதமிது வெனத்தளர்ந்து வெளியாகி

வேதபுவி தனிற்கழன்று ஏனமென வெனத்தவழ்ந்து
வீறுமணி களைப்புனைந்து நடைமேலாய்

வேணவித மெனத்திரிந்து நாறுபுழு குடற்றிமிர்ந்து
வேசிவலை தனிற்கலந்து மடிவேனோ

ஆதிசர ணெனக்கயங்கு லாவமுத லையைக்கிடங்கி
லாரவுடல் தனைப்பிளந்த அரிநேமி

ஆமைகய லெனச்செயங்கொள் கோலகுற ளரித்தடங்கை
ஆனஅர வணைச்சயந்தன் மருகோனே

---

*பயில்வாரு, மேதகம்புகழ் பெற்றார் மெய்த்தவர் வாழ்பரங்கிரி யிற்சீ குற்றிடு வேடர்மங்கைப ணைத்தோள் பெற்றருள் பெருமாளே.

சோதியுரு வெனத்திரண்டு கோலஅரு ணையிற்கலந்த
சோமனணி சூடிற்சிலம்பன் அருள்பாலா
தோகைமயி லெனச்சிறந்த ரூபிகுற மகட்கிரங்கி
தோள்களிறு கிடப்புணர்ந்த பெருமாளே.

1138. மாதர்வச மாயுற் றுழல்வாரும்
மாதவமெ ணாமற் றிரிவாரும்
தீதகல வோதிப் பணியாரும்
தீநரக மீதிற் றிகழ்வாரே
நாதவொளி யேநற் குணசீலா
நாரியிரு வோரைப் புணர்வேலா
சோதிசிவ ஞானக் குமரேசா
தோமில்கதிர் காமப் பெருமாளே.

1139. மாதாவ னப்பிளமை வீணாய ழித்தவனை
வாணாள்சி றுத்தவனை இடர்தீரா
வாழ்வோத ரித்தவனை ஊனேபெ ருத்தவனை
வாயோவ சத்தியனை நிலைபேறும்
ஆதார மற்றவனை ஆசாரம் விட்டவனை
ஆபாச முற்றவனை யறுபானே
டாறாறு தத்துவனை ஆகாத குத்திரனை
ஆளாக நற்கருணை புரிவாயே
வேதாள முட்டவெழு பாதாள முட்டவெழு
மேலோக முட்டவொரு திரையாக
வேதானி றுத்துபடை சூர்மாள விட்டகையில்
வேலாயு தப்பிரபு மறைதேடு
நாதாசி வப்பொழுகு பாதாபொ ருப்பிலுறை
ஞானாந டத்துமொரு மயில்வீரா
நாராய ணற்கரிய காரோண ருக்கினிய
நாகாபு ரத்தில்வரு பெருமாளே.

1140. மாதா வோடே மாமா னோர்
மாதோ டேமைத் துனமாரும்
மாறா னோர்யோ னீள்தீ யூடே
மாயா மோகக் குடில்போடாப்
போதா நீரு டேபோய் மூழ்கா
வீழ்கா வேதைக் குயிர்போமுன்
போதா காரா பாராய் சீரார்
போதார் பாதத் தருள்தாராய்
வேதா வோடே மாலா னோர்மேல்
வானோர் மேனிப் பயமீள
வேதா னோர்மே லாகா தேயோர்
வேலால் வேதித் திடும்வீரா
தீதார் தீயார் தீயூ டேமூள்
சேரா சேதித் திடுவோர்தம்
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

1141. மாத்திரை யாகிலு நாத்தவ றாளுடன்
வாழ்க்கையை நீடென மதியாமல்
மாக்களை யாரையு மேற்றிடு சீலிகள்
மாப்பரி வேபெறு மனுபோக
பாத்திர மீதென மூட்டிடு மாசைகள்
பாற்படு ஆடக மதுதேடப்
பார்க்கள மீதினில் மூர்க்கரை யேகவி
பாற்கட லானென உழல்வேனோ
சாத்திர மாறையு நீத்தம னோலய
சாத்தியர் மேவிய பதவேளே
தாத்தரி தாகிட சேக்கெணு மாநட
தாட்பர னார்தரு குமரேசா
வேத்திர சாலம தேற்றிடு வேடுவர்
மீக்கமு தாமயில் மணவாளா
வேத்தம தாமறை யார்த்திடு சீர்திரு
வேட்கள மேவிய பெருமாளே.

**1142.** மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்
வாந்தவிய மாக முறைபேசி
வாஞ்சைபெரு மோக சாந்திதர நாடி
வாழ்ந்தமனை தேடி உறவாடி
ஏந்துமுலை மீது சாந்துபல பூசி
ஏங்குமிடை வாட விளையாடி
ஈங்கிசைகள் மேவ லாஞ்சனையி லாமல்
ஏய்ந்தவிலை மாதர் உறவாமோ
பாந்தண்முடி மீது தாந்ததிமி தோதி
தாஞ்செகண சேசெ எனவோசை
பாங்குபெறு தாள மேங்கநட மாடு
பாண்டவர்ச காயன் மருகோனே
பூந்தளிர்கள் வீறு வேங்கைகள்ப லாசு
பூங்கதலி கோடி திகழ்சோலைப்
பூந்தடமு லாவு கோம்பைகள்கு லாவு
பூம்பறையில் மேவு பெருமாளே.

**1143.** மாய வாடைதி மிர்ந்திடு கொங்கையில்
மூடு சீலைதி றந்தம ழுங்கிகள்
வாசல் தோறுந டந்துசி ணுங்கிகள் பழையோர்மேல்
வால நேசநி னைந்தழு வம்பிகள்
ஆசை நோய்கொள்ம ருந்திடு சண்டிகள்
வாற பேர்பொருள் கண்டுவி ரும்பிகள் எவரேனும்
நேய மேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசி லாதவர் தங்களை அன்பற
நீதி போலநெ கிழ்ந்தப றம்பிகள் அவர்தாய்மார்
நீலி நாடக மும்பயில் மண்டைகள்
பாளை யூறுக ளுண்டிடு தொண்டிகள்
நீச ரோடுமி ணங்குக டம்பிகள் உறவாமோ
பாயு மாமத தந்திமு கம்பெறும்
ஆதி பாரத மென்றபெ ருங்கதை
பார மேருவி லன்றுவ ரைந்தவன் இளையோனே

பாகு நேர்மொழி வஞ்சியி ளம்பிடி
தேவ யானைசெ ழுந்தன குங்கும
பார மார்பில ணைந்துமு யங்கிய மணிமார்பா

சீய மாபுரு வங்கொடு வந்தசு
ரேசன் மார்பைஇ டந்துப சுங்குடர்
சேர வாரிய ணிந்தநெ டும்புயல் மருகோனே

தேனு லாவுக டம்பம ணிந்தகி
ரீட சேகர சங்கரர் தந்தருள்
தேவ நாயக செந்திலு கந்தருள் பெருமாளே.

1144. மாயாசொ ரூப முழுச்ச மர்த்திகள்
ஓயாவு பாய மனப்ப சப்பிகள்
வாணாளை ஈரும் விழிக்க டைச்சிகள் முனிவோரும்

மாலாகி வாட நகைத்து ருக்கிகள்
தோராத நாண மிலிப்ப ரத்தைகள்
வாரீரி ரீரெனு முறைப்பி தற்றிகள் வெகுமோகம்

ஆறாத காதல் எழுப்பு மெத்திகள்
ஈயாத போதி லறப்பி ணக்கிகள்
ஆவேச நீருண் மதப்பொ றிச்சிகள் பழிபாவம்

ஆமாறெ ணாத திருட்டு மட்டைகள்
கோமாள மான குறிக்க ழுத்திகள்
ஆசார வீன விலைத்த ளத்தியர் உறவாமோ

காயாத பால்நெய் தயிர்க்கு டத்தினை
ஏயாவெ ணாமலெடுத்தி டைச்சிகள்
காணாத வாறு குடிக்கு மப்பொழு துரலோடே

கார்போலு மேனி தனைப்பி ணித்தொரு
கோல்கோட சோதை யடித்தி டக்குழை
காதோடு காது கையிற்பி டித்தழு தினிதூதும்

வேயால நேக விதப்ப சுத்திரள்
சாயாமல் மீள அழைக்கு மச்சுதன்
வீறான மாம னெனப்ப டைத்தருள் வயலூரா

விணுள்ப டாது படைச்செ ருக்கொடு
சூர்மாள வேலை விடுக்கும் அற்புத
வேலாவி ராலி மலைத்த லத்துறை பெருமாளே.

1145. மார்பு ரம்பினவி னங்கிரியெ னுந்தனமொ
டார மும்படித ரம்பொ றியு டன்பணிகள்
மாலை யொண்பவள மும்பரிம ளங்கலவை தொங்கலாட

வாள்ச ரங்கணிய லுங்குழைத ளம்பளக
பார தொங்கலணி பெண்கள்வத னங்கள்மதி
வாகை யென்பவித ழுஞ்சலச மென்பகள சங்குமோக

சார மஞ்சள்புய முங்கிளிமு கங்களுகிர்
பாளி தம்புனைது வண்டிடையொ டின்பரச
தாழி யென்பஅல்கு லுந்துளிர ரம்பைதொடை
ரம்பைமாதர்

தாள்ச தங்கைகொலு சுங்குலசி லம்புமணி
யாடல் கொண்டமட மங்கையரு டன்கலவி
தாக முண்டுழல்கி னுங்கமழு றுங்கழல்ம றந்திடேனே

வீர வெண்டையமு ழுங்கவரி சங்குமுர
சோடு பொன்பிறைத னும்பவிதி யுஞ்சுரரும்
வேத விஞ்சையரு டன்குமுற வெந்துகவ டர்ந்தசூரன்

வீற டங்கமுகி லுங்கதற நஞ்சுடைய
ஆயி ரம்பகடு கொண்டவுர கன்குவடு
மேகொ ளுந்தபல்சி ரந்தனையெ றிந்துகட
னங்கொள்வேலா

நார சிங்கவடி வங்கொடுப்ர சண்டிரணி
யோன டுங்கநட னஞ்செய்துஇ லங்கைவலி
ராவ ணன்குலம டங்கசிலை கொண்டகார் தந்தமூல

ஞான மங்கையமு தஞ்சொருபி யென்றனொரு
தாய ணங்குகுற மங்கையைம ணந்தபுய
நாகையம்பதிய மர்ந்துவளர் கம்பர்புகழ் தம்பிரானே.

1146. மாலாசை கோப மோயாதெ நாளு
மாயாவி கார வழியேசெல்
மாபாவி காளி தானேனும் நாத
மாதாபி தாவு மினிநீயே
காலான வேத நூலாக மாதி
நானோதி னேனு மிலைவீணே
நாள்போய்வி டாம லாறாறு மீதில்
ஞானோப தேசம் அருள்வாயே
பாலாக லார ஆமோத லேப
பாடீர வாக அணிமீதே
பாதாள பூமி ஆதார மீன
பானீய மேலை வயலூரா
வேலாவி ராலி வாழ்வேச மூக
வேதாள பூத பதிசேயே
வீராக டோர சூராரி யேசெ
வேளேசு ரேசர் பெருமாளே.

1147. மாலினாலெ டுத்தகந்தல் சோறினால்வ ளர்த்தபொந்தி
மாறியாடெ டுத்தசிந்தை அநியாய
மாயையாலெ டுத்துமங்கி னேனையாவெ னக்கிரங்கி
வாரையாயி னிப்பிறந்து இறவாமல்
வேலினால்வி னைக்கணங்கள் தூளதாவெ றித்துமுன்றன்
வீடுதாப ரித்தஅன்பர் கணமூடே
மேவியானு னைப்பொல்சிந்தை யாகவேக ளித்துகந்த
வேளையாமெ னப்பரிந்து அருள்வாயே
காலினாலெ னப்பரந்த சூரர்மாள வெற்றிகொண்ட
காலபானு சத்தியங்கை முருகோனே
காமபாண மட்டனந்த கோடிமாத ரைப்புணர்ந்த
காளையேறு கர்த்தனெந்தை அருள்பாலா
சேலைநேர்வி ழிக்குறப்பெ ணோசைதோளு றப்புணர்ந்து
சீரையோது பத்தரன்பில் உறைவோனே
தேவர்மாதர் சித்தர்தொண்டர் ஏகவேளு ருக்குகந்த
சேவல்கேது சுற்றுகந்த பெருமாளே.

1148. மாலைதனில் வந்து வீதிதனில் நின்று
வாசமலர் சிந்து குழல்கோதி
வாரிருத னங்கள் பூணொடுகு லுங்க
மால்பெருகி நின்ற மடவாரைச்
சாலைவழி வந்து போமவர்க ணின்று
தாழ்குழல்கள் கண்டு தடுமாறித்
தாகமயல் கொண்டு மாலிருளு ழுந்தி
சாலமிகு நொந்து தவியாமல்
காலையிலெ ழுந்து னுமையெமொ ழிந்து
காதலுமை மைந்த எனவோதிக்
காலமுமு ணர்ந்து ஞானவொளி என்கண்
காணஅரு ளென்று பெறுவேனோ
கோலமுட னன்று சூர்படையின் முன்பு
கோபமுட னின்ற குமரேசா
கோதையிரு பங்கின் மேவவளர் கும்ப
கோணநகர் வந்த பெருமாளே.

1149. மாலையில் வந்து மாலை வழங்கு
மாலை யனங்கன் மலராலும்
வாடை யெழுந்து வாடை செறிந்து
வாடை யெறிந்த அனலாலும்
கோல மழிந்து சால மெலிந்து
கோம ளவஞ்சி தளராமுன்
கூடிய கொங்கை நீடிய வன்பு
கூர வுமின்று வரவேணும்
கால னடுங்க வேலை துகொண்டு
கானில் நடந்த முருகோனே
கான மடந்தை நாண மொழிந்து
காத லிரங்கு குமரேசா
சோலை வளர்ந்து சாலி விளைந்து
சூழு மிலஞ்சி மகிழ்வோனே
சூரிய னஞ்ச வாரி யில்வந்த
சூர னைவென்ற பெருமாளே.

1150. மாறுபொரு காலனுக்கும் வானிலெழு மாமதிக்கும்
வாரிதுயி லாவதற்கும் வசையேசொல்
மாயமட வார்தமக்கும் ஆயர்குழ லூதிசைக்கும்
வாயுமிள வாடையிற்கு மதனாலே
வேறுபடு பாயலுக்கு மேயெனது பேதையெய்த்து
வேறுபடு மேனிசற்றும் அழியாதே
வேடர்குல மாதினுக்கு வேடைகெட வேநடித்து
மேவுமிரு பாதமுற்று வரவேணும்
ஆறுமிடை வாளரக்கர் நீறுபட வேலெடுத்த
ஆறுமுக னேகுறத்தி மணவாளா
ஆழியுல கேழடக்கி வாசுகியை வாயடக்கி
ஆலுமயி லேறிநிற்கும் இளையோனே
சீறுபட மேருவெற்பை நீறுபட வேசினத்த
சேவலவ நீபமொய்த்த திரள்தோளா
சேருமட லால்மிகுத்த சூர்கொடு போயடைத்த
தேவர்சிறை மீளவிட்ட பெருமாளே.

1151. மானை நேர்விழி யொத்தம டந்தையர்
பாலை நேர்மொழி யொத்தவி ளம்பியர்
வாச மாமலர் கட்டும ரம்பையர் இருதோளும்
மார்பு மீதினு முத்துவ டம்புரள்
காம பூரண பொற்கட கம்பொர
வாரி நீலவ ளைக்கைபு லம்பிட அநுராகம்
ஆன நேரில்வி தத்திர யங்களும்
நாண மாறம யக்கியி யம்பவும்
ஆடை சோரநெ கிழ்த்தியி ரங்கவும் உறவாடி
ஆர வாரந யத்தகு ணங்களில்
வேளி னூல்கலை கற்றுவி ளம்பவும்
ஆகு மோகவி பத்துமொ ழிந்துனை அடைவேனோ
சான கீதுய ரத்தில ருஞ்சிறை
போன போதுநெ தாகுத்தசி னங்களில்
தாப சோபமொ ழிப்பவி லங்கையும் அழிவாகத்

தாரை மாறொரு சுக்கிரி பன்பெற
வாலி வாகுத லத்தில்வி ழுந்திட
சாத வாளிதொ டுத்தமு குந்தனன் மருகோனே
கான வேடர்சி றுக்குடி லம்புன
மீதில் வாழித ணத்திலு றைந்திடு
காவல் கூருகு றத்திபு ணர்ந்திடு மணிமார்பா
காவு லாவிய பொற்கமு கின்திரள்
பாளை வீசம லர்த்தட முஞ்செறி
காவ ளூர்தனில் முத்தமி ழுந்தெரி பெருமாளே.

1152. மானை விடத்தைத் தடத்தி னிற்கயல்
மீனை நிரப்பிக் குனித்து விட்டணை
வாளி யைவட்டச் சமுத்தி ரத்தினை வடிவேலை
வானை வனத்துற் பலத்தி னைக்கயல்
மீனை விழிக்கொப் பெனப்பி டித்தவர்
மாய வலைப்பட் டிலைத்து டக்குழல் மணநாறும்
ஊனை விடத்தைச் சடக்கெ னக்கொழு
வூறு முபத்தக் கருத்த டத்தினை
யூது பிணத்தைக் குணத்ர யத்தொடு தடுமாறும்
ஊச லைநித்தத் த்வமற்ற செத்தையு
பாதி யையொப்பித் துணிப்ப வத்தற
வோகை செலுத்திப் ரமிக்கு மிப்ரமை தெளியாதோ
சான கிகற்புத் தனைச்சு டத்தன
சோக வனத்திற் சிறைப்ப டுத்திய
தானை யரக்கற் குலத்த ரத்தனை வருமாளச்
சாலை மரத்துப் புறத்தொ ளித்தடல்
வாலி யுரத்திற் சரத்தை விட்டொரு
தாரை தனைச்சுக் ரிவற்க ளித்தவன் மருகோனே
சோனை மிகுத்துத் திரட்பு னத்தினி
லானை மதத்துக் கிடக்கு மற்புத
சோண கிரிச்சுத் தர்பெற்ற கொற்றவ மணிநீபத்

தோள்கொ டுசக்ரப் பொருப்பி னைப்பொடி
யாக நெருக்கிச் செருக்க ளத்தெதிர்
சூர னைவெட்டித் துணித்த டக்கிய பெருமாளே.

**1153.** மான்போற்கண் பார்வை பெற்றிடு
மூஞ்சாற்பண் பாடு மக்களை
வாய்ந்தாற்பொன் கோடு செப்பெனு முலைமாதர்
வாங்காத்திண் டாடு சித்திர
நீங்காச்சங் கேத முக்கிய
வாஞ்சாற்செஞ் சாறு மெய்த்திடு மொழியாலே
ஏன்காற்பங் காக நற்புறு
பூங்காற்கொங் காரு மெத்தையில்
ஏய்ந்தாற்பொன் சாரு பொற்பண முதல்நீதா
ஈந்தாற்கன் றூர மிப்பென
ஆன்பாற்றேன் போல செப்பிடும்
ஈண்டாச்சம் போக மட்டிக ளுறவாமோ
கான்பாற்சந் தாடு பொற்கிரி
தூம்பாற்பைந் தோளி கட்கடை
காண்பாற்றுஞ் சாமல் நத்திடும் அசுரேசன்
காம்பேய்ப்பந் தாட விக்ரம
வான்றோய்க்கெம் பீர விற்கணை
காண்டேர்க்கொண் டேவு மச்சுதன் மருகோனே
தீம்பாற்கும் பாகு சர்க்கரை
காம்பாற்செந் தேற லொத்துரை
தீர்ந்தார்க்கங் காளி பெற்றருள் புதல்வோனே
திண்பார்க்குன் போத முற்றுற
மாண்டார்க்கொண் டோது முக்கிய
தேன்போற்செந் தூரில் மொய்த்தருள் பெருமாளே.

**1154.** மிகுகொடியதான குடியின்மகவாகி
வினைபழமைகோவ வதனாலே
மிடியனெனவாகு முடலை * *
வளிதகலசோறு மரிதாயே

இகமறியவாழ்வை யுடையவர்கொடார்கள்
என மனதுநாணி இரவாதே
இடரிலடியேனு மிடைபடு
* யுனதுதாளை அருள்வாயே
குகசரவணேச முருகவடிவேல
குமரவருணேச செயவீரா
குறிமயிலொடானை யுகைபரியசூலி
குமரிகு * * வாழ்வே
ககனபரிவால விருவர்மணவாள
கருணையவிசாக பரநாதா
கழனிநெடுவாளை கமுகொடியமோதுங்
கரபுரியில்வீறும் பெருமாளே.

1155\. மின்னார் பயந்தமைந்தர் தன்னு டினங்குவிந்து
வெவ்வே றுழன்றுழன்று மொழிகூற
விண்மேல் நமன்கரந்து மண்மே லுடம்பொருங்க
மென்னு ளறிந்தடைந்து உயிர்போமுன்
பொன்னார் சதங்கைதண்டை முன்னால்கடம்பணிந்து
பொய்யார் மனங்கள்தங்கு மதுபோலப்
பொல்லே னிறைஞ்சிரந்த சொல்நீ தெரிந்தழுங்கு
புன்னு யுளுநங்கவின்று புகுவாயே
பன்னு ளிறைஞ்சுமன்பர் பொன்னு டிறங்கைதந்து
பன்னு கணைந்துசங்க முறவாயிற்
பன்னூல் முழங்கலென்று விண்ணோர் மயங்கின்று
பண்ணூ துகின்றகொண்டல் மருகோனே
முன்னாய் மதன்கரும்பு வின்னேர் தடந்தெரிந்து
முன்னோர் பொருங்கையென்று முனையாட
மொய்வார் நிமிர்ந்தகொங்கை மெய்ம்மா தர்வந்திறைஞ்சு
முள்வாய் விளங்கநின்ற பெருமாளே.

1156\. மின்னிடைக லாப தொங்கலொ
டன்னமயில் நாண விஞ்சிய
மெல்லியர்கு ழாமி சைந்தொரு தெருமீதே

மெள்ளவுமு லாவி யிங்கித
சொல்குயில்கு லாவி நண்பொடு
வில்லியல்பு ரூர கண்கணை தொடுமோகக்
கன்னியர்கள் போலி தம்பெறு
மின்னணிக லார கொங்கையர்
கண்ணியில்வி ழாம லன்பொடு பதஞான
கண்ணியிலு ளாக சுந்தர
பொன்னியல்ப தார முங்கொடு
கண்ணுறுவ ராம லின்பமொ டெனையாள்வாய்
சென்னியிலு டாடி ளம்பிறை
வன்னியும ராவு கொன்றையர்
செம்மணிகு லாவு மெங்தையர் குருநாதா
செம்முகவி ராவ ணன்தலை
விண்ணுறவில் வாளி யுந்தொடு
தெய்விகபொ ருழி வண்கையன் மருகோனே
துன்னியெதிர் சூரர் மங்கிட
சண்முகம தாகி வன்கிரி
துள்ளிடவெ லாயு தந்தனை விடுவோனே
சொல்லுமுனி வோர்த வம்புரி
முல்லைவட வாயில் வந்தருள்
தெய்யபர ஞான வும்பர்கள் பெருமாளே.

1157. மின்னினில் நடுக்கமுற்ற நுண்ணிய நுசுப்பில் முத்த
வெண்ணகை யில்வட்ட மொத்து அழகார
விம்பமிரி ளகிக்க தித்த கொம்மைமுலையிற்கு னித்த
வின்னுத லிலிட்ட பொட்டில் விலைமாதர்
கன்னல்மொ ழியிற்சி றக்கு மன்னநடையிற்க றுத்த
கண்ணினி ணையிற்சி வத்த கனிவாயிற்
கண்ணழி வுவைத்த புத்தி சண்முக நினைக்க வைத்த
கன்மவ்ச மெப்ப டிக்கு மறவேனே
அன்னந டையைப்ப ழித்த மஞ்ஞைம லையிற்கு றத்தி
அம்மையு டவிப்பு னத்தில் விளையாடும்

அன்னையி றுகப்பி ணித்த பன்னிரு திருப்பு யத்தி
லன்னிய அரக்க ரத்த னையுமாளப்
பொன்னுல கினைப்பு ரக்கு மன்னநல்வ ரதத்தை விட்ட
புன்மையர் புரத்ர யத்தர் பொடியாகப்
பொன்மலை வளைத்தெ ரித்த கண்ணுத லிடத்தி லுற்ற
புண்ணிய ஒருத்தி பெற்ற பெருமாளே.

**1158.** முகசந்திர புருவஞ்சிலை விழியுங்கயல் நீல
முகிலங்குழ லொளிர்தொங்கலொடிசைவண்டுகள் பாட
மொழியுங்கிளி யிதழ்பங்கய நகைசங்கொளிகாதிற்
குழையாட

முழவங்கர சமுகம்பரி மளகுங்கும வாச
முலையின்பர சகுடங்குவ டிணைகொண்டுசல் மார்பில்
முரணுஞ்சிறு பவளந்தர ளவடந்தொடை யாடக்
கொடிபோலத்

துகிரின்கொடி யொடியும்படி நடனந்தொடை வாழை
மறையும்படி துயல்சுந்தர சுகமங்கைய ரோடு
துதைபஞ்சணை மிசையங்கசன் ரதியின்பம தாகச்
செயல்மேவித்

தொடைசிந்திட மொழிகொஞ்சிட அளகஞ்சுழ லாட
விழிதுஞ்சிடஇடைதொய்ஞ்சிடமயல்கொண்டணைகினும்
சுகசந்திர முகமும்பத அழகுந்தமி யேனுக்
கருள்வாயே

அகரந்திரு உயிர்பண்புற அரியென்பது மாகி
உறையுஞ்சுட ரொளியென்கணில் வளருஞ்சிவ காமி
அமுதம்பொழி பரையந்தரி உமைபங்கர னுருக்
கொருசேயே

அசுரன்கிர மிரதம்பரி சிலையுங்கெட கோடு
சரமும்பல படையும்பொடி கடலுங்கிரி சூரய
அமர்கொண்டயில் விடுசங்கர வொளிசெங்கதிர் போலத்
திகழ்வோனே

மகரங்கொடி நிலவின்குடை மதனன்திரு தாதை
மருகன்றணி விருதும்பல முரசங்கலை யோத
மறையன்தலை யுடையும்படி நடனங்கொளு மாழைக்
கதிர்வேலா
வடிவிந்திரன் மகள்சுந்தர மணமுங்கொடு மோக
சரசங்குற மகள்பங்கொடு வளர்தென்புலி யூரில்
மகிழும்புகழ் திருவம்பல மருவுங்கும ரேசப்
பெருமாளே.

1159. முகத்து லக்கிக ளாசா ரவினிகள்
விலைச்சி றுக்கிகள் நேரா அசடிகள்
முழுச்ச மர்த்திகள் காமா விரகிகள் முந்துசூது
மொழிப்ப ரத்தைகள் காசா சையில்முலை
பலர்க்கும் விற்பவர் நாண அநுபவ
முயற்று பொட்டிகள் மோகா வலமுறு கின்றமூடர்
செகத்தி லெத்திகள் சார்வாய் மயக்கிகள்
திருட்டு மட்டைகள் மாயா சொருபிகள்
சிரித்து ருக்கிகள் ஆகா எனநகை சிந்தைமாயத்
திரட்பொ றிச்சிகள் மாபா விகளப
கடத்த சட்டைகள் மூதே விகளொடு
திளைத்த லற்றிரு சீபா தமுமினி என்றுசேர்வேன்
தொகுத்தொ குத்தொகு தோதோ தொகுதொகு
செகுச்செ குச்செகு சேசே செககண [ந்ததீதோ
தொகுத்தொகுத்தொகு தோதோ தொகுதொகுதொ
துடுட்டு டுட்டுடு டுடு டுடுடுடு
திகுத்த குத்திகு தீதோ எனவொரு
அவக்க மிர்த்தன மாடா உறைபவர் தொண்டர்பேணும்
அகத்தி யப்பனு மால்வே தனுமறம்
வளர்த்த கற்பக மாஞா னியுமுகிற்
குலக்க ரிக்கிறை யானை யூர்தியும் அஞ்சநாடி
அமர்க்க ளத்தொரு சூரே சனைவிழ
முறித்து ழக்கிநல் வானோர் குடிபுக
அமர்த்தி விட்டசு வாமீ யணமலை தம்பிரானே.

**1160.** முகத்தைப் பிலுக்கி மெத்த மினுக்கித் திடைத்து ரத்ந
முலைக்கச் சுவிழ்த்த சைத்து முசியாதே
முழுக்கக் கழப்பி எத்தி மழுப்பிப் பொருட்ப றித்து
மொழிக்குட் படுத்த ழைத்த மளிமீதே
நகைத்திட் டழுத்தி முத்தம் அளித்துக் களித்து மெத்த
நயக்கத் தனத்த டத்தில் அணைவார்போல்
நடிப்புற் றவர்க்கு நித்த மனத்தைப் பெருக்க வைத்து
நயக்கக் களித்து சித்தம் ஒழிவேனோ
செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க
திமித்தித் திமித்தி தித்தி எனஆடும்
*செகத்துக் கொருத்தர் புத்ர நினைத்துத் துதித்த பத்த
செனத்துக் கினித்த சித்தி அருள்வோனே
மிகுத்துத் திடத்தொ டுற்று மசைத்துப் பொறுத்த ரக்கன்
மிதித்துப் பெயர்த்தெ டுத்த கயிலாய
மிசைக்குற்றடுத்துயர்த்தபொருப்பைப்பொடித்திடித்து
மிகுத்துத் துகைத்து விட்ட பெருமாளே.

**1161.** முகத்தை மினுக்கிக ளசடிகள் கபடிகள்
விழித்து மருட்டிகள் கெருவிகள் திருடிகள்
மொழிக்குள் மயக்கிகள் வகைதனில் நகைதனில்
விதமாக
முழித்து மயற்கொளு மறிவிலி நெறியிலி
புழுக்கு டலைப்பொரு ளெனமிக எணியவர்
முயக்க மடுத்துழி தருமடி யவனிடர் ஒழிவாக
மிகுத்த மூகைப்பெறு மறுமுக சரவண
புயத்தி லகிக்கமழ் நறைமலர் தொடைமிக
விசைக்கொ டுமைப்பெறு மாகத கலபியும் வடிவேலும்
வெளிப்ப டவுற்றினி இரவொடு பகலற
விருப்பொ டுனைப்புக ழுமுதியல் கவிசொல
விதித்த னெழுத்தினை தரவரு மொருபொரு
ளருளாயே

---

*செகத்திற் புகழ்ச்சி பெற்ற தருக்கைக் குடிக்குள் முத்தர் சபத்துக் கிதத்த புத்தி யருள்வோனே.

புகைத்த முலைக்கொடு திரிபுர மெரிபட
நகைத்த வருக்கிட முறைபவள் அலைமகள்
பொருப்பி லிமக்கிரி பதிபெறு மிமையவள் அபிராமி
பொதுற்று திமித்திமி நடமிடு பகிரதி
எழுத்த றிருத்திரி பகவதி கவுரிகை
பொருட்ப யனுக்குரை எனுநிலை சமைபவள்
அமுதாகச்
செகத்தை அளப்பவர் நெடியவர் கடையவள்
அறத்தை வளர்த்திடு பரசிவை குலவதி
திறத்த மிழைத்தரு பழையவ ளருளிய சிறியோனே
செருக்கு மரக்கர்கள் பொடிபட வடிவுள
காத்தி லயிற்கொடு பொருதிமை யவர்பணி
திருத்த ணிநற்பதி தனில்மயில் நடவிய பெருமாளே.

1162. முகமும மினுக்கிப் பெருங்க ருங்குழல்
முகிலைய விழ்த்துச் செருந்தி சண்பக
முடியநி றைத்துத் ததும்பி வந்தடி முன்பினுகை
முலையைய சைத்துத் திருந்த முன்தரி
கலையைநெ கிழ்த்துப் புனைந்து வஞ்சக
முறுவல்வி ளைத்துத் தணிந்து தந்தெரு முன்றிலூடே
மகளிர்வ ரப்பிற் சிறந்த பந்தியின்
மதனனு நிற்கக் கொளுந்து வெண்பிறை
வடவைபெ ருக்கத் திரண்டு பண்தனை வண்டுபாட
மலயநி லத்துப் பிறந்த தென்றலு
நிலைகுலை யத்தொட் டுடம்பு புண்செய
மயலைய ளிக்கக் குழைந்து சிந்தைம லங்கலாமோ
பகலவன் மட்கப் புகுந்து கந்தர
ககனமு கட்டைப் பிளந்து மந்தர
பருவரை யொக்கச் சுழன்று பின்புப றந்துபோகப்
பணமணி பட்சத் துறங்க முந்தனி
முடுகிந டத்திக் கிழிந்து விந்தெழு
பரவைய ரற்றப் ரபஞ்ச நின்றுப யந்துவாடக்

குகனென முக்கட் சயம்பு வும்ப்ரிய
மிகவசு ரர்க்குக் குரம்பை வந்தரு
குறவமர்குத்திப்பொருங்கொடும்படை வென்றவேளே

குழையணி யொப்பற் றிருந்த சங்கரி
கவுரியெ டுத்துப் பரிந்து கொங்கையில்
அமுதைய ளிக்கத் தெளிந்து கொண்டருள்தம்பிரானே.

1163. முகமெலாநெய் பூசித் திலங்கு
முகிளமான தோர்பொட் டணிந்து
முருகுமாலை ஓதிக் கணிந்த மடமாதர்

முதிருமார பாரத் தனங்கள்
மிசையிலாவி யாய்நெக் கழிந்து
முடியமாவி லேபட் டலைந்து பொருள்தேடிச்

செகமெலாமு லாவிக் கரந்து
திருடனாகி யேசற் றுழன்று
திமிரனாகி யோடிப் பறந்து திரியாமல்

தெளியுஞான மோதிக் கரைந்து
சிவபுராண நூலிற் பயின்று
செறியுமாறு தாளைப் பரிந்து தரவேணும்

அகரமாதி யாமக் கரங்கள்
அவனிகால்வி ணாப் பொடங்கி
அடையவேக ரூபத் திலொன்றி முதலாகி

அமரர்காண வேஅத் தமன்றில்
அரிவையாட ஆடிக் கலந்த
அமலநாத னார்முற் பயந்த முருகோனே

சகலவேத சாமுத் ரியங்கள்
சமயமாறு லோகத் ரயங்கள்
தருமநீதி சேர்தத் துவங்கள் தவயோகம்

தவறிலாம லாளப் பிறந்த
தமிழ்செய்மாறன் கூன்வெப் பொடன்று
தவிரவால வாயிற் சிறந்த பெருமாளே.

1164. முகர வண்டெழுங் கருமுகி லலையவு
முதிய நஞ்சுமிழ்ந் தயில்விழி குவியவு
முகிள சந்திரன் பொருநுதல் வெயரவு மமுதூறும்

முருகு தங்குசெந் துகிரிதழ் தெரியவு
மருவு சங்கநின் றொலிகொடு பதறவு
முழுது மன்புதந் தமளியி னுதவிய அநுராகச்

சிகர கும்பகுங் குமபுள கிததன
மிருபு யம்புதைந் திடநடு விடைவெளி
தெரிய லின்றியொன் றிடவுயி ருயிருட னுறமேவித்

திமிர கங்குலின் புதவிடு மவசர
நினைவு நெஞ்சினின் றறவவர் முகமது
தெரிச னஞ்செயும் பரிவற இனியருள் புரிவாயே

மகர நின்றதெண் டிரைபொரு கனைகடல்
மறுகி யஞ்சிவந் தடிதொழு திடவொரு
வடிகொள் செஞ்சரந் தொடுபவ னிருபது புயவீரன்

மடிய வங்குசென் றவனொரு பதுமுடி
முடிய முன்புமண் டமர்பொரு தமர்நிழல்
மதிலி லங்கையும் பொடிபட அருளரி மருகோனே

நிகரி லண்டமெண் டிசைகளு மகிழ்வுற
விரகு கொண்டுநின் றழகுற மயில்மிசை
நினைவி னுந்தியம் புவிதனை வலம்வரு மிளையோனே

நிலவ ரும்புதண் டரளமு மிளிரொளிர்
பவள மும்பொரும் பழனமு மழகுற
நிழல்குருந்தமுஞ் செறிதுறை வளர்வுறு பெருமாளே.

1165. முகிலள கஞ்சரி யாக்குழை
இகல்வன கண்சிவ வாச்சிவ
முறுவல்மு கங்குறு வேர்ப்பெழ அநுபோக

முலைபுள கஞ்செய வார்த்தையும்
நிலையழி யும்படி கூப்பிட
முகுளித பங்கய மாக்கர நுதல்சேரத்

துகிலொழு குஞ்சல பாத்திர
மெலியமி குந்துத ராக்கினி
துவளமு யங்கிவி டாய்த்தரி வையர்தோளின்

துவையலி னின்றன்வி யாத்தமும்
வயலியல் வஞ்சியில் மேற்பயில்
சொருபமு நெஞ்சிலி ராப்பகல் மறவேனே

சகலம யம்பர மேச்சுரன்
மகபதி யுய்ந்திட வாய்த்தருள்
சரவண சம்பவ தீர்க்கசண் முகமாகிச்

சருவுக்ர வுஞ்சகி லோச்சய
முருவவெ றிந்தகை வேற்கொடு
சமரமு கந்தனில் நாட்டிய மயிலேறி

அகிலமு மஞ்சிய வாக்ரம
விகடப யங்கர ராக்கத
அசுரர கங்கெட வார்த்திடு கொடிகூவ

அமரர டங்கலு மாட்கொள
அமரர்த லங்குடி யேற்றிட
அமரரை யுஞ்சிறை மீட்டருள் பெருமாளே.

1166. முகிலளை கத்திற் கமழ்ந்த வண்பரி
மளவலர் துற்றக் கலந்தி டந்தரு
முகிழ்நுதி தைத்துத் துயர்ந்த மங்கையர் அங்கமீதே

முகம்வெயர் வுற்றுப் பரந்து செங்கயல்
விழியிணை செக்கச் சிவந்து குங்கும
ம்ருகமத மத்தத் தனங்க ளின்மிசை எங்குமேவி

உகவுயி ரொத்துப் புயங்க ளின்புற
உறவிணை உற்றுத் திரண்டு கொங்கள
வுறுமணை உற்றுத் திரங்கு மஞ்சமில் ஒன்றிமேவி

ஒளிதிகழ் பத்மக் கரங்க ளின்புறம்
உறுவளை யொக்கக் கலின்க லின்னென
உயர்மய லுற்றுற் றிரங்கு மன்பதொ ழிந்திடாதோ

செகமுழு தொக்கப் பயந்த சங்கரி
அடியவர் சித்தத் துறைந்த சம்ப்ரம
சிவனொரு பக்கத் துறைந்த மங்கைசு மங்கைநீடு
திகழ்வன பச்சைப் பசங்கி அம்பண
காதலி கச்சுற் றிலங்கு கொங்கையள்
திருவரு ணற்பொற் பரந்திடும்பரை அண்டமீதே
பகலிர வற்றிட் டுயர்ந்த அம்பிகை
திரிபுரை முற்றிட் டிரண்டொ டொன்றலர்
பரிவுற வொக்கச் செயும்ப ரம்பரிஅன்புகூரும்
பதிவ்ரதை மிக்கச் சிறந்தெ ரிந்தருள்
பகிர தி வெற்பிற் பிறந்த பெண்தரு
பழநியில் வெற்பிற்றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே.

1167. முகிலாமெனு மளகங் காட்டி
மதிபோலுயர் நுதலுங் காட்டி
முகிழாகிய நகையுங் காட்டி அமுதூறு
மொழியாகிய மதுரங் காட்டி
விழியாகிய கணையுங் காட்டி
முகமாகிய கமலங் காட்டி மலைபோலே
வகையாமிள முலையுங் காட்டி
இடையாகிய கொடியுங் காட்டி
வளமானகை வளையுங் காட்டி இதமான
மணிசேர்கடி தடமுங் காட்டி
மிகவேதொழி லதிகங் காட்டு
மடமாதர்கள் மயலின் சேற்றில் உழல்வேனோ
நகையால்திரி புரமுந் தீத்த
சிவனாருள் சுதனென் றூர்க்கு
நலனேயரு ளமர்செந் தூர்க்குள் உறைவோனே
நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனு மிபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு முருகோனே

அகமேவிய நிருதன் போர்க்கு
வரமேவசமர் புரியுந் தோற்றம்
அறியாமலு மபயங் காட்டி முறைகூறி
அயிராவத முதுகின் றோற்றி
அடையாமென இனிதன் பேத்தும்
அமரேசனை முழுதுங் காத்த பெருமாளே.

1168. முகிலாமெனும் வார்குழ லார்சிலை
புருவார்கயல்வேல்விழி யார்சசி
முகவார்தர ளாமென வேநகை புரிமாதர்
முலைமாலினை கோபுர மாமென
வடமாடிட வேகொடி நூலிடை
முதுபாளித சேலைகு லாவிய மயில்போல்வார்
அகிசேரல்கு லார்தொடை வாழையின்
அழகார்கழ லார்தர வேய்தரு
அழகார்கன நூபுர மாடிட நடைமேவி
அனமாமென யாரையு மால்கொள
விழியால்சுழ லாவிடு பாவையர்
அவர்பாயலி லேயடி யேனுடல் அழிவேனோ
ககனார்பதி யோர்முறை யோவென
இருள்காரசு ரார்படை தூள்பட
கடலேழ்கிரி நாகமு நூறிட விடும்வேலா
கமலாலய நாயகி வானவர்
தொழூமீசுர னாரிட மேவிய
கருணாகர ஞானப ராபரை அருள்பாலா
மகிழ்மாலதி நாவல்ப லாகமு
குடனாடகி லாமயில் கோகில
மகிழ்நாடுறை மால்வளி நாயகி மணவாளா
மதிமாமுக வாவடி யேனிரு
வினைதூள்பட வேவயி லேவிய
*மதுராபுரி மேவியு லாவிய பெருமாளே.

*வளவாபுரி வாழ்மயில் வாகன பெருமாளே.

**1169.** முகிலு மிரவியு முழுகதிர் தாளமு
முடுகு சிலைகொடு கணைவிடு மதனனு
முடிய வொருபொரு ளுதவிய புதல்வனும் எனநாடி
முதிய கனனென தெய்வதரு நிகரென
முதலை மடுவினி லதவிய புயலென
முகமு மறுமுக முடையவ னிவனென வழியோரைச்
சகல பதவியு முடையவ ரிவரென
வலிய தறுவல விஜயவ னிவனென
தபனன் வலம்வரு கிரிதனை நிகரென இசைபாடிச்
சயில பகவவ ரிடைதொறும் நடைசெயும்
இரவு தவிரவெ இருபத மடையவெ
சவித வடியவர் தவமதில் வரவருள் புரிவாயே
அகில புவனமு மடைவினி லுதவிய
இமைய கிரிமயில் குலவரை தருவென
அதிர வருபுர நொடியினி லெரிசெய்த அபிராமி
அமரு மிடனன லெனுமொரு வடிவுடை
யவனி லுரையவன் முதுதமி ழுடையவன்
அரியொ டயனுல கரியவ னடனவில் சிவன்வாழ்வே
திகிரி நிசிசரர் தடமுடி பொடிபட
திரைக ளெறிகடல் சுவறிட களமிசை
திரடு குறடுகள் புரள்வெகு குருதிகள் பெருகாறுச்
சிகர கிரிநெரி படவலி கொடுபொரு
திமிர தினகர குருபர இளமயில்
சிவணி வருமொரு தணிகையில் நிலைதிகழ் பெருமாளே.

**1170.** முகிலை இகல்பொரு முழுவிருள் குழலென
முதிய மதிதனை முகமென வரிசிலை
முரணுறு தலென முடுகிடு கணைவிழி எனமூவா
முளரி தனின்முகு ளிதமலர் முலையென
அமுது பொதிதரு கனிதனை யிதழென
முலையை நகையென வளையிரு குழையென
மொழிகூறிப்

பகலு மிரவினு மிகமன மருள்கொடு
பதியி லவர்வடி வுளதழ கெனவொரு
பழுது மறவவர் பரிவுற இதமது பகராதே
பகைகொ டெதிர்பொரு மசுரர்கள் துகைபட
விகட முடனடை பயில்மயில் மிசைவரு
பவனி தனையநு தினநினை எனவருள் பகர்வாயே
புகல வரியது பொருளிது எனவொரு
புதுமை இடவரி யதுமுத லெனுமொரு
பொருளை இதுவென முதுதவ முனிவர்கள் புடைசூழப்
புரமு மெரியெழ நகையது புரிபவர்
புனலும் வளர்மதி புனைசடை முடியினர்
பரவி வழிபட புதைபொருள் விரகொடு புகல்வோனே
அகில கலைகளு மறநெறி முறைமையு
மகில மொழிதரு புலவரு முலகினி
லறிஞர் தவமுயல் பவர்களு மியலிசை அதனாலே
அறுவர் முலையுணு மறுமுக னிவனென
அரிய நடமிடு மரிவைய ரடிதொழ
அருணை நகர்தனி லழகுடன் மருவிய பெருமாளே.

1171. முகிலைக் காரைச் சருவிய குழலது
சரியத் தாமத் தொடைவகை நெகிழ்தர
முளரிப் பூவைப் பனிமதி தனைநிகர் முகம்வேர்வ
முனையிற் காதிப் பொருகணை யினையிள
வடுவைப் பானற் பரிமள நறையிதழ்
முகையைப்போலச்சமர்செயுமிருவிழி குழைமோதத்
துகிரைக் கோவைக் கனிதனை நிகரிதழ்
பருகிக் காதற் றுயரற வளநிறை
துணைபொற் றோளிற் குழைவுற மனமது களிகூரச்
சுடர்முத் தாரப் பணியணி ம்ருகமத
நிறைபொற் பாரத் திளகிய முகிழ்முலை
துவளக் கூடித் துயில்கினு முனதடி மறவேனே
குகுகுக் கூகுக் குகுகுகு குகுவென
திமிதித் தீதித் திமிதியென் முரசொடு
குழுமிச் சீறிச் சமர்செயு மசுரர்கள் களமீதே

குழறிக் கூளித் திரளெழ வயிரவர்
குவியக் கூடிக் கொடுவா அலகைகள்
குணலிட் டாடிப் பசிகெட அயில்விடு குமரேசா
செகசெச் சேசெச் செகவென முரசொலி
திகழச் சூழத் திருநட மிடுபவர்
செவிகட் காளப் பணியணி யிறையவர் தருசேயே
சிகரப் பாரக் கிரியுறை குறமகள்
கலசத் தாமத் தனகிரி தழுவிய
திருநெய்த் தானத் துறைபவ சுரபதி பெருமாளே.

**1172.** முகைமுளரி ப்ரபைவீசும் எழில்கனக மலைபோலு
முதிர்விளை தனபார மடவார்தோள்
முழுகியமி ழநுபோக விழலனென உலகோர்கள்
மொழியுமது மதியாது தலைகீழ்வீழ்ந்
தகமகிழ விதமான நகையமுத மெனவூறல்
அசடரக மெழவாகி மிகவேயுண்
டழியுமொரு தமியேனு மொழியுமுன திருதாளின்
அமுதுபரு கிடஞானம் அருளாயோ
மகரமெறி திரைமோது பகரகடல் தடவாரி
மறுகுபுனல் கெடவேலை விடுவோனே
வரிசையவுண் மகசேனை யுகமுடிய மயிலேறி
வருபனிரு கரதீர முருகோனே
பகர்வரிய ரெனலாகு முமைகொழுந ருளமேவு
பரமகுரு வெனநாடும் இளையோனே
பணிலமணி வெயில்வீசு மணிசிகர மதிசூடு
பழநிமலை தனில்மேவு பெருமாளே.

**1173.** முடித்த குழலினர் வடித்த மொழியினர்
முகத்தி லிலகிய விழியாலும்
முலைக்கி ரிகள்மிசை அசைத்த துகிலினும்
இளைத்த இடையினு மயலாகிப்
படுத்த அணைதனி லணைத்த அவரொடு
படிக்கு ளநுதினம் உழலாதே

பருத்த மயில்மிசை நினைத்த பொழுதுன
பதத்து மலரிணை அருள்வாயே
துடித்தொர் தசமுகன் முடித்த லைகள்விழ
தொடுத்த சரம்விடு ரகுராமன்
துகைத்தி வுலகையொ ரடிக்கு ளளவிட
உவக்கு மரிதிரு மருகோனே
தடத்து ளுறைகயல் வயற்கு ளெதிர்பொரு
தழைத்த கதலிகள் அவைசாயத்
தருக்கு மெழிலுறு திருத்த ணிகைமிசை
தழைத்த சரவண பெருமாளே.

1174. முட்டம ருட்டி இருகுழை தொட்டக டைக்க ணியலென
மொட்பைவி ளைத்து முறையளித் திடுமாதர்
முத்தமி ரத்ந மரகதம் வைத்தவி சித்ர முகபட
மொச்சிய பச்சை யகில்மணத் தனபாரம்
கட்டிய ணைத்து நகநுதி பட்டக ழுத்தி லிறுகிய
கைத்தல மெய்த்து வசனமற் றுயிர்சோரும்
கட்டமு யக்கி னனுபவம் விட்டுவி டற்கு நியமித
கற்பனை பக்ஷ முடனளித் தருளாயோ
வெட்டிய கட்க முனைகொடு வட்டகு ணத்து ரணமுக
விக்ரம வுக்ர வெகுவிதப் படைவீரா
வெற்றியை யுற்ற குறவர்கள் பெற்றகொ டிக்கு மிகமகிழ்
வித்தக சித்த வயலியிற் குமரேசா
கிட்டிய பற்கொ டசுரர்கள் மட்டற உட்க வடலொடு
கித்திந டக்கு மலகைசுற் றியவேலா
கெட்டவ ருற்ற துணையென நட்டருள் சிட்ட பசுபதி
கெர்ப்பபு ரத்தி லறுமுகப் பெருமாளே.

1175. முட்டுப் பட்டுக் கதிதோறும்
முற்றச் சுற்றிப் பலநாளும்
தட்டுப் பட்டுச் சுழல்வேனைச்
சற்றுப் பற்றக் கருதாயோ

வட்டப் புட்பத் தலமீதே
வைக்கத் தக்கத் திருபாதா
கட்டத் தற்றத் தருள்வோனே
கச்சிச் சொக்கப் பெருமாளே.

1176. முதலி யாக்கையு மிளமை நீத்தற
மூவா தாரா காவா தாரா எனஞாலம்
முறையி டாப்படு பறைக ளார்த்தெழ
மூடா வீடு டேகேள் கோகோ எனநோவ
மதலை கூப்பிட மனைவி கூப்பிட
மாதா மோதா வீழா வாழ்வே எனமாய
மறலி யூர்ப்புகு மரண யாத்திரை
வாரா வானாள் போநாம் நீமீள் எனவேணும்
புதல ருப்புன எயினர் கூக்குரல்
போகா நாடார் பாரா வாரார் அசுரோடப்
பொருது தாக்கிய வயப ராக்ரம
பூபா லாநீ பாபா லாதா தையுமோதும்
குதலை வாய்க்குரு பரச டாக்ஷர
கோடா ரூபா ரூபா பாரீ சதவேள்விக்
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே.

1177. முதிர உழையை வனத்தில் முடுகி வடுவை அழித்து
முதிர கயல்கள் கயத்தி னிடையோடி
முரண வளரும் விழிக்குள் மதன விரகு பயிற்றி
முறைமை கெடவு மயக்கி வருமாதர்
மதுர அமுத மொழிக்கும் மகுட களப முலைக்கும்
வலிய அடிமை புகுத்தி விடுமாய
மனதை உடைய அசட்டு மனிதன் முழுது புரட்டன்
மகிழ உனது பதத்தை அருள்வாயே
சதுரன் வரையை எடுத்த நிருத னுடலை வதைத்தொர்
சகடு மருத முதைத்த தகவோடே

தழையு மாமு நிலத்தில் மடிய அமரை விளைத்த
தனுவை உடைய சமர்த்தன் மருகோனே
அதிர முடுகி எதிர்த்த அசுர ருடலை வதைத்தும்
அமரர் சிறையை விடுத்தும் வருவோனே
அரிய புகழை அமைத்த பெரிய பழநி மலைக்குள்
அழகு மயிலை நடத்து பெருமாளே.

1178. முதிரு மார வார வெற்றி முரச மாக நீளு மிக்கு
முனியு மார வார முற்ற கடலாலே
முடிவி லாத தோர்வ டக்கில் எரியு மால மார்பி டத்து
முழுகி எறி மேலெ றிக்கு நிலவாலே
வெதிரை யாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்
விழைவி லாத தாய ருக்கு மழியாதே
விளையு மோக போக முற்றி அளவி லாத காத லுற்ற
விரக மாற நீய ணைக்க வரவேணும்
கதிர காம மாந கர்க்கு ளெதிரி லாத வேல்த ரித்த
கடவு ளேக லாப சித்ர மயில்வீரா
கயலு லாம்வி லோச னத்தி களப மார்ப யோத ரத்தி
ககன மேவு வாளொ ருத்தி மணவாளா
அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க
அரிய ஞான வாச கத்தை அருள்வோனே
அகில லோக மீது சுற்றி அசுர லோக நீறெ ழுப்பி
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே.

1179. முத்தமு லாவு தனத்தியர் சித்தச ஞாண செலுத்திகள்
முத்தமி டாம லுருக்கிகள் இளைஞோர்பால்
முட்டவு லாவி மருட்டிகள் கெட்டிலை வேலின் விழிச்சியர்
முப்பது கோடி மனத்தியர் அநுராகத்
தத்தைக ளாசை விதத்தியர் கற்புர தோளின் மினுக்கிகள்
தப்புறு மாற கமெத்திகள் அளவேநான்
தட்டழி யாது திருப்புகழ் கற்கவு மோத வுமுத்தமிழ்
தத்துவ ஞான மெனக்கருள் புரிவாயே
மத்தக யானை உரித்தவர் பெற்றகு மார இலக்குமி
மைத்துன னாகி யவிக்ரமன் மருகோனே

வற்றிட வாரி திமுற்றிய வெற்றிகொள் சூரர் பதைப்புற
வற்புறு வேலை விடுத்தருள் இளையோனே
சித்திர மான குறத்தியை உற்றொரு போது புனத்திடை
சிக்கென வேத மூவிப்புணர் மணவாளா
செச்சையு லாவு பதத்தவ கொச்சையில் வாழ்குக வித்தக
செய்ப்பதி மேவிய வச்சுரர் பெருமாளே.

1180. முத்த மோகன தத்தையி னார்குர
லொத்த வாயித சர்க்கரை யார்நகை
முத்து வாரணி பொற்குவ டார்முலை விலைமாதர்
மொக்கை போகசெ குத்திடு வார்பொருள்
பற்றி வேறும சைத்திடு வார்சிலர்
முச்ச லீலகை சொக்கிடு வாரிடர் கலிசூழச்
சித்தி லாடவ சைத்திடு வார்கவ
டுற்ற மாதர்வ லைப்புகு நாயெனை
சித்தி ஞானம்வெ ளிப்பட வேசுடர் மடமீதே
சித்தெ லாமொரு மித்துன தாறினம்
வைத்து நாயென ருட்பெற வேபொருள்
செப்பி யாறுமு கப்பரி வோடுணர் வருள்வாயே
தத்த னனத னத்தன தாவென
டுக்கை பேரிமு ழக்கிட வேகடல்
சத்த தீவுத யித்தியர் மாளிட விடும்வேலா
சத்தி லோகப ரப்பர மேசுர
நிர்த்த மாடுக ழற்கரு ணாகர
தற்ப ராபர நித்தனொர் பாலுறை உமைபாலா
துத்தி மார்முலை முத்தணி மோகன
பொற்ப்ர காசமு ளக்குற மான்மகள்
துப்பு வாயிதழ் வைத்தணை சோதிபொன் மணிமார்பா
சுட்டி நீலவி ரத்தின மாமயி
லுற்று மேவிய ருட்புலி யூர்வளர்
சுத்த னேசசி பெற்றபெ ணாயகி பெருமாளே.

1181. முத்துக்குச் சிட்டுக் குப்பிமு
டித்துச்சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட நுதல்மீதே
முக்யப்பச் சைப்பொட் டிட்டணி
ரத்னச்சுட் டிப்பொற் பட்டிவை
முச்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாடத்
தித்திக்கச் சொற்சொற் றுப்பிதழ்
நச்சுக்கட் கற்புச் சொக்கியர்
செப்புக்கொக் கக்கச் சுப்பெறு தனமேரு
திட்டத்தைப் பற்றிப் பற்பல
லச்சைக்குட் பட்டுத் தொட்டுயிர்
சிக்கிச்சொக் கிக்கெட் டிப்படி உழல்வேனோ
மெத்தத்துக் கத்தைத் தித்தியி
னிச்சித்தத் திற்பத் தத்தொடு
மெச்சிச்சொர்க் கத்திற் சிற்பரம் அருள்வாயே
வித்தைக்குக் கர்த்ருத் தற்பர
முக்கட்சித் தர்க்குப் புத்திர
விச்சித்ரச் செச்சைக் கத்திகை புனைவோனே
நித்யக்கற் பத்திற் சித்தர்கள்
எட்டுத்திக் குக்குட் பட்டவர்
நிஷ்டைக்கற் பத்துப் பத்தர்கள் அமரோரும்
நெட்டுக்குப் புட்பத் தைக்கொடு
முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ
நிக்குட்பட் டத்துக் குற்றுறை பெருமாளே.

1182. முத்துத் தெறித்துவள ரிக்குச் சிலைக்கைமதன்
முட்டித் தொடுத்த மலராலே
முத்தத் திருச்சலதி முற்றத் துதித்தியென
முற்பட் டெரித்த நிலவாலே
எத்தத் தையர்க்குமித மிக்குப் பெருக்கவினி
இப்பொற் கொடிச்சி தளராதே
எத்திக் குமுற்றபுகழ் வெற்றித் திருத்தணியி
லிற்றைத் தினத்தில் வரவேணும்

மெத்தச் சினத்துவட திக்குக் குலச்சிகர
வெற்பைத் தொளைத்த கதிர்வேலா
மெச்சிக் குறத்திதன மிச்சித் தணைத்துருகி
மிக்குப் பணைத்த மணிமார்பா
மத்தப் ரமத்தரணி மத்தச் சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே
வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே.

**1183.** முத்துநவ ரத்நமணி பத்திநிறை சத்தியிட
மொய்த்தகிரி முத்திதரு எனவோதும்
முக்கணிறை வர்க்குமருள் வைத்தமுரு கக்கடவுள்
முப்பதுமு வர்க்கசுரர் அடிபேணிப்
பத்துமுடி தத்தும்வகை உற்றகணை விட்டவரி
பற்குனனை வெற்றிபெற ரதமூரும்
பச்சைநிற முற்றபுயல் அச்சமற வைத்தபொருள்
பத்தர்மன துற்றசிவம் அருள்வாயே
தித்திமிதி தித்திமிதி திக்குகுகு திக்குகுகு
தெய்த்ததெனு தெய்த்ததெனு தெனதான
திக்குவென மத்தளமி டக்கைதுடி தத்ததகு
செச்சரிகை செச்சரிகை எனஆடும்
அத்தனுட னொத்தநட நித்ரிபுவ னத்திநவ
சித்தியருள் சத்தியருள் புரிபாலா
அற்பவிடை தற்பமது முற்றுநிலை பெற்றுவளர்
அற்கனக பத்மபுரி பெருமாளே.

**1184.** முத்து மணிபணிக ளாரத் தாலு
மொய்த்த மலைமுலைகொ டேவித் தார
முற்று மிளைஞருயிர் மோகித் தேகப் பொருமாதர்
முற்று மதிமுகமும் வானிற் காரு
மொத்த குழல்விழியும் வேய்நற் றோளு
முத்தி தருமெனும்வி னைவிற் பாயற் கிடைமூழ்கிப்

புத்தி கரவடமு லாவிச் சால
மெத்த மிகவறிவி லாரைத் தேறிப்
பொற்கை புகழ்பெரிய ராகப் பாடிப் புவியூடே
பொய்க்கு ளொழுகியய ராமற் போது
மொய்த்த கமலவிரு தாளைப் பூணப்
பொற்பு மியல்புதுமை யாகப் பாடப் புகல்வாயே
பத்து முடியுமத னோடைத் தோளிர்
பத்து மிறையவொரு வாளிக் கேசெய்
பச்சை முகில்சதுர வேதத் தோடுற் றயனாரும்
பற்ற அரியநட மாடத் தாளில்
பத்தி மிகவினிய ஞானப் பாடல்
பற்று மரபுநிலை யாகப் பாடித் திரிவோனே
மெத்த அலைகடலும் வாய்விட் டோட
வெற்றி மயில்மிசைகொ டேகிச் சூரர்
மெய்க்கு ளுறவிலகு வேலைப் போகச் செறிவோனே
வெற்றி மிகுசிலையி னல்மிக் கோர்தம்
வித்து விளைபுனமும் வேய்முத் தீனும்
வெற்பு முறையுமயில் வேளைக் காரப் பெருமாளே.

**1185.** முத்துமணி யாரமொய்த் திட்டவிரு கோடுமுற்
பட்டகரி போலுமத் தனமாதர்
முற்றுமதி யார்முகத் துற்றமுனை வேலுறப்
பட்டுமுகில் போல்மனத் திருள்மூடிச்
சுத்தமதி போய்வினைத் துட்டனவ னும்மனத்
துக்கமுற வேமிகச் சுழலாதே
சொற்கள்பல நாவினிற் றெட்டினிரு தாடொழச்
சொற்கமல வாழ்வுசற் றருள்வாயே
கொத்துமுடி யானபத் தற்றுவிழ வேகுறிப்
புற்றவதி கோபனச் சுதன்மாயன்
கொற்றமரு காகுறக் கொச்சைமற மாதினுக்
கிச்சைமொழி கூறுநற் குமரேசா

பத்தியுட னேநினைப் பற்றுமடி யார்வினைப்
பற்றுவிடு மாமறைப் பொருளானும்
பத்திவர ஞானசொற் கற்றவர்கள் பாடுநற்
பட்சபத தேவர்மெய்ப் பெருமாளே.

1186. முத்து ரத்ந சூத்ர மொத்த சித்ர மார்க்கர்
முற்செ மத்து மூர்க்கர் வெகுபாவர்
முத்து திர்த்த வார்த்தை யொத்த பத்ர வாட்கண்
முச்சர் மெத்த சூக்ஷர் நகையாலே
எத்தர் குத்தி ரார்த்தர் துட்ட முட்ட காக்கர்
இட்ட முற்ற கூட்டர் விலைமாதர்
எக்கர் துக்கர் வாழ்க்கை யுற்ற சித்த நோய்ப்புண்
இப்ப டிக்கு மார்க்கம் உழல்வேனோ
தித்தி மித்தி மீத்த னத்த னத்த மூட்டு
சிற்று டுக்கை சேட்டை தவில்பேரி
திக்கு மக்க ளாக்கை துக்க வெற்பு மீக்கொள்
செக்க டற்கு ளாழ்த்து விடும்வேலா
கற்பு ரத்தை வீட்டி நட்ட மிட்ட நீற்றர்
கத்தர் பித்தர் கூத்தர் குருநாதா
கற்கு றிச்சி வாழ்ப்பெ ணுக்க வெற்றி வேற்கொள்
*கச்சி நத்தி நாட்கொள் பெருமாளே.

1187. முத்தைத்தரு (113-வது பக்கம் பார்க்க)

1188. முத்தோலை தனைக்கி ழித்தயி
லைப்போரி கலிச்சி வத்துமு
கத்தாம ரையிற்செ ருக்கிடும் விழிமானார்
முற்றாதி ளகிப்ப ணைத்தணி
கச்சார மறுத்த நித்தில
முத்தார மழுத்து கிர்க்குறி அதனாலே
வித்தார கவித்தி றத்தினர்
பட்டோலை நிகர்த்தி ணைத்தெழு
வெற்பான தனத்தில் நித்தலும் உழல்வேனோ

---

*கைச்சி னத்தி ஞட்கொள் பெருமாளே.

மெய்த்தேவர் துதித்தி டத்தரு
பொற்பார்க மலப்ப தத்தினை
மெய்ப்பாக வழுத்தி டக்ருபை புரிவாயே

பத்தான முடித்த லைக்குவ
டிற்றுட அரக்க ருக்கிறை
பட்டாவி விடச்செ யித்தவன் மருகோனே

பற்பாசன் மிகைச்சி ரத்தைய
றுத்தாத வனைச்சி னத்துறு
பற்போக உடைத்த தற்பான் மகிழ்வோனே

கொத்தார்க தலிப்ப ழக்குலை
வித்தார வருக்கை யிற்சுளை
கொத்தோடு திரக்கு தித்தெழு கயலாரங்

கொட்டாசு ழியிற்கொ ழித்தெறி
சிற்றாறு தனிற்க ளித்திடு
குற்றால ரிடத்தி லுற்றருள் பெருமாளே.

**1189.** முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாதே

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே

திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்சணகு சேகு தாளத் தோடு நடமாடும்

செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே

அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தில்நகர் வாழு மாண்மைக் காரப் பெருமாளே.

**1190.** முப்பழ மொடுபொரி யப்பமொ டவல்பல
மொக்கிய கரிமுகன் அடிபேணி
முப்பத மடியவர் புத்தியி லுறைதரு
முக்கண னெனவினை கடிதேகும்
மைப்படர் குழலியு மத்தமு மதியமும்
வைத்திடு மரமகன் மதயானை
மத்தள வயிறனை யுத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
முற்படு கிரிதனில் முத்தமி ழடைவுடன்
முற்பட வெழுதிய முதல்வோனே
அற்புத மகிழ்வொடு சுப்பிர மணியுடன்
அச்சர வணைதனில் அரிதாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

**1191.** முருகம யூரச் சேவக சரவண வனற் பூதரி
முகுளப டீரக் கோமளை முலைமீதே
முழுகிய காதற் காமுக பதிபசு பாசத் தீர்வினை
முதியபு ராரிக் கோதிய குருவேயென்
றுருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு
முணர்வினொ டூடிக் கூடியும் வழிபாடுற்

றுலகினு ராசைப் பாடற நிலைபெறு ஞானத் தாவினி
உனதடி யாரைச் சேர்வதும் ஒருநாளே
மருகனெ னுமற் சூழ்கொலை கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை பருகாமேல்
வருமத யானைக் கோடவை திருகிவி ளாவிற்காய்கனி
மதுகையில் வீழச் சாடிய சதமாபுட்
பொருதிரு கோரப் பாரிய மருதிடை போயப்போதொரு
சகடுதை யாமற் போர்செய்து விளையாடிப்
பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மரு காவஜ்ராயுத
புரமதில் மாபுத் தேளிர்கள் பெருமாளே.

1192. முருகுசெறி குழலவிழ முலைபுளக மெழநிலவு
முறுவல்தர விரகமெழ அநுராகம்
முதிரவச மறவிதரி எழுகைவளை கலகலென
முகநிலவு குறுவெயர்வு துளிவீச
அருமதுர மொழிபதற இதழமுது பருகிமிக
அகமகிழ இருகயல்கள் குழையேற
அமளிபடு மமளிமல ரணையின்மிசை துயிலுகினும்
அலர்கமல மலரடியை மறவேனே
நிருதரொடு வருபரியும் அடுகரியும் ரதநிரையும்
நெறுநெறென முறியவிடும் வடிவேலா
நிகழகள சகளகுரு நிருபகுரு பரகுமர
நெடியநெடு ககனமுக டுறைவோனே
வருமருவி நவமணிகள் மலர்கமுகின் மிசைசிதற
மதுவினிரை பெருகுவளி மலைமீதே
வளர்குறவர் சிறுமியிரு வளர்தனமு மிருபுயமு
மருவிமகிழ் பழநிவரு பெருமாளே.

1193. முருகு செறிகுழ லவிழ்தர முகமதி
முடிய வெயர்வர முதுதிரை யமுதென
மொழிகள் பதறிட வளைகல கலவென அணைபோக
முலையின் மிசையிடு வடமுடி யறஇடை
முறியு மெனஇரு பரிபுர மலறிட
முகுள அலரிள நிலவெழ இலவிதழ் பருகாநின்

றுருகி யுளமுட லுடலொடு செருகிட
வுயிரு மெனதுயி ரெனமிக வுறவுசெய்
துதவு மடமக ளிர்களொடு மமளியில் அநுராக
உததி அதனிடை விழுகினு மெழுகினும்
உழலு கினுமுன தடியிணை எனதுயிர்
உதவி யெனவுனை நினைவது மொழிவது மறவேனே
எருவை ஒடுகொடி கெருடனும் வெளிசிறி
திடமு மிலையென வுலவிட அலகையின்
இனமும் நிணமுண எழுகுறள் களுமியல்இசைபாட
இகலி முதுகள மினமிசை யொடுதனி
இரண பயிரவி பதயுக மிகுநட
மிடவு மிகவெதி ரெதிரெதி ரொருதனுஇருகாலும்
வரிசை அதனுடன் வளைதர ஒருபது
மகுட மிருபது புயமுடன் மடிபட
வலியி னொருகணை விடுகர முதலரி நெடுமாயன்
மருக குருபர சரவண மதில்வரு
மகிப சுரபதி பதிபெற அவுணர்கள்
மடிய இயல்கொளு மயில்மிசை வரவல பெருமாளே.

1194. முருகு செறிகுழல் சொருகிய விரகிகள்
முலைக ளளவிடு முகபட பகடிகள்
முதலு முயிர்களு மளவிடு களவியர் முழுநீல
முழுகு புழுககில் குழைவடி வழகியர்
முதிர வளர்கனி அதுகவ ரிதழியர்
முனைகொ ளயிலெனை விழியெறி கடைசிய ரநுராகம்
மருவி அமளியி னலமிடு கலவியர்
மனது திரவிய மளவள வளவியர்
வசன மொருகொடி நிலைமையில் கபடியர் வழியேநான்
மருளு மறிவின னடிமுடி யறிகிலன்
அருணை நகர்மிசை கருணையொ டருளிய
மவுன வசனமு மிருபெரு சரணமு மறவேனே
கருதி இருபது கரமுடி ஒருபது
கனக மவுலிகொள் புரிசைசெய் பழையது
கடிய வியனகர் புகவரு கனபதி கனல்மூழ்கக்

கவச அநுமனொ டெழுபது கவிவிழ
அணையி லலையெறி எதிரமர் பொருதிடு
களரி தனிலொரு கணைவிடு மடலரி மருகோனே
சருவு மவுணர்கள் தளமொடு பெருவலி
அகல நிலைபெறு சயிலமு மிடிசெய்து
தரும னவர்பதி குடிவிடு பதனிசை மயில்வீரா
தருண மணியவை பலபல செருகிய
தலையள் துகிலிடை அழகிய குறமகள்
தனது தனமது பரிவொடு தழுவிய பெருமாளே.

1195. முருகு செறிகுழல் முகிலென நகில்நறு
முளரி முகையென இயலென மயிலென
முறுவல் தளவென நடைமட அனமென இருபார்வை
முளரி மடலென இடைதுடி யதுவென
அதர மிலவென அடியிணை மலரென
மொழியு மமுதென முகமெழில் மதியென மடமாதர்
உருவ மிணையன எனவரு முருவக
உரைசெய் தவர்தரு கலவியி னிலவிய
உலையின் மெழுகென உருகிய கசடனை யொழியாமல்
உவகை தருகலை பலவுணர் பிறவியின்
உவரி தனிலுறு மவலனை அசடனை
உனது பரிபுர கழலிணை பெறவருள் புரிவாயே
அரவ மலிகடல் விடமமு துடனெழ
அரிய யனுநரை இபன்முத லனைவரும்
அபய மிகவென அதையயி லிமையவன் அருள்பாலா
அமர்செய் நிசிசர ருடலவை துணிபட
அவனி இடிபட அலைகடல் பொடிபட
அமரர்சிறைவிட அடலயில்நொடியினில் விடுவோனே
பரவு புனமிசை உறைதரு குறமகள்
பணைகொ ளணிமுலை முழுகுப னிருபுய
பணில சரவணை தனில்முள ரியில்வரு முருகோனே
பரம குருபர எனுமுரை பரவொடு
பரவி அடியவர் துதிசெய மதிதவழ்
பழநி மலைதனி லினிதுறை அமரர்கள் பெருமாளே.

1196. முருகு லாவிய குழலினு நிழலினு
மருவ மாகிய இடையினு நடையினு
முளரி போலுநல் விழியினு மொழியினு மடமாதர்
முனிவி லாநகை வலையினு நிலையினு
மிருக வாரிடு மலையெனு முலையினு
முடிவி லாதவொர் கொடுவிட மடுவித மயலாகி
நரகி லேவிழு மவலனை அசடனை
வழிப டாதவொர் திருடனை மருடனை
நலமி லாவக கபடனை விகடனை வினையேனை
நடுவி லாதன படிறுகொ ளிடறுசொல்
வதனில் மூழ்கிய மறவனை இறவனை
நளின மார்பத மதுபெற ஒருவழி அருள்வாயே
வரிய ராவினின் முடிமிசை நடமிடு
பாத மாயவ னெழுபுவி யளவிடு
வரதன் மாதவ னிரணிய னுடலிரு பிளவாக
வகிரு மாலரி திகிரிய னலையெறி
தமர வாரிதி முறையிட நிசிசரன்
மகுட மானவை ஒருபதும் விழவொரு கணையேவும்
கரிய மேனியன் மருதொடு பொருதவ
னினிய பாவல னுரையினி லொழுகிய
கடவுள் வேயிசை கொடுநிரை பரவிடும் அபிராமன்
கருணை நாரண னரபதி சுரபதி
மருக கானக மதனிடை உறைதரு
கரிய வேடுவர் சிறுமியொ டுருகிய பெருமாளே.

1197. முருகு லாவிய மைப்பாவு வார்குழல்
முளரி வாய்நெகிழ் வித்தார வேல்விழி
முடுகு வோர்குலை வித்தான கோடெனு முலையாலே
முறைமை சேர்கெட மைத்தார்வு வார்கடல்
முடுகு வோரென எய்த்தோடி யாகமு
மொழியும்வேறிடுவித்தேறி னோனு முயல்வேகொண்
டுருகு வார்சில சிற்றும னோலய
முயிரு மாகமு மொத்தாசை யோடுள
முருகி தீமெழு கிட்டான தோவென வுரையாநண்

புலக வாலொழி வித்தார்ம ணாலைய
முணர்வு நீடிய பொற்பாத சேவடி
யுலவு நீயெனை வைத்தாள வேயருள் தருவாயே
குருகு லாவிய நற்றாழி சூழ்நகர்
குமர னேமுனை வெற்பார்ப ராபரை
குழக பூசுரர் மெய்க்காணும் வீரர்தம் வடிவேலா
குறவர் சீர்மக ளைத்தேடி வாடிய
குழையு நீள்கர வைத்தோடி யேயவர்
குடியி லேமயி லைக்கோடு சேர்திய வுரவோனே
மருகு மாமது ரைக்கூடல் மால்வரை
வளைவு ளாகிய நக்கீர ரோதிய
வளைகை சேர்தமி ழுக்காக நீடிய கரவோனே
மதிய மேவிய சுற்றாத வேணியர்
மகிழ நீநொடி யற்றான போதினில்
மயிலை நீடுலை கைச்சூழ வேவிய பெருமாளே.

1198. முலைகு லுக்கிகள் கபடிகள்
வடிபு ழுக்கைக ளசடிகள்
முறைம சக்கிகள் திருடிகள் மதவேளால்
மொழிப சப்பிகள் விகடிகள்
அழிம னத்திகள் எழினகை
முகமி னுக்கிகள் கசடிகள் இடையேசூழ்
கலைநெ கிழ்த்திக ளிளைஞர்கள்
பொருள்ப றித்தம ளியின்மிசை
கனியி தழ்ச்சுருள் பிளவிலை யொருபாதி
கலவி யிற்றரும் வசவிகள்
விழிம யக்கினில் வசமழி
கவலை யற்றிட நினதருள் புரிவாயே
அலைநெ ருப்பெழ வடவரை
பொடிப டச்சம ணர்கள்குலம்
அணிக ழுப்பெற நடவிய மயில்வீரா

அரன ரிப்பிர மர்கள்முதல்
வழிப டப்பெரு மறைபொருள்
மதிமு டித்தவர் ப்ரியமுற அருள்வோனே
சிலைமொ ளுக்கென முறிபட
மிதிலை யிற்சன கமனருள்
திருவி னைப்புண ரரிதிரு மருகோனே
திரள்வ ருக்கைகள் கமுகுகள்
சொரிம துக்கத லிகள்வளர்
திருவி டைக்கழி மருவிய பெருமாளே.

**1199.** முலைபுளக மெழுவங்கை மருவுசரி வளைகொஞ்ச
முகிலளக மகில்பொங்க அமுதான
மொழிபதற அருமந்த விழிகுவிய மதிகொண்ட
முகம்வெயர்வு பெறமன்றல் அணையூடே
கலைநெகிழ வளர்வஞ்சி இடைதுவள உடலொன்று
படவுருகி இதயங்கள் ப்ரியமேகூர்
கலவிகரை அழியின்ப அலையிலலை படுகின்ற
கவலைகெட நினதன்பு பெறுவேனோ
அலையெறியு மெழில்சண்ட உததிவயி றழல்மண்ட
அதிரவெடி படவண்டம் இமையோர்கள்
அபயமென நடுநின்ற அசுரர்படை அடியுண்டு
விழவருள நடுநின்று பொரும்வேலா
தலைமதிய நதிதும்பை இளவறுகு கமழ்கொன்றை
சடைமுடியி லணிகின்ற பெருமானார்
தருகுமர விடைவந்து தலையாவு தொழுகின்ற
தணிமலையி லுறைகின்ற பெருமாளே.

**1200.** முலைம றைக்கவும் வாசலி லேதலை
மறைய நிற்கவும் ஆசையு ளோரென
முகிழ்ந கைச்சிறு தூதினை யேவவு முகமோடே
முகம ழுத்தவும் ஆசைகள் கூறவும்
நகம ழுத்தவும் லீலையி லேயுற
முறைம சக்கவும் வாசமு லாமலர் அணைமீதே

கலைநெ கிழ்க்கவும் வாலிப ஞானவர்
உடல்ச ளப்பட நாள்வழி நாள்வழி
கறைய ழிக்கவும் நானென வேயணி விலையீதே
கடிய சத்திய மாமென வேசொலி
யவர்கொ டப்பண மாறிட வீறொடு
கடுக டுத்திடு வாரொடு கூடிய தமையாதோ
மலையை மத்தென வாசுகி யேகடை
கயிறெ னத்திரு மாலொரு பாதியு
மருவு மற்றது வாலியு மேலிட அலையாழி
வலய முட்டவொ ரோசைய தாயொலி
திமிதி மித்திமெ னவெழ வேயலை
மறுகி டக்கடை யாவெழ மேலெழும் அமுதோடே
துலைவ ருத்திரு மாமயில் வாழ்வுள
வயலை யற்புத னேவினை யானவை
தொடர றுத்திடு மாரிய கேவலி மணவாளா
துவள்க டிச்சிலை வேள்பகை வாதிரு
மறுவொ ரெட்டுட னுயிர மேலொரு
துகள றுத்தணி யாரழ காசுரர் பெருமாளே.

1201. முலைமு கந்தி மிர்ந்த கலவை யுந்து லங்கு
முறுவ லுஞ்சி வந்த கனிவாயும்
முருக விழ்ந்து திர்ந்த மலர்க ளுஞ்ச ரிந்த
முகிலு மின்ப சிங்கி விழிவேலும்
சிலைமு கங்க லந்த திலத முங்கு ளிர்ந்த
திருமு கந்த தும்பு குறுவேர்வும்
தெரிய வந்து நின்ற மகளிர் பின்சு ழன்று
செயல ழிந்து ழன்று திரிவேனோ
மலைமு கஞ்சு மந்த புலவர் செஞ்சொல் கொண்டு
வழிதி றந்த செங்கை வடிவேலா
வளர்பு னம்ப யின்ற குறமடந்தை கொங்கை
மணிவ டம்பு தைந்த புயவேளே

அலைமு கந்த வழ்ந்து சினைமு திர்ந்த சங்கம்
அலறி வந்து கஞ்ச மலர்மீதே
அளிக லந்தி ரங்க இசையு டன்து யின்ற
அரிய செந்தில் வந்த பெருமாளே.

1202. முலைமேலிற் கலிங்க மொன்றிட
முதல்வானிற் பிறந்த மின்பிறை
நுதல்மேல்முத் தரும்ப புந்தியில் இதமார
முகநேசித் திலங்க வும்பல
வினைமூசிப் புரண்ட வண்கடல்
முரணுசைக் கமைந்த வன்சரம் எனமூவா
மலர்போலச் சிவந்த செங்கணில்
மருள்கூர்கைக் கிருண்ட அஞ்சனம்
வழுவாமற் புனைந்து திண்கயம் எனநாடி
வருமாதர்க் கிரங்கி நெஞ்சமு
மயலாகிப் பரந்து நின்செயல்
மருவாமற் கலங்கும் வஞ்சகம் ஒழியாதோ
தொலையாநற் றவங்க ணின்றனை
நிலையாகப் புகழ்ந்து கொண்டுள
அடியாருட் டிலங்கி நின்றருள் துணைவேளே
துடிநேரொத் திலங்கு மென்கொடி
இடைதோகைக் கிசைந்த ஒண்டொடி
சுரர்வாழப் பிறந்த சுந்தரி மணவாளா
மலைமாளப் பிளந்த செங்கையில்
வடிவேலைக் கொடுந்த வஞ்சக
வடிவாகக் கரந்து வந்தமர் பொருசூரன்
வலிமாளத் துரந்த வன்திறல்
முருகாமற் பொருந்து திண்புய
வடிவாமற் றநந்த மிந்திரர் பெருமாளே.

1203. முலையைம றைத்துத் திறப்ப ராடையை
நெகிழ உடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர் பூமலர் அணைமீதே

அலைகுலை யக்கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் வேசைகள் உறவாமோ
தலைமுடி பத்துத் தெறித்து ராவண
னுடல்துளை பட்டுத் துடிக்க வேயொரு
தநுவைவ ளைத்துத் தொடுத்த வாளியன் மருகோனே
கலைமதி அப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
கழுகும லைக்குட் சிறக்க மேவிய பெருமாளே.

1204. முல்லைக்கு மாரனங்கை வில்லுக்கு மாதர்தங்கள்
பல்லுக்கும் வாடியின்ப முயலாநீள்
முள்ளூற்ற கால்மடிந்து கொள்ளிக்குள் மூழ்கிவெந்து
பள்ளத்தில் வீழ்வதன்றி ஒருஞான
எல்லைக்கு மாரணங்கள் சொல்லித்தொ ழாவணங்கு
மெல்லைக்கும் வாவிநின்றன் அருள்நாமம்
எள்ளற்கு மாலயர்ந்து உள்ளத்தி லாவவென்றும்
உள்ளப்பெ றாரிணங்கை ஒழிவேனோ
அல்லற்ற ஆனைதந்த வல்லிக்கு மார்பிலங்க
அல்லிப்பொன் மார்பலங்கல் புனைவோனே
அள்ளற்ப டாதகங்கை வெள்ளத்து வாவிதங்கி
மெள்ளச்ச ரோருகங்கள் பயில்நாதா
வல்லைக்கு மாரகந்த தில்லைப்பு ராரிமைந்த
மல்லுப்பொ ராறிரண்டு புயவீரா
வள்ளிக்கு ழாமடர்ந்த வள்ளிக்கல் மீதுசென்று
வள்ளிக்கு வேடைகொண்ட பெருமாளே.

1205. முல்லைமலர் போலுமுத் தாயுதிர்ந் தானநகை
வள்ளைகொடி போலுநற் காதிலங் காடுகுழை
முல்லைமலர் மாலைசுற் றாடுகொந் தாருகுழல்
அலைபோதம்

மொள்குசிலை வாணுதற் பார்வையம் பானகயல்
கிள்ளைகுர லாரிதழ்ப் பூவெனும் போதுமுக
முன்னல்கமு கார்களத் தோய்சுணங் காருமுலை
மலையானை

வல்லகுவ டாலிலைப் போலுசந் தானவயி
றுள்ளதுகில் நூலிடைக் காமபண் டாரவல்குல்
வழ்ழைதொடை யார்மலர்க் காலணிந் தாடுபரி
புரவோசை

மல்விசலி யாடபட் டாடைகொண் டாடமயல்
தள்ளுநடை யோடுசற் றேமொழிந் தாசைகொடு
வல்லவர்கள் போலபொற் சூறைகொண் டார்கள்மயல்
உறவாமோ

அல்லல்வினை போகசத் தாதிவிண் டோடநய
வுள்ளமுற வாகவைத் தாளுமெந் தாதைமகி
ழுள்ளமைய ஞானவித் தோதுகந் தாகுமர
முருகோனே

அன்னநடை யாள்குறப் பாவைபந் தாடுவிர
லென்னுடைய தாய்வெண்முத் தார்கடம் பாடுகுழ
லன்னைவலி சேர்தனக் கோடிரண் டானவளி
மணவாளா

செல்லுமுக ஏழ்கடற் பாழிவிண் டோடதிர
வல்லசுரர் சேனைபட் டேமடிந் தேகுருதி
செல்லதிசை யோடுவிட் டாடுசிங் காரமுக வடிவேலா

தெள்ளுதமிழ் பாடியிட் டாசைகொண் டாடசசி
வல்லியொடு கூடிதிக் கோர்கள்கொண் டாடவியல்
தில்லைநகர் கோபுரத் தேமகிழ்ந் தேகுலவு பெருமாளே

**1206.** முழுகிவட வாமு கத்தி னெழுகனலி லேபி றக்கு
முழுமதிநி லாவி னுக்கும் வசையாலும்
மொழியுமட மாத ருக்கு மினியதனு வேயி சைக்கு
முதியமத ராஜ னுக்கும் அழியாதே
புழுகுதிகழ் நீப மத்தி லழகியகு ராநி ரைத்த
புதுமையினி லாறி ரட்டி புயமீதே

புணரும்வகை தானி னைத்த துணரும்வகை நீல சித்ர
பொருமயிலி லேறி நித்தம் வரவேணும்
எழுமகர வாவி சுற்றும் பொழிலருணை மாந கர்க்குள்
எழுதரிய கோபு ரத்தில் உறைவோனே
இடைதுவள வேடு வச்சி பவளஇத ழேது டிப்ப
இளமுலைவி டாத சித்ர மணிமார்பா
செழுமதிய நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த
சிவனைமுத லோது வித்த குருநாதா
திசைமுகன்மு ராரி மற்று மரியபல தேவ ருற்ற
சிறையடைய மீள விட்ட பெருமாளே.

1207. முழுமதி அனைய முகமிரு குழையில்
முனிவிழி முனைகள் கொண்டுமேவா
முதலறி வதனை வளைபவர் கலவி
முழுகிய வினையை மொண்டுநாயேன்
வழிவழி அடிமை எனுமறி வகல
மனமுறு துயர்கள் வெந்துவாட
மதிதரு மதிக கதிபெறு மடிகள்
மகிழ்வொடு புகழும் அன்புதாராய்
எழுதிட அரிய எழில்மற மகளின்
இருதன கிரிகள் தங்குமார்பா
எதிர்பொரு மசுரர் பொடிபட முடுகி
இமையவர் சிறையை அன்றுமீள்வாய்
அழகிய குமர எழுதல மகிழ
அறுவர்கள் அமுதை உண்டவாழ்வே
அமருல கிறைவ உமைதரு புதல்வ
அரியர பிரமர் தம்பிரானே.

1208. முறுகு காள விடம யின்ற
இருகண் வேலி னுளம யங்கி
முளரி வேரி முகைய விழ்ந்த முலைமீதே
முழுகு காதல் தனைம றந்து
பரம ஞான ஒளிசி றந்த
முகமொ ராறு மிகவி ரும்பி அயராதே

அறுகு தாளி நறைய விழ்ந்த
குவளை வாச மலர்க ரந்தை
அடைய வாரி மிசைபொ ழிந்துன் அடிபேணி
அவச மாகி உருகு தொண்ட
ருடன தாகி விளையு மன்பின்
அடிமை யாகு முறைமை ஒன்றை அருள்வாயே
தறுகண் வீரர் தலைய ரிந்து
பொருத சூர னுடல்பி ளந்து
தமர வேலை சுவற வென்ற வடிவேலா
தரள மூர லுமைம டந்தை
முலையி லார வமுத முண்டு
தரணி ஏழும் வலம்வ ருந்திண் மயில்வீரா
மறுவி லாத தினைவி ளைந்த
புனம்வி டாம லிதணி ருந்து
வலிய காவல் புனைய ணங்கின் மணவாளா
மருவு ஞாழ லணிசி றந்த
அடவி சூத வனநெ ருங்கி
வளர்சு வாமி மலைய மர்ந்த பெருமாளே.

1209. முனைய ழிந்தது மேட்டிகு லைந்தது
வயது சென்றது வாய்ப்பலு திர்ந்தது
முதுகு வெஞ்சிலை காட்டிவ ளைந்தது பரையான
முகமி ழிந்தது நோக்குமி ருண்டது
இருமல் வந்தது தூக்கமொ ழிந்தது
மொழித ளர்ந்தது நாக்குவி ழுந்தது அறிவேபோய்
நினைவ யர்ந்தது நீட்டல்மு டங்கலு
மவச மும்பல ஏக்கமு மூந்தின
நெறிம றந்தது மூப்புமு திர்ந்தது பலநோயும்
நிலைவை கொண்டது பாய்க்கிடை கண்டது
சலம லங்களி னாற்றமெ ழுந்தது
நிமிட மிங்கினி யாச்சுதென் முன்பினி தருள்வாயே

இணைய இந்திர னேற்றமு மண்டர்கள்
தலமு மங்கிட வோட்டியி ருஞ்சிறை
இடுமி டும்புள ராக்கதர் தங்களில் வெகுகோடி
எதிர்பொ ரும்படி போர்க்குளெ திர்ந்தவர்
தசைசி ரங்களு நாற்றிசை சிந்திட
இடிமு ழங்கிய வேற்படை ஒன்றனை எறிவோனே
தினைவ னங்கிளி காத்தசு வுந்தரி
அருகு சென்றடி போற்றிம ணஞ்செய்து
செகம றிந்திட வாழ்க்கைபு ரிந்திடு மிளையோனே
மணித னென்றும யோத்திவ ரும்புயல்
மருக னென்றுல கேத்திட வும்பொழில்
வளர்ப ரங்கிரி மேற்றிகழும்பர்கள் பெருமாளே.

**1210.** மூப்புற் றுச்செவி கேட்பற் றுப்பெரு
மூச்சுற் றுச்செயல் தடுமாறி
மூர்க்கச் சொற்குரல் காட்டிக் கக்கிட
மூக்குக் குட்சளி இளையோடும்
கோப்புக் கட்டியி ளுப்பிச் செற்றிடு
கூட்டிற் புக்குயிர் அலையாமுன்
கூற்றத் தத்துவ நீக்கிப் பொற்கழல்
கூட்டிச் சற்றருள் புரிவாயே
காப்புப் பொற்கிரி கோட்டிப் பற்றலர்
காப்பைக் கட்டவர் குருநாதா
காட்டுக் குட்குற வாட்டிக் குப்பல
காப்புக் குத்திர மொழிவோனே
வாய்ப்புற் றத்தமிழ் மார்க்கத் திட்பொருள்
வாய்க்குச் சித்திர முருகோனே
வார்த்தைச் சிற்பர தீர்த்தச் சுற்றலை
வாய்க்குட் பொற்பமர் பெருமாளே.

**1211.** மூலங்கிள ரோருரு வாய்நடு
நாலங்குல மேனடு வேரிடை
மூள்பிங்கலை நாடியொ டாடிய முதல்வோர்கள்

மூணும்பிர காசம தாயொரு
சூலம்பெற வோடிய வாயுவை
மூலந்திகழ் தூண்வழி யேயள விடவோடி

பாலங்கிள ராறுசி காரமொ
டாருஞ்சுட ராடுப ராபர
பாதம்பெற ஞானச தாசிவ மதின்மேவிப்

பாடுந்தொனி நாதமு நூபுரம்
ஆடுங்கழ லோசையி லேபரி
வாகும்படி யேயடி யேனையும் அருள்வாயே

சூலங்கலை மான்மழு வோர்துடி
வேதன் தலை யோடும ராவிரி
தோடுங்குழை சேர்பர னார்தரு முருகோனே

சூரன்கர மார்சிலை வாளணி
தோளுந்தலை தூள்பட வேயவர்
சூளுங்கெட வேல்விடு சேவக மயில்வீரா

காலின்கழ லோசையு நூபுர
வார்வெண்டைய ஓசையு மேயுக
காலங்களி னோசைய தாநட மிடுவோனே

கானங்கலை மான்மக ளார்தமை
நாணங்கெட வேயணை வேள்பிர
காசம்பழ நாபுரி மேவிய பெருமாளே.

1212. மூல மந்திர மோத லிங்கிலை
ஈவ திங்கிலை நேய மிங்கிலை
மோன மிங்கிலை ஞான மிங்கிலை மடவார்கள்

மோக முண்டதி தாக முண்டப
சார முண்டப ராத முண்டிடு
மூக னென்றொரு பேரு முண்டருள் பயிலாத

கோல முங்குண வீன துன்பர்கள்
வார்மை யும்பல வாகி வெந்தெழு
கோர கும்பியி லேவி ழுந்திட நினைவாகிக்

கூடு கொண்டுழல் வேனை அன்பொடு
ஞான நெஞ்சினர் பாலி ணங்கிடு
கூர்மை தந்தினி யாள வந்தருள் புரிவாயே

பீலி வெந்துய ராலி வெந்தவ
சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாது கொண்டருள் எழுதேடு

பேணி அங்கெதி ராறு சென்றிட
மாற னும்பிணி தீர வஞ்சகர்
பீறு வெங்கழு வேற வென்றிடு முருகோனே

ஆல முண்டவர் சோதி யங்கணர்
பாக மொன்றிய வாலை அந்தரி
ஆதி அந்தமு மான சங்கரி குமரேசா

ஆர ணம்பயில் ஞான புங்கவ
சேவ லங்கொடி யான பைங்கர
ஆவி னன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே.

**1213.** மூல முண்டக னூகி மந்திரப
ராப ரஞ்சுடர்கள் மூணு மண்டலஅ
தார சந்திமுக மாறு மிந்த்ர தரு வுந்தளாமேல்

மூது ரம்பலவர் பீட மந்தமுமி
லாத பந்தவொளி யாயி ரங்கிரண
மூணு மிந்துவொளிர் சோதி விண்படிக விந்துநாதம்

ஓல மென்றுபல தாள சந்தமிடு
சேவை கண்டமுதை வாரி யுண்டுலகி
லேழு கண்டுவினை யாடி யிந்துகதிர் அங்கிசூலம்

ஓடு மந்தகலி காலொ டுங்கநடு
தூணில் தங்கவரி ஞான வண்கயிறு
மீதணைந்துசதகோடிசந்த்ரவொளி சந்தியாதோ

சூலி யந்தரிக பாலி சங்கரிபு
ராரி யம்பரிகு மாரி யெண்குணசு
வாமி பங்கிசிவ காமி சுந்தரியு கந்தசேயே

சூர சங்கரகு மார இக்திரச
காய அன்பருப கார சுந்தரகு
காவெ னுஞ்சுருதி லோமொன் றநட னங்கொள்வேலா
சீல வெண்பொடியி டாத வெஞ்சமணர்
மாள வெங்கழுவி லேறு மென்றுபொடி
நீறி டுங்கமல பாணி சந்த்ரமுக கந்தவேளே
தேவ ரம்பையமு தீண மங்கைதரு
மான ணைந்தபுய தீர சங்கரதி
யாகர் வந்துறைந லூர மர்ந்துவளர் தம்பிரானே.

1214. மூலா தாரமொ டேற்றி யங்கியை
ஆறு தாரமொ டோட்டி யந்திர
மூலா வாயுவை யேற்றி நன்கழி முனையூடே
மூதா தாரம ருப்பி லந்தர
நாத ாகீதம தார்த்தி டும்பர
மூடே பாலொளி யாத்து மந்தனை விலகாமல்
மாலா டூமேனடு சேர்த்தி தம்பெற
நாறு வாகம சாத்தி ரஞ்சொலும்
வாழ்ஞா னபுரி யேற்றி மந்திர தவிசூடே
மாதா நாதனும் வீற்றி ருந்திடும்
வீடே மூமொளி காட்டி சந்திர
வாகார் தேனமு தூட்டி யென்றனை உடனாள்வாய்
சூலாள் மாதுமை சேர்த்த சம்பவி
மாதா ராபகல் காத்த மைந்தனை
சூடோ டர்வினை வாட்டி மைந்தரின் எமையாளும்
தாயாள் மூவரை நாட்டு மெந்தையர்
வேளூர் வாழ்வினை தீர்த்த சங்கரர்
தோய்சா ரூபரொ டேற்றி ருந்தவள் அருள்பாலா
வேலா வேழ்கடல் வீட்டி வஞ்சக
மூடார் சூரரை வாட்டி யந்தகன்
வீடு டேவிய காத்தி ரம்பரி மயில்வாழ்வே

வேதா நால்தலை சிக்கொ ளும்படி
 கோலா காலம தாட்டு மந்திர
 வேலா மால்மக ளார்க்கி ரங்கிய பெருமாளே.

1215. மூலா நிலமதின் மேலே மனதுற
 மோகா டவிசுடர் தனைநாடி
 மோனா நிலைதனை நாணு வகையிலு
 மோதா நெறிமுறை முதல்கூறும்
 லீலா விதமுன தாலே கதிபெற
 நேமா ரகசிய உபதேசம்
 நீடு ழிதனிலை வாடா மணியொளி
 நீதா பலமது தருவாயே
 நாலா ருசியமு தாலே திருமறை
 நாலா யதுசெப மணிமாலை
 நாடாய் தவரிடர் கேடா அரிகரி
 நாரா யணர்திரு மருகோனே
 சூலா திபர்சிவ ஞானர் யமனுதை
 காலார் தரவரு குருநாதா
 தோதீ திகுதிகு தீதீ செகசெக
 சோதீ நடமிடு பெருமாளே.

1216. மூளும்வினை சேர மேல்கொண்டி டாவைந்து
 பூதவெகு வாய மாயங்கள் தானெஞ்சில்
 மூடிநெறி நீதி ஏதுஞ்செ யாவஞ்சி அதிபார
 மோகவினை வான போகஞ்செய் வேனண்டர்
 தேடவரி தாய ஞேயங்க ளாய்நின்ற
 மூலபர யோக மேல்கொண்டி டாநின்ற துளதாகி
 நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
 வாசியன லூடு போயொன்றி வானின்கண்
 நாமமதி மீதி லூறுங்க லாவின்ப அமுதூறல்
 நாடியதன் மீது போய்நின்ற ஆனந்த
 மேலைவெளி ஏறி நீயின்றி நானின்றி
 நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்றதொருநாளே

காளவிட மூணி மாதங்கி வேதஞ்சொல்
பேதைநெடு நீலி பாதங்க ளால்வந்த
காலன்விழ மோது சாமுண்டி பாரம்பொ டனல்வாயு
காதிமுதிர் வான மேதங்கி வாழ்வஞ்சி
ஆடல்விடை ஏறி பாகங்கு லாமங்கை
காளிநட மாடி நாளன்பர் தாம்வந்து தொழுமாது

வாளமுழு தாளு மோர்தண்டு மாய்தங்கு
சோதிமணி மார்ப மாலின்பி னளின்சொல்
வாழுமுமை மாத ராள்மைந்த னேயெந்தை
இளையோனே

மாசிலடி யார்கள் வாழ்கின்ற வூர்சென்று
தேடிவிளை யாடி யேயங்ங னேநின்று
வாழுமயில் வீர னேசெந்தில் வாழ்கின்ற பெருமாளே.

**1217.** மெய்க்கூ ணைத்தே டிப்பூ மிக்கே
வித்தா ரத்திற் பலகாலும்
வெட்கா மற்சே ரிச்சோ ரர்க்கே
வித்தா ரைச்சொற் களையோதிக்
கைக்கா ணிக்கோ ணற்போ தத்தா
ரைப்போ லக்கற் பழியாதுன்
கற்பூ டுற்றே நற்றா ளைப்பா
டற்கே நற்சொற் றருவாயே
பொய்க்கோ ணத்தாழ் மெய்க்கோ ணிப்போய்
முற்பால் வெற்பிற் புனமானைப்
பொற்றோ ளிற்சேர் கைக்கா கப்பா
தத்தாள் பற்றிப் புகல்வோனே
முக்கோ ணத்தா னத்தா ளைப்பால்
வைத்தார் முத்தச் சிறியோனே
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

**1218.** மெய்ச்சார் வற்றே பொய்ச்சார் வுற்றே
நிச்சார் துற்பப் பவவேலை
விட்டே றிப்போ கொட்டா மற்றே
மட்டே யத்தத் தையர்மேலே
பிச்சா யுச்சா கிப்போ ரெய்த்தார்
பத்தார் விற்பொற் கழல்பேணிப்
பிற்பால் பட்டே நற்பால் பெற்றார்
முற்பா லைக்கற் பகமேதான்
செச்சா விச்சா லத்தே றிச்சே
லுற்றா ணித்துப் பொழிலேறும்
செக்கோ டைக்கோ டுக்கே நிற்பாய்
நித்தா செக்கர்க் கதிரோனல்
மூச்சா விச்சா வித்தாள் வெற்பாள்
முத்தார் வெட்சிப் புயவேளே
மூத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.

**1219.** மேக மெனுங்குழல் சாய்த்திரு
கோக னகங்கொடு கோத்தணை
மேல்வி ழுகின்றப ராக்கினில் உடைசோர
மேக லையுந்தனி போய்த்தனி
யேக ரணங்களு மாய்ச்சிலை
வேள்க லையின்சுக மாய்க்கல வியின்மூழ்கிக்
கோகி லரஞ்சித பாட்டிசை
யாமெ னுமிங்கித மூட்டிய
கோமள வஞ்சிய ராட்டினில் இயல்பாகக்
கூடி முயங்கிவி டாய்த்திரு
பார தனங்களின் மேற்றுயில்
கூரி னுநின்புகழ் தாட்புணை மறவேனே
மோக ரதுந்துமி யார்ப்பவி
ராலி விலங்கலின் வீட்டதில்
மூவு லகுந்தொழு தேத்திட உறைவோனே

மூதி சைமுன்பொரு காற்றட
மேரு வையம்பினில் வீழ்த்திய
மோக னசங்கரி வாழ்த்திட மதியாமல்

ஆக மடிந்திட வேற்கொடு
சூர னைவென்றடல் போய்த்தனி
யாண்மை யின்வென்றவ னூற்பிற கிடுதேவர்

ஆதி இளந்தலை காத்தர
சாள அவன்சிறை மீட்டவ
னுரு லகங்குடி யேற்றிய பெருமாளே.

1220. மேக மொத்தகுழ லார்சி லைப்புருவ
வாளி யொத்தவிழி யார்மு கக்கமல
மீது பொட்டிடழ கார்க ளத்திலணி வடமாட

மேரு வொத்தமுலை யார்ப ளப்பளென
மார்பு துத்திபுய வார்வ ளைக்கடகம்
வீறி டத்துவளு நூலொ டொத்தஇடை யுடைமாதர்

தோகை பக்ஷிநடை யார்ப தத்திலிடு
நூபு ரக்குரல்கள் பாட மெய்த்துகில்கள்
சோர நற்றெருவு டேந டித்துமுலை விலைகூறிச்

சூத கச்சரச மோடெ யெத்திவரு
வோரை நத்திவிழி யால்ம ருட்டிமயல்
தூள்ம ருத்திலுயி ரேப றிப்பவர்கள் உறவாமோ

சேக ணச்செகண தோதி மித்திகுட
டாகு டிட்டமட டகு தத்தொகுர்தி
தீத கத்திமித தோவு டுக்கைமணி முரசோதை

தேச முட்கவர ஆயி ரச்சிரமுந்
தூளிபட்டுமக மேரு வுக்கவுணர்
தீவு கெட்டுமுறை யோவெ னக்கதற விடும்வேலா

ஆக மத்திபல கார ணத்தியெனை
யீனு சத்திஅரி ஆச னத்திசிவ
னாக முற்றசிவ காமி பத்தினியின் முருகோனே

ஆர ணற்குமறை தேடி யிட்டதிரு
மால்ம கட்சிறுமி மோக சித்ரவளி
ஆசை பற்றிஅரு ணாச லத்தின்மகிழ் பெருமாளே.

1221. மேகலை நெகிழ்த்துக் காட்டி வார்குழல் விரித்துக் காட்டி
வேல்விழி புரட்டிக் காட்டி அழகாக
மேனியை மினுக்கிக் காட்டி நாடக நடித்துக் காட்டி
வீணையை முழக்கிக் காட்டி மதராசன்
ஆகம முரைத்துக் காட்டி வாரண தனத்தைக் காட்டி
யாரொடு நகைத்துக் காட்டி விரகாலே
ஆதர மனத்தைக் காட்டி வேசைகள் மயக்கைக் காட்ட
ஆசையை அவர்க்குக் காட்டி அழிவேனோ
மோகன விருப்பைக் காட்டி ஞானமு மெடுத்துக் காட்டி
மூதமிழ் முனிக்குக் கூட்டு குருநாதா
மூவுல களித்துக் காட்டி சேவலை உயர்த்திக் காட்டு
மூரிவில் மிகுத்துக் காட்டும் முருகோனே
வாகையை முடித்துக் காட்டி வாழ்மலர்ப் பதத்தைக் காட்டி
மாமயில் நடத்திக் காட்டும் வயலூரா
மாமலை வெதுப்பிக் காட்டி தானவர் திறத்தைக் காட்டி
வானவர் சிரத்தைக் காத்த பெருமாளே.

1222. மேக வார்குழல தாடதன பாரமிசை
யார மாடகுழை யாடவிழி யாடபொறி
மேனி வாசனைகள் வீசவல்குல் மோதிபரி மளமேற
மீதி லாடையிடை யாடமயில் போலநடை
யோல மோலமென பாதமணி நூபுரமு
மேல்வில் வீசபணி கீரகுயில் போலகுரல் முழவோசை
ஆகவேயவைகள் கூடிடுவர் வீதிவரு
வோரை வாருமென வேசரச மோடுருகி
ஆசை போலமனை யேகொடணை வார்கள்குவ டதிபார
ஆணி மாமுலையின் மூழ்கிசுக வாரிகொடு
வேர்வை பாயஅணை யூடமளி யாடியிட
ரான சூலைபல நோய்கள்கட லாடியுடல் உழல்வேனோ

நாக லோகர்மதி லோகர்பக லோகர்விதி
நாடு ளோர்களம ரோர்கள்கண நாதர்விடை
நாதர் வேதியர்கள் ஆதிசர சோதிதிகழ் முனிவோர்கள்
நாத ரேநார்ம ஞாரணர்பு ராணவகை
வேத கீதவொலி பூரையிது பூரையென
நாச மாயசுரர் மேவிகிரி தூளிபட விடும்வேலா
தோகை மாதுகுற மாதமுத மாதுவினல்
தோழி மாதுவளி நாயகமி ஞோசுக
சோகமோடிறுகிமார்முலைவிடாமலணை புணர்வோனே
தோளி ராறுமுக மாறுமயில் வேலழகு
மீதெய் வானவடி வாதொழுதெ ணவயனர்
சூழு காவிரியும் வேளூர்முரு காவமரர் பெருமாளே.

**1223.** மைக்க ணிக்கன் வாளி போல
வுட்க ளத்தை மாறி நாடி
மட்டு முற்ற கோதை போத முடிசூடி
மத்த கத்தி னீடு கோடு
வைத்த தொத்து மார்பி னூடு
வட்ட மிட்ட வாரு லாவு முலைமீதே
இக்கு வைக்கு மாடை வீழ
வெட்கி யக்க மான பேரை
எத்தி முத்த மாடும் வாயின் இசைபேசி
எட்டு துட்ட மாதர் பாய
லிச்சை உற்றெ னாக மாவி
எய்த்து நித்த மான வீனம் உறலாமோ
துர்க்கை பக்க சூல காளி
செக்கை புக்க தாள வோசை
தொக்த திக்க தோத தீத வெனவோதச்
சுற்றி வெற்றி யோடு தாள்கள்
சுத்த நிர்த்த மாடு மாதி
சொற்கு நிற்கு மாறு தார மொழிவோனே
திக்கு மிக்க வானி னூடு
புக்க விக்க மூடு சூரர்
திக்க முட்டி யாடு தீர வடிவேலா

செச்சை பிச்சி மாலை மார்ப
இச்சை கொச்சை மாதி னோடு
செப்பு வெற்பில் சேய தான பெருமாளே.

1224. மைக்குக்கைப் புக்கக் கயல்விழி
எற்றிக்கொட் டிட்டுச் சிலைமதன்
வர்க்கத்தைக் கற்பித் திடுதிற மொழியாலே

மட்டிட்டுத் துட்டக் கெருவித
மிட்டிட்டுச் சுற்றிப் பரிமள
மச்சப்பொற் கட்டில் செறிமலர் அணைமீதே

புக்குக்கைக் கொக்கப் புகுமொரு
அற்பச்சிற் றிற்பத் தெரிவையர்
பொய்க்குற்றுச் சுற்றித் திரிகிற புலையேனைப்

பொற்பித்துக் கற்பித் தனதடி
அர்ச்சிக்கச் சற்றுக் ருபைசெய
புத்திக்குச் சித்தித் தருளுவ தொருநாளே

திக்குக்குத் திக்குத் திகுதிகு
டுட்டுட்டுட் டுட்டுட் டுடுடுடு
தித்தித்தித் தித்தித் திதியென நடமாடும்

சித்தர்க்குச் சுத்தப் பரமகல்
முத்தர்க்குச் சித்தக் ருபையுள
சித்தர்க்குப் பத்தர்க் கருளிய குருநாதா

ஒக்கத்தக் கிட்டுத் திரியசுர்
முட்டக்கொட் டற்றுத் திரிபுர
மொக்கக்கெட் டிட்டுத் திகுதிகு வெனவேக

உற்பித்துக் கற்பித் தமரரை
முற்பட்டக் கட்டச் சிறைவிடும்
ஒட்குக்டக் கொற்றக் கொடியுள பெருமாளே..

1225. மைக்குழ லொத்தவை நீலோ மாலோ
அக்கணி ணைக்கிணை சேலோ வேலோ
மற்றவர் சொற்றெளி பாலோ பாகோ வடிதேனோ

வத்திர மெய்ச்சசி தானே நானே
குத்துமு லைக்கிள நீரோ மேரோ
வைப்பதி டைக்கிணை நூலோமேலோ வெனமாதர்
தக்கவு றுப்பினுள் மாலே மேலாய்
லச்சைய றப்புணர் வாதே காதே
சைச்சைசெ னத்திரி நாயே னேயா தலையாதே
தற்பொறி வைத்தருள் பாராய் தாராய்
தற்சம யத்தக லாவே ளூதா
தத்தும யிற்பரி மீதே நீதான் வருவாயே
முக்கணர் மெச்சிய பாலா சீலா
சித்தசன் மைத்துன வேளே தோளார்
மொய்த்தமணத்ததுழாயோன்மாயோன் மருகோனே
முத்தமிழ் வித்வவி னோதா கீதா
மற்றவ ரொப்பில ரூபா தீபா
முத்திகொ டுத்தடி யார்மேல்மாமால் உறுவோனே
இக்குநி ரைத்தவி ராலூர் சேலூர்
செய்ப்பழ நிப்பதி யூரா வாரூர்
மிக்கவி டைக்கழி வேளூர் தாரூர் வயலூரா
எச்சுரு திக்குளு நீயே தாயே
சுத்தவி றற்றிறல் வீரா தீரா
எட்டிகு டிப்பதி வேலா மேலோர் பெருமாளே.

1226. மைச்ச ரோருக நச்சு வாள்விழி
மானு ரோடே நானூர் நீயார் எனுமாறு
வைத்த போதக சித்த யோகியர்
வானாள் கோனாள் வீணாள் காணார் அதுபோலே
நிச்ச மாகவு மிச்சை யானவை
நேரே தீரா வூரே பேரே பிறவேயென்
நிட்க ராதிகண் முற்பு காதினி
நீயே தாயாய் நாயேன் மாயா தருள்வாயே
மிச்ச ரோருக வச்ர பாணியன்
வேதா வாழ்வே நாதா கீதா வயலூரா
வெற்பை யூடுரு வப்ப டாவரு
வேலா சீலா பாலா காலா யுதமாளி

பச்சை மாமயில் மெச்ச வேறிய
    பாகா சூரா வாகா போகா    தெனும்வீரா
பட்டி யாள்பவர் கொட்டி யாடினர்
    பாரு ராசூழ் பேரு ராள்வார்    பெருமாளே.

1227. மைச்சுனமார் மாம னைச்சியுமா தாவு
    மக்களுமா ரூத    துயர்கூர
மட்டிலதோர் தீயி லிக்குடில்தான் வேவ
    வைத்தவர்தா மேக    மதிமாய
நிச்சயமாய் நாளு மிட்டொருதூ தேவு
    நெட்டளவாம் வாதை    அணுகாமுன்
நெக்குருகா ஞான முற்றுனதா ளோதி
    நித்தலும்வாழ் பேறு    தருவாயே
நச்சணைமேல் வாழ மச்சுதனால் வேத
    னற்றவர்தா நாட    விடையேறி
நற்புதல்வா சூரர் பட்டிடவே லேவு
    நற்றுணைவா ஞால    மிகவாழப்
பச்செனுநீள் தோகை மெய்ப்பரியூர் பாக
    பத்தியதா மாறு    முகநாளும்
பக்ஷமுமே லாய்ச டக்ஷரசூழ் பாத
    பத்திசெய்வா ருடர்    பெருமாளே.

1228. மைந்த ரினிய தந்தை மனைவி
    மண்டி அலறி    மதிமாய
வஞ்ச விழிகள் விஞ்சு மறலி
    வன்கை யதனில்    உறுபாசம்
தந்து வளைய புந்தி அறிவு
    கங்கு குலைய    உயிர்போமுன்
தம்ப முனது செம்பொ னடிகள்
    தந்து கருணை    புரிவாயே
மந்தி குதிகொ ளந்தண் வரையில்
    மங்கை மருவு    மணவாளா
மண்டு மசுரர் தண்ட முடைய
    அண்டர் பரவ    வருவோனே

இந்து சடிலர் பங்கில் வளரு
மிந்து நுதலி தருசேயே
இஞ்சி மதிளின் மஞ்சு துயிலி
லஞ்சி மருவு பெருமாளே.

**1229.** மொகுமொகென நறைகொண்மலர் வற்கத்தி லற்புடைய
முளரிமயி லனையவர்கள் நெய்த்துக்க றுத்துமழை
முகிலனைய குழல்சரிய ஒக்கக்க னத்துவளர்
அதிபார

முலைபுளக மெழுவளைகள் சத்திக்க முத்துமணி
முறுவலிள நிலவுதர மெத்தத்த வித்துசில
மொழிபதற இடைதுவள வட்டச்சி லைப்புருவ
இணைகோட

அகில்மிருக மதசலிலம் விட்டுப் பணித்தமல
ரமளிபட ஒளிவிரவு ரத்னப்ர பைக்குழையொ
டமர்பொருத நெடியவிழி செக்கச்சி வக்கமர
மதநீதி

அடல்வடிவு நலமிதனில் மட்கச்செ ருக்கியுள
முருகநரை பெருகவுட லொக்கப் பழுத்துவிழு
மளவிலொருபரமவொளி யிற்புக்கிருக்கவெனை
நினையாதோ

செகுதகெண கெணசெகுத செக்குச்செ குச்செகுத
கிருதசெய செயகிருத தொக்குத்தொகுத்தொகுத
டிமிடடிமி டிமிடமிட டிட்டிட்டி டிட்டிமிட
டிடிதீதோ

திரிகடக கடகதிரி தித்திக்ர திக்ரிகட
திமிர்ததிமி திமிர்ததிமி தித்தித்தி தித்திதிதி
செணுசெணுத தணசெணுத தத்தித்தி குத்ரிகுட
ததிதீதோ

தகுடதிகு திகுடதிமி தத்தத்த தித்திகுட
குகுகுகுகு குகுகுகுகு குக்குக்கு குக்குகுத
தாரார ரிரிரிரிரி றிற்றித்த றிற்றிரிரி
எனவேசீர்

சதிமுழவு பலவுமிரு பக்கத்தி சைப்பமுது
சமரபயி ரவியிதய முட்கிப்ர மிக்கவுயர்
தணிகைமலை தனில்மயிலி னிர்த்தத்தி னிற்கவல
பெருமாளே.

1230. மொழியநி றங்கறுத்து மகரவி னங்கலக்கி
முடியவ ளைந்தாற்று கடலாலும்
முதிரவி டம்பரப்பி வடவைமு கந்தழற்குள்
முழுகியெ ழுந்திருக்கு நிலவாலும்
மழையள கந்தரித்த கொடியிடை வஞ்சியுற்ற
மயல்தணி யும்படிக்கு நினைவாயே
மரகத துங்கவெற்றி விகடந டங்கொள்சித்ர
மயிலினில் வந்துமுத்தி தரவேணும்
அழகிய மென்குறத்தி புழுகியல் சந்தனத்தி
னமுதத னம்புதைத்த திருமார்பா
அமராபு ரந்தனக்கு மழகிய செந்திலுக்கு
மருணைவ ளம்பதிக்கு மிறையோனே
எழுபுவ னம்பிழைக்க அசுரர்சி ரந்தெறிக்க
எழுசயி லந்துளைத்த சுடர்வேலா
இரவிக ளந்தரத்தர் அரியர பங்கயத்தர்
இவர்கள்ப யந்தவிர்த்த பெருமாளே.

1231. மோதி இறுகிவட மேரு வெனவளரு
மோக முலையலைய வந்துகாயம்
மோச மிடுமவர்கள் மாயை தனில்முழுகி
மூட னெனஅறிவு கொண்டதாலே
காதி வருமியம தூதர் கயிறுகொடு
காலி விறுகவெனை வந்திழாதே
காவ லெனவிரைய ஓடி உனதடிமை
காண வருவதினி எந்தநாளோ
ஆதி மறையவனு மாலு முயர்சுடலை
ஆடு மரனுமிவர் ஒன்றதான
ஆயி அமலைதிரி சூலி குமரிமக
மாயி கவுரியுமை தந்தவாழ்வே

சோதி நிலவுகதிர் வீசு *மதியின்மிசை
தோய வளர்கிரியின் உந்திநீடு
சோலை செறிவுளவி ராலி நகரில்வளர்
தோகை மயிலுலவு தம்பிரானே.

1232. மோது மறலியொரு கோடி வேற்படை
கூடி முடுகியெம தாவி பாழ்த்திட
மோக முடையவெகு மாதர் கூட்டமும் அயலாரும்
மூளு மளவில்விசை மேல்வி ழாப்பரி
தாப முடனும்விழி நீர்கொ ளாக்கொடு
மோக வினையில்கெடு நாளின்மூத்தவர் இளையோர்கள்
ஏது கருமமிவர் சாவெ னச்சிலர்
கூடி நடவுமிடு காடெ னக்கடி
தேழு நரகினிடை வீழ்மெ னப்பொறி அறுபாவி
ஏழு புவனமிகு வான நாட்டவர்
சூழு முனிவர்கிளை தாமு மேத்திட
ஈச னருள்குமர வேத மார்த்தெழ வருவாயே
சூது பொருதருமனொடு தோற்றிரு
ஆறு வருஷம்வன வாச மேற்றியல்
தோகை உடனுமெவி ராட ராச்சியம் உறைநாளிற்
சூறை நிறைகொடவ ரேக மீட்டெதி
ராளு முரிமைதரு மாறு கேட்டொரு
தூது செலவடுவெ லாண்மை தாக்குவன் எனமீள
வாது சமர்திருத ரான ராட்டிர
ராஜ குமரர்துரி யோத னூற்றொரு
மாள நிருபரொடு சேனை தூட்பட வளைசாய
வாகை விஜயனடல் வாசி பூட்டிய
தேரை முடுகுகெடு மால்ப ராக்ரம
மாயன் மருகமுரு காஜ யாற்றுறை பெருமாளே.

*மதிலின்மிசை தோய வெகுவித முந்திநீடு சோலை செறியு மியல் வாத நகரில்வளர் தோகை மயிலில்வரு தம்பிரானே.

1233. வங்கம் பெறுகட லெங்கும் பொருதிரை
வந்துந் தியதிரு மதனாலே
அஞ்சம் பெறுதிட நெஞ்சன் தழலுற
அஞ்சம் பதும்விடு மதனாலே
பங்கம் படுமென தங்கந் தனிலுதி
பண்பொன் றியவொரு கொடியான
பஞ்சொன் றியமயில் நெஞ்சொன் றிடுமழல்
பொன்றுந் தனிமையை நினையாயோ
தெங்கந் திரளுட னெங்கும் கதலிகள்
சென்றோன் றியபொழில் அதனூடே
தெந்தெந் தெனதென என்றண் டுறவளி
நின்றுந் திகழ்வொடு மயிலாடப்
பொங்குஞ் சுனைகளி லெங்குங் குவளைக
ளென்றும் புகழ்பெற மலரீனும்
பொன்றென் றணிகையில் நின்றங் கெழுபுவி
என்றுஞ் செயவல பெருமாளே.

1234. வங்கார மார்பிலணி தாரொடுயர் கோடசைய
கொந்தார மாலைகுழ லாரமொடு தோள்புரள
வண்காதி லோலைகதிர் போலவொளி வீசவிதழ்
மலர்போல
மஞ்சாடு சாபநுதல் வாளனைய வேல்விழிகள்
கொஞ்சார மோககிளி யாகநகை பேசியுற
வந்தாரை வாருமிரு நீருறவெ னாசைமய விடுமோதர்
சங்காளர் சூதுகொலை காரர்குடி கேடர்சுழல்
சிங்கார தோளர்பண ஆசையுளர் சாதியிலர்
சண்டாளர் சீசியவர் மாயவலை யோடடியென்
உழலாமல்
சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயையிருள்
வெந்தோட மூலவழல் வீசவுப தேசமது
தன்காதி லோதியிரு பாதமலர் சேரவருள்
புரிவாயே

சிங்கார ரூபமயில் வாகனந மோநமென
கந்தாகு மாரசிவ தேசிகந மோநமென
சிந்தூர பார்வதிசு தாகாந மோநமென விருதோதை
சிந்தான சோதிகதிர் வேலவந மோநமென
கங்காள வேணிகுரு வானவந மோநமென
திண்சூர ராழிமலை தூள்படவை வேலைவிடு
முருகோனே
இங்கீத வேதபிர மாவைவிழ மோதியொரு
பெண்காத லோடுவன மேவிவளி நாயகியை
இன்பான தேனிரச மார்முலைவி டாதகர மணிமார்பா
எண்டோளர் காதல்கொடு காதல்கறி யேபருகு
செங்காடு மேவிபிர காசமயில் மேலழகொ
டென்காதல்மாலைமுடிஆறுமுகவாஅமரர் பெருமாளே.

**1235.** வசனமிக வேற்றி மறவாதே
மனதுதுய ராற்றி லுழலாதே
இசைபயில்ச டாக்ஷ ரமதாலே
இகபரசெள பாக்யம் அருள்வாயே
பசுபதிசி வாக்யம் உணர்வோனே
பழநிமலை வீற்ற ருளும்வேலா
அசுரர்கிளை வாட்டி மிகவாழ
அமரர்சிறை மீட்ட பெருமாளே.

**1236.** வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரி காரி என்றிசை வாது கூறி
வந்தியர் போல வீணில் அழியாதே
செஞ்சர ணாத கீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்ம யூர முகமாறும்
செந்தமிழ் நாளு மோதி உய்ந்திட ஞான மூறு
செங்கனி வாயி லோர்சொல் அருள்வாயே
பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாப மோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலி யோடு வெங்கழு வேற வோது
பண்டித ஞான நீறு தருவோனே

குஞ்சரம் யாளி மேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்
கும்பிடு நாடு வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ றாடல் மேவு பெருமாளே.

1237. வஞ்சங்கொண் டுந்திட ராவண
னும்பந்தென் திண்பரி தேர்கரி
மஞ்சின்பண் புஞ்சரி யாமென வெகுசேனை
வந்தம்பும் பொங்கிய தாகவெ
திர்ந்துந்தன் சம்பிர தாயமும்
வம்புந்தும் பும்பல பேசியும் எதிரேகை
மிஞ்சென்றுஞ் சண்டைசெய் போதுகு
ரங்குந்துஞ் சுங்கனல் போலவெ
குண்டுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி
மிண்டுந்துங் கங்களி னூலெத
கர்ந்தங்கங் கங்கர மார்பொடு
மின்சந்துஞ் சிந்திநி சாசரர் வகைசேர
வுஞ்சண்டன் தென்றிசை நாடிவி
ழுந்தங்குஞ் சென்றெம தூதர்கள்
உந்துந்துந் தென்றிட வேதசை நிணமூளை
உண்டுங்கண் டுஞ்சில கூளிகள்
டிண்டிண்டென் றுங்குதி போடவு
யர்ந்தம்புங் கொண்டுவெல் மாதவன் மருகோனே
தஞ்சந்தஞ் சஞ்சிறி யேன்மதி
கொஞ்சங்கொஞ் சந்துரை யேயருள்
தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே
சங்கங்கஞ் சங்கயல் சூழ்தடம்
எங்கெங்கும் பொங்கம காபுனி
தந்தங்குஞ் செந்தியில் வாழ்வுயர் பெருமாளே.

1238. வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பலநினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்
வந்திப் புதல்வரும் அந்திக் கிளைஞரு
மண்டிக் கதறிடு வகைகூற

அஞ்சுக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென உடன்மேவ
அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
அன்றைக் கடியிணை தரவேணும்
கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு மயில்வீரா
கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
கண்டத் தழகிய திருமார்பா
செஞ்சொற் புலவர்கள் இன்சொற் சொலஅவர்
சிந்தைக் கினியன அருள்வோனே
செம்பொற் கொடுமுடி குன்றக் கடலிடை
செந்திற் பதிவரு பெருமாளே.

**1239.** வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய
வண்கணு ரார வாரமு மருள்வோராய்
வம்பிலே வாது கூறிகள் கொஞ்சியே காம லீலைகள்
வந்தியா ஆசை யேதரு விலைமாதர்
பஞ்சமா பாவ மேதரு கொங்கைமேல் நேச மாய்வெகு
பஞ்சியே பேசி நாடொறு மெலியாதே
பந்தியாய் வானு ளோர்தொழ நின்றசீ ரேகு லாவிய
பண்புசேர் பாத தாமரை யருள்வாயே
அஞ்சவே சூர னைவ னுய்ஞ்சுபோ காம லேயயில்
அன்றுதா னேவி வானவர் சிறைமீள
அன்பினோ டேம னோத மிஞ்சமே லான வாழ்வருள்
அண்டர்கோ வேப ராபர முதல்வோனே
கொஞ்சவே காவின் மேவுச தங்கைதா ளுட ஆடிய
கொன்றையா னருள் மேமகிழ் புதல்வோனே
கொந்துசேர் சோலை மேவிய குன்றுசூழ் வாக வேவரு
குன்றுதோ ருடல் மேவிய பெருமாளே.

**1240.** வஞ்சனை மிஞ்சிய மாய வம்பிகள்
வந்தவர் தங்களை வாதை கண்டவர்
வங்கண முந்தெரி யாம லன்புகள் பலபேசி

மஞ்சமி ருந்தநு ராக விந்தைகள்
தந்தக டம்பிக ளூற லுண்டிடு
மண்டைகள் கண்டித மாய்மொ ழிந்திடு முறையாலே

சஞ்சல முந்தரு மோக லண்டிகள்
இன்சொல்பு ரிந்துரு காத தொண்டிகள்
சங்கம மென்பதை யேபு ரிந்தவ னயராதே

தங்களில் நெஞ்சக மேம கிழ்ந்தவர்
கொஞ்சிந டம்பயில் வேசை முண்டைகள்
தந்தசு கந்தனை யேயு கந்துடல் மெலிவேனோ

கஞ்சன்வி டுஞ்சக டாசு ரன்பட
வென்றுகு ருந்தினி லேறி மங்கையர்
கண்கள்சி வந்திட வேக லந்தரு முறையாலே

கண்டும கிழ்ந்தழ காயி ருந்திசை
கொண்டுவி ளங்கிய நாளி லன்பொடு
கண்குளி ருந்திரு மால்ம கிழ்ந்தருள் மருகோனே

குஞ்சர வஞ்சியு மான்ம டந்தையு
மின்பமி குந்திட வேய ணைந்தருள்
குன்றென வந்தருள் நீப முந்திய மணிமார்பா

கொந்தவி ழுந்தட மேசி ரம்பிய
பண்புத ருந்திரு வாவி னன்குடி
குன்றுக ளெங்கினு மேவ ளர்ந்தருள் பெருமாளே.

1241. வடத்தை மிஞ்சிய புளகித வனமுலை
தனைத்தி றந்தெதிர் வருமிளை ஞர்களுயிர்
மயக்கி யைங்கணை மதனனை ஒருஅரு மையினாலே

வருத்தி வஞ்சக நினைவொடு மெலமெல
நகைத்து நண்பொடு வருமிரும் மெனவுரை
வழுத்தி யங்கவ ரொடுசரு வியுமுடல் தொடுபோதே

விடத்தை வென்றிடு படைவிழி கொடுமுள
மருட்டி வண்பொருள் கவர்பொழு தினில்மயல்
விருப்பெ னும்படி மடிமிசை யினில்விழு
தொழில்தானே

விளைத்தி டும்பல கணிகையர் தமதுபொய்
மனத்தை நம்பிய சிறியனை வெறியனை
விரைப்ப தந்தனில் அருள்பெற நினைகுவ
துளதோதான்
குடத்தை வென்றிரு கிரியென எழில்தள
தளத்த கொங்கைகள் மணிவட மணிசிறு
குறக்க ரும்பின்மெய் தழுவிய புயனென வரு
வடிவேலா
குரைக்க ருங்கடல் திருவணை யெனமுனம்
அடைத்தி லங்கையி னதிபதி நிசிசரர்
குலத்தொ டும்பட வொருகணை விடுமரி மருகோனே
திடத்தெ திர்ந்திடு மசுரர்கள் பொடிபட
அயிற்கொ டும்படை விடுசர வணபவ
திறற்கு கன்குரு பரனென வருமொரு முருகோனே
செழித்த தண்டலை தொறுமில கியகுட
வளைக்கு லந்தரு தரளமு மிகுமுயர்
திருப்ப ரங்கிரி வளநகர் மருவிய பெருமாளே.

1242. வடவைய னலூடு புக்கு முழுகியெழு மாம திக்கு
மதுரமொழி யாழி சைக்கு மிருநாலு
வரைதிசைவி டாது சுற்றி யலறுதிரை வாரி திக்கு
மடியருவ வேள்க ணைக்கு மறவாடி
நெடுகனக மேரு வொத்த புளகமுலை மாத ருக்கு
நிறையுமிகு காத லூற்ற மயல்தீர
நினைவிநெடு பீலி வெற்றி மரகதக லாப சித்ர
நிலவுமயி லேறி யுற்று வரவேணும்
மடலவிழு மாலை சுற்று புயமிருப தோடு பத்து
மவுலியற வாளி தொட்ட அரிராமன்
மருகபல வான வர்க்கு மரியசிவ னார்ப டிக்க
மவுனமறை யோது வித்த குருநாதா
இடையரியு லாவு முக்ர அருணகிரி மாந கர்க்கு
ளினியகுண கோபு ரத்தில் உறைவோனே
எழுபுவிய ளாவு வெற்பு முடிவிநெடு நாக மெட்டு
மிடையுருவ வேலை விட்ட பெருமாளே.

1243\. வடிகட்டிய தேனென வாயினி
லுறுதுப்பன வூறலை யார்தர
வளைவிற்றிக மூடலி லேதரு மடவார்பால்
அடிபட்டலை பாவகிர் மூடனை
முகடித்தொழி லாமுன நீயுன
தடிமைத்தொழி லாகவெ நாளினில் அருள்வாயோ
பொடிபட்டிட ராவணன் மாமுடி
சிதறச்சிலை வாளிக ளேகொடு
பொருகைக்கள மேவிய மாயவன் மருகோனே
கொடுமைத்தொழி லாகிய கானவர்
மகிமைக்கொள வேயவர் வாழ்சிறு
குடிவிற்குற மானொடு மேவிய பெருமாளே.

1244\. வடிவது நீலங் காட்டி முடிவிடு காலன் கூட்டி
வரவிடு தூதன் கோட்டி விடுபாசம்
மகனொடு மாமன் பாட்டி முதலுற வோருங் கேட்டு
மதிகெட மாயந் தீட்டி உயிர்போமுன்
படிமிசை தாளுங் காட்டி உடலுறு நோய்பண் டேற்ற
பழவினை பாவந் தீர்த்துன் அடியேனைப்
பரிவொடு நாளுங் காத்து விரிதமி ழாலங் கூர்த்த
பரபுகழ் பாடென் றாட்கொண் டருள்வாயே
முடிமிசை சோமன் சூட்டி வடிவுள ஆலங் காட்டில்
முதிர்நட மாடுங் கூத்தர் புதல்வோனே
முருகவிழ் தாருஞ் சூட்டி ஒருதனி வேழங் கூட்டி
முதல்மற மானின் சேர்க்கை மயல்கூர்வாய்
இடியென வேகங் காட்டி நெடிதரு சூலந் தீட்டி
எதிர்பொரு சூரன் தாக்க வரவேகி
இலகிய வேல்கொண் டார்த்து உடலிரு கூறன் றாக்கி
இமையவ ரேதந் தீர்த்த பெருமாளே.

1245\. வடிவவேல் தனைவெகுண் டிளைஞரா விழைவளைந்
தமர்செய்வாள் விழியர்நெஞ் சினில்மாயம்
வளரமால் தனைமிகுந் தவர்கள்போ லளவிவந்
தணுகுமா நிதிகவர்ந் திடுமாதர்

துடியைநே ரிடைதனந் துவளவே துயில்பொருந்
தமளிதோய் பவர்வசஞ் சுழலாதே
தொலைவிலா இயல்தெரிந் தவலமா னதுகடந்
துனதுதாள் தொழுமனந் தருவாயே
படியெலா முடியநின் றருளுமா லுதவுபங்
கயனுநான் மறையுமும் பரும்வாழப்
பரவையூ டெழுவிடம் பருகிநீள் பவுரிகொண்
டலகையோ டெரிபயின் றெருதேறிக்
கொடியவா ளரவிளம் பிறையினோ டலைசலங்
குவளைசேர் சடையர்தந் திருமேனி
குழையவா தரவுடன் தழுவுநா யகிதருங்
குமரனே யமரர்தம் பெருமாளே.

1246. வட்ட முலைக்கச் சவிழ்த்து வைத்துள
முத்து வடத்தைக் கழுத்தி லிட்டிரு
மைக்கு வளைக்கட் குறிப்ப ழுத்திய பொதுமாதர்
மட்ட மளிக்குட் டிருத்தி முத்தணி
மெத்தை தனக்குட் செருக்கி வெற்றிலை
வைத்த பழுப்பச் சிலைச்சு ருட்கடி இதழ்கோதிக்
கட்டி அணைத்திட் டெடுத்து டுத்திடு
பட்டை அவிழ்த்துக் கருத்தி தத்தொடு
கற்ற கலைச்சொற் களிற்ப யிற்றுள முயல்போதுங்
கைக்கு ளிசைத்துப் பிடித்த கட்கமும்
வெட்சி மலர்ப்பொற் பதத்தி ரட்சணை
கட்டு மணிச்சித் திரத்தி றத்தையு மறவேனே
கொட்ட மிகுத்திட் டரக்கர் பட்டணம்
இட்டு நெருப்புக் கொளுத்தி அத்தலை
கொட்டை பரப்பச் செருக்களத்திடைஅசுரோரைக்
குத்தி முறித்துக் குடிப்ப ரத்தமும்
வெட்டி அழித்துக் கனக்க ளிப்பொடு
கொக்க ரியிட்டுத் தெரித்த டிப்பன ஒருகோடி
பட்ட பிணத்தைப் பிடித்தி ழுப்பன
சச்ச ரிகொட்டிட் டடுக்கெ டுப்பன
பற்கள் விரித்துச் சிரித்தி ருப்பன வெகுபூதம்

பட்சி பறக்கத் திசைக்குள் மத்தளம்
வெற்றி முழக்கிக் கொடிப்பி டித்தயில்
பட்ட றவிட்டுத் தூரத்தி வெட்டிய பெருமாளே.

1247. வட்டவாட் டனம ணைச்சிபாற் குதலை
மக்கள் தாய்க் கிழவி பதிநாடு
வைத்ததோட் டமனை அத்தமீட் டுபொருள்
மற்றகூட் டமறி வயலாக
முட்டவோட் டிமிக வெட்டுமோட் டெருமை
முட்டர்பூட் டியெனை அழையாமுன்
முத்திவீட் டணுக முத்தராக் குசரு
திக்குராக் கொளிரு கழல்தாராய்
பட்டநாற் பெரும ருப்பினைற் கரவி
பத்தின்வாட் பிடியின் மணவாளா
பச்சைவேய்ப் பணவை கொச்சைவேட் டுவர்ப
திச்சிதோட் புணர்த ணியில்வேளே
எட்டுநாற் கரவொ ருத்தல்மாத் திகிரி
எட்டுமாக் குலைய எறிவேலா
எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
டெத்தினார்க் கெளிய பெருமாளே.

1248. வண்டணி யுங்கமழ் கூந்த லார்விழி
அம்பிய லுஞ்சிலை போந்த வாணுதல்
வண்டா ளந்திக ழாய்ந்த வார்நகை குயில்போல
வண்பயி லுங்குவ டாண்ட மார்முலை
யின்பொறி யங்குமி ழாம்பல் தோள்கர
வஞ்சியெ னுங்கொடி சேர்ந்த நூலிடை
மடவார்பொன்
கண்டவு டன்களி கூர்ந்து பேசிகள்
குண்டணி யுங்குரல் சாங்க மோதிகள்
கண்சுழ லும்படி தாண்டி யாடிகள் சதிகாரர்
கஞ்சுளி யுந்தடி யீந்து போவென
நஞ்சையி டுங்கவ டார்ந்த பாவிகள்
கம்பையி லுஞ்சுட மாய்ந்து நாயனும் உழல்வேனோ

அண்டரு டன்தவ சேந்து மாதவர்
புண்டரி கன்திரு பாங்கர் கோவென
அஞ்சவெல னும்படி போந்து வீரமொ டசுரார்கள்
அங்கமொ டுங்கிட மாண்பெ ருழிக
ளெண்கிரி யும்பொடி சாம்பர் நூறிட
அந்தக னுங்கயி ருங்கை வீசிட விடும்வேலா
செண்டணி யுஞ்சடை பாந்தள் நீர்மதி
யென்பணி யன்கன சாம்பல் பூசிய
செஞ்சட லன்சுத சேந்த வேலவ முருகோனே
திங்கள்மு கந்தன சாந்து மார்பின
ளென்றனு ளம்புகு காண்பெண் மாதொடு
சிந்தைம கிழ்ந்துமை யேந்த்ர மேவிய பெருமாளே.

**1249.** வண்டார்ம தங்க ளுண்டேம யங்க
வந்தூது கொண்டல் அதனோடும்
வன்காம னம்பு தன்பால்ம டங்கு
வன்போர்ம லைந்த விழிவேலும்
கொண்டேம லைந்து கண்டார்ம யங்கி
நின்றார்கு ரும்பை முலைமேவிக்
கொந்தார ரும்பு நின்தாள்ம றந்து
குன்றாம லுன்றன் அருள்தாராய்
பண்டாழி சங்கு கொண்டாழி தங்கு
பண்போனு கந்த மருகோனே
பண்சார னைந்து நின்றோது மன்பர்
பங்காகி நின்ற குமரேசா
செண்டாடி அண்டர் கொண்டாட மன்றில்
நின்றாடி சிந்தை மகிழ்பாலா
செஞ்சாலி மிஞ்சி விண்சாரு கின்ற
செங்கோட மர்ந்த பெருமாளே.

**1250.** வண்டுதான் மிகவிடங் கொண்டகா ரளகமென்
பங்கிமா மலர்சொரிந் துடைசோர
வம்புசேர் கனிபொருந் தின்பவா யமுதருந்
தந்தமா மதனலம் விதமாக

விண்டுமே னிகள்துவண் டன்றில்போ லுளமிரண்
டொன்றுமா யுறவழிந் தநுபோகம்
விஞ்சவே தருமிளங் கொங்கையார் வினைகடந்
துன்றன்மே லுருகவென் றருள்வாயே
பண்டுபா ரினையளந் துண்டமால் மருகசெம்
பைம்பொன்மா நகரிலிந் திரன்வாழ்வு
பண்பெலா மிகுதிபொங் கின்பயா னையைமணந்
தன்பினோ ரகமமர்ந் திடுவோனே
அண்டர்தா மதிபயங் கொண்டுவா டிடநெடுந்
தண்டுவாள் கொடுநடந் திடுசூரன்
அங்கமா னதுபிளந் தெங்கும்வீ ரிடவெகுண்
டங்கைவே லுறவிடும் பெருமாளே.

1251. வண்டுபோற் சாரத் தருள்தேடி
மந்திபோற் காலப் பிணிசாடிச்
செண்டுபோற் பாசத் துடனாடிச்
சிந்தைமாய்த் தேசித் தருள்வாயே
தொண்டராற் காணப் பெறுவோனே
துங்கவேற் கானத் துறைவோனே
மிண்டராற் காணக் கிடையானே
வெஞ்சமாக் கூடற் பெருமாளே.

1252. வண்டையொத் துக்கயல் கண்சுழற் றுப்புரு
வஞ்சிலைக் குத்தொடு மம்பையொத் துத்தொடை
வண்டுசுற் றுக்குழல் கொண்டலொத் துக்கமு
கென்பகர்ீவம்
மந்தரத் தைக்கட மிஞ்சிபத் துப்பணை
கொம்பையொத் துத்தன முந்துகுப் பத்தெரு
வந்துமெத் திப்பொரு மங்கையர்க் கைப்பொருள்
அன்பினாலே
கொண்டழைத் துத்தழு வுங்கைதட் டிற்பொருள்
கொண்டுதெட் டிச்சர சப்புகழ்க் குக்குன
குங்குழற் கிப்படி கொந்துகெட் டுக்குடில் மங்குறாமல்

கொண்டுசத் திக்கட லுண்டுகுப் பத்துனி
னன்பருக் குச்செயல் தொண்டுபட் டுக்கமழ்
குங்குமத்திற்சரணம்பிடித்துக்கரையென்றுசேர்வேன்
அண்டமிட் டிக்குட டிண்டிமிட் டிக்குகு
டந்தகொட் டத்தகு டிங்குதொக் கத்தம
டஞ்சகட் டைக்குண கொம்புடக் கைக்கிட
லென்பதாளம்
அண்டமெட் டுத்திசை யும்பல்சர்ப் பத்திரள்
கொண்டல்பட் டுக்கிரி யும்பொடித் துப்புல
னஞ்சவித் துத்திர ளண்டமுட் டத்துகள் வந்தசூரர்
கண்டமற் றுக்குட லென்புநெக் குத்தச
னங்கடித் துக்குடி லஞ்சிவப் பச்செநிர்
கண்தெறிக் கத்தலை பந்தடித் துக்கையி லங்குவேலால்
கண்களிக் கக்கக னந்துளுக் கப்புக
ழிந்திரற் குப்பதம் வந்தளித் துக்கன
கம்பலத் திற்குற மங்கைபக் கத்துறை தம்பிரானே.

1253. வதன சரோருக நயன சிலீமுக
வள்ளி புனத்தில் நின்று
வாராய்பதி நீயிங் கேதனி என்செய்வாயோ
மதசர மாகொடி தெனவொரு காவிடை
வல்லப மற்றழிந்து
மாலாய்மட லேறுங் காமுக எம்பிரானே
இதவிய காணிவை சுதையென வேடுவ
னெய்திடு மெச்சில் தின்று
லீலாசல மாடுந் தூயவன் மைந்தனாகும்
இளையவ மூதுரை மலைகிழ வோனென
வெள்ள மெனக்கலந்து
நூறாயிர பேதஞ் சாதமொ ழிந்தவாமா
கதைகன சாபதி கிரிவளை வாளொடு
கைவசி வித்த நந்த
கோபாலம கீபன் தேவிம கிழ்ந்துவாழக்

கயிறொடு லூகல முருள வுலாவிய
கள்வ னறப்பயந்து
ஆகாயக பாலம் பீறநி மிர்ந்துநீள
விதரண மாவலி வெருவ வொரேபடி
வெள்ள வெளுக்க நின்ற
நாராயண மாமன் சேயைமு னிந்தகோவே
விளைவய லூடிடை வளைவி ளையாடிய
வெள்ளி நகர்க் கமர்ந்த
வேலாயுத மேவுந் தேவர்கள் தம்பிரானே.

**1254.** வதைபழக மறலிவிறல் மதனன்வழி படுதுமென
வயிரமா கதமாகம் அளவாக
வரிசிதறி விடமளவி வளருமிரு கலகவிழி
வலையிளைஞ ருயிர்கவர வருமாய
இதையமள விடவரிய அரிவையர்கள் நெறியொழுகி
எழுபிறவி நெறியொழிய வழிகாணு
இடரடரு குருடனெனை அடிமைகொள மகிழ்வொடுனை
திருநயன கருணைசிறி தருள்வாயே
பதயுகள மலர்தொழுது பழுதில்பொரி அவல்துவரை
பயறுபெரு வயிறுநிறை யவிடாமுப்
பழமுமினி துதவிமுனி பகரவட சிகரிமிசை
பரியதனி எயிறுகொடு குருநாடர்
கதைமுழுது மெழுதுமொரு களிறுபிளி றிடநெடிய
கடலுலகை நொடியில்வரும் அதிவேகக்
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே.

**1255.** வந்துவந்து முன்தவழ்ந்து
வெஞ்சுகந்த யங்கநின்று
மொஞ்சிமொஞ்சி என்றழுங்கு ழந்தையோடு
மண்டலங்கு லுங்கஅண்டர்
விண்டலம்பி ளங்கெழுந்த
செம்பொன்மண்ட பங்களும்ப யின்றவீடு

கொந்தளைந்த குந்தளந்த
ழைந்துகுங்கு மந்தயங்கு
கொங்கைவஞ்சி தஞ்சமென்று மங்குகாலங்
கொங்கடம்பு கொங்குபொங்கு
பைங்கடம்பு தண்டைகொஞ்சு
செஞ்சதங்கை தங்குபங்க யங்கள்தாராய்
சந்தடர்ந்தெ ழுந்தரும்பு
மந்தரஞ்செ ழுங்கரும்பு
கந்தரம்பை செண்பதங்கொள் செந்தில்வாழ்வே
தண்கடங்க டந்துசென்று
பண்கடங்க டர்ந்தஇன்சொல்
திண்புனம்பு குந்துகண்டி றைஞ்சுகோவே
அந்தகன்க லங்கவந்து
கந்தரங்க லந்தசிந்து
ரஞ்சிறந்து வந்தலம்பு ரிந்தமார்பா
அம்புனம்பு குந்தநண்பர்
சம்புநம்பு ரந்தரன்த
ரம்பநும்பர் கும்பர்நம்பு தம்பிரானே.

1256. வந்துவந்து வித்தூறி யென்றனுடல்
வெந்துவெந்து விட்டோட நொந்துயிரும்
வஞ்சினங்க ளிற்காடு கொண்டவடி வங்களாலே
மங்கிமங்கி விட்டேனை யுன்றனது
சிந்தைசந்தொ ஷித்தாளு கொண்டருள
வந்துசிந்து ரத்தேறி யண்டரொடு தொண்டர்சூழ
எந்தன்வஞ்ச னைக்காடு சிந்திவிழ
சந்தரண்டி சைத்தேவ ரம்பையர்க
ளிந்துபந்த டித்தாடல் கொண்டுவா மந்திமேவும்
எண்கடம்ப ணித்தோளு மம்பொன்முடி
சுந்தரந்தி ருப்பாத பங்கயமும்
என்றனுந்து றத்தோணி யுன்றனது சிந்தைதாராய்
அந்தரந்தி கைத்தோட விஞ்சையர்கள்
சிந்தைமந்தி ரத்தோட கந்தருவ
ரம்புயன்ச லித்தோட எண்டிசையை உண்டமாயன்

அஞ்சியுன்ப தச்சேவை தந்திடென
வந்தவெஞ்சி னர்க்காடெ ரிந்துவிழ
அங்கியின்கு ணக்கோலை யுந்திவிடு செங்கைவேலா

சிந்துரம்ப ணைக்கோடு கொங்கைகுற
மங்கையின்பு றத்தோள ணைந்துருக
சிந்துரந்த னைச்சேர்ம ணம்புணர்நல் கந்தவேளே

சிந்திமுன்பு ரக்காடு மங்கநகை
கொண்டசெந்த ழற்கோல மண்டர்புகழ்
செம்பொனம்ப லத்தாடு மம்பலவர் தம்பிரானே.

1257. வம்ப றுச்சில கன்ன மிடுஞ்சம
யத்துக் கத்துத் திரையாளர்
வன்க லாத்திரள் தன்னை யகன்றும
னத்திற் பற்றற் றருளாலே

தம்ப ராக்கற நின்னை யுணர்ந்துரு
கிப்பொற் பத்மக் கழல்சேர்வார்
தங்கு ழாத்தினி லென்னை யுமன்பொடு
வைக்கச் சற்றுக் கருதாயோ

வெம்ப ராக்ரம மின்ன யில்கொண்டொரு
வெற்புப் பொட்டுப் படமாசூர்
வென்ற பார்த்திப பன்னி ருதிண்புய
வெட்சிச் சித்ரத் திருமார்பா

கம்ப ராய்ப்பணி மன்னு புயம்பெறு
கைக்குக் கற்புத் தவறாதே
கம்பை யாற்றினி லன்னை தவம்புரி
கச்சிச் சொக்கப் பெருமாளே

1258. வாதா மணிநீ எனவோரில்
வருகா தெதுதான் அதில்வாரா
திரதா திகளால் நவலோகம்
இடவே கரியாம் இதிலேது

சாதா மறையோ தயன்மாலும்
சகலா கமநூல் அறியாத
பாதே வதையாள் தருசேயே
பழனி புரிவாழ் பெருமாளே.

**1259.** வரிக்கயலை நிகரான விழிக்கடையி லிளைஞோரை
மயக்கியிடு மடவார்கள் மயலாலே
மதிக்குளறி உளகாசு மவர்க்குதவி மிடியாகி
வயிற்றிலெரி மிகமூள அதனாலே
ஒருத்தருட னுறவாகி ஒருத்தரொடு பகையாகி
ஒருத்தருடை மையைகாடி அவரோடே
உணக்கையிடு படுபாவி எனக்குனது கழல்பாட
உயர்ச்சிபெறு குணசீலம் அருள்வாயே
விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தவகை யுடனோத மகிழ்வோனே
வெடித்தமணர் கழுவேற ஒருத்திகண வனுமீள
விளைத்ததொரு தமிழ்பாடு புலவோனே
செருக்கினொடு பொருசூரர் குலத்தையடி அறமோது
திருக்கையினில் வடிவேலை உடையோனே
திருக்குவளை பொருநீல மலர்ச்சுனையி லழகான
திருத்தணிகை மலைமேவு பெருமாளே.

**1260.** வரிசேர்ந்திடு சேல்கய லோவெனு
முழைவார்ந்திடு வேலையு நீலமும்
வடுவாங்கிடு வாள்விழி மாதர்கள் வலையாலே
வளர்கோங்கிள மாமுலை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில்
வளமாந்தளிர் போல்நிற மாகிய வடிவாலே
இருள்போன்றிடு வார்குழல் நீழலில்
இழைசேர்ந்திடு பாயலின் மீதுற
இனிதாங்கனி வாயித ழூறல்கள் பருகாமே
எனதாந்தன தானவை போயற
மலமாங்கடு மோகவி காரமும்
இவைநீங்கிட வேயிரு தாளிணை அருள்வாயே

கரிவாம்பரி தேர்திரள் சேனையும்
உடனாந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரதம் அதிலேகிக்
கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்
திரைநீண்டிரை வாரியும் வாலியும்
நெடிதோங்கும ராமர மேழொடு
தசமாஞ்சிர ராவண னார்முடி பொடியாகச்
சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே.

**1261.** வரித்தகுங் குமமணி முலைக்குரும் பையர்மன
மகிழ்ச்சிகொண் டிடவதி விதமான
வளைக்கரங் களினொடு வளைத்திதம் படவுடன்
மயக்கவந் ததிலறி வழியாத
கருத்தழிந் திடவிரு கயற்கணும் புரள்தர
களிப்புடன் களிதரு மடமாதர்
கருப்பெருங் கடலது கடக்கவுன் திருவடி
களைத்தருந் திருவுளம் இனியாமோ
பொருப்பகம் பொடிபட அரக்கர்தம் பதியொடு
புகைப்பரந் தெரியெழ விடும்வேலா
புகழ்ப்பெருங் கடவுளர் களித்திடும் படிபுவி
பொறுத்தமந் தரகிரி கடலூடே
திரித்தகொண் டலுமொரு மறுப்பெறுஞ் சதுமுக
திருட்டியெண் கணன்முதல் அடிபேணத்
திருக்குருந் தடியமர் குருத்வசங் கரரொடு
திருப்பெருந் துறையுறை பெருமாளே

**1262.** வரிபரந் திரண்டு நயனமுஞ் சிவந்து
வதனமண் டலங்கள் குறுவேர்வாய்
மணிசிலம் பலம்ப அளகமுங் குலைந்து
வசமழிந் திழிந்து மயல்கூர

இருதனங் குலுங்க இடைதுவண் டணுங்க
இனியதொண் டையுண்டு மடவார்தோள்
இதமுடன் புணர்ந்து மதிமயங் கினும்பொ
னிலகுநின் பதங்கள் மறவேனே
விரிபரந் தியங்கு முதிதியுங் கலங்க
விடயினும் பிறந்த தெனவானோர்
வெருவிநெஞ் சமஞ்சி உரனெடுந் தயங்கி
விரைபதம் பணிந்து முறையோவென்
றுரைமறந் துணங்க அயில்தொடும் ப்ரசண்ட
உயர்தலங் குலுங்க வருதோகை
ஒருபெருஞ் சிகண்டி மயிலமர்ந் திலங்கி
உலகமும் புரந்த பெருமாளே.

**1263.** வரியார் கருங்கண் மடமாதர்
மகவா சைதொந்த மதுவாகி
இருபோ துநைந்து மெலியாதே
இருதா ளினன்பு தருவாயே
பரிபா லனஞ்செய் தருள்வோனே
பரமே சுரன்ற னருள்பாலா
அரிகே சவன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே.

**1264.** வரிவிழி பூச லாட இருகுழை ஊச லாட
வளர்முலை கோடி யாட வளையாட
மணிவட மாலை ஆட முருகவி ழோதி ஆட
மதுரமு தூறல் வீழ அநுராகம்
இருவரு மேக போக மொருவர்த மாக மாக
இதமொடு கூடி மாயை படும்வேளை
இருகர மாறு மாறும் அறுமுக நீப மார்பும்
இருகழல் தானு நானு மறவேனே
திருநட மாடு காளி பயிரவி மோடி சூலி
திரிபுரை வீறு நீலி அனல்மோதுஞ்
சிவைகயி லாச வாசி மலைமகள் நாரி பாரி
திருமுலை யாயி தாயி அருள்பாலா

குருபர நாத ஞகி அரனொரு காதி லோது
குணநிதி ஆசை நேச முருகோனே
குறமகள் *பாச நேச திருமலை வாச ஈச
குலவிய ஞான மோன பெருமாளே.

**1265.** வருக வீட்டெனும் விரக நேத்திரம்
வாளோ வேலோ சேலோ மானோ எனுமாதர்
மனது போற்கரு கினகு வாற்குழல்
வானோ கானோ மாயா மாயோன் வடிவேயோ
பருகு பாற்கடல் அமுது தேக்கிய
பாலோ தேனோ பாகோ வானோர் அமுதேயோ
பவள வாய்ப்பனி மொழியெ னுக்கவி
பாடா நாயே னீடே றுதே ஒழிவேனோ
அருகு பார்ப்பதி உருகி நோக்கவொ
ரான்மேல் வாழ்வா ஞரூர் வாழ்வே எனவோடி
அமரர் கூப்பிட உததி தீப்பட
ஆகா சூரா போகா தேமீள் எனவேகிக்
குருகு பேர்க்கிரி உருவ வோச்சிய
கூர்வே லாலே யோர்வா ளாலே அமராடிக்
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே.

**1266.** வருத்தங் காண நாடிய குணத்தன் பான மாதரு
மயக்கம் பூண மோதிய தாமீதே
மலக்கங் கூடி யேயின உயிர்க்குஞ் சேத மாகிய
மரிக்கும் பேர்க ளோடுற வணியாதே
பெருத்தும் பாவ நீடிய மலத்தின் தீமை கூடிய
பிறப்புந் தீர வேயுன திருதாளே
பெறத்தந் தாள வேயுயர் சுவர்க்கஞ் சேர வேயருள்
பெலத்தின் கூர்மை யானது மொழிவாயே
இரத்தம் பாய மேனிக ளுரத்துஞ் சாடி வேல்கொடு
எதிர்த்துஞ் சூரர் மாளவெ பொரும்வேலா

---

*ஆர பார முகிண்முலை மீது தோயு குருமலை மேவு தேவப் பெருமாளே.

இசைக்குந் தாளமேளமெ தனத்தந் தான தானன
எனத்திண் கூளி கோடிகள் புடைசூழத்
திருத்தன் பாகவேயொரு மயிற்கொண் டாடியேபுகழ்
செழித்தன் பாக வீறிய பெருவாழ்வே
திரட்சங் கோடை வாவிகள் மிகுத்துங் காவி சூழ்தரு
திருச்செங் கோடு மேவிய பெருமாளே.

1267. வருபவர்க ளோலைகொண்டு நமனுடைய தூதரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது
மயலதுபொ லாத வம்பன் விரகுடைய னுகுமென்று
வகைகளுட னேதொ டர்ந்து அடைவார்கள்
கருவியத னூலெ றிந்து சதைகள்தனை யேய றிந்து
கரியபுன லேசொ ரிந்து விடவேதான்
கழுமுனையி லேயி ரென்று விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மென்றன் முனமேதான்
பரகிரியு லாவு செந்தி மலையினுட னேயி டும்பன்
பழநிதனி லேயி ருந்த குமரேசா
பதிகள்பல ஆயி ரங்கள் மலைகள்வெகு கோடி நின்ற
பதமடியர் காண வந்த கதிர்காமா
அரவுபிறை பூளை தும்பை விலுவமொடு தூர்வை கொன்றை
அணிவர்சடை யாளர் தந்த முருகோனே
அரகரசி வாய சம்பு குருபரகு மார நம்பு
மடியர்தமை ஆள வந்த பெருமாளே.

1268. வருமயி லொத்தவ ரீவார் மாமுக
மதியென வைத்தவர் தாவா காமிகள்
வரிசையின் முற்றிய வாகா ராமியல் மடமாதர்
மயலினி லுற்றவர் மோகா வாரிதி
அதனிடை புக்கவ ராளாய் நீணிதி
மருவிய லுத்தர்கள் மாடா மாமதி மிகமூழ்கி
தருபர உத்தம வேளே சீருறை
அறுமுக நற்றவ லீலா கூருடை
அயிலுறை கைத்தல சீலா பூரண பரயோக

சரவண வெற்றிவி னோதா மாமணி
தருமர வைக்கடி நீதா வாமணி
மயிலுறை வித்தவி நோதா தூமணி பெறவேனோ
திரிரிரி தித்திதி தீதீ தீதிதி
தொகுதொகு தொத்தொகு தோதோ தோதிகு
திமிதிமி தித்திமி ஜேஜே தீதிமி தொதிதீதோ
தெனவரி மத்தள மீதார் தேமுழ
திடுவென மிக்கியல் வேதா வேதொழு
திருநட மிட்டவர் காதே மூடிய குருபோதம்
உரைசெயு முத்தம வீரா நாரணி
உமையவ ளுத்தர பூர்வா காரணி
உறுசக ரக்ஷணி நீரா வாரணி தருசேயே
உயர்வர முற்றிய கோவே ஆரண
மறைமுடி வித்தக தேவே காரண
ஒருமயி லைப்பதி வாழ்வே தேவர்கள் பெருமாளே.

**1269.** வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கெண்டையாலும் அனைவோரும்
வடுப்படுந் தொண்டையாலும்
விரைத்திடுங் கொண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல
மிகக்கெடுந் தொண்டனேனும்
இனற்படுந் தொந்தவாரி கரையேற
இசைத்திடுஞ் சந்தபேத
மொழித்திடும் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீகம் அருள்வாயே
சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன்
இளக்ரவுஞ் சந்தனோடு
துளக்கெழுந் தண்டகோளம் அளவாகத்
துரத்தியன் றிந்த்ரலோகம்
அழித்தவன் சம்ப்ரதாயஞ்
சுடப்பெருஞ் சண்டவேலை விடுவோனே

செருக்கெழுந் தும்பர்சேனை
துளக்கவென் றண்டமூடு
தெழித்திடுஞ் சங்கபாணி மருகோனே
தினைப்புனஞ் சென்றுலாவு
குறத்தியின் பம்பராவு
திருப்பரங் குன்றமேவு பெருமாளே.

**1270.** வரையற வற்ற மடமாதர்
மயலுற உற்று வசமாகி
நிரையைவி டுத்து நிதிதேடி
நினைவுதொ டுத்து நிகழ்வேனை
பரையுமை பெற்ற பரிபாலா
பாமரு கக்கும் பெரியோனே
உரையது செப்ப வருவாயே
உலகும தித்த பெருமாளே.

**1271.** வரைவில்பொய் மங்கையர் தங்க ளஞ்சன
விழியையு கந்துமு கந்து கொண்டடி
வருடிநி தம்பம ளைந்து தெந்தென அளிகாடை
மயில்குயி லன்றிலெ னும்பு ளின்பல
குரல்செய்தி ருந்துபி னுந்தி என்கிற
மடுவில்வி ழுந்துகி டந்து செந்தழல் மெழுகாகி
உருகியு கந்திதழ் தின்று மென்றுகை
அடியின கங்கள்வ ரைந்து குங்கும
உபயதனங்கள்த தும்ப அன்புடன் அணையாமஞ்
சுலவிய கொண்டைகு லைந்த லைந்தெழ
அமளியில் மின்சொல்ம ருங்கி லங்கிட
உணர்வழி இன்பம றந்து நின்றனை நினைவேனோ
விரவிநெ ருங்குகு ரங்கி னங்கொடு
மொகுமொகெ னுங்கட லுங்க டந்துறு
விசைகொடு லங்கைபு குந்த ருந்தவர் களிகூர
வெயில்நில வும்பரு மிம்ப ரும்படி
செயசெய என்றுவி டுங்கொ டுங்கணை
விறல்நிரு தன்தலை சிந்தி னன்திரு மருகோனே

அருகர்க ணங்கள்பி ணங்கி டும்படி
மதுரையில் வெண்பொடி யும்ப ரந்திட
அரகர சங்கர என்று வென்றருள் புகழ்வேலா
அறம்வளர் சுந்தரி மைந்த தண்டலை
வயல்கள்பொ ருந்திய சந்த வண்கரை
அரிவைவி லங்கலில் வந்து கந்தருள் பெருமாளே.

**1272.** வலிவாத பித்தமொடு களமாலை விப்புருதி
வறள்சூலை குட்டமொடு குளிர்தாகம்
மலிநீரி ழிச்சல்பெரு வயிறீளை கக்குகளை
வருநீர டைப்பினுடன் வெகுகோடி
சிலைநோய டைத்தவுடல் புவிமீதெ டுத்துழல்கை
தெளியாமெ னக்குமினி முடியாதே
சிவமார்தி ருப்புகழை தினநாவி னிற்புகழ
சிவஞான சித்திதனை அருள்வாயே
தொலையாத பத்தியுள திருமால்க ளிக்கவொரு
சுடர்வீசு சக்ரமதை அருள்ஞான
துவர்வேணி அப்பன்மிகு சிவகாமி கர்த்தன்மிகு
சுகவாரி சித்தனருள் முருகோனே
அலைசூரன் வெற்புமரி முகனானை வத்திரனொ
டசுராரி றக்கவிடு மழல்வேலா
அமுதாச னத்திகுற மடவாள்க ரிப்பெணொடும்
அருணாச லத்திலுறை பெருமாளே.

**1273.** வழக்குச் சொற்பயில் வாற்ச ளப்படு
மருத்துப் பச்சிலை தீற்று மட்டைகள்
வளைத்துச் சித்தச சாத்தி ரக்கள வதனாலே
மனத்துக் கற்களை நீற்று ருக்கிகள்
சுகித்துத் தெட்டிக ளோர்த்து திப்பரை
மருட்டிக் குத்திர வார்த்தைசெப்பிகள் மதியாதே
கழுத்தைக் கட்டிய ணைப்பி நட்பொடு
சிரித்துப் பற்களை காட்டி கைப்பொருள்
கழற்றிக் கற்புகர் மாற்று ரைப்பது கரிசாணி

கணக்கிட் டுப்பொழு தேற்றி வைத்தொரு
பிணக்கிட் டுச்சிலு காக்கு பட்டிகள்
வலைக்குட் புக்கிடு பாழ்த்த புத்தியை ஒழியேனோ

அழற்கட் டப்பறை மோட்ட ரக்கரை
நெருக்கிப் பொட்டெழ நூக்கி யக்கணம்
அழித்திட் டுக்குற வாட்டி பொற்றன கிரிதோய்வாய்

அகப்பட் டுத்தமிழ் தேர்த்த வித்தகர்
சமத்துக் கட்டியி லாத்த முற்றவன்
அலைக்குட் கட்செவி மேற்படுக்கையில் உறைமாயன்

உழைக்கட் பொற்கொடி மாக்கு லக்குயில்
விருப்புற் றுப்புணர் தோட்க்ரு பைக்கடல்
உறிக்குட் கைத்தல நீட்டு மச்சுதன் மருகோனே

உரைக்கச் செட்டிய னாய்ப்பண் முத்தமிழ்
மதித்திட் டுச்செறி நாற்க விப்புணர்
ஒடுக்கத் துச்செறி வாய்த்த லத்துறை பெருமாளே.

**1274.** வளைகர மாட்டி வேட்டி னிடைதுயில் வாட்டி ஈட்டி
வரிவிழி தீட்டி ஏட்டின் மணம்வீசும்
மழைகுழல் காட்டி வேட்கை வளர்முலை காட்டி நோக்கின்
மயில்நடை காட்டி மூட்டி மயலாகப்

புளகித வார்த்தை ஏற்றி வரிகலை வாழ்த்தி ஈழ்த்து
புணர்முலை சேர்த்து வீக்கி விளையாடும்
பொதுமட வார்க்கு ஏற்ற வழியுறு வாழ்க்கை வேட்கை
புலைகுண மோட்டி மாற்றி அருள்வாயே

தினைபொழு கேற்ற நோக்கி பலவகை வாச்சி தூர்த்து
சுடரடி நீத்தல் ஏத்தும் அடியார்கள்
துணைவன்மைநோக்கி நோக்கினிடைமுறையாய்ச்சிமார்ச்சொல்
சொலியமு தூட்டி ஆட்டு முருகோனே

இளநகை ஓட்டி மூட்டர் குலம்விழ வாட்டி எட்டை
இமையவர் பாட்டை மீட்ட குருநாதா
இயல்புவி வாழ்த்தி ஏத்த எனதிடர் நோக்கி நோக்க
மிருவினை காட்டி மீட்ட பெருமாளே.

1275. வள்ளமுலைப் பொதுமானூர்
மயலதனிற் படியாதே
கள்ளம்விடுத் துனதாளே
கருதவருட் பெறுவேனோ
உள்ளமறைப் பொருளோனே
உமைமகிழ்நற் புதல்வோனே
தெள்ளுதமிழ்க் குரியோனே
திருமதுரைப் பெருமாளே.

1276. வறுமைப் பாழ்பிணி ஆற்றப்ப டாதுளம்
உருகிப் போனது தேற்றப்ப டாதினி
மகிமைக் கேடுகள் பார்க்கப்ப டாதென அழையாயோ
வலியப் போயுடல் கூச்சப்ப டாமையும்
இடியப் பேசிய நாச்சிக்க லாமையும்
மறுசொற் காதுகள் கேட்கப்ப டாமையும் வரலாமோ
கறுவிப் பாய்புலி வேட்டைக்கு ளேவரு
பசுவைப் போல்மிடி யாற்பட்ட பாடொரு
கதையைப் பாரினி லார்க்குச்சொல் வேனினி
அறியாயோ
கவலைச் சாகர நீச்சுக்கு ளேயுயிர்
தவறிப் போமென ஓட்டத்தி லோடியெ
கருணைத்தோணியிலேற்றிக்கொள்வாயினி அலையாதே
குறைபட் டேனுயிர் காத்துக்கொ ளாயென
முறையிட் டோர்கரி கூப்பிட்ட நாளொரு
குளவிற்போயுயிர்மீட்டுக்கொள்வோர்திரு மருகோனே
குளிர்முத் தாலணி மூக்குத்தி யோடணி
களபப் பூண்முலை பார்த்துப்பெண் மோகினி
குவளைப்பார்வையில்மாட்டிக்கொளாதருள் குருநாதா
நிறையத் தேனுமிழ் பூக்கொத்தி லேகனி
கிழியத் தான்விழுங் காய்க்கொத்தி லேமயில்
நடனக் கால்படு தோப்புக்கு ளேகயல் வயலூடே
நதியிற் காவிரி யாற்றுக்கு ளேபயில்
வளமைச் சோழநன் னாட்டுக்கு ளேரக
நகரிற் சீர்பெறு மோக்ஷத்தை யேதரு பெருமாளே.

1277. வனசமொத் தபதக் குருநாதா
மலைமடப் பிடியுத் தமிபாலா
அனகதத் துவமெய்ப் பொருளானே
அடியனுக் குனபொற் கழல்தாராய்
எனதுயிர்க் குயிரொத் தவநீதா
இபமுகப் பரமற் கிளையோனே
தினைவனத் தெரிவைக் குரியோனே
திருமலைக் குமரப் பெருமாளே.

1278. வனப்புற் றெழுகேத மேவு கோகிலம்
அழைக்கப் பொருமார னேவ தாமலர்
மருத்துப் பயில்தேரி லேறி மாமதி தொங்கலாக
மறுத்துக் கடல்பேரி மோத வேயிசை
பெருக்கப் படைகூடி மேலெ ழாவணி
வகுத்துக் கொடுசேம மாகமாலையில் வந்துகாதிக்
கனக்கப் பறைதாய ளாவ நீள்கன
கருப்புச் சிலைகாம ரோவில் வாளிகள்
களித்துப் பொரவாசம் வீசு வார்குழல் மங்கைமார்கள்
கலைக்குட் படுபேத மாகி மாயும
துனக்குப் ரியமோக்ரு பாக ராவிது
கடக்கப் படுநாம மான ஞானம தென்றுசேர்வேன்
புனத்திற் றினைகாவ லான காரிகை
தனப்பொற் குவடேயு மோக சாதக
குனித்தப் பிறைசூடும் வேணி நாயகர் நன்குமாரா
பொறைக்குப் புவிபோலு நீதி மாதவர்
சிறக்கத் தொகுபாசி சோலை மாலைகள்
புயத்துற் றணிபாவசூரனுருயிர் கொண்டவேலா
சினத்துக் கடிவீசி மோது மாகட
லடைத்துப் பிசிதாச னுதி மாமுடி
தெறிக்கக் கணையேவு வீர மாமனும் உந்திமீதே
செனித்துச் சதுர்வேத மோது நாமனு
மதித்துப் புகழ்சேவ காவி ழாமலி
திருப்புக் கொளியூரில் மேவு தேவர்கள் தம்பிரானே.

1279. வனிதையுடல் காய நின்ற வுதிரமதி லேயு ருண்டு
வயிறில்நெடு நாள லைந்து புவிமீதே
மனிதருரு வாகி வந்து அநுதினமு மேவ ளர்ந்து
வயதுபதி னாறு சென்று வடிவாகிக்
கனகமுலை மாதர் தங்கள் வலையில்மிக வேயு ழன்று
கனிவதுட னேய ணைந்து பொருள்தேடிக்
கனபொருளெ லாமி ழந்து மயலில்மிக வேய லைந்த
கசடனெனை யாள வுன்ற னருள்தாராய்
புனமதனில் வாழு கின்ற வனிதைகுற நாதர் தந்த
புதல்வியித ழூற லுண்ட புலவோனே
பொருமதனை நீறு கண்ட அரியசிவ னாரு கந்த
புதியமயி லேறு கந்த வடிவேலா
பனகமணி மாம தங்கி குமரிவெகு நீலி சண்டி
பரமகலி யாணி தந்த பெருவாழ்வே
பகையசுரர் மாளவென்று அமரர்சிறை மீளவென்று
பழநிமலை மீதி னின்ற பெருமாளே.

1280. வாசனை மங்கையர் போற்று சிற்றடி
பூஷண கிண்கிணி யார்ப்ப ரித்திட
மாமலை ரண்டென நாட்டு மத்தக முலையானை
வாடைம யங்கிட நூற்ற சிற்றிழை
நூலிடை நன்கலை தேக்க இக்குவில்
மாறன்வி டுங்கணை போற்சி வத்திடு விழியார்கள்
நேசிகள் வம்பிக ளாட்ட மிட்டவர்
தீயர்வி ரும்புவர் போற்சு ழற்றியெ
நீசனெ னும்படி யாக்கி விட்டொரு பிணியான
நீரின்மி குந்துழ லாக்கை யிற்றிட
யோகமி குந்திட நீக்கி யிப்படி
நீயெனு ளந்தனில் வீற்றி ருப்பதும் ஒருநாளே
தேசம டங்கலு மேத்து மைப்புய
லாயநெ டுந்தகை வாழ்த்த வச்சிர
தேகமி லங்கிய தீர்க்க புத்திர முதல்வோனே

தீரனெ னும்படி சாற்று விக்ரம
சூரன டங்கிட வாய்த்த வெற்புடல்
தேயந டந்திடு கீர்த்தி பெற்றிடு கதிர்வேலா
மூசளி பம்பிய நூற்றி தழ்க்கம
லாசனன் வந்துல காக்கி வைத்திடு
வேதன கந்தையை மாற்றி முக்கணர் அறிவாக
மூதறி வுந்திய தீக்ஷை செப்பிய
ஞானம்வி ளங்கிய மூர்த்தி யற்புத
மூவரி லங்குப ராய்த்து றைப்பதி பெருமாளே.

1281. வாசித்த நூல்ம தங்கள் பேசிக்கெ டாத விந்து
வாய்மைப்ர காச மென்று நிலையாக
வாசிக்க பால மன்றில் நாசிக்கு ளோடு கின்ற
வாயுப்பி ராண னென்று மடைமாறி
யோசித்த யாரு டம்பை நேசித்து ரூத லைந்து
ரோமத்து வார மெங்கு முயிர்போக
யோகச்ச மாதி கொண்டு போகப்ப சாசு மண்டு
லோகத்தில் மாய்வ தென்றும் ஒழியாதோ
வீசப்ப யோதி துஞ்ச வேதக்கு லால னஞ்ச
மேலிட்ட சூர்த டிந்த கதிர்வேலா
வீரப்ர தாப பஞ்ச பாணத்தி னுல்ம யங்கி
வேடிச்சி காலி லன்று விழுவோனே
கூசிப்பு காவொ துங்க மாமற்சி காவ ரிந்த
கூளிப்பு ராரி தந்த சிறியோனே
கோழிப்ப தாகை கொண்ட கோலக்கு மார கண்ட
கோடைக்குள் வாடை கொண்ட பெருமாளே.

1282. வாசித்துக் காணொ ணாதது
பூசித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது நெஞ்சினாலே
மாசர்க்குத் தோணொ ணாதது
நேசர்க்குப் பேரொ ணாதது
மாயைக்குச் சூழொ ணாதது விந்துநாத

ஓசைக்குத் தூர மானது
மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி ஆனது கண்டுநாயேன்
யோகத்தைச் சேரு மாறுமெய்
ஞானத்தைப் போதி யாயினி
ஊனத்தைப் போடி டாதும யங்கலாமோ
ஆசைப்பட் டேனல் காவல்செய்
வேடிச்சிக் காக மாமய
லாகிப்பொற் பாத மேபணி கந்தவேளே
ஆலித்துச் சேல்கள் பாய்வய
லூரிற்பிர காச மானதொ
ராரத்தைப் பூண்ம யூரது ரங்கவீரா
நாசிக்குட் ப்ராண வாயுவை
ரேசித்தெட் டாத யோகிகள்
நாடற்குக் காணொ ணாதென நின்றநாதா
நாகத்துச் சாகை போயுயர்
மேகத்தைச் சேர்சி ராமலை
நாதர்க்குச் சாமி யேசுரார் பெருமாளே.

1283. வாடையில் மதனைய லைத்துற்று
வால்வளை கலகலெ னக்கற்றை
வார்குழல் சரியமு டித்திட்டு இளைஞோரும்
மால்கொள நெகிழவு டுத்துப்பொன்
நூபுர மிணையடி யைப்பற்றி
வாய்விட நுதல்மிசை பொட்டிட்டு வருமாய
நாடக மகளிர்ந டிப்புற்ற
சேதக வலையில கப்பட்டு
ஞாலமு முழுதுமி கப்பித்தன் எனுமாறு
நாணமு மரபுமொ ழுக்கற்று
நீதியு மறிவும றக்கெட்டு
நாயடி மையுமடி மைப்பட்டு விடலாமோ
ஆடிய மயிலினை ஒப்புற்று
பீலியு மிலையுமு டுத்திட்டு
ஆரினு மழகுமி கப்பெற்று யவனாளும்

ஆகிய இதண்மிசை உற்றிட்டு
மானின மருளவி ழித்திட்டு
ஆயுத கவணொரு கைச்சுற்றி விளையாடும்
வேடுவர் சிறுமியொ ருத்திக்கு
யான்வழி அடிமையெ னச்செப்பி
வீறுள அடியிணை யைப்பற்றி பலகாலும்
வேதமு மமரரு மெய்ச்சக்ர
வாளமு மறியவி ளைப்பட்டு
மேருவில் மிகவுமெ ழுத்திட்ட பெருமாளே.

**1284.** வாட்டியெனைச் சூழ்ந்தவினை யாசையமு வாசையனல்
மூட்டியுலைக் காய்ந்தமழு வாமெனவி காசமொடு
மாட்டியெனைப் பாய்ந்துகட வோடடமொ டாடிவிடு
விஞ்சையாலே
வாய்த்தமலர்ச் சாந்துபுழு கானபனி நீர்களொடு
காற்றுவரத் தாங்குவன மார்பிலணி யாரமொடு
வாய்க்குமெனப் பூண்டழக தாகபவி சோடுமகிழ்
வன்புகூரத்
தீட்டுவிழிக் காந்திமட வார்களுட னுடிவலை
பூட்டிவிடப் போந்துபிணி யோடுவலி வாதமென
சேர்த்துவிடப் போந்துவினை மூடியடி யேனுமுன
தன்பிலாமல்
தேட்டமுறத் தேர்ந்துமமிர் தாமெனவெ யேகிநம
னோட்டிவிடக் காய்ந்துவரி வேதனடை யாளமருள்
சீட்டுவரக் காண்டுகலி காலனணு காநினருள்
அன்புதாராய்
வேட்டுவரைக் காய்ந்துகுற மாதையுற வாடியிருள்
காட்டவரைச் சேர்ந்தகதிர் வேல்கொடம ராடிசிறை
மீட்டமரர்க் காண்டவனை வாழ்கநிலை யாகவைகும்
விஞ்சையோனே
வேற்றுருவிற் போந்துமது ராபுரியி லாடிவைகை
யாற்றின்மணற் றூங்குமழு வாளியென தாதைபுர
மேட்டையெரித் தாண்டசிவ லோகன்விடை யேறியிட
முங்கொளாயி

கோட்டுமுலைத் தாங்குமிழை யானவிடை கோடிமதி
தோற்றமெனப் போந்தவழ கானசிவ காமிவிறல்
கூற்றுவனைக் காய்ந்தவபி ராமிமன தாரஅருள்
கந்தவேளே
கூட்டுநதித் தேங்கியவெ ளாறுதர ளாறுதிகழ்
நாட்டிலுறைச் சேந்தமயி லாவளிதெய் வானையொடு
கூற்றுவிழத் தாண்டியென தாகமதில்வாழ்குமர
தம்பிரானே.

**1285.** வாட்படைச் சேனைபட வோட்டியொட் டாரையிறு
மாப்புடைத் தாளரசர் பெருவாழ்வும்
மாத்திரைப் போதிலிடு காட்டினிற் போமெனவில்
வாழ்க்கைவிட் டேறுமடி யவர்போலக்
கோட்படப் பாதமலர் பார்த்திளைப் பாறவினை
கோத்தமெய்க் கோலமுடன் வெகுரூபக்
கோப்புடைத் தாகியல மாப்பினிற் பாரிவரு
கூத்தினிப் பூரையிட அமையாதோ
தாட்படக் கோபவிட பாப்பினிற் பாலன்மிசை
தாக்குமப் போதிலொரு கழல்தாவிச்
சாற்றுமக் கோரமிகு கூற்றுதைத் தார்மவுலி
தாழ்க்கவச் ராயுதனும் இமையோரும்
ஆட்படச் சாமபர மேட்டியைக் காவலிடு
மாய்க்குடிக் காவலவு ததிமீதே
ஆர்க்குமத் தானவரை வேற்கரத் தால்வரையை
ஆர்ப்பெழச் சாடவல பெருமாளே.

**1286.** வாதந் தலைவலி சூலம் பெருவயி
றுருகும் பிணியிவை அணுகாதே
மாயம் பொதிதரு காயந் தனின்மிசை
வாழுங் கருவழி மருவாதே
ஓதம் பெறுகடல் மோதுந் திரையது
போலும் பிறவியில் உழலாதே
ஓதும் பலவடி யாருங் கதிபெற
யானுன் கழலிணை பெறுவேனோ

கீதம் புகழிசை நாதங் கனியொடு
கீரன் தமிழிணை மொழிவார்தம்
கேளும் பெருவள மாகும் படியவர்
கேதங் கெடவருள் தருவோனே
வேதந் தொழுதிரு மாலும் பிரமனு
மேவும் பதமுடை விறல்வீரா
வேல்வந் தெதிர்பொரு சூரன் பொடிபட
வேல்கொண் டமர்செய்த பெருமாளே.

1287. வாத பித்தமொடு சூலை விப்புருதி
யேறு கற்படுவ னீளை பொக்கிருமல்
மாலை புற்றெழுத லூசல்பற்சனியொ டந்திமாலை
மாச டைக்குருடு காத டைப்புசெவி
நீமை கெட்டவலி மூல முற்றுதரு
மாலை யுற்றதொணு று தத்துவர்கள் உண்டகாயம்
வேத வித்துபரி கோல முற்றுவிளை
யாடு வித்தகட லோட மொய்த்தபல
வேட மிட்டுபொரு ளாசை பற்றியுழல் சிங்கியாலே
வீடு கட்டிமய லாசை பட்டுவிழ
வோசை கெட்டுமடி யாமல் முத்திபெற
வீட ளித்துமயி லாடு சுத்தவெளி சிந்தியாதோ
ஓத அத்திமுகி லோடு சர்ப்பமுடி
நீறு பட்டலற சூர வெற்பவுண
ரோடு பட்டுவிழ வேலை விட்டபுகழ் அங்கிவேலா
ஓந மச்சிவய சாமி சுத்தஅடி
யார்க ளுக்குமுப காரி பச்சையுமை
ஓர்பு றத்தருள்சி காம ணிக்கடவுள் தந்தசேயே
ஆதி கற்பகவி நாய கற்குபிற
கான பொற்சரவ ணபை ரப்பிரம
ஞாதி யுற்றபொருள் ஓது வித்தமைய நிந்தகோவே
ஆசை பெற்றகுற மாதை நித்தவன
மேவி சுத்தமண மாடி நற்புலியு
ராட கப்படிக கோபு ரத்தின்மகிழ் தம்பிரானே.

1288. வாதமொடு சூலை கண்ட மாலைகுலை நோவு சந்து
மாவலிவி யாதி குன்ம மொடுகாசம்
வாயுவுட னேப ரந்த தாமரைகள் பீனசம்பின்
மாதர்தரு பூஷ ணங்கள் எனவாகும்
பாதகவி யாதி புண்கள் ஆனதுட னேதொ டர்ந்து
பாயலைவி டாது மங்க இவையால்நின்
பாதமல ரான தின்க ணேயமற வேம றந்து
பாவமது பான முண்டு வெறிமூடி
ஏதமுறு பாச பந்த மானவலை யோடு மூன்று
ஈனமிகு சாதி யின்க ணதிலேயான்
ஈடழித லான தின்பின் மூடனென ஓது முன்புன்
ஈரவருள் கூர வந்து எனையாள்வாய்
சூதமகிழ் பாலை தெங்கு தாதுவளர் சோலை முன்பு
சூழுமதில் தாவி மஞ்சின் அளவாகத்
தோரணநன் மாட மெங்கு நீடுகொடி யேதழைந்த
ஸ்வாமிமலை வாழ வந்த பெருமாளே.

1289. வாதம் பித்தமி டாவயி றீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்
மாறுங் கக்கலொ டேசில நோய்பிணி
யோடுந் தத்துவ காரர்தொ ணூறறு
வாருஞ் சுற்றினில் வாழ்சதி காரர்கள் வெகுமோகர்
சூழ்துன் சித்ரக பாயைமு வாசைகொ
டேதுஞ் சற்றுண ராமலெ மாயைசெய்
சோரம் பொய்க்குடி லேசுக மாமென இதில்மேவித்
தூசின் பொற்சர மோடுகு லாயுல
கேழும் பிற்பட வோடிடு மூடனை
தூவஞ் சுற்றடி யாரடி சேரநின் அருள்தாராய்
தீதந் தித்திமி தீதக தோதிமி
டூடுண் டூட்டூடு டூடூடு டூடூடு
சேசெஞ் செக்கெண தோதக தீகுட வெனபேரி

சேடன் சொக்கிட வேலைக டாகமெ
லாமஞ் சுற்றிட வேயச ரார்கிரி
தீவும் பொட்டெழ வேயனல் வேல்விடு மயில்வீரா
வேதன் பொற்சிர மீதுக டாவிக
லீசன் சற்குரு வாயவர் காதினில்
மேவும் பற்றிலர் பேறரு ளோதிய முருகோனே
வேஷங் கட்டியு மேகிம காவளி
மாலின் பித்துற வாகிவி ணோர்பணி
வீரங் கொட்பழ னாபுரி மேவிய பெருமாளே.

1290. வாதினைய டர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயமதொ ழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள்பு னைந்து
மாபதம ணிந்து பணியேனே
ஆதியொடு மந்த மாகியந லங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நாணிலம லைந்து திரிவேனே
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனோ
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
சோகமது தந்து எனையாள்வாய்
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே.

1291. வாய்ந்தப்பிடை நீடுகு லாவிய
நீந்திப்பது மாதியை மீதினி
லூர்ந்துற்பல வோடையில் நீடிய உகள்சேலை
வார்ந்துப்பக ழீயெதி ராகிமை
கூர்ந்துப்பரி யாவரி சேரவை
சேர்ந்துக்குழை யோடுச லாடிய விழியாலே

சாய்ந்துப்பனை யூணவ ரானபொ
லாய்ந்துப்பணி ஞரிரு தாளினில்
வீழ்ந்திப்படி மீதினி லேசிறி தறிவாலே
சாந்தப்பிய மாமலை நேர்முலை
சேர்ந்துப்படி வீணினி லேவுயிர்
மாய்ந்திப்படி போகினு மோர்மொழி மறவேனே
சார்ந்தப்பெரு நீர்வௗ மாகவெ
பாய்ந்தப்பொழு தாருமி லாமலெ
காந்தப்பெரு நாதனு மாகிய மதாலே
தாந்திக்கிட தாகிட தாகிட
தோந்திக்கிட தோதிமி தோதிமி
செஞ்செக்கண செகெண செகெணவென தாளம்
காந்தப்பத மாறியு லாவுய
ராந்தற்குரு நாதனு மாகிய
போந்தப்பெரு மான்முரு காவொரு பெரியோனே
காந்தக்கலு மூசியு மேயென
ஆய்ந்துத்தமி ழோதிய சீர்பெறு
காஞ்சிப்பதி மாநகர் மேவிய பெருமாளே.

1292. வார ணந்தனை நேரான மாமுலை
மீத ணிந்திடு பூணார மாரொளி
வால சந்திர னோராக மாமுகம் எழில்கூர
வார ணங்கிடு சேலான நீள்விழி
ஓலை தங்கிய வார்காது வாவிட
வான இன்சுதை மேலான வாயிதழ் அமுதூறத்
தோர ணஞ்செறி தார்வாழை யேய்தொடை
மீதில் நின்றிடை நூல்போலு லாவியெ
தோகை என்றிட வாகாக ஊரன நடைமாதர்
தோத கந்தனை மாமாயை யேவடி
வாக நின்றதெ னுவாய வோர்வது
தோணி டும்படி நாயேனுள் நீயருள் தருவாயே
கார ணந்தனை ஓராதி சாசரர்
தாம டங்கலு மீறுக வானவர்
காவ லிந்திர னூடாள வேயயில் விடும்வீரா

கார்வி டந்தனை ஊணாக வானவர்
வாழ்த ரும்படி மேனுளி லேமிசை
காள கண்டம காதேவ னூர்தரு முருகோனே
ஆர ணன்றனை வாதாடி ஓருரை
ஓது கின்றென வாராதே னுஅவன்
ஆண வங்கெட வேகாவ லாமதில் இடும்வேலா
ஆத வன்கதி ரோவாது லாவிய
கோபு ரங்கிளர் மாமாது மேவிய
ஆவி னன்குடி யோனேசு ராதிபர் பெருமாளே.

1293. வாரணமு கங்கி ழிந்து வீழவும ரும்ப லர்ந்து
மால்வரைய சைந்த னங்கன் முடிசாய
வாளகிரி அண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
மாதவம றந்து லைந்து நிலைபோப்
பூரணகு டங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலைவி ரும்பு கொங்கை மடவார்தம்
போகசய னந்த விர்ந்து ஞானமுட கப தம்ப ணிந்து
பூசனைசெய் தொண்ட னென்ப தொருநாளே
ஆரணமு ழங்கு கின்ற ஆயிரம டந்த வங்கள்
ஆகுதியி டங்கள் பொங்கு நிறைவீதி
ஆயிரமு கங்கள் கொண்ட நூபுரமி ரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்
தோரணம லங்கு துங்க கோபுரநெ ருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்
சோதியின்மி குந்த செம்பொன் மாளிகைவி ளங்கு கின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே.

1294. வார முற்ற பண்பின் மாத முற்ற நண்பின்
ஈடு மெய்த்து யர்ந்து வயதாகி
வாலை யிற்றி ரிந்து கோல மைக்கண் மங்கை
மார்க ளுக்கி சைந்து பொருள்தேடி
ஆர மிக்க பொன்க ளால மைத்த மர்ந்த
மாப ணிக்கள் விந்தை அதுவான

ஆட கொப்ப மைந்த ஒலை முத்த முங்கொ
டாவி மெத்த நொந்து திரிவேனோ
சூர னைத்து ரந்து வேர றப்பி ளந்து
சூழ்சு ரர்க்க னன்பு செயும்வீரா
சூக ரத்தொ டம்பு தானெ டுத்து வந்த
சூத னுக்கி சைந்த மருகோனே
எரெ திர்த்து வந்து நீர்கள் கட்டி அன்று
தானி றைக்க வந்த தொருசாலி
யேமி குத்து யர்ந்த மாவ யற்கள் மிஞ்சும்
ஏர கத்த மர்ந்த பெருமாளே.

1295. வாராய் பேதாய் கேளாய் நீதாய்
மானார் மோகத் துடனுசை
மாசூ டாடா தூடே பாராய்
மாறு ஞானச் சுடர்தானின்
றூரா யாதே யாராய் பேறும்
ஆறு வேதப் பொருள்காணென்
றுள்வாய் நீதா னுதா பார்மீ
தார்வே றுள்கைக் குரியார்தாம்
தோரா வானோர் சேனு தாரா
சூரா சாரற் புனமாது
தோள்தோய் தோளீ ராறு மாசூர்
தூளாய் வீழச் சிறுதாரைச்
சீரா வாலே வாளா லேவே
லாலே சேதித் திடும்வீரா
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.

1296. வாரிமீ தேயெழு திங்களாலே
மாரவே ளேவிய அம்பினாலே
பாரெலா மேசிய பண்பினாலே
பாவியே னாவிம யங்கலாமோ

சூரனீள் மார்புதொ ளைந்தவேலா
சோதியே தோகைய மர்ந்தகோவே
மூரிமால் யானைம ணந்தமார்பா
மூவர்தே வாதிகள் தம்பிரானே.

1297. வாருமிங் கேவீடி தோபணம் பாஷாண
மால்கடந் தேபோமெ னியலூடே
வாடிபெண் காள்பாயை போடுமென் றுசார
வாசகம் போல்கூறி அணைமீதே
சேருமுன் காசாடை வாரியும் போதாமை
தீமைகொண் டேபோமென் நடமாதர்
சேரிடம் போகாம லாசுவந் தேருமல்
சீதளம் பாதாரம் அருள்வாயே
நாரணன் சீராம கேசவன் கூராழி
நாயகன் பூவாயன் மருகோனே
நாரதும் பூர்கீத மோதநின் றேயாடு
நாடகஞ் சேய்தாளர் அருள்பாலா
சூரணங் கோடாழி போய்கிடந் தேவாட
சூரியன் தேரோட அயிலேவி
தூநறுங் காவேரி சேறுமொண் சீறாறு
சூழ்கடம் பூர்தேவர் பெருமாளே.

1298. வாருற்றெழு பூண்முலை வல்லியர்
காருற்றெழு பூங்குழல் மெல்லியர்
வாலக்குயில் போல்மொழி சொல்லியர் தெருமீதே
மாரக்கதிர் மோகன வஞ்சியர்
சேலுற்றெழு நேர்விழி விஞ்சியர்
வாகக்குழை யாமப ரஞ்சியர் மயலாலே
சீருற்றெழு ஞானமுங் கல்வியும்
நோற்றவர் மால்கொடு மங்கியெ
சேருற்றறி வானத ழிந்துயிர் இழவாமுன்
சேவற்கொடி யோடுசி கண்டியின்
மேல்நற்றமி ழோர்புகழ் சொல்லிய
தேசுக்கதிர் கோடியெ னும்பதம் அருள்வாயே

போருற்றிடு சூரர்சி ரங்களை
தீரத்தொடு பாரில ரிந்தெழு
பூதக்கொடி சோரிய ருந்திட விடும்வேலா
பூதக்குலை யேவிழ மென்கயல்
தாவக்குலை வாழைக ளுஞ்செறி
போகச்செநெ லேயுதி ரும்வயல் அவைகோடி
சாரற்கிரி தோறுமெ ழும்பொழில்
தூரத்தொழு வார்வினை சிந்திடு
தாதுற்றெழு கோபுர மண்டபம் அவைசூழ
தார்மெத்திய தோரண மெண்தெரு
தேர்சுற்றிய வாழ்பதி அண்டர்கள்
தாமெச்சிய நீள்தணி யம்பதி பெருமாளே.

1299. வார்குழ லைச்சொரு கிக்கரு விற்குழை
காதொடி ணைத்தசை யக்கதிர் பற்கொடு
வாயிதழ் பொற்பம லர்க்குமி ழொத்துள துண்டக்ரீவ
வார்கமு கிற்புய நற்கழை பொற்குவ
டாமெனு மற்புத பொற்குட மொத்திணை
மார்பழ கிற்பொறி முத்தொளிர் சித்திர ரம்பைமாதர்
காருறும் வித்திடை யிற்கத லித்தொடை
சேர்தரு நற்பிர சத்தட முட்கொடு
கால்மறை யத்துவ ளச்செறி பொற்கலை ஒண்குலாவக்
கார்குயி லைக்குர லைக்கொடு நற்றெரு
வீதில்நெ ளித்துந கைத்துந டிப்பவர்
காமனு கப்பம ளிச்சுழல் குத்திரர் சந்தமாமோ
சூர்ப கைக்கர வுட்கிநெ ளித்துயர்
ஆழியி ரைப்பகி ணக்குட லைப்புடை
சூழந ரிக்கெரு டக்கொடி பற்பல சங்கமாகச்
சூழ்கிரி யைக்கைத டித்தம லைத்திகை
யானையு ழக்கிந டுக்கிம தப்பொறி
சோரகைத்தயிலைக்கொடுவிட்டருள் செங்கைவேலா
ஏரணி நற்குழ லைக்கக னச்சசி
மோகினி யைப்புணர் சித்தவொ ரற்புத
வேடமுதச்சொருபத்தகுறத்திம ணங்கொள்வோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி நிற்குமி லக்ஷண
ராஜத லக்ஷண லக்ஷுமி பெற்றருள் தம்பிரானே.

1300. வார்குழல் விரித்துத் தூக்கி
வேல்விழி சுழற்றிப் பார்த்து
வாவென நகைத்துத் தோட்டு குழையாட

வாசக முரைத்துச் சூத்ர
பாவையெ னுறுப்பைக் காட்டி
வாசனை முலைக்கச் சாட்டி யழகாகச்

சீர்கலை நெகிழ்த்துப் போர்த்து
நூலிடை நெளித்துக் காட்டி
தீதெய நடித்துப் பாட்டு குயில்போலச்

சேருற அழைத்துப் பார்த்து
சார்வுற மருத்திட் டாட்டி
சீர்பொருள் பறிப்பொய்க் கூத்த ருறவாமோ

சூரர்கள் பதைக்கத் தேர்க்க
ளானைக ளழித்துத் தாக்கி
சூர்கிரி கொளுத்திக் கூற்று ரிடும்வேலா

தூமொழி நகைத்துக் கூற்றை
மாளிட வுதைத்துக் கோத்த
தோலுடை யெனப்பர்க் கேற்றி திரிவோனே

ஏரணி சடைச்சிப் பாற்சொ
லாரணி சிறக்கப் போற்று
மேமொழி விரித்துக் கூர்த்த மகவோனே

ஏடணி குழைச்சித் தூர்த்த
வாடகி குறத்திக் கேற்ற
ஏரக பொருப்பிற் பூத்த பெருமாளே.

1301. வார்குழையை எட்டி வேளினைம ருட்டி
மாயநம னுக்கும் உறவாகி
மாதவம ழித்து லீலைகள்மி குத்து
மாவடுவை ஒத்த விழிமாதர்

சீருடனை ழைத்து வாய்கனிவு வைத்த
தேனிதழ எித்து மதுபோக
சேர்வைதனை உற்று மோசம்விளை வித்து
சீர்மைகெட வைப்பர் உறவாமோ

வாரிதனைஅ றுத்து மேருவைம றித்து
மாகனக மொத்த குடமாகி
வாரவணை வைத்து மாலளித முற்று
மாலைகளு மொய்த்த தனமாது

தோரணிபு யத்தி யோகினிச மர்த்தி
தோகையுமை பெற்ற புதல்வோனே
சூர்கிளைம டித்து வேல்கரமெ டுத்து
சோலைமலை உற்ற பெருமாளே.

1302. வாலவய தாகியழ காகிமத னாகிபணி
வாணிபமொ டாடிமரு ளாடிவிளை யாடிவிழல்
வாழ்வுசதமாகிவலிவாகிமடகூடமொடு பொருள்தேடி

வாசபுழு கேடுமல ரோடுமன மாகிகமழ்
வாசனைக ளாதியிட லாகிமய லாகிவிலை
மாதர்களை மேவியவ ராசைதனி லேசுழல
சிலநாள்போய்த்

தோல்திரைக ளாகிநரை யாகிகுரு டாகியிரு
கால்கள்தடு மாறிசெவி மாறிபசு பாசபதி
சூழ்கதிகள் மாறிசுக மாறிதடி யோடுதிரி உறுநாளிற்

சூலைசொறி ஈளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடுபிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல் அழிவேனோ

நாலுமுக னாதியரி யோமெனவ தாரமுரை
யாதபிர மாவைவிழ மோதிபொரு ளோதுகென
நாலுசிரமோடுசிகைதுளிபடதாளமிடும் இளையோனே

நாறிதழி வேணிசிவ ரூபகலி யாணிமுத
வீணைமக வாணிமகிழ் தோழவன மீதுசெறி
ஞானகுறமாதைதினைகாவில்மணமேவுபுகழ் மயில்வீரா

ஓலமிடு தாடகைசு வாகுவள ரேழுமரம்
வாலியொடு நீலிபக ணேடொருவி ராதனொழு
மோதகடலோடுவிறல்ராவணகுழாமமரில் பொடியாக
ஓகைதழல் வாளிவிடு சூரிதனு நேமிவளை
பாணிதிரு மார்பனரி கேசன்மரு காவெனவெ
ஓதமறை ராமெசுர மேவுகும ராவமரர் பெருமாளே.

**1303.** வாளின் முனையினு நஞ்சினும் வெஞ்சம
ராஜ நடையினு மம்பதி னும்பெரு
வாதை வகைசெய்க ருங்கணு மெங்கணும் அரிதான
வாரி யமுதுபொ சிந்துக சிந்தசெ
வாயு நகைமுக வெண்பலு நண்புடன்
வாரு மிருமெனு மின்சொலு மிஞ்சிய பனிநீரும்
தூளி படுநவ குங்கும முங்குளி
ரார மகில்புழு குங்புனை சம்ப்ரம
சோதி வளர்வன கொங்கையு மங்கையும் எவரேனும்
தோயு மளறெனி தம்பமு முந்திய
மாயை குடிகொள்கு டம்பையுள் மன்பயில்
சூளை யரையெதிர் கண்டும ருண்டிடல் ஒழிவேனோ
காளி திரிபுரை யந்தரி சுந்தரி
நீலி கௌரிப யங்கரி சங்கரி
காரு ணியசிவை குண்டலி சண்டிகை த்ரிபுராரி
காதல் மனைவிப ரம்பரை யம்பிகை
ஆதி மலைமகள் மங்கலை பிங்கலை
கான நடனமு கந்தவள் செந்திரு அயன்மாது
வேளி னிரதிய ருந்ததி இந்திர
தேவி முதல்வர்வ ணங்குத்ரி யம்பகி
மேக வடிவர்பின் வந்தவள் தந்தருள் இளையோனே
வேலு மயிலுநி னைந்தவர் தந்துயர்
தீர வருள்தரு கந்தநி ரந்தர
மேலை வயலையு கந்துள நின்றருள் பெருமாளே.

1304. வானப் புக்குப் பற்றும ருத்துக் கனல்மேவு
மாயத் தெற்றிப் பொய்க்குடி லொக்கப் பிறவாதே
ஞானச் சித்திச் சித்திர நித்தத் தமிழாலுன்
நாமத் தைக்கற் றுப்புகழ் கைக்குப் புரிவாயே
கானக் கொச்சைச் சொற்குற விக்குக் கடவோனே
காதிக் கொற்றப் பொற்குல வெற்பைப் பொரும்வேலா
தேனைத் தத்தச் சுற்றிய செச்சைத் தொடையோனே
தேவச் சொர்க்கச் சக்கர வர்த்திப் பெருமாளே.

1305. வானவராதி யோர்சிறைமேவ
மாவலியேசெய் திடுசூரன்
மார்பிருகூற தாய்விடவாரி
வாய்விடவேலை விடுதீரா
கானவர்பாவை காதலனான
காசணிபார தனமார்பா
காலனைமோது காலகபால
காளகளேசர் தருபாலா
தேனமர்நீப மாலைவிடாத
சேவகஞான முதல்வோனே
தீயகுணாதி பாவிநினாது
சேவடிகாண அருள்வாயே
போனகசாலை யாதுலர்வாழ
வீதிகடோறும் நனிமேவு
பூவணமான மாநகர்வாழு
நாதகுகேச பெருமாளே.

1306. வானோர் வழுத்துனது பாதார பத்மமலர்
மீதே பணிக்கும்வகை அறியாதே
மானார் வலைக்கணதி லேதூ ளிமெத்தையினி
லூடே அணைத்துதவு மதனாலே
தேனே கருப்பிலெழு பாகோ விதற்கிணைக
ளேதோ வெனக்கலவி பலகோடி
தீரா மயக்கினொடு நாகா படத்திலெழு
சேருடல் பெற்றதுயர் ஒழியேனோ

மேனு டுபெற் றுவளர் சூரா திபற்கெதிரி
ஞூடே கிநிற்குமிரு கழலோனே
மேகா ரவுக்ரபரி தானே றிவெற்றிபுனை
வீரா குறச்சிறுமி மணவாளா
ஞாஞ ப்ரற்கினிய வேதா கமப்பொருளை
நாஞ துரைக்குமொரு பெரியோனே
நாரா யணற்குமரு காவீ றுபெற்றிலகு
ராமே சுரத்திலுறை பெருமாளே.

1307. விகட சங்கட வார்த்தை பேசிகள்
அவல மங்கையர் ஊத்தை நாறிகள்
விரிவ டங்கிட மாற்றும் வீறிகள் வருவார்தம்
விதம்வி தங்களை நோக்கி யாசையி
லுபரி தங்களை மூட்டி யேதம
திடும ருந்தொடு சோற்றை யேயிடு விலைமாதர்
சகல மஞ்சன மாட்டி யேமுலை
படவ ளைந்திசை மூட்டி யேவரு
சரச இங்கித நேர்த்தி யாகிய சுழலாலே
சதிமு ழங்கிட வாய்ப்ப ஞைது
மலர உந்தியை வாட்டி யேயிடை
தளர வுங்கணை யாட்டும் வேசியர் உறவாமோ
திகிரி கொண்டிரு ளாக்கி யேயிரு
தமையர் தம்பியர் மூத்த தாதையர்
திலக மைந்தரை யேற்ற சூரரை வெகுவான
சென்ம டங்கலு மாற்றி யேயுடல்
தகர அங்கவர் கூட்டை யேநரி
திருகி யுண்டிட ஆர்த்த கூளிகள் அடர்பூமி
அகடு துஞ்சிட மூட்டு பாரத
முடியஅன்பர்க ளேத்த வேஅரி
அருளு மைந்தர்கள் வாழ்த்து மாயவன் மருகோனே
அமர ரந்தணர் போற்ற வேகிரி
கடல திர்ந்திட நோக்கு மாமயி
லழகொ டும்பழ வூர்க்குள் மேவிய பெருமாளே.

1308. விகட பரிமள ம்ருகமத இமசல
வகிர படிரமு மளவிய களபமு
மட்டித்தி தழ்த்தொடைமு டித்துத்தெ ருத்தலையில்
உலவி யிளைஞர்கள் பொருளுட னுயிர்கவர்
கலவி விதவிய னரிவையர் மருள்வலை
இட்டுத்து வக்கியிடர் பட்டுத்தி யக்கியவர்
விரவு நவமணி முகபட எதிர்பொரு
புரண புளகித இளமுலை யுரமிசை
தைக்கக்கழுத்தொடுகையொக்கப்பிணித்திறுகியன்புகூர

விபுத ரமுதென மதுவென அறுசுவை
அபரி மிதமென இலவிதழ் முறைமுறை
துய்த்துக்க ளித்துநகம் வைத்துப்ப லிற்குறியின்
வரையு முறைசெய்து முனிவரு மனவலி
கரையு மரிசன பரிசன ப்ரியவுடை
தொட்டுக்கு லைத்துநுதல் பொட்டுப்ப டுத்திமதர்
விழிகள் குழைபொர மதிமுகம் வெயர்வெழ
மொழிகள் பதறிட ரதிபதி கலைவழி
கற்றிட்ட புட்குரல்மி டற்றிப்ப யிற்றிமடு வுந்திமூழ்கிப்

புகடு வெகுவித கரணமு மருவிய
வகையின் முகிலென இருளென வனமென
ஒப்பித்த நெய்த்தபல புஷ்பக்கு ழற்சரிய
அமுத நிலைமல ரடிமுதல் முடிகடை
குமுத பதிகலை குறைகலை நிறைகலை
சித்தத்த ழுத்தியனு வர்க்கத்து ருக்கியொரு
பொழுதும் விடலரி தெனுமனு பவமவை
முழுது மொழிவற மருவிய கலவியி
தத்துப்ரி யப்படந டித்துத்து வட்சியினில்
நைந்துசோரப்

புணரு மிதுசிறு சுகமென இகபரம்
உணரு மறிவிலி ப்ரமைதரு திரிமலம்
அற்றுக்க ருத்தொருமை யுற்றுப்பு லத்தலையில்
மறுகு பொறிகழல் நிறுவியெ சிறிதுமெய்
உணர்வு முணர்வற வழுவற வொருஜக

வித்தைக்கு ணத்ரயமும் நிர்த்தத்து வைத்துமறை
புகலு மனுபவ வடிவினை யளவறு
அகில வெளியையு மொளியையு மறிசிவ
தத்வப்ர சித்திதனை முத்திச்சி வக்கடலை
என்றுசேர்வேன்

திகுட திகுகுட திகுகுட திகுகுட
தகுட தகுகுட தகுகுட தகுகுட
திக்குத்தி குத்திகுட தக்குத்த குத்தகுட
டிமிட டிமிமிட டிமிமிட டிமிமிட
டமட டமமட டமமட டமமட
டிட்டிட்டு டிட்டிமிட டட்டட்ட டட்டமட
திகுர்தி திகுதிகு திகுகுர்தி திகுகுர்தி
தகுர்தி தகுதகு தகுகுர்தி தகுகுர்தி
திக்குத்திகுத்திகுர்திதக்குத்தகுத்தகுர்தி என்றுபேரி

திமிலை காடிகை பதலைச லரிதவில்
தமர முரசுகள் குடமுழ வொடுதுடி
சத்தக்க ணப்பறைகள் மெத்தத்தொ னித்ததிர
அசுரர் குலஅரி அமரர்கள் ஜயபதி
குசல பசுபதி குருவென விருதுகள்
ஒத்தத்தி ரட்பலவு முற்றிக்க லிக்கவெழு
சிகர கொடுமுடி கிடுகிடு கிடுவென
மகர சலநிதி மொகுமொகு மொகுவென
எட்டுத்திசைக்களிறுமட்டற்றறப்பிளிற நின்றசேடன்

மகுட சிரதலம் நெறுநெறு நெறுவென
அகில புவனமும் ஹரஹர ஹரவென
நக்ஷத்ர முக்கிவிழ வக்கிட்ட துட்டகுண
நிருதர் தலையற வடிவெனு மலைசொரி
குருதி யருவியின் முழுகிய கழுகுகள்
பக்கப்ப ழுத்தவுடல் செக்கச்சி வத்துவிட
வயிறு சரிகுடல் நரிதின நிணமவை
எயிறு அலகைகள் நெடுகிய குறளிகள்
பக்ஷித்து நிர்த்தமிட ரக்ஷித்த லைப்பரவி உம்பர்வாழ

மடிய அவுணர்கள் குரகத கஜரத
கடக முடைபட வெடிபட எழுகிரி
அற்றுப்ப றக்கவெகு திக்குப்ப டித்துநவ
நதிகள் குழைதர இபபதி மகிழ்வுற
அமர்செய் தயில்கையில் வெயிலெழ மயில்மிசை
அக்குக்கு டக்கொடிசெ ருக்கப்பெ ருக்கமுடன்
வயலி நகருறை சரவண பவகுக
இயலு மிசைகளும் நடனமும் வகைவகை
சத்யப்படிக்கினிதகத்யர்க்குணர்த்தியருள்தம்பிரானே.

**1309.** விடமடை சுவேலை (111-ம் பக்கம் பார்க்க)

**1310.** விடமளவி யரிபரவு விழிகுவிய மொழிபதற
விதறிவளை கலகலென அநுராகம்
விளையம்ருக மதமுகுள முலைபுளக மெழநுதலில்
வியர்வுவர அணிசிதற மதுமாலை
அடரளக மவிழவணி துகிலகல அமுதுபொதி
இதழ்பருகி உருகியரி வையரோடே
அமளிமிசை அமளிபட விரகசல தியில்முழுகி
அவசமுறு கினுமடிகள் மறவேனே
உடலுமுய லகன்முதுகு நெறுநெறென எழுதிமிர
உரகர்பில முடியவொரு பதமோடி
உருவமுது ககனமுக டிடியமதி முடிபெயர
உயரவகி லபுவனம திரவீசிக்
கடககர தலமிலக நடனமிடு மிறைவர்மகிழ்
கருதரிய விதமொடழ குடனும்
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே.

**1311.** விடமு மமுதமு மிளிர்வன இணைவிழி
வனச மலதழல் முழுகிய சரமென
விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல ஒருஞான
விழியின் வழிகெட இருள்வதொ ரிருளென
மொழியு மமுதல உயிர்கவர் வலையென
விழையு மிளநகை தளவல களவென வியனுபித்

தடமு மடுவல படுகுழி என இடை
துடியு மலமத னுருவென வனமுலை
சயில மலகொலை யமனென முலைமிசை புரள்கோவை
தரள மணியல யமன்விடு கயிறென
மகளிர் மகளிரு மலபல வினைகொடு
சமையுமுருவென உணர்வொடுபுணர்வதும் ஒருநாளே
அடவி வனிதையர் தனதிரு பரிபுர
சரண மலரடி மலர்கொடு வழிபட
அசல மிசைவிளை புனமதி லினிதுறை தனிமானும்
அமர ரிவையு மிருபுடை யினும்வர
முகர முகபட கவளத வளகர
அசல மிசைவரு மயிநவ கலவியும் விளையாடும்
கடக புளகித புயகிரி சமுகவி
கடக கசரத துரகத நிசிசரர்
கடக பயிரவ கயிரவ மலர்களும் எரிதீயுங்
கருக ஒளிவிடு தனுபர கவுதம
புனித முநிதொழ அருணையி லறம்வளர்
கருணை உமைதரு சரவண சுரபதி பெருமாளே.

1312. விடமும்வடி வேனு மதனச ரங்களும்
வடுவுநிக ரான மகரநெ டுங்குழை
விரவியுடன் மீளும் விழிகளு மென்புழு கதுதோயும்
ம்ருகமதப டீர பரிமள குங்கும
மணியுமிள நீரும் வடகுல குன்றமும்
வெருவவளர் பார புளகத னங்களும் வெகுகாம
நடனபத நூபு ரமுமுகில் கெஞ்சிட
மலர்சொருகு கேச பாரமுமி லங்கிய
நளினமல ரோதி மதிமுக விம்பமும் அனநேராம்
நடையுமணி மானு மிலவித ழுந்தனு
முழுதுமபி ராம மணியொளி துன்றிய
நகையுமுள மாதர் கலவியி னைந்துரு கிடலாமோ
வடிவுடைய மானு மிகல்கர னுந்திகழ்
எழுவகைம ராம ரமுநிக ரொன்றுமில்
வலியதிறல் வாலி உரமுநெ டுங்கடல் அவையேழும்

மறநிருதர் சேனை முழுதும்மி லங்கைமன்
வகையிரவி போலு மணியும லங்க்ருத
மணிமவுலி யான வொருபதும் விஞ்சிரு பதுதோளும்
அடைவலமு மாள விடுமொரு அம்புடை
தசரதகு மார ரகுகுல புங்கவன்
அருள்புனைமு ராரி மருகவி ளங்கிய மயிலேறி
அடையலர்கள் மாள வொருநிமி டந்தனில்
உலகைவல மாக நொடியினில் வந்துயர்
அழகியசு வாமி மலையில மர்ந்தருள் பெருமாளே.

1313. விடமும் வேலன மலரன விழிகளு
மிரத மேதரு மமுதெனு மொழிகளும்
விரகி னுமெழு மிருதன வகைகளும் இதமாடி
மிகவு மாண்மையு மெழினல முடையவர்
வினையு மாவியு முடனிரு வலையிடை
வெளியிலேபட விசிறிய விஷமிக ளுடன்மேவா
இடரு றுதுணை நினைபவர் துணைகொள
இனிமை போலெழு பிறவியெ னுவரியி
னிடைகெடாதினியிருவினையிழிவினில் இழியாதே
இசையி னுடொடு மிமையவர் முனிவர்கள்
ககன பூபதி யிடர்கெட அருளிய
இறைநினிருபுயமெனஉரைசெய அருள்வாயே
படரு மார்பினி லிருபது புயமொ தா
டரிய மாமணி முடியொளி ரொருபது
படியிலேவிழ வொருகணை தொடுபவ ரிடமாராய்
பரவை யூடெரி பகழியை விடுபவர்
பரவு வார்வினை கெடவரு ளுதவியெ
பரிவு பால்கட லரவணை துயில்பவர் மருகோனே
அடர வேவரு மசுரர்கள் குருதியை
அரக ராவென அலகைகள் பலியுண
அலையும் வேலையும் அலறிட எதிர்பொரு மயில்வீரா
அமர ராதிய ரிடர்பட அடர்தரு
கொடிய தானவர் திரிபுர மெரிசெய்த
அதிகை மாநகர் மருவிய சசிமகள் பெருமாளே.

**1314.** விடமெனமி குத்தவட வனலெனவு யர்த்துரவி
விரிகதிரெ னப்பரவு நிலவாலே
விதனமிக வுற்றுவரு ரதிபதிக டுத்துவிடு
விரைதருவி தட்கமல கணையாலே

அடலமரி யற்றுதிசை யினில்மருவி மிக்கவனல்
அழலொடுகொ தித்துவரு கடைநாளில்
அணுகிநம னெற்றமயல் கொளுமநிலை சித்தமுற
அவசமொட ணைத்தருள வரவேணும்

அடவிதனில் மிக்கபரு வரையவர ளித்ததிரு
அனையமயில் முத்தமணி சுரயானை
அழகியம ணிக்கலச முலைகளில்ம யக்கமுறு
மதிவிரக சித்ரமணி மயில்வீரா

கடதடக ளிற்றுமுக ரிளையவகி ரிக்குமரி
கருணையொட ளித்ததிற முருகோனே
கமலமல ரொத்தவிழி யரிமருக பத்தர்பணி
கழுமலந கர்க்குமர பெருமாளே.

**1315.** விடமென அயிலென அடுவன
நடுவன மிளிர்வன சுழல்விழி
வித்தைக் குப்பக ராப்புச் சற்றிலை என்றுபேசும்
விரகுடை வனிதைய ரணைமிசை
உருகிய வெகுமுக கலவியி
லிச்சைப் பட்டுயிர் தட்டுப் பட்டழு ழன்றுவாடும்
நடலையில் வழிமிக அழிபடு
தமியனை நமன்விடு திரளது
கட்டிச் சிக்கென ஒத்திக் கைக்கொடு கொண்டுபோயே
நரகதில் விடுமெனு மளவினி
லிலகிய நறைகமழ் திருவடி
முத்திக் குட்படு நித்யத் தத்துவம் வந்திடாதோ
இடியென அதிர்குரல் நிசிசரர்
குலபதி இருபது திரள்புய
மற்றுப் பொற்றலை தத்தக் கொத்தொடு நஞ்சுவாளி

எரியெழ முடுகிய சிலையின
ரழுகொழு கியல்சிறு வினைமகள்
பச்சைப் பட்சித னைக்கைப் பற்றிடு மிந்த்ரலோகா
வடவரை இடிபட அலைகடல்
சுவறிட மகவரை பொடிபட
மைக்கட் பெற்றிடு முக்ரக் கட்செவி அஞ்சசூரன்
மணிமுடி சிதறிட அலகைகள்
பலவுடன் வயிரவர் நடமிட
முட்டிப் பொட்டெழ வெட்டிக் குத்திய தம்பிரானே.

1316. விடுங்கைக் கொத்தக டாவுடை யாணிடம்
மடங்கிக் கைச்சிறை யானஅ நேகமும்
விழுங்கப் பட்டற வேயற லோதியர் விழியாலே
விரும்பத் தக்கன போகமு மோகமும்
விளம்பத் தக்கன ஞானமு மானமும்
வெறுஞ்சுத் தச்சல மாய்வெளி யாயுயிர் விடுநாளில்
இடுங்கட் டைக்கிரை யாயடி யேனுடல்
கிடந்திட் டுத்தம ரானவர் கோவென
இடங்கட் டிச்சுடு காடுபு காமுன மனதாலே
இறந்திட் டுப்பெற வேகதி யாயினும்
இருந்திட் டுப்பெற வேமதி யாயினும்
இரண்டிற் றக்கதொ ருதியம் நீதர இசைவாயே
கொடுங்கைப் பட்டம ராமரை மேழுடன்
நடுங்கச் சுக்ரிவ னுடைம ராடிய
குரங்கைச் செற்றும கோததி தூளெழ நிருதேசன்
குலங்கட் பட்டநி சாசரர் கோவென
இலங்கைக் குட்டழ லோனெழ நீடிய
குமண்டைக் குத்திர ராவண னார்முடி அடியோடே
பிடுங்கத் தொட்டச ராதிப னரிதி
ப்ரியங்கொட் டக்கநன் மாமரு காஇயல்
ப்ரபஞ்சத் துக்கொரு பாவல னெனவிருதூதும்
ப்ரசண்டச் சொற்சிவ வேதசி காமணி
ப்ரபந்தத் துக்கொரு நாதச தாசிவ
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய பெருமாளே.

**1317.** விடுமத வேள்வாளியின் விசைபெறு மாலாகல
விழிகொடு வாபோவென உரையாடும்
விரகுட னூருயிர மன்றுடை மாபாவிகள்
ம்ருகமத கோலாகல முலைதோய

அடையவு மாசாபர வசமுறு கோமாளியை
அவனியு மாகாசமும் வசைபேசும்
அசடஅ நாசாரனை அவலனை ஆபாசனை
அடியவ ரோடாள்வதும் ஒருநாளே

வடகுல கோபாலர்த மொருபதி னாருயிரம்
வனிதையர் தோள்தோய்தரும் அபிராம
மரகத நாராயணன் மருமக சோணாசல
மகிபச தாகாலமும் இளையோனே

உடுபதி சாயாபதி சுரபதி வாழ்வுபெற
உலகுய வாரார்கலி வறிதாக
உயரிய மாநாகமு நிருதரு நீறுய்விழ
ஒருதனி வேலைவிய பெருமாளே.

**1318.** விட்ட புழுகுபனி நீர்கத் தூரி
மொய்த்த பரிமளப டீரச் சேறு
மிக்க முலையைவிலை கூறிக் காசுக் களவேதான்
மெத்த விரியுமலர் சேர்கற் பூர
மெத்தை மிசைகலவி யாசைப் பாடு
விற்கு மகளிர்சுரு ளோலைக் கோலக் குழையோடே

முட்டி இலகுகுமிழ் தாவிக் காமன்
விட்ட பகழிதனை யோடிச் சாடி
மொய்க்கு மளியதனை வேலைச் சேலைக் கயல்மீனை
முக்கி யமனையட வீறிச் சீறு
மைக்கண் விழிவலையி லேபட் டோடி
முட்ட வினையன்மரு ளாகிப் போகக் கடவேனோ

செட்டி எனுமொர்திரு நாமக் கார
வெற்றி அயில்தொடுப்ர தாபக் கார
திக்கை உலகைவல மாகப் போகிக் கணமீளும்

சித்ர குலகலப வாசிக் கார
தத்து மகாசல கோபக் கார
செச்சை புனையும்மணி வாளக் கோலத் திருமார்பா

துட்ட நிருதர்பதி சூறைக் கார
செப்பு மமரர்பதி காவற் கார
துப்பு முகபடக போலத் தானக் களிறாரும்

சொர்க்க கனதளவி நோதக் கார
முத்தி விதரணவு தாரக் கார
சுத்த மறவர்மகள் வேலைக் காரப் பெருமாளே.

1319. விதமி சைந்தினி தாமலர் மாலைகள்
குழல ணிந்தநு ராகமு மேமொழி
விதர ணஞ்சொலி வீறுக ளேமொழி மகிழ்வாக

விரிகு ரும்பைக ளாமென வீறிய
கனக சம்ப்ரம மேருவ தாமதி
விரகி முங்கிய மாமுலை யாலெதிர் அமராடி

இதமி சைந்தன மாமென வேயின
நடைந டந்தவர் வீதியி லேவர
எவர்க ளுஞ்சித மால்கொளு மாதர்கண் வலையாலே

எனது சிந்தையும் வாடிவி டாவகை
அருள்பு ரிந்தழ காகிய தாமரை
இருப தங்களி னாலெனை யாள்வதும் ஒருநாளே

மதமி சைந்தெதிர் தாரக சூரனை
உடலி ரண்டுகு றுய்விழ வேசின
வடிவு தங்கிய வேலினை யேவிய முருகோனே

மதுர இன்சொலி மாதுமை நாரணி
கவுரி அம்பிகை யாமளை பார்வதி
மவுன சுந்தரி காரணி யோகினி சிறியோனே

பதமி சைந்தெழு லோகமு மேவலம்
நொடியில் வந்திடு மாமயில் மீதொரு
பவனி வந்தக்ரு பாகர சேவக விறல்வீரா

பருதி யின்பிரபை கோடிய தாமெனும்
 வடிவு கொண்டருள் காசியின் மீறிய
 பழநி யங்கிரி மீதினில் மேவிய பெருமாளே.

1320. விதிபோ லுமுந்த விழியா லுமிந்து
 நுதலா லுமொன்றி இளைஞோர்தம்
 விரிவான சிந்தை உருவாகி நொந்து
 விறல்வேறு சிந்தை வினையாலே
 இதமாகி இன்ப மதுபோத உண்டுள்
 இனிதாகு மென்று மொழிமாதர்
 இருளாய துன்ப மருள்மாயம் வந்து
 எனையீர்வ தென்றும் ஒழியாதோ
 மதிசூடி அண்டர் பதிவாழ மண்டி
 வருமால முண்டு விடையேறி
 மறவாத சிந்தை அடியார்கள் பங்கில்
 வருதேவ சம்பு தருபாலா
 அதிமாய மொன்றி வருசூர் பொன்ற
 அயில்வேல்கொ டன்று பொரும்வீரா
 அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
 அலைவாயு கந்த பெருமாளே.

1321. விதிய தாகவெ பருவ மாதரார்
 விரகி லேமனந் தடுமாறி
 விவர மானதொ ரறிவு மாறியே
 வினையி லேஅலைந் திடுமூடன்
 முதிய மாதமி ழிசைய தாகவே
 மொழிசெய் தேநினைந் திடுமாறு
 முறைமை யாகநி னடிகள் மேவவே
 முழுதுமெய்ஞ் ஞானமென் றருள்வாயே
 சதிய தாகிய அசுரர் மாமுடி
 தாணி மீதுகுஞ் சமாடிச்
 சகல லோகமும் வலம தாகியே
 தழைய வேவருங் கழல்வீரா

அதிக வானவர் கவரி வீசவே
அரிய *கோபுரந் தனில்மேவி
அருணை மீதினில் மயிலி லேறியே
அழக தாய்வரும் பெருமாளே.

**1322.** விந்ததி னூறி வந்தது காயம்
வெந்தது கோடி இனிமேலோ
விண்டுவி டாம லுன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும்
வந்துவி நாச முன்கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி
வன்பத மேறி என்களை யாற
வந்தருள் பாத மலர்தாராய்
எந்தனு ளேக செஞ்சுட ராகி
என் கணி லாடு தழல்வேணி
எந்தையர் தேடு மன்பர்ச காயர்
எங்கள்சு வாமி அருள்பாலா
சுந்தர ஞான மென்குற மாது
தன்றிரு மார்பி லணைவோனே
சுந்தர மான செந்திலில் மேவு
கந்தசு ரேசர் பெருமாளே.

**1323.** விந்துபே தித்தவடி வங்களா யெத்திசையு
மின்சரா சர்க்குலமும் வந்துலாவி
விண்டுபோய் விட்டவுடல் சிந்தைதா னுற்றறியு
மிஞ்சிநீ விட்டவடி வங்களாலே
வந்துநா யிற்கடைய னுந்துஞா னப்பதவி
வந்துதா இக்கணமெ என்றுகூற
மைந்தர்தா விப்புகழ தந்தைதா யுற்றுருகி
வந்துசே யைத்தழுவல் சிந்தியாதோ
அந்தகா ரத்திலிடி என்பவாய் விட்டுவரு
மங்கிபார் வைப்பறையர் மங்கிமாள

---

*தோகையின் மிசையேறி அருணைமாநகர் தெருவின் மீதிலே அழக தாய்வரும் பெருமாளே.

அங்கைவேல் விட்டருளி இந்த்ரலோ கத்தின்மகி
    ழண்டரே றக்கிருபை கொண்டபாலா
எந்தனு விக்குதவு சந்த்ரசேர் வைச்சடைய
    ரெந்தைபா கத்துறையும் அந்தமாது
எங்குமாய் நிற்குமொரு கந்தனூர் சத்திபுக
    ழெந்தைபூ சித்துமகிழ் தம்பிரானே.

**1324.** விந்துப் புளகித இன்புற் றுருகிட
சிந்திக் கருவினி லுண்பச் சிறுதுளி
    விரித்த கமலமேல் தரித்து ளொருசுழி
    யிரத்த குளிகையொ டுதித்து வளர்மதி
விண்டுற் றருள்பதி கண்டுற் றருள்கொடு
மிண்டிச் செயலினி ரம்பித் துருவொடு
    மெழுக்கி லுருவென வலித்து எழுமதி
    கழித்து வயிறுகு டமொப்ப வொருபதில்
விஞ்சைச் செயல்கொடு கஞ்சச் சலவழி
வந்துப் புவிமிசை பண்டைச் செயல்கொடு
    விழுப்பொ டுடல்தலை அழுக்கு மலமொடு
    கவிழ்த்து விழுதழு துகுப்ப அனைவரு மருள்கூர

மென்பற் றுருகிமு கந்திட் டணைமுலை
யுண்கத் தரகொடு நுங்கிச் சுவைபெற
    வளத்தொ டளமல சலத்தொ டுழைகிடை
    துடித்து தவழ்நடை வளர்த்தி யெனதகு
வெண்டைப் பரிபுர தண்டைச் சரவட
முங்கட் டியல்முடி பண்பித் தியல்கொடு
    விதித்த முறைபடி படித்து மயல்கொள
    தெருக்க ளினில்வரு விருப்ப இளமுலை
விந்தைக் கயல்விழி கொண்டற் குழல்மதி
துண்டக் கரவளை கொஞ்சக் குயில்மொழி
    விடுப்ப துதைகலை நெகிழ்த்தி மயிலென
    நடித்த வர்கள்மயல் பிடித்தி டவர்வரு வழியேபோய்ச்

சந்தித் துறவொடு பஞ்சிட் டணைமிசை
கொஞ்சிப் பலபல விஞ்சைச் சரசமொ

டணைத்து மலரிதழ் கடித்து இருகா
மடர்த்த குவிமுலை யழுத்தி மிடறுறு
சங்குத் தொனியொடு பொங்கக் குழல்மலர்
சிந்தக் கொடியிடை தங்கிச் சுழலிட
சரத்தொ டிகள்வெயி லெறிப்ப மதிநுதல்
வியர்ப்ப பரிபுர மொலிப்ப எழுமத
சம்பத் திதுசெய வின்பத் திருள்கொடு
வம்பிற் பொருள்கள்வ ழங்கிற் றிதுபிணை
சலித்து வெகுதுய ரிளைப்பொ டுடல்பிணி
பிடித்தி டணைவரும் நகைப்ப கருமயிர் நரைமேவித்

தன்கைத் தடிகொடு குந்திக் கவியென
உந்திக் கசனம றந்திட் டுளமிக
சலித்து வுடல்சல மிகுத்து மதிசெவி
விழிப்பு மறைபட கிடத்தி மனையவள்
சம்பத் துறைமுறை யண்டைக் கொளுகையில்
சண்டக் கருநம னண்டிக் கொளுகயி
றெடுத்து விசைகொடு பிடித்து உயிர்தனை
பதைப்ப தனிவழி யடித்து கொடுசெல
சந்தித் தவரவர் பங்குக் கழுதழி
ரங்கப் பிணமெடு மென்றிட் டறைபறை
தடிப்ப சுடலையி லிறக்கி விறகொடு
கொளுத்தி யொருபிடி பொடிக்கு மிலையெனும்
உடலாமோ

திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
என்பத் துடிகள்த வுண்டைக் கிடுபிடி
பம்பைச் சலிகைகள் சங்கப் பறைவளை
திகுர்த்த திகுதிகு டுடுட்டு டுடுடுடு
டிடிக்கு நிகரென வுடுக்கை முரசொடு
செம்பொற் குடமுழ வுந்தப் புடன்மணி
பொங்கச் சுரர்மலர் சிந்தப் பதமிசை

செழித்த மறைசிலர் துதிப்ப முனிவர்கள்
களித்து வகைமனி முழக்க அசுரர்கள் களமீதே

சிந்திக் குருதிக ளண்டச் சுவரகம்
ரம்பக் கிரியொடு பொங்கிப் பெருகியெ
சிவப்ப அதில்கரி மதர்த்த புரவிகள்
சிரத்தொ டிரதமு மிதப்ப நிணமொடு
செம்புட் கழுகுக ளுண்பத் தலைகள்த
தும்பக் கருடன டங்கொட் டிடகொடி
மறைப்ப நரிகண மிகுப்ப குறளிகள்
நடிக்க இருள்மலை கொளுத்தி யலைகடல்
செம்பொற் பவளமு டங்கிக் கமர்விட
வெந்திட் டிகமலை விண்டுத் துகள்பட
சுமக்கு முரகனு முழக்கி விடபட
மடைத்த சதமுடி நடுக்கி யலைபட விடும்வேலா

தொந்தத் தொகுகுட என்பக் கழலொலி
பொங்கப் பரிபுர செம்பொற் பதமணி
சுழற்றி நடமிடு நிருத்த ரயன்முடி
காத்த ரரிகரி உரித்த கடவுள்மெய்
தொண்டர்க் கருள்பவர் வெந்தத் துகளணி
கங்கைப் பனிமதி கொன்றைச் சடையினர்
தொடுத்த மதனுரு பொடித்த விழியினர்
மிகுத்த புரமதை எரித்த நகையினர்
தும்பைத் தொடையினர் கண்டக் கறையினர்
தொந்திக் கடவுளை தந்திட் டவரிட
சுகத்தி மழுவுழை காத்தி மரகத
நிறத்தி முயலக பதத்தி அருளிய முருகோனே

துண்டச் சசிநுதல் சம்பைக் கொடியிடை
ரம்பைக் கரசியெ னும்பற் றருமகள்
சுகிப்ப மணவறை களிக்க அணையறு
முகத்தொ டுறமயல் செழித்த திருபுய
செம்பொற் காரகம லம்பத் திருதல
மம்பொற் சசியெழ சந்தப் பலபடை

செறித்த கதிர்முடி கடப்ப மலர்தொடை
சிறப்பொ டொருகுடில் மருத்து வனமகள்
தொந்தப் புணர்செயல் கண்டுற் றடியெனி
டைஞ்சற் பொடிபட முன்புற் றருளயில்
தொடுத்து மிளநகை பரப்பி மயில்மிசை
நடித்து அழல்கிரி பதிக்குள் மருவிய பெருமாளே.

**1325.** விந்தொடும யங்கிநாளும் வந்ததும றந்துபேசி
வெந்துடலி றந்துபோன தளவேதோ
வெண்கலமு டைந்துகூடும் மண்கலமு டைந்துதாளும்
என்கலமு டைந்துபோகில் உதவாதென்
றந்தரமெ றிந்துபோவ தென்பதைய றிந்துநாயென்
அண்டினனு ணர்ந்துபாருன் னடியாரோ
டம்பலமு றைந்துவாழ்க உன்சரண்ம கிழ்ந்துவேக
மண்டர்கள்பு கழ்ந்துபாட வரவேணும்
திந்திமிதி மிந்தி* ச * தும்பகூர
திண்கடலெ ரிந்துபோக விடும்வேலா
செந்திருவ னந்தகோடி பங்கயம ரங்கள்போட
செஞ்சடைய சைந்துஆடும் உமைபாகன்
எந்தையசு வந்தரீக சுந்தரம கிழ்ந்துஞான
எம்புலிச ரங்கண்மேவு முருகோனே
எண்டிசைசு ழன்றுளாட சந்திரமு தைந்தபாதம்
எண்கணில்ந டங்கொள்ஞானப் பெருமாளே.

**1326.** விரகற நோக்கியு முருகியும் வாழ்த்தியும்
விழிபுனல் தேக்கிட அன்புமேன்மேல்
மிகவுமி ராப்பகல் பிறிதுப ராக்கற
விழைவுகு ராப்புனை யுங்குமார
முருகஷ டாக்ஷர சரவண கார்த்திகை
முலைநுகர் பார்த்திப என்றுபாடி
மொழிகுழ றாத்தொழு தழுதழு தாட்பட
முழுதும லாப்பொருள் தந்திடாயோ
பரகதி காட்டிய விரகசி லோச்சய
பரமப ராக்ரம சம்பாரி

படவிழி யாற்பொரு பசுபதி போற்றிய
பகவதி பார்ப்பதி தந்தவாழ்வே
இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட
எழுகிரி யார்ப்பெழ வென்றவேலா
இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே.

1327. விரகொடு வினைசங் கடமது தருவெம்
பிணிகொடு விழிவெங் கனல்போல
வெறிகொடு சமனின் றுயிர்கொளு நெறியின்
விதிவழி வெருள்வந் துறுபோதிற்
கரவட மதுபொங் கிடுமன மொடுமங்
கையருற வினர்கண் புனல்பாயுங்
கலகமும் வருமுன் குலவினை களையுங்
கழல்தொழு மியல்தந் தருள்வாயே
பரவிடு மவர்சிந் தையர்விட முமிழும்
படவர வணைகண் டுயில்மாலும்
பழமறை மொழிபங் கயனிமை யவர்தம்
பயமற விடமுண் டெருதேறி
அரவொடு மதியம் பொதிசடை மிசைகங்
கையுமுற அனலங் கையில்மேவ
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையில் மருவும் பெருமாளே.

1328. விரித்த பைங்குழ லொளிர்மல ரளிதன
தனத்த னந்தன தனதன வெனவொலி
விரிப்ப வண்கயல் விழியுறை குழையொடு மலைபாய
மிகுத்த வண்சிலை நுதல்மிசை திலதமொ
டசைத்த பொன்குழை அழகெழ முகவொளி
வெயிற்ப ரந்திட நகையித ழமுதலர் வரிபோதத்
தரித்த தந்திரி மறிபுய மிசைபல
பணிக்கி லங்கிய பரிமள குவடிணை
தனக்கொ ழுந்துகள் ததைபடு கொடியிடை படுசேலை

தரித்த சுந்தர மிகவடர் பரிபுர
பதச்சி லம்பொடு நடமிடு கணிகையர்
சழக்கர்விஞ்சையர்மயல்களின்முழுகுவ தொழியாதோ

உரித்த வெங்கய மறியொடு புலிகலை
தரித்த சங்கரர் மதிநதி சடையினர்
ஒருத்தி பங்கின ரவர்பணி குருபர முருகோனே

உவட்டி வந்திடு மவுணரொ டெழுகடல்
குவட்டை யும்பொடி படசத முடிவுற
உழைத்த இந்திரர் பிரமனு மகிழ்வுற விடும்வேலா

வரித்த ரந்துள வணிதிரு மருவிய
உரத்த பங்கயர் மரகத மழகிய
வணத்த ரம்பர முறவிடு கணையினர் மருகோனே

வனத்தில் வந்தொரு பழையவ னெனவொரு
குறத்தி மென்புன மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனிலமர் பெருமாளே.

1329. விரைசொரியு ம்ருகமதமு மலரும் வாய்த்திலகு
விரிகுழலு மவிழநறு மெழுகு கோட்டுமுலை
மிசையில்வரு பகலொளியை வெருவ வோட்டுமணி
வகையாரம்

விடுதொடைகள் நகநுதியி லறவும் வாய்த்தொளிர
விழிசெருக மொழிபதற அமுது தேக்கியகை
விதறிவளை கலகலென அழகு மேற்பொழிய
அலர்மேவும்

இருசரண பரிபுரசு ருதிக ளார்க்கவச
மிலகுகடல் கரைபுரள இனிமை கூட்டியுள
மிதம்விளைய இருவரொரு மளவு காட்டரிய அநுராகத்

திடைமுழுகி யெனதுமன தழியு நாட்களினு
மிருசரண இயலும்வினை எறியும் வேற்கரமு
மெழுதரியதிருமுகமு மருளு மேத்தும்வகை
தரவேணும்

அரிபிரம ரடிவருட உததி கோத்தலற
அடல்வடவை அனலுமிழ அலகை கூட்டமிட
அணிநிணமு மலைபெருக அறையும் வாச்சியமும்
அகலாது

அடல்கழுகு கொடிகெருட னிடைவி டாக்கணமு
மறுகுறளு மெறிகுருதி நதியின் மேற்பரவ
அருணரண முகவயிர வர்களு மார்ப்பரவம் இடநாளும்

பரவுநிசி சரர்முடிகள் படியின் மேற்குவிய
பவுரிகொடு திரியவரை பலவும் வேர்ப்பறிய
பகர்வரிய ககனமுக டிடிய வேட்டைவரு மயில்வீரா

படருநெறி சடையுடைய இறைவர் கேட்குரிய
பழையமறை தருமவுன வழியை ஆர்க்குமொரு
பரமகுரு பரனெனவு மறிவு காட்டவல பெருமாளே.

**1330.** விரைமருவு மலர ணிந்த
கரியபுரி குழல்ச ரிந்து
விழவதன மதிவி ளங்க அதிமோக

விழிபுரள முலைகு லுங்க
மொழிகுழற அணைபு குந்து
விரகமயல் புரியு மின்ப மடவார்பால்

இரவுபக லணுகி நெஞ்ச
மறிவழிய உருகு மந்த
இருளகல உனது தண்டை அணிபாதம்

எனதுதலை மிசைய ணிந்து
அழுதழுது னருள்வி ரும்பி
இனியபுகழ் தனைவி ளம்ப அருள்தாராய்

அரவில்விழி வளர்மு குந்த
னலர்கமல மலர்ம டந்தை
அழகினொடு தழுவு கொண்டல் மருகோனே

அடலசுர ருடல்பி ளந்து
நிணமதனில் முழுகி அண்ட
அமரர்சிறை விடுப்ர சண்ட வடிவேலா

பரவைவரு விடம ருந்து
மிடறுடைய கடவுள் கங்கை
படர்சடையர் விடைய ரன்பர் உளமேவும்
பரமரரு ளியக டம்ப
முருகஅறு முகவ கந்த
பழநிமலை தனில மர்ந்த பெருமாளே.

**1331.** விலக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த ஆடையு மணிப்பூணு மாகவெ
மினுக்கு மாதர்க ளிடைக்காம மூழ்கியெ மயலூறி
மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல
வெறுப்பதாகியெஉழைத்தேவிடாய்படுகொடியேனைக்
கலக்க மாகவெ மலக்கூடி லேமிகு
பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை
கவிக்குளாய்சொலிகடைத்தேறவேசெயும்ஒருவாழ்வே
கதிக்கு நாயக உனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை அருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள் தரவேணும்
மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ் தருவேளே
வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுநி இடைக்காடர் கீரனும்
வகுத்த பாவுறு பொருட்கோல மாய்வரு முருகோனே
நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கொ ணாமலை தலத்தாரு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில் வருவோனே
நிகழ்த்து மேழ்பவ கடற்சூறை யாகவெ
எடுத்த வேல்கொடு பொடித்தூள தாஎறி
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமாளே.

**1332.** விலையறுக்கவு முலைமறைக்கவு
மணந்துன் றுஞ் செழுந்தார்
புனைமுகிற்குழ றனையவிழ்க்கவும்

விடங்கஞ்சஞ் சாஞ்சேர்
விழிவெருட்டவு மொழிபுரட்டவு
நினைந்தொன் றுஞ் சிலம்பார் அரியபூணுடனே
வெளியினிற்கவும் வலியமுட்டமை
எதிர்ந்தும்பின் தொடர்ந்தே
இலைசுணப்பொடி பிளவளித்திடு
திரும்பும்பண் பான்றே
எனவுரைத்தவர் தமைவரப்பணி
வுடன்கொண் டன்புடன்போய் சயனபாயலிலே
கலைநெகிழ்க்கவு மயல்விளைக்கவும்
நயங்கொண்டங் கிருந்தே
அணுகியிட்டுள பொருள்பறித்தற
முனிந்துங்கண் சிவந்தே
கலகமிட்டென மிகநடித்தபின்
வருந்தொந்தங் கடந்தார் புதியபேருடனே
கதைகள்செப்பவு மெனதுபுத்திகள்
மனங்கொன் றுந் துலங்கா
மனைதனிற்சிறு பொழுதிருக்கினும்
நினைந்துங்கொண் டிருந்தே
கடிமலர்ப்பத மணுகுதற்கறி
விலன்பங்கன் பெரும்பா தகனைநீயருள்வாய்
சிலைகணைக்கொடு மிகநடத்தென
தனந்தந் தனந்தா
திரிபுரத்தெரி புகநகைத்தருள்
சிவன்பண்டங் கிருந்தே
மலர்வனப்பிர மனைநடுத்தலை
அரிந்துங்கொண் டிரந்தோன் அருளுமாமுருகா
செருவிடத்தலை களையுறுக்கிய
தினந்தொந்தொந் தினந்தோ
மெனவுடுக்கைகள் மணிகளப்பறை
டகுண்டங்குண் டகுண்டா

டிகுகுடிக்குகு டிகுகுடிக்குகு
டிகுண்டிங்குண் டிகுண்டீ எனவிராவணனீள்
மலையெனத்திகழ் முடிகள்பத்தையு
மிரண்டஞ்சொன் பதொன்றேய்
பணைபுயத்தையு மொருவகைப்பட
வெகுண்டம்பொன் றெறிந்தோன்
மகன்மைத்துன னசுரரைக்குடல்
தொளைந்தங்கம் பிளந்தேமயிலின்மேல்வருவாய்
வயல்முதுக்கய லினமதர்த்தெழு
வரப்பின்கண் புரண்டே
பெருதடத்திடை செலவுநித்திலம்
நிறைந்தெங்குஞ் சிறந்தே
வரிசைபெற்றுயர் *தணிமலைப்பதி
புரந்தென்பங் கிருந்தாய் இளையவாபெருமானே.

**1333.** விழியால் மருட்டி நின்று முலைதூ சகற்றி மண்டு
விரகா னலத்த ழுந்த நகையாடி
விலையா கமிக்க செம்பொன் தரவே பரப்பி வஞ்ச
விளையா டலுக்கி சைந்து சிலநாள்மேல்
மொழியா தசொற்கள் வந்து சிலுகா கிவிட்ட தொந்த
முழுமா யையிற்பி ணங்கள் வசமாகி
முடியா துபொற்ச தங்கை தருகீ தவெட்சி துன்று
முதிரா தநற்ப தங்கள் தருவாயே
பொழிகார் முகிற்கி ணைந்த யமரா ஜனுட்க அன்று
பொருதா ளெடுத்த தந்தை மகிழ்வோனே
புருகூ தனுட்கு ளிர்ந்த கனகா புரிப்ர சண்ட
புனிதா ம்ருகக்க ரும்பு புணர்மார்பா
செழுவா ரிசத்தி லொன்று முதுவே தன்வெட்க அன்று
திருவாய் மைசெப்பி நின்ற முருகோனே
திரளா மணிக்கு லங்கள் அருணோ தயத்தை வென்ற
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே.

*தமனியப்பதி இடங்கொண்டின் புறஞ்சேர் இளையநாயகனே.

1334. விழுதா தெனவே கருதா துடலை
வினைசேர் வதுவே புரிபாவி
விருதா வினிலே உலகா யதமே
விடவே மடவார் மயலாலே
அழுதா கெடவே அவமா கிடநா
ளடைவே கழியா துணையோதி
அலர்தா ளடியே னுறவாய் மருவோ
ரழியா வரமே தருவாயே
தொழுதார் வினைவே ரடியோ டறவே
துகள்தீர் பரமே தருதேவா
சூரர்பூ பதியே கருணா லயனே
சுகிர்தா அடியார் பெருவாழ்வே
எழுதா மறைமா முடிவே வடிவே
லிறைவா எனையா ளுடையோனே
இறைவா எதுவா வதுதா தனையே
னிணைநா கையில்வாழ் பெருமாளே.

1335. விழையுமனி தரையுமுனி வரையுமவ ருயிர்துணிய
வெட்டிப்பி ளந்துளம் பிட்டுப்ப றிந்திடுஞ்
செங்கண்வேலும்
விரையளக முகிலுமிள நகையும்ருக மதகனவி
சித்ரத்த னங்களுந் தித்தித்த தொண்டையும்
புண்டரீகச்
சுழிமடுவு மிடையுமழ கியமகளிர் தருகலவி
சுட்டித்தி ரிந்திஙன் தட்டுப்ப டுங்கொடும்
பங்கவாழ்வும்
தொலைவில்பிற வியுமகல ஒருமவுன பரமசுக
சுத்தப்பெ ரும்பதஞ் சித்திக்க அன்புடன்
சிந்தியாதோ
எழுதரிய அறுமுகமு மணிநுதலும் வயிரமிடை
இட்டுச்ச மைந்தசெஞ் சுட்டிக்க லன்களுந்
துங்கநீள்பன்

னிருகருணை விழிமலரு மிலகுபதி னிருகுழையும்
ரத்நக்கு தம்பையும் பத்மக்க ரங்களுஞ்
செம்பொனூலும்
மொழிபுகழு முடைமணியு மரைவடமு மடியிணையு
முத்தச்ச தங்கையுஞ் சித்ரச்சி கண்டியுஞ்
செங்கைவேலும்
முழுதுமழ கியகுமர கிரிகுமரி உடனுருகு
முக்கட்சி வன்பெறுஞ் சற்புத்ர வும்பர்தந் தம்பிரானே.

**1336.** விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூறக்
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ
மறிமானு கந்த இறையோன்ம கிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா
மலைமார்பு சிந்த அலைவேலை அஞ்ச
வடிவேலெ றிந்த அதிதீரா
அறிவால றிந்து னிருதாளி றைஞ்சும்
அடியாரி டைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே.

**1337.** வினைக்கின மாகுந் தனத்தினர் வேளம்
பினுக்கெதி ராகும் விழிமாதர்
மிகப்பல மாயந் தனிற்புகு தாவெஞ்
சமத்துறை போய்வெந் துயர்மூழ்கிக்
கனத்தவி சாரம் பிறப்படி யாகுங்
கருக்குழி தோயுந் துயர்தீரக்
கலைப்புல வோர்பண் புடைத்திரி போதுன்
கழற்புக ழோதுங் கலைதாராய்.

புனத்திடை போய்வெஞ் சிலைக்குற வோர்வஞ்
சியைப்புணர் வாகம் புயவேளே
பொருப்பிரு கூறும் படக்கடல் தானும்
பொருக்கெழ வானும் புகைமூளச்
சினத்தொடு சூரன் கனத்திணி மார்பந்
திறக்கம ராடுந் திறல்வேலா
திருப்புக ழோதுங் கருத்தினர் சேருந்
திருத்தணி வாழும் பெருமாளே.

1333. வினைத்திரளுக் கிருப்பெனவித்
தகப்படவிற் சலப்பிலமிட்
டிசைக்குமிடற் குடிற்கிடைபுக் கிடுமாய
விளைப்பகுதிப் பயப்பளவுற்
றமைத்தபெனக் கருத்தமைவிற்
சகப்பொருள்மெய்க் குறப்பருகக் கருதாதே
எனக்கெதிரொப் பிசைப்பவரெத்
தலத்துளரெச் சமர்த்தரெனப்
புறத்துறையிட் டிகழ்ச்சியினுற் றிளையாதுன்
எழிற்கமலத் திணைக்கழலைத்
தமிழ்ச்சுவையிட் டிறப்பறஎய்த்
திடக்கருணைத் திறத்தெனைவைத் தருள்வாயே
சினத்தைமிகுத் தனைத்துலகத்
திசைக்கருதிக் கடற்பரவித்
திடத்தொடதிர்த் தெதிர்த்திடலுற் றிடுசூரன்
சிரத்துடன்மற் புயத்தகலத்
தினிற்குருதிக் கடற்பெருகச்
சிறப்புமிகத் திறத்தொடுகைத் திடும்வேலா
கனத்தமருப் பினக்கரிநற்
கலைத்திரள்கற் புடைக்கிளியுட்
கருத்துருகத் தினைக்குளிசைத் திசைபாடிக்
களிக்குதலைச் சிறுக்குயிலைக்
கதித்தமறக் குலப்பதியிற்
களிப்பொடுகைப் பிடித்தமணப் பெருமாளே.

1339. வீங்கு பச்சிள நீர்போல் மாமுலை
சேர்ந்த ணைத்தெதிர் மார்பூ டேபொர
வேண்டு சர்க்கரை பால்தே னேரிதழ் உண்டுதோயா
வேண்டு மைத்துகில் வேறாய் மோகன
வாஞ்சை யிற்களி கூரா வாள்விழி
மேம்ப டக்குழை மீதே மோதிட வண்டிராசி
ஓங்கு மைக்குழல் சாதா வீறென
வீந்து புட்குரல் கூவா வேள்கலை
யோர்ந்தி டப்பல க்ரீடா பேதமு யங்குமாகா
ஊண்பு ணர்ச்சியு மாயா வாதனை
தீர்ந்து னக்கெளி தாயே மாதவ
மூன்று தற்குமெய்ஞ் ஞான சாரம்வ ழங்குவாயே
தாங்கும் நிற்சரர் சேனை நீதரு
ணங்கு ருத்ரகு மாரா கோஷண
தாண்ட வற்கருள் கேகீ வாகன துங்கவீரா
சார்ங்க கைத்தல மாலோ டீசம
கேந்த்ரர் மெச்சிய வேலா போதக
சாந்த வித்தக ஸ்வாமீ நீபவ லங்கன்மார்பா
பூங்கு ளத்திடை தாரா வோடன
மேய்ந்த செய்ப்பதி நாதா மாமலை
போன்ற விக்ரக சூரா ரீபகி ரண்டரூபா
போந்த பத்தர்போ லாநோய் போயிட
வேண்ட நுக்ரக போதா மேவிய
பூந்து ருத்தியில் வாழ்வே தேவர்கள் தம்பிரானே.

1340. வீணையிசை கோட்டி ஆலமிட றாட்டு
விரமுனை ஈட்டி விழியார்தம்
வேதனையில் நாட்ட மாகியிடர் பாட்டில்
வீழுமயல் தீட்டி உழலாதே
ஆணியுள வீட்டை மேவியுள மாட்டை
ஆவலுட னீட்டி அழியாதே
ஆவியுறை கூட்டில் ஞானமறை ஊட்டி
ஆனநிலை காட்டி அருள்வாயே

கேணியுற வேட்ட ஞானநெறி வேட்டர்
கேள்சுருதி நாட்டில் உறைவோனே
கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு
கீரரியல் கேட்ட க்ருபைவேளே
சேணினுயர் காட்டில் வாழுமற வாட்டி
சீதவிரு கோட்டில் அணைவோனே
சீறவுணர் நாட்டி லாரவழல் மூட்டி
தேவர்சிறை மீட்ட பெருமாளே.

**1341.** வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்
வேல்விழியி னால்ம யங்கி புவிமீதே
வீசுகையி னாலி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்
வேலைசெய்து மால்மி குந்து விரகாகிப்
பாரவச மான வங்க ணீடுபெருநாள் போன பின்பு
பாதகனு மாகி நின்று பதையாமல்
பாகம்வர மேவ அன்பு நீபமலர் சூடு தண்டை
பாதமலர் நாடி யென்று பணிவேனோ
பூரணம தான திங்கள் சூடுமர னாரி டங்கொள்
பூவையரு ளால்வ ளர்ந்த முருகோனே
பூவுலகெ லாம டங்க ஓரடியி னால ளந்த
மாயன்மகிழ் வாக வந்த மருகோனே
சூரர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து
தூள்கள்பட நீறு கண்ட வடிவேலா
சோலைதனி லேப றந்து லாவுமயி லேறி வந்து
சோலைமலை மேல மர்ந்த பெருமாளே.

**1342.** வீறுபுழு கானபணி நீர்கள்மலர் தோயல்விடு
மேருகிரி யானகொடு தனபார
மீதுபுர ளாபரண சோதிவித மானநகை
மேகமனு காடுகடல் இருள்மேவி
நாறுமலர் வாசமயிர் நூலிடைய தேதுவள
நாணமழி வார்களுடன் உறவாடி
நாடியது வேகதியெ னாசுழனு மோடனைநின்
ஞானசிவ மானபதம் அருள்வாயே

கூறுமடி யார்கள்வினை நீறுபட வேஅரிய
கோலமயி லானபதம் அருள்வோனே
கூடவர னோடுநட மாடரிய காளியருள்
கூருசிவ காமியுமை அருள்பாலா
ஆறுமுக மானநதி பாலகுற மாதுதன
மாரவிளை யாடிமணம் உறுவோனே
ஆதிரகு ராமசெய மாலின்மரு காபெரிய
ஆதியரு ணபுரியில் பெருமாளே.

**1343.** வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில்மாலை
மின்கே சந்தா னென்றே கொண்டார்
மென்றோ ளொன்றப் பொருள்தேடி
வங்கா ளஞ்சோ னஞ்சீ னம்போய்
வன்பே துன்பப் படலாமோ
மைந்தா ருந்தோள் மைந்தா அந்தா
வந்தே இந்தப் பொழுதாள்வாய்
கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்றுள் கொங்கைக் கினியோனே
குன்றோ டுஞ்சூழ் அம்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப் பொருவோனே
கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே உம்பர்க் கொருநாதா
கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா செந்திற் பெருமாளே.

**1344.** வெஞ்ச ரோருக மோகடு நஞ்ச மோகய லோநெடு
வின்ப சாகர மோவடு வகிரோமுன்
வெந்து போனபு ராதன சம்ப ராரிபு ராரியை
வென்ற சாயக மோகரு விளையோகண்
தஞ்ச மோயம தூதுவர் நெஞ்ச மோவெனு மாமத
சங்க மாதர்ப யோதர மதில்மூழ்கு
சங்கை யோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்டை சேர்கழ லீவது மொருநாளே

பஞ்ச பாதக தாருக தண்டனீறெழ வானவர்
பண்டு போலம ராவதி குடியேறப்
பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேயென மால்வரை
பங்க நீறெழ வேல்விடும் இளையோனே
செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாதவி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே
செண்ப காடவி நீடிய துங்க மாமதில் சூழ்தரு
செந்தில் மாநகர் மேவிய பெருமாளே.

**1345.** வெடித்த வார்குழல் விரித்து வேல்விழி
விழித்து மேகலை பதித்து வார்தொடு
மிகுத்த மாமுலை அசைத்து நூலின்ம ருங்கிஞடை
மினுக்கி ஓலைகள் பிலுக்கி யேவளை
துலக்கி யேவிள நகைத்து வாள்விழி
மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு தந்தவாய்நீர்
குடித்து நாயென முடக்கு மேல்பிணி
யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர்
குலத்தர் யாவரு நகைக்க வேயுடல் மங்குவேனைக்
குறித்து நீயரு கழைத்து மாதவர்
கணத்தின் மேலென அளித்து வேல்மயில்
கொடுத்து மேதக வொருத்த னெனெ சிந்தைகூராய்
உடுட்டு டுடுடு டுடுட்டொ டோவென
திகுத்த தீதிகு திகுர்த்த தாவென
உடுக்கை பேரிகை தவிற்கு ழாமுமி ரங்குபோரில்
உலுத்த நீசர்கள் பதைப்ப மாகரி
துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை
உடைத்து நீதிகள் பரப்பி யேயவ ரும்பராரை
அடைத்த மாசிறை விடுத்து வாஞுல
களிக்கு மாயிர திருக்க ணைர
சளித்து நாளுமெ னுளத்தி லேமகி ழுங்குமாரா
அளித்த தாதையு மிகுத்த மாமனும்
அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்
அகத்ய மாமுனி பொருப்பின் மேவிய தம்பிரானே.

1346. வெருட்டி ஆட்கொளும் விடமிகள் புடவையை
நெகிழ்த்த ணுப்பிகள் படிறிகள் சடுதியில்
விருப்ப மாக்கிகள் விரவிய திரவிய மிலராஞல்
வெறுத்து நோக்கிகள் கபடிகள் நடமிடு
பதத்தர் தூர்த்திகள் ம்ருகமத பரிமள
விசித்ர மேற்படு முலையினு கிலையினு மெவரோடும்
மருட்டி வேட்கைசொல் மொழியினும் விழியினு
மவிழ்த்த பூக்கமழ் குழலினு நிழலினு
மதிகொ ணுத்தள ரிடையினு நடையினு மவமேயான்
மயக்க மாய்ப்பொருள் வரும்வகை க்ரிஷிபணு
தடத்து மோக்ஷம தருளிய பலமலர்
மணத்த வார்க்கழல் கனவிலு நனவிலு மறவேனே
இருட்டி லாச்சுர ருலகினி லிலகிய
சகத்ர நேத்திர முடையவன் மிடியற
இரக்ஷை வாய்த்தருள் முருகப னிருகர குகவீரா
இலக்ஷ்மீ பீச்சுர பசுபதி குருபர
சமஸ்த ராச்சிய பதிபுகழ் வயமியல்
இலக்க ரேய்ப்படை முகடெழு ககபதி களிகூரத்
திருட்டு ராக்ஷதர் பொடிபட வெடிபட
எடுத்த வேற்கொடு கடுகிய முடுகிய
செருக்கு வேட்டவர் திரையிட முறையிட மயிலேறும்
செருப்ப ராக்ரம நிதிசர வணபவ
சிவத்த பாற்கர னிமகரன் வலம்வரு
திருச்சி ராப்பளி மலைமிசை நிலைபெறு பெருமாளே.

1347. வெல்விக்கு வீக்கு முல்லைக்கை வீக்கு
வில்விக்க தாக்க ருதும்வேளால்
வில்லற்ற வாக்கொள் சொல்லற்று காப்பொய்
யில்லத்து ருக்க வலைமேவு
பல்லத்தி வாய்க்க அல்லற்ப டாக்கை
நல்விற்பொ ருச்ச மயமாறின்
பல்லத்த மார்க்க வல்லர்க்கர் மூர்க்கர்
கல்விக்க லாத்த லைய்லாமோ

அல்லைக்கொல் வார்த்தைசொல்லிக்கி தோத்து
சொல்குக்கு டார்த்த இளையோனே
அல்லுக்கு மாற்றி னெல்லுக்கு மேற்புல்
கெல்லைப்ப டாக்க ருணைவேளே
வல்லைக்கு மேற்றா தில்லைக்கு மேற்றா
வல்லிக்கு மேற்ற ரருள்வோனே
வள்ளிக்கு ழாத்து வள்ளிக்கல் காத்த
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

1348. வெற்பென வேயெழுந்து செப்பென வேதிரண்டு
மெத்தென மோதிகொண்ட தனமாதர்
மெய்ப்படு கோலமுங்கண் மைப்படு சாலமுஞ்செய்
வித்தையு மேநினைந்து மயலாகி
அற்பக லாவலைந்து கற்பமெ லாமுலைந்து
ளற்பமு மானமின்றி அழிவேனோ
அக்கினி ரூபமைந்த கிர்த்திகை மாதர்தந்த
அற்புத பாலையுண்ட குமரேசா
பொற்பதி காவலிந்தி ரற்குற வேலெறிந்து
பொய்ப்படு சூர்பிளந்த அதிதீரா
புட்பதி ஏறுகொண்ட லச்சுத னூர்மகிழ்ந்த
புத்தமிர் தானசெஞ்சொல் மருகோனே
உற்பல மோகொடுங்க ணைக்கிணை யோவெனுங்கண்
உத்தமி தேவதந்தி புணர்மார்பா
உத்தம மாவளங்கொள் உத்தர கோசமங்கை
உற்றினி தாவிருந்த பெருமாளே.

1349. வெற்றியிசை வுற்றகழை விற்குவளை தத்துமதன்
விட்டகணை பட்ட விசையாலே
வெட்டவெளி யிற்றெருவில் வட்டவணை யிற்கனல்வி
ரித்தொளிப ரப்பு மதியாலே
பற்றியிசை கற்றபல தத்தையர்த மக்குமிசை
பட்டதிகி ரிக்கும் அழியாதே
பத்தியையெ னக்கருளி முத்தியைய ளித்துவளர்
பச்சைமயி லுற்று வரவேணும்

நெற்றிவிழி பட்டெரிய நட்டமிடு முத்தமர்நி
ஊக்குமன மொத்த கழல்வீரா
நெய்க்கமல மொக்குமுலை மெய்க்குறவி இச்சையுற
நித்தமிறு கத்த மூவுமார்பா
எற்றியதி ருச்சலதி சுற்றியதி ருத்தணியி
லெப்பொழுது நிற்கு முருகோனே
எட்டசல மெட்டநில முட்டமுடி நெட்டசுர
ரிட்டசிறை விட்ட பெருமாளே.

1350. வேடர்செ ழுந்தினை காத்திதண் மீதிலி ருந்தபி ராட்டிவி
லோசன அம்புக ளாற்செயல் தடுமாறி
மேனித ளர்ந்துரு காப்பரி தாபமு டன்புன மேற்றிரி
வேளைபு குந்தப ராக்கரமம் அதுபாடி
நாடறி யும்படி கூப்பிடு நாவலர் தங்களி னுற்பதி
னாலுல கங்களு மேத்திய இருதாளில்
நாறுக டம்பணி யாப்பரி வோடுப ணிந்துச டாக்ஷர
நாடவ ருந்தவம் வாய்ப்பதும் ஒருநாளே
ஆடக மந்தர நீர்க்கசை யாமனு ரம்பெற நாட்டியொ
ராயிர வெம்பகு வாய்ப்பணி கயிறாக
ஆழிக டைந்தமு தாக்கிய நேகர்பெ ரும்பசி தீர்த்தரு
ளாயனு மன்றெயில் தீப்பட அதிபார
வாடைநெ டுங்கிரி கோட்டிய வீரனு மெம்பர மாற்றிய
வாழ்வென வஞ்சக ராக்ஷதர் குலமாள
வாசவன் வன்சிறை மீட்டுயர் காழிவ ளம்பதி வீற்றருள்
வானவ ரன்பர்க ளேத்திய பெருமாளே.

1351. வேதத்திற் கேள்வியி லாதது
போதத்திற் காணவொ ணாதது
வீசத்திற் றூரமி லாதது கதியாளர்
விதித்துத் தேடரி தானது
ஆதித்தற் காயமொ ணாதது
வேகத்துத் தீயில்வெ காதது சுடர்கானம்

வாதத்துக் கேயவி யாதது
காதத்திற் பூவிய லானது
வாசத்திற் பேரொளி யானது மதமூறு

மாயத்திற் காயம தாசல
தீதர்க்குத் தூரம தாகிய
வாழ்வைச்சற் காரம தாவினி அருள்வாயே

காதத்திற் காயம தாகும
தீதித்தித் தீதிது தீதென
காதற்பட் டோதியு மேவிடு கதிகாணுர்

காணப்பட் டேகொடு நோய்கொடு
வாதைப்பட் டேமதி தீதக
லாமற்கெட் டேதடு மாறிட அடுவோனே

கோதைப்பித் தாயொரு வேடுவ
ருபைப்பெற் றேவன வேடுவர்
கூடத்துக் கேகுடி யாய்வரு முருகோனே

கோதிற்பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றலமு லாவிய பெருமாளே.

**1352.** வேத வித்தகா சாமீ நமோநம
வேல்மி குத்தமா சூரா நமோநம
வீம சக்ரயூ காளா நமோநம விந்துநாத

வீர பத்மசீர் பாதா நமோநம
நீல மிக்ககூ தாளா நமோநம
மேக மொத்தமா யூரா நமோநம விண்டிடாத

போத மொத்தபேர் போதா நமோநம
பூத மற்றுமே யாணுய் நமோநம
பூர ணத்துளே வாழ்வாய் நமோநம துங்கமேவும்

பூத ரத்தெலாம் வாழ்வாய் நமோநம
ஆறி ரட்டிநீள் தோளா நமோநம
பூஷ ணத்துமா மார்பா நமோநம புண்டரீக

மீதி ருக்குநா மாதோடு சேயிதழ்
மீதி ருக்குமே ரார்மாபு லோமசை
வீர மிக்கவுழ் போர்மாதர் நீடினம் நின்றுநாளும்
வேத வித்தகி வீமா விராகிணி
வீறு மிக்கமா வீணை கரேமக
மேரு வுற்றுவாழ் சீரே சிவாதரெ யங்கராகீ
ஆதி சத்திசா மாதேவி பார்வதி
நீலி துத்தியார் நீணாக பூஷணி
ஆயி நித்தியே கோடீர மாதவி யென்றுதாழும்
ஆர்யை பெற்றசீ ராளா நமோநம
சூரை யட்டுநீள் போரா நமோநம
ஆர ணத்திநர் வாழ்வே நமோநம தம்பிரானே.

1353. வேதவெற்பி லேபுனத்தில் மேவிநிற்கும் அபிராம
வேடுவச்சி பாதபத்ம மீதுசெச்சை முடிதோய
ஆதரித்து வேளைபுக்கு மாறிரட்டி புயநேய
ஆதரத்தொ டாதரிக்க ஆனபுத்தி புகல்வாயே
காதுமுக்ர வீரபத்ர காளிவெட்க மகுடாமா
காசமுட்ட வீசிவிட்ட காலருட்சொ லுமையாள்பால்
ஓதிவைத்த தாதைகற்க ஓதுவித்த குருநாதா
*ஓரெழுத்தி லாறெழுத்தை ஓதுவித்த பெருமாளே.

1354. வேயி சைந்தெழு தோள்கள் தங்கிய
மாதர் கொங்கையி லேமு யங்கிட
வீணி லுஞ்சில பாத கஞ்செய அவமேதான்
வீறு கொண்டுட னேவ ருந்திய
மேயு லைந்தவ மேதி ரிந்துள
மேக வன்றறி வேக லங்கிட வெகுதூரம்
போய லைந்துழ லாகி நொந்துபின்
வாடி நைந்தென தாவி வெம்பியெ
பூத லந்தனி லேம யங்கிய மதிபோகப்

* ஓசையுற்ற சோலைவெற்பி லோகைபெற்ற பெருமாளே.

போது கங்கையி னீர்சொ ரிந்திரு
பாத பங்கய மேவ ணங்கிய
பூசை யுஞ்சில வேபு ரிந்திட அருள்வாயே
தீயி சைந்தெழ வேயி லங்கையில்
ராவ ணன்சிர மேய ரிந்தவன்
சேனை யுஞ்செல மாள வென்றவன் மருகோனே
தேச மெங்கணு மேபு ரந்திடு
சூர்ம டிந்திட வேலின் வென்றவ
தேவர் தம்பதி யாள அன்புசெய் திடுவோனே
ஆயி சுந்தரி நீலி பிங்கலை
போக அந்தரி சூலி குண்டலி
ஆதி அம்பிகை வேத தந்திரி இடமாகும்
ஆல முண்டா ரி றைஞ்சவொர்
போத கந்தனை யேயு கந்தருள்
ஆவி னன்குடி மீதி லங்கிய பெருமாளே.

1355. வேலி ரண்டெனு நீள்விழி மாதர்கள்
காத லின்பொருள் மேவின பாதகர்
வீணில் விண்டுள நாடிய றுமைகள் விலைகூறி
வேளை யென்பதி லாவசை பேசியர்
வேசி யென்பவ ராமிசை மோகிகள்
மீது நெஞ்சழி யாசையி லேயுழல் சிறியேனும்
மால யன்பர னரிமை யோர்முனி
வோர் புரந்தர னாதிய ரேதொழ
மாத வம்பெறு தாளிணை யேதின மறவாதே
வாழ்த ருஞ்சிவ போகந னூனெறி
யேவி ரும்பிவி னாவு டனேதொழ
வாழ்வ ரந்தரு வாயடி யேனிடர் களைவாயே
நீல சுந்தரி கோமளி யாமளி
நாட கம்பயில் நாரணி பூரணி
நீடு பஞ்சவி சூலினி மாலினி யுமைகாளி
நேயர் பங்கெழு மாதவி யாள்சிவ
காம சுந்தரி யேதரு பாலக
நீர்பெ ருஞ்சடை யாரருள் தேசிக முருகேச

ஆலில் நின்றுல கோர்நிலை யேபெற
மாநி லங்களெ லாநிலை யேதரு
ஆய னந்திரு வூரக மால்திரு மருகோனே
ஆட கம்பயில் கோபுர மாமதி
லால யம்பல வீதியு மேநிறை
வான தென்சிறு வாபுரி மேவிய பெருமாளே.

1356. வேலை தோற்க விழித்துக் காதினி
லோலை காட்டி நகைத்துப் போதரு
வீடு காட்டி உடுத்தப் போர்வையை நெகிழ்வாகி
மேனி காட்டி வளைத்துப் போர்முலை
யானை காட்டி மறைத்துத் தோதக
வீறு காட்டி எதிர்த்துப் போமெதிர் வருவார்மேல்
கால மேற்க உழப்பிக் கூறிய
காசு கேட்ட துகைப்பற் றுயிடை
காதி ஓட்டி வருத்தப் பாடுடன் வருவார்போல்
காதல் போற்று மலர்ப்பொற் பாயலின்
மீத ணைப்பு மசட்டுச் சூளைகள்
காம நோய்ப்ப டுசித்தத் தீவினை ஒழியேனோ
ஆல கோட்டு மிடற்றுச் சோதிக
பாலி பார்ப்ப திபட்சத் தால்நட
மாடி காத்தி ரிபட்சித் தாவென உமிழ்வாளி
ஆடல் கோத்த சிலைக்கைச் சேவக
னோடை பூத்த தளக்கட் சானுவி
யாறு தேக்கி யகற்றைச் சேகர சடாதாரி
சீல மாப்ப திமத்தப் பாரிட
சேனை போற்றி டுமப்பர்க் கோதிய
சேத னார்த்த ப்ரசித்திக் கேவரு முருகோனே
சேல ருக்க யல்தத்தச் சூழ்வய
லார வேற்க ரவிப்ரார்க் காதர
தீர தீர்த்த திருப்புத் தூருறை பெருமாளே.

1357. வேலைப் போல்விழி யிட்டும ருட்டிகள்
காமக் ரோதம்வி ளைத்திடு துட்டிகள்
வீதிக் கேதிரி பப்பர மட்டைகள் முலையானை
மேலிட் டேபொர விட்ட பொறிச்சிகள்
மார்பைத் தோளைய சைத்துந டப்பிகள்
வேளுக் காண்மைசெ லுத்துச மர்த்திகள் களிகூரும்
சோலைக் கோகில மொத்தமொ ழிச்சிகள்
காசற் றரையி தத்திலொ ழிச்சிகள்
தோலைப் பூசிமி னுக்கியு ருக்கிகள் எவரேனும்
தோயப் பாயல ழைக்கும வத்திகள்
மோகப் போகமு யக்கிம யக்கிகள்
சூறைக் காரிகள் துக்கவ லைப்படல் ஒழிவேனோ
காலைக் கேமுழு கிக்குண திக்கினில்
ஆதித் யாயவெ னவர்க்கிய தர்ப்பண
காயத் ரீசெப மர்ச்சனை யைச்செயு முனிவோர்கள்
கானத் தாசிர மத்தினி லுத்தம
வேள்விச் சாலைத ழைத்தல்பொ ருட்டெதிர்
காதத் தாடகை யைக்கொல்க்ரு பைக்கடல் மருகோனே
ஆலச் சாறுகு டித்தவ யற்றலை
பாயச் சாவித ழைத்துதி ருத்தல
மாகத் தேவர்கள் மெச்சிய செய்ப்பதி உறைவேலா
ஆழித் தேர்மறு கிற்பயில் மெய்த்திரு
நீறிட் டான்மதிள் சுற்றிய பொற்றிரு
ஆனைக் காவினி லப்பர்ப்ரி யப்படு பெருமாளே.

1358. வேலைவா ளைக்கொடிய ஆலகா லத்தைமதன்
வீசுபா ணத்தைநிகர் எனலாகும்
வேதைசா தித்தவிழி மாதரா பத்தில்விளை
யாடிமோ கித்திரியும் வெகுரூப
கோலகா லத்தைவிட லாகிமா றக்குணவி
காரமோ டத்தெளிய அரிதான
கூறொணா தற்பரம ஞானரூ பத்தின்வழி
கூடலா கப்பெருமை தருவாயே

வாலிமார் பைத்துணிய வெழ்மரா இற்றுவிழ
வாளிபோ டக்கருது மறுராமன்
வானுலோ கத்திலம ரேசனு லிக்கவளை
ஊதிமோ கித்துவிழ அருள்கூரும்
நீலமே னிக்குமரு காவுதா ரத்துவரு
நீசர்வாழ் வைக்களையும் இளையோனே
நேசமா கக்குறவர் தோகைமா னைப்புணரு
நீபதோ ளொப்பரிய பெருமாளே.

1359. வேலொத்து வென்றி அங்கை
வேளுக்கு வெஞ்ச ரங்க
ளாமிக்க கண்க ளென்றும் இருதோளை
வேயொக்கு மென்று கொங்கை
மேல்வெற்ப தென்று கொண்டை
மேகத்தை வென்ற தென்றும் எழில்மாதர்
கோலத்தை விஞ்ச வெஞ்சொல்
கோடித்து வஞ்ச நெஞ்சர்
கூடத்தில் நின்று நின்று குறியாதே
கோதற்ற நின்ப தங்கள்
நேர்பற்றி இன்ப மன்பு
கூர்கைக்கு வந்து சிந்தை குறுகாதோ
ஞாலத்தை அன்ற ளந்து
வேலைக்கு ளுந்து யின்று
நாடத்தி முன்பு வந்த திருமாலும்
நாடத்த டஞ்சி லம்பை
மாவைப்பி ளந்த டர்ந்து
நாகத்த லங்கு லுங்க விடும்வேலா
ஆலித்தெ ழுந்த டர்ந்த
ஆலத்தை உண்ட கண்ட
ராகத்தில் மங்கை பங்கர் நடமாடும்
ஆதிக்கு மைந்த னென்று
நீதிக்குள் நின்ற அன்பர்
ஆபத்தி லஞ்ச லென்ற பெருமாளே.

**1360.** வேழமுண்ட விளாங்கனி அதுபோல
மேனிகொண்டு வியாபக மயலூறி
நாளுமிண்டர் கள்போல்மிக அயர்வாகி
நானுநைந்து விடாதருள் புரிவாயே
மாளவன்ற மணீசர்கள் கழுவேற
வாதில்வென்ற சிகாமணி மயில்வீரா
காளகண்ட னுமாபதி தருபாலா
காசிகங்கை யில்மேவிய பெருமாளே.

**1361.** வேனில்மத னைந்து பாணம்விட நொந்து
வீதிதொறு நின்ற மடவார்பால்
வேளையென வந்து தாளினில்வி ழுந்து
வேடைகெட நண்பு பலபேசித்
தேனினும ணைந்த வாயமுத முண்டு
சீதள த னங்க ளினில்மூழ்கித்
தேடியத னங்கள் பாழ்படமு யன்று
சேர்கதிய தின்றி உழல்வேனோ
ஆனிரைபு ரந்து மானிலம ளந்தொ
ராலிலையி லன்று துயில்மாயன்
ஆயர்மனை சென்று பால்தயிர ளைந்த
ஆரணமு குந்தன் மருகோனே
வானவர்பு கழ்ந்த கானவர்ப யந்த
மானொடுவிளங்கு மணிமார்பா
மாமறைமு ழங்கு சீபுருட மங்கை
மாநகர மர்ந்த பெருமாளே.

உ

வேலுமயிலுந் துணை

# திருவெழுகூற்றிருக்கை

ஓருரு வாகிய தாரகப் பிரமத்
தொருவகைத் தோற்றத் திருமர பெய்தி
ஒன்றா யொன்றி யிருவரிற் றோன்றி
மூவா தாயினை
5 இருபிறப் பாளரி னொருவ னாயினை
ஓராச் செய்கையி னிருமையின் முன்னாள்
நான்முகன் குடுமி யொருகொடி பெயர்த்து
மூவரும் போந்து இருதாள் வேண்ட
ஒரு சிறை விட்டனை
10 ஒருவகை வடிவினி லிருவகைத் தாகி
மும்மதன் தனக்கு மூத்தோ னாயினை
நால்வாய் முகத்தோன் ஐந்துகைக் கடவுள்
அறுகு சூடிக் கிளையோ னாயினை
ஐந்தெழுத் ததனுல் நான்மறை யுணர்ந்த
15 முக்கட் சுடரினை இருவினை மருந்துக்
கொருகுரு வாயினை
ஒருநாள் உமையிரு முலைப்பா லருந்தி
முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்
ஐம்புலக் கிழவன் அறுமுகத் திவனென
20 எழில்தரு மழகுடன் கழுமலத் துதித்தனை
அறுமீன் பயந்தனை ஐந்தரு வேந்தன்
நான்மறைத் தோற்றத்து முத்தலைச் செஞ்சூட்
டன்றி லங்கிரி யிருபிள வாக
ஒரு வேல் விடுத்தனை
25 காவிரி வடகரை மேவிய குருகிரி, இருந்த
ஆறெழுத் தந்தணர் அடியிணை போற்ற
ஏரகத் திறைவ னெனஇருந் தனையே.

---

உ

வேலுமயிலுந் துணை

## அருணகிரிநாத சுவாமிகளைக் குறித்து ஆன்றோர் கூறிய பாடல்கள்



# திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்

**(வரகவி மார்க்க சகாயதேவர்)**

*விடியா மலமாயைகளா மிருள் தீர்த்துத் தீர்த்து*
*விழிநீர் தரு யோகிகள் சேர்திரு வீட்டுக் கேற்ற*
*வெளிரு வமுதா யுலகோ ரிடர் நீக்கப் பாட்டு*
*மிகவோத முனொரு நேயனு ணுக்கிற் றீட்டும்*
*வடிவேலுடனே      *      *.*

*செம்மையுள ஆறுமுக னைத்திரு விரிஞ்சைவரு*
    *சேயைப் புரந்தருள்கவே      *      *.*

*எம் மருணகிரி நாத ரோது பதினாறு யிரந்*
    *திருப்புக ழமுதமே.*      (காப்புப் பருவம்)

*இஞ்சிசூ ழருணை யன்பன் அன்புற இயம்பு*
    *பாடல்களை அறியலாம்.*      (அம்புலிப் பருவம்)

*சத்தநிலை வழுவாம லத்தமொரு சற்றுந்*
    *தளர்ந்துவெளி ரும லமுதந்*
*தழுவுபதி னாறு யிரந்திருப் புகழெனுந்*
    *தமிழ்மாலை சாற்றி யுருகிச்*
*சித்திபெறும் அருணகிரி நாதர் புகழ் காரணா*
    *சிறுபறை முழக்கி யருளே.*      (சிறுபறைப் பருவம்)

*மாதரிரு விழியாகும் அம்புக்கு மதனவேள்*
    *வாளிக்கு நடுவாகியே*
*மாலாகும் அருணகிரி நாதரரு ணைச்சிகரி*
    *வடவாச விற்பயிலநம்*
*பாதமலர் பாடுநீ யென்னவடி யேனுமெப்*
    *படிபாட வென்றவளவிற்*
*பத்திதரு முத்திநகை யத்தியிறை வாவெனப்*
    *பாடென்று சொல்லி யியலாற்*

பூதலமு மெங்கிளையு மீடேற நாவிற்
பொறித்தவ ருரைத்தகவிதைப்
புத்தமுது பன்னிரு செவிக்குநிறை யக்கொண்டு
போதமுனளித் தருளிறற்
சீதள மலர்ச்சரண முதவுகா னாராளி
சிறுதேரு ருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறமுனி
சிறுதே ருருட்டி யருளே. (சிறுதேர்ப் பருவம்)

---

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை

(சிதம்பர ஸ்வாமிகள்)

அருண கிரிப்பெயர் மெய்ஞ்ஞான நாதன்சொல் லால்வனைந்த
பொருளை நதிக்கிரி யான்புகழ் மாலைபுனைபுயனே. (அலங்காரம்)

அருணகிரி நாத னருந்தமிழ்நூற் கீரன்
கருணைபெற ஓதுங் கவிமாலைத் தோளானே. (தாலாட்டு)

புனைபா மாலை தரித்தேத்தும் பொருவி லருண கிரிநாதன்
புகழ்வீட் டின்பம் பெறவுதவும் போரூர் முருகப் பெருமானே.
(பெருங்கழி நெடில் விருத்தம்)

அருணகிரி நாதன் மகிழ்ந்தோது பாடல்
* * *

இருணையமெய் யன்பர் குழாம் இசைந்து பாட
* * *

சமரபுரி நாயகரே யாடி ரூசல். (ஊசல்)

அருணையங்கிரி நாதன் தமிழ் மணமு
மரிய கீரன் தமிழ் மணமுங்
குரவினன் மணமுங் கமழ்தரு போரூர்க்
குமரனே யமரர் நாயகனே.
(குறுங்கழில் நெடில் விருத்தம்)

சும்மா விருவெனநீ சொல்லப் பொருளொன்று
மம்மா வறிந்திலமென் றன்றுரைத்த—எம்மான்

அருணகிரி நாதன் அநுபவநா யேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு. (நேரிசை வெண்பா)

---

## தாயுமானவர்

தேவர் தொழும் வாதவூர்த் தேவே யென்பேன் * * *
பூவுலகில் வளரருண கிரியே மற்றைப்
புண்ணியர்கா ளோவென்பேன் * * *

ஐயா அருணகிரி யப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்?

யான்று னெனலறலே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்று னுரைத்தமொழி கொள்ளாயோ?

கந்தர நுபூதி பெற்றுக் கந்தர நுபூதி சொன்ன
எந்தையரு ளுடி யிருக்குநா ளெந்நாளோ?

அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ?

---

## திருத்தணிகைத் திருவிருத்தம்

(தோட்டிக்கலை சுப்பிரமணிய முநிவர்)

பன்னரிய வுன்னற் புதத்திருப் புகழைப்
பகர்ந்துகொண் டுன் திருமலைப்
படியேறும் அன்பர்வினை பொடியாகு மென்றுநிறை
மொழிமாந்தர் பகருவதுகேட்
டென்னுடைய பொல்லாத சஞ்சிதப் பிணியொழித்
தெனையும்வாழ் வித்தருளுகென்
றிரவுபக லுன்னருட் சந்நிதியில் வந்துமுறை
யிடுவேற் கிரங்கி யருள்வாய் * *

நக்கீரர் சொன்னமுரு காற்றுப் படைத்தமிழும்
நல்லருண கிரிநாதர் சொல்
புலமையுறு சித்திரச் சந்தப் ப்ரவாகமும்
புநிதச் செவிக்கு ளார்த்த புகழாள!

## தணிகைச் சந்நிதிமுறை

(கந்தப்ப தேசிகர்)

கோட்டமரும் பைங்கிளியே கூறாய் தணிகைவரைக்
கோட்டமரு நங்கள் குமரேசன்—தாட்டுணைக்கண்
அன்பா மருணகிரி நாத னறைந்தபுக
ழின்பாயென் கைவந் திருந்து. (அந்தாதி)

கருப்புகழாம் பிறசமயக் கதைகேளா தநுதினமுன்
திருப்புகழை யுரைப்போர்க்குச் சித்தியெட்டு மெளிதாமே.
(கலம்பகம்)

வஞ்சகம் புரியு மவ ரலங்கார வறும்புகழ்
வேண்டிலேன் வேண்டும்
வரம்பெறும் அருண கிரிநினை முன்னாள்
வழுத்தலங் காரமும் புகழும். (ஷை)

காதலா யொருமயிலிற் களித்தேறுந் தணிகைவரைக்
கந்தன் யார்க்கு
நாதனே யெனத்தெளிந்த அருணகிரி நாதனுமுன்
னவின்ற பாவை
ஓதுவார் திருப்புகழென் றுலகிலுள்ளோ ரதற்குநிக
ருண்டோ மற்றைச்
சாதலார் விண்ணவர்க டம்புகழைத் திருப்புகழாய்ச்
சாற்றி டாரே. (ஷை)

அருணகிரி நாத னறைந்தபதி னாறு
யிரகவிதை யென்றுலகில் யாரும்—உரைபுகலுந்
தெய்வத் திருப்புகழுஞ் செஞ்செவிகள் பன்னிரண்டி
னெய்தத் தனிக்கேட் டெழுந்தருளி (தணிகையுலா)

"கந்தரநு
பூதியலங் காரம் புகழ்வகுப்பந் தாதிகரத்
தோதுகிளி யாயிருந்த வுத்தமனும்" (ஷை)

"கைக்கிளியைப் பார்த்துவெகு காதலுட னன்னைமீர்
இக்கிளியைத் தாருமெனக் கென்றாள்—அக்கிளிதான்

வில்லிபுத்தூ ரான்செவியின் மேலரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண்—பல்லவையுள்
மற்றொருவன் வாதுவென்று வான்பாரி சாதப்பூக்
குற்றமற மண்மேற் கொணர்ந்ததுகாண்—வெற்றிப்
பிரபுடதே வக்குரிசில் பேணியெதிர் காண
முருகன் மயில்மேல் முடுகி—வரவழைத்து
வந்ததுகாண் செவ்வேள் வரிசையலங் காரமுற்றுந்
தந்ததுகாண் பேரின்பஞ் சார்ந்ததுகாண்—எந்தைபிரான்
முத்தித் திருவென்னு முன்பதினா றாயிரமாம்
பத்தித் திருப்புகழைப் பாடுங்காண்—சித்தியெட்டுங்
கற்றதுகா ணந்தம்மைக் கண்ணாலும் பாராம
லுற்றதுகாண் சிற்றின்பத் தோருறவு—மற்றதுகாண்
நாமுரைக்கும் வார்த்தைகளை நற்செவிகே ளாதிருக்கும்
ஓமுரைக்கும் பூதியுங்கண் டிற்றிருக்கும்—தோமுரைக்கும்
மற்றைக் கிளிபோல் வசப்படா தென்றுரைத்துப்
பற்றிக் கொடுபோனார் பாவைதனை." (தணிகையுலா)

வள்ளைச் செவிக்கணியாய் மன்னுந் திருப்புகழைக்
கிள்ளைக் கிசைப்பதனைக் கேட்டுவந்து (ஷை)

—வேலர்

அலங்காரத் துட்பொருளை யாய்வதுவே தேகங்
கலங்கா வலங்கார மென்று—மிலங்குகந்த
ரந்தாதி மேலாசை யாவதுயிர்த் தோழியெனு
நந்தாதி மேலான நட்பென்றும்—சந்தமுரு
காற்றுப் படையே யகங்க ளடுபோரை
மாற்றுப் படையாகி வைகுமென்றுந்—தோற்றும்
அநுபூதி ஐம்பதுமே யாருயிர் பேரின்ப
வநுபூதி நல்கு மணியென்றும், (ஷை)

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
வேலுமயிலும் துணை

# உரைக் குறிப்புகள்

திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்.
அவர்களால் எழுதப்பெற்றன.

[குறிப்பு:—இக் குறிப்புகள், சைவத்திருவாளர் - மு. திருவிளங்கம் அவர்கள் கந்தரலங்காரத்துக்கும் திருப்புகழில் நூற்றைம்பது பாடல்களுக்கும் எழுதிய விரிவான உரை, கந்தரநுபூதிக்குத் திருவாளர் - கொ. சண்முகசுந்தர முதலியார் பதிப்பித்த உரை, திருவாளர்கள் - கந்தசாமிக் கவிராயரும் வடக்குப்பட்டு - சுப்பிரமணிய பிள்ளையவர்களும் தத்தம் பதிப்புக்களில் வரைந்துள்ள உரைக் குறிப்புகள் முதலிய பல ஆதாரங்களைக் கொண்டு எழுதப்பெற்றுள்ளன. இவற்றுளெல்லாம் தலைசிறந்து விளங்குவன திரு. மு. திருவிளங்கம் அவர்கள் உரை நூல்களே. அவற்றை ஒவ்வொருவரும் வாங்கிப் பயின்றால் திருப்புகழ் முழுமைக்கும் எளிதில் பொருள்காணும் ஆற்றல் பெறலாம். மேற் கூறப்பட்ட பிற உரைக் குறிப்புகளிற் பலவற்றை நன்காராய்ந்த பிறகே ஒப்புக்கொள்ளவேண்டும். அவற்றுட் சில பொருந்தாவென்பதை இக் குறிப்புகளை ஊன்றிப் பார்த்து ஒப்பிடுவோர் அறியக்கூடும். இக் குறிப்புகளை அன்பர்கள் பொருள் காண்பதற்குத் துணையாகக் கொள்ளவேண்டுமே யன்றி முடிவான உண்மைகளென்று கொள்ளக்கூடாது. பற்பல இடங்களில் பாடச்சிதைவு முதலிய பல காரணங்களால் பொருள் விளங்கவில்லை யென்பதையும் வலிந்து பொருள்கொள்ளவேண்டி யிருக்கிறதென்பதையும் அன்பர்கள் அறியவேண்டும். இக் குறிப்புகளிற் காணப்பெறும் பிழைகளையும்

அவற்றைத் திருத்தும் முறையையும் அறிஞர்கள் தெரிவித்தால் அடுத்த பதிப்பில் திருத்தமான குறிப்புகள் வெளிவருதற்கு நலமாயிருக்கும்.]

## கந்தரலங்காரம்

**காப்பு.** கடதடகும்பக்களிறு - மதம், பெருமை, மத்தகம் இவையுடைய விநாயகர். **நூல்.** 1. வழிவிட்டவா - நல்வழியில் விட்ட முறைமை (என்னே!) செஞ்சடாடவி - சிவந்த சடையாகிய காடு. 2. எரிமூண்ட......கூற்றன் - கூற்றன் கோபவர்ணனே. அன்றோ கவிகற்கின்றதே - சாகும்போதா படிக்கத் தொடங்குவீர்கள்? 3. கூரணியிட்டு - அண்ணியிட்டு, நெருங்கி. 4. ஐவர் - ஐந்து ஞானேந்திரியங்கள். கூரகட்டாரி-கூர்மையுடைய வேல். 5. குருந்தை-குழந்தையை. குறிஞ்சிக் கிழவன் - மலைநிலத்துக்குரிய கடவுள். 6. சிற்றேனல் - முதிராத தினைப்பயிர். உள்ள அரும்பும் - நினைக்கும்போது தோன்றுகிற. கரும்பு...கைத்ததுவே-பேரின்பம் அனுபவித்த வழிப் பிரபஞ்ச சுகம் அற்றது என்பது குறிப்பு. 7. சளத்தில் - உடலில். அசட்டுக் கிரியை - பிரபஞ்ச விவகாரம். ப்ரமத்தை - பிரமையை; மயக்கை. 8. வெறும்பாழைப்பெற்ற வெறுந்தனி - மாயைப்பாழ், சீவப்பாழ், சிவப்பாழ் எனும் முப்பாழும் தோன்றாத சுத்த தனிநிலையாகிய முத்திநிலை. 9. கூறவற்றோ - இன்னதென்று கூறவல்லதோ? (அல்ல). அசரீரி - அருவப் பொருள். 10. எல்லாமிழந்து...எல்லை - தத்துவங்க ளொழிந்த மோனமாகிய ஞான வரம்பு. விட்டவா - விட்டவாறு. கொல்லி - கொல்லி என்ற பண். கல்வரைக் கொவ்வை-மலையில் தோன்றும் கோவைப்பழம். 11. குசை - கடிவாளம். கசை - சாட்டை. கால் - காற்று, மயிலின் வேகமும் வன்மையும் வர்ணிக்கப்பட்டன. 12. படைபட்ட - படையாகப் பொருந்திய. வாகைப் பதாகை - வெற்றிக் கொடி. சலதி - சமுத்திரம். 13. ஒருவரை - சிவபெருமானை. 14. குப்பாச வாழ்க்கை - சிறிய பாச வாழ்வு. 15. தாவடி - போர். மூதண்ட கூடம் - முது அண்டகோளம். 16. வைவேல் - கூரிய வேல். 17. சூதானதற்ற வெளிக்கே யொளித்து - சுத்தமான அருள் வெளியில் மறைந்து. பூதர் - பஞ்சபூதப் பற்றுடைய மக்கள். 18. வையில் - பூமியில், கூர்மையில். பகிர்மின்கள் - பகுத்துக் கொடுங்கள். 19. சொன்ன - சொர்ண, பொன்மய

மான. இறந்தே விட்டதிவ்வுடம்பே - இவ்வுடம்பு இறந்தது போன்ற தாயிற்று. 20. வல்வினை...வலி - பலபிறவிகளில் தொடரும் வன்மையுடைய நோயாகிய வினையென்னும் இப்பெரிய ஊழ். வருமோ நும்மடிப் பிறகே - இறக்கும்போது உமது அடியின்பின் தொடர்ந்து வருமோ? 21. கிங்கிணி முகுள சரணம் - சதங்கை அரும்புபோல் அணிசெய்யும் பாதம். சசிதேவி...க்ருபாகர - இந்திரன் மனைவியின் தாலிக் கயிறாகிய ஆபரணத்தைக் காத்த கிருபை யுடையவனே. 22. மொய்தார் - வண்டுமொய்க்கும் பூமாலை. இலஞ்சியம் - வாவியிலுதித்தோன். 23. வை வைத்த - கூர்மை அமைந்த. ஐவர் - ஐம்பொறிகள். 24. கின்னம் குறித்து - எனது துயரத்தை நீக்குங் குறிப்போடு. குன்னம் - இரகசியம், உபதேசம். குறிச்சி வெளியாக்கிவிட்டது - வள்ளியை ஆட்கொண்டவன் என்னையும் ஆட்கொண்டான் என்பது இக் குறிச்சியில் வெளியாகி விட்டது. 25. தொண்டாகிய...வாள் - திருவடி ஞானமாகிய வாள். 26. சீலத்தை - சீலந்தரும் உபதேச மொழியை. காலத்தை வென்றிருப்பார் - பிறப்பை யொழிப்பார். 27. சீரா - உடைவாள். செச்சைமாலை - வெட்சிமாலை. 28. செய்ய தாளினில் - சிவந்த திருவடியில். மாலே கொள - அன்பாகிய மயக்கமே மிக. இப்பாடல் முருகனது சகளம், நிஷ்களம், சகள நிஷ்களம் ஆகிய மூன்று தடத்த லக்கணங்களையுங் கூறுகிறது. 29. கடத்தில் - மலைப்பக்கத்தில். திடத்தில் - உறுதியில். பணையில் - மூங்கில்போன்ற தோளில். 30. சேல் என்பதாக - சேல்மீன்போன்ற தென்பதாக. 31. பொக்கக் குடில் - பொய்வீடாகிய உடல். கழல்வீடு - திருவடியாகிய மெய்வீடு. சிந்து - கடல். கொக்கு - மாமரம். கிரி - கிரௌஞ்ச கிரி. 32. கிளைத்து - இனத்தாரோடு பெருக்கமாக; கிளைகளையுடைய மாமரமாக. 33. முழுதுங்...விதனப்படார் - இம்மை மறுமை நலங்களை முற்றும் கெடுக்கும் வறுமையால் இவ்வுலகில் வருந்தார்கள். 34. பொட்டாக - தொளையுண்டாக. தப்பி...தருவாய் - மாதர் வலையிற் கட்டுண்டதால் என் வசப்படாது தப்பிப்போன என் மனதுக்கு எட்டாத பதிஞானத்தைத் தருவாய். 35. படிவதனல்! - படிவதானல், படிய வேண்டுமானல். புத்தித்தரங்கந் தெளிவதென்றோ - அந்தக்கரண அலைகள் ஓய்வதெப்போது? மெத்திக் குதிகொள்ள - மிகுதியாகப் பாய. விட்டு

சுட்டியிலே - அகன்ற நெற்றியிலே. தரம் - வலிமை. 36. கழித் தோடுகின்ற தெக்காலம் - இவற்றைவிட்டு நீங்குவது எப்போது? கரிக்கோட்டு முத்தை - யானைக்கொம்பி லுண்டாகும் முத்தை. 37. கண்டுண்ட சொல்லியர் - கற்கண்டை உண்டதுபோன்ற இனிமையுடைய மொழிகூறும் மாதர். ராவுத்தன் - வீரன். 38. நாள் - கிழமை, நக்ஷத்திரம். கோள் - நவக்கிரகங்கள். கடம்பு - கடப்பமாலை. 39. உன்னிலொன்று விதித்தாண்டு - உன் திருவடியில் இரண்டறக் கலக்கும்படி விதித்து ஆண்டு. வெற்பு - மந்தரமலை. உரகபதித்தாம்பு - சர்ப்பராஜனாகிய வாசுகி யென்னும் கயிறு. அம்பரம் - பாற்கடல். 40. சேல்...பொழில் - வயலிலுள்ள சேல்மீன்கள் குதித்து மோதிச் சோலைகளை யழித்தன. தேங்கடம்பின்...மயிலோன் - முருகக்கடவுள் மீது மயல்கொண்டு பெண்கள் மனம் அழிந்தது. 41. மாலே - மயக்கமே. காலே...மேலே - காற்றை மிகப் புசிக்குங் காலில்லாத ஆதி சேடன்மீது. கணபணம்-(பணம்=பாம்பின் படம். கணம்=கூட்டம். கணபணம்=பல தலைகளையுடைய) ஆதிசேடன். 42. நிணங்காட்டுங் கொட்டிலை - மாமிசம் நிறைந்த உடலை. ஒருவீடெய்தி - ஒப்பற்ற மோக்ஷமடைந்து. 43. கவியால் - குரங்குகள் உதவியால். 44. நாலாறுகாலில் - இருபத்துநான்கு விலா எலும்புகளில். நாற்றி - தொங்கவிட்டு. நரம்பால் ஆர்க்கையிட்டு - நரம்புகளால் வலிச்சல் வைத்து. தாளன்றி வேறில்லையே - திருவடியன்றி ஆன்மாவுக்கு வேறு துணையில்லை. 45. ஒரு பூதரும்...உணர்வற்றிரு-மௌனோபதேசம். இருகோட்...பூதரம் - இரண்டு கொம்பும் ஒரு துதிக்கையுமுடையயானை. ஏகாசம் - போர்வை. சூரகுலாந்தகன் - சூரர்குலத்துக்கு எமன். 46. நீயான்...அருள்வாய் - அத்துவிதநிலை. விநோதம் - திருவிளையாடல். 47. பத்தி - வரிசை. 48. வாங்கி - தடுத்து. குவடு - கிரௌஞ்சம். காங்கேயன் - கங்கையில் (சரவணப்பாயலில்) தோன்றியவன். 49. குழாம் - கூட்டம். கதியன்றி - முத்தியன்றி. தண்டு தாவடிபோய் - சேனையோடு போருக்குச் சென்று. நீரிற்பொறி - நீர்மேல் எழுத்து. 50. பெரும்பாம்பினின்று நடிக்கும்பிரான் - கிருஷ்ணன். 51. நேடி - தேடி. துணையும் - துணையுமாக (நேடிவரும்). இலையாயினும் - இலைக்கறியாயினும் (கீரைக்கறி). 52. சிகராத்ரி - சிகர அத்ரி=சிகரங்களையுடைய கிரௌஞ்சம். பகரார்வமீ - பகர் ஆர்

வம் ஈ — கூறும் விருப்பத்தைத் தா. பணிபாசசங்க்ராம - தாழ்ந்த பாசத்தோடு போர்செய்வோனே. பணாமகுட நிகராட்சம பட்சபட்சி துரங்க - படமுடிக் கூட்டங்களையுடைய பாம்பை யுண்ணும் பக்ஷியாகிய மயிலை வாகனமாகக் கொண்டவனே. ந்ருபகுமரா குக ராட்சச பட்ச விட்சோபதீர - அரசே, குமாரனே, குகனே, அரக்கரை அழித்தவனே, கலக்கமற்ற தீரனே. 53. கிலேசித்து - மனக்கிலேசமுற்று, மனந்தடுமாறி. 54. கடல்...வளைத்தோன் - காலந்தாழ்த்த வருணன்மீது பாணம் விட்ட இராமன் வரலாறு. 55. தூங்கார் - சமாதியிலிரார். தொழும்பு - தொண்டு. 56. உருகி - உருகியிருப்பதன்றி. கற்றிடாதிருப்பீர் - கற்காதீர்கள். பகரீர்பகரீர் மறந்தவர்க்கே - முருகனை மறந்தவர்க்கு (நரகவேதனையைச்) சொல்லுங்கள். 57. பொருபிடியும் களிறும் விளையாடும் - பெண்யானையும் ஆண்யானையும் தம்முள் ஊடல் கொண்டு விளையாடும். மான்தருபிடி - வள்ளி. 58. நெற்று - நெற்று ஆகாத, முற்றாத. இக்குமுல்லையுடன் பற்று ஆக்கையும் வெந்து சங்க்ராமவேளும்பட - கரும்புவில்லையும் முல்லை மலர்ப்பாணத்தையும் பிடித்த உடலும் வெந்து போர்புரிந்த மன்மதனும் இறக்க. 59. பொங்கு ஆரவேலையில் - பொங்குகின்ற, முத்துக்களையுடைய கடலில். அருள்...இட்டது - ஏற்பவர்க்கிடும் பொருள் திருவருளைப்போல எங்கும் தொடர்ந்து வந்து துணை செய்யும். வங்காரம் - பொன். சங்காதமோ - துணையாகுமோ? 60. பொய்யை நிந்திக்கிலேன் - நிலையாதவாழ்வை இகழ்கிலேன். சாதிக்கிலேன் - சாதனை செய்து அறிகிலேன். கிலேசம் - துயரம். 61. வரையற்று - கிரௌஞ்சம் அழிந்து. புரையற்ற வேலவன் போதித்தவா - ஒப்பற்ற வேலவன் போதித்தவாறு (என்னே !) 62. ஆலுக்கு - ஆலமர் செல்வனுக்கு, சிவனுக்கு. 63. தன் பாவனையை - பிரணவத்துக்குத் தன் உரையை. மெய்யன்பு பொய்யோ - மெய்யன்பு இப்போதின்மையால் அது போலிதானோ? அமுது...சந்தித்ததே - போலியாயின் எங்கிருந்து இங்ஙனம் வந்து கூடிற்று? 64. புறங் கண்டலாது விடேன் - நீ முதுகு காட்டி ஓடுவதைக் கண்டால் அல்லது விடேன். சத்தி வாள் - திருவருளாகிய வாள். 65. கராசலங்கள் எட்டும் - திக்குயானைகள் எட்டும். புதைய - மறையும்படி. 66. எங்கேனும் எழுந்திருப்பார் - எங்கேயாவது போக எழுந்திருப்பார். 67. மத

கும்ப...சரசவல்லி - தெய்வயானையம்மை (மதம், மத்தகம், அசைவு, அஞ்சாமை, சிறியகண், போர், மலைபோல்மேனி என்றிவற்றை யுடைய ஐராவதத்தின் புதல்வி). கடகாசல - கடகமணிந்த மலை போன்ற. 68. உகம்போய்ச்சகம்போய் - முடிவை யடைந்து உலகப் பற்றொழிந்து. பவுரி கொண்டாட - பவுரி என்ற நடனத்தைக் கொண்டாட. பசுபதி - பரமசிவம். 69. தந்தைக்கு...கந்தச்சுவாமி - பிதாவுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்த முருகன். 70. முன்பு செய்தபழி - பழையவினை. பயந்ததனிவழி - இறந்த பின்போகும் வழி. செங்கோடன் - திருச்செங்கோட்டிலுள்ள முருகன். 71. கும்பித்து - கும்பகம் செய்து, நிறுத்தி. சிவயோகமெனுங் குருத்தை - கேவலம், சகலம், தற்போதம் நீங்கிய கொழுந்து போன்ற சுத்த நிலையை. 72. கந்தக்கடம்பன் - மணமுள்ள கடப்பமலர் அணிவோன். கார்மயில் - மேகம் போன்ற நீலமயில். 73. போக்கும்... இல்லாதொன்று - திருவருள். மனோலயந்தானே தரும் - என் முயற்சியின்றி மனத்தின் லயத்தைத் தானாகவே தரும். 74. அராப்புனை வேணியன் - பாம்பணிந்த சடையுடைய சிவன். குராப்புனை - குருந்த மலரணிந்த. ஐவர் பராக்கறல் - ஐந்து இந்திரியங்களாலுண்டாகும் பராக்கு அறுதல். 75. முசியாமல் - தளராமல். மிடிக்கின்றிலை - வறுமையடைகின்றிலை. 76. கோடாதவேதன் - கோணாத (நடுநிலை பிறழாத) பிரமன். தாடாளனே - முயற்சி (செயல்) உடையவனே. 77. சேல்வாங்கு கண்ணியர் - சேல்மீனின் தன்மையைக் கவர்ந்த கண்களையுடைய பெண்கள். மால்வாங்கி-மோகம் கொண்டு. வெள்ளி... கிழத்தி - வெள்ளையானையையுடைய இந்திரன் மனைவி. நூல்வாங்கிடாதன்று வேல்வாங்கி - தாலிக்கயிறு அறுபடாமற் காத்த வேலாயுதன். 78. ஏற்றம் - புகழ். சாளிகை - பை. 79. சிந்தாகுலம் - மனத்துயரம். அமராவதி காவலனே - இந்திரன் நகரைக் காத்தவனே. 80. மாகத்தை - வானத்தை. தோகைப்புரவி - மயில். த்யாகப் பொருப்பை - அளவின்றிக் கொடுக்கும் மலைபோன்ற வள்ளலை. த்ரியம்பகனை - முக்கண்ணனை. 81. தாராகணம் - நக்ஷத்திரக் கூட்டம் (கார்த்திகைப் பெண்கள்). 82. தகட்டிற் சிவந்த - காய்ச்சிய தகடுபோலச் சிவந்த. கடம்பையும் - கடப்பமலரையும். புண்டரீகன் - பிரமன். பகட்டில் - பகடு (ஆண் யானை) போல. 83. தேங்கிய -

நிறைந்த. தாங்கி - ஆயுதங்களைத் தாங்கி. தளம் - சேனை. 84. கைவரும் - கைகண்ட, பழக்கமான. பைவருங்கேள் - துயருறும் சுற்றம். 85. விழி நாசி வைத்து - மூக்கு நுனியில் பார்வையைச் செலுத்தி. 86. சங்கு...கந்தசுவாமி - திருமாலும் பிரமனும் அறியாத சிவன் தந்தருளிய முருகன். சுடர்...கொடியோன் - சிவந்த கொண்டையையுடைய சேவற் கொடியோன். என்பாலாயுதம் வருமோ-என்னிடம் (எமனது சூலமாகிய) ஆயுதம் வருமோ? 87. தமராகி - தம்மவராகி, அடியாராகி. கடையேடு - கடைசி ஓலை, சாவோலை. 88. கொடியும் - காக்கையும். துணங்கை அலகை கொண்டாட - பேய்கள் துணங்கைக் கூத்தாட. பிசிதர் - அசுரர். 89. பங்கேருகன் - பிரமன். பட்டோலையிலிட - கணக்கு ஏட்டில் இட (பிறவியைத் தர). ஓதம் - கடல். பொன்னஞ் சிலம்பு - பொன் மயமான (கிரௌஞ்ச)மலை. இனி... விலங்கே - பிரமன் இனி எனக்குப் பிறவி தருவானாயின் காலில் விலங்குபெற்றதுபோலக் கை விலங்கும் பெறுவான் என்பது குறிப்பு. 90. மன்றூடி - அம்பலத்தில் ஆடும் நடராசன். 91. கருமான் மருகனை - கரியமால் மருகனை. மாகுலவன் - வேடன். கைக்கோளனை - கையிற்கொண்டவனை. கன்னிப்பூகம் - இளங்கமுக மரம். தருமா - மா தரு, மாமரம். 92. சண்டதண்டம் - வேகமும் வன்மையுமுடைய சேனை. மண்டலம் - மண்தலம், பூலோகம். 93. மண்கமழ் உந்தித் திருமால் வலம்புரி ஓசை-(பூமியை யுண்டதால்) மண்வாசனை கமழும் வயிற்றையுடைய திருமாலின் வலம்புரிச் சங்கோசை (கிருஷ்ணவதாரத்தில் தேவரை வென்று பாரிசாதம் கொண்டுவந்தபோது ஊதிய சங்கோசை). 94. வேட்டிலை - விரும்பவில்லை. சிறு...கெண்டை - சிறிய வள்ளையிலை போன்ற காது வரையில் நீண்ட கண். தோதகம் - வஞ்சம். மூரல்-பல். மாதரை வேட்ட நெஞ்சே! முருகனை வேட்டிலை என்றபடி. 95. தோன்றாது சத்தியம் - (சுகாதீத) உண்மை நிலை தோன்றாது. சூகரம் - பன்றி. க்ருபாகரன்...சந்திப்பதே - கிருபையுடைய முருகன் உபதேசிக்கக் கேட்ட கேள்வியினால் சாதனஞ் செய்தால் யாருமில்லாத தனி வெளியிலே (அவ்வுண்மை நிலை) வந்து கூடும். 96. தனி விடில் - என்னைத் தனியான (சுத்த) நிலையில் விட்டால். வடக்கிற் கிரி - மேருமலை. கதிர் - சூரியமண்டலம். கனக சக்ரத்திடர் - பொன்மயமான சக்கிரவாளகிரி. திரிகுவையே -

(திரோதான சத்தியாகிய உனது தொழில் அற்றுத்) திரிவாய். **97.** கலபி - மயில். அனந்தன் - ஆதிசேஷன். பணிலம் - சங்கு. **98.** நதிதனையன்ன பொய் வாழ்வு - ஆறிடு மேடு மடுவும் போன்ற நிலையில்லாத வாழ்வு. 99. காவிக் கமலம் - செந்தாமரை. 100. இடுதலை - தானம் செய்வதை. கூட்டியவா - கூட்டியவாறு (முறைமை) என்ன வியப்பாயிருக்கிறது! 101. சலம் - சலனம், கோபம்.

---

## கந்தரந்தாதி

இந்நூலுக்கு வில்லிபுத்தூராழ்வார் செய்ததாகக் கூறப்படும் உரை அச்சுப் புத்தகமாகக் கிடைக்கும். இயமகம், திரிபு முதலியவைகள் நிறைந்த இந்நூலுக்கு உரைக்குறிப்புகள் பயன்படா. உதாரணமாகக் காப்புச் செய்யுளில் நான்கடியிலும் வரும் "வாரணத்தானை" என்ற சொல்லுக்கு முறையே இந்திரன், திருமால், முருகன், கஜமுகாசுரன் என்று பொருள் கொள்ளவேண்டும். அடுத்த செய்யுளில் நான்கடியிலும் வரும் "உண்ணு முலையுமை மைந்தா சரணம்" என்ற தொடரை வெவ்வேறு வகையாகப் பிரித்துப் பொருள் கொள்ளவேண்டும். இவ்வாறே ஒவ்வொரு செய்யுளுக்கு முள்ளது. உரையை விரிவாகப் பயின்றாலன்றிக் குறிப்புகளால் ஒன்றும் விளங்காது. எனவே, வில்லிபுத்தூராழ்வார் உரை கூற முடியாது திகைத்த "திதத்தத்த" என்ற ருச-வது செய்யுளுக்கு அருணகிரிநாதரே கூறிய உரையை மட்டும் முழுமையும் கீழே குறித்துள்ளோம்.

திதத்தத் தத்தித்த - திதத்தத் தத்தித்த என்னுந் தாளமானங்களை, திதி-திருநடனத்தாற் காக்கின்ற, தாதை - பரமசிவனும், தாத - பிரமனும், துத்தி - படப்பொறியினையுடைய, தத்தி - பாம்பினுடைய, தா - இடத்தையும், தித-நிலைபெற்று, தத்து - ததும்புகின்ற, அத்தி - சமுத்திரத்தையும் பாயலாகக் கொண்டு, ததி - தயிரானது, தித்தித்ததே - தித்திக்கின்றதென்று, து - உண்ட கண்ணனும், துதித்து - துதிசெய்து வணங்குகின்ற, இதத்து - பேரின்ப சொரூபியான, ஆதி - முதல்வனே! தத்தத்து - தந்தத்தையுடைய, அத்தி - அயிராவதத்தால் வளர்க்கப்பட்ட, தத்தை - கிளிபோன்ற தெய்வயானைக்கு, தாத - தொண்டனே! திதே - தீமையே, துதை - நெருங்கிய, தாது.

-சப்த தாதுக்களால் நிறைந்ததும், அதத்து - மரணத்தோடும், உதி - சனனத்தோடும், தத்து - பல தத்துகளோடும், அத்து - இசைவுற்றது மான, அத்தி - எலும்புகளை மூடிய, தித்தி - பையாகிய இவ்வுடல், தீ - அக்கினியினால், தீ - தகிக்கப்படுகின்ற, திதி - அந்நாளிலே, துதி - உன்னைத் துதிக்கும், தீ - புத்தி, தொத்தது - உனக்கே யடிமையாக வேண்டும். (எ-று.) தீ - எழுவாய். தொத்தது-பயனிலை. ஏ - அசை.

---

## கந்தரநுபூதி

**காப்பு.** கனகல் - கனத்த கல். தஞ்சத்தருள் - தஞ்சமென்று கூறுமிடத்து அருளுகின்ற. இயல் சேர் செஞ்சொல் - இயற்றமிழாகிய செம்மையான சொல். பஞ்சக்கர - ஐந்து கைகளையுடைய. **நூல்.** 1. ஆடும்பரி - மயில். தேடும் கயமாமுகன் - தனக்கு விரோதிகள் உயிரோடுளரோ எனத் தேடிய கஜமுகாசுரன். 2. உல்லாச, நிராகுல, யோக, இதச் சல்லாப எனப் பிரிக்க. 3. ஆண்டவிடம் - குருமூர்த்தம். 4. வளைபட்ட - வளையல் அணிந்த. தளை - விலங்கு. கிளைபட்டு - சுற்றத்தாரோடு. 5. மகமாயை - பெரிய மாயை. முகமாறு மொழிந்தும் - அறுமுகங்களை வழுத்தியும் (பிரான் தனது திருவாயால் உபதேசித்தும் என்று பொருள் கொள்வாருமுளர்). ஒழிந்திலனே தயங்குவதே - தயங்குவதை ஒழித்திலேன். 6. திணியான - திண்மையான, கடினமான. அரும்புமதோ - தோன்றுவதாமோ. பணியா என - பணி ஏதேனும் உளதோ என்று காத்திருக்கும் (வள்ளியின் குற்றேவலைச் செய்ய முருகன் காத்துளன் என்பது குறிப்பு). 7. கெடுவாய் - (கேளாவிடில்) கெட்டுப்போவாய். 8. அமரும் பதி - இருக்கும் ஊர். கேள் - சுற்றம். பிமரம் - பிரமை, மயக்கம். தானவநாசகன் - அசுரரை நாசம் செய்தவன். 9. மட்டூர் குழல் - தேன் ஊர்கின்ற (சொட்டுகின்ற மலர்கள் செருகிய) கொண்டை. தட்டூடற - அடுக்குகள் இடையே அறும்படி. 10. கார் மா - கரிய எருமை. கலபத்து ஏர் மா - கலாபமுடைய அழகிய மயில். வலாரி தலாரியெனும் சூர்மா - இந்திரனுக்குப் பகைவனாகிய சூரபன்மன். 11. கூகா என - கூகூ காகா என்று கூச்சலிட்டு. நாலுகவித்தியாகா -

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால்வகைக் கவித்திறமையை எனக்குத் தியாகமாக அருளியவனே. 12. செம்மான் மகள் - செம்மையான மான் வயிற்றில் வந்த மகளாகிய வள்ளி (மால்மகள் எனினும் அமையும்). பொருளொன்று மறிந்திலனே - அது இது என்ற சுட்டுணர்வும் பேதவுணர்வும் போய் எல்லாம் கடவுள் மயம் என்ற உணர்வு வந்தது என்பது குறிப்பு. 13. தாமோ - தரமன்று என்பது குறிப்பு. 14. கைவாய் - கையினிடத்தில். 15. புங்கவர் - தேவர். பஞ்சரம் - கூடு. 16. பிணிபட்டோரா - கட்டுப்பட்டு ஒன்றையும் அறியாத. தாந்தரன் - காப்பவன். 17. தாமே பெற - நாம் அர்ப்பணம் செய்யத் தாமே திரும்பவும் பெற. பூமேல் மயல் - பூமிமேல் மயக்கம், உலக வாழ்க்கையில் பற்று. அறமெய்ப் புணர்வீர் - அறமும் உண்மையும் பொருந்திய ஒழுக்கமுடையீர் (தர்மம்சரா, ஸத்யம் வதா என்ற குறிப்பு). நாமேல் நடவீர் - நாவினால் துதிசெய்யுங்கள். 18. உணரா மறவா - உணர்ச்சி மறதி முதலிய மனத்தொழிற்பாடில்லாத. விதி - பிரமன். அதிகா - மேலானவனே. அநகா - சுத்தமானவனே. 19. குடிபோகியவா - விட்டுவிட்டு வேறிடம் போனவாறு என்ன வியப்பாயிருக்கிறது! மிடி - வறுமை. 20. உரிதா - உரித்தாக. விரிதாரண - விரிந்த நிலையையுடையவனே. சர்வ வியாபியே. இமையோர் புரிதாரக - தேவர்கள் இடைவிடாது சிந்திக்கும் தாரகமந்திர ரூபியே. 21. வனசம் - தாமரை. விபாடணன் - அழிப்பவன். 22. தவமெய்தியவா - தவம் எய்தியவாறு என்னே! (என்ன புண்ணியம்!). பாளைக்குழல் - கூந்தற்பனையின் அவிழ்ந்த பாளைபோன்ற குழல். வேளை - முருகவேளை. சுராபூபதி மேருவை - இந்திரனுக்கு மேரு போன்றவனை. 23. முடிய - முழுவதும். பூதரம்-மலை. 24. எண்ணுமதோ - எண்ணுவதுமுண்டோ. புரந்தர பூ - இந்திரலோகம். 25. கையோ...செய்யோய் - செங்கை, செவ்வேல், செங்கழல் என்ற குறிப்பு. 26. விநோத - விநோதனே. 27. யான் என்னே - யான் என்னுவது (என் கதியென்ன ! காப்பாற்றுக). 28. ஆனா அமுதே - ஆனாத (பிரியாத) அமுதமே. நவில...தற்பரமே- ஆணவமல உருவான என்னை ஒடுக்கித் தானாக நிறுத்திய நிலை வாயாற் கூறத்தக்கதோ. 29. இல்லே - இல்லற வாழ்க்கை. மல்லே - மல்யுத்தமே. வாகு - பாஹு, புஜம். 30. அன்று ஒவ்வாததென

உணர்வித்தது-அன்றையதினம் (எனது வாழ்க்கை உண்மைநெறிக்கு) ஒவ்வாததென்று உண்மை நெறியை உபதேசித்த இரகசியம். அவ்வாறு-உபதேசக் கிரமத்தில் ஞானாசிரியர் மூலம். 31. செய்தன-நான் (முற்பிறவிகளில்) செய்தன. வாழ்வாய்-(என்னை வீழ்த்திய) நீயேனும் வாழ்வாயாக. 32. கலையே...விடவோ - கலைமான் பதறிக் காட்டிலுள்ள செடி கொடிகளில் தனது கிளைத்த கொம்புகளை மாட்டிக்கொண்டு எடுக்க வராமல் கதறி அலைதல் போல இவ்வாழ்க்கையில் நான் அவதிப்படுவதோ. 33. சிந்தாகுலஇல் - மன வியாகுலத்தைத் தரும் இல்வாழ்க்கை. விந்தாடவி - விந்தையான காடு. மந்தாகினி - கங்கை. 34. சங்க்ராமம் - போர். சிகாவலம் - மயில். 35. விதி காணும் உடம்பை - பிரமதேவன் தந்த உடலை. மதி வாள் நுதல் - சந்திரன்போலப் பிரகாசிக்கும் முகம். 36. ஓதாயென - உபதேசம் செய்க என்று விண்ணப்பிக்க. வேதா - பிரமன். 37. இறையோன் பரிவாரமெனும் பதமேவலையே - கடவுளின் பரிவையே ஆரமாகக் கொண்ட திருவடியின் தொண்டையே (அடியார்பணி யெனும் திருவடித் தொண்டையே எனினும் அமையும்). 38. ஆதாளி - வீண்டம்பன். தீதாளி - குற்றவாளி. கூதாளகிராதகுலி - வெள்ளரிப்பூவைச் சூடிய வேடர் குலப்பெண். 39. மூவேடணை - மூன்று ஈடணை (மண் பெண் பொன் எனும் மூன்று ஆசை). 40. இதண் - பரண். 41. கா கா - காப்பாற்று, காப்பாற்று. வாகா - வாகை (வெற்றி மாலை) சூடியவனே. 42. குறியைக் குறியாது குறித்து - முத்திநிலை இதுவென்று சொல்லாமற் சொல்லி. செறிவு - மலத்தடிப்பு. அறிவு - பேத அறிவு, சிற்றறிவு. அறியாமை - அஞ்ஞானம். 43. தூசாமணி - சாணை பிடிக்காத மணி. பேசாஅநுபூதி - மோனநிலை. 44. வீடு - திருவடிப்பேறே முத்தியென்பது குறிப்பு. புனம் - வள்ளியின் தினைப் புனம். 45. காவு - வஞ்சனை. கடை - வாயில். குலிசம் - வஜ்ராயுதம். 46. மறைநாயகன் - வேதங்களால் ஓதப்படும் தலைவன். 47. ஆறாறையும் - முப்பத்தாறு தத்துவங்களையும். 48. இப்பாட்டின் கருத்து, சிவஞானசித்தியார் சுபக்கத்து எட்டாம் சூத்திரம் ௩௦-வது செய்யுளாகிய " அறியாமை அறிவகற்றி " என்னும் பாதி விருத்தத்தோடு ஒப்பிட்டு உணரற்பாலது. 49. கின்னம் - துன்பம். 50. அறவாடி - முழுதும் வாடி. நதிபுத்திர - கங்கையின் புத்திரனே. திதிபுத்திரர் -

திதியின் புத்திரர், அசுரர். 51. இலதாய் - அண்டங் கடந்ததாய், தோய்வில்லாததாய். மருவாய் - பூவின் மணமாய்.

பெரும்பான்மையோர் ஐம்பத்தொரு பாக்களையே பாராயணஞ் செய்வதால் இம்மட்டிலே உரைக்குறிப்பை முடித்தாம்.

---

# திருப்புகழ்

**விநாயகர் துதி.** (க) கைத்தலம் - கையாகிய இடம். கப்பிய - மிகுதியாக உண்ணும். கரிமுகன்...உறைபவ - விநாயகரை வணங்கிப் பதிநூல்களைக் கற்கும் அடியார் புத்தியில் நின்று அருள்புரிபவனே. கற்பக...கடிதேகும் - கற்பகனே (வள்ளலே) என்ற அளவில் வினை ஓடிப்போகும். மத்தம் - ஊமத்தமலர். மற்பொரு - மல்யுத்தம் புரியும். மட்டவிழ் - தேன் பொழியும். முத்தமிழடைவு - இயல் இசை நாடகம் என்ற முத்தமிழின் முறைமை (பாரதக்கதை யென்பாரு முளர்). முற்படுகிரி - முதன்மையான மேருமலை. அத்துயர் - வள்ளி மீது காதற்றுயரம். இபமாகி - யானையாக வந்து. (உ) உம்பர்தரு - கற்பகம் முதலிய தேவலோக மரங்கள். தேனு - காமதேனு. மணி - சிந்தாமணி. கசிவாகி - (இவைகள் கேட்டதைத் தருவது போல) இரக்கத்தோடு. ஒண்கடலில்...ஊறி - பாற்கடலில் தோன்றிய இனிய அமுதம்போல உணர்ச்சியில் ஊறி. இன்பரசத்தே - இன்பரசத்தையே. வலத்தால் - வலம் செய்ததின் பலனாக. (ங) பக்கரை - கடிவாளம், கவசம், அங்கவடி. கலணை - தவிசு, சேணம். பக்ஷி - மயில். துரகம் - குதிரை. நீபம் - கடம்பு. குவடு - மலை (கிரௌஞ்சம்). செய்ப்பதி - வயலூர். இக்கவரை - இக்கு (கரும்பு) அவரை. வண்டெச்சில் - தேன். மூலம் - கிழங்கு. (ச) அடைசு - நிறைந்த. கடியுலவுபாயல் - மணம்மிகுந்த மலரணை. இடையர்...ஆனைமுகவோனே - இங்கே கூறப்படும் வரலாறு இன்னதென்று தெளிவாக விளங்கவில்லை. (ரு) தொத்திர - தோத்திர. குழைபிடி தொப்பண - காதைப் பிடித்துத் தோப்பணம். சிறிய அறுபதம் - ஈ. (நூல்). முத்தைத்தரு... அத்தி - முத்து போன்ற பல்வரிசையுடைய தெய்வயானை. சுருதியின் முற்பட்டது - ஓம் என்ற பிரணவம். இருவரும் - பிரமனும் விஷ்ணுவும். கிரிமத்தை - மந்தரகிரியாகிய மத்தினால். பட்டப்பகல்...

இரவாக - கிருஷ்ணன் சக்கிராயுதத்தால் சூரியனை மறைத்து அஸ்தமனம் ஆய்விட்டதென்று ஏமாற்றிய பாரதக்கதை. கழுதாட - பிசாசு ஆட.

1. சித்தசனுர் - மன்மதன். தொண்டர்க்கிணையாக - தொண்டர் கூட்டத்தில் சேர. கந்தர்ப்பன் - மன்மதன். 2. குணத்ரயம் - சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்கள். அலகை கரணமிட - பேய் குட்டிக்கரணம் போட. பவுரி - ஒருவகைக்கூத்து. 3. இகரம் - சந்தம். மகபதியாகி மருவும்வலாரி - (நூறு அசுவமேத) யாகம் முடித்த தலைவனான இந்திரன். 4. மோனமேகோயில் - மௌன நிலையே கோயில். அசையவே க்ரியாபீடமிசை புகா - மனம் அசைவுறும்படியான கிரியா பூசை செய்யப் புகாமல். ஆதராமோதமலர் - அன்பென்னும் மணம் வீசும் பூ. (ஆதரம் - அன்பு ; ஆமோதம் - வாசனை). வேதனுதீத - அறிவுக்கு மேம்பட்ட. தனுவை - உருவத்தை. விகட...தாள - அழகிய இதழுடைய தாமரை யொத்த நீண்ட திருவடியுடையவனே. விரகராக போதார் அசுரகால - காமஇச்சை போதம் நிறை அசுரர்க்குக் காலனே. விபுத - அறிஞனே. 5. சட்சமயிகளொடு - ஆறு சமயத்தவரோடும். வெட்காதட்கிடும் - அஞ்சாது வாதம் செய்யும். வினைவிள - வினைவிள்ள (நீங்க). கட்சேர்வெட்சி - தேன்கமழும் வெட்சிப் பூ. பொடிகொடு...கழுவேற - திருநீறு கொண்டு சமணர்கள் கழுவேறும்படி செய்து. துரகமுகக்கோதை - குதிரை முகமுடைய (கற்கிமுகி என்ற) பூதம். (திருமுருகாற்றுப்படை பாடியபோது சிறை நீங்கிய கதை. மிக்காரத்தினை - உயர்ந்த தேவாரத்தை. வனத்தை எற்றிய - (வைகையாற்று) நீரிலே (எதிர் செல்ல) எற்றிய. 6. ம்ருகமதம் - மானின்மதம், கஸ்தூரி. இருவரும் - சூரிய சந்திரரும். பங்கேருகன் - பிரமன். கரியில் வருந்தேவு - இந்திரன். 7. அக்கு - கண். அத்தி - எலும்பு. அள்வழுப்பு - காதுக்குறும்பி. சொச்ச - சுத்தமான. 8. அங்கதன் - பொய்யன். கண்டகன் - கீழ் மகன். பங்கிலன் - பாங்கில்லாதவன். 9. சூளைகள் - வேசியர். 10. சிங்கி - நஞ்சு. 11. எட்டாம் எழுத்து - ஓம் சரவணபவ. 12. அஞ்சனம் - மை. 13. புயல்நேர் - மேகம் போல் கறுத்த. அம்பரம் - சேலை. சடக்ஷரப் பிரபந்த சடானன - ஆறெழுத்து குறிக்கப்பட்ட யந்திரத்தால் பூசிக்கப்படும் அறுமுகனே. 14. அதிரேகம் -

அதிசயம். 15. செந்துணுக்கு - பவளம். கோவிதழ் - கோவையிதழ். குண்டு - தாழ்வு. மாவளி - பெரிய வள்ளி. 16. அடலரி மகவு விதி வழி - திருமால் மகனான பிரமன் விதித்தபடி. சயம்பு - ஸ்வயம்பு. 17. துலையலைமாறு - தராசுமுள் அலைவதுபோல். 18. உவிய - அவிய. தலைவாழ்வு - சிறந்த வாழ்வு. 19. மதனாகமும் - மன்மதன் உடலும். 20. எயினர் - வேடர். ககபதி - கருடன். 21. ஆரியாசார - மேலான ஆசாரம் பொருந்திய. ராசீகம் - தாமரை. பாரரை மாமேரு - பருத்த அரையையுடைய மந்தரகிரி. மகுடவாளரா - கிரீடமுடைய ஒளி மிக்க பாம்பு (வாசுகி). வாரீசவனிதை மேவுதோ ளாயிரமு நோவ - பத்மாசனியாகிய இலக்குமி (திருமாலோடு) மேவும் (ஆதிசேட னுடைய) ஆயிரந் தோள்களும் (கடையும் வேகம் தாளாமல்) நோவ. 23. கணி - வேடன். 24. மடிசுருள் - வெற்றிலைச் சுருள். 25. மஞ்சினன் - இந்திரன். மைந்து மயில் - வலிமையுடைய மயில். 26. உவணஆர்தி - கருடவாகனர். 28. அழகி - மங்கையர்க்கரசி. கான்மாதை - வள்ளியை. 29. பத்மத் தச்சன் - பிரமன். குயிலைத் திண்சிறகரிந்து - குயிலுருவோடு தப்பித்தோடும் இந்திரன் சிறகை அரிந்து. பனவி - தக்கன் மனைவி. 31. குக்குடாத்த - சேவற்கொடியுடைய கையனே. சர்ப்பகோத்ரி - சேஷாசலம் (=திருப்பதி), திருச்செங்கோடு என்பாருமுளர். 32. வெள்ளிபத்தர் கன்னி - வெள்இபத்தர் கன்னி(=தெய்வயானை). 33. இப்பாட்டின் பதவுரை வடக்குப்பட்டு - சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பதிப்பில் 382-ஆம் பாட்டின்கீழ் தரப்பட்டுள்ளது. 34. சங்கதம் - நட்பு. 38. சமர...விடுவோனே - ஒற்றுமையான பெருந்தன்மை பொருந்திய தேவர்கட்குப் பகைவர்களாகிய கீழ்ப்பட்ட அரக்கர்மீது உண்மையான ஆஞ்ஞாசத்தியாகிய வேலாயுதத்தை விடுவோனே. 42. கண்டளாவிய - கற்கண்டுபோல் இனிப்புடைய. விளர்க்க - வெளுக்க. மறுகிட - கலங்க. சிகண்டியூர் - மயில் ஊர் (மாயூரம்). 43. அமுதததி - அமுத உததி, பாற்கடல். திங்கட் பகவினொளிர் - பிறைபோல் ஒளிரும். குலதடினி - கங்கை. 44. இரணம் - போர். சமயச் சிலுகு - சமயச் சண்டை. சடுபத்ம முகக்குக - தாமரைபோன்ற ஆறுமுகமுடைய குகனே. 45. கிராதி - கிராதகுல வள்ளி. சம்பராரி - மன்மதன். 56. கோமாயு - நரி. 65. அரைப் பணம் - அல்குற்படம். 67. அருக்கு - அருமையான. அடியவர் திருக்

குருந்தடி அருள்பெற-மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் குருந்த மாத்தடியில் உபதேசம் பெற்ற வரலாறு ஈண்டு குறிப்பிடப்பட்டது. 68. இருணிறைய மோதி - இருள்நிறைந்த அழகிய கூந்தல். 69. தனகிய - களிப்புற்ற. பராவி - பாவி, புகழ்ந்து. 72. அலமலம்-போதும் போதும். சலிலலிபி - நீர்மேலெழுத்து. 75. மருண - கணவனே. தவராராதவ - தவசிகட்கு ஆதவனே. 77. அலகின்மாறு - விளக்குமாறு, துடைப்பம். மாருதகலதி-மாறுதலிலாத மூதேவி. 88. தோட்டம் பொற்குழை - தோடாகிய அழகிய பொற்குழை. தென்காற்கன்று - இளந்தென்றல். கஞ்சாக் கன்று - மன்மதன். 94. அழுதமாமாவென - அழுது அம்மா அம்மாவெனக் கதறி. பெரிய வாதேச - பெரிய கிரகசாரமான. புற்புதமாய-நீர்க்குமிழிபோன்ற. ஆறுயினத் தனசாரம்-ஆறு தாய்மார்களுடைய (கார்த்திகைப் பெண்களுடைய) ஒத்த முலைப்பால். ஆறுனனச் சிறுவ - ஆறுமுகமுடைய சிறுவனே. 104. அலரி - சூரியன். மூளரி - அக்கினி. மறிபரசு-மான்மழு. மதலை-தோணி. 107. ஈமொலேலெனு-ஈக்கள்மொல்லென்று சூழ்ந்து மொய்க்க. வாயையாவெனு - வாயை ஆவென்று திறந்திருக்க. 112. அனத்தோடொப்பா மெனுநடை மடவியர்-அன்னத்துக்கு ஒப்பான நடையுடைய பெண்கள். இனமெனதுயிர் - இன்னம் எனது உயிர். முனைப்பாடிக்கே - முன்னை (கோபிகாஸ்திரீகள் வசித்த) பாடிக்கே. முகிற்கே நத்தா - மேகத்துக்கே விருப்பம்கொண்டு. 124. மாசிலோர் புத்தி அளிபாட - மாசிலாத ஒப்பற்ற புத்தியானது குளிர்ந்து பாட. மாத்ருகா புஷ்பமாலை - அக்ஷர மாலை, பாட்டு. பிரவாளம் - பவளம். மூசுகானம் - அடர்ந்த காடு. முத்த மூரல் வேடிச்சி - முத்துபோன்ற பற்களையுடைய வள்ளி. வீசுமீனப்பயோதி - மீன்கள் துள்ளி வீசும் கடல். பராரை நாகம் - பருத்த அரையினையுடைய கிரௌஞ்சகிரி. 126. இப்பாடலில் வரும் பல விஷயங்கள் ஆறுதாரங்களின் நிலை, உருவம், யோகம் செய்யும்முறை முதலியவற்றைக் கூறுகின்றன. 141. அகற்குரு அடியாலே - அந்தக் கல்லுக்கு (அஹல்யையாகிய பழைய) உருவத்தைத் திருவடிஸ்பரிசத்தாலே. பினவனோடே - தம்பி லக்ஷ்மணனோடு. 142. வீணைநாதன் - நாரதன். நாளிகேரம் - தென்னை. வருக்கை - பலா. 152. மானமுற - எண்ணிக்கை மிக. வியாகுல மிதேதெனு விஞவிலுனை எவர் புகழ்வார் - அடியவர்க்கு

வியாகுலம் ஏன் இருக்கிறது என்று வினவினால் (நீ பாராமுகமா யிருக்கிறாய் என்றெண்ணி) உன்னை யார் மீண்டும் புகழ்வார். (உடனே அருள்புரியவா வென்பது குறிப்பு). 155. ஆறாறினதிக மக்ராயம் - முப்பத்தாறு தத்துவங்கட்கு மேற்பட்ட தலைமைத்தானம். 163. கடந்தோல் - மதயானை. கடந்தோற் றறிந்தாட்கு - காட்டில் தோன்றியதை யறிந்த வள்ளிக்கு. கரும்போற்கு அரும்போர்க்கு உளம்காட்டி - மன்மதனுக்கு நெற்றிக்கண் திறந்து போர்செய்த சிவபிரான். 173. திட்டே ரதத்தசுரர் - திண்ணிய தேர்கொண்டு அதம் செய்யும் அசுரர். 178 - மயில் தகர்கலிடையர் - மயில் நடமாடும் கல்விடை (மலையில்) வசிக்கும் வேடர். 181. கணவாள் - கண்ணாகிய வாள். 184. சியும் - சீயும் (சீழும்). மாயா பிரத்தம் - மயக்கம் அதிகமாதல். 186. அகுதியிவள் - கதியில்லாதவள். ஓகார பரி - பிரணவ உருவான மயில். நிரைபரவி - பசுமேய்த்து. மருதிறொடு பொருசகடு - கம்ஸன் அனுப்பிய மருத மரமும் சக்கரமுமாய் வந்த அரக்கர். 191. புரந்த கடவுளுடன் - புராந்தக கடவுளுடன், சிவனுடன். 196- பவனப் புவனச் செறிவுற்றுயர் - வாயுமண்டல முழுதும் ஊடுருவி உயர்ந்த. 202. சியொதனன் - துரியோதனன். 206. இருவினை புனைந்து - பெருஞ்செயல் (தவம்) புரிந்து. விழிமுனை - புருவமத்தி. இருவினை இடைந்து - நல்வினை தீவினைகள் ஒழிய. 219. பணைபணி சிறந்த தரளமணி சிந்து - மூங்கில்களும் பாம்புகளும் முறையே உயர்ந்த முத்துக்களையும் மணிகளையும் சிந்துகின்ற. 223. நிலாவிரிநிலாமதி - சந்திரிகை பரப்புமதி. நிலாதவ நிலாசன நியாயபரிபாலஅர - அசையும் காற்றைப்புசிக்கும் (அநில அசன) நியாயபரிபாலனஞ் செய்யவல்ல ஆதிசேடனை. ராவணபுயாரிட - ராவணன் புஜங்கட்குப் பங்கம் (அரிஷ்டம்) விளைக்கும். நிராமய சரோருகரன் - நிர்மலபாத தாமரையுடைய அரன். விலாசுகம் - வில் ஆசுகம் (= அம்பு). ஆகவவியாதர் - போரிடும் வேடர். 233. தன்பொருந்தம் - தண்பொருனையாறு, தாமிரபரணி. 241. வனமழியும் - வனப்பு அழியும். மைதவழ்ந்தவா - மேகம் தவழ்ந்ததுபோல. 246. பதமை - இதங்களை. கோவவனிதையர் - கோபிகாஸ்திரீகள். செயிற்சேல்...பழநி - வயலிலுள்ள மீன்கள் விண்மீன்களோடு சண்டைக்குப் போய் விம்மு (ஒலிக்கின்ற) அமர்புரிந்து ஜெயித்து ஓடிவரும் பழநி.

(பகலிலும் வயல்மீன் மின்னுவதால் ஜெயித்தது என்பது குறிப்புப் போலும்). 266. வினைத்தலம் - போர்க்களம். விழுக்கு - மாமிசம். 284. எந்தன் - என்றன். என்றும்படி - என்றும்போல. அன்பன் கவி - திருமுருகாற்றுப்படை. 289. எழுகுநிறை - ஏழுஉலகும் நிறைந்த. 295. விளப்பென வேழொன்றிடக்கயனும் - விளம்பு என்ன எட்டுக் கண்களையுடைய பிரமனும் (ஏழு ஒன்று இடஅக்க அய னும்). 305. கோவிற்பொறி - கண்ணில் தோன்றிய தீப்பொறிகள் ஆறு. 306. ஏவினைநேர் - அம்புபோன்ற. 310. அசபையும் - அஜ பாமந்திரமும். 311. ஐயும் - இருமலும், கோழையும். பாயப்பல நூலின் அள்ளல் கடவாது - மனதுக்கிசைந்த பல (காமவிளக்க) நூல் களின் சேற்றைக் கடவாமல். வெள்ளமுதுமாவை - சமுத்திரவெள் ளத்தில் தோன்றிய முதியமாமரத்தை (சூரபன்மனை). 314. சூரதி பறமாறும் - சூர்அதிபு அறமாறும், சூரன் ஆதிபத்தியம் அறமாற்றும். 327. ஆறுவரையகாரம் - ஆறு என்று வரையறுக்கப்பட்ட படை வீடுகள். 328. நின்சொற் கோடாதென்கைக்கு - உனது உபதேசம் பொய்க்காது (கோடாது, கோணாது, மாறாது) எனக் காட்டுவதற்கு. தோராவென்றி-தோல்வியில்லாத வெற்றி. 334. வெள்ளைப்பிராட்டி - சரஸ்வதி. வள்ளிக்குலாத்திகிரி-வள்ளிமலையாகிய குலகிரி (சிரேஷ்ட மான மலை). 339. பத்மக்கூட்டிலுறைவோர் - பிரமன். இபத்திற் சேர்பல்சக்கிற் கூட்டர் - யானைமேற் செல்லும் பல கண்களைக் கூட்ட மாகவுடைய இந்திரன் (சக்கு=சக்ஷு, கண்). 340. தபவரி - வெம் மை மிக்க சிங்கம். கனகதநகுலி புணரிதகுணகுக - கனத்த நடை யையுடைய மலைநாட்டு வள்ளியின் புணர்ச்சியுடைய ஹிதகுண முடைய குகனே. காமத்தனஞ்சம்புயனோட-காமன் அத்தனும் (திரு மாலும்) அஞ்ச பிரமனும் ஓட. (அம்புஜம் என்பது தாமரை). நடமிடு மா - ஆடும்மயில். இருடியபிநவகுமரி - சிவமுனியின் அதிசய புத்திரி (வள்ளி). சபரிசெய்கவி - பூசைபுரிந்த நக்கீரர். 344. ருத்திரஜன்ம... குருநாதா - இறையனாரகப் பொருள் வரலாறு ஈண்டு கூறப்பட்டது. சதுபத்நவ - நாற்பத்தொன்பது. 366. பொங்கலுக்கொத்து - பொங்கு அல்லுக்கு (இருளுக்கு) ஒத்து. செம்பொனை - பொற்பணி யை. கசுத்தி - கஸ்தி, துன்பம். தட்சிவனார் - தட்டியசிவனார். 374. பரிபிணி கனகத் தேர்கள் - குதிரைகள் பூட்டிய பொற்றேர்கள்.

375. தணந்த பின் - பிரிந்த பிறகு. மம விநாயகன் - எனது விநாய கன். 376. தரளொப்பிய தசனம் - முத்துப்போன்ற பல். பறி பவர் - பறிப்பவர். துவனி தினை - (கதிர் சாய்ந்து) துவண்ட தினை. 384. குளபதமுற - வெல்லப் பாகுபோன்று பதமெய்த. 395. மயற் கலதி - காதலாகிய மூதேவி. பரிமளப் பாகல்-வாசனை மிகுந்த பலா. 397. இலை சுருள் - வெற்றிலை. பகடித வென்றி - பகட்டு, இதம், வெற்றி ஆகிய மூன்றுமுடைய. 406. அரைப் புண் - பெண் குறி. அஞ்சுங்கொடு மாயும் - கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறிந்து மாயும். 415. உந்தி இறைவன் - பிரமன். எண்கினக் கர்த்தன் - கரடிமுக முள்ள சாம்புவான். புனமேவ - புவனம் மேவ. பரிந்து - பரித்து, காத்து. 420. வேள்படை - மதனவேளின் படையாகிய மகளிர். இலவுக்கிளை யெனும் வாய்வளி நாயகி - இலவென்றும் கிள்ளை யென்றும் உவமிக்கக்கூடிய வாயினையுடைய வள்ளி (வாய் - இதழ், மொழி). 435. சிலையதனுலும் - வில்போன்ற நெற்றி யாலும். சிலையாலும்...பலகணையாலும் - வில்லினிடத்து அசைகின்ற பல கணைகளாலும். கந வனமான் - கனக வனமான், தெய்வயானை. எண்புலவர் - எண்ணத்தகும் புலவர். 442. வணிகோர் குலத்தில் வனிதையுயிர் மீளழைப்ப - அங்கம்பூம்பாவை வரலாறு. 444. வெறி தரு புனல் - கள். மகவயிறரு - மகவு அயில்தரு, புலிக்குட்டி குடிக் கும். உலவைகள் - உலர்ந்த மரங்கள். 446. பொள்ளுற்ற காற்பை - விரைந்தோடும் சுவாசம் நிறைந்த பை. துராற்பை - துன்பம் நிறைந்த பை. வெள்ளத்திமால் - இந்திரன். வெள்ளுத்திமால் - திருமால் (வெள்ளுந்தி, திருப்பாற்கடல்). புள்ளச்வம் - மயில். 450. அகந்தனில் - ஆகத்தில், மார்பினில். கஞ்சுகி - பாம்பு, ஈண்டு ஆதிசேஷன். சமனுதைபட - மார்க்கண்டர் வரலாறு. 453. சிறுத்த செலு...செயமால் - மத்ஸ்யாவதார வரலாறு. எசெறித்த வளைகட லில் வரம்பு புதுக்கி - பாணம்விட்டு அந்த வளைந்த கடலில் அணைபோட்டு. 464. கடமிஞ்சி - மதமிகுந்து. பனகம் - பன்னகம். ஆதிசேஷன். அழலுந்த நகுந்திறல் - திரிபுரமெரியச் சிரித்த திறல், மயில் வென்றனில் - மயிலின் முதுகில். 465. அத்தத் திக்கென நிற்கும் பொருடொறும் பொத்தப்பட்டதொ ரத்தம் - அர்த்தத்தில் கரும்புபோல (அத்தத்து இக்கென) நிற்கும் பொருள்தோறும்

பொதிக்கப்பட்ட ஒப்பற்ற வஸ்துவை. செக்கட்டிக் கயமெட்டும் - சிவந்த கண்களையுடைய திக்கு யானைகள் எட்டும். 468. பனைக்கரச் சினத்தி பத்தன் - ஐராவதமீது வரும் இந்திரன். பயத்தினில் - நீரில் (கடலில்). 469. சிவனிற் புலச்சி - சிவனுக்கு இல்லாள் என்ற ஸ்தானத்துக் குரியவள். 470. மாரணைத் துளிர்த்திடு மானார் - மார் அணைம் (மூலைக்காம்பு) பூரித்திடும் பெண்கள். பைங்கயம்-பசுமையான குளம். 472. கட்செவி வெற்பு - செங்கோடு (வேங்கடமுமாம்). படி கைக்கொண் டறமிரண் டெட்டெட் டெட்டும் வளர்க்கும் தலைவி - அறுநாழிகை நெல்கொண்டு ௩௨ அறங்களை வளர்த்த உமை (காஞ்சிப்புராண வரலாறு). 474. நஞ்சுபுசிதேரை-பாம்பின்வாய்த்தேரை. 487. காமாத்திரமாகி - காம அஸ்திரமாகி, மன்மத பாணமாகி. 497. கூப்பிட்டுசாவருளி - கூப்பிட்டு உசாவி அருளி. 509. குகாம்- குகை. அகரு தூளி - அகிற்பொடி. 520. துரித பதங்க இரதப்ர சண்ட - துரிதமாகச் செல்லும் பதாதிகளையும் (கால்நடைச் சேனை) இரதங்களையும் ஏனைய அங்கங்களையுமுடைய சதுரங்கசேனைப் பிர சண்டனே. 525. மருவு புலவனூர்...இலக்கண விதி - கந்தபுராணக் காப்புச் செய்யுட்கு இலக்கணமுரைத்த வரலாறு. 537. மத்தாக்க மும் - ஊமத்த மலரும், உருத்திராக்கமும். வானத்தாட்டியர் தரு மமுது-கார்த்திகைப் பெண்கள் தரும் முலைப்பால். காத்தனை - காத்த அன்னை. 551. கருதிச் செயலைப் புயனுக்குருகிக் கலவிக் கணயத் தெழுமார்பா - கருது இச்செயல் ஐப்புயனுக்கு உருகிக் கலவிக்கண் நயத்தெழு மார்பா = இச்செயலை (திருமணத்தை)க் கருதும் (கூட்டி வைக்கக் கருதும்) ஐங்கரனுக்கு (கணபதிக்கு) உருகி வள்ளியோடு கலவிபுரிதலை நயந்து எழுகின்ற மார்பனே. 554. விரவினுதல்- வீரவில் நுதல். கழல்பணிய வினை - பண்ணிய வினை கழல. கழல்பணி யையணி - வீரக்கழலாகிய ஆபரணத்தை யணியும். கழல் பணியவருள்- திருவடியைப்பணிய அருளும். மலைநிருதருக-மலைந்தெதிர்த்த அரக்கர் உதிர. பழநி மலைவரு பழநி மலைதரு - கனியையொத்த மலையரசன் புத்திரியாக வரும் பழைய நிர்மலி தரும். பரவைகொல் பரவைவண - கடல்மீது பாணம் விட்ட கடல்போன்ற வர்ணமுடைய. 555. நாலை நாடொறு மடைமாறி - வெளிச்செல்லும் நாலங்குல அளவுடைய வாயுவைப் போகவொட்டாமல் வேறு வழியில் திருப்பி. அமரினை

மேவாத - அமர்தலாகிய சாந்தத்தை எய்தாத. 556. குஞ்சரக் கொம்பு - தெய்வயானை. கலைக்கொம்பு - வள்ளி. 562. படிவளர் குன்றும்படி, கன்றும்படி எனக் கூட்டுக. வங்கந்தன்கண் - ஆதி சேடன்மீது (மரக்கலம் போன்றவன் என்றேனும் வங்கு அந்தன், அதாவது புற்றிலுள்ள அழகன் என்றேனும் கொண்டு ஆதிசேடனைக் குறிக்கலாம்). அன்றென் றொன்றுங் கொண்டு - அத்தி நாத்தி என்ற மந்திரத்தைக் கொண்டு. 568. கோபாவிதழ் - இந்திரகோபம்போல் சிவந்த உதடு. 574. கேதகைய பூ - தாழம்பூ. தேவரிற்கள் - தேவர் இல்லங்கள். 575. சகோத்ரப் பெருமாள் - சகோதரப் பெருமாள். 577. கையொத்து வாழும் - ஒழுக்கமாக வாழும் (கடவுளைத் தொழுது என்பதும் குறிப்பு). உள்ளத்தின் மாய்வதொன்றை - உள்ளத்தினுடைய மாய்வு ஆகிய ஒன்றை (மனோநிக்கிரகத்தை). ஐந்து பொய்யற்ற சோலை - கல்பகம், பாரிஜாதம், மந்தாரம், சந்தானம், அரிசந்தானம் என்ற ஐந்து தெய்வ விருக்ஷங்களுள்ள அழிவற்ற சோலை. 581. என்றற்றலை - எனது தலை. அந்திக் கடல்-இடையேயுள்ள கடல். அந்தப் பொழிலிற் சந்துத் தலையுற்று - மகேந்திரபுரிக்குத் தூது சென்று. சென்றுற்றவர் - வீரவாகு தேவர். 586. தந்திலன் - ஈகை புரிந்திலேன், கொடுத்து வைத்திலேன் (தந்து என்பதை நூல் என்று கொண்டு நூலில்லாதவன், நூலாராய்ச்சியற்றவன் என்றேனும் உபவீதம் இல்லாதவன் என்றேனும் கொள்வாருமுளர்). 598. விலை நிகர் நுதல் - வில்போன்று வளைந்த நெற்றி. விடங்கம் - அழகு, ஆண்மை, தூய்மை. 619. களப...குவடான - களப அப்பு ஒட்டுதல் இட்ட அத்திக் குவடான. பெட்பசலை - பெள் (விரும்பத் தக்க) பசலை. 630. சீறு தத்துகளும் வாளையடுமைப்பாவு விழி - சீறும் யுத்தத்து உகளும் வாளை அடும் மை பாவு விழி (வாள்போன்ற விழி). 631. உலோகித பத்மம் - செந்தாமரை. சுசியர்க்ய சோமா சியா - சுத்தமான அர்க்யத்தைச் சிற்றுண்டியாகக் கொண்டவனே. அக்ஷமாலாதரா - உருத்திராக்க மணிந்தவனே. 636. சிந்தையங் குலம் - மனமாகிய அழகிய கோயில். பணிந்திரென்று - பணிந்து இரு என்று. பரன் சிலம்பு - திருப்பரங்குன்றம். பெறண்டர் - பெற அண்டர். 644. உறுவேனோ-இன்னம் உறுவேனோ (உறேன் என்பது குறிப்பு). கருணை புரியாதிருப்ப தெனகுறையி வேளை செப்பு -

இவ்வேளை கருணை புரியாதிருப்பது என்ன குறை, செப்புக. தருண மிதையா - தருணம் இது ஐயா. 645. சரத்தே - நாணற் புல்லில். வலக்காரம் - வெற்றி. மருத்தூர் மதனூர் - தென்றலாகிய தேரில் ஊர்ந்து செல்லும் மன்மதன். கணுக்கான முத்தே - கண்ணுக்கான முத்தையனே. 648. சமதளவூரா - போரூரா. மரகத ஆகார வாயனும் - பச்சை மேனியுடைய ஆயன், திருமால். இரணிய ஆகார வேதன் - பொன்மேனிப் பிரமன். வசுவெனு மாகாரவீசன் - தீயுருவுடைய சிவன். 650. சுகசொரூபத்தை உற்றடைவேனோ - ஆநந்தமயமான பரசிவத்தின் (தடத்தலக்கணத்து மேம்பட்ட) சொரூப லக்ஷணத்தை நாடி சாயுச்சியம் அடைவேனோ? சுகசொரூபம் என்பதற்குக் கிளியுருவம் என்று சிலர் கூறும் உரை இங்கு பொருந்தாதென்பதை நன்றாக ஆராய்ந்துணர்க. கரிய யூகம் - கருங் குரங்கு. 654 வந்தனன் - வந்து. பதன் பதனென்றிட - பதைபதைக்க. அண்டர்கள் - இடையர்கள். வண்டமிழ் பயில்வோர் பின் திரிகின்றவன் - திருமழிசையாழ்வார் பின் திருமால் சென்ற வரலாறு. 663. இப்பாடலில் பஞ்சாக்ஷரத்திலுள்ள சில எழுத்துக்களைப் பயில்வதால் விளையும் பயன் கூறப்பட்டுள்ளது. 664. கலவி - கலாபமுடைய மயில். 676. கற்றூவிற் காட்டி...பெருமாளே - இவ்வடிகட்கு மனுநீதிகண்ட வரலாற்றையும் கற்றூயிரங்கற்றுறையில் "பொன் போலுங் கள்ளி" யென்ற பாடல் பிறந்த பொய்யாமொழிப் புலவர் வரலாற்றையும் பொருத்தி இருவேறு வகையாகப் பொருள் கொள்ளலாம். ஆவுக்கோடு - பசுமலை. 677. சங்கரித்த மலைமுற்றும் - சங்கரித்து அம் மலை முற்றும். 682. திருவாமூரில் திலகவதியாரும் திருவாரூரில் பரவையாரும் ஈசன் புகழை வளர்த்த பெண்மணிகளாவார். 687. கோலகால - கோலாகல. சீமூதமூர்வலாரி - மேகவாகனனாகிய இந்திரன். ஆபாதனேன் - ஆபாசனாகிய நான். ஏழேழு பேர்கள் - சகூ சங்கப் புலவர்கள். ஊமர்போல - உருத்திரசன்மராகிய ஊமைப் பிள்ளைபோல. 693. அக்ஷரத்தினிடை - ஆகாயத்திலே (கர்ப்பக் குகையிலிருந்து வெளியிடத்துக்கு வருவதென்பது குறிப்பு). விடணற்கு - விபீடணனுக்கு. 700. உததரிசமாம்-நீரூற்றைப் போன்ற. மேவுணர உரு பிரணமாமந்த்ர - மேவு உணர் அ உரு பிரணமா மந்த்ர = பொருந்திய அந்த அறிவுருவாகிய பிரணவ மகாமந்திர.

710. தூவையர்கள் - ஊன் உண்போர். தாடியிடுவோர் - தட்டிக் கொடுப்போர். 717. திண்டுப் புந்தித்திடு கனிதானும் - திண்மை யான பவளமும் (துப்பும்) இனிக்கும் பழமும். 725. காலுமயிரும் பிடித்து மேவு சிலுகும் பிணக்கும்-துன்பம் (சிலுகு) வந்தால் காலைப் பிடித்தும், சண்டை வந்தால் தலைமயிரைப் பிடித்தும். 729. சொக் குப்பொட்டெத்தி - சொக்குப் பொடிபோட்டு ஏமாற்றி. எத்தில் - தந்திரத்தில். உற்பற்றற்கு - உன்னைப் பற்றுதற்கு. 732. சுமடர் - நல்ல அறிவிலிகள் (மடையர்கள்). கவிக்குப் பரிசு சிறிதேனும் தருத லால் சு என்ற அடைமொழி பெற்றனர். 733. பிரமோத வடிகளை எத்திடிராகவகை - விரும்பத்தக்க திருவடிகளை எத்திடும் இசைவகை. ஆதபயில் - ஆதப அயில், பிரகாசிக்கும் வேல். 739. இப்பாடலில் ஞானயோகம் அழகாக வர்ணிக்கப்பட்டுளது. 740. தவனசலதி - நெருப்புக்கடல் (ஈண்டு ஆசைக்கடல்). குருகணி கொடி - கோழிக் கொடி. சிகர குடை - கோவர்த்தன கிரி. நிரை வர-பசுக்கூட்டங்கள் வர. விதுரனில் வருபவன்-விதுரன் வீட்டு விருந்தாளி. அளை-தயிர். அரவு...நடமிடு - காளிங்க நிர்த்தனம். 741. தகரநறை - மயிர்ச்சாந் தின் மணம். 742. உகைமுத்த...பொழுதாலே - (கடலால்) எறியப் படும் முத்துக்கள் மிகுந்துள்ளன எனும்படி (விண்மீன்கள் எழ) சூரி யன் கடலிற் புகுந்து ஒளி குன்றி (அஸ்தமிக்கும்) இம்முதிர்ந்த பொழுதாலே (மாலைக் காலத்தாலே). 743. அசலரும் - அயலாரும். புத்தியை நத்துங் குரகதம் - வேதமாகிய குதிரை. கதிர் நேமி - சூரிய னும் சந்திரனுமாகிய சக்கரங்கள். 745. பெறுதியை-பெறு கதியை. விமலைகள் எழுவர் - சப்த கன்னிகைகள். வசுவபசுபதி - தீ (செம்) மேனிச்சிவன். 746. ஊசற்கடத்தை-ஊசற்கயிற்றை. கஞ்சைமன் - மகாவிஷ்ணு. பரம்பொருப்பு - திருப்பாங்குன்றம். 747. மஞ்சுக் குழல் - மேகம்போன்ற கருங்குழல். மண்டோயங் தீமென் கால்விண் - நிலம் நீர் தீ வளி வான். கண்டாகும் பாலுண்டாய் - கற்கண்டுபோ லினிய ஞானப்பாலை(ச் சம்பந்தனாக வந்து) உண்டாய். கந்தா மைந்தாரந்தோள்-கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள், தூண்போன்ற வன்மையுடைய அழகிய தோள். 750. சர்ப்பத் தத்து - கிரஹணத் தால் வரும் துன்பம். 753. பத்திரங்கட்கயங்காரியொப்புங் குழல்- அம்புபோன்ற கண்ணையும் நீர் நிறைந்த மேகம் (கயம் காரி) போன்ற

கருங்குழலையும். 754. கடும்பு - சுற்றத்தார். மொழிபகர் கேடா - கூறும் வார்த்தை கேளாது (காது அடைந்து). தலைகவிரவிழ்ந்து-தலை ஆடிப்போக வீழ்ந்து. மகிடம் - எருமை. நகிலிணைகள் சிந்துபய மயிலும் - இரண்டு தனங்களிலிருந்து சிந்தும் பாலைக் குடிக்கும். 757. கொடிய பகடு மூடிய முடுகு - கொடுமை மானதுபோல் (நடித்து) வந்த யானை (விநாயகர்) (மணம்) முடிக்க முடுகி. 768. சத்தியெடுத்து - வாந்தியெடுத்து. வெற்பைக் கடுக நடத்தி - மலைபோன்ற யானையை விரைவாக நடத்தி. 774. ஒருத்தல் - யானை, மான் (மேலடியில் வள்ளி கூறப்படுதலால் ஈண்டு தெய்வயானையைக் கொள்ளுதல் பொருந்தும்). 775. தவர் வாட்டோமர சூலம் - தவர் (வில்), வாள், தோமரம் (இரும்புத் தடி), சூலம் ஆகிய ஆயுதங்கள். பவ மாய்த்து - அபாவத்தை மாற்றி. 783. தாக்கமருக்கொரு சாரையை - தாக்கு அமருக்கு ஒரு சாரையை (சண்டையில் தாக்கும்போது சாரைப் பாம்புபோல் சீறி வீழ்பவனை). வேறொரு சாக்ஷியறப் பசியாறியை - மற்றொரு அதிதியும் விருந்தினனுமில்லாது வயிறு நிரம்ப உண்போனை (அதாவது அன்னதானம் செய்யாதவனை). 793. தப்புற்ற கவி - கந்தபுராணக் காப்பு (திகழ்+தசக்கரம்=திகடசக்கரம் என்ற புணர்ச்சியே ஈண்டு தப்பு எனப்பட்டது). அவை முற்பட்டு - சபையில் தோன்றி. புதுத் துறைமாறிய - வீர சோழியம் ஈண்டு புதுத்துறை யெனப்பட்டது. 794. திமிர உததி - இருண்ட கடல். வெமரவணை - விரும்பத்தக்க சேஷசயனம். 814. தோற்றக்கிடையா நீ - காணற்கரிய நீ. சூற்கை - சூலம்பிடித்த கை. கும்பேற்றி - கூட்டத்தை நிரப்பி. 826. கடப்படாம் - கடமைப்பாடாகும். குவட்டி - திரட்டி. 827. அரியரி பிரமாதியர் - இந்திரன், திருமால், பிரமன் முதலிய தேவர்கள். 842. இரு பேதங்கள் - நிர்க்குணம், சகுணம். குண மூவர்தம் - முக்குண மூர்த்தங்களாகிய திரிமூர்த்திகள். கோவம் புகல் வருக - கோக்கள் அழகிய புக்கிடம் (தொழுவம்) வந்து சேர. 846. காகோதாசன - பாம்பை உணவாகக் கொண்ட (மயில்). வேடு கொண்டுள வேடா - வேடனைப்போல வேடம் பூண்டவனே. 855. தோமுறு - குற்றமுள்ள. நம்பில் - விருப்பத்தினால். பாலனமீதுமனுன்முக செம்பொற் பாலனை மோதபாதன - வெள்ளை அன்னத்தின்மீது மன்னிய நான்முக்முடைய செம்பொற் பாலனாகிய பிர

மணைக் குட்டித் தண்டித்தவனே. 871. கிரி ராஜ - குறிஞ்சிக் கடவுளே. கோலால பூஜை - கோலாகலமான (சம்பிரமமான) பூசை. ஈரும் - கருணையும். ஆதி அந்தவுலாவாசு பாடிய சேரர் - பொன் வண்ணத்தந்தாதியும் திருக்கைலாய ஞானவுலாவும் ஆசுகவியாகப் பாடிய சேரமான்பெருமாள் நாயனர். 878. வேமிஜென்று - வேகுமின் என்று. வாரணங் கைமேவு - கோழிக் கொடியைக் கையிற் கொண்ட. 879. நாலாறு நாலு - இருபத்தெட்டு. நாலாருமாகமம் - சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கு வழிகளைக் கூறும் சிவாகமங்கள். ஷடாதரம் - மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை யென்ற ஆறு ஆதாரங்கள். 881. தண்டு-சிவிகை. சத்ரம் - குடை. அத்த மாதரை - விலை மாதரை. 888. சுராலயம் - தேவலோகம். இவர் ஆதி - கலக்கும் முதல். இராவண இராவண இராஜன் - முன் அழுகுரல் எழுப்பிய இருண்ட மேனியுடைய இராவணனுகிய அரசன். மாய் வென்றிராகன் - மாய வென்ற அன்பன். மலராள் நிஜபுராணர் - (அருச்சிக்கும்) மலரைக் கொள்ளும் உண்மையான புராதன சிவன். விராகவ - ஆசையற்றவனே. விராயண பாராயண - வீர அயன பாராயணனே - வீர விழியில் விருப்புற்றவனே. செருவூர் - போரூர். 895. சலதி குளமாய்ச்சுவற - கடல்வறண்டு குளம்போலச் சுருங்க. சூதம் - மாமரமாக வந்த சூரன். 908. அதிராகிருபத்தை - திடமான கடிதத்தை (எமன் ஓலை). ஆதனையுட்புக - யாதனுசரீரத்துட் செல்ல. எமலோகஞ் சார்புருவத்து - எமலோகத்தின் எல்லையில். படர் கொடுபோனுல் - எமபடர்கள் கொண்டுபோனுல். பேருயிரொட்டை - உயிரின் பேரோட்டை. கதமிட்டே - கதறி. ஓதி மமுத்தி - ஓதிமாமுத்தி. ஒதிமமெத்தவனத்தால் - அன்னங்கள் நிறைந்த (தடாக) நீரினுல். வளையூர் - சங்குகள் ஊர்கின்ற (அதாவது நீர் வள நிரம்பிய). 909. கந்தாரர் - கழுத்தினர். சம்பையார் - மின் போன்றவர். அம்சாலு பொன்தோகையமை பாளிதம் - அழகுமிக்க பொற்சரிகை மிகுந்த முகப்புள்ள புடவை. கலைதோகை - சரஸ்வதி. ஆடகன் - பொன்மானுகவந்த மாரீசன். 915. பணிபதி நிபிடமுடி - ஆதிசேடனது நெருங்கிய முடிகள். குருகுபெயரியவரை - கிரௌஞ்சம் (என்ற பக்ஷியின் பெயருடைய) மலை. வெகுமுக ககனபுனிதை -

கங்கை. 916. எச்சிற்பட்டப்பை - அல்குல். தெட்டித்தெளியிது - மிகத் தெளிந்தது இது. படியிதுவுதவிய - சோபான முறையிது வென்று உபதேசித்துதவிய. நச்சுக்கட்டி - பாம்பணியும் சிவன். நச்சதத்தை - பிரணவப்பொருளை. நத்தைச் சக்ரத்தைக் கைப் பற்றி - சங்கு சக்கரங்களையுடைய திருமால். நறைபெலி - தேனும் நல்லதூபமும் கமழும் பலி. நலவாசிவச்ரம் - நல்லராசியான வைரக் கல். நெடுமாடை - பெருஞ்செல்வம். 922. அகரப்பொருளாதி ஒன் றிடுமுதலக்காம் - அகரப்பொருளாகிய முழுமுதற் கடவுள் ஒன்றி யிருக்கும் பிரணவம் (அகர உகர மகரங்களின் பொருள் ஒன்றியிருக் கும் தலைமையாகிய பிரணவம் எனினுமாம்). 931. கொண்டலாகண் டலன் - மேகவாகனன், தேவேந்திரன். சடாபஞ்சரத்துறுதோகை - கங்கை. 937. படிகந்த நாடு - படிக அந்தநாடு (படிகம்போல் சுத்த மான அழகியநாடு). துவர்பாகை யுதிர் கந்தி - துவர்ப்பாக்கை உதிர்க் கும் கமுகமரம். 948. கொடியாழார் சுத்தரதம் - வீணைக்கொடி கட் டிய (ராவணனது) ரதம். 950. படப்புயங்கம் - படத்தையுடைய பாம்பு. விஷத்தின் கருமை, வண்டின்கருமை, அம்பு, கயல்மீன் முத லியவற்றோடு ஒப்பிடத்தக்க கண் என்பது குறிப்பு. துர்க்கம் - துருக் கம், கலக்கம். பொச்சை - காடு. 951. கொங்கைப்பகடு - முலைப் பெருமை (பருத்தமுலை). இழவிடும் - இழக்கவிடும், உன்கட் க்ருபை- உனது கிருபாகடாக்ஷம். 953. முரட்டுப்புலவனை முட்டைப் பெயர் செப்பிக் கவிபெறு பெருமாளே - பொய்யாமொழிப்புலவன் முன் தோன்றி தமதுபெயர் முட்டையெனச் செப்பி "பொன்போலுங் கள்ளி" என்ற பாடல்பெற்ற வரலாறு. 955. பத்தேழெட்டிரெட் டேழ்ராட்டால் வைத்தே - $10+7+8+8+8+7=48$ இதன் இரட் டை 96 தத்துவங்கள் வைத்தே. 969. பதினலாறேழாமேனாய் - $14+6+7=27$ நக்ஷத்திரங்களாய். 970. தருத்தங்கப்பொலத்தண் டத்தினை - தேவதரு தங்கும் அப்பொன்னுலகத்தை. உறக்கங்குட்டி - அழுந்த தலையிற் குட்டி(கம் - தலை). 971. முக்குறத்தொடைப்புல னும் - மூன்று குற்றங்களால் தொடுக்கப்பட்ட ஐம்புலனும். 975. பவனி - சுகமாக உலாவுதல். ஆசுநொடிபோதே - ஆசீர்வாத மொழிகளை இனிமையாகக் கூறும் அக்கணமே. 986. பாட்டை - யடும்பாட்டை. மனது நல்வழிபோக - மனதே! நல்வழிபோக. எனு

கிறை - என்கிருய். 994. கலாபி எயினச்சி - மயில்போன்ற வேடச்சி (வள்ளி). வேரிமழை - மணங்கமழும் (மேகம் போன்ற) குழல். பச்சை வேய் - மூங்கில் போன்றதோள். அருணக்கற்றைவேல் - செவ்வரிகள் நிறைந்த (வேல்போன்ற) கண். 995. பாரியான - வள்ளல்களுள் ஒருவனுன பாரியைப் போன்ற. 1006. தகரத்...உறைவோனே - தகராகாசத்தின் உச்சியிற் பொருந்தி இதயகமலத்தில் வசிப்பவனே. 1007. பரிமளசிலீமுகம் - புஷ்பபாணம். மஞ்சரி வெறியாடும் மதுக ராரவசிஞ்சினி - பூங்கொத்துக்களிலுள்ள தேனையுண்டு வெறி கொண்ட வண்டு ஆரவாரிக்கும் நாண். கனமதுராகார்முகம் - கனத்த இனிய வில் (கரும்புவில்). பாலமுகுள் விலோசனம் - நெற்றியில் மலர்ந்த கண். 1008. புடவிக்கணி துகிலெனவளாந்தக் கடலெட்டையும் - பூமாதேவிக்கு அழகிய துகில் போன்ற எண் திக்கிலுமுள்ள கடல்நீர் முழுவதையும். 1009. கலுழி - கான்யாறு (ஈண்டு கான் யாற்றின் விரைவு, ஈகை முதலியவற்றைக் குறிக்கும்). 1027. என் ருெக்க - சூரியன் போன்ற. அறுவரும் - ஆறுசமயத்தவரும். முக்கண் - தேங்காய். ஒன்றெட்டுச்சக்ரம் - நவகோண யந்த்ரம். 1032. நமன்விடு தூதும் போற்ருய் - யமதூதர்களைப்போலத் தாவி. வேட்பூணுகம் - வேட்கைபூண்ட உடல். 1044. கக்கக் கைத்தககக்கக் கட்டுக் கக்கிக் கட்கத்தத்தர் - கக்கு அக்கைதக்க அக்கக்கட்டு அக்கு அக்கிகட்கத்த அத்தர் - கழன்ற எலும்பை (பிரமகபாலங்களை) தகுந்த அங்கக்கட்டாக (ஆபரணமாக) ஆக்கும் (அக்கு) அக்னிக் கண்ணுடைய கர்த்தாகிய தந்தை. அங்கக்கட்டு அக்கக்கட்டு என்ருயிற்று. 1049. கையில் - கைப்பொருளில். பதம்பங்கயம் - பாததாமரை. எனும் - என்றும். 1051. பொருவிக்கர் தொடா - ஊடாடும் விக்கல் தொடரும்படி (விரக தாபத் தழல் விக்கலைத் தருகிறதென்பது குறிப்பு). உன் குரவை - உனது நறுமணத்தை. 1052. அவசமாக்கிடு பேய்நீர் - போதை தரும் கள் முதலியன. கேகே வாகனம் - மயில். புயாத்திரி - புயஅத்திரி, புஜமாகிய மலை. 1062. போக கற்பக் கடவுட் பூருகம் - சகல போகங்களையும் தரும் கற்பகமாகிய தெய்வ விருக்ஷம். இடப் பாகர் ஒற்றைப் பகழித் தூணி - பரமசிவன் திரிபுர தகனத்துக்கு எடுத்துச் சென்ற அம்பாகிய விஷ்ணு தங்குமிடமாகிய கடல். 1063. பொராடியே - போராடியே. விருலே சிராடவே - வீருலே

சோடவே. 1066. நிலவருந்து புள் - சந்திர கிரணத்தைப் புசிக்கும் சகோரப் பக்ஷி. 1081. மச்சமெச்சு சூத்ரம் - மச்சை மிகுந்த இயந்திரம் (உடல்). இக்கடத்தை நீக்கி அக்கடத்துளாக்கி - தூலவுடலை யொழித்து சூக்கும உடலுள் புகுவித்து. ஒருத்தனுர் - சிவகோசரியார். புனவேடன் - கண்ணப்பன். 1082. மண்டலந் திகழும் - மண்தலந் திகழும். அம்புயந்தணரம்பை குறிஞ்சியின் மங்கை - அழகிய புஜத்தையும் குளிர்ந்த வாழைபோன்ற தொடையையுமுடைய வள்ளி. அங்குடில் மங்கை - அழகிய விண்ணுலக மங்கை, தெய்வயானை. 1090. மதனதனு நிகரிடைக்கே - மன்மதன் சரீரம்போன்ற இடை (அருவமான, மிகக் குறுகிய என்பது குறிப்பு). 1116. உற்பனத்திலே - கலவியிலே. அற்பனத்திலே - அற்பன் அதிலே. மங்கைக் கதித்த மாமலே - மங்கை நிர்க்கதியென்று ஓலமிட்ட மாமலே (யானை வந்தபோது வள்ளி ஓலமிட்ட வள்ளிமலை). 1131. தடிநிகரயில் - மின்போன்ற வேல். 1133. ஆனுகுந்தீகையற - யக்ஞப் பசுவை யெரிக்கும் அக்கினியின் கை யறுபட. சேட்டவிதி-ஜேஷ்டப் பிரஜாபதியாகிய தக்ஷன். பாரதி - கலைமகள். 1163. அத்தமன்றில்- பொன்னம்பலத்தில். 1166. அம்பண கரதலி - அம்பணம் என்ற வீணையைக் கையிலுடைய உமாதேவி. 1167. தீத்த - தீ வைத்த ;- தீர்த்த என்பதின் விகாரம் எனினுமாம். முதுகின் தோற்றி - முதுகின்மேல் தோன்றி. 1169. கனனென-கர்ணன் என. தெய்வதரு- கற்பக விருக்ஷம். சயில பகவவர் - குகையில் வாழும் நாகரிகமற்றவர். சவித அடியவர் - சஇத அடியவர், நல்ல இதமுடைய அடியார்கள். இலுரையவன்-உரைக்கு அப்பாற்பட்டவன். 1175. வட்டப் புட்பத் தலம் - உள்ளமாகிய தாமரை. 1178. மாரவார வெற்றி முரசமாக - மாரனுடைய பிரியமான வெற்றிப் பறையாக. வடக்கில் எரியும் ஆலம் - வடவா முகாக்கினிபோன்ற விஷக் கதிர்கள். வெதிரை-புல்லாங்குழலே. ககனமேவு வாள்-தெய்வயானை. 1181. சுக்கை-சிறிய பூமாலையை. நச்சுக்கட் கற்புச் சொக்கியர்-விஷக் கண்களையுடைய திறமைமிக்க மயக்கு தொழிலினர். திந்தியினி - தீர்த்து இனிமேல். செச்சைக் கத்திகை - வெட்சி மாலை. 1182. முத்தத் திருச் சலதி முற்றத்து - முத்துநிறைந்த கடலின் வரம்பில். உதித்தி யென - உலேக்கூடத் துருத்தி (உதி)யினல் தூண்டப்பட்ட தீயே

போல. முற்பட்டு - உதயமாகி. 1183. பற்குனன் - அர்ச்சுனன். அற்பவிடை தற்பமதூ முற்று - இடைவெளி அருகி நெருங்கிய மெத்தை வீடுகள் நிரம்பிய. வளர்அற் கனக பத்மபுரி - உயர்ந்த மதில் களையும் பொற்றாமரையையும் உடைய மதுரை. 1189. முஞ்சர் - இறப்பவர். சிந்துராமின் - தெய்வயானை. 1192. அமளிபடு மமளி - படாடோபம் மிகுந்த படுக்கை. நிகழுகள சகளகுரு-நிஷ்களசகளமாக வுள்ளகுரு. 1204. பல்லுக்கும் - புன்னகைக்கும். இணங்கை - இணக் கத்தை. அல்லற்ற ஆனை - கறுப்பில்லாத (வெள்ளை நிறமுடைய) ஐராவதம். 1210. இளையோடும் - ஈளையோடும், கோழையோடும். இளைப்பிச் செற்றிடு கூட்டிற் புக்கு - இன்னல் மிகுந்த பித்தம் அதி கரித்த ஜன்னி நிலையிற் புகுந்து. கட்டவர் - களைந்தவர். 1211. நடு நாலாங்குலம் - மூலாதாரம். மேனடுவேர் - சுழுமுனை. மூலந் திகழ் தூண் - பிரமதண்டம். பாலங்கிளராறு - புருவமத்தி. ஆடுங் கழ லோசை - சிவயோகத்திற் கேட்கும் சிலம்பொலி. 1223. இக்கு வைக்குமாடை - தடையாக (மறைப்பாக) வைத்துள்ள ஆடை. அக்க மான பேரை - பொன்னுடையாரை. பக்க சூலகாளி - (தீயோரைப்) பக்ஷிக்கும் சூலமுடைய காளி. செக்கை - செம்மையான கை. தார மொழிவோனே-பிரணவத்தை யுரைத்தவனே. சூரர்திக்க - சூரர்கள் சிதறியோட. செப்புவெற்பு-பொதியமலை (கல்லாடம் - 65-ஆம் அகவ லில் 'செம்புடற் பொதிந்த தெய்வப் பொதியம்' என வருவதை நோக் குக.) 1241. வருத்தி - வருவித்து. வருமிரும் - வாரும் இரும். அயிற்கொடும்படை - வேலாயுதம். 1253. இதவிய காணிவை சுதை யென வேடுவனெய்திடு மெச்சில்தின்று லீலாசலமாடுந் தூயவன் - இவை இதமானவையென்றும் அமிர்தமென்றுங் கூறி வேடன் (கண் ணப்பன்) சுவைத்துத் தந்த மாமிச நைவேத்தியம் ஏற்று அவன் வாய்சலத்தை அபிஷேகமாகக் கொண்ட பரிசுத்தன். மூதுரைமலை கிழவோனென - (திருமுருகாற்றுப்படையாகிய) பழையஉரை மலை கிழவோனே என்று கூற. சாதமொழிந்தவா - பிறவியொழித்தவாறு என்னே! சாப திகிரி - வில், சக்கரம். உலூகலம் - உரல். மாமன் சேய் - பிரமன். 1255. மொஞ்சிமொஞ்சி என்றழும் - பால்பால் என்று அழும். கொங்கடம்பு கொங்கு பொங்கு பைங்கடம்பு - மணம் நிறைந்த தேன்சொரியும் பசுங் கடப்பமலர். பண்கடங்கடர்ந்த - பண்

சள் தங்கு அடர்ந்த. கந்தரங் கலந்த சிந்தூரஞ் சிறந்துவந்தலம் புரிந்த மார்பா - கழுத்திற் கட்டியணைக்கும் தெய்வயானையோடு சிறப்பாகவந்து போதும் நிறுத்து என்று சொல்லும் வீரம்பொருந்திய மார்பனே. 1256. மந்திமேவும் - வண்டு மொய்க்கும். தோணி - தோன்றி. 1269. வடுப்படும் தொண்டை - வடுப்படுத்தும் கொவ்வைக்கனியிதழ். இனைற்படும் - இன்னல் படுகின்ற. தொந்த வாரி - பிறவிக் கடல். 1281. மாமற் சிசாவரிந்த கூளிப் புராரி - தக்கன் தலையரிந்த வீரமுள்ள திரிபுராந்தக மூர்த்தி. 1289 மாசங்கண் - (காமாலை) நோயையே அழகாகவுடைய கண். தூவஞ் சுற்றடியார் - சுத்தமான கற்றல் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கூடல் என்ற ஐந்தொழில் புரியும் அடியார். பற்றிலர் பேறருள் - பற்றிலார் பேறாகிய அருள் வடிவான பிரணவப் பொருளே. வேஷங் கட்டி - கிழ வேஷம் பூண்டு. 1290. தனி மந்த்ர ரூப நிலை - பிரணவ ஸ்வரூபநிலை. சோகமது - ஸோஹம்பாவனை (அது நான் என்ற பாவனை). 1291. பனையூணவரான பொல் - பனையின் கள்ளை உண்டவர்போல் வெறிகொண்டு. 1292. வாரணங்கிடு சேலான - நீரினுக்கு அழகு செய்யும் சேல்மீன் போன்ற. காதுவாவிட - காது வரையில் நீண்டு தாவ. வான இன் சுதை - தேவாமிர்தம். நின்றதெனுவாய வோர்வது தோணிடும்படி - நின்றதென்று ஆய்ந்து உணர்வது தோன்றிடும்படி. ஆரணன் - பிரமன். 1294. சூகரத்தொடம்பு தானெடுத்து வந்த மருகோனே எனக் கூட்டுக. சூகரம் - மான். சூதன் - மதுசூதனன், கிருஷ்ணன். 1319. இன நடை - பலவிதமான நடைகள். சித மால் - சித்த மயக்கம். 1328. சத முடிவுற உழைத்த இந்திரர் - நூறு யாகங்களை முடித்து இந்திரப் பதவி பெற்றவர். 1333- விராகானலத்து - விராக அனலத்து. ம்ருகக் கரும்பு - மான்மகள் வள்ளி. 1343. வங்காளஞ் சோனம் சீனம் - வேற்று நாடுகள். கம்பூர் சிந்து - சங்குகள் ஊர்ந்து செல்லும் கடல். 1345. வெடித்த - பூக்கள் வெடித்தலால் (மலர்தலால்) வாசனை வீசுகின்ற. 1349. இசைபட்ட திகிரி - புல்லாங்குழல். 1353. காளி வெட்க மகுடாமாகாச முட்ட வீசிவிட்ட காலர் - காளி வெட்கிப் போகும்படி மகுடமாகிய ஆகாசம் முட்டும்படி வீசிய காலையுடைய ஊர்த்வதாண்டவ மூர்த்தி. உட்சொலுமையாள்பால் ஒதி வைத்த தாதை - உமையாளிடம் ரகசியமாகப் பிரணவத்தின் பொருளைக் கூறிவைத்த தந்தை. 1361. வேனில் - வசந்த காலத்தில். வேடை கெட - காம நோய் ஒழிய. ஆனிரை புரந்து - பசுக் கூட்டங்களைக் காத்து.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# தெய்வப்பெயர் வட்டவணை



[இவ் வட்டவணையில் இந்திரன், கணபதி, சிவபெருமான், தெய்வயானை, பார்வதி, பிரமன், மன்மதன், முருகன், வள்ளி, விஷ்ணு ஆகிய பத்து தெய்வங்கட்குத் திருப்புகழில் வழங்கப்படும் பெயர்கள் தரப்பட்டுள்ளன. ஒரே பொருளைத் தரும் பெயர்கள் பல வற்றுள் சிலவே தரப்பட்டுள்ளன. உதாரணமாக அத்திமுகவன், ஆனைமுகவன், இபமாமுகன், கரிமுகன், கஜானனன், குஞ்சரமுகன், தும்பிமுகவன் என்ற ஏழும் ஆனைமுகமுடைமையையே குறித்தலால் இவற்றுட் சிலவே தரப்பட்டுள்ளன. இவ்வாறே ஏனையவற்றிற்கும் கொள்க.]

## இந்திரன்

அமரேசன், அரி, ஆகண்டலேசன், ஆயிரநாட்டன், ஐராவதக் குரிசில், குலிசபாணி, சசிபதி, பல்சக்கிற்கூட்டன், பாகசாதனன், புரந்தரன், புருகூதன், மகபதி, முகிலூர்தி, முடிப்புயல், வலாரி, வஜ்ரகரன், வாசவன், விபுதர்பதி, வெள்ளிபத்தன்.

## கணபதி

அத்திமுகவன், அம்புலிமௌலியான், ஆகுவாகனன், இபமா முகன், ஐங்கரகணநாயன், ஒற்றைமருப்பன், கணபதி, கரிணிமுகவன், கஜானனன், ஞானதொப்பை, தொந்திக்கடவுள், மகோதரன், மத்தளவயிறன், முக்கணன், வலைபகேள்வன், விக்கினசமர்த்தன், வித்தகமருப்புடைய பெருமாள், விநாயகன்.

## சிவபெருமான்

அகத்தியப்பன், அருணகிரிநாதன், ஆதிரையான், ஆலமுண்டவன், உமாபதி, கங்கைச்சடைதாரி, கம்பன், கயிலைமலைக்கிழவன்,

காதல கபாலி, கழையோனி, கறுக்குந் தூயமிடற்றன், கனககார்முகா சாரி, காபாலி, காமாரி, காலகாலப்ரபு, காளகண்டன், கீதநாயகன், குருவிலாதவன், கொண்டல்பாகன், கொன்றைச்சடையன், சதாசிவ கோத்திரன், சந்த்ரசேகரன், சம்பு, சாதியிலாதவன், சிரகர கபாலன், சிலைமகள்நாயன், சேவேறுமீசர், சையவில்லி, சோதியங்கணன், தழல்வேணி எந்தை, திங்கள்முடிநாதன், திரிபுராரி, திரியக்ஷர், தீயாடி, தெரிவைபாதியன், நாகக்காப்பன், பசுபதி, பசுவேறி, பாசு பாணி, பாதகுரு, பாதமாடி, பரமேசுரன், பித்தன், பிறைமவுலி, பிஞகாயுதன், புராரி, மதனாந்தகன், மறிபாசுகாமிலகு பரமன், மன் றூடி, முக்கட்பரமன், மெய்ஞ்ஞான குருநாதன், விபூதிபூஷணன்.

## தெய்வயானை

அண்டத்திருமயில், அமரர்தோகை, ஆரியகேவலி, ஆனைமின் இந்திரன்மகள், இபமயில், கடவுள்யானை, கநவநமான், குஞ்சரக் கொம்பு, குடில்மங்கை, குலிசன்மகள், குலிசை, சசிதருமயில், சசி வல்லி, சிந்தூரமின், சிந்தூரம், சுரகுஞ்சரி, சொர்க்கக்கிளி, தந்தியின் கொம்பு, திருமகள், திருமுத்திமாது, தெய்வயானை, தேவகுஞ்சரி, புரந்தரன் தந்தருள்பூவை, வாசவன்தரு திரு, வாரணப்பிடி, வாரண விபுதை, வானவைந்தொடி, வேழமங்கை.

## பார்வதி

அகிலஜக அண்டநாயகி, அங்காளி, அநுபவை, அந்தரி, அபி ராமி, அமலை, அம்பணகரதலி, அம்பிகை, அரவபூணரி, அரிசோதரி, அறம்வளர் சுந்தரி, ஆதிசோதி, ஆயி, ஆரணி, ஆலவூணி, ஆறுசம யத்தி, இமவான்மடந்தை, உத்தமி, உமை, காபாலி, கலியாணி, காமாரி, காயத்திரி, காரணி, காளகண்டி, காளி, கிரிமயில், குணவதி, குண்டலி, குமரி, குலிசகுடாரி, கோகுலசத்தி, கௌரி, சங்கரி, சடிலதரி, சண்டி, சண்டினி, சத்தி, சந்த்ரசேகரி, சயிலநாரி, சயை, சர்வேஸ்வரி, சாமுண்டி, சிங்கமேறி, சிவகாமசுந்தரி, சிவபத்தினி, சிவை, சிற்சுகசுந்தரி, சுந்தரி, சூராரி, சூலி, செம்பொன் மேனியள், ஞானபூரணி, டாகினி, தமனியதநுதரி, திரிசூலி, திரிநயனி, திரி புரதகனி, திரிபுரை, திரிபுவனேசை, திரியம்பகி, துர்க்கை, நாக பூஷணத்தி, நாரணி, நிட்களி, நித்யகலியாணி, நிரஞ்சனி, நிருமலி,

நிருவாணி, நிர்க்குணி, நீலி, பகவதி, பஞ்சபாணி, பத்திரகாளி, பயங்கரி, பயிரவி, பரசிவை, பரமகலியாணி, பரம்பரி, பராசத்தி, பராபரை, பவதி, பார்வதி, பிங்கலை, பிடாரி, புவனேசை, பூரணி, பெரிய நாயகி, மகமாயி, மங்கலை, மங்களாயி, மந்தரி, மந்த்ரரூபி, மலைமகள், மனோன்மணி, மாதங்கி, மாதேவி, மாலினி, மாலின்பினுள், மூக்கண்கொடி, மோகசௌந்தரி, மோகி, மோடி, மௌனசுந்தரி, யாமளை, யோகினி, ருத்ரி, லோகபதிவிரதை, வயிரவி, வராகி, வரைமகள், வாணி, வாமி, வாலை, விடமுணி, விநாயகி, விமலி, வேதஞானி, வேததந்திரி, வேதநாயகி, ஜகரக்ஷணி.

## பிரமன்

அந்தண மறையோன், அயன், அரிமகவு, ஆரணன், ஆரியன், எகினன், எண்கணன், கமலயோனி, கலைமகள் நாயன், சுருதிவள்ளல், திசைமுகன், நான்முகன், பத்மத்தச்சன், பத்மயோனி, பிதாமகன், வேதக்குலாலன்.

## மன்மதன்

அரிபுத்திரன், இக்கன், உருவிலி, கஞ்சாக்கன்று, கந்தர்ப்பன், கருப்புச்சாபன், காமவேள், சம்பராரி, சித்தஜன், செயலைப்புயன், பஞ்சபாணன், மகரகேதனத்தன், ரதிகாந்தன்.

## முருகன்

அகிலாகமவித்தகன், அமரேசன், அயிற்குகன், அரிதிருமருகன், அறுமுகன், ஆகமசார சொரூபன், ஆயிரங்கலைகத்தன், ஆறுதாரன், ஆறனனச் சிறுவன், இளையோன், உக்ரவீரன், உமைசேய், என்றுமுளான், கங்கைதன் சிறியோன், கடம்பன், கடவுட்சக்ரவர்த்தி, கணபதிசகசன், கந்தவேள், கலைராஜன், கவிராஜன், கார்த்திகைப் பெருமாள், கிரிராஜன், கிருபாகரன், குகன், குமாரகுருபரன், குமரன், குமரேசன், குருநாதக் குழந்தை, குருநாதன், குருபரன், குருமணி, குழகோன், குளவோன், குறத்திகிங்கரன், சகலகலாதரன், சத்திபாணி, சத்யவாக்ய பெருமாள், சமயமாறிருதேவன், சம்புகுமாரன், சரவணசம்பவன், சரவணபவன், சரவணஜாதன், சற்குருநாதன், சிதம்பரகுமாரன், சித்தன், சிவசுதன், சிவசுப்பிரமாமணி, சிவவேள், சுப்பிர

மணி, சுருதியாண்டகை, சூராந்தகன், சூராரி, செட்டி, செந்தில் வாழ்வு, சேந்தன், ஞானசற்குருநாதன், ஞானபண்டிதசாமி, தகப்பன் சாமி, தம்பிரான், திருடன், தேவகுஞ்சரிபாகன், தேவசிகாமணி, தேவ நாயகன், பகிரண்டரூபன், பகிரதிகுமாரன், பாலகுமாரசுவாமி, பிள் ளைப்பெருமாள், புத்ரகுருக்கள், மயில்வீரன், மயூரன், மலைகிழவன், மனோகரன், முத்தமிழாகரன், முத்திக்கோர் வித்து, முருகன், முரு கேசன், முழுச்சேவகன், வனசமேல்வரு தேவு, விசாகன், விடங்கப் பெருமாள், விப்ரர்க்காதரன், வேதா மைத்துனன், வேந்தன், வேலான், வேள், வேளைக்காரன், வேள் பகைவன், ஷடுபத்மமுகன், ஷண்முகநாதன்.

## வள்ளி

ஆயாள், இன்பரச சத்தி, உழைதரு வநிதை, எயினச்சி, ஏனல் மங்கை, கலைக்கொம்பு, காவற்பாவை, கிராத குலதிலக மான், கிராதி, கிராதை, குறச்சிறுமி, குறவி, குறிஞ்சி அணங்கு, கொச்சை மாது, சவர வநிதை, சவரி, சாரவிறைவி, சித்ரவளி, சுகிஞான ரம்பை, ஞான பத்தினி, ஞானதனத்தி, தினைவன மான், பச்சைப் பக்ஷி, புன மகள், புன மயில், புனவெற்பு மான், மரகத வள்ளி, மறப்பாவை, மற மயில், மறவாட்டி, மான், மான் மகள், மிருகக் கரும்பு, மூல ஞான மங்கை, வள்ளி, வனசர மான், வனசரி, வேடப்பாவை, வேடிச்சி, வேட்டிச்சி, வேதச் சொரூபி.

## விஷ்ணு

அச்சுதன், அரவணையான், அரி, இந்திரை கேள்வன், எழிலி வடிவினன், ஐயாயுதபாணி, ஐவர் தோழன், கமலக்கண்ணன், கருட கேதனன், கருமுகில், காக்கைக் கடவுள், காண முடியோன், காமத் தன், குணத்ரய நாதன், கேசவன், கொண்டல், கோபாலன், கோவிந்தன், சக்ரதரன், சக்ரபாணி, சங்கபாணி, சனகி மணவாளன், சார்ங்கபாணி, ஸ்ரீதரன், ஸ்ரீரங்கராஜன், தயாபரவஸ்து, திருப்பயில் மார் பன், திருமகள் நாயன், திருமருவு புயன், திருவரங்கன், நந்துகரன், நந்தைச் சக்ரத்தைக் கைப்பற்றி, நாராயணன், நான்முகனற் றந்தை, நீலரூபன், நெடியவன், புயலிலேகன், புருஷோத்தமன், பூவணன், பூவாயன், மஞ்சுநிறம் புனைபவன், மதுசூதன், மாயவன், முகுந்தன், முராரி, மையுருவோன், ரகுநாதன், ரகுபதி, ரகுராமன், ராம சந்த்ரன், ரிஷிகேசன், வாமனன்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

# அரும்பொருளகராதி

[இவ்வகராதியில் முக்கியமான சில சொற்களுக்குத் திருப்புகழில் காணப்பெறும் பொருள்களுட் சிலவே தரப்பட்டுள்ளன. சென்னைப் பல்கலைக்கழகத்தமிழ்ப் பேரகராதி, யாழ்ப்பாணத்து மேலைப் புலோலி - நா. கதிரைவேற்பிள்ளையவர்கள் அகராதி முதலிய பல அகராதிகளைக் கொண்டு வேண்டியவாறு பெருக்கிக்கொள்ளவும்.]

அகம் - பாவம், ஆகாயம், பூமி, வீடு, துக்கம், சூரியன், இடம், மனம்.
அகருதூளி - அகிற்பொடி.
அகி - அம்பு.
அகுதி - திக்கற்றவள்.
அக்கு - சங்குமணி, கண், எலும்பு, சரீரம்.
அக்குப்பீளை - கண்பீளை.
அங்கம் - எலும்பு, கட்டில், அவயவம்.
அசபை - ஹம்சமந்திரம் (அஜபா).
அசலம் - அம்பு, பூமி, மலை.
அசனம் - உணவு, வேங்கைமரம்.
அசுழம் - நாய்.
அஞ்சம் - அன்னப்பறவை.
அடம்பு - ஒருவித கொடிப்பூ.
அடலை - சாம்பல்.
அடல் - வெற்றி, வன்மை.
அடனம் - அலைதல், போதல்.
அடிசில் - சோறு.
அடைசிய - ஒதுக்கிய.
அடைசு - நெருங்கிய.
அடையலவர் - பகைவர்.
அணுவ - நெருங்க.
அணில் - அன்றில்.
அண்டர் - இடையர், பகைவர், வானவர்.
அதவிய - சம்மாரஞ் செய்த.
அதள் - தோல்.
அதிரேகம் - அதிசயம்.
அத்தத்தவர் - பொருட்பெண்டிர், விலைமாதர்.
அத்தமாதர்கள் - விலைமாதர்.
அத்தம் - பாதி, சொற்பொருள், பொன், கை, காடு, வழி.
அத்தி - எலும்பு, யானை, மலை.
அந்தகன் - இயமன்.

அந்தி - நெருங்கிய, மாலை,முடிவு.
அந்திக்கும் - சந்திக்கும்.
அபகடம் - வஞ்சகம்.
அபத்தன் - அசத்தியன்.
அபம் - கீழ்மை.
அபராதனன் - தண்டித்தவன்.
அபிநவம் - அதிசயம்.
அபிஷேகம் - கிரீடம்; முடி.
அப்பு - தண்ணீர், கடல்.
அமலை - ஒலி, இலக்குமி,பார்வதி.
அமளி - ஆரவாரம், படுக்கை.
அமுதவேணி - சிவபெருமான்.
அமுதஉததி - பாற்கடல்.
அமை - மூங்கில், நாணல்.
அமையும் - போதும்.
அம் - அழகு, நீர், மேகம், நலம்.
அம்பணம் - ஒருவகை யாழ்.
அம்பரம் - ஆடை, தெய்வலோகம், ஆகாயம், கடல், வெளி, மஞ்சம்.
அம்பு - கணை, நீர், கடல், மூங்கில், மேகம்.
அம்புலி - சந்திரன்.
அயல் - அருகிய.
அயில் - வேல், கூர்மை, அழகு, உண்.
அயில்தரல் - குடித்தல்.
அயின்ற - உண்ட.
அரணம் - கவசம், காவல், கோட்டை, மதில், வேல், அழகு.
அரத்த - செம்மையான.
அரந்தை - துக்கம்.
அரம்பை - வாழை, ரம்பை.
அரல் - நீர், கடல்.
அரவணைத்து - ஆதரித்து, தழுவி.
அரி - இந்திரன், இயமன், வாயு, சிங்கம், சூரியன், விஷ்ணு, வெற்றி.
அரிசனம் - மஞ்சள்.
அரிட்டம் - கேடு.
அருக்கு - அருமையான.
அருட்டி - சாக்கிரதை பண்ணி.
அரைப்புண் - அல்குல்.
அலகாயம் - கூந்தல்.
அலகின்மாறு - கூட்டுமாறு.
அலகை - பூதம், பேய்.
அலங்கம் - அரண், கொத்தளம்.
அலங்கல் - மாலை.
அலம் அலம் - போதும் போதும்.
அலரி - சூரியன்.
அலர் - பழிச்சொல்.
அல் - மதில், இரவு, இருள்.
அவுணன் - அசுரன்.
அழனம் - தீ, பிணம்.
அளகம் - கூந்தல்.
அளறு - சேறு, நரகம்.
அளை - தயிர், குகை, வெண்ணெய்.
அள் வழுப்பு - காதுக்குறும்பி.
அற - முழுமையும்.
அறல் - கருமணல், நீர்.
அறவி - தர்மத்தை வளர்ப்பவள்.
அறிவிடம் - தெளிவு.
அறுபதம் - ஈ, வண்டு.
அற்பகல் - இரவு பகல்.
அற்பம் - அணு, நாய், பனி, இழிவு, சிறுமை.
அற்றம் - சமயம், அழிவு.
அனவரதம் - எப்போதும்.
அனிலம் - காற்று.
அனு - அற்பம்.
அனைச்சொல் - ஐக்கிய பதம்.
அக்ஷமாலா - ருத்திராக்ஷமாலிகை.
ஆகம் - மார்பு, உடல்.
ஆகவம் - போர், சிலை.
ஆசாம்பர - திகம்பர.
ஆசுகம் - அம்பு, காற்று, பரவை.
ஆடகம் - பொன்.

ஆதபம் - ஒளி, குடை, வெயில்.
ஆதுலன் - தரித்திரன்.
ஆதேசம் - தாங்கப்படுவது, திரிபு, ஒழுங்கு, புத்தி.
ஆந்தன்-அந்தன், சர்வ சங்காரன்.
ஆமா - பசு, மற்ற விலங்குகள்.
ஆரணியப்புள் - குயில்.
ஆர்தந்து - கட்டி.
ஆலம் - நீர், விஷம்.
ஆலயம் - மார்பு, கோயில்.
ஆலாபம் - சம்பாஷணை.
ஆலித்து - களித்து.
ஆவணம் - உரிமைப் பத்திரம்.
ஆவி - வாசனை, உயிர்.
ஆவேசநீர் - போதைவஸ்து.
ஆவேதம் - வேடம்.
ஆனிரை - பசுக்கூட்டங்கள்.
இகலர் - பகைவர்.
இகல் - பகை, போர், வலி.
இக்கு - கரும்பு.
இசலி - சபதம், வாது.
இஞ்சி - மதில், வாவி.
இடங்கர் - முதலை, சிறுவழி.
இடர்க்கு - குதர்க்கம்.
இடி - மாவு, சாந்து.
இடும்பு - அவமதிப்பு, துன்பம்.
இட்டிடை - தடை, வறுமை.
இதண் - பரண்.
இதவிய - இதமான.
இதழி - கொன்றை.
இந்திரை - இலக்குமி.
இந்துவாகு - சந்திரப் பிரபை.
இந்துளம் - கடம்பு.
இபமின் - தெய்வயானை.
இபம் - யானை.
இமராஜன் - சந்திரன்.
இரணம் - கடன், புண், போர்.
இரதம் - இனிமை, தேர், சாறு.
இராசியம் - இரகசியம், மறைவு, பெண்குறி.
இருளறை - ஆணவமலம்.
இரை - பேரிரைச்சல், உணவு, நீர், பூமி, ஒலி, இலக்குமி.
இர்ப்பை - இலுப்பைமரம்.
இலச்சினை - முத்திரை மோதிரம்.
இலஞ்சி - புனம், குளம், மதில்.
இலிபி - இலக்கம், எழுத்து.
இவர்தல் - கலத்தல், செல்லுதல்.
இழவிடும் - இழந்து போமாறு செய்யும்.
இளை - ஈளை, கோழை.
இறவி - இறப்பு.
இனநடை-விதம்விதமான நடை.
இனவு - சூழ்கிற.
ஈருப்பு - வண்டுக்கூட்டம்.
ஈகை - பொன், கொடை.
ஈங்கை - ஈகை, பொன்.
ஈம தேசம் - மயான பூமி.
ஈரம் - காருண்யம்.
உகள - கடக்க.
உகளம் - இரண்டு.
உகிர் - நகம்.
உக்க - சிந்த.
உடல் - பொன், யாக்கை.
உடு - விண் மீன்.
உடுபதி - சந்திரன்.
உதம் - நீர்.
உததி - கடல்.
உதித்தி - உலைத்துருத்தி.
உத்தி - யுத்தி.
உந்தி - கடல், கொப்பூழ்.
உந்தியிறைவன் - பிரமன்.
உபேட்சை - அசட்டை.
உம்பர் தரு - தெய்வலோக விருக்ஷம்.
உம்பல் - யானை, கணபதி.

உரி - உரித்த தோல்.
உருவம் - அழகு, நிறம், வடிவம்.
உலவை - விலங்கின் கொம்பு, மரம், காற்று.
உலூகலம் - உரல்.
உலோகிதம் - சிவப்பு, போர், இரத்தம்.
உவணம் - கருடன்.
உவரி - சமுத்திரம்.
உழற்றல் - துன்பம்.
உழுவை - புலி.
உழை - மான், மான் கூட்டம்.
உழைதரு வநிதை-வள்ளியம்மை.
உளி - கருவி, இடம்.
உறுக்கி - கோபித்து.
உற்பல சயிலம் - திருத்தணிகை.
உற்பலம் - குவளை மலர்.
உற்பனம் - தோற்றம், கல்வி.
ஊடே - உள்ளே.
ஊதியம் - பலன், கல்வி, லாபம்.
ஊய்தல் - பதனழிதல்.
ஊனர் - தரித்திரர்.
எகினம் - அன்னப் பறவை.
எகினன் - பிரமன்.
எட்டாசை - அஷ்டதிக்கு.
எண்கினக் கர்த்தன் - கரடி முகமுள்ள சாம்புவான்.
எண்கு - கரடி.
எண்டோளர் - சிவபெருமான்.
எண் புலவர் - மதிக்கப்படும் தேவர்கள்.
எத்தார் - ஏமாற்றுபவர்.
எத்தி - மாறுவேடமிட்டு.
எத்து - வஞ்சகம்.
எயிறு - கொம்பு, பல்.
எய்த்திட - அரிய, மெலிய.
எரி - நெருப்பு, நரகம்.
எருவை - கழுகு, யானை.
எழுகு - ஏழுலகம்.
என்று - சூரியன்.
ஏ - பாணம்.
ஏகாசம் - மேற்போர்வை.
ஏசு - குற்றம், இகழ்ச்சி.
ஏட்டை - ஆசை, வறுமை, தீமை.
ஏதம் - குறை, துன்பம்.
ஏதி - வாள்.
ஏமலித்து - ஏமாந்து.
ஏய் - பொருந்து.
ஏலம் - வாசனைத் திரவியம்.
ஏவல் - ஆணை, பணிவிடை.
ஏவு - அம்பு, வருத்தம்.
ஏனல் - தினை, தினைப்புனம்.
ஒகரம் - மயில்.
ஒசிந்து - தளர்ந்து, வருந்தி.
ஒட்டு - கண்ணி, சபதம்.
ஒண் - பொருந்திய.
ஒருங்கல் - அடங்கல், கேடு.
ஒருத்தல் - யானை, புலி, மான்.
ஒளி - அறிவு, பார்வை, கதிர்.
ஒன்று - பொருந்திய, வசிக்கின்ற.
ஓகாரம் - ஒகரம், மயில்.
ஓதம் - வெள்ளம், கடல்.
ஓதி - அறிவு, போர், கூந்தல்.
ஓதிமம் - அன்னம், மலை.
ஓதியர் - கூந்தலோடு கூடியவர்.
ஓமல் - ஊர்பேச்சு.
ஓரும் - உணரும்.
ஓலைப்பூ - தாழம்பூ.
ஓவ - நீங்க.
ககபதி - கருடன்.
ககம் - பறவை, அம்பு.
ககனத்திரு - தெய்வயானை.
ககுபம் - திசை.
கங்கு - கழுகு, வரம்பு.
கசதி - கஸ்தி, வருத்தம்.
கசனை - ஈரம், அன்பு.

கசுத்தி - கஸ்தி, வருத்தம்.
கச்சவர் - வெறுத்தவர். [தம்.
கஞ்சம் - தாமரை, அளசி, அமிர்
கஞ்சாக்கன்று - மன்மதன்.
கஞ்சுகி - பாம்பு.
கஞ்சைமன் - திருமால்.
கடப்பட்டாம் - கடமைப்பாடாம்.
கடம் - சயிறு, மதம்,உடல்,குடம்,
யானைக்கதுப்பு, மத்தகம்.
கடாவி - பிரயோகித்து, குட்டி,
வினவி.
கடி - மணம், விரைவு.
கடும்பு - சுற்றம்.
கடை - வாயில்.
கடையவள் - தங்கை.
கட்கிருபை - கடாட்சப் பார்வை.
கட்டவர் - களைத்தவர்.
கட்டளை - கற்பனை, உத்தரவு.
கணம் - கூட்டம்.
கணி - கணிப்பவன், மூங்கில்,வலை,
வேடன், வேங்கைமரம்.
கண்டு - கற்கண்டு.
கண்ணுறு - கண்ணூறு, திருஷ்டி
தோஷம்.
கதம் - கோபம், பாம்பு, செல்கை.
கதிர்பத்திரம் - வேலாயுதம்.
கதுப்பு - கன்னம்.
கதை - தண்டம்.
கத்தர் - தலைவர்.
கத்திகை - பூமாலை, விருது.
கந்தரம் - கழுத்து, மேகம், குகை.
கந்தலுற்று - கேடுகெட்டு.
கந்தன் - மன்மதன், முருகன்.
கந்தி - கமுகமரம்.
கந்துகம் - பந்து.
கபாய் - கவசம், தேகம்.
கப்பித்த - கிளைத்த.
கப்பு - பிளவுகிளை.

கமடம் - ஆமை.
கம் - தலை, அறிவு, ஆகாயம், நீர்.
கம்பிதம் - அசைதல்.
கம்பு - சங்கு.
கயம்காரி - நீருண்டகார் மேகம்.
கயிரவம் - ஆம்பல்.
கயில் - விமானக்கொடுங்கை, மேற்
பாகம்.
காடி - காடிகைப்பறை, சிலம்பு.
கரணி - சிற்பவேலை செய்யும் ஸ்த
கரா - முதலை. [பதி
கரிணி - யானை.
கரியயூகம் - கருங் குரங்கு.
கருடக்கொடி - வீரக்கொடி.
கருமவசனம் - மந்திரம்.
கரேடம் - நகம்.
கலணை - குதிரைமேல் தவிசு.
கலதி - மூதேவி.
கலபி - மயில்.
கலாரம் - கல்லாரம், சங்குவளை.
கலி - தரித்திரம்.
கலிங்கம் - ஆடை.
கலுழி - கான்யாறு.
கலை-மேகலை, கல்வி, சீலை, மான்,
சந்திரன்.
கலைத்தோகை - சரஸ்வதி.
கலோலம் - கல்லோலம், ஒலி.
கவட்டர்கள் - வஞ்சிகள்.
கவந்தம் - முண்டம்.
கவலை - செந்தினை.
கவி - குரங்கு.
கவுடி - ஓர்பண்.
கழல் - திருவடி, முழங்காலில்
அணியும் வீரப்பூண்.
கழி - நாதம்.
கழுது - பிசாசு.
கழுநீர் - ஆம்பல்.
கழை - கரும்பு, மூங்கில்.

களமாலை - கண்டமாலை.
களம் - கழுத்து.
களரி - யுத்தகளம்.
கறுவு - சினங்கொண்ட.
கற்பகம் - தென்னைமரம்.
கற்பு - கல்வி, கற்பனை, பெண்கள் ஒழுக்கம்.
கற்றை - உரோமக் குவியல்.
கனகன் - இரணியன்.
கனபதி - இலங்கை.
கனம் - மேகம்.
காகளம் - எக்காளம், குயிலோசை.
காகோதரம் - பாம்பு.
காகோதராஜன் - பதஞ்சலி.
காங்கிசை - விருப்பம்.
காணம் - பொன்.
காய் - புரைகுழல்.
காரம் - காரியம்.
காரி - ஒரு வள்ளல்.
கார்முகம் - வில், மூங்கில்.
காலன் - இயமனது மந்திரி.
காலாயுதம் - சேவல்.
காழ் - குற்றம்.
காளி - விஷ குணமுள்ளவன்.
காளி நாடு - இடும்பாவனம்.
காளிமம் - கறுப்பு.
கிஞ்சு - அற்பம்.
கிடை - படுக்கை.
கிடைநாள் - கிடக்கின்ற நாள்.
கிருத்தர் - செருக்கர்.
கிளை - மூங்கில்.
கிறி - பொய்.
கீசகம் - மூங்கில்.
கீரம் - பால்.
கீலகிகள் - தந்திர வாதிகள்.
கு - சிறுமை, உலகு.
குகரம் - மலைக் குகை.
குக்கில் - செம்போத்து.
குக்குடம் - கோழி.
குசலம் - சுகம், தந்திரம்.
குசை - கடிவாளம்.
குச்சலி - ஓர் பண்.
குஞ்சம் - சாமரை.
குடநிரை - பசுக்கூட்டம்.
குடவன் - கோணல்.
குடிலப் பூச்சி - வளைவான நாகப் பூச்சி.
குடிலம் - வட்டம், வானம், வஞ்சம்.
குடில் - ஆகாயம், குடிசை, சரீரம்.
குணவிட்டு - கொக்கரித்து.
குணலம் - குணலை (வீராவேசத்தால் கொக்கரித்தல்.
குணில் - தடி.
குண்டு - தாழ்வு.
குதம்பை - காதணி.
குத்தரம் - மலை.
குப்ப - கூம்ப, குவிய.
குப்பாயம் - சட்டை, சரீரம்.
கும்பர் - கும்ப முனி.
கும்பாகனன் - கும்பகர்ணன்.
குயம் - முலை (குஜம்).
குரவு - ஒரு மணம்.
குரு - பாரம்.
குருகாவலர் - பாண்டவர்.
குருதி - இரத்தம்.
குலா - ஆடம்பரம்.
குலிலி - வீராவேசஒலி.
குவட்டி - திரட்டி.
குவட்டை - செல்வ மேலீட்டாலுண்டாகும் செருக்கு.
குவாது - குதர்க்கம்.
குவால் - கூட்டம்.
குழப்படி - கலக்கம்.
குழாம் - கூட்டம்.
குழை - காது, காதணி.
குளபதம் - சர்க்கரைப் பாகுபதம்.

குளிறு - சப்திக்கின்ற.
குறங்கங்கி - இடையாபரணம்.
குறவி - குறத்தி, வள்ளி நாயகி.
குனகி - சந்தித்து.
குனகும் - சிணுங்குகின்ற.
கூடல்பாடி - மதுரைநகர்.
கூதாளம் - வில்வம்.
கூருதல் - உள்ளது மிகுதல்.
கூவல் - கிணறு.
கூவிளம் - வில்வம்.
கூற்று - நமன்.
கூன் - வளைந்த.
கெத்தில் - தந்திரமாய்.
கெந்துபாயும் - கெளிந்துபாயும்.
கேகயம் - மயில்.
கேகி - மயில்.
கேதகை - தாழை.
கேதனம் - கொடி.
கை - ஒழுக்கம், சிறுமை, வரிசை.
கைத்தொழு - விலங்கு.
கொக்கு - மாமரம்.
கொங்கு - கோங்கு, தேன், பூந்தாது, வாசனை.
கொடி - காக்கை.
கொடிச்சி - குறிஞ்சி நிலப்பெண், வள்ளி.
கொடுங்கை - கொடுமை.
கொட்பு - சுழற்சி.
கொண்டல் - மேகம், திருமால்.
கொந்தளம் - கூந்தல்.
கொப்பு - கோப்பு.
கொன் - வலிமை.
கோ - ஆண்மை, கண், அரசன், பூமி, இடபம்.
கோகிலம் - கிளி, குயில்.
கோடரம் - குரங்கு, குதிரை, கமுகு.
கோடல் - காந்தள்.
கோடாது - மாறாது.
கோடி - கூர்மை.
கோடு - கொம்பு, சங்கு, மலை.
கோட்டாலை - துன்பம்.
கோண் - மாறுபாடு.
கோத்திரம் - மலை.
கோமாயு - நரி.
கோமாளம் - சந்தோஷம்.
கோம்பு - சினக்குறிப்பு.
கோலம் - பன்றி.
கோலாகலம் - சம்பிரமம்.
கோலிய - வளைத்த.
கோல் - அம்பு.
கோவ வனிதையர் - கோபிகா ஸ்திரீகள்.
கௌவை - கலக்கம்,
க்ருஷி - தொழில்.
க்ருதம் - நெய்.
சகத்ரம் - ஆயிரம்.
சக்கடி - பரிகாசம்.
சக்கிரி - பாம்பு.
சங்கதம் - நட்பு.
சங்கம் - சங்கமம்.
சங்கை - வழமை.
சசிதரன் - ஈசானியன்.
சடாதாரம் - மூலாதாரம் முதலிய ஆறுதாரம்.
சட்ட - நன்றாக.
சதமகி - இந்திரன்.
சதளம் - ஜனக்கூட்டம்.
சதிமுழவு - தாளத்தோடு கூடிய பறை.
சத்தி - வாந்தி.
சந்தரண் - வளைந்த அரண்கள்.
சந்தாபம் - கொடுமை.
சந்து - சந்தனம்.
சந்துத் தலையுற்று - தூதாகச் சென்று.

சந்த்ரகி - மயில்.
சபரி - பூஜை.
சமன் - யமன்.
சமேளம் - சமேளனம், கலப்பு.
சம்பம் - இடி.
சம்பராரி - ரதிகேள்வனுன மன்மதன்.
சம்பு - சம்பங்கோரை, பிரமன், [நரி.
சம்பை - தாளம், மின்னல்.
சயிந்தவம் - குதிரை.
சயிலம் - மலை.
சரணம் - தோகை.
சராசனம் - வில்.
சரி - வளையல்.
சருவி - சரசஞ்செய்து.
சலசம் - தாமரை.
சலதி - கடல்.
சலரி - சல்லரி.
சலிகை - செல்வாக்கு.
சலிலம் - கங்கை, நீர்.
சவடி - ஒருவித ஆபரணம்.
சவடு - வண்டல். [ர்.
சவரர் - வனத்தில் வசிக்கும் வேட
சவரி - குறத்தி, வள்ளி நாயகி.
சவித - இகத்தோடு கூடிய.
சளம் - வஞ்சனை.
சற்கரித்து - உபகரித்து.
சனு - சரசம்.
சாங்கம் - ஒழுங்கு.
சாயகம் - அம்பு.
சாயாபதி - சூரியன்.
சாரிசெய் - விளையாடுகின்ற.
சாலி - நெற்பொதி.
சாவதாரம் - அழிவதற்காதாரம்.
சிகண்டி - மயில்.
சிகி - நெருப்பு, மயில்.
சிங்கி - வியப்பு, இடை, துஷ்டப் [பெண்.
சிட்டு - குருவி.
சிதடி - அறிவிலி.
சித்து - மாயவித்தை.
சிந்து - சமுத்திரம்.
சிந்தூரம் - செங்குங்குமம், யானை.
சிலம்பு - மலை, மலையை யொத்த [யானை.
சிலீமுகம் - அம்பு.
சிலுகு - துன்பம்.
சிலோச்சம் - மலை.
சிவகலை - சைவசித்தாந்த நூல்.
சிவணு - ஒன்றுகூடி.
சிவை - பார்வதி.
சிறுதாளி - சிறிய செடிகள்.
சிறுப்பு - இகழ்வு.
சீமூதம் - மேகம்.
சீயம் - நரசிங்கம்.
சீரா - உடைவாள், கவசம்.
சீறடி - சிற்றடி.
சுகம் - கிளி.
சுக்கை - பூமாலை.
சுடிகை - பணமுடி.
சுடுகட்டை - உடம்பு.
சுட்டி - தலையணி.
சுணங்கு - தேமல்.
சுதக்களவன் - தேர்ப்பாகன்.
சுதை - பால்.
சுமடம் - அறிவின்மை.
சுரபதி - இந்திரன்.
சுராலயம் - தேவலோகம்.
சுவற - வற்ற.
சுவாக்கள் - நாய்கள்.
சுனகன் - நாய்.
சூசம் - குறி.
சூர் - துன்பம்.
சூல் - சூலம்.
சூளிகை - அரண்மனை.
செச்சை - குங்குமக் குழம்பு, சிவந்த, வெட்சிப் பூ.
செஞ்சலம் - இரத்தம்.

செடை - சடை.
செந்தடம் - ரணக்களம்.
செயலை - அசோகு.
செய்ப்பதி - வயலூர்.
செய்யர் - அழகர்.
செலு - மீன் சிறை.
செலுவு - செலுத்தி.
செல் - மேகம்.
சேண் - உயர்வு.
சேவகம் - பணி, பராக்கிரமம்.
சேவு - சேவல்.
சொச்சம் - நிர்மலம்.
சொம் - சொத்து, உடைமை.
சொம்பில் - இனத்தில்.
சொர்க்கம் - மார்பு.
சொன்னம் - பொன்.
சோகு - பேய்.
சோபை - அழகு, ஒளி.
சோனம் - சோனகம்.
சோனை - அடிக்கடி பெய்யும் மழை.
ஞாழல் - குங்கும மரம்.
ஞாளி - நாய்.
ஞிமிறு - வண்டு.
ஞெகிழி - சிலம்பு.
ஞெள்ளல் - தவறு.
ஞேயம் - ஞானத்தினல் அறி பொருள்.
தகரம் - மயிர்ச் சாந்து.
தகர் - ஆடு.
தக்கும் - தங்கும்.
தசக்கிரீவன் - இராவணன்.
தசனம் - பல்.
தடி - மின்னல்.
தடிசாபம் - தண்டம், வில்.
தடிணி - ஆறு.
தட்டை - மூங்கில்.
தட்பம் - குளிர்ச்சி.
தணந்த - பிரிந்த.
தண்டம் - தண்டகம்.
தண்டு - சிவிகை.
தண்பு - தண்மை.
தத்து - ஆபத்து, நடத்தும், வீசுகின்ற.
தந்து - நூல், கயிறு.
தமரம் - ஒலி.
தமருகம் - உடுக்கை.
தமர் - தொண்டர்.
தரங்கம் - ஆபத்து.
தரிக்கும் - நிலைத்திருக்கும்.
தருணிகள் - குமரிப் பெண்கள்.
தலமகள் - பூமாதேவி.
தலன் - கீழானவன்.
தவ - மிக.
தவண்டை - ஓர் வாத்தியம்.
தவர் - முனிவர், வில்.
தவனம் - ஆசை, நெருப்பு.
தழலாடிவீதி - நெற்றி.
தளவு - முல்லையரும்பு.
தளி - கோயில்.
தளையம் - விலங்கு.
தறுகண் - அஞ்சாமை.
தற்பம் - மெத்தைவீடு.
தனகன் - தனவந்தன்.
தனகிய - சரசமாகப் பேசிய.
தனசாரம் - முலைப்பால்.
தனது - நேசம்.
தனிதம் - மேககர்ச்சனை.
தாடாளர்-விடாமுயற்சியுடையார்
தாடித்தல் - இடித்தல், தட்டுதல்.
தாட்டிய - சமர்த்துள்ள.
தாதகி - ஆத்தி.
தாது - சுக்கிலம், பொன்.
தாமம் - சுகம்.
தாய் - தாவி.
தாரி - வழி.

தாழ்வார் - நீட்சிபொருந்திய.
தாவடி - பயணம், போர்.
திகிரி - சக்கரம்.
திக்க - சிதற.
திக்கரித்து - நிந்தித்து.
திட்க - திடுக்கிட.
திதப்பட்டு - உறுதிகொண்டு.
திதம் - நிலைமை.
தித்தி - ருசி.
திமிர - இருண்ட.
திருக்கு - திருக்குதாளம்.
தில்லம் - காடு.
தீத்த - தீயச்செய்த.
துகிர் - பவளம்.
துடக்கு - மகளிற்சூதகம்.
துட்க - பயப்பட.
துட்டு - தீமை.
துண்டம் - முகம்.
துதை - செருங்கிய.
துத்தம் - சுரக்ஞான முறைப்படி ஏழுவகை இசையி னொவ்வொன்று.
துத்தி - அரவின்படம், தேமல்.
துட்பு - உணர்வு, பவளம்.
துயல் - அசைந்தாடுகின்ற.
துரகம் - குதிரை, மயில்.
துரால் - செத்தை, துன்பம்.
துரி - (காய்கனிகளின் ஆகிய) சுமை.
துருத்திகா - திட்டி னிடத்துள்ள சோலை.
துருமம் - மரம்.
துர்க்கம் - கலக்கம்.
துலைவரு - ஒப்பாக வந்த.
துவட்சி - வறுமை.
துவர் - பவளம், பாக்கு, தூள்.
தூங்கம் - தூக்கம்.
தூங்கல் - யானை.
தூசு - சீலை.
தூவிகள் - அன்னங்கள்.
தெட்டி - ஏமாற்றி.
தெதி, ததி - தயிர்.
தெய்வயானை - விநாயகர்.
தெருமரல் - சுழலுதல்.
தெழி - ஒலிக்கின்ற.
தேனு - காமதேனு.
தொக்குக்கடம் - தோல்போர்த்த உடல்.
தொங்கல் - வெண்குடை.
தொண்டை - கொவ்வைக்கனி.
தொய்ஞ்சிட - தளர.
தோமரம் - இருப்புத் தண்டகம்.
தோம் - குற்றம்.
தோய - கூட.
தோயம் - சமுத்திரம், நீர்.
தோரணி - ஒழுங்கு.
தோரா - தோல்வியில்லா.
தோல் - யானை.
தோற்றி - எதிச் செல்லுபவன்.
நகம் - மலை.
நகில் - முலை.
நகும் - சிரிக்கும்.
நடலம் - துன்பமொழி.
நடலை - வஞ்சனை.
நண்பு - சிநேகம்.
நதிபதி - கடல்.
நத்தா - விரும்பி.
நத்திரை - விசேஷதிரை.
நத்து - சங்கு.
நந்த - விருத்தியாக.
நந்தி - தோன்றி.
நம்பில் - விருப்பத்தினால்.
நவநீதம் - வெண்ணெய்.
நவிர் - மயிர்.
நறிய - நல்ல மணம் பொருந்திய.
நறை - தேன், மணம்.

நாகம் - விண்ணுலகு, யானை,மலை.
நாடி - பூந்தாள்.
நாரி - பெண்.
நாளிகேரம் - தென்னை.
நிகமம் - வேதம்.
நிகரம் - கூட்டம்.
நிகர் - ஒளி, போர்.
நிகளம் - யானைகட்டும் சங்கிலி.
நிகிலமும் - அடங்கலும்.
நிசிசரர் - ராக்கதர்.
நித்திலம் - முத்து.
நிபிடமிட - நெருங்க.
நிரை - பசு, வரிசை, கூட்டம்.
நிரைமகள் - பசுவின்பெண்கன்று.
நிலவருந்தி - சகோரபட்சி.
நிவதம் - உயர்வு.
நிறம் - காந்தி, மார்பு.
நீகாரம் - பனி, கூட்டம்.
நீபம் - கடம்பு.
நீவி - நீக்கி.
நுசுப்பு - இடை.
நூறிட - அழிந்துபோக.
நூறிய - துணித்த.
நெய் - தயிலம்.
நெருடி - இணைத்து.
நெருடு - நூலிழையைப் பொருத்துதல்போலச் சேர்க்கின்ற.
நேதி - நியதி. [தே.
நொடிபோதே - சொல்லும் போ
பகடு - எருமைக்கடா, மலை.
பகவு - பிளவு.
பகழி - அம்பு.
பகாரம் - பகரம். அலங்காரம்.
பக்கரை - கடிவாளம், கவசம், அங்
பக்கி - பக்ஷி. [கவடி, சேணம்.
பங்கம் - குற்றம்.
பச்சிமம் - மேற்குத்திசை.
பஞ்சரம் - கூடு.
பஞ்சரித்து - குதலைமொழி பேசி.
பஞ்சவன் - பாண்டியன்.
படர் - யமபடர், துன்பம்.
படி - குணம்.
படிறு - வஞ்சகம்.
படீரம் - உயரம், சந்தனம். [பம்.
பட்டிமண்டபம் - வித்யா மண்ட
பணவை - பரண்.
பணிதி - ஆபரணம்.
பணை - மூங்கில். [கம்.
பண்டறவு - பழையகாலத்தொடக்
பதலை - மலை.
பதாயுதம் - கோழி.
பத்திரம் - அம்பு, இலை, வாள்.
பத்மதச்சன் - தாமரையிலிருக்கும்
பப்பர - பெருத்த. [பிரமன்.
பம்பும் - நிரம்பும்.
பயம் - பால், ஜலம். [ன்.
பயிரவன் - பயத்தைச் செய்வோ
பயோதரம் - முலை.
பரணம் - பாரம்.
பரம்ப - பரவ.
பரவு - மெச்சும்.
பரவை - கடல்.
பராக்கதம் - தைரியம்.
பராக்கு - வேறுவகையிற்சிந்தனை.
பரிசனம் - கூட்டுறவு.
பருவரல் - துன்பம்.
பருவிகள் - பருவத்தவர்கள்.
பலன் - பழம்.
பலிதம் - அநுகூலம்.
பவனப்புவனம் - வாயுமண்டலம்.
பவனம் - காற்று.
பவுரி - கூத்து.
பவுருஷம்-புருஷத்தன்மை, புகழ்பெறுதல்.
பவுஷு - வாழ்வு, சம்பிரமம்.
பழுமரம் - ஆலமரம்.

பளகு - குற்றம்.
பறைதல் - ஒழிதல்.
பற்பம் - திருநீறு.
பற்றுக்கை - அம்புகட்டும் கயிறு.
பனகம் - பன்னகம், பாம்பு.
பனவி - தக்கன்மனைவி.
பனை - பறை.
பாகல் - பலா.
பாதாரம் - பாதாரவிந்தம்.
பாந்தள் - பாம்பு.
பாலம் - நெற்றி.
பாழி - பருத்த, வலிய.
பாளிதம் - பட்டுப்புடவை.
பானையூறு - மது.
பாற - கெட.
பாறு - பருந்து.
பாறுதல் - அடியோடு பெயர்ந்து வீழுதல்.
பானீயம் - நீர்.
பிங்கலன் - குபேரன்.
பிசிதம் - இறைச்சி.
பிணையல் - மாலை.
பிண்டி - மாவு. [பம்.
பிரகாத்துயர் - மிக்ககொலைத்துன்
பிரமம் - சூழ்ச்சி.
பிரமோத - விரும்பத்தக்க.
பிலவகம் - குரங்கு.
பீதி - பயம்.
புகடு - கறுமை.
புட்பதி-பக்ஷிராஜனுகிய கருடன்.
புணரி-கடல். [கிய பிரமலோகம்.
புத்தேள் - வானுலகத் தொன்று
புரக்கை - ஆளுகை.
புருகூதன் - இந்திரன்.
புரூரம் - புருவம்.
புரோசம் - யானைக் கழுத்திற் கட்டும் கயிறு.
புலி - நால்வகைச்சாந்திலொன்று.
புளகம் - மகிழ்ச்சி.
புளினம் - மணலினுற் சூழப்பட்ட மேடு.
புள்ளச்வம் - மயிற் குதிரை.
புற்புதம் - நீர்க்குமிழி.
பூசல் - போர்.
பூஜை - ஒன்றுமில்லாமை.
பூனை - அறுகு.
பெள் - விரும்பத்தக்க.
பேய் நீர் - கள்.
பொச்சை - காடு, சிறுமலை.
பொது - அம்பலம்.
பொருந்தம் - தாமிரபர்ணியாறு.
பொருமல் - வீக்கம்.
பொரும் - போரிடும்.
பொலிப்பு - பொலிவு.
பொழில் - சோலை.
பொறி - அறிவு, தேமல்.
பொறை - பெருந்தன்மை, பொறுமை.
பொற்ப - அழகுசெய்ய.
பொற்பு-பொற்பூ, கற்பகப்பூமாரி.
போகி - பாம்பு, இந்திரன்.
போதகம் - ஞானம், யானை.
போருவை - மார்பிலணிந்த கச்சு.
போனகம் - அன்னம்.
ப்ரபை - ஒளி.
மகபதி - இந்திரன்.
மகாப்புனல் - கங்கை.
மகிடம் - எருமை.
மகீதரன் - ஆதிசேஷன்.
மங்குலி - இந்திரன்.
மஞ்சரி - பூங்கொத்து.
மடை - சோறு.
மணி - சிந்தாமணி. [தை.
மதலை - தூண், மரக்கலம், குழந்
மதி - கலை, மான், சந்திரன்.
மதிர் - களிப்பு.

மத்தம் - ஊமத்தம்.
மத்தன் - களிப்பையுடையவன்.
மத்திகை - குதிரைச் சம்மட்டி.
மந்தாரம் - மந்தாரம்.
மந்தி - வண்டு, குரங்கு.
மந்திரம் - யோசனை.
மம - என்னுடைய.
மயற்கலதி-காதல் எனும் மூதேவி.
மயால் - மயக்கம்.
மயிலை - ஒருவகை மீன்.
மழவன் - இளையோன்.
மறம் - வீரம்.
மறலி - யமன்.
மறுகும்படி - சுழலும்படி.
மறை - இரகசியம்.
மன் - மிக.
மாடம் - உளுந்து.
மாடு - பக்கம்.
மாடை - பொன் முதலிய சம்பத்து.
மாதர் - அழகிய.
மாதிரம் - திசை.
மாரோன் - மன்மதன்.
மாலை - இருள்.
மால் - ஆசை, இந்திரன், விஷ்ணு.
மாழை - பொன்.
மி - மேலான.
மிடறு - கழுத்து.
மிடையும் - நெருங்கும்.
மிண்டி - வலிகொண்டு.
மிண்டு - போர்.
மிருகம் - மான்.
மிழற்றும் - சொல்லும்.
மீளி - பராக்கிரமன்.
முகடி - மூதேவி.
முகரம் - சங்கு.
முக்கண் - தேங்காய்.
முகிழ் - அரும்பு, குவிந்த.
முகுள்விலோசனம்-நெற்றிக்கண்.
முஞ்சர் - இறப்பவர்.
முடிப்புயல் - இந்திரன்.
முடுகி - முடுக்கி, துரத்தி.
முடுவல் - நாய்.
முட்டன் - முட்டாள்.
முத்தி - முத்தம்.
முரணர் - வலியவர்.
முருடு - ஒரு வாத்தியம்.
முளரி - அக்கினி, தாமரை.
முறுகிடு - முதிர்ந்து வளைகிற.
முனி - யானைக்கன்று.
முனைகடை - கடைமுனை.
மூங்கர் - வாய்பேசாதவர்.
மூலம் - கிழங்கு.
மெத்திய - மிகுந்த.
மேகாரம் - மயில்.
மேய் - மேவி.
மை - மேகம், அஞ்சனம், இருள், கறுப்பு ஆடு, எருமை.
மைந்து - வலிமை, அழகு, வீரம்.
மொக்கை - வெட்கம்.
மொங்கிய - பருத்த.
மொஞ்சி - பால், முலை.
மொட்பு - முகத்தல்.
மொழுக்கென - திடீரென.
மோகரம் - பராக்ரமம்.
மோடர் - அறிவீனர்.
மோதம் - களிப்பு.
ம்ருகமதம் - கஸ்தூரி.
யாமம் - தெற்கு.
யானம் - வாகனம்.
யோசித்து - கூட்டி.
ரசதகிரி - வெள்ளியங்கிரி.
ரேசித்து - விடுத்து.
லாஞ்சனை - லஜ்ஜை
லாலித்தல் - அன்பு வைத்தல்.
லாளிதம் - லளிதம், அழகு.

வகுளம் - மகிழ மரம்
வங்கணமாய் - நேசமாய்.
வங்கம் - ஈயம், வெள்ளி, படகு.
வங்காரம் - பொன்.
வசி - கழுமரம், வாள்.
வசு - அக்கினி, கன்று, பொன்.
வடி - கூர்மை
வண்டல் - நீர்ச்சுழி.
வண்டன் - முரடன்.
வண்டுஎச்சில் - தேன்.
வத்தித்து - நிலைத்து.
வந்தி - வருத்தம்.
வந்தியர் - புகழ்ந்து கூறுவோர்.
வயமா - புலி.
வயிரியர் - சங்கீத வித்வான்கள், பாணர்.
வரி - இசைப்பாட்டு, புலி.
வருக்கை - பலா.
வருடை - மலைகாடு.
வருணி - கடல்.
வருத்தி - வருவித்து.
வலக்காரம் - வென்றி.
வலயம் - அகன்றபூமி.
வழை - சுரபுன்னை.
வளம் - வள்ளம், கிண்ணம்.
வளி - காற்று, சுவாசம், வள்ளி யம்மை.
வளை - வளையல், வள்ளை, ஒரு விதத் தண்டு.
வற்கும் - வலிமை கொள்ளும்.
வனம் - அழகு, ஜலம், காடு.
வஜ்ரன் - இந்திரன்.
வாசத்தி - குருக்கத்தி.
வாசி - குதிரை.
வாயனம் - பறவை.
வாயுசுதன் - அநுமன்.
வாரணம் - கோழி.
வாரிசம் - தாமரை.
வார்ந்து - போன்று.
வார்மை - ஒழுக்கம்.
வாலுகம் - மணல்.
வாலை - இளமைப்பருவம்.
வாவிட - தாவ.
விசூசிகை - ஒரு நோய்.
விஞ்ஞை - விஞ்ஞைவித்த.
விடக்கு - மாமிசம்.
விண்டு - மூங்கில்.
விததி - கூட்டம்.
விதரி - பிளவுபட்டுள்ள விரல்கள்.
விதி - பிரமன்.
வித்து - மின்னல்.
விபஞ்சி - வீணை.
விபத்தியில் - வேற்றுமையில்லாத.
விபுதர் - வானவர்.
விபுலம் - விரிவு.
விப்புருதி - நரம்புச் சிலந்தி.
வியாதர்கள் - காட்டிலுள்ள வேடர் கள்.
வியாத்தம் - கீர்த்தி.
வியாளம் - பாம்பு.
விரகு - ஆசைநோய்.
விராகவன் - ஆசையில்லாதவன்.
விரிஞ்சன் - பிரமன்.
விருது - ஆணை.
விருமம் - பிரமை.
விரை - மணம்.
விலங்கல் - மலை.
விலோசனம் - கண்கள்.
வில் - ஆசுகம், பிரசாசம்.
விழுக்கு - கிணம்.

விளிவு - சாக்காடு.
வினைத்தலம் - போர்க்களம்.
வீரணம் - ஒருவித வாத்தியம்.
வீராசி - புஷ்பக்கூட்டம்.
வெஞ்சுகம் - விருப்பமாகிய இன்பம்.
வெடித்த - நறுமணம் கமழ்கின்ற.
வெண்டி - நீர்வற்றி.
வெதிர் - மூங்கில்.
வெம் - விருப்பம், வெம்மை.
வெள்ளம் - மிகுதி.
வெறிதருபுனல் - குடிவகை.
வெற்றன் - வீணன்.
வென் - வெந், முதுகு.
வேடை - ஆசை.
வேதண்டம் - மலை.
வேத்திரசாலம் - அம்புக்கூட்டம்.
வேம் - வேகச் செய்யுமென்று.
வேழசிலை - கரும்பாகியவில்.
வேளிநூல் - மதனநூல்.
வேள் - விருப்பம்.
வேள்வி - ஆராதனை.
வை - கூர்மை.
வைத்த - கூர்மையாகிய.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலும் துணை

## திருப்புகழ் தவிரப் பிற நூல்களின்

# பாட்டு முதற்குறிப்பகராதி

